காணும் படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு"—எனபசஞறிக. (௭)

சென்னைமல்லீசுரர்

ஒன்றாகிப் பலவாகி யுருவாகி யருவாகி யுபய மாகி
நன்றாகித் தீதாகி நான்மறைக்கு மெட்டாத நலத்த தாகித்
தொன்றாகிப் புதிதாகிச் சுடராகி யிருளாகித் துகடீர்ந் தன்பர் [ழுவாம்.
சென்றடையுஞ் சுவைக்கடலாஞ் சென்னைமல்லீச் சுரர்மலர்த்தாள் சேர்ந்துவா

(இ - ள்) ஒன்றாகியும், பலவாகியும், உருவமாகியும், அருவமாகியும், உருவருவமாகியும், நன்றாகியும், தீதாகியும், நான்குவேதங்கட்கும் அதீதப்பட்ட நன்மையுடையதாகியும், பழமையதாகியும், நூதனமானதாகியும், ஒளியாகியும், இருளாகியும், அன்பர்(மல)க்குற்றத்தினின்று நீங்கி, அடைந்து திளைக்கும் மதுரக்கடலுமாகிய சென்னைமல்லீசுரரது தாமரைமலர்போன்ற திருவடியை(ச் சரணாக) அடைந்து வாழ்வோம் எ-று.

அண்டாண்ட பிரமாண்டங்களின் சிருஷ்டிக்கு முன்னும், சர்வசங்கார காலத்தும் இறைவராகிய சிவபிரானே தனித்து நிற்பவராதலின் "ஒன்றாகி" என்றும், சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் மகேசன் உருத்திரன் விண்டு பிரமன் பிறதேவர் முதலிய பல நாமரூபங்களை யுடைதலின் "பலவாகி" என்றும், போற்றிப்பஃறொடை "நன்னெறி விஞ்ஞானகலர் நாமமல மொன்றினையும், மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப்—பின்னைப், பேர் விளங்கும் பிரளயாகலர்க்குத், தேவாய மலகன்மந் தீர்த்தருளிப்—பூவலயந், தன்னின்று நீங்காச் சகலர்க்குக் கவர்போல, முன்னின்று மும்மலந்தீர்த்தாட்கொள்கை—யன்னவனுக், காதிகுணம்—" என்றபடியே, ஆணவம் கன்மம் மாயையென்னு மும்மலங்களில், ஆணவமலமொன்றினையுடைய விஞ்ஞானகலர்க்கு அருண்மயமாகவேயவருள்ளத்திருந்து அநுக்கிரகித்தலின் "அருவாகி" என்றும், ஆணவகன்மமென்னு மிருமலங்களையுடைய பிரளயாகலர்க்கு மான் மழு சதுர்ப்புஜ காளகண்ட முதலிய வற்றுடன் திருவருள் புரிந்தும், அம்மூன்றனையு மொருங்கேயுடைய சகலர்க்கு மானைக் காட்டி மானைப்பிடிப்பது போல ஆசிரியத்திருவுருவேற்று அநுக்கிரகித்து விளங்குதலின் "உருவாகி" என்றும், சிவம் சத்தி நாதம் விந்துவென அருவமாகியும், மகேசுரன் உருத்திரன் விஷ்ணு பிரமன் எனவுருவமாகியும் விளங்குதற்கேற்ப, அருவமும் உருவமுங்கலந்த சதாசிவமாக நிற்றலின் "உபயமாகி" என்றும், தம்மை வழிபட்ட அடியவருக் கிடுக்கண்வந்தவிடத்து அருள்செய்ய நற்றுணையாக நிற்றலின் "நன்றாகி" என்றும், திருவருளுக்கொவ்வாத தீத்தொழில் புரிவோரைச் செகுத்து அவரையருளலின், "தீதாகி" என்றும், வேதங்கள் நான்காதலானுஞ் சில கீழ்மக்கட்கு மறைக்கப்பட்டு விளங்குதலானும் "நான்மறை" என்றும், "வேதங்களை யாவென்வோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என வாதவூரடிகளும், "சூள்தாமறைச் சென்னியுந் தொட்டதொட்ட நீண்ட நீள்நீ" என்று பரஞ்சோதி முனிவருங் கூறியபடியே, வேதங்கட்கும் அதீதப்பட்டதாதலின் "நான்மறைக்கு மெட்டாத நலத்ததாகி" என்றும், "முன்னைப்பழம் பொருட்கு முன்னைப்பழம்பொருளே" என்றாற்போல எல்லாவற்றிற்கும் முற்பட்டவராகலின் "தொன்றாகி" என்றும், இனியுள்ளவாம் புதுப்பொருள்களிலும் புதிதாகவிளங்குபவரென்பார் "புதிதாகி" என்றும், தமது திருவிழிகளைத் திறந்த காலத்துச் சூரிய சோமாக்கினிகளைப் பிரகாசிக்கச்செய்தும் அவற்றை மூடியகாலத்தி லிருளைப்பரவச் செய்தும் அவற்றின் சொரூபந் தாமேயாக விளங்குதலின் "சுடராகி யிருளாகி" என்றும், ஆணவாதிமலபரிபாகமும் இருவினையொப்பும் ஆன்மாக்களடைய விரும்பின் தம்மையே சரணுறலின் "துகடீர்ந்தன்பர் சென்றடையும்" என்றும், இப்பூமியை யடுத்த

உவர்க்கடலும், பிறநீவுகளையடுத்த பாற்கடல் முதலிய கடல்களும் போலன்றிக்காணி னுங் கேட்பினுங் கருதினுங் களிதரும் பெருஞ்சுவைச்சாகரம் போல்வாராகலின் அவ ரைத்தரிசித்து அவர்பால் மனத்தைச்செலுத்துதலே யந்நிலமூழ்குதலாமெனபார் "சென ரூடுஞ் சுவைக்கடலாம்" என்றும், அவ்வகைய இறைவர் சென்னை நகரிலுள்ளாரும் மல்லீசுரரென்னுந் திருநாமமுடையவருமாகலின் "சென்னைமல்லீசுரர்" என்றும், அவ ருடைய திருவடி "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்றாற்போல மேம்பாடுற்ற தாமரைமலர் போன்றதாகலின் "மலர்த்தாள்" என்றும், அத்திருவடியே அநுக்கிரகஞ் செய்யுமாற்றலுடைமையின் அதனை யடுத்தல் கடமையெனபார் "சேர்ந்துவாழ்வாம்" என்றுங் கூறினர். (அ)

## பிரமராம்பிகை.

ஆரணனு நாரணனு மாரணத்துக் கெட்டாத வரனு மென்னுங்
காரணர்கண் மூவரையுந் தரித்துயிர்த்த வடையாளங் காட்டு மாபோற்
சீரணவுந் திருவயிற்றின் மூவரைவாரா தழகெறிக்குஞ் செல்வத் தாயைப்
பேரணவுஞ் சென்னைநகர்ப் பிரமராம் பிகைமயிலைப் பேசி வாழ்வாம்.

(இ - ள்) பிரமனும், விண்டுவும், வேதங்கட் கதீதனு உருத்திரனும் எனக் கூறப்படும் (சிருட்டியாதி முத்தொழில்கட்கும்) காரணர்களாகிய திரிமூர்த்திகளையும் (கருத்) தரித்துப்பெற்ற அடையாளத்தை வெளிப்படுத்தும் வகைபோல, சிறப்பு வாய்ந்த அழகிய வயிற்றில் மூன்றிரேகைகள் கொண்டு அழகினை வீசுஞ் செல்வத்தை யுடையதாயாகிய கீர்த்திவாய்ந்த சென்னை நகரிலெழுந்தருளிய மயிலின் சாயலையுடைய பிரமராம்பிகையைத்துதித்துவாழ்வோம் எ - று.

திரிமூர்த்திகளையும் பெற்றதற் கடையாளமாகவயிற்றின் மூன்றுமடிப்பினை யுடையாளென்றார் இதனை,

### சௌந்தரியலகரி

"மூவருக்குமுதற்பிறப்புநின்முகக்குணக்கடலென்றுமுன்
சேவடிக்கணிருப்பவர்சென்னிருவிதர்செங்கைபிரிக்கிலார்
பூவெடுத்தவர்சென்னிவைத்திடுபோதமுற்றவரமமைநின்
காவலாப்பொதிதாளிலவைக்கவுமூவர்சென்னிகளிக்குமே" — எனபதனானறிக.

## பிரசன்னவிநாயகர்.

முருகோடு மதுப்பிலிற்று நறுங்கடுக்கை முடிக்கணிந்த முதல்வற் காமைக்
கருகோடு பறித்தணிந்த கணபதியை யொருகோடு கரத்திலே வாங்கி
யொருகோடு முகத்தணிந்த பிரசன்ன விநாயகனை யூறறுந் தான
மருகோடு மணிமார்பத் தராவணிந்த நிராமயனை யகத்துள் வைப்பாம்.

(இ - ள்) வாசனையோடு தேனைச்சொரியும் நல்ல கொன்றைமாலையை முடியிலணிந்த முதல்வராகிய சிவபெருமானுக்கு, (திருமாலாகிய) ஆமையின்கரிய ஓட் டினைப்பறித்துத் தரித்தவரும், ஒரு கொம்பினைத் திருக்கரத்திலேற்று, ஒருகொம் பினை முகத்திற்பெற்ற பிரசன்ன விநாயகரும், பொழிகின்ற மதசலமானது பக்கங்க ளிற் பாய்கின்ற அழகிய மார்பினிடத்திற் சர்ப்பங்களை யணிந்தவருமாகிய கடவுளை மனதிலிருத்துவாம் எ - று.

நிராமயன—நோயற்றவன் கடுக்கை—முதலாகுபெயர்.

கருகு+ஓடு- கருகோடு

## முதல்வற்காமைக் கருகோடுபறித்தணிந்த கணபதியென்றது.

தேவர்களும் அசுரர்களுங் கூடித் திருப்பாற்கடலைக் கடைந்தபொழுது திருமால் கூர்மவடிவேற்று மத்தாகிய மந்தரகிரியைத் தாங்கி நின்று, அப்பொழுது தோன்றிய அமுதைத் தேவர்கட்களித்து அதனால் இறுமாப்படைந்து கடல்களேழையுங் கலக்கித்திரிவது கண்ட தேவர்கள் அதனைச் சிவபெருமானிடத்து முறையிட, சிவபிரான் விருப்பின்படி விநாயகக்கடவுள் பாற்கடலை யடைந்து ஆமையாக நின்ற மாயோனது ஓட்டினைப் பறித்துக் கைலையை யடைந்து கண்ணுதலிடங் கொடுப்ப, அவர் அதனை மார்பகத்தணிந்தனரென்பது உபதேசகாண்ட சரிதம். (கo)

## குமரவேள்

மரந்துளைத்த கணையானுஞ் சோவெறிந்த திறலானு மதிக்குந் தோறுஞ்
சிரந்துளக்க வலைகடலுஞ் சேணிகந்த பெருவரையுந் திறத்திறக் குன்றக்
கரந்துளக்குங் குறுமுனிக்குங் கருத்தின்மயல் பூட்டியகை தவஞ்சாலவெற்பி
னுரந்துளைத்த சேயிலைவேல் வலனுயர்த்த விளையவனை யுளத்துள் வைப்பாம்.

(இ - ள்.) மராமரத்தைத் தொளைத்த கணையையுடைய திருமாலும், (திரிபுரத்தின்) மும்மதில்களையழித்த வல்லபமுடைய சிவபெருமானும் நினைக்கும்பொழுதெல்லாஞ் சிரக்கம்பனஞ்செய்ய, அலைகளைவீசுங்கடலும் ஆகாயமளாவிய பெரிய விந்தமலையுந் தமது வலிகுன்றும்படி, கையினையசைத்த அகத்தியமுனிவனுக்கும், மனதில் மயக்கமவிளைத்த வஞ்சகமிகுந்த கிரவுஞ்சகிரியின் மார்பகம் போழ்ந்த செவ்விய அரசவடிவாகிய வேற்படையை வலப்புறத் துயர்த்திய இளையபிள்ளையாரை (நமது) மனதிலிருத்துவாம். எ - று.

மராமரத்தைத்தொளைத்தது—திருமால் இராமாவதாரத்தில் தன்னைச் சரணடைந்த சுக்கிரீவன் தன்றாற்றலுணருமாறு கணைவிடுத்துத் தொளைத்ததென்றும், சோவெறிந்தது—சிவபெருமான் மும்மதில்களையும் அழித்ததென்றுங் கொள்க.

அலைகடல்திறத்திறக்குன்றியதாவது.

இந்திரன் தனது செல்வச்செருக்கினால் அவைக்களத்தெய்திய ஆசிரியரைத் தக்கபடி மரியாதைபுரியாமையின் அவர் மறைய, இந்திரன் அவரைத்தேடிக் காணாது பிரமன் சூழ்ச்சியால் திரிசிரனைக் குருவாக்கி, அவன் வஞ்சனையாக யாகஞ்செய்யக் கண்டு அவன் சிரத்தைச்சேதித்து, பிரமகத்தியடைந்து, மாதர் மரம் நீர் நிலங்கட்கு அதனைப் பகிர்ந்துகொடுத்துப் புனிதனாயினன். இந்திரன் திரிசிரனைக்கொன்ற துணர்ந்த அவன் பிதா துவஷ்டாவென்பான் ஓர்யாகஞ்செய்து அதிற்றோன்றிய விருத்திரனை இந்திரன்மேலேவ, இந்திரன் தனது வச்சிராயுதம் வலியற்றதாயிருந்தமையின் விண்டுவின் சூழ்ச்சியால் ததீசிமுனிவரது முதுகந்தண்டென்பைவாங்கி விசுவகன்மனால் வச்சிராயுதமாக்கிக்கொண்டு விருத்திரனையெதிர்க்க, அவன்போர்செய்ய வலியின்றிக் கடலிலாழ்ந்தனன். அவனைக்கண்டுபிடிக்குமாறு வேண்டிக்கொண்ட இந்திரன்கருத்துக் கிணங்கிய அகத்தியமுனிவர் அவனொளித்திருந்த சமுத்திரத்தைப் பானஞ்செய்தனர் என்பதாம் இதனை,

### திருவிளையாடற்புராணம்.

"என்றவனிடுக்கண்டீர்ப்பப் பாணிகல்புரிபுலன்களைந்தும்
வென்றவனெடியோன்றனைவிடையவன்வடிவமாகி
நின்றவனறிவானந்தமெய்ம்மையாய்நிறைந்தவெள்ளி
மன்றவனூழிச்செந்தீவடிவினை மனத்துட்கொண்டான்.

கைதவன்கரந்துவைகுங்கடலைவெற்படக்குங்கையிற்
பெய்துழுந்தெல்லைத்தாக்கிப்பருகினன்பிறைசேர்சென்னி
யையன்தருளைப்பெற்றார்க்கதிசயமிதென்கொன்மூன்று
வையமுந்தொழிலுஞ்செய்யவல்லவரிவரேயன்றோ."—என்பதனானறிக.

துளக்கமென்றதனால் கரத்தைநிமிர்த்திய காலத்துக் கடலைக்கரத்திலேற்று ஆசமனீயஞ்செய்தனரெனவும், கரத்தைத்திருப்பிக்கவிழ்த்த காலத்து விந்தத்தை யடக்கினரெனவுஞ் சொல்லாற்றல்காண்க.

## பெருவரைதிறத்திற் குன்றியதாவது.

அகத்தியமுனிவர் தென்றிசைநோக்கிச் செல்லுகையில், கிரவுஞ்சன் என்னு மசுரன் மலைவடிவாகநின்று தனதுமாயையால் வழிதெரியாதபடி அலைக்க, அகத்திய முனிவர் கோபங்கொண்டு "நீ இவ்வாறே மலைவடிவாகக்கிடந்து குமாரக்கடவுள் வேலாயுதத்திற்கு இரையாகுக" எனச்சபித்தேகினர் அதுமுதல், கிரவுஞ்சன் மலைரூபமாகவேயிருந்தனன். அப்படியிருக்கையில், சூரபன்மனது தம்பிமார்களில் இளையோனாகிய யானைமுகம்பெற்ற தாருகாசுரன் அதில் வசித்திருந்தனன். முருகக்கடவுள் சூரனைச் சங்கரிக்கச்செல்லுகையில் அவ்விருத்தாந்தங்களை யுணர்ந்து தமது திருக்கரத்திலுள்ள வேலாயுதத்தால் தாருகனையும் மலைவடிவாகவுள்ள கிரவுஞ்சனையும் வதைத்தனர் இது நிற்க பின்னர் விந்தமலைநாரதன் சூழ்ச்சியால், மேருமலையைப் பகைத்து ஆகாயவழியைமறைத்து உயர்ந்து வழிதோன்றாது நிற்ப, அகத்தியமுனிவர் வழிவிடுகவென, அது மறுத்துரைக்க, முனிவர் தமது தவமகிமையால் அதனை நிலத்திலழுத்தினரென்பதாம். இதனை,

**கந்தபுராணம்—திருக்கல்யாணப்படலம்.**

"ஆனனமுனிகேளொருநீயிவ்வசலநீங்கித்
தேனார்மருதவளமேயதென்னாடுநண்ணி
வானார்பொதியமலைமேவுதிவையமெல்லாம்
மேனாளெனவேநிகராகிவிளங்குமென்றான்"—எனவும்,

**ஷை கிரவுஞ்சப்படலம்**

"மாண்மதிபெருகுவெய்யோய்மற்றுநின்னுருவமைநீங்கி
நீண்மலையாகியீண்டேநின்றுதீயவுணர்க்கெல்லாம்
மேண்மிகுமிருக்கையாகியிருந்தவத்தோர்க்குமேனைச்
சேண்மலிகடவுளோர்க்குந்தீத்தொழிலிழைத்திபன்னாள்"

"மாற்படுமதுபாணிவலிசெழுதண்டாலுன்றன்
பாற்படுபுழைகளியாவும்பற்பலமாயைக்கெல்லாம்
மேற்புடையிருக்கையாகவெம்பிரானுதவுஞ்செவ்வேள்
வேற்படைதன்னிற்பின்னாள்விளிகுதிவிரைவினென்றான்"—எனவும்,

**ஷை தாருகன்வதைப்படலம்.**

"தாருகன்மார்பமென்னுந்தடம்பெருவரையைக்கீண்டு
சீரியகிரவுஞ்சத்திற்சேர்ந்துபட்டுருவிச்சென்று
வீரமும்புகழுங்கொண்டுவிளங்கியதென்னவங்கட்
சோரியுந்துகளுமாடித்துண்ணெனமீண்டதன்றே."—எனவும்,

**ஷை விந்தம்பிலம்புதுபடலம்.**

"எறிகதிர்மதியினுக்குமேகருந்திறத்தால்வான
நெறியினையடைத்துத்தொல்லைநெடியமால்போன்றுநின்றேன

குறியகிறகஞ்சியாறுகொடுப்பனென்றெனதுதோற்ற
மறிகிலைமீண்டுபோகென்றவ்வரைமொழிந்தனனே.

அற்புதமமராகொள்வாற்றவுங்குறியோனவிந்த
வெற்பினதுமபாதனினமியுய ரகுடங்கைசேர்த்தி
வற்புறவுனறவலமேலமறறதுபுவிகக்ட்டாழ்நது
சொற்பிலமபுகுந்துசேடனறனனிலையுறறதனனே"—எனவும் வருவன
வற்றானறிக. (கக)

சேயஞலூரபிள்ளையார்

மறைநெறியிற பிறழாத வேதியரான பால்கறந்து வவ்வுந் தீங்கு,
முறைபுரியத் தககதென வடுத்தடித்துப பாற்கலத்தை முனிந்த தாதை,
பொறையுடன்மண ணிடைபபுரள விருதாளு மறவெறிந்த பொல்லாத
தீங்கு, மிறையவனமெய்ப பணியாக விருமபததை யடைந்தவரை
யிறைஞசி வாழவாம.

(இ - ள்.) வைதிகமார்க்கத்தினின்றுந் தவறாத அந்தணர்களுடைய பசுவின்
பாலைக்கறந்து அபகரிக்கின்ற தீமைக்கு முறைப்படி (தண்டனை) செய்யத்தக்கது என்று
சமீபித்து அடித்துப பாற்குடத்தை எறிந்த தந்தையாகிய எச்சதத்தன சாந்தத்துடன
நிலமிசைப் புரளும்படி அவனது இருகால்களுந்துணடாயறும்படித்தடிந்த பொல்லாத
பாவத்தையுஞ சிவபெருமானது உண்மைத்தொண்டாகச் (செய்து) சிறந்த சணடேச
பதவியை யடைந்தவரை வணங்கி வாழ்த்துவோம் எ - று

திருச்சேயஞலூரில வேதியர்குலத்தில எச்சதத்த னென்பவனுக்குப புத்தி
ரராக அவதரித்த விசார சாமா சனமாந்தர அறிவுத்தொடாசசியால வேதாகமங்களை
யோதா துணாந்து சர்வானமாக்களிடத்தும அனபினவழியொழுகி வருகையி லொரு
நாள அவ்வூர அந்தணச்சிறுவரோடும் பசுநிரையோடுங் கூடிச்சென்றனர் அப்பொ
ழுது ஒரீற்றுப பசுவொன்று அதனை மேயப்பானைக் குத்தப்போக, அவ்வாயன அத
னைக் கோலாற் புடைத்தனன். விசாரசாமா அதுகணடு மனமபொறாது அவனைநோக்கி,
பசுக்கள் எல்லாத்தேவர்களும, தீாத்தங்களும, முனிவர்களும பிரியாது சூழ்ந்திருக்
கும உறுப்புக்களை யுடையன திருமஞ்சனத்திற குரிய பஞ்ச கௌவியங்களைக்
கொடுப்பன. திருவெண்ணீற்றிற்கு அவற்றின சாணமே மூலம ஆதலின நீ இனிப்பசுக்
களை மேய்க்கவேண்டாம யானே மேய்ப்பேனென்று அவ்வூரா ரனுமதிபெற்று
அருகிலுள்ள மண்ணியாற்றங்கரையிலும புலலுள்ள விடங்களிலும மேயத்து நீா
காட்டி வெயிலவேளையில நிழலிலிருத்தி மாலையில அவரவா வீட்டிற்கனுப்பித் தம்
வீடுசோவாராயினா. அப்பசுமபால திருமஞ்சனமாதலைக் கருதி, சிவார்ச்சனையில்
ஆசைகொணடு ஆற்றங்கரையில ஒராத்திமரத்தின கீழ் மணலாற சிவலிங்கநியமித்துப
பாலினாலபிடேகித்து, பத்திரபுஷ்பங்களா லாச்சித்துச சிவபூசைசெயதுவந்தனா அத
னைக்கணட அவ்வூரா னொருவன விசாரசாமர் விளையாடுவதாக நினைத்து ஊராருக்கு
அறிவிக்க, அவாகள எச்சதத்தனை வருவித்து விஷயத்தை வெளியிட்டனா. எச்ச
தத்தன் அஃதுணமையாயின யானே கணடுபிடித்துத தணடிப்பேனென்று கூறி, தன
மகனுக்குத்தெரியாது பின்சென்று குராமரத்தேறி யொளித்திருந்தனன விசாரசாமர்
பாறகுடங்களை நிரப்பித திருப்பள்ளித்தாமஞ சேகரித்து மணலாற சிவலிங்கஞ்செய்து
அதற்குப பாலாலபிஷேகிக்கக் கணடு மரத்தினின்று மிறங்கிப பல கொடுஞ்சொற்கள
கூறித் தணடத்தாற்புடைத்தும அவாமனம சிவார்ச்சனையி லிருத்தலின உணாந்திலா.
எச்சதத்தன அவரதுணமையறியாது பாறகுடங்களைக் காலாலிடற, விசாரசாமா கண்டு

அவ்வாறு செயதவன் பிதா குரு பிராமணன என்றுங்கருதாது, அருகிருநத வோா கோலையெடுகக அது மழுவாக, அதனாலவன காலகளை வெட்டிச சிவபூசையை முடித தனா. அவா பகதிககு மகிழ்நத சிவபெருமான இடபாரூடராயக காட்சியளிதது நம முடைய தொண்டாகளுககெலலாம உனனைத தலைவனாககி நாமேறறுககொணட அமுதும பரிவட்டமும புஷபமும உனககே தநதோம எனறுகூறித தமது சடையிலணிந திருநத கொன்றைமாலையை யவருககுச்சூட்டிச சண்டேசுரபதவி தநதருளினாரென பது சரிதம. இதனை,

பெரியபுராணம்.

"தொடுத்தவிதழிசூழ்சடையாா துணைத்தாணிழறகீழ்விழுநதவரை
யெடுத்துநோக்கிநமபொருட்டாலீன்றதாதைவிழவெறிநதா
யடுத்ததாதையினியுனககுநாமெனறருளசெயதணைத்தருளி
மடுத்தகருணையாறறடவியுச்சிமோநதுமகிழ்நதருள.

அண்டாபிரானுநதொண்டர்தமககதிபனாககியனைத்துநா
முண்டகலமுமுடுப்பனவுஞசூடுவனவுமுனககாகச
சண்டேசனுமாமபதநதநதோமெனறங்கவாபொறறடமுடிக்குத
துண்டமதிசோசடைககொன்றைமாலைவாங்கிசசூட்டினாா"—எனபதனாலுணாக.

தநதையின காலைவெட்டுதல பாவமாயிருப்பினும, இறைவன திருவடிககன புடைமைநோககி அதுபுணணியமாகவே முடிநதது இதனை,

சிவஞானசித்தியார்

"அரனடிககனபாசெயயுமபாவமுமறமதாகும
பரனடிககனபிலாதாா புணணியமபாவமாகும
வரமுடைத்தககனசெயதமாவேளவி தீயதாகி
நாரினிறபாலனசெயதபாதகநனமையாயததே"—எனபதனாலுணாக. (கஉ)

திருநநதிதேவா
வேறு

வெள்ளி மாலவனா விமலனாா விளமபிய வேதந
தெள்ளு மாகம புராணஙகள செழுங்கலை பிறவு
முள்ள வாறுதோந துலகெலாம வழங்கமுன னுரைத்த
வள்ள லாகிய நநதியங குரவனை மதிப்பாம

(இ - ள) பெரிய வெள்ளிமலையாகிய திருககயிலாயகிரியிலெழுந்தருளிய மலரகிதராகிய சிவபெருமானாா அருளிசசெயத நானகு வேதஙகளும, தெள்ளிய (பொருளையுடைய) இருபத்தெட்டுச சிவாகமஙகளும, செழிய பிறகலைகளும ஆகிய இவறறையெலலாம உள்ளபடியே தெளிநது, உலகமெஙகும வழஙகுமபடி முதலிற கூறிய வள்ளலாகிய அழகியதிருநநதிதேவரெனனு மாசிரியரைத்துதிப்பாம எ - று.

வேதமெனபதறகு ஞானம பயப்பதெனபது பொருள வித=ஞானம. வேதம் நான்காவன—இருககு - எசுா - சாமம் - அதாவணம ஆகமமெனனு மொழியில் ஆவென்பது ஞானமும, கவவெனபது மோக்ஷமும, மவவெனபது மலநாசமுமாம. ஆகவே ஆனமாககளுககு மலததை நாசஞசெயது ஞானததையுதிப்பிதது மோக்ஷததைக கொடுககவலலதெனபது திரணடபொருள சிவாகமம் இருபத்தெட்டாவன—காமிகம - யோகசம - சிநதியம - காரணம - அசிதம - தீபதம - சூக்குமம - சகததிரம - அஞசுமான - சுப்ரபேதம - விசயம - நிசுவாசம - சுவாயமபுவம - அனலம் - வீரம -

ரௌரவம் - மகுடம் - விமலம் - சந்திரஞானம் - முகவிம்பம் - புரோற்கிதம் - இலளிதம் - சித்தம் - சந்தானசாவோத்தமம் - பரமேசுவரம்-கிரணம்-வாதுளம் என்பனவாம்.

புராணம்—வேதாகமங்களின் உட்கருத்தை விளக்குவது பதினெண்புராணங்களாவன:--பிரமபுராணம் - பதுமபுராணம் - வைணவபுராணம் - சைவபுராணம் - பாகவதபுராணம் - பவிடியபுராணம் - நாரதீயபுராணம் - மார்க்கண்டேயபுராணம் - ஆக்கினேயபுராணம் - பிரமகைவர்த்தபுராணம் - இலிங்கபுராணம் - வராகபுராணம் - கந்தபுராணம் - வாமனபுராணம் - மற்சபுராணம் - கூர்மபுராணம் - காருடபுராணம் - பிரமாண்டபுராணம் என்பனவாம் அன்றியும் உபபுராணங்கள் பதினெட்டு, அவையாவன.—ஆதித்தியபுராணம் - காந்தபுராணம் - சோமபுராணம்-கபிலபுராணம் - கௌசிகபுராணம் - சாம்பபுராணம் - சிவதன்மபுராணம் - தௌர்வாசபுராணம் - நாரசிங்கபுராணம் - நாரதீயபுராணம் - பராசரீயபுராணம் - பார்க்கவபுராணம்- பிரமாண்டபுராணம் - மாரீசபுராணம் - மானவபுராணம் - வாசிட்டபுராணம் - வாயவியபுராணம் - வாருணபுராணம் என்பனவாம் இவ்வுபபுராணங்கள் தம்மை யியற்றிய அவ்வவர் பேரால் விளங்கும்

கலை—கற்றற்குரியது கலைஞானம் அறுபத்து நான்குவகைப்படும். அவையாவன —அக்கரவிலக்கணம் - இலிகிதம் - கணிதம் - வேதம் - புராணம் - வியாகரணம் - நீதிசாத்திரம் - சோதிடசாத்திரம் - தருமசாத்திரம் - யோகசாத்திரம் - மந்திரசாத்திரம் - சகுனசாத்திரம் - சிற்பசாத்திரம் - வைத்தியசாத்திரம் - உருவசாத்திரம் - இதிகாசம் - காவியம் - அலங்காரம் - மதுரபாடணம் - நாடகம் - நிருத்தம் - சத்தப்பிரமம் - வீணை - வேணு - மிருதங்கம் - தாளம் - அத்திரபரீக்ஷை - கனகபரீக்ஷை - இரதபரீக்ஷை - கசபரீக்ஷை - அசுவபரீக்ஷை - இரத்தினபரீக்ஷை - பூமிபரீக்ஷை - சங்கிராமவிலக்கணம் - மல்லயுத்தம் - ஆகருடணம் - உச்சாடனம் - வித்துவேடணம் - மதனசாத்திரம் - மோகனம் - வசீகரணம் - இரசவாதம் - காந்தருவவாதம் - பைபீலவாதம் - கவுத்துகவாதம் - தாதுவாதம் - காருடம் - நட்டம் - முட்டி - ஆகாயப்பிரவேசம் - ஆகாயகமனம் - பரகாயப்பிரவேசம் - அதிரிசியம் - இந்திரசாலம் - மகேந்திரசாலம் - அக்கினித்தம்பம் - சலத்தம்பம் - வாயுத்தம்பம் - திட்டித்தம்பம் - வாக்குத்தம்பம் - சுக்கிலத்தம்பம் - கன்னத்தம்பம் - கட்கத்தம்பம் அவத்தைப்பிரயோகம் என்பனவாம்.

வேதாகமபுராண கலைஞானங்கள் உலகத்தில் வழங்குமபடி முதலிலுரைத்த வள்ளலென் நந்திதேவருரைத்ததெனெனின், வேதாகமாதிகளை முதலிற் சிவபெருமான் பார்வதிதேவியாருக்கும் நந்திதேவருக்கும் உரைப்ப, நந்திதேவர் சனத்குமாரமுனிவருக்கும் சனத்குமாரமுனிவர் வியாசமுனிவருக்கும், வியாசமுனிவர் சூதமுனிவருக்கும், சூதமுனிவர் நைமிசாரணியவாசிகளுக்கும், அவர்கள் உலகினருக்கும் உரைத்தனரென்பது வரன்முறையாகலினென்க

வள்ளல்—வரையாது கொடுப்போன் (கரு)

சமயகுரவர்

பருவ மேதுமி லார்புகும் பரமதப் பொருள்கள்
கருதி யோம்பவொண் ணாதெனக் கண்ணுதற் பெருமா
னருளி னாற்பல வதிசயஞ் செந்தமிழ் பாடிப்
பொருளி தாமெனத் தெரித்தநால் வர்களையும் புகழ்வாம்

(இ - ள்) பரிபக்குவஞ் சிறிதுமில்லாதவர்கள் பிரவேசிக்கும் அன்னிய சமயப்பொருள்கள் மதித்துப் பாதுகாக்கவொண்ணாதென, நெற்றிக்கண்ணையுடைய சிவ

பெருமானது திருவருளினால், செந்தமிழாலாகிய பல அற்புதங்களை விளைக்கத்தக்க (திருநெறித் தமிழ்வேதமாகிய) பாசுரங்களைப்பாடி, இதுதான் (உண்மைப்) பொருளாகுமென்று உணர்த்திய (சமயாசாரியர்) நால்வர்களையுந் துதிசெய்வாம் எ - று.

கண்ணுதல்—அன்மொழித்தொகை.

சிவபெருமானுக்கு நெற்றிக்கண் வந்ததாவது—ஒருகாலத்தில் சிவபெருமான் கைலாயகிரியிலுள்ள ஓர் நந்தனவனத்தில் உமாதேவியாருடன் உலாவிக்கொண்டிருக்கையில், உமாதேவியார் ஓர் விளையாடல் கருதி இறைவர் பின்சென்று ஒன்றுமுணரா யாது இறைவரது இருவிழிகளையும் இருகரங்களாற்பொத்த, அண்டமுழுவதும் இருண்மயமாயிற்று. அவ்வந்தகாரத்தினால் அகிலப்பிராணிகளயாவும் வருந்துவது கண்ட சிவபெருமான் தமது நெற்றியினடுவே ஓர் திருவிழிதோன்றுவித்துச் சூரியசந்திராதிகளுக்கு ஒளியுண்டாக்கி உலகுக்குற்ற துயரினையொழித்து நெற்றிக்கண்ணரென்ப பெயரெய்தினர் என்பதாம் இதனை,

கந்தபுராணம்

"ஈசனையொருஞான்றம்மையெழில்பெறுகைலைக்காவிற்
பேசலாடலுன்னிப்பின்வரவிழியிரண்டுந்
தேசுறுகரத்தாற்பொத்தச்செறிபுவனங்களியாவு
மாசிருள்பரந்ததெல்லாவுயிர்களுமவருத்தங்கொள்ள

ஓங்குதன்னுதலினப்பனொருதனிநாட்டநல்கி
யாங்கதுகொண்டுநாதனருள்கொடுநோக்கியாண்டு
நீங்கருநிலைமைத்தாகிநின்றபேரிருளை மாற்றித்
தீங்கதிர்முதலானோர்க்குச்சிறந்தபேரொளியையீந்தான்."—என்பதனானறிக.

நால்வர்கள்—ஆளுடையபிள்ளை-ஆளுடையவரசு - ஆளுடையநம்பி-ஆளுடையவடிகள். செந்தமிழென்றது தேவார திருவாசகங்களை. அதிசயம் - திருஞான **சம்பந்தமூர்த்திநாயனார்** ஞானப்பாலருந்தி, பொற்றாளம்பெற்று, முத்துச்சிவிகையிலிவர்ந்து, முயலக நோயையகற்றி, பொற்பந்தல் பொற்கிழிபெற்று, அரவினவிடமகற்றி, படிக்காசுபெற்று, மறைக்கதவையடைத்து, பாண்டியன் வெப்பகற்றி, அனலவாதம் புனல வாதங்களில்வென்று, சமணரைக்கழுவிலேற்றி, புத்த நந்திதலையில் இடிவீழ்த்தி, ஆண்பனையைப் பெண்பனையாக்கி, என்பைப்பெண்ணாக்கச் செய்ததை முதலியனவும், **திருநாவுக்கரசுநாயனார்** தமக்குற்ற சூலைநோயகற்றி, சமணர்களிட்ட நீற்றறை-விடம் - இடறச்செய்தயானை - கல்லோடுவீழ்த்தியகடல் - இத்துயரங்களினின்று நீங்கி, சூலமுத்திரையும் இடபமுத்திரையுந் தரித்து, அப்பூதிநாயனார் மகனுக்குற்ற அரவின விஷத்தையகற்றி, படிக்காசுபெற்று, மறைக்கதவைத்திறந்து, திருவையாற்றிற் கைலாய தரிசனஞ்செய்ததை முதலியனவும், **சுந்தரமூர்த்திநாயனார்** தமது திருமணத்திற் சிவபெருமான் அடிமைச்சீட்டுகாட்ட வன்றொண்டராகி, திருவதிகையில் திருவடிசூட்டப்பெற்று, திருவாரூரிற் பரவையாரைமணந்து, திருத்தொண்டத்தொகை யோதி, குண்டையூரிற் கொடுத்த நெல்மலையைப் பரவையார் மனைக்கு வருவித்து, செங்கல்லைப்பொன்னாக்கி; மணிமுத்தாற்றிலிட்ட பொன்னைக் கமலாலயமென்னும் வாவியிலெடுத்து, திருவொற்றியூரிற் சங்கிலியாரைமணந்து, அதனாற் பரவையார் கொண்ட வூடலதீரச் சிவபிரானைத் தூதனுப்பி, காவிரி வெள்ளத்தைவிலக்கி, முதலையுண்ட சிறுவனை வெளிப்படுத்தி, வெள்ளானையிலிவர்ந்து திருக்கைலாயமடைந்ததை முதலியனவும், **மாணிக்கவாசகசுவாமிகள்** குருந்தமரத்தடியில் இறைவனாலுபதேசிக்கப் பெற்று, நரிகளைப்பரிகளாக்கி, புத்தர்களைவாதில் வென்று, ஊமைப்பெண்ணைப் பேசு

வித்து, தாம் ஓதிய திருமுறையைச் சிவபெருமானேயெழுதி அழகிய திருச்சிற்றம்பல முடையானெனக் கைச்சாத்திட்டச்செய்ததை முதலியனவும் எனக்கொள்க. (கரு)

## மெய்கண்டதேவர்.

சிறிய வாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிவெலா மகப்படுத் தவற்றி
னெறியெ லாமவிளக் கியசிவ ஞானபோ தத்தைக்
குறிசெய் தீந்தமிழ் மூலுரை குரவனைப் பணிவாம்.

(இ - ள்.) சிறிய கண்ணாடியில், மிகப்பெரிய மலையினபொருள்கள் விளங்குவனபோல, ஞானசாஸ்திரங்களின் முடிந்தபொருள்கள் எல்லாவற்றையும் தன்னகப் படுத்தி, அவற்றினமார்க்கங்களை யெல்லாம (நன்கு) விளங்கச்செய்த சிவஞானபோத மென்னு நூலைக்குறித்த மதுரமாகிய தமிழ்ப்பாக்களாலுரைத்தருளிய ஆசிரியராகிய மெய்கண்டதேவரை வணங்குவாம் எ - று.

ரௌரவாகமத்துப் பாசவிமோசனப் படலத்துக்கூறப்பட்ட சிவஞானபோதத்தை, சாலிவாகன சகம் கக௯௫-ல மெய்கண்டதேவர் செந்தமிழில் மொழிபெயர்த்தருளினரென்பது. (கசு)

## நமச்சிவாயதேசிகர்

வேறு.

இருவினை யணுதி நிற்றற் கேதுவு மிருள ணுதி
மருவிய செயலு நீங்கும வண்ணமு மற்றுந் தேற்றி
யருளபதித் தெனையு மாட்கொண் டாவடு துறைக்கண் வாழுந்
திருவளர் நமச்சி வாய தேசிகன் மலர்த்தாள் போற்றி.

(இ - ள்) இருவினைகள் தொன்றுதொட்டே நிற்பதற்குக் காரணமும், ஆணவாதி மலசம்பந்தம் அனாதியாகவே (பசுக்களை) பொருந்திய செயகையும், (அது) நீங்குந்தன்மையும, பிறவற்றையும உணர்த்தி, கிருபை வைத்து (புலலறிவினனாகிய) என்னையும அடிமைகொண்டு திருவாவடுதுறையில வாழுகின்ற சிவஞானச் செலவம வளரப்பெற்ற நமச்சிவாயதேசிகரது மலர்போன்ற திருவடி துதிக்கப்படுவது. எ - று.

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

## அவையடக்கம்.

சிற்பநூல் வழியிற் செய்த வுருவெனச் சிறப்பு சாராப்
புறபொரு ளுருவு மைங்கைப் புண்ணியன் புணர்ந்து நிற்பி
னற்புதப் பூசை கொள்ளு மவன்புகழ் நிறைத லாலே
நற்பதம் புணர்த ராவென் பாட்டு நலத்த தாமே.

(இ - ள்) சிற்பநூன் முறைப்படி யியற்றிய திருவுருவத்தைப்போல, சிற்பலக்ஷண மமையப்பெறாத அற்பமாகிய பொருளினாற் செய்த வுருவத்தையும ஐந்து திருக்கரங்களையுடைய புண்ணியசொரூபியாகிய கணேசப்பெருமான் கலந்துநிற்பாராயின், (அடியார்கள் செய்யும) அழகிய பூசையைக் கொள்ளும் அவ்விறைவனுடைய

சீர்த்தி நிறைதலினாலே, நல்ல பதங்களைப் புணர்ந்திராத எனது பாடலும் நன்மை யுடையதாகும். எ - று.

புற்பொருளென்றது கோமயத்தாற் செய்தது. அற்புதப்பூசையாவது.— ஆகமவிதிவழி செய்யப்படுவது. நற்பதம் என்றது சொற்குற்றம் பொருட்குற்றமுத லியன நீங்கிய சொற்களெனக்கொள்க. (க)

ஒருபொருண் முழுதுங் காணு ருப்பொரு ளியல்பு கூறக்
கருதுவ ரல்லா மேனுட கணுநுதற் பெருமானன் றனு
மருவிடை யூறு கண்டு வணங்கினு னென்று லந்தப்
பொருவிலி கதையான் கூறப் புகுந்தது நகைய தாமே.

(இ - ள்.) ஒரு பொருளை முற்றுமறியாதவர்கள் அப்பொருளி னியற்கையைச் சொல்ல நினைக்கமாட்டார்கள். முற்காலத்தில், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமா னும் (தமக்கு) இடையூறு உண்டானதைக்கண்டு பணிந்தாரென்று சொல்லுமிடத்தில், அந்தச்சமானமற்ற விநாயகப்பெருமானது சரித்ததை யான் எடுத்துச் சொல்லப்புகுந் தது நகையதாகும். எ - று

உப்பொருளென்றதில் உகரம் சுட்டிடைச்சொல்.

விநாயகனென்பதற்குத் தனக்குமேல் ஓர்நாயகனில்லாதவனெனப் பொரு டரலின் பொருவிலியெனக்கூறினார்.

நகையதாகுமென்றது ஈண்டுச் சிலேடை வகையால் நகையினை விளைப்ப தாகுமென்றும், ஒளியினைச் செய்வதாகுமென்றும் பொருள்படும். (உ)

## சிறப்புப்பாயிரம்.

வேறு

வீறுபெறு மாவடுதண் டுறைநமச்சி வாயனருண் மெய்ஞ்ஞா னத்தின்
கூறுதெரி கச்சியப்ப முனிவரனன் றன கோதிலெழுத் தாதி யென்னு
மூறுசுவைப் பாற்றயிர்நெய் தேன்கழைநீ ராழிகடைந் துலகிற் செய்யு
ளேறுசுவை யமுதளித்தான் விநாயகமான் மியவிரத மினிப்ப மாதோ.

(இ - ள்) பெருமைபெற்ற தடம்பமாகிய திருவாவடுதுறையி லெழுந்தருளிய நமச்சிவாய தேசிகரருளிய உண்மைஞானத்தின் கூறுபாடுகளை யுணர்ந்த கச்சியப்ப முனிவர் குற்றமில்லாத எழுத்து - சொல் - பொருள் - யாப்பு - அணி யென்று சொல் லப்படும் ஊற்றெடுக்குஞ் சுவையினையுடைய பால் - தயிர் - நெய் - தேன் - கருப்பிர சம் ஆகிய கடலினைக்கடைந்து இந்நிலவுலகத்தில், சுவையேறிய அமுதமயமாகிய செய்யுட்களாகிய விநாயகமான்மிய மென்னும் இரசத்தினை (புலவர்கட்கு) இனிக் கும்படி யுதவினார். எ - று. (க)

வேறு

சொல்லார்ந்த புகழ்த்தொண்டை வளநாட்டிற் சிறந்த
துளுவாகுல சிகாமணியாங் கந்தப்ப னருளும்
வல்லாண்மைத் தடம்புயத்தோன் குளந்தையூர் வள்ளன்
மாமேரு காவலனும் வரம்பில்பெரும் புகழோன்

வில்லார்ந்த வருட்சிவபுண் ணியக்கொழுந்தா யுலகில்
விளங்குசிதம் பரபூபன் விநாயகமான் மியத்தைச்
செல்லாரு முயத்தமிழா லருளுகெனத் தந்தா
னிருந்துறைசைக் கச்சியப்ப வெல்லையின்மா தவனே.

(இ - ள்) (கவிவாணர் செய்த) பாக்களிற் பொருந்திய கீர்த்தியையுடைய வளமமைந்த தொண்டைநாட்டில், சிறப்புற்ற துளுவவேளாளர் குலத்திற்கோர் சிரோரத்தினமாகிய கந்தப்பமுதலியார் பெற்ற வலிதங்கிய ஆண்மையினையுடைய பூரித்த புயங்கள் வாய்ந்தவனும், குளத்தூரில் (வாழ்ந்த) வள்ளலும், மகமேருவைப்போலக் காத்தற்றொழிலில் வல்லவனுமாகிய எல்லையில்லாத பெரிய கீர்த்தியுடையவனும், ஒளிவாய்ந்த அருண்மயமாகிய சிவபுண்ணியக் கொழுந்தாய் உலகில் விளங்குபவனுமாகிய சிதம்பரபூபன், விநாயகப்பிரபாவத்தை, யாவருங்கடைத்தேறும்படித் தமிழ்ப் பாக்களாலருளிச்செய்கவெனக்கேட்க, பெருமை வாய்ந்த திருவாவடுதுறையி லெழுந்தருளிய அளவில்லாத சிறந்த தவத்தினையுடைய கச்சியப்ப முனிவர் செய்தருளினர் எ - று.

"ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை - நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே - கேட்போர் பயனோ டாயெண் பொருளும் - வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே" என்றும், "காலங் களனே காரண மென்றிம் - மூவகை யேற்றி மொழிநரு முளரே" என்றுஞ்சூத்திரமாகலின், "இருந்துறைசைக் கச்சியப்ப வெல்லையின் மாதவனே" என்றதால் ஆக்கியோன் பெயரும், "விநாயகமான்மியத்தை" என்றதால், வடமொழிப் பார்க்கவபுராணத்தின் மூலமாகிய வழியும், "எல்லாரும்" என்றதால், குணகடல் குமரி குடகம் வேங்கடமென்னு நான்கெல்லைக்குட்பட்ட தமிழ்நாடு வழங்கலாகிய எல்லையும், "விநாயகமான்மிய" மென்றதனாலேயே நூற்பெயரும், "தமிழால்" என்றதால் விருத்தப்பாக்களாகிய யாப்பும், "உய" என்றதால் நுதலிய பொருளும், கேட்போர்பயனுங் கூறினரெனக் கொள்க.

இனி, காலமென்றதை இவர் சாலிவாகனசகம் கசுசஎ-ல் இருந்தவரெனவும், களனென்றதைச் சென்னைநகரில் ஸ்ரீபிரசன்னவிநாயகர் சந்நிதியில் அரங்கேற்றியதென்றும், காரணமென்றதை "சிதம்பரபூபனவிளம்புகென" என்றதால் அவரால் கேட்கப் பட்டதென்றுங்கொள்க (உ)

ஆகத் திருவிருத்தம் - உக.

# திருநாட்டுப்படலம்.

வேறு.

அடுத்த விகககதை பிரசன்ன விநாயக னருளாற்
றொடுத்த லாலவ னுடெனுந தொண்டைநாட டினையும்
விடுத்தி டாவவன் சென்னைமா நகரையு மேனமை
மடுத்த நாவலா வியததக முநதுற வகுப்பாம்.

(இ - ள்) பொருநதிய இசசரிதமானது பிரசன்ன விநாயகப்பெருமானது திருவருளினுற் பாடப்படுவதால், அவ்விறைவனெழுந்தருளிய நாடெனககூறப்படுந் தொணடைநாட்டினையும, அக்கடவுள் பிரியாத சிறநத செனனைநகரததினையும், மேன்மை தஙகிய நாவின் வன்மைவாயநத புலவர்கள் களிக்குமபடி முற்பட (எடுததுக்) கூறுவாம். எ - று. (க)

வேறு.

அண்டருமப புகழ்துண் டீர னுணடுதுண் டீர நாடாய்த்
தணடகன் பின்ன ராணடு தணடக நாடாய்ப பினனாத
தொணடைமா னுண்டு தொணடை நாடெனத் துலங்கிற் றென்ப
பண்டயன படைப்புத தொடடுப் பயிலுமித் தொலலை நாடு.

(இ - ள்) பூாவததிற் பிரமதேவனது சிருஷடி காலநதொடங்கிப்பொருநதிய இப்பழையநாடானது தேவர்களும் புகழுந்துண்டீரன் அரசுசெய்துதுணடீரநாடாயும, அதன்பின்னா தண்டகன அரசுபுரிநது தண்டகநாடாயும், அதனபின்னா தொண்டைமான் அரசியற்றித தொணடைநாடாயும விளங்கியதென்று சொலலுவா. எ -று. (உ)

கயிலையி லிழைதத குறறங கழுவுதல் வேணடிப போநத
மயிலிய லுமையா ளாறு நகரையும வழியிற போககி
யுயரிய நகரி தெனறே யுறறமா காஞசி மூதூா
செயிரறத தனபாற கொணடு சிறநதது தொணடை நாடு.

(இ - ள்) திருககைலாயகிரியில் (சிவபெருமானது திருவிழியைப்புதைத்த) குற்றததை நீக்குதல விருமபிப (பூவுலகுக்கு) வநத மயிலின சாயலையுடைய உமாதேவியாா (புணணிய புரிகளில) ஆறுநகரஙகளையும் வழியிலேவிடுதது (தாண்டி, அவவேழனுள்ளும) சிறப்புறற நகரமிதுவேயென்று பொருநதிய சிறநத காஞசியெனனும பழைய நகரததைக் குற்றமறத தன்னிடஙகொண்டு மேமபட்டுற்றது தொண்டைநாடு. எ - று.

உமாதேவியாா சிவபெருமானது திருக்கண்புதைதத காலத்தில் ஆன்மாககள் இருளா லலலலுறறமை கருதி,நீதென்றிசை சென்று எமமை யாசசிததுப் பாகம் பெறுகவென்றமையின அக்கட்டளையைக கடவாது காஞ்சியிற் றவஞ்செயது சென்றன ரென்பது சரிதம

புணணிய நகரஙகள் ஏழு. அவற்றை,

**காசிகண்டம்.**

"காசிமாயாபுரியவநதிகாஞசிமற
றோசைகொளயோததிவணடுவைாயொபபறு

மேசிலாமதுரையென்றிசைக்குமேழபுவி
மாசறுமுததியையவழஙகுமெனபவே."—என்பதனுனறிக. (௩)

நாடடினுக் கியலபு கூறப புகுநதநா வலாக ளெலலா
நாட்டினிற் சிறநத தொண்டை நாடடினை நோககிப போலும்
வாட்டமி லிருநீா வாய்நத மலையரண் வருநீ ராதி
கோட்டமில பொருள்க ளெல்லாங் குறிதெடுத் துரைத்த வாறு.

(இ - ள்) நாட்டுககுச் சிறப்புரைககப் புகுநத கவிவாணர்கள் யாவரும், குறை வில்லாத பெருமிதம பொருநதிய மலையரணும் வருகினற நீரரணுமுதலிய கோணுத வில்லாத பொருள்களையெல்லாஞ சுட்டி யெடுததுச சொல்லியவகை. நாடுகளிற் சிற ந்த தொண்டைநாட்டின் சிறப்பு நோககிப்போலும. எ - று.

நாடுகளி லெல்லா மேமபட்ட தொணடைநாடு இருநீர்வாய்ந்த மலையரண் முதலியன பொருநதி நிற்றலைககண்டுதான கவிவாணா பிறநாடுகளின் சிறப்பையுரைத் தனர்போலு மென்பது கருதது (௪)

மழைவளம வறநத போது மணலகழ்ந் துழவ ரெல்லாம்
விழைபுனல் கொள்ளு மாறு வேறுவே றொழுகு மேனுந்
தழைபுனற் பாலி தேனுத தருபயத் தொழுகுஞ சீராற
பழையதுண் டீர நாட்டைப் பாலிநா டெனவுஞ சொல்வார்.

(இ - ள்) மழை வளப்பங்குன்றிய காலததிலும் உழவர்கள் யாவரும் மணலி னைத் தோண்டிததாம விருமபிய நீரினைக் கொளளுமபடி (கால்முதலிய வுருவேறறு) வெவ்வேறாக ஒழுகுமாயினும், பெருகுகினற நீரையுடைய பாலாறானது காமதேனு சொரிந்த பாலினுலொழுகுஞ சிறப்பால், பழமையாகிய துண்டீரநாட்டைப் பாலிநா டென்றுஞ சொல்வாாகள. எ - று (௫)

வே று.

மாலெ னப்படு மேகமால் வாரிதி யடுத்துச்
சில மெய்நநிறம வேறுமாயத தேவருக கமுதஞ்
சால நல்கினன சாாநதுரு வேறுமாய் நாமு
ஞால நல்குது மமுதென நாலைநாக கினவே.

(இ - ள்) மாலெனறு சொல்லப்படும் மேகம், திருமால் (பாற்) கடலைச்சேர் ந்து, சிறபபுற்ற தனது தேகநிறமவேறாகித தேவர்கட்கமுததனதை மிகுதியாகக்கொடுத் தனன். (ஆதலின) நாமும் (அங்குச்) சென்று உருவம் வேறுபட்டு உலகினருக்கு அமு கொடுப்போமெனறு கடலைககண்டன. எ - று.

மாலெனபது மேகததிறகுந திருமாலுக்கும் பெயராகலின நமது பெய ருடைய வொருவனியறறியவாறு நாமுஞ செயவோமெனறு கருதியதாக வுருவகஞ் செயதார். அமுதமெனபதும அவ்வாறே அமிர்தததிறகும ஜலததிறகும பெயா. (௬)

திருவு மறறவு முநதுறச செறிநதுயிர் தேமப
வுருவ வலவிட முதலிய பாற்கடன மறநது
மருவி லேமென வொழிதொரு மாதவற குணவாய்ப்
பொருதி ரைபபெருங கஙகைதோய புணரிசாாந தனவே.

(இ - ள்) திருமகளையும் ஏனைய பொருள்களையுந் தன்னிடத்துடைத்தாகி, மூன்று உயிர்கள் துக்கிக்கும்படி நிறமமைந்த வலிய விடத்தைக்கொடுத்த திருப்பாற் கடலை மறந்துஞ் சேரோமென்று நீக்கி, ஒப்பற்ற அகத்திய முனிவனுக்கு ஆபோசன மாகி, மோதுகின்ற அலையையுடைய பெரிய கங்காநதி பாய்கின்ற ஜலசாகரத்தை யடைந்தன. எ - று.

"திருவுமற்றவுஞ் செறிந்து, உயிர்தேமப் வுருவவல்விட மூன்றுற உதவிய" என்றவையஞ்செய்துகொள்க (எ)

எம்மை யூர்தரு மிந்திர னின்மலைச் சிறகு
தம்மை யீர்ந்தநாட் டப்பிவந் தொளித்தமை நாக
விம்ம லோங்கலை வெளிசெய்வா மெனவிழைந் தனபோற்
சும்மை மாகடல் குழிபடத் தோயமவாய் மடுத்த

(இ - ள்) எம்மை வாகனமாகக்கொள்ளும் இந்திரன் தொகுதியாகிய மலை களின் சிறகுகளையரிந்த காலத்தில், (அவன்கண்கட்குப் புலப்படாது) தவறிவந்து ஒளித்துக்கொண்ட பூரித்த மைநாகமலையை (இப்பொழுது) வெளிப்படுத்துவோ மென்று விரும்பினபோல, ஒலிபொருந்திய பெரிய சமுத்திரமானது குழிபடும்படி சலத்தைப் பருகின. எ - று.

மைநாகமென்றது இமாசத்தின் மகன (அ)

வெளிப்ப டுத்தினும் வெருவிவந் தொளித்தமால் வரையை
யளிப்ப தல்லது மானவே லிந்திர னடுத்து
விளிப்ப தின்மையை நினைந்துவெண் டிரைப்புனன் முழுதுங்
களிப்ப வுண்டிடா தெழுந்தன கறுத்துமா மேகம்.

(இ - ள) வெளிப்படுத்தினாலும், அச்சமுற்று வந்து (கடலிலொளித்த அப்) பெரியமலையை மாட்சிபொருந்திய வச்சிரவேலேந்திய இந்திரன (இனி)காப்பதல்லது சமீபித்து அழிப்பதில்லை யென்பதைக்கருதி, வெள்ளிய அலையையுடைய கடனீர் முழுவதையுஞ் சந்தோஷமெய்தப் பருகாமல், பெரிய மேகங்கறுத்தெழுந்தன. எ - று.

அச்சமுற்றுக் கடலிலொளித்த அம்மலையை இனி யிம்சைசெய்யானாதலின் அதனை வெளிப்படுத்தாதொழிந்தன வென்றா கறுத்து என்றதற்குக் கருநிறமுற்று என்றும், கோபித்து என்றும் பொருள்படும்.

"வெளிப்படுத்தினும் * விளிப்பதின்மையை நினைந்து * உண்டிடாதெழுந்த னமேகம்" எனமுடித்துக்கொள்க. (க)

வெளிறு நீருரும் பெரியரை மேவிடி னவர்த
மொளிறு சீரெலா முறுவரென் பதுதிட முவரி
குளிரு நீருமவண் ணமுங்குருஉத் தழலும்பே ரொலியுந்
துளிசெய் மாட்சியும் பெற்றன தோயந்தவெண் மேகம்.

(இ - ள) வெளிற்றுத்தன்மையுடையவர்களும் மேலோரையடைந்தால், அப் பெரியோருடைய சிறந்த தன்மைகளெல்லாவற்றையும் அடைவார்களென்பது நிச்ச யம் (அதுபோல) சமுத்திரத்திற் படிந்த வெள்ளியமேகம் (அதனது) தட்பமும் சலமும் கருநிறமும் செவ்விய அக்கினியும் பேரிரைச்சலும் துளிக்கின்ற மேம்பாடும் (ஆகிய இவற்றை) பெற்றன எ - று.

வண்ணம் - நிறம், ஏண்டுகைகருமை. தழலென்றது கடலில் வடவாமுகாக்கி னியும் மேகத்தில் நெருப்புமென்க. பேரொலிகடலிரைச்சலும மேககர்ச்சனையுமாம். மற்றவை வெளிப்படை. (கo)

குங்கு மங்குலாஞ் சிலைநுத லோடுகோ மளமா
ரங்க மெங்கணும பசப்புறச் சூறபொறை யாற்றாத்
தங்கு மினனிடை நுடங்கவா யரறன்றொலி தழங்க
மங்குன் மங்கைநீ ரெனுமகப் பயப்பவான் பரந்தாள்.

(இ - ள்.) குங்குமம் விளங்கும் புருவமாகிய விலலோடும, இளமைவாய்ந்த தேகமுழுவதும் பசலைநிறமெய்தவும, காப்பசுமைபொறுது விளங்குகின்ற மின்ன லாகிய இடையொசியவும, வாயினொலிரைச்சலிடும ஓசை விளங்கவும, மேகமாகிய பெண் நீர் என்னுங் குழந்தையைப்பெற ஆகாயம (ஆகியஇடத்திற்) பரவினள எ-று.

குங்குமம் - செம்மைநிறம். ஆற்று - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.

கவாபொ ருட்படு நூலகளின கரிசெலா மகற்றி
யிவாபொ ருட்டிற மிதுவென வியமபுமா ரியாபோ
லுவர கற்றியொண டீமபுன லுயிரெலாம பருகத்
துவரும வெப்பறச சொரிந்தன கரந்துகா ரெழிலி.

(இ - ள்.) குற்றமாகிய பொருள்கள் பொருந்திய நூலகளின குற்றங்களையெல் லாம் விலக்கி, மேன்மையாகிய பொருளினறிறமிது தானென்று (அளவிட்டு) உரைக் கும மேலோர்போல, கரியமேகங்கள (சமுத்திர நீரின) உபபுத்தனமையை விலக்கி, ஒளிய மதுரமாகிய சலம் (ஆக்கி, அதனைப்)பிராணிகள்யாவும பருகும்படி, துன்புறுத் தும (வெயில) வெப்பமொழியுமபடி ஊற்றெடுத்துப் பொழிந்தன. எ - று.

காரெழிலி - காரகாலத்துதித்தமேகம (கஉ)

திரைய டங்கலுஞ சொரிந்தன தேமலரப் பண்ணைத்
தரைய டங்கலுஞ சொரிந்தன தணணிழற கான
நிரைய டங்கலுஞ சொரிந்தன நெடுமபுன லருவி
வரைய டங்கலுஞ சொரிந்தன வள்ளியோா போல.

(இ - ள்) (மேகங்கள) கொடையாளிகளபோல, சமுத்திரமாகிய நெய்தநில முழுதும பொழிந்தன; தேனமைந்த மலாகள் பொருந்திய வயல்களையுடைய (மருத) நிலமுழுதுமபொழிந்தன; தணணிய நிழலைச் செயகினற வனமாகிய (முலலைநில) வரி சையெலலாம் பொழிந்தன; நெடிய நீரையுடைய அருவியாறமைந்த மலை (ஆகிய குறி ஞசி) நிலமுழுதும பொழிந்தன. எ - று. (கங)

உரிய தாகிய பருவமிவ் வாறொழிந்த ததறபின
கரிய வாரகட னீாநசை கதித்தகா ரணத்தாற்
பரியு மாமழை மதிதொறு மும்முறை பருகிச
சொரியு மாகடன பூணடன சுராகளுங களிபப.

(இ - ள்) உரியதாகிய (காாப்) பருவம் இவ்வகையாகச் சென்றதன்பிறகு நெடிய கருங்கடற் சலத்தில விருப்பமுற்ற காரணத்தினால் விரும்பும் சிறந்த மேகங கள் மாதந்தோறும் மும்முறை (அதனைப) பருகி, தேவாகளுஞ் சந்தோஷிக்கும்படி மழை) சொரியும வகையாகக் கடமையைக்கொணடன எ - று.

மதிதொறு மும்முறை பருகிச சொரிதல் - மாதமும் மாரிபெய்தல் அதுஒன பதுதினங்கள கழிநதபினனா பததாநாளில மழைபொழிதலெனபது ஆனறோ உரை யிறகணடது. (கச)

மாயை காரியப் பொருள்களை யடியாபால வழஙகித
தூய வானபொரு ளௌிதுறுஞ சுகுணரே போலத
தீய தாமபுனற ரெழுமுகிற களிததிருங கடலும
பாய தீமபுன னதிகளாற பருகின மாதோ

(இ - ள) மாயாகாரியமாகிய பொருளகளை அடியவர்கட்குக் கொடுதது, சிற ந்த மோக்ஷபபொருளை யிலேசாகப் பெறும நறகுணமுடைய மேலோாபோல, பெரிய சமுததிரமும தீய (உவா) நீரைச செழிய மேகஙகளுக்குக கொடுததுப பரவிய மதுர மாகிய நீரை (கஙகையாதி புணணிய) நதிகளாற பருகின எ - று.

மாதோ - அசை (கரு)

அருவி வீஙகின மலைகளகான யாறுமிக காாத்த
பொருவில கானகம பூமபணை பொயகைகா லாறு
மருவு மேரிக ணிறைநதன மருநதவைப பிடங்கள
பெருக வூறின கேணிகள பெருஙகடற கரைககே.

(இ - ள்) மலைகள் (பொருநதிய குறிஞசிநிலஙகளில) அறுவியாறுகள பெருகின ஒபபிலலாத முலலைநிலஙகளில காட்டாறுகள மிகுநது ஆர்பபரிததன மருத நிலஙகளிற பொருநதிய பொயகைகளும் காலவாயகளும ஆறுகளும ஏரிகளும நிறைந தன பெரிய (நெயதநிலமாகிய) கடறகரையிலுள்ள கிணறுகள் (நிறைநது) பெரு குமபடி யூறறெடுததன எ - று (கசு)

மலாத லைபபுவி யுயிாகளும வானவர் குழுவு
மலகி லினபுற வுதவிசெய் தருளுமா மழையி
னலனு ரைததன நலததகு நானில வரைபபிற
குலவு மைநதிணை வளமினிக கூறுது முறையால.

(இ - ள) இடமகனற பூமியிலுள்ள பிராணிகளும, தேவாகூட்டமும, குறற மிலலாத இனபததை நுகருமபடி யுதவிசெயகினற பெரிய மழையினுடைய சிறப பினைச சொனனோம் நன்மைபொருநதிய நாலவகை நிலஙகளாகப் பிரிந்த பூமியிற பொருநதிய ஐநதிணை வளஙகளை யினி முறைபபடி (எடுததுக) கூறுவாம எ - று

திணைகள ஐநது அவை குறிஞசி - முலலை-மருதம - நெயதல-பாலையெனப படும அவற்றுட்குறிஞசி - மலையுமமலைசோநதநிலனும, முலலை-காடுங காடுசேர்நத பூமி யும, மருதம-விளைநிலனும வாசஸதலமும், நெயதல - கடலுங கடறகரையுங கழியுங கழிககானலும, பாலை - இநநாலவகை நிலததும் நிகழ்வதுமாம (கஎ)

## குறிஞ்சி

வேறு

வெளளிவெறபு பிறையைத தாங்கி விளஙகிய தூமையைத தாஙகித
தெளளிய விமைய வெறபுஞ சிறநதது மூவாததாஙகி
யொளளிய மேரு வெறபு முயாநததெனறோஙக லெல்லா
மளளிலை வேலற றாங்கி யருமபயன படைததுச சிறக்கும.

(இ - ள்) வெள்ளிமலையாகிய திருக்கைலாயகிரி சிவபெருமானைத் தரித்து (ஏனைய மலைகளில்) விளங்கியுள்ளது புனிதமாகிய இமயமலையும் உமாதேவியாரைத் தரிசித்துச் சிறப்புற்றது ஒளிபொருந்திய மேருமலையும் திரிமூர்த்திகளையுந் தரித்து உயர்வுற்றதென்று கருதி, மலைகள் யாவுங் கூரிய வெற்றிவேல்போன்ற வேற்படையேந்திய முருகக்கடவுளைத் தரித்து அரியபிரயோசனத்தைப் பெற்று நிற்கும் எ - று

அரும்பயன் படைத்து நிற்குமென்றது, கைலாயம் இமயம் மேரு இவற்றைப் போலன்றி, அந்நிலத்திற்கேயுரிய கடவுளைத் தமபாலுறப்பெற்றமையானென்க (கஅ)

பன்றியைத் தொடர்ந்த வேடன் பயந்தசே யிவனு மாய
வன்றியை வேட்டை யாடி மருப்பொன்று வாங்கும் வேட
னென்றறு முகவன் வைகு மிருமபுசூழ் பசும்பொற் சாரற்
குன்றக மென்று மெங்குங் குடிகொளும் வேடச் சாதி.

(இ - ள்) (மூகாசுரனென்னும்) பன்றியைக் (கொன்று அர்ச்சுனனைக் காக்கும்படி) தொடர்ந்த வேட்டுருவங்கொண்ட சிவபெருமான் பெற்றருளிய இவனும், (திருமாலினவதாரமாகிய) மாயப்பன்றியை வேட்டையாடி (அதன்) தந்த மொன்றினைப் பறிக்கும் வேடுவன் என்று, குமாரக்கடவுள் வசிக்குங் குறுங்காடுகள் சூழ்ந்த பசியபொன்னையுடைய சாரல்களமைந்த மலையிடங்களிலெல்லாம் எப்பொழுதும் வேடச்சாதி குடிகொண்டிராநிற்கும் எ - று.

பன்றி - வன்றி. "பவயோரபேதః" என்பது விதி.

இருங்குசூழ் எனப் பாடமுமுண்டு இறுங்கு=சோளத்திலோர்வகை (கக)

மலைவரு முனையான் முன்னை வளர்கிளி யினமா மென்றே
யலைசிறைக் கிளியு மென்று மணிவரைக் கிழவ னாதி
யுலைவறு மயிலா மென்றே யுவப்பிலா மயிலு மீண்டி
யிலைவளர் சாரற் சோலை யினத்தொடும் பயிலா நிற்கும்.

(இ - ள்) இமாசலத்திற்றோன்றிய உமாதேவியாரது முன்கையில் வளாகின்ற கிளியானது(தமக்கு) இனமாகுமென்று கருதியே அலைகின்ற சிறகையுடைய கிளிகளும்,அழகிய குறிஞ்சி நிலத்தலைவனாகிய முருகக்கடவுளுக்கூர்தியாகிய கெடுதலற்றமயில்(தமக்கினம்)ஆகுமென்று கருதியே களிக்கிலலாத மயில்களுங்கூடி, தளிர்கள் வளராநின்ற மலைச்சாரலிலுள்ள சோலையில் எக்காலமுந் தமதினத்தோடுஞ் சஞ்சரிக்கும். எ - று

கிளியும் மயிலும் இனமாமென்றே சோலையில் என்றும் இனத்தொடும் பயிலாநிற்கும் எனக்கூட்டுக. (உ0)

மாயையில் வல்ல சிங்க மதமலை பன்றி வென்ற
தூயவன் சூழல் வைகிற் றோலவியில வியுண் டாமென்
றாயின கருத்தி னோடு மடுத்திருந் தனவே போன்ற
மேயின மடங்கல் வேழம் பன்றியும் வேங்கை மற்றும்.

(இ - ள்.) மாயத்தொழிலில் வல்ல சிங்கமும் யானையும் பன்றியுமாகிய இவற்றைச் சயங்கொண்ட புனிதனாகிய முருகப்பிரான் வசிக்குமிடத்தில் (நாமும்) வசித்தால், தோலவியிலலாத வெலபமுண்டாகுமென்றட்கொண்ட கருத்துடன் சிங்கமும் யானையும் பன்றியும் வேங்கையும் பிற (காட்டு) மிருகங்களுஞ் சமீபித்திருந்தாற் போன்றனவாகிய பொருந்தின எ - று.

மதமலை=மதத்தையுடையமலை சிங்கமென்றது சிங்கமுகாசுரனையும், மதமலை தாரகனையும், பன்றி திருமாலின் வராகவுருவையு முணர்த்தி நின்றன.

தோல்வியில் வலியுண்டாமென்றதற்குத் தோல்வியடையத்தக்க காலமவரின் இப்பெருமானருளால் வலியுண்டாமென்றும், தோல்வி தெய்வகதியாக வருமாயினும் நீங்காத வலியுள்ளதாயிருக்குமென்றும் பொருள்படும். தோல்வியில் வலியெனவே வெற்றியெனக்கொள்க (௨௧)

வெறிகமழ் நாகச் சூழல் வெறிமத நாகந் துஞ்சும்
முறிவளர் வேங்கைச் சூழன் முதிர்சினை வேங்கை துஞ்சுஞ்
செறியிலைச் சேவின் சூழற் றிரிதருஞ் சேக்க டுஞ்சுங்
கறிவள ரில்லஞ் சூழல் கானவ ரில்லந் துஞ்சும்

(இ - ள்) மணம்வீசுங் குங்கும மரத்தடியில் வெறிகொண்ட மதத்தையுடைய யானைகள் துயில்புரியும் தளிர்கள் வளர்கின்ற வேங்கைமரத்தடியில் முதிர்ந்த சினத்தையுடைய வேங்கைகள் துயிலாநிற்கும் நெருங்கிய இலையையுடைய செம்மரத்தடியில், திரிகின்ற எருதுகள் தூங்கும் மிளகுக்கொடிபடர்ந்த தேற்றாமரத்தடியில் வேடுவர் சிற்றில்கள் பொருந்தியிருக்கும் எ - று (௨௨)

முருகவேள் வலியென் சொல்கேன் முந்துறப் பணியும் வேடர்
திருகுவார் முகத்து ரோமஞ் சென்றொரு கணையாற் சிங்க
மருவிபாய் மதமால் யானை யடல்கெழு கேழல் வேங்கை
வெருவவே வேட்டை யாடி மீள்குவர் நாளு நாளும்

(இ - ள்) (குறிஞ்சிவேந்தாகிய முருகப்பிரானது) திருமுன்னர் வணங்கும் வேடர்கள் தமது முகத்திலுள்ள திருகிய நீண்ட உரோமத்தினின்றுஞ் சென்ற ஒருபாணத்தினாற் சிங்கமும், மதசலம் அருவியாகப் பாய்கின்ற யானையும், வலிமைமிக்க பன்றியும், வேங்கையும் (தம்மைக்கண்டு) பயப்படும்படி வேட்டையாடித் தினந்தோறுந் திரும்புவார்கள் (ஆதலின்) குமாரக்கடவுளுடைய வல்லபத்தை யாதென்று (அளவிட்டுக்) கூறுவேன் எ - று

அந்நிலத்து வசிக்கும் வேடர் வில்முதலியன வேண்டாது தமது மீசையை முறுக்கி அதன்கண், கணையைவைத்து எய்வரெனக்கூறுதல் காணபரமபனாயில் கேள்வி அன்றியும் "வேடர் முகத்துரோமந் திருகுவார் சென்று ஒருகணையால் * * * * வேட்டையாடி மீள்வர்" என அந்வயஞ்செய்து, மீசை முறுக்கி வேட்டையாடி வருவர் எனப்பொருள் கூறினும் பொருந்தும் (௨௩)

சந்தன மகிலகற் பூரங் குங்குமத் தருக்கள் சாடிச்
செந்தினை வித்துவார்கள் செழுங்கனன் மடுக்குந் தோறுங்
கொந்துகொண் டெழுந்த தூமங் குன்றக முழுதும் போர்த்திட்
டந்தரத் தமரர் தூய வாக்கையுங் கமழப் போர்க்கும்

(இ - ள்) சந்தனமும் அகிலும் கற்பூரமும் குங்குமமுமாகிய மரங்களை வெட்டியெறிந்து, செவ்விய தினையை விதைப்பார்கள். (அவ்விறகில்) தீமூட்டுந்தோறும் கூட்டமுற்றெழுந்த புகையானது மலையிடமுழுவதும் மூடிக்கொண்டு ஆகாயத்திலுள்ள தேவர்களது புனிதமாகியசரீரத்தையும் பரிமளிக்கும்படி மூடாநிற்கும் எ - று

அமரர்—இறப்பற்றவர்

தேவருடல்கள் மணஞ்சொரிதலுக்குக் குறவர்கள் வெட்டியெறிந்த சந்தன முதலியவற்றினிந்தனத்தில் தீமூட்டுதலே காரணமெனக் குறித்துரைத்தனர் (௨௪)

ஆரமு மகிலு மற்று மாருயிர் மடிந்துங் கந்தஞ்
சேரவிண் ணவர்க்கு நல்குஞ் செய்கையுந் தமக்கவ் வாறு
கூறற மிலாத வாறுங் குறித்தெழுஞ் சமம்பயான முற்றும்
வேரலைக ளுரிஞ்சித் தாமே வெந்தழன் மூழ்கா நிற்கும்.

(இ - ள்) சந்தனமரமும் அகிலமரமும் பிறமரங்களும் தமது அரிய உயிர் நீங்கியும், தேவர்களுக்கு வாசனையைப்பொருந்தக் கொடுக்குஞ்செயலையும், தமக்கு அவ்வண்ணமாக மிக்க புண்ணியமில்லாத வகையையுங் கருதித்தோன்றிய வருத்தத்தினால், முதிர்ந்த மூங்கில்கள் (ஒன்றோடொன்று) உராய்ந்து தாமே வெவ்விய அக்கினியில் மூழ்கும் எ - று.

மூங்கில்கள் ஒன்றோடொன்றுராய்ந்து தீப்பற்றியெரிதல், சந்தனமுதலிய மரங்கள் தேவர்கட்குதவியாதல்போல யாம் பயன்பட்டிலோமென்னும் மனவருத்தத்தாலெனக்கூறினார். (உரு)

இரும்பனை வெளிற்றின் புன்சா யென்மலி மயிரி ஞுக்கைக்
கரும்பெருங் கரடி வேய்கால் கனலினை யஞ்சிச் சாரத்
தரும்பசுந் தேற்ற பூங்காத் தன்பெயர் குறித்து வானம்
வரும்புயல் வளைத்துச் சித் மலிந்தத னுயிரைக் காக்கும்.

(இ - ள்) வெளிற்றினையுடைய கரியபனையின் புல்லிய செறும்புபோன்ற (கருநிறத்தையுடைய) மிகுந்த மயிர்பொருந்திய உடலையுடைய கரிய பெரிய கரடியானது மூங்கில் சொரிந்த நெருப்புக்குப் பயந்து (தன்பால்) அடைய, பசியதேனைச் சொரியும் பூஞ்சோலையானது (காவென்னுந்) தன்பெயரை நினைத்து, ஆகாயத்திலுழலும் மேகத்தைவளைத்துத் தட்பமிகுந்து அதனுயிரைப் பாதுகாக்கும் எ - று.

தன்பெயர் குறித்து என்றது சோலைக்குக் காவென்று பெயராதலின்.

"இரும்பனை வெளிற்றின்புன்சாயென்மலிமயிரிஞுக்கை" என்றதை, திருமுருகாற்றுப்படை "இரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன - குரூஉமயி ரியாக்கைக் குடாவடி" என்பதுபோல "வெளிற்றின் இரும்பனைப்புன்சாய என்மலிமயிரிஞுக்கை" என அந்வயங்கொள்க. (உசா)

நறையக முழுதும விறக்குஞ் சந்தனப் பொதும்பருள்ளால்
விறைநுகா விருப்பாற் சால மேவிய வராவி னுச்சி
நிரைமணி யிருள்காலச் சித்து நீடொளி விரிக்குங் காட்சி
வரையர மகளிர் வைத்த விளக்கமே மான மன்றே.

(இ - ள்) நிலவுலகமுழுவதும் விலைகொள்ளுஞ் சந்தனச் சோலையில், வாசத்தை நுகர்தலாகிய இச்சையினால் மிகுத்துச்சென்ற சர்ப்பங்களின் உச்சியிலுள்ள வரிசையாகிய மாணிக்கங்கள் (ஆங்குள்ள) இருளினையகற்றி நெடிய பிரகாசத்தையுண்டுசெய்யுந் தோற்றமானது, அக்குறிஞ்சி நிலத்துள்ள அரமகளிர்கள் தாபித்த விளக்குகளையேபோன்று விளங்கும் எ - று.

நாகரத்தினங்கள் அரமகளிர் வைத்த தீபங்கள்போன்றிருந்தனவென்பதாம்.

வெந்திற லவுணர்த் தாக்கி விண்ணவர் களித்த நம்பி
சிந்தையின் மகிழ்ச்சி கூரச் சோந்தவன் செவ்வி நோக்கி
மந்தண மான வெல்லாம் வருத்துரைத் திருத்தி யாலென்
றிந்திர னேவப் போந்தாங் கினமுகி றவழா நிற்கும்.

(இ - ள்) கொடிய வலியமைந்த (சூரபன்மனாதி) அசுரர்களைச் சங்கரித்து தேவராசியத்தை (எனக்குக்) கொடுத்த முருகக்கடவுள் மனதிற்களிப்பு மிகும்படி (ஆங்கு) அடைந்து காலம்பார்த்து அவரிடம் இரகசியங்களையெல்லாம் விளக்கிக்கூறியிருப்பாயாகவென்று, இந்திரன் கடாவச்சென்றன போலக் கூட்டமாகிய மேகங்கள் (அம்மலைகளிற்) சஞ்சரியாநிற்கும் எ - று

நம்பி - பெருமையுடையோன் மந்தணம் - மறைபொருள். (உஅ)

பைத்தபா வடியின் வேழம் பரிவுற மடங்க னோந்து
மத்தகங் கிழியத் தாக்கி மருப்பின்வே ரருந்தச் சிந்து
நித்தில மூங்கின் முத்த நிரந்தன வறுமீன் பால
னுத்தமன் கருணை வேண்டி யுடுத்திர ளடுத்த போலும்

(இ - ள்.) சிறந்த பரவிய அடியையுடைய யானைகள் துன்புறும்படி,சிங்கங்கள் நெருங்கி (அவற்றின்) மத்தகங்கிழிபடுமாறு அறைந்து தந்தங்களின் வேரினைப்புசித்தலால (அத்தந்தங்களினின்று சிந்திய) முத்தங்களும், மூங்கிலினின்றுதிர்ந்த முத்தங்களும் வரிசையாகவுள்ள காட்சியானது குமாரக்கடவுளாகிய உத்தமனது கிருபையை விரும்பி நக்ஷத்திரத்தொகுதிகள் சமீபித்தனபோலும். எ - று

மருப்பின்வேர—யானைக்கொம்பின் குருத்து அதாவது அடிப்பாகம். மென்மைகருதி விரும்பிய பொருள் எனக்கொள்க.

முத்துக்கள் யானைத் தந்தத்தினின்றும் மூங்கிலினின்றுந் தோன்றுமோவெனின் முத்துச் சனித்தற்குரியன இருபதிடங்களாம் அவற்றை,

"தந்திவராகமருப்பிப்பிபூகந்தனிகதலி
நந்துசலஞ்சலமீனறலைகொக்குநளினமின்னா
கந்தரஞ்சாலிகழைகன்னலாவினபலகடசெவிகாா
இந்துவுடுமபுகராமுத்தமீனுமிருபதுமே"—என்பதனானறிக

அறுமீன் பாலனென்றது, முருகக்கடவுள் ஆறு குழந்தைகளாகச் சரவணப்பொய்கையில் விளையாடிக்கொண்டிருக்கையில் விண்டு முதலானோர் அவரைப் பத்துத் திசைகளிலுங் காத்திருந்து, கார்த்திகை நக்ஷத்திரமாகிய ஆறுமாதர்களையும் பால் கொடுத்து வளர்க்கச்செய்தனராதலின் அவருக்குக் காரணப்பெயராயிற்று. இதனை,

கந்தபுராணம்

"ஆறுருவாதலோடுமறுவுருமகிழ்ந்துவேறு
வேறுதாமெடுத்துத்தத்தமவியத்தருக்குநணைமெனகொங்கை
யூறுபாலமுதமன்றேறக்குநவனுமுறுவலசெடது
மாறிலாவருளாலாறறவருந்தினனபோலவுண்டான்"—என்பதனானறிக

மீன் - நக்ஷத்திரம் அறுமீன்களாகிய கார்த்திகை மாதர்கள் முருகப்பிரான் கருணைபெற்றமையின் யாமும் அவனதிருவருளைப் பெறுதுமென்று ஏனைய நக்ஷத்திரங்களும் வந்திருந்தாற்போன்றன வென்பதாம் (உகூ)

நெருப்பவிர் தனைய காந்த ளிணைநிரை மலர்ந்து நிற்பச்
சுருப்பின நெருப்பென றெண்ணித் தூரத்தே யகலுங் காட்சி
பருப்பதச் சிலைக்கை நாதன் பயந்தவன் முடிக்க ணேற
விருப்பன வென்று முசா திடையொழிந் தகலல போன்ற.

(இ - ள்) நெருப்புப பிரகாசித்தது போல, வரிசைவரிசையாகக் காந்தண் மலர்கள் விகசித்து விளங்க, வண்டு கூட்டங்கள் (அவற்றையணுகாது) நெருப்பென்று கருதி, தூரமாகச்செல்லுங் காட்சியானது, மலைவில்லைக்கையிலேந்திய சிவபெருமானை பெற்றருளியமுருகக்கடவுளது திருவடியில (அம்மலர்கள்) ஏறும்படியிருப்பன வென்று கருதி, (அவற்றிற)படியாமல இடமவிட்டுச் செல்வன போன்றிருந்தன. எ - று (கO)

தத்தமக் கியன்ற செய்கை பிறர்க்கெலாந் தகாத தென்று
முத்தம மாவ தென்றே யுணர்த்துமோர் சான்ற தாகச்
சித்திரத் துருவு நேராத் திருத்தகு மகளிர் தம்மை
வைத்தனர் குன்ற நாடர் வளர்தினை காக்கு மாறே.

(இ - ள்) அயலார்க்கெல்லாந் தகாததாயிருப்பினும்,தங்கட்குங்களுக்குரிய இயற்கைச்செயல உத்தமமாகுமென்றே யறிவிக்கின்ற வோர்சாட்சி போல, குறிஞ்சிநில மாந்தர்கள் (தமது) சித்திரப்பதுமையையும் ஒப்பாகாத அழகமைந்த மகளிரை, வளர்கின்ற தினைப்பயிரைக் காக்கும்படி (காவல்) வைத்தார்கள் எ - று. (கக)

மயில்களுங் கிளியுந் தம்மை வளரியன் மொழியால் வாட்டு
மயிலொடு பகைத்த வாட்க ணணங்களுக் கணங்கு செய்யப்
பயிலிய தொழிலே போன்ற பன்முறை புனத்துச் சேற
லுயிரினை யோமப் வேறு முணவுக ளிருப்ப விட்டே.

(இ - ள்) மயில்களுங் கிளிகளும் தமமுயிரினைக் காக்கப்பலவேறுணவுகளுமிருப்பவும், விடுத்து (தினைப) புனத்திலே பலமுறைசெல்லுதல, (தம்மை) வளர்கின்ற சாயலினாலும் சொல்லினாலும் வருத்தப்படுத்துகின்ற வேற்படையோடு மாறுகொண்ட கூர்மைவாய்ந்த கண்களையுடைய அப்பெண்களுக்குத் துன்புசெய்யச்செல்கின்ற செயலே போன்றிருந்தன எ - று

'மயில்களுங் கிளியும் (தம) உயிரினையோமபவேறுமுணவுகளிருப்பவிட்டே புனத்துப் பன்முறை சேறல் தம்மை வளரியன் மொழியாலவாட்டும் அயிலொடுபகைத்த வாட் கண்ணணங்குகளுக்கணங்கு செய்யப்பயிலிய தொழிலே போன்ற" என முடித்துக் கொள்க (கஉ)

கறபினுக் கெதிரில் லாத கதிர்த்தவச் சிரமு மூரற்
பொறபினுக் கெதிரில் லாத பொழிகதிர் முத்துஞ் செங்கை
யுறபல விரலிற் றாங்கு முறுகவண் வைத்துச் சுறறிப்
பறபல புள்ளு மோட்டும் பாவையர் பணையை யெங்கும்.

(இ - ள்) கறபின் வன்மைக்கு எதிர் நிலலாத ஒளியையுடைய வசிரமும், பற்களின் அழகுக்கு எதிரில்லாத வொளிசிந்தும் முத்தங்களும(முதலிய)இவற்றைச் செய்விய கரத்திலுள்ள செங்கழுநீர்மலர்போன்ற விரலிற்றாங்கியுள்ள பொருந்திய கவணில வைத்துச்சுழற்றி நாலுவகையாகிய பறவைகளை யோட்டுகின்ற பாவையர்கள்து பணைகளை எங்குமுள்ளன எ - று

பணை - மாதர்க்கூட்டம் கவண் - கலலெறிகயிறு. (கங)

மணிபல விளைமெ ருங் குன்ற வாணர்கள் விதைத்த வேனல்
நணியில்பல வளனுங் கொய்யத் தகவுறு காலத்தோடு
மணிபல வணிந்து மன்ற லாறறுறு காலங் காட்டிக்
கனியென நின்ற வேங்கை சறபக நிகரப் பூக்கும்.

(இ - ள்.) பலரத்தினங்களைப் பிரகாசிக்கின்ற மலையில் வாழுங் குறவர்கள் விதியினை முதலிய குறைவில்லாத பலவளங்களையும் அறுப்பதற்குத் தகுதியாகிய பருவத்துடன், பல்ஆபரணங்களையும் பூண்டு மணம் புணருங்காலத்தையுங் குறித்துச் சோதிடனைப்போலவிளங்கும் வேங்கைமரமானது கற்பகமலரைப்போலமலராநிற்கும் எ - று.

கணி—வேங்கைமரத்திற்கும் சோதிடனுக்கும் பெயர்.

வேங்கைமலருங்காலமே பயிர்களையறுக்குங்காலமுங் குறவர் மணம்புரிகாலமுமா மாதலின், வேங்கையைச் சோதிடனெனக் குறிப்பித்து "கணியென நின்ற வேங்கை" என்றும், கற்பகமலர்போல வேங்கை மலரிலும் வண்டுகள் மொய்க்காமையான "கற்பகநிகரப்பூக்கும்" என்றுங் கூறினர். (௯௪)

மெல்லெனத் தவழுந் தெண்ணீர் வீங்கியோ ரருவி பாய்ந்து
கல்லையுங் குழிப்பக் கல்லுட் கதுவிய தேனர் பாங்க
ரொல்லைபாய்ந் துழலா நிற்கு முற்றங்கே வலத்தி னீங்கி
வல்லவ னருளா லாவி சகலத்தின் வழங்கு மாபோல்

(இ - ள்) மென்மையாகத் தவழுகின்ற தெளிந்த நீரானது அதிகரித்துப் பெரிய அருவியாகவோடிப் பாறைகளையுங் குழியச்செய்ய, (அந்தப்) பாறையினுள்ளே பொருந்திய தேனையானது, உயிர்கள் கேவலாவத்தையினின்றும் நீங்கி, எல்லாம்வல்ல இறைவன் திருவருளாற் சகலத்திற் பிரவேசிப்பதுபோலப் பக்கங்களில் விரைந்து பாய்ந்து (விசாலமாகச்) சஞ்சரியாநிற்கும் எ - று.

அருவிப்பெருக்கால் பாறைகள் குழிபட, அப்பாறையுளிருந்த தேனைகள் பக்கங்களிற்பாய்ந்து விரைந்து சஞ்சரியாநிற்குமென்பது கருத்து.

கேவலம் - தனிமையாயிருத்தல். சகலம் - கலந்துநிற்றல்.

இச்செய்யுளால் குறிஞ்சியின் நீர்வளங் கூறினர். (௯௫)

சண்பக நறும்பூந் தாது ததைந்ததண் டலைப்பா லாவின்
மண்பக முதிர்ந்த வோக்கோட் பழுத்துறு வாசம் வீச
நண்பகந் துனியி னீடு நாயகி செவ்வி நோக்கும்
பண்பக முடையான் போலப் பமரங்க ளணுகா நீங்கா

(இ - ள்) வாசனைபொருந்திய சண்பகமலரின் மகரந்தப்பொடிகள் படிந்த சோலையிலுள்ள பலாமரத்தின், தரைபிளவுபட வேர்ப்பற்றிய முற்றிய பழத்திலுற்ற வாசனைவீச, விருப்பமுடைய மனத்தில் துன்பமிருந்த [ஊடல்கொண்ட] நாயகியின் (ஊடல்நீங்குங்) காலத்தைப்பார்க்கும் நன்மனத்தையுடைய நாயகனைப்போல வண்டுகள் நெருங்கவுமாட்டா, நீங்கவுமாட்டா எ - று.

நாயகி ஊடலுற்றகாலத்து அவளைப்பிரியினும் நெருங்கினும் ஊடல் பெருகுமாதலின் நீங்காமலும் நெருங்காமலும் நிற்குமாறு, வண்டுகள் பலாப்பழத்தின் வாசனையைவிரும்பி நீங்காமலும், வேங்கையின் வாசனைக்காகச் சமீபியாமலும் நின்றனவெனக்கொள்க. (௯௬)

இருப்பது தோலி னுள்ப திருங்கனி கந்த மூலம்
விருப்பொடு விளைத்த வேனன் மிகுந்தவை வனமே தோறும்
பருப்பதம் வாழ்வ தென்றும் பருகுவ தருவித் தூநீர்
பொருப்பரைப் புகழா தியாரும் புல்லிய ரென்ப தென்னே.

(இ - ள்) (மான்புலிமுதலியவற்றின்) தோலில்இருப்பது பெரியகனிகளுங் கந்தமூலங்களும்,விருப்பமாகப் பயிர்செய்த தினையும் மிகுதியாகிய மலைநெல்லும் மூங்கிலரிசியும் புசிப்பது. மலையிலே வசிப்பது புனிதமாகிய அருவி நீரை யெப்பொழுதும் பருகுவது. (இவ்வாறு புனிதமாயிருக்க) எல்லோரும் குறிஞ்சி நிலமக்களைப்புகழ்ந்து பேசாது இழிந்தோரெனக் கூறுவது யாதுகாரணம்? எ - று.

இருப்பது வாழ்வது பருகுவது என்னும் அஃறிணை யொன்றன்பாற்கைக் குறிப்பு வினைமுற்றுகட்கேற்ப உண்பனவெனக்கூறாது, உண்பது என்பபராமுக மாகக் கூறினரெனக. (௯௭)

பெறுங்களத் திரத்தைக் காணுன பேதுறு மிராமனபோல
வெறுங்களத் தெய்தி மாழ்கி மாதனை யில்லின பாங்க
ருறுங்களத் தியாம்த தெய்து முந்தமா றுகரு மினப
நறுங்களம புயற்கு மாற்கும வலாரிக்கு நணணு றே.

(இ - ள்) தானடைந்த மனைவியைக் காணுதலொழிந்த துன்புற்ற இராம மூர்த்தியைப்போல வறுங்களத்தை நாடித்துன்புற்று, தலைவியின் வீட்டிற்கருகிலுள்ள சோலையில் நடுராத்திரியிலடையுந் தலைவர்கள் அநுபவிக்குஞ் சுகமானது வாசனை வாய்ந்த தேனையுடைய தாமரைமலரில வாழும பிரமனுக்கும விணடுவிக்கும இந்திரனுக்கும் பொருந்தமாட்டாது எ - று

அகப்பொருள் விளக்கம்

"இல்வகை யிகந்தது பகற்குறி யிரவுக்குறி - யில்வரை யிகவா வியலபிற் றாகும்"—என்றது சூத்திரமாதலின், "இல்லின பாங்க ருறுங்களத் தியாமத் தெய்தும்" என்றார்.

வலாரி—வலாசுரனைச் சங்கரித்தவன், இந்திரன் அதாவது,—

முற்காலத்தில வலாசுரனென்பான் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து பெற்ற வரத்தினாலுண்டான வலிமையால தேவர்களைத் துன்புறுத்திக்கொண்டு திரிந்து, இந்திரனை யறைகூவிச்செயித்தனன் இந்திரன் இவனைத் தந்திரமாக வெல்லவேண்டுமென றுட்கொண்டு வலாசுரனை நோக்கி நீ எனது நண்பனே! பகைவனல்லன ஆயினும் உன்வல்லபத்திற்கு மகிழ்ந்து சில வரங்கள் கொடுக்க விரும்பியிருக்கின்றேன. யாது வேண்டுகின்றனை? என, வலாசுரன இந்திரனை நோக்கி ஆ! ஆ! நன்கு கூறினை. நீயடைந்த வெற்றிபோலவே யுன வரமும பயனபெறுமபோலும் யான சிவபிரசாதத்தாற பெருவரங்களைப பெற்றுள்ளேன நீ வேண்டிய வரங்களிருப்பின என்பாற் கேட்டுப்பெறுக அவவாறு கொடாவிடின உன்னைப்போலப் போர்முனையில முதுகுகாட்டி யோடினவன பெறுநிந்தையை யடைவே னென்றனன இந்திரன இதுவே சமயமென்றுட்கொண்டு களித்து, வலாசுரனே! வல்லபபுருஷனே! யான கைலாயகிரிச்சாரலில ஓர்யாகஞ்செய்யப்போகின்றேன, அப்பொழுது நீயாகப்பசுவாக வரவேண்டுமென வரங்கேட்க, வலாசுரன அவ்வாறே யாகுகவென்றுகூறி, [தேவர்கள் பொருட்டுத் ததீசி முனிவர் கொடுத்த முதுகந்தண்டெலும்பு வச்சிராயுதமாக அவர் கொடுத்த பூதவுடம்பின கொடையாலடைந்த புகழுடம்பு அம்முனிவனுக்கு ஒன்றே] பிறராயுதங்களாலழியாத என் உடலுறுப்புகள் யாவும் நவமணிகளாகப் பூதவுடம் பழிந்த கொடையினாலும் புகழுடம்பு எனக்கு இரண்டுண்டாகுமென்று தன்னுட் பணிந்து, அவ்வண்ணமே யிந்திரன்செய்த யாகத்திற பசுவாகி யுயிர்நீத்தனன் வலனைத் தந்திரமாகக் கொன்றமையின இந்திரன வலாரி யெனப்பட்டனன. இதனை,

முளைகள் சேற்றிற் பதிந்து முதிர்ந்திடுந்
தளைநெ டும்பணை சார்ந்துநற் றாயென
வளவி னுக்கமை வுற்ற வளவையிற்
களமர் மென்புனல் கால்திறந் தூட்டுவார்.

(இ - ள்) களமர்கள், முளைகள் சேற்றிலே பதிந்து முதிர்கின்ற தளைகளையுடைய நெடிய வயலில், நற்றாயைப்போலச் சார்ந்து (அவற்றின்) அளவுக்குப் பொருந்திய அளவாக மெல்லிய நீரைக் கால்வாய்களைத் திறந்து பாய்ச்சுவார்கள். எ - று.

அளவினுக்கமைவுற்றவளவையில் என்றது பயிரின் உயர்ச்சிக்குத் தக்கபடி என்பதாம். நற்றாய் - ஈன்றமாதா, நல்ல தாய் எனினுமமையும். (௧௦௫)

வெள்ளை மேகம் விழுப்புன லுண்டுமுன்
கொள்ளும் வண்ணம் பசந்தெழு கொள்கைபோ
லள்ளல் வெண்முளை யார்ந்தற லுண்ணலு
முள்ள வண்ண மொழிந்து பசந்தன.

(இ - ள்) வெண்ணிறத்த மேகமானது முதலிற் சிறந்த (கடல்) நீரைப்பருகி, (பசுமை) கொண்ட வகையே பசுமையுற்றெழுங் கொள்கையைப்போல, சேற்றிற் படிந்த வெள்ளிய முளைகள் பொருந்தி நீரைப்பருகலும் (தமக்கு) உள்ள (வெண்மை) நிறமொழிந்து பசப்புற்றன. எ - று.

வெண்மேகம் கடனீரைப் பருகிப் பசுமையுற்றெழுந்தாற்போல, வெண் முளைகள் நீரைப்பருகிப் பசுமையுற்றெழுந்தன (௧௦௬)

சேறு செய்யுஞ் செயலின ரோர்புறம்
நாறு வாங்கி நடுபவ ரோர்புறம்
வேறு வெண்முளை வித்துந ரோர்புறம்
மாறில் பைங்கூழ் வளர்க்குந ரோர்புறம்.

(இ - ள்) சேறுசெய்கின்ற தொழிலினையுடையா ரொருபுறமும், நாற்றினைப் பிடுங்கி நடுகின்றவர்க ளொருபுறமும், வேறாக வெள்ளிய முளைகளை விதைப்பவர்க ளொருபுறமும், கெடுதலில்லாத பசிய (நெற்) பயிரை வளர்ப்பவர்க ளொருபுறமும், (ஆக மள்ளர்கள் விளங்கினார்கள்) எ - று (௧௦௭)

வேறு

காமவேள் சிலைகோலிக் கணப்பொழுது மொழியாமே
நாமவா ளிகளாக்கி நமையலைப்பக் காரணமாய்த்
தாமறத் திருப்பவெனத் தழைப்பினை நெருக்குவபோ
லேமமார் மலர்பலவு மெழுந்துமலர் வனப்பணையின்.

(இ - ள்) மன்மதன் வில்லாக வளைத்துக் கணநேரமும் விலகாமல் நம்மை அச்சந்தரும் பாணங்களாகச் செய்து துன்புறுத்தக் காரணமாகி, தாம் நீங்காதிருப்பன வென்று, தண்ணிய நெற்பயிரை நெருக்குவனபோல, அழகு பொருந்திய பல மலர் களும் வயல்களில் தோன்றி மலர்கின்றன எ - று.

தாம் என்பது பயிர்கள்.

“கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்ன” என்ற திருத்தொண்டர் புராணம்போல, நெற்பயிர் கரும்பென்று சொல்லும்படி யுயர்ந்திருத்தலின், அதனையே

மன்மதன் வில்லாகவளைத்துத் தம்மைப் பாணங்களாக்கிச்செலுத்த நிகழுமென்னுங் கருத்தால், தாமரைமுதலிய மலர்கள் அப்பயிரை யடக்கவெழுந்தனவென்பது கருத்து.

உந்தியந் தா மரையொன்றே யுடையவரி தனைநோக்கி
யெந்தமைநே ராவென்றே யெழுந்தபசும் பயிர்ப்பணை
சந்தமலி பலகமலந் தாமலர்ந்து வளையுயிர்த்த
கொந்தொளிர்நித் திலவொழுங்கா றகுறுநகைசெய் திடுமன்றே.

(இ - ள்.) அழகிய உந்திக்கமல மொன்றனையேயுடைய திருமாலைப்பார்த்து எமக்கு ஒப்பாகாய என்றுயர்ந்த பசிய பயிரையுடைய வயல்கள், அழகு மிகுந்த பல தாமரை மலர்களை மலர்ந்து, சங்குகள்பெற்ற கூட்டமாகப் பிரகாசிக்கின்ற முத்துக்களின் வரிசையாற் புன்னகை செய்யாநிற்கும் எ - று. (௧0௯)

கொத்து - கொந்து, மெலித்தல்விகாரம்.

இடையிடையே செழுங்கமல மெழுந்துமலர் பசும்பண்ணை
யடையலார் முயிர்குடிக்கு மழுனிழவச் சிரப்படைக்கை
யுடையவனை யுளத்திருத்தி யோங்குமவன் சாரூபந்
தடையறப்பெற் றாயிரங்கண் டகவிழித்த திறங்காட்டும்.

(இ - ள்.) இடங்கடோறும் செழிய தாமரைகளெழுந்து விகசிக்கப்பெற்ற பசிய வயல்கள், சத்துருக்களது பிராணனைப்பருகுந் தீயைச்சொரியும் வச்சிராயுதத்தைக் கையிலேந்திய (தமக்கிறைவனாகிய) இந்திரனை மனத்திற் றியானித்து உயர்ந்த அவனது சாரூபத்தைத் தடையின்றி யடைந்து ஆயிரங்கண்களோடு தகுதியாகவிழித்த திறத்தினைக் காட்டாநிற்கும் எ - று. (௧௧0)

தாமாக்கும் பொருட்குதவி தனைப்புரிவ ரதற்கிடருந்
தாமாக்கி னவர்தமமைத் தணவாமே யிடாகளைவார்
தாமாக்கும் பயிர்க்கூறுய்த் தகைகளையு நிலநீருந்
தாமாக்க வவைமுனியார் களைமுனிவார் தகுமுழவர்.

(இ - ள்.) தாமியற்றும் பொருளுக்கு உதவியைச் செய்பவர்கள் அப்பொருளுக்கு இடையூறுந் தாமேசெய்வார்களாயின் அவர்களை நீக்காமலே (அவர்கள் செய்யும்) இடையூற்றினை (மாத்திரம்) விலக்குவார்கள் (அதுபோல) தகுதிப்பாட்டினையுடைய மள்ளர்கள் தாம்செய்கின்ற பயிருக்கு நிலமும்நீரும் (உதவிசெய்வனபோலவே) அதற்கு இடையூறாக நெருங்கிய களைகளையும் உண்டாக்க, அந்நில நீர்களைக்கோபியாதவர்களாகிக் களைகளை (மாத்திரமே) கோபிப்பார்கள் எ - று.

நான்காம் வரியில், தாம் - அசை. (௧௧௧)

மங்கையர்க ளவயவத்தின் வளங்கவர்ந் தீவரமும்
பங்கயமுங் கைரவமும் பலவுமட னமக்காகா
தங்கவர்க்கே தக்கதென வகந்தெருணணிக் களைகளெயத்
தங்குமவயற் றொழின்மள்ளர் தையலரைச் செலவிடுத்தார்.

(இ - ள்) பொருந்திய வயல்களில் உழவுத்தொழில் புரியும் பள்ளர்கள் மாதர்களது உறுப்புக்களின் நலத்தினைக் கொள்ளைகொள்ளுங் கருங்குவளையும் தாமரையும் அல்லியும் (முதலிய) பல வற்றையும் அழித்தல் நமக்குத்தகாது, (பகைபாராட்டலால்)

அம்மாதர்கட்கே தக்கது என்று மனதிற்கருதிக் களைகளையும்படி மாதர்கட்குச் செலவு கொடுத்தார்கள். எ - று

கருங்குவளை - விழியையும், தாமரை - முகம் கைகால் கொங்கை முதலிய வற்றையும், செவ்வல்லி - வாயையும் நிகாத்தலிற் பகைமையெனக் கொள்க பலவு மென்றதால் வள்ளை - செவியையும் பிற பிறவற்றையும் நிகாக்குமாதலின் அவற்றையு மெனக. (கக௨)

தமதுறுப்பி னெழிலகரவிற் றுங்கவரும் பிழையானுஞ்
சமரமதன் றொழிலவளாக்குந் தண்பயிரைத் தெறலானு
மமரிடைவந் தெதிராத வலாப்பகையைத் தாநதொடாந்தே
குமரியுயிர் குடிப்பதற்குக் குறுகினா வயன்மாதா.

(இ - ள்) வயலிற் றொழிலபுரியும் பள்ளப்பெண்கள் தமது அவயவங்களி னழகை வஞ்சகமாகத் தரிக்க உண்டாகின்ற குற்றத்தினாலும், காமப்போர்புரியும் மன்மதனது செயல்களை வளாக்கின்ற (கருமபுபோலுள்ள) தண்ணியபயிரை யழித்தலி னாலும், (தமமை) போரில வந்தெதிர்க்காத மலாகளாகிய பகைகளைத் தாம நெருங்கி (அவற்றின்) அழியாத வுயிர்களை யழிப்பதற்கு அடைந்தாாகள எ - று

அமரிடை வந்தெதிராத எனபதை, எதிாந்து அமரிடைவராத என விகுதி பிரித்துக் கூட்டி, எதிாததுப்போருக்கு வராத எனபொருள கூறினுமமையும். அம ரிடை - அமருக்கு ; உருபுமயக்கம குமரியுயிா எனபுழி - இளமையுயிா என்றுமாம. அவை யப்போது களையப்படினும மீணடும முளைக்கும ஆற்றலுடைமையின அழியா வுயிா எனக்கோடலே சிறப்பு

சமரமதன றொழில்வளாக்குந தணபயிா என்றது கருமபுபோல விளங்கும நெற்பயிரையெனச (கககூ)

எங்களுக்குப் பகையாகி யிலஞ்சிமுத லாமிடத்திற
றங்கியிருப் பதற்கேதுஞ் சாற்றிலமற் றதுபொறுத்தே
மெங்கள்கண் வரைப்பகைத்திங் கிருந்திடவொட் டேமென்று
மங்கையர்பங் கயமுதலா மலாகளையத் தொடங்கினா.

(இ - ள) எங்களுக்கு விரோதமாகித் தடாகமுதலியவிடங்களிற் பொருந்தி யிருப்பதற்கு ஒன்றுஞ் சொல்லமாட்டோம. அதனைப் பொறுத்தோம(ஆயினும)எங்கள கணவர்களைப் பகைமைகொணடு இவ்விடத்திலிருக்கவிடமாட்டோம என்று, அம்மள்ள ஸதிரீகள் தாமரை முதலாகிய மலாகளைக் களைந்தெறிய ஆரமபித்தாாகள. எ - று.

மற்று - அசை. கணவரைப் பகைத்தலாவது - அவாகள் நெறபயிரைபபெருக் கக் கருதியதற்கு மாறுபடச்செயதலெனக (ககச)

வேறுவே றுளததெண்ணி வேறுபடுங் கயவாகளா
லூறுறு தெனிலவரை யொறுப்பபாரா ருறுபபொபெடிா
கூறுமோ திமமபணிலங் கூரமமவரால கயனஞெண்டுஞ்
சீறுமா றிலரொளிக்குஞ் செயலானுந தொடாந்திலரால.

(இ - ள்) (தமது) மனதில் வெவவேறாகக் கருதிமாறுபடுகின்ற கீழ்மக்களால் (தமக்கு) தீமைவிளையாதாகில், அவாகளைத் தணடிப்பவா யாவா ? (ஒருவருமிலர்!) தம தவயவங்களுடன ஒப்பாகச்சொல்கின்ற அன்னம சங்கு ஆமை வரால கயல் நண்டு முத

வியனவற்றைக் கோபியாதவர்களாகி (அவை) ஒளித்துக்கொள்ளுஞ் செயல்களாலும் (அவற்றைத) தொடாநதிலா (அம்மங்கையா.) எ - று.

ஒதிமம்-நடைக்கும், பணிலம்-கழுத்திற்கும்,கூர்மம்-புறந்தாளுக்கும,வரால்-கணைக்காலும், கயல-கண்ணுககும், ஞெணடு-முழநதாளுக்கும சமானப்பொருளகள.

சைவலநதா மரைகுவளை தணகுமுதங கொடிவளளை
தெய்வமணங கமழ்நீலந திகழனிசச மெனுமபகைகட
குய்வகைசெய் யாதவாக ளுடனிருநத பெருமபிழையாற
கைவலத்திற் பறிதெறிநதாா கதுவியபுல் லாதிகளும.

(இ - ள்) கொடிப்பாசி - தாமரை - செஙகுவளை - தணணிய அலலி - வள்ளைக்கொடி - திவவிய மணமவீசுங கருஙகுவளை - விளஙகுகினற அனிசசமெனறு சொல்லப்படும் பகைகளுககுப் பிழைகருமவகை செயயாமல, (அவறறுடன) தஙகிய பெருஙகுறறததால, பொருநதிய புல முதலியவறறையும, ஆறறுககாலாட்டியா(தமது) கைவலலமையாற பறிதெறிநதனா. எ - று

சைவலம - கூநதலுககும, தாமரை - முகமுதலியவற்றுககும, குவளை - கண்ணுககும், குமுதம - வாயககும, வளளை - காதுககும, அனிசசம - பாததிற்கும் உவமையாற பகைப்பொருளகள. (கககூ)

சிரஞ்செவிதோள் கண்முனகை திணிமுலைமெல லிடைபாதம
வரஞ்செறிமென் மலாபலவும வகுததணிநது மீணடவாக
ளுரஞ்செறியும பகைசவட்டி யொணடலையா திகளணிநத
புரஞ்சிரிதத புணணியரே போனறனாமள ளாகளபுகழ

(இ - ள) தலை - காது - தோளகள - முனகை-(அழகு) முறறிய முலைகள-நுணணிய இடை - கால (முதலியவிடங) களில, மேனமைபொருநதிய மெலலிய பல மலாகளையும வகைப்படுததி மளளாகள புகழுமபடி திருமபிய ஆறறுககாலாட்டியாகள வலிமைமிகக பகைகளையழிதது ஒளளிய சிரமுதலியவறறை (அறிகுறியாக) அணிநத திரிபுரஙகளைப் புனனகையாற பொடிதத புணணியராகிய சிவபெருமானை யொத தாாகள. எ - று.

மீண்டவர்கள் - வினையாலணையும பெயா ;

மலாபலவு மளளாகள புகழவகுததணிநதுமீணடவாகள** டைகசவட்டி*** அணிநத புணணியரே போனறனா - என முடிததுககொளக (ககஎ)

சீரறிவா றையுமுடைய தேவாமுத லனைவோாககும
வாரறிபூண முலைமாதா மகிழுசெயவ ததிசயமோ
வோரறிவா கியபயிரு முழுததியாகைத தலநதோயப
பாரறிய மிகதெளிநது பரநதெழுநது வளாவனவால.

(இ - ள்) கச்சினைததரிதத ஆபரணமணிநத முலைகளையுடைய மாதர்கள் சீர்ததிபொருநதிய ஆறறிவினையுமுடைய தேவாமுதலிய வெலலாருககும மகிழ்சசியை யுணடுசெயவது ஆசசரியமோ. ஆறறுக்காலாட்டியாரது கைததலமபடிய, ஓரறிவினையுடைய பயிாகளும, உலகினரறியுமபடி மிகசசெழிததுப பரவியெழுநது வளர்ககினறன. (ஆதலின ஆசசரிய மனறு) எ - று.

ஆறறிவுயிா தேவா (மாநதா) முதலியோரெனபதையும, ஓரறிவுயிர் பயிர் முதலியன வெனபதையும,

ஆசிரியர் தொல்காப்பியனர்

(சூத்திரம்) "ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே
இரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே யவற்றொடு செவியே
ஆறறி வதுவே யவற்றொடு மனமென
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தனரே"—எனவும்,

"புல்லு மரனு மோரறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே,
நந்து முரளு மீரறி வெனப
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே,
சிதலு மெறும்பு மூவறி வெனப
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே,
நண்டுந் தும்பியு நான்கறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே
மாவும் புள்ளு மைய்யறி வினவே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே
மக்க டாமே யாறறி வுயிரே
பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே"—எனவுங் கூறியதனாலுணர்க.

அரவமலி நறுந்தெண்ணீ ரருத்தின முற்பபாயத்திப
புரவுபுரி தரவுழவர் புரையறவோங் கியபயிரின
விரவுமடல் கிழித்தெழுந்து வெண்கதிர்கள் வளர்தோற்ற
மரகதப்பா றையின்முளைத்து வளர்வயிரக் கொழுந்தனைய.

(இ - ள்) உழவுத்தொழில் செய்வோர் ஓசைமிக்க நல்லதெளிவாகிய நீரை நீங்காது நாடோறும் பொருந்தப் பாய்ச்சிக்காத்தல் செய்யக் குற்றமற வுயர்ந்த பயிரினது நெருங்கிய மடலினைக் கிழித்தெழுந்து வெள்ளிய கதிர்கள் வளர்கின்ற தோற்றமானது மரகதப்பாறையினின்று முளைத்து வளர்கின்ற வயிரக்கொழுந்தினை யொத்திருந்தன எ - று.

பயிரை மரகதப் பாறையாகவும், கதிரை வயிரக்கொழுந்தாகவும் உவமித்துக் கூறினர். (௧௧௯)

தயங்கியதன் னிறங்காட்டித் தனக்கதிப னெனத்தனுள
வயங்குமரி திறம்பின்னர் மருவுபயிர்க் கருள்சுரந்து
பயங்கதுவு மமுதுறுத்திப் பனிக்கதிரோன் றினம்வளர்ப்ப
வியங்கியவெண் கதிர்முதற்போ லெழுந்துபசந் தனபெரிதும்.

(இ - ள்) தண்ணிய கிரணங்களையுடைய சந்திரன் பொருந்தும் பயிருக்கு விளங்கிய தனது (வெள்ளிய) நிறத்தைக்காட்டி, தனக்குத் தலைவனென்று சொல்லும்படி தனக்குள்ளே விளங்கும் விஷ்ணுமூர்த்தியின் (பசுமை) நிறத்தைப் பின்னர் அருள்மிகுந்து, உருசிவாய்ந்த அமுதத்தையுறுவித்து நாடோறும் வளர்க்க, பிரகாசிக்கின்ற வெள்ளிய(நெற்)கதிர்கள் முதற்பொருளாகிய பயிரைப்போல வெளுத்தெழுந்து (பின்னர் அப்பயிர் பசுமையுற்றாற்போல) மிகுதியும் பசப்புற்றன எ - று

பயிர்கள் சந்திரனால் வளர்க்கப்படுகின்றனவென்பது கருத்து. இதுபற்றியே பயிருக்குச் சசியமென்றும் பெயர் (சசி - சந்திரன்.)

சந்திரனிடத்து விட்டுணு விளங்குதலை,

"தேரேறிவரும்பரிதிமண்டிலத்தருசெழுமதிமண்டிலத்துஞ்சீர்கொண்
டேரேறிவருங்கனன்மண்டிலத்தசத்திமண்டிலத்துமெணகணுனு
நீரேறிவருமரியுமுருத்திரனுமகேசசுரனுநிலவச்செய்து
நாரேறிவருமவர்தமுளத்தமரெணகுணத்தானையாந்துவாழ்வாம்" — என இந் நூலில் வருவதனுனுணர்க. (௧௨௦)

விண்ணிவந்து மதிக்கடவுள் விளங்குகதிர்க் கரத்தணைப்ப
வுண்ணெகிழ்ந்து கருத்தரித்துட் டுருபசந்த கதிர்ச்சாலி
பெண்ணினினந் தமைத்தாங்கும் பெற்றியினார் தாயரென
மண்ணறலென் றிரண்டினையு மனறவெதிர் நோக்கினவே.

(இ - ள்.) சந்திரபகவான் ஆகாயத்திலுயர்ந்து, பிரகாசிக்கின்ற (தனது) கிரணங்களாகிய கைகளாலணைப்ப, உண்ணெகிழ்ந்து கருத்தரித்து உருவம் பசுமையுற்ற, கதிர்களையுடைய நெற்பயிர், மாதர்கூட்டம் (தாம் கருவுயிர்க்கையில்) தம்மைத் தாங்குகின்ற தன்மையையுடையவர்கள் தாயமார்களே யென்று(அவர்களை) நோக்குமாறு, பூமியும் சலமும் என்று சொல்லப்படும் இரண்டினையும்(நிலைபெற)எதிர்நோக்கிநிலைபெற்று நின்றன. எ - று.

உண்ணெகிழ்ந்து என்பதில், உள - கருத்தரித்தற்குரிய உள்ளிடம், மனம் எனக்கொள்க. (௧௨௧)

மகளிரிடை யொவ்வொருத்தி வந்தியென நிற்பதுபோற்
றகவுறுமா சிரியனருட் டாங்குமுப தேசத்தி
னிகவிலரு ளொவ்வொருத்த னிழுதையென நிற்பதுபோ
லுகலருமபல் செயலொத்து மொரோரொன்று பதரான.

(இ - ள்.) மாதர்களில் ஒவ்வொருத்தி மலடி யென்று சொல்லும்படி நிற்றல் போலவும், மாட்சிபொருந்திய ஆசிரியனது அருளமைந்த உபதேசத்தின் நீக்கமில்லாதவர்களில் ஒவ்வொருத்தன் கீழ்மகனென நிற்றல்போலவும், (கதிர்களுள்) கெடுதலற்ற பல செயல்க ளொத்துநின்றும் சில பதர்களாயின எ - று.

ஒவ்வொன்று எனபது சிறப்பும்மை யுணர்த்தலின், சிலவென்றும்.

சாத்துவித நிறமுன்னுய்த் தாமதத்தி னிறமபின்னு
யேத்துமவகை யிருந்தபடி யெதிர்நோக்கி யிராசதந்தா
னீத்தலரு நிறஞ்சால நிரம்பியது போற்கதிர்கள்
காத்திடுநீர்ப் பணைதொறுங் கதிர்த்துமிகச் சிவந்தனவே.

(இ - ள்.) சாத்துவித நிறம் முன்னேவாய்ந்து, தாமதத்தின் நிறம் பின்னேயாகிப் பொருந்தியவகை யிருந்ததன்மையை இராசதமானது எதிரேபார்த்து, (தானும் வந்து கலந்து) நீக்குதற்கரிய (தனது) நிறத்தை நிரப்பியதுபோல, (நெற்) கதிர்கள் சிறைகோலிய நீரையுடைய வயல்களிலெல்லாம் ஒளிவிட்டு மிகுதியுஞ்சிவந்தன. எ-று.

சாத்துவிதம் - வெண்மையும், தாமதம் - கருமையும், இராசதம்-செம்மையுமாமென்பர். (௧௨௩)

மண்புனல்கால வெளிபரிதி மதிமள்ள ரெனவீசாக்
கொண்படிவ மெனுநதானு மோமபவழல் குளிாநதடுத்த
பணபெனவு முதிாவிளைவின பசைபீரம வாஙகவுறு
நண்பெனவும வயனமீடடு நளினமொடாம பலுமலாநத.

(இ - ள்) மண - சலம் - வாயு - ஆகாயம - சூரியன - சநதிரன் - ஆன்மா, (ஆதியவறறைப்) போல, சிவபெருமானுககு ஒளளிய வடிவமென்னுந் தானும காக்குமபடி, அககினியானது குளிாசசியுறறு அடுதததனமைபோலவும, முறறிய விளைச்சலின ஈரததைப்போககவந்த நட்பாளனபோலவும, வயலகளில திருமபவுந தாமரையுடன் ஆமபலமலர்களும பூததன எ - று

தான் - அக்கினி பசை ஈரம - இருபெயரொட்டு காம்பரி - காமவேளென்பனபோல.

## சிவபெருமான் மள்ளராகவநதது.

ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனா சிவபெருமானால் தடுத்தாட்கொள்ளப்படடுப் பல தலங்களிலுஞ் சென்று அநேக அற்புதஙகளைச செயதுகொண்டு மேலைசசிதமபரமாகிய பேரூரை யடைகையில, சிவபெருமான தமது தோழருககோா திருவிளையாடல் செயயத திருவுளளஙகொணடு, உயாதிணைபபொருளும, அஃறிணைபபொருளுந் தாமே யென்று வேதங்கள எடுத தோதுதறகேறப, முனபு வேதியராய்த தமமைக காட்டிப் பயனைககொடுததருளினறபோல இழிநததுங காட்டத திருவுளஙகொணடு, பளளனாகி, திருவிளையாட்டினால, வயலிற சென்றனா. உமாதேவியாரும பளளியாகி, கழனியிலே தொழில செய்யததொடஙகினா. விநாயககடவுளும, முருககடவுளும் பளளசசிறுராய, வயலினகண விளையாடினா அரிபிரமேநதிராதி தேவாகள நுகமும், கலப்பையும, மேழியும, கொழுவும, வாரும, கயிறும, கோலும், கடாவும், விததும், நாறும், ஆகிய எலலாமாகி, வநதாாகள சிவகணநாதாகள ஏவல்செயகின்ற பள்ளாகளாய், சிவபிரானுகிய பட்டிபபளளா ஏவலவழி உழுகினறவரும, நீாபாய்சசுகின்றவரும, வரப்பின அருகு சீககினறவரும, பரமபடிககினறவரும, நாறறு நடுகினறவரும, விதைக்கினறவரும ஆனாகள இலககுமி, சரசுவதி, இநதிராணி முதலாயினோ பளளிகளாய், உமாதேவியாகிய பசசைபபளளியோடு நாறறு நடடாாகள. இஙஙனம் இவாகள் கழனியிலே, தொழில செய்துகொணடிருநதபோது, ஆலயததிற சென்ற சுநதரமூர்ததி நாயனா் சிவபிரானை அஙகே, தரிசிககப்பெறுமல இடபதேவரை வினவினா. அதறகு இடபதேவா வனறொணடனுககு ஒனறுஞ் சொலலவேணடாமெனறு சிவபிரான் ஆஞ்ஞாபிததபடியால, கணணினுற காட்ட, அககுறிபபினவழியே நாயனா வயலிடததே, ஆராயநதுவநது, சுவாமியையும, அமமையையுங கணடு வணஙகினா. நாயனுரோடு சிவபெருமான கரையேறி, காஞ்சிநதியில, ஸநானஞ்செய்து, ஆலயததை அடைந்து, இடபதேவா முகததை மணவெடடு கருவியாற சேதிக்க, அதற்கு இடபதேவா அஞ்சி, வணங்கிக் கொம்பினுலே ஒரு தீாததம் அகழ்நது, சிவலிஙகந தாபிததுப் பூசிதது, குற்றததினினறு நீஙகினா. பினனாச சிவபிரான வெள்ளியமபலததிலே, திருநடனஞ் செயதாா.—என்பது சரிதம இதனை,

## பேநர்ப்புராணம் பள்ளுப்படலம்.

"அராவணிசடிலப்பள்ளனூர்தோழரடுககவநதமையறியார்போற்
பராமுகத்தினராய்பபள்ளிகளபளளர்தமமொடுமபயினறிருந்தொழிலி
னுராவுநீர்ப்பணை யினுழிதரனேககியுறபபணிநதெழுநதுதோழமையால்
விராவியவன்பாமகிழ்ச்சிமீக்கிளைப்பவியபபொடுமசதியாடுவரால்.

மறையவனரசனசெட்டிதன்முதைவயஙகுநாறகுததிரன்புவனம
பறைதருநலலசஙகரனவேடனபணிசிவனவிளஙகுமுககணகக
னறைசெயமபடடனகமதுபுறத்தேகாலியாட்டரவமாரிடையன
பறையனுமுனனரானசீயினறுபளளஞனமைதெரிநதேனயான.''— என்பதனுணர்க. (கஉ௪)

முறுகவிளைந தவனிமிசை முடிசாய்ததுக கிடககினற
மறுவிலவிளை விளைசேரகக வயலவினைஞா மகிழவெயதிக்
குறுகினாதண் ணுமையியமபக குயமேநதித் தலைகுனிநதா
ருறுபலஙகொள் ளுநாவணக்க மோமபுவது மரிதேயோ.

(இ - ள்) வயலிறறெழுநிலபுரியும பளளாகள முதிர விளைவெயதிப் பூமியின் மேல் தலைசாய்ததுககிடக்கினற, குறறமிலலாத பயிரைபபாரதது, களிபபடைந்து முழவொலிகக அரிவாள் தாஙகிசசெனறு தலைகுனிநதாாகள பொருநதிய பலனைப பெறுவோா பணிதல செய்தலும அருமையோ? எ - று.

"உறுபலஙகொள் ** அரிதேயோ" எனறது கவிககூற்று குறுகினர்-முறறெச்சம்

எலலாாககும பயனபடுவா ரெனசெயினும பொறுபபரெனு
நலலாாக ளுரைபபொருளை நாடடியது கதிாசசெநநெ
லொலலாரின வளாததவரே யொறுததுவரிந தெடுததேகி
வெலலாத களத்திடடு மிதிததிருமபோா செயபபடடே.

(இ - ள) கதிர்களையுடைய செநநெறபயிரானது (தமமை) வளர்ததவர்களே சததுருககளபோலறுததுக கட்டிககொணடு செனறு, களததிலிடடு மிதிததுப் போா செயபபடடு, யாவாககும பிரயோசனபபடுபவா (தமமைப பிறா) யாதுசெயயினும் பொறுபபாாகளெனறு, நலலவாகள கூறிய சொறபொருளை நிலைநிறுததியது எ - று.

வெலலாத களம - நெறகளமெனக (கஉ௫)

கையினுற பிடிததடிநதுங கடாவடியிற படுநதிடடும
வையெலாந தணபபிததுப மருவுபதா நவைநீககிச
செயயெலா மிககருவிககுஞ் செஙகெலவள நோககுதறகே
மெயயெலாம விழிபடைததான விணணவரு மிநதிரனே.

(இ - ள) கையினுற பற்றியடிததும், கடாககளின் காலகளிற் படுத்தியும, வைக்கோலகளையெலலாம பிரிப்பிததும, பொருநதிய பதராகிய குறறததை விலக்கி, வயலமுழுதும மிகுதியாகக குவிககினற செஙநெலலின வளபபததைப பாாபபதறகாக வே, அநநிலததெயவதமாகிய இநதிரன உடன்முழுதும் விழிகள பெற்றனன. எ - று

தென்புலததாா தேவாவிருந தினாசோசுற றமுநதாமென
றைமபுலததா றினிதோமப வைஙகூறு கொணடுழவ
ரினபுறநா னிலமபுரககு மோநதலுககோா பகுபபாககித
தமபகுபபால விழைநதேனைத தருமமுஞசெய வாாதினமும்.

(இ - ள்) பிதிரரும தேவரும அதிதியரும பொருந்திய உறவினருந் தாமுமென்று ஐம்புலததுஞ செலவும அறநெறியை இனிதாகக் காககுமபடி ஐநது பஙகுகளை யெடுததுககொணடு, இனபமுணடாம்படி பூமியைக காககின்ற மன்னவனுககோாபஙகு செயது (கொடுதது), தமமுடைய பஙககைககொணடு ஆசையுறறுப் பிற தருமஙகளையும நாடோறுஞ் செயவாாகள மளளாகள். எ - று.

"ஐம்புலத்தாறினிதோம்ப" என்றதை, திருக்குறள் "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லொன்றென்றாங் - கைம்புலத்தா றோம்ப றலை" என்னும்வெண்பாவானுணர்க. "தென்புலத்தார் - பிதிரர். இவர் படைப்புக்காலத்து அயனால் படைக்கப்பட்டதோர் கடவுட்சாதியர் அவர்க்கிடம் தென்றிசையாதலின் றென்புலத்தாரெனப்பட்டனர் விருந்து - புதியராய் வந்தோர். அவர் இருவகையினர் பண்டறிவுண்மையிற் குறித்து வந்தாரும், அஃதின்மையிற் குறியாது வந்தாருமென. எல்லா அறங்களுந் தானுளனாய் நின்று செய்யவேண்டுதலின் தன்னை யோம்பலும் அறனாயிற்று." என்றார் பரிமேலழகர்.

தென்புலத்தார் முதலியோர் பங்கினை அவ்வவர்க்களித்துத் தம் பங்கில் எஞ்சியதுகொண்டு பிறதருமங்களையுஞ் செய்வார்களென்பார் "தம்பகுப்பால விழைந்தேனைத் தருமமுஞ் செய்வார்" என்றார். (கஉஅ)

தொறுவியாமத் தானமொத்தித் தூணத்தி னுறப்பிணிக்கு
மறுவுடையா னென மாலை வணங்கார்தா ரெவர்களம்மா
தெறுவினையிற் பட்டதெனச் செந்நெல்லொழிப் பாரிலலை
யுறுவாமுத லியவுலக முவந்தளிக்குங் காரணத்தால்.

(இ - ள்) (உலகிற்குக் காப்புக்கடவுளாதலின்) திருமாலை, ஆய்ச்சியர் மத்தாலடித்துத் தூணினிடத்துப் பொருந்தக்கட்டிய குற்றமுடையவரென்றுபணியாதவர்கள் எவர்? (ஒருவருமிலர். அதுபோல) முனிவருலகமுதலிய வுலகங்களைக் களித்துக் காக்குங்காரணத்தினால், செந்நெல்லை (உழவரது) தெறுவினையாற்பட்டதென்று நீக்குபவர் ஒருவருமிலர். எ - று.

தெறுவினை - கடாவான் மிதித்தல் முதலியன.

திருமால் கிருஷ்ணாவதாரத்தில் ஆயர்வீடுகளில் உறியிற்சேமித்த வெண்ணெயைக் களவாடி விளையாடுகையில் ஆய்ச்சியர் முறையிட்டதாற்றாது, அசோதைப்பிராட்டியார் கயிற்றால் யாத்தனரென்பதும், ஆய்ச்சியர் *மத்தாலடித்தன ரென்பதும் சரிதங்கள். (கஉகூ)

கன்னன்றுஞ் செழும்பாகுங் காய்கனிபா றயிரிழுதுஞ்
செந்நெல்லுந் தொடுமிசைந்து செறிவாசப் பாகடைதுய்த்
துன்னலருங் களிப்பெய்தி யும்பர்களு நறுமுறுப்ப
நன்னலத்தின் வாழ்குநரே நகர்தோறு மூர்தோறும்.

(இ - ள்) கன்னலையும், வாசனையுடைய செழியபாகும், காயும், கனியும், பாலும், தயிரும், நெய்யும் (கூட்டி) செந்நெல்லாலாகிய அன்னத்தோடும் புசித்து, மிக்க வாசனையுடைய பாக்கு வெற்றிலை [தாம்பூலம்] தின்று, அடைதற்கரிய சந்தோஷத்தையடைந்து, தேவர்களும் முறுமுறுக்கும்படி நல்ல சிறப்போடும் வாழ்பவர்களே நகரங்கடோறும் ஊர்கடோறும் (உள்ளார்கள்) எ - று.

நறுமுறுத்தல் - முறுமுறுத்தல் (கஙo)

வேள்விபுரி சடங்குகளும் வியத்தகுமங் கலவினையு
நாள்விழவு மதிவிழவு நலத்தகுமா ணடிவிழவு
மாளவினையா டவர்களி ரருந்துணிதீர்த் துறவாக்கு
தாள்வினையு மறுவெனவே தயங்கியதண் ணடைதோறும்.

(இ - ள்) யாகஞ்செய்யுஞ் சடங்குகளும், களிக்கத்தக்க விவாககாரியங்களும், திருநாளுற்சவமும் மாசோற்சவமும் நன்மைவாய்ந்த வருடோற்சவமும், தொழில்புரியும் பள்ளர்களும் பள்ளிகளுமாகியவர்களது அரிய துன்பத்தை யொழித்து உறவாக்குகின்ற தாளாண்மையும் நீங்காவென்று சொல்லும்படி மருதநிலத்தூர்கடோறும் விளங்கின. எ - று. (௧௯௧)

உண்ணுவது மருந்தொருநா ளுடுப்பதுவுந் தருவினதே
நண்ணுவது மந்தரமே நல்குவதும் வாய்மொழியாம்
பண்ணவரைப் பிணிப்புரந்தும் பயனபெரிதின் மையைக்குறித்தே
மண்ணகருக் கடரனென வானவர்கோ னமர்ந்ததுவே.

(இ - ள்) (சந்திரன் பூரணகலைபொருந்திய) ஒருநாளில், புசிப்பதுவும் [அமுதம் பொருந்தது, தரிப்பதுவும் [கற்பகதருவாற்றருவதே] மரவுரியே தங்குவதும் [ஆகாயமே] ஆதரவுற்றவிடமே. கொடுப்பதுவும் [இந்திராயநமஃ என்னுஞ் சொல்லே] வாயளவாகியமொழியேயாம். (ஆதலின்) தேவலோகத்தைக்காத்தும் மிக்கபிரயோசனமில்லாமையை நினைத்தே இந்திரன் நிலவுலகிலுள்ள மருதநிலத்தூருக்குத மிகையுமுமென்று பொருந்தியதாகும். எ - று. (௧௯௨)

போகமிகு விண்ணுலகம் புரப்பவனே தெய்வதமாய்
மேகமிகு புனல்வழங்க விருப்பினொடுங் காக்கின்ற
பூகமலி வயல்வளமும் புகன்மொழியி னளவைத்தோ
நாகமலி பொழினெய்த னலந்தெரிந்த வாறுரைப்பாம்.

(இ - ள்.) போகங்கள் மிகுந்த தேவலோகத்தைக் காக்கும் இந்திரனே தெய்வதமாகி, மேகமானது மிக்கநீரைக்கொடுக்கும்படி, ஆசையோடுங் காவல்புரிகின்ற கமுகமரங்கள் மிகுந்த மருதநிலத்தின் வளப்பமும் சொல்லுகின்ற சொல்லளவையுடையதோ? (அன்று) புன்னைக மரங்கள் மிகுந்த சோலையையுடைய நெய்தனிலத்தின் மேம்பாட்டையுணர்ந்தபடி (இனி) கூறுவாம். எ - று.

வயல் வளமு மென்றதில், உம்மை - உயர்வு சிறப்புப்பொருளது.
அளவைத்தோ என்றதில், ஓகாரம் - வினாவோடெதிர்மறையுமாம். (௧௯௩)

நெய்தல்.

வேறு.

இரும்புனற் கதிபதி யெனனும் வானவன
சுரும்புளர் நெய்தல்வாழ் கழிக டோறுறிய
பெரும்புனற் கடனிலம் பேணத் தக்கதென
றரும்பிய விருப்பினுங் கமர்த்தன் மேயினன.

(இ - ள்) மிக்க நீருக்கிறைவனென்று சொல்லப்படும் வருணதேவன், வண்டுகள் கிண்டுகின்ற நெய்தன் மலர்கள் பெருந்திய கழிகள் விளங்கிய பெரியபுனலாகிய கடலையுடைய நெய்தனிலம் காக்கத்தக்கதென்று தோன்றிய ஆசையுடன் அவ்விடத்திற் பொருந்தினன். எ - று.

வருணன் நெய்தன் மலர்வேட்கையனாதலின் அதனைக் காக்க விரும்பினனென்றார். சுரும்புளர் - கிண்டுகேற்ற அடை (௧௯௪)

கும்பமா முனியுணுங் கொள்கைத் தாயது
பம்புமா நதிபல படியுந் தாயதென

றம்புரா சியினமருங் கடுத்து வாழுமால்
கொம்பனு ளுமைவளா கோதில சாதியே.

(இ - ள்) பூங்கொம்பை யொத்தவராகிய உமாதேவியார் உதித்த குற்றமில்லாதபரதசாதி, பெருமை பொருந்திய அகத்தியமுனிவா பருகுந் தன்மையுடையதாயுள்ளது. நெருங்கிய பெரிய பலநதிகள் படியும் புனிதமானது என்று சமுத்திரத்தின் பக்கலிற் சேர்ந்து வாழாநிற்கும். எ - று.

கும்பமுனி - அகத்தியர் - இவர் கும்பத்தினின்றுந் தோன்றினவராதலின் அப்பெயரெய்தினர் இந்திரன் தன்னைப் பகைத்தொளித்த விருத்திரனைக் கொல்லக் கருதி அகத்தியமுனிவனை வேண்ட அவா அதனை ஆசமனீயஞ் செய்தனா என்பது சரிதமாதலின் "அமபுராசி கும்பமாமுனியுண்ணுங் கொள்கைத்து" எனக்கூறப்பட்டது. இதனை,

திருவிளையாடற்புராணம்.

"கைதவன் கரந்துவைகுங் கடலைவெற படக்குங் கையிற்
பெய்துழுந் தெலலைத் தாக்கிப பருகினுன் பிறைசேர் சென்னி
யையன தருளைப பெற்றாக கதிசய மிதெனகொன மூனறு
வையமுந் தொழிலுஞ் செய்ய வலலவ ரிவரே யனறோ"—என்பதனுனறிக.

வருணனுக கூர்தியா மகர மீனுந்த
மொருகுல மென்றவ னுறையும் வைப்பெலாஞ்
செருவலி திமிங்கில கிலந்தி மிங்கிலம
பொருமக ரமபல மீனும புலனுமே.

(இ - ள்) வருணதேவனுககு வாகனமாகிய சுறாமீனுந் தமது ஒபபற்றகுலமென்று, அவன வசிககுமிடமெல்லாம [கடல்முழுதும்] போாசெய்கின்ற வலியுடைய திமிங்கிலகிலம, திமிங்கிலம், போா புரியும மகரம (முதலிய) பலவகை மீனகளும, பொருந்தும. எ - று.

திமிங்கிலகிலம - திமிங்கிலம் என்பன மச்சவிசேடங்களாம. (௬௬)

பிணககுவைப படுமபெரு மனனா போரிடை
நிணககுவை யுணணவு நீலக கணணிணு
ருணககுறு மீனெளி துணவு மோங்குமைங்
குணககருங் கொடியினங் குழுமி வாழுமே.

(இ - ள) பிணக்குவியலபடுகின்ற பெருமைவாய்ந்த அரசாகளது யுத்தகளத்தில், கொழுப்பின் குவியலைப்புசிககவும, நெய்தன மலரை யொதத கணணையுடைய பரததியா உலாததுகின்ற மீனை எளிதாகததினனவும, உயாவாகிய ஐநது குணங்களையுடைய கரிய காககைககூட்டங்கள கூடி (அநநிலததில்) வாழாநிறகும எ - று.

**காக்கையின் ஐந்துணங்கள்**—மறைந்த புணாசசிததாதலும், கலங்காமையும், பொழுதிறவாதிடம புகுதலும, நெகெககாண்டலும், மடியின்மையும—என்றார் **பேராசிரியர், திருக்கோவையாருள்.** அன்றியும,

"காலை யெழுதல் காணும லின்புறுதல்
மாலை குளித்து மனை புகுதல - ஏலவே
உறறோ ரெண்ண லுறங்க லிவையைந்துங்
கறறாய்வாய காககை குணம.—எனக கூறுவதுமுணடு. (௬௭)

பரத்திய ருறுப்பினைப பயந்தொ ளித்தமீ
னரத்தவித் துருமமுத் தனைத்தும பேணியு
முரத்தினை யுள்ளதுறுப் பயத்தி னேடிமும
வரத்தினை யுறுரென மறுகு மெங்குமே.

(இ - ள்) நெய்தனிலமாதர்களது அவயவஙகளுக்கு அச்சமுற்று ஒளித்துக் கொண்ட மீன் செந்நிறத்தபவளம் முத்து முதலியவற்றையும(தனனிடததிற்) கொண்டிருந்தும் ; மனதில வன்மையடைந்திராத பயத்தினை யுடைமையால, சமுத்திரமும் வரத்தினையடையார்போல எங்குஞ்சுழலும. எ - று.

பயத்தின எனபதில, பயம் - நீர ; அச்சம என்றும், வரத்தினை என்பதில் வரம் - சிரேஷ்டம , வரப்பிரசாதம எனறும பொருள கொளக.

மீன் அவர்கண்ணுக்கும,வித்துருமம இதழுக்கும,முத்துபலலுக்கும்முறையே அஞ்சினவெனக்கொள்க. (கரு அ)

உருநல மிலாதவ ருதவு நனபொரு
ளொருவுந ரிலையுவா நாறறக காககடன்
மருவுறு தீர்த்தமாய் வானும பறபல
பொருள்களும யாவரும போறற நலகுமே

(இ - ள.) உருநலமிலலாதவாகள கொடுதத நறபொருள்களை விலககுவார் (ஒருவரும) இலா (அதுபோல) உவா நாறறத்தினையுடைய கரியகடலானது பொருந்திய தீர்த்தமாகி, தேவாகளும (மாநுடாமுதலிய மறறையோா) எலலாரும (தனனைத்) துதிக்க, பற்பலபொருள்களையுங் கொடுககும எ -று.

உருநலமிலாதவா - குரூபிகள். வான் - ஆகாயம்,ாணடு இடவாகுபெயராய்த் தேவரை யுணாததி நின்றது (கருகூ)

அடுததிடப பட்டவா பெரிய ராயினு
மடுத்தவா சிலாகுண மவாகு ணததியன
மடுககுமோ வளாகழி மலாந்த நெயதலகள
விடுத்தில நறுமணம வீசுங காதமே

(இ - ள ) அடுத்திடப்பட்டவாகள் மேலோராயிருநதாலும், அடுத்தவாகளிற் சிலரது குணமானது, அவவடுத்திடபபட்டவரது குணத்தின றனமையைக கொளளுமோ ? (கொளளாது, அதுபோல) பெருகுகினற கழிநீரிற் புட்பிதத நெயதற பூககள (மணமவீசுந தமதியறகைககுணததை) விடாதனவாகி, நனமணததைக் காத்தூரம் வீசாநிற்கும். எ - று.

அடுத்திடபபட்டவர் கழியும, அடுததவா நெய்தலுமென்க கழியின் மலாந்த நெய்தல அதன் புலான் மணத்தையேறகாது தன மணததை வீசியதெனபது கருதது.

"நெய்தலகள விடுததில நறுமணம் வீசுங்காதம" என்பதை, "நெயதல்கள் காதம்வீசும நறுமணம விடுததில" எனறனவயங்கொளினுமமையும. (கசூ0)

சேரியின் புறமெலாந தீய நாற்றமே
யாரினும புனனையு மலர்ந்த கைதையும
வேரியின ஞாழலும வீசு மாமண
மூரியம புரத்தினின றுயநத மூவாபோல.

(இ - ள்) பரதவர் சேரியின் பக்கலிலெல்லாந் துன்மணமே பொருந்தினும், புன்னையும், பூத்த தாழையும், தேனையுடைய ஞாழலும், வலிய முப்புரத்தினின்றும் பிழைத்த (தாரகாக்கன் - கமலக்கன் - வித்யுன்மாலியென்னு) மூவரையொத்துத் (துன்மணத்தினின்று நீங்கிச்) சிறந்த மணத்தை வீசாநிற்கும். எ - று. (௧௭௧)

வலையினுன் மீன்பல வாருஞ் செய்கையா
குலைவிலா மணிபல குளித்து வாழ்வர்க
ளுலைவிலா தொறுதியி லொறுதி நுண்பொருண்
மலைவிலா வொறுமா யொறு மன்னர்போல.

(இ - ள்.) கெடுதலில்லாத ஒற்றர்களாலாராய்ந்து, நுட்பமாகிய பொருள்களை (தாமே) மயக்கமில்லாத ஒற்றனுமாகி யாராய்கின்ற அரசரைப்போல, பல மீன்களை வலையினால் வாருகின்ற செய்கையுடைய பரதர்கள் (சீர்)குலைதலில்லாத பலமுத்துக்களை (தாமே) மூழ்கி (எடுத்து) வாழ்வார்கள் எ - று.

மன்னர் ஒற்றரால் பயனடைதல்போலப் பரதர்வலையால் மீனையடைந்தும், அவர்தாமே சிறைப்புறத்தோர்துமெனப் பொறேருடுணையாத தெரிந்து பயனடைவார் போலத்தாமேகுளித்து மணிகளையெடுத்தும் வாழ்வரெனக்கொள்க. (௧௭௨)

விழியினுற பரத்தியர் வெல்லப் பட்டதோர்
செழிகட றிரைகையாற் றிறைக ளாகவே
பொழிகதிர் மணிகளும் புலவு மீன்களுங்
கழிபவர் சேரிமுன் கலந்து வீசுமே.

(இ - ள்.) பரத்தியரது கண்களால் வெல்லப்பட்டதாகிய ஒரு செழிய கடலானது (தனது) அலையாகிய கரத்தினால், கிரணஞ்சொரியும் முத்துக்களையும் புலானமணமுடைய மீன்களையுங் கலந்து கப்பணங்களாக, பரதவர் சேரியின் முன்னே வீசாநிற்கும். எ - று

தோற்றவர் வென்றவருக்குத் திறைகொடுத்தல் முறையாதலின் பரத்தியர் விழிக்குத் தோற்றகடல் அவர்கட்கு மணிமுதலியவற்றைத் திறையாக வீசுமென்றார். கலந்து எனபது விண்டு என்றாற்போற் பொதுவினை. (௧௭௩)

அளவர்க ளுப்பமைத் தளக்கு மோதையு
நுளையர்கள் கலன்கட ளுக்கு மோதையும்
வளைமணி மீன்விலை மதிக்கு மோதையுங்
களமலி கடலெதிர் கடல்கள் போன்றவே.

(இ - ள்.) பரதர்கள் உப்புப்பயிரிட்டு அளக்கின்ற ஓசையும், நுளையர்கள் மரக்கலங்களைக் கடலிற் செலுத்துமோசையும், சங்கு-முத்து - மீன் (முதலியவற்றை) விலைசெய்யும் ஓசையும், கருமைமிகுந்த கடலை எதிர்க்கின்ற (பல) கடல்கள்போன்று விளங்கின. எ - று

கடல் - கடலொலியென்க அளவர்கள் - நுளையர்கள் என்பன நெய்தனில மாக்களை. (௧௭௪)

சுரங்கடந் தவர்தமைத் துன்னு றுமையா
விரங்குறு மாதரோ டிரங்கி வெள்வளை
தரங்கமென் கரங்களிற் றள்ளி வேலையு
மரங்கிளர் கரைவரு மழிந்து போதுமே.

(இ - ள்) (பொருண் மேற்காதல் கொண்டு) பாலை நிலத்தைக்கடந்த காதலர் தம்மை (மீண்டும்) அடையாமையின் (பிரிவாற்றாமல்) துன்புறுகின்ற மாதர்களுடன்

கடலும் இரக்கமுற்று, வெள்ளியவலைகளை அலைகளாகிய கரங்களினின்றுந் தள்ளி, மரங்கள் செறிந்த கரையில் வராநிற்கும் மீண்டு செல்லாநிற்கும். எ - று.

அகப்பொருள்விளக்கம்.

"பரத்தையிற் பிரித லோதற்குப் படர்தல்-அருட்டகு காவ லொடு-தூதிற் ககறல்- உதவிக கேக ணிதியிற் கிகததலென் - றுரைபெறு கறபிற் பிரிவறு வகைததே."—என னுஞ் சூத்திரப்படி, கற்பின்கட்பிரிவு அறுவகைத்தென்க. (கசரு)

பற்பல தேயமும் படாந்து பல்கலத
தற்புதப பொருளெலா மடங்க வாரிவந
துற்பவத் திழிநரு மும்பா போகத்தி
னிறபவ ருயர்நதவா நீரமை யென்சொல்கேன்

(இ - ள்.) பலபல தேசங்களுக்குஞ்சென்று,பல மரக்கலங்களில் அற்புதமாகிய பொருளகளையெல்லாம் மிகுதியாக வாரிவந்து, பிறப்பினுல இழிநத பரதமாக்களும, தேவபோகததில் சிறபார்கள். (அந்நிலத்) தலைவாகளது தனமையை யாது சொல்லு வேன. எ - று. (கசசு)

அளக்கரை நீநதினு மளககா நலகிய
துளக்கமில் பொருளெலாஞ சொலலு வாரெவா
விளககின மைநதிணை விளமபு நாணிலத
துளப்படு மயககமுஞ சிலவு ரைத்துமால.

(இ - ள்.) சமுத்திரத்தை நீந்தி (கரைகண்டா) ஞலும, சமுத்திரமானது அளித்த கெடுதலில்லாத பொருள்களையெல்லாஞ் சொல்லவலலவர் யாவா? ஐநதிணை (வளங்) களையும் விரிததாம். சொலலுகினற பூமியில் ஒனறுகூடிய (திணை) மயக கங்களுஞ் சில சொல்லுவாம். எ - று. (கசஎ)

திணைமயக்கம்.

வேறு.

வரகு போரிடை வரைவளா மநதிகள் பாய
விரவு மாதவி நிழலவளா வாரணம் வெருவி
யுரகம வாழ்மலை முழைழயிடை யுறுமபயந துயிரைப்
புரவு பூணுவாா புகுதரு மிடமறி யாாபோல.

(இ - ள்.) குறிஞ்சியில் வளர்கினற குரஙகுகள் (முல்லை நிலததிலுள்ள) வரகு போரிற் பாய, நெருஙகிய (முல்லைநிலததிலுள்ள) குருககததியின நிழலில் வளாகின்ற கோழிகள் பயநது, பயமுற்று உயிரைக்காப்பவரில் செல்லததகக இடமறியாதவாபோ லப் பாம்புகள் வசிககின்ற மலைக்குகையிற் சேரும எ - று. (கசஅ)

காலை யாய்ச்சியர் தயிாகடை யோதைையைக் கழனிச
சோலை வானரம வேங்கையின் குரலெனத துளஙகு
மாலை யோதைையை மழையென வண்டாக டொழுவின்
மாலை யானிரா புகுத்துவா வழக்கமுண் மையிஞல்.

(இ - ள்.) காலைப்பொழுதில் (முல்லைநிலததிலுள்ள) ஆயமாதர்கள் தயிர்கடை கின்ற வோசையை, மருதநிலத்திலுளள சோலையில் வாழும வானரமானது (குறிஞ்சி நிலததிலுளள)புலியின் குரலென்று நடுஙகும (மருததததிலுள்ள) கரும்பாலையின ஓசை யை (கேட்ட முல்லைநிலததிலுள்ள) ஆயாகள் மழை (ஓசை) என்று கருதிததொழுவங

களில் வரிசையாகப் பசுமந்தையைப் புகுத்துவார்கள். (மழை பெய்கையில் பசுக்களைத் தொழுவத்திற் கட்டுமெ) வழக்கம உளதாதலால் எ - று (கஅ௬)

கோழி யோட்டிய வுழத்தியர் குழைபரத் தியாக
ளாழி வேலையி லுணக்குமீன் பரப்பினை யழிக்கும்
வீழி வாய்ப்பரத் தியர்கொடி வீசிய வளைபோய்ப்
பாழி யூருழத் தியர்கெணற் பரப்பினை யழிக்கும்.

(இ - ள்.) (முல்லை நிலத்திலிருந்து வந்து மேய்கின்ற) கோழியை யோட்டிய (மருதநிலத்திலுள்ள) உழத்தியர்களது குண்டலமானது, சமுத்திரத்தையுடைய நெய்தனிலத்தில் நுளைச்சியர் உலர்த்துகின்ற மீன்பரப்பினைக் கலைக்கும். வீழிக்கனிபோலு யொத்த வாயையுடைய பரத்தியர்கள் (அந்நெய்தனிலத்திலுள்ள) காக்கத்தையோட்டிய வளையானதுசென்று, பெருமைவாய்ந்த மருதநிலத்தூரில் ஆற்றுக்காலாட்டியர் தொகுத்த நெற்குவியலையழிக்கும் எ - று.

பாழி - மருதநிலத்தூரெனினுமாம். குழை - தழையெனவுமாம். வாய-ஆகுபெயராய் இதழை யுணர்த்தியது வளை - வளையலுஞ் சங்கும் சங்குவளையலுமாம்.

ஊட்டு கன்று று வயிற்றினை நிரப்பியு மொழுகுங்
கோட்டி ருங்கவை யத்திளம் பாலுணக் குறிஞ்சி
மாட்ட னம்புகும் வனைவளர் யூகமா லைகளி
னூட்டி ருங்கழைப் புனலுண வயலினை யடுக்கும்

(இ - ள்) ஊட்டுகின்ற கன்றினது வயிற்றை நிரம்பச்செய்து மொழுகுகின்ற கொம்பினையுடைய பெரிய காட்டுப்பசுவின் முதிராத பாலைப்பருகும்படி குறிஞ்சி நிலத்துக்கு (மருதநிலத்திலிருந்து) அன்னமானது செல்லும் குறிஞ்சிநிலத்தில் வளர்கின்ற கருங்குரங்குகள் ஆலைகளில் ஆட்டுகின்ற கருப்பிரசத்தைப்பருக மருதநிலத்தைச் சேரும். எ - று. (கஅ௪)

அருவி தூவுமவெண் ணித்தில மலைகடற் கரையின
மருவும வாரிதிரைக் கடலெறி நித்தில மலையின
பொருவில் சாரலிற் பொலிதரும் பூவையர் பிறந்த
திருவி னாமனை யொழிந்தயற் சேர்ந்துவாழ் வதுபோல.

(இ - ள.) மங்கையர் பிறந்த செல்வமுடைய மனையைநீங்கி அயலார் மனையையடுத்து வாழ்வதுபோல, (குறிஞ்சிநிலத்திலுள்ள) அருவியாறுகள் சிந்துகின்ற வெளிய முத்துக்கள் அலைகளையுடைய சமுத்திரக்கரையிற் பொருந்தும் சமுத்திரமானது அலைகளால் வீசுகின்ற முத்துக்கள் மலையினது ஒப்பில்லாதசாரலிற் பிரகாசிக்கும் எ-று.

கொல்லை மானிளங் குழவியை யிடைச்சிறார் கொடுப்ப
மெல்லென் மீன்களை நுளைச்சிறார் விழைந்தெதிர் கொடுப்பார்
முல்லை நீண்முகை முல்லைவாழ் சிறுமியர் கொடுப்ப
நல்ல வார்நெர நுளைச்சிறு மியர்கணல் குவரால்

(இ - ள்) முல்லைநிலத்திலுள்ள மான்களின் இளங்கன்றுகளை ஆயச்சிறுவர்கள்ளிக்க, பரதச்சிறுவர்கள் மெல்லிய மீன்களை ஆசையுற்று எதிராகக் கொடுப்பார்கள். முல்லைநிலத்திலுள்ள சிறுமியர்கள் நீண்ட முல்லையரும்பைக் கொடுக்க, பரதசிறுமியர்கள் நல்ல முத்துக்களைச் சமானமாகக் கொடுப்பார்கள் எ - று. (கஅ௫)

தொல்லை நாவல ரனைவருந் தொடுத்தெடுத் துரைத்து
மெல்லை காணரும் வளநிறை தொண்டைநாட் டியல்பின்

வல்ல வாசிறி துணைத்தன மினிவகுத் துரைப்பாஞ்
செலவ நீடிய சென்னைமா நகாவளந் தெரிந்தே.

(இ - ள்.) பழமையாகிய நாவின் வன்மையுடைய புலவாகள் யாவரும் பாக்க ளாக்கி யெடுத்துககூறியும,அளவுகாண்டற்கரிய வளஙகளநிறைந்த தொண்டைநாட்டின் தன்மையுள கூடியவரையிற சிலவறறைச சொனனேம. இனி,செலவமிகுநத பெருமை வாய்ந்த சென்னை நகரின் வளஙகளை யுணர்நது சொலவாம எ - று.

இயல்பின மறைதில், இன - ஏழனுருவு. புறனடையாற்கொள்க. (கடுசு)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகந்திருவிருத்தம் - களசு

# திருநகரப்படலம்.

திருத்தகு தொண்டை நாட்டிற் றேவாக ளூடின மேலாம
விருத்திர னுயிரை மாட்டும விணணவ னகரு நாண
வுருத்தகு காஞ்சி மூதூ ரெல்லையி னுளதா யுமபா
வருத்தமுந தவிாககுஞ் சென்னை மாநகா சிறந்துவாழும.

(இ - ள்.) சிறப்புதஙகிய தொண்டைநாட்டில் தேவலோகததினும் மேலாகிய விருததிராசுர னுயிரைககொன்ற இநதிரனது அமராவதியு நாணமடையும்படி, அழ கமைநத பழமையாகிய காஞ்சிநகரததின எல்லையினுள்ளதாய, தேவாகளது துயரத தையுமொழிககும பெருமைவாய்ந்த சென்னை நகரமானது சிறப்புற்று வாழாநிறகும.

விருததிரனுயிரைமாட்டும விணணவனெனறது.

பூர்வம் அமராவதியிற் கொலுககொணடிருநத இநதிரனது அவைககளததில், பிரகற்பதி முனிவா வர, இந்திரன தனதாசிரியருககு வநதன பூர்வமாக வழிபாடுசெய் யாது தையலாா மையலில் மாழ்கிககிடகக, அதுகணட தேவகுரு அஙகுநின்று மறைந தனா. அதனுல் இநதிரனது செலவஙகுறைய,அவன தனது துயரைபபிரமனபாற்கூற, பிரமன் நீயுன குருவைககாணுமெலலையும, விசசுவவுருவனென்னும் இததிரிசிரனைக குருவாகக் கொள்கவென, இநதிரன் அதறகியைநது தனது நகரிற்குக கூட்டிவந்து, தனது செலவமிகுமபடி ஓாயாகஞ்செயகவென, திரிசிரன அவ்வாறே யாகுகவெனக கூறி, மனமவேறுபட்டுத தேவா செலவஙகுறையவும அசுரா செலவம மிகவும யாகஞ் செயதனன. அதனை யவன செயயுஙகிரியையா லுணாநது அவனது முசசிரததையும வசசிரததாற் கொயது பிரமகததியடைநது, தேவர்களது தநதிரத்திலை நிலம நீா மரம மாதாகட் களிததுப புனிதனுயினன தனமகனை இநதிரன கொனறதுணாநத துவட்டா ஓாயாகஞ்செயது அதிறமுனறிய விருததிராசுரனை இநதிரன மீதேவ, இந் திரன அவனுடன போர்செய்து அவனை வெலலவல்ல ஆயுதமினமையின விணடுவி னுடன கூறி, அவா கூறியபடி ததிசிமுனிவரை யடைநது அவா முதுகநதண்டெனபிற சுராசுராகளது ஆயுதஙகள கூடியிருநதமையின அதனைபபெற்றுப் புதிய வசசிராயுத மாக விசுவகனமனுற் செயதுகொணடு விருததிரனை யெதிாகக, அவன் போாபுரிய ஆற்றாதுகடலிலொளிக்க,அகததியமுனிவராற கடலை வறறசசெயது அவனைக்கொனறு புகைதீர்த்தனனெனபது சரிதம். (க)

தம்பிரா னருளா லெனபைத தளிரியன மடநதை யாககு
முமபாசூழ நகரு மேட்டி னுறுவரி நெருககி யிட்ட

வெம்பிரா னகருந தெறகும வடககுமென றிரணடு பானு
நமபிவாழ் தரவே நாபப ணயககுமந நகர மென றும.

(இ - ள) சிவபெருமானது திருவருளால (திருஞானசமபநதமூர்ததி சுவாமி கள) எலுமபினை மாநதளிாபோனற மேனியையுடைய பெணணாககிய தேவாகள சூழ்ந்த திருமயிலை நகரமும, எடடிற பொருநதிய வரியை நெருககியெழுதிய எமது எழுத தறியும பெருமானெழுநதருளிய திருவொறறிநகரமும (முனறயே) தெறகும வடககு மென று சொலலும இருபககலிலும நமபி வாழுமபடி, அசசெனனைமாநகரய எககால மும நடுவிற பொருநதும எ - று

எனபை மடநதையாககுநகா திருமயிலை எனறது

திருமயிலையில் வணிகாகுலததுதிதத சிவநேசரெனபவா தமது தவபபுதலவி யாரைத திருஞானசமபநதமூாததிசுவாமிகளுககெனறு நியமிததுக கனனிமாடமொன றமைதது அதிலமாததிப போஷிததுவருகையில, அபபுதலவியோா நாள மலாகொய கையில, அராததீணடி யுயிாதுரபப, சிவநேசா நாயனாருககெனத தீாமானிததமைக கேறப எனபையேனும அவாககுதவவேணடுமெனறு தகனஞசெயது அவவெனபைக குடததிடடு மாடததிற சேமிததுவைததிருநதனா பிளளையாா பல அறபுதஙகளையு மியறறிககொணடு மயிலையையடைநது, வைசியா கருததை யறிநது அககுடததைச சநநிதானவாயிலிலிருதநித திருபபதிகமோதிப பெணணுருவாககி, தாமெழுபபின மையின மகணமைகொணடு சென றனா. எனபதாம.

‘மடடிடடபு னனையஙகானன்மடமயிலை
கடடிடடஙகொணடானகபாலீசசரமமாநதான்
ஒடடிடடபணபினுருததிரபலகணததார்க
கடடிட்டலகாணுதேபோதியோபூமபாவாய''— எனபது முதலாகவுடைய திருப்பதிகம் அககாலததோதியதெனறறிக.

எடடினுறுவரி நெருககியிடட நகா திருவொறறியெனறது.

சூரிய மரபிலுதிதத மாநதாவெனனும அயோததியமனனன மூபபுபபருவ மடைந்து விரைவிலிறககவிருமபி அருகுள்ளாரை நோககி,நானிரககுமுறை தெரிநது சொலலுஙகளென, சிலவஞசகா உமது புணணியம அழியும மாாககஙகளைச செயயு மெனறனா மனனன கருணீகனைபபாாதது - யான தலஙகளிற செயயுந தருமஙகளைக குறைததெழுதுகவென, அவன அவவாறே யெழுதி மாநதாவுககுக காடட, அரசன அவறறிடையில “திருவொறறியூா நீஙகலாக'' எனறெழுதி யிருககககணடு, அவனது குறறமெனவெகுள, கணிகன அரசனே ! இஃதெனகை யெழுததனறெனறு வேறுபாட டினையுங காடட, மனனன அவவரியைக கிறுககி அககணககைத தன வசமாகவைதது மறுதினம பாாகக, அபபொழுதும “திருவொறறியூா நீஙகலாக'' எனறெழுதியிருபபது பாாததுத திருவருளை வியநது, அததிருவொறறியூரை யடைநது மநதிரிமுதலியோர் கைலாகுதரப பிரமதீாததததில ஸநானஞசெயது அஙகே வசிததுத தானும மனைவி யும இளமைப பருவ மடைநதாாகள. அதனால இளமைதநத பெருமான என ஓா சிவ லிஙகம பிரதிட்டைசெயது, தமது நகரததையடைநது சிலகாலங கழிதது முததிபெற றனரெனபது சரிதம. (உ)

தன்னினந தளரா வணணந தாஙகுத றரும மெனறே
நன்னகா பலவும வாழ நயநதுதன னிடததில வாழவு

மன்னிய செல்வர் தமபால வளமிகக கொடுததுத தனபா
லெநநகா வளமுங காட்டி யிருபபதந நகர நாளும

(இ - ள்) தனனினததை வருநதாவகையாக ஆதரிபபது தருமமெனறு கருதியே, நகரங்களெலலாம வாழவுறுமபடி விருமபி, தனனிடததிற பொருநதிகசிகளு செல்வாகளிடததில வளததைமிகக கொடுதது, தனனிடததிலே எலலா நகரங்களின வளஙகளையுஙகாட்டி, அசசெனனை நகரம எககாலுமிருபபது. எ - று (ரு)

இததரு நகாபோல வாழவாாக கிருமபொருள கொடாத வாறறு
லததரு துறநக வாண ரலைககட லமுது மிஙகே
யுததம ருததமும வேளவி புணவுஙகொள ளொருவன செயது
தைததிடும பழைய விலலின வாழ்தருங கடனமை பூண்டார

(இ - ள) இநதத தருதியாகிய நகரததைபபோல (பிறநகரஙகள தமமால) வாழ்பவாகளுககுப பெருமபொருளைக கொடாததனமையால, அநதத தகுதியாகிய சுவாககவாசிகள இநநகரததில அலையயுடைய சமுததிரததிறறோனறிய தேவாமிாதமும, உததமாகள கொடுககும யாக அவிசும பெறறு, ஒருவன செயதுவைதத பழைய கோயிலில வாழ்கினற கடனமையை மேறகொணடாாகள எ - று (சு)

தாஙகுமிந நகாவாழ வாாபோற றருமஙகள புரியாத தாழவா
லாஙகுள வமர ரெலலா மருமகப பேறு காணா
ரேஙகமழ மாலை வேறு சோதரா ரெனறு வாட்டார
பாஙகுசெய வாரில லெனறே படமழுக குருமற றூழ்வார

(இ - ள) (அடுததவாகளைத) தாஙகுகினற இநநகரததில வாழபவாகளைப போலத தருமஙகளைச செயயாத குறைவினுல, அசசுவாககததில வசிககுநதேவாகள யாவரும அரிய புததிரப பேறறினைபபடையாாகள வாசம வீசும மலாமாலை வேறே யாபபடாதெனறு (அதனை) உலாததாாகள பககுவஞசெயவாரிலரெனறே (தமது) வததிரம அழுககுபபடாமலணிவாாகள எ - று

அமரா - மரியாதவாகள (எ)

வாரவளா மலைமென கொஙகை வளைகட லுடுக்கைச செல்வப
பாரமகள முகமே யாகும பரவுமுத தமிழ்சேர நாடு
சோாவறு நுதலே யாகுந துலஙகிய தொணடை நாடு
சீரவளா திலக மேயாகுஞ் சென்னைமா நகர மாதோ

(இ - ள) துதிககததகக (இய லிசை நாடகமெனனும) முததமிழ் வழஙகும தமிழநாடு, கசசணிநத மலைபோனற மெலலிய கொஙகையையும வளைநத கடலை யாடையாக வணிநத செலவததையுமுடைய பூமிதேவிககு முகமேயாகும, விளஙகிய தொணடைநாடானது குறறமறற(அவளது)நெறறியேயாகும; சென்னைமாநகரமானது (அமமுகததிலணிநத) சிறததிமிகக திலகமேயாகும எ - று

முததமிழ் சேர்நாடு எனறது தமிழநாடு அது "குணகடல குமரி குடகம வேஙகட மெனனுநானகெலலையி னிருநததமிழக கடலுள"—எனபதனைமிற

தொணடை நாட்டெலலையை,

"மேறகுப பவளமலை வேஙகட நோவடககாம
ஆாககு முவரி யணிகிழககு—பாாககுளுயா

'தெற்குப் பிணிகி திகழ்ருப நிலகாதம
நற்றுணைடை நாடெனவே நாட்டு''—என்றதனாலறிக. (௬)

தத்தமக் குரிய விண்ணோர் தமக்கிட மாவ தன்றி
யித்திருந் நகரம் போல வீடுமா னுடரா யாவர்க்கு
முந்நிலைச் சூலத் தண்ணன் முகுந்தனைங் கரனவே ளாதி
யுத்தமர் தமக்கும் வைப்பா யுறுவதோ துறக்க வைப்பு.

(இ - ள்) மோக்ஷலோகமானது, தத்தமக்குரிய தேவர்களுக்கு இருப்பிடமாவதல்லது இந்தத் தகுதியாகிய நகரத்தைப்போல (தன்னை) அடைகின்ற மாந்தர் யாவர்க்கும், மூச்சிரமமைந்த சூலப்படைதாங்கிய சிவபெருமானும், திருமாலும், ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகமூர்த்தியும், முருகக்கடவுளும் முதலிய உத்தம (தேவர்)களுக்கும் இடமாகப் பொருந்துவதோ? (அன்று) எ - று (௭)

தேவர்கண் முனிவர் சித்தர் சிறந்தவே தியர்க ளேனை
மூவரும் பிறரு மென்று மொய்ந்துடன் வாழு மாறு
மாவள மிடங்க ளருளும் வளநகர் யாவ ரேனும்
மேவுறி னிடமா முத்தி வீடலா னிகரா தன்றே

(இ - ள்) தேவர்களும் முனிவர்களும் சித்தர்களும் சிறந்த அந்தணர்களும் வேறுங்கிய திரிமூர்த்திகளும் பிறரும் எப்பொழுதும் ஒன்றுகூடி வாழும்படி, செல்வம் பெருகும் இடங்களைக் கொடுக்கின்ற வளமமைந்த சென்னைநகரமானது எவரேனும் (தன்னிடத்து) வந்தால் (அவர்கட்கெல்லாம்) வாசஸ்தானமாகும். (அதனை) மோக்ஷ வீடல்லாது (வேறொன்றும்) ஒப்பாகமாட்டாது எ - று

அன்று - ஏ - அசைகள் (௮)

ஒளிமணி மழையுஞ் செம்பொன் மழையுங்கைம் மாறு வேண்டா
தளவில வாரிச் சென்னை யகநகர் மாந்த ரெல்லா
முளமகிழ் சிறப்பி னாளு முதவுத னோக்கி நோக்கி
விளர்நிறம் படைக்குந் தெண்ணீ ரல்லது வீசா மேகம்

(இ - ள்) அழகிய மணிமழையையும், செம்பொன் மழையையும் பிரதியுபகாரங்கருதாது அளவில்லாமலெடுத்து, சென்னைநகரத்துள்ள மாந்தர் யாவரும் மனங்களிப்புறச் சிறப்புடன் நாடோறுங் கொடுப்பதை மிகவும் பார்த்து, மேகமானது வெள்ளிய நிறத்தைத் தாங்கும். தெள்ளியநீரை யல்லது வீசாது எ - று.

அந்நகரவாசிகள் தம்மையடுத்தோர்க்கு மணியையும் பொன்னையுங்கொண்டு, அபிடேகஞ்செய்வது நோக்கிய மேகமானது தானும் அவர்கள்போலச் சொரியக்கருதி வெண்ணிற மமைந்தும் நீரையன்றிப் பொழியாதென்பதாம்,

மேகம் ஏழு - சம்வர்த்தம் ஆவர்த்தம் புட்கலாவர்த்தம் சங்காரித்தம் துரோணம் காளமுகி நீலவர்ணம் இவைமுறையே மணி - நீர்-பொன்-பூ - மண் - கல் - தீ - என்பவற்றைப்பொழியும் (௯)

மருங்குறு கடலின் மொண்டு மழைநகுல மகளி ரம்பாற்
கருங்குழ னிகர்ப்ப வெண்ணிப் பன்முறை கறுத்துப் பார்க்கு
மொருங்கிர வார்க்கு நாளு முதவுமிந் நகரின் மாந்தர்
பொருங்கொடை நிகர்ப்ப வெண்ணிப் பன்முறை பெய்து பார்க்கும்.

(இ - ள்) மேககூட்டங்கள் பக்கத்திலுள்ள சமுத்திரத்தில் (நீரை) முகந்து மாதர்களது ஐந்து பகுப்பினையுடைய கரியகூந்தலையொப்பாக்கருதிப் பலமுறைகருமை வாய்ந்துபார்க்கும் யாசகர் யாவர்க்கும் தினந்தோறுங்கொடுக்கின்ற இந்நகரின் மாதுடரது பெருங்கொடையை நிகர்க்கக்கருதிப் பலமுறை வருஷித்துப் பார்க்கும் எ - று.

ஐம்பால் - முடி-கொண்டை-சுருள்-குழல்-பனிச்சை. இவற்றுள் மயிரை யுச்சியின் முடித்தலேமுடி - பக்கத்தின் முடித்தலே கொண்டை - பின்னே செருகலே சுருள் - சுருட்டிமுடித்தலே குழல-பின்னிவிடுதலே பனிச்சை யெனப்படும் (கO)

அருமைகண் டுவப்புச் செய்யா ரமாந்துவாழ் மலைபிற கானின்
மருவியென் பயனென் றெண்ணி மணங்கம ழகிலுஞ் சந்துங்
குருமலர்ச் சண்ப கங்கள் கொன்றைமல் லிகையு மற்றுந்
திருநகர்ப் புறத்தி னெங்குஞ் செறிந்தெழில் காட்டா நிற்கும்.

(இ - ள்) மணம் வீசும் அகிலும், சந்தனமும், நிறமமைந்த மலரையுடைய சண்பகங்களும், கொன்றையும், மல்லிகையும் பிறவும், (தமது) அருமையைப்பார்த்துக் களியாதவர்கள் பொருந்தி வாழ்கின்ற மலையிலும் வனத்திலும்பொருந்தி(யிருப்பதால்) யாது பயனென்று கருதி, சிறந்த சென்னைநகரின் பக்கலில் எவ்விடத்தும் நெருங்கி (தமது) அழகைக் காட்டாநிற்கும். எ - று.

தமதருமையை யுணர்வாரிடையிருந்து பயனில்லை யெனக்கருதிய அகில் முதலியவை மலையுங்கானுமொழிந்து நகர்ப்புறஞ்செறிந்து எழில்காட்டுமெனக (கக)

இயலினைக் கற்க வெண்ணி யினத்தொடு மயிலுஞ் சால
நயமொழி கற்க வெண்ணி நன்கிளி குயிலும் போந்து
செயலையந் தளிர ளாதஞ் செவ்விபார்த் துறையா நிற்கும்
வயல்புற முடுத்த சோலை வளர்ந்தவுய் யான மெங்கும்.

(இ - ள்.) வயல்களைப் புறத்திலுடுத்த சோலைகளும் வளர்ந்த பூந்தோட்டங்களும் (ஆகிய) எவ்விடத்திலும், அழகிய அசோகந்தளிரை யொத்த மேனியையுடைய மாதர்களது சாயலைக் கற்கவிரும்பிக் கூட்டத்தோடு மயில்களும், மிக்க இனிமைவாய்ந்த சொற்களைக் கற்கவிரும்பி நல்ல கிளிகளும் குயில்களும் வந்து சமயம்பார்த்து வாழாநிற்கும் எ - று. (கஉ)

சுந்தர மிகுந்த விந்தத் தொன்னகர் விடாது நோக்கச்
சிந்தையி னாவங் கொண்டு தினந்தமைப் பூசை செய்வார்க்
கந்தமில் வரங்க ளலகி யளிப்பது குறித்துந் தேவர்
வந்தனர் மலர்க டோறும் வதியுமா ராம மெங்கும்

(இ - ள்) தேவர்கள் அழகுமிக்க இந்தப்பழமையாகிய சென்னை நகரை யிடைவிடாது பார்க்கமனதில் ஆசைகொண்டும், நாடோறுந் தம்மைப்பூசிப்பவர்களுக்கு அழிவில்லாத வரங்களைக் கொடுத்துக் காப்பது கருதியும் வந்து, பூக்கடோறும் வாழ்கின்ற சோலைகளெங்கும் (உள்ளன.) எ - று (கந)

முத்தலைச் சூலத் தார்போன் மூன்றுகண் படைத்து மாதர்
முத்தலை முலைநே ராமன் முடிகவிழ் குருமபைத் தாழைக்
கொத்தொடு கமுகங் காடு மாதலை குழலொப் பாமபூ
வைத்திடும் வாழைக் காட்டின் மருங்கள் வளர்வி நிற்கும்.

(இ - ள்) முதத‌லைச சூலததையுடைய சிவபெருமானைப போல மூனறு கண்களைப்பெற்றும், மாதாகளது முதது வடமலையும முலலையை யொவவாது (நாணித) தலைகுனிந்த குருமபையையுடைய தெனனநதோப்போடு, அழகிய சமுகக காடும மாதாகளது கூநதலை யொப்பாகிய பூவையுடைய வாழைககாட்டின பககங்களில் அள வளாவிநிற்கும எ - று

கொத்து - கூட்டம. ஈணடுததோப்பு. (கச)

நகருறை மைநத ரெல்லா நலனுருக காம ரெனறே
யகமுற நினைததுக் கன்ன லவாகளகைச சிலைக ளாகப்
புகர று வயலக ளெங்கும பொதுளுமவ் வாறே யெணணிப்
பகழிக ளாக நீலம பங்கயம பலவும பூககும.

(இ - ள்.) சென்னை நகரததில் வசிக்கும மாநதர்கள் யாவருமநல்ல வடிவ மைந்த மனமதாகளெனறே மனதிற் பொருநத நினைததுக கருமபானது அவாகளது கைகளிற சிலைகளாமபடி, குற்றமற்ற வயலகளிலெலலாம் நெருஙகி நிறகும அவ் வகையே, நீலம - தாமரை முதலிய பலவும பாணஙகளாககருதி மலரும எ - று

மனமதனகணை ஐநது-தாமரை மா அசோகு முல்லை நீலமெனபன அவை செயயுமவததை-சுபபிரயோகம விபபிரயோகம சோகம மோகம மரணம. இவற்றை, சூத்திரம்.

"வனசஞ் சூத மசோகு முல்லை
நீல மெனமதன பெயகணை யைநதே"—எனவும,
"சுப்பிர யோகம விபபிர யோகம்
சோகம மோகம மரணமுந தோற்றும்."—எனவும்,
"சுப்பிர யோகஞ் சொல்லு நினைவும
விப்பிர யோகம் வெய்துயிாத திரங்கல்
சோகம் வெதுப்புந துயபபன தெவிடடலும
மோக மழுஙகலு மொழிபல பிதற்றலு
மரண மயாப்பும மயககமுஞ் செயயும"—எனவும் வருவனவற்றானறிக.

மதனன இவவைநகணைகளை,

"நெஞ்சி லரவிநத நீளசூதங் கொங்கையினில்
துஞசும் விழியி லசோகமாம—வஞ்சியாதஞ
செனனியிலே முலலை திகழ்நீல மலகுலிலே
யெனனவே ளெயயுமியல பாம."—எனறபடி யெயவனெனக்கொளக (கரு)

நீரள வாகி நிற்ற னெடுஙகொடி யளவே யனறிச
சீரம ரிலையும பூவுந தினநதொ று மொப்பக காட்டுஞ
சாரினப பொருளுக கேறப வாழ்நது தண் கவிகை யொபபப்
பாரிடை யளிககு மிநதப பதியொடும பழகுங கஞசம.

(இ - ள்) சலததின அளவாகி நிறபது நெடிய கொடிமட்டுமே யல்லது, சிறப்பமைந்த இலைகளும் மலர்களும் நாடோறும் (அதறகுச) சமானமாகவே காட்டும். பூமியில் (தன்னை யடுததோரைக்) காக்கும் இநதச் சென்னைநகரோடு தாமரையானது சாாநத தன் இனப்பொருள்களுக்குச சமானமாக வாழ்நது தண்ணிய குடைபோல விளஙகும. எ - று. (கசு)

பாளையந் தாழை பூகம் பசுங்கழை கதலி யென்னுஞ்
சொலுறு வனங்கள் காணக் கருதியொரு பாங்கர் காடு
மாளிகை வரைகள் காண மதித்தொரு பாங்கர் குன்று
நீளிடை வந்து நிற்ப நெடுநகர் செல்வ மல்கும்

(இ - ள) பாளையையுடைய அழகிய தெங்கும் கமுகும் பசியகரும்பும் என்று சொல்லுங் காடுகளைக்காண நினைத்தொரு பக்கலிற்காடும், மாளிகைகளாகிய மலைகளைக் காணக்கருதி யொருபக்கலின் மலையும் நெடுந்தூரத்தில் வந்து நிற்க, நெடிய சென்னை நகரமானது செல்வமுற்று விளங்கும் எ - று.

காடு என்றது திருவேற்காடும், குன்று என்றது பிருங்கிமலையுமாம். பிருங்கி மலையென்பது இக்காலத்துப் பரங்கிமலையென மருவி வழங்குகின்றது. (கஎ)

பொருள்பல விளைத்து நாளும் பொலிதலாற் கதிர்செஞ் சாலிப்
பெருநிலத் தகரி னோர்பாற் படப்பொடு சூழ்ந்து நிற்குங்
கருதிய பொருள்க ளெல்லாங் கவர்தொறுங் கொடுத்துச் செல்வ
மருகுவ தின்மை யாலே யலையுமோர் பாங்கர் சூழும்.

(இ - ள்) பலபொருள்களை விளைத்து நாடோறும் விளங்குதலால், கதிரையுடைய செவ்விய நெற்பயிர் பொருந்திய பெரிய மருதநிலமானது (அச்சென்னைநகரத்தின்) ஓர் பக்கலிற் சூழ்ந்து நிற்கும் நினைத்த பொருள்களெல்லாவற்றையும் கைக்கொள்ளுந்தோறுங் கொடுத்துச் செல்வங் குறைவதின்மையாலே அலைகளும் [சமுத்திரமும்] ஓர் பக்கலிற் சூழ்ந்திருக்கும் எ - று

சென்னை நகரத்தைச் சூழ்ந்து ஓர் பக்கலில் மருதமும், மற்றொருபக்கலில் நெய்தலும் விளங்குமென்பது கருத்து (கஅ)

கொடையொடு பயிலு மின்பங் குளிநக ரெல்லை யுள்ளே
மிடைதரு வளத்துட் சில்ல விளம்பினம் பொதுமை தன்னா
லடைதரு வளத்தை வேறு வகைமையி னறையப் புகுப்
புடைநகர் வளத்தை முன்னர்ப் புகலுதும் புலவர் தேர

(இ - ள்) கொடைத்தொழிலிற் பழகுகின்ற இன்பமைந்த தண்ணிய சென்னை நகரத்தினெல்லையில், நெருங்கிய வளப்பங்களிற் சிலவற்றைப் பொதுத்தன்மையாற் சொன்னோம் பொருந்திய வளங்களை வேறுவகையிற் சொல்லப்புகுந்து புடைநகர் வளத்தைப் புலவர்களறியும்படி முதலிற் கூறுவாம் எ - று (ககூ)

புறநகர்

வேறு

கிரிசரக் களிறு நதிசரக் களிறுங் கிளர்ந்தெழும் வனசரக் களிறு
முரிமையிற் பயிலும் பற்பல தேயத் துளைவளர் சுவற்பரி மாவும்
புரிமணி யிரத வுருப்புகள் பலவும் புரையறு தானையும் படையுந்
தரியலர் பணிப்பச் சுமந்துவந் தளிக்குந் தண்டுறை தொறுங்கலம் பலவும்.

(இ - ள்.) மலையிற் சஞ்சரிக்கும் யானையும், ஆற்றிற் சஞ்சரிக்கும் யானையும், காட்டிற் சஞ்சரிக்கும் யானையும், உரிமையுடன் பற்பல தேயத்திற் பயில்கின்ற புறமயிர்வளரும் பிடரியையுடைய புரவியும், அழகிய மணிகட்டிய இரதவுருப்புக்கள் பலவும், குற்றமற்ற சேனையும், ஆயுதங்களும் (முதலியவற்றை) பகைஞர் நடுங்கும்

படிதாங்கிவந்து, தடம்பம் பொருந்திய தூறைமுகங்களிலெல்லாம் பல மரக்கலங்களும் கொடுக்கும். எ - று

கிரிசரம் - நதிசரம் - வனசரம் என்னும் அடைகள் யானையின் விசேடங் களை யுணர்த்தின. (உ0)

அலப்படையனைய தூங்குவாய நெடுங்கை யலைசெவி வாரணம் பழ க்கு, நலப்பெரு வனப்பிலை மைந்தர்க் டமது நவையறு போர்த்திற வலி க்கு, வலப்படு மதமால யானையு நிகரா வாய்மையைத் தெரிப்பதேபோ லப், புலப்படப் புகன்று மொழுத்துமண்டிலமாப் போக்கிநடத்துவர் பலரும்.

(இ - ள்) அலாயுதம்போன்ற தொங்கிய வாயையும் நீண்டகையையும் அசை கின்ற காதையுமுடைய யானைகளைப் பழக்கச்செய்கின்ற பெருமைவாய்ந்த நலலழகினை யுடைய ஆடவர்கள் குற்றமற்ற தமது போர்த்திறத்தின் வலிமைக்கு வெற்றி பொருந் திய மதமயக்குடைய யானையுநிகராத உண்மையை யுணர்த்துவதேபோல, வெளிப் படக்கூறியும், தண்டித்தும், மண்டிலமாக நடத்தி ஒழுங்காகச் செலுத்துபவர் பலரும் (உளர்) எ - று (உக)

குழியிடைப் படுத்துஞ் சிலபக லுணவு கொடாமலு மினத்தொடு சேர்த்துங், கழிபெரு நிகளங் காலுற யாத்துங் கதந்தணித் தணிநகர் புகுத் தும், பொழிமதக் களிற்றை விணைஞர்கள் பழக்கும் போர்த்தொழின் முன்னமே மதித்துச், செழித்தரு முளத்துப் பயத்தினாற் போலுந் திசைக் கரி புறங்கொடுத் ததுவே

(இ - ள்) மதம்பொழிகின்ற யானையை, படுகுழியில் வீழத்தியும், சில தினங் கள் ஆகாரமுதவாமலும், (பிறகு) இனத்துடன் கூட்டியும், மிகப்பெரிய சங்கிலியைக் காலிற் பொருந்தக்கட்டியும், கோபத்தைத் தணித்து அழகிய நகரத்திற் புகுத்தியும், யானைப்பணிக்காரர்கள் பழக்குகின்ற போர்த்தொழிலை முன்னமே யோசித்து, உள்ள திற் பொருந்திய அச்சத்தினாற்போலும் திக்குயானைகள் (எட்டும்) புறங்கொடுத் (திரிந்) தன. எ - று.

புறங்கொடுத்தது - முதுகுகாட்டியது திக்குயானைகள் வெளிப்புறத்து முகத்தைவைத்து நிற்றலின் புறங்கொடுத்தனென்றார் அவ்யானைகள் தம்மையும் இந் நகரவாசிகளிவ்வாறு செய்வரென்னும் பயத்தாற் புறங்காட்டினவெனக்கொள்க (உஉ)

இருப்புநெட டெழுக்கண் முசலங்கள் வாங்கி யெதிரெதிர் தாக்குப் தெழித்து, மருப்புடல் புதைய வொன்றனை யொன்று மறுகுறக் குத்துப் தெழித்துஞ், செருப்படு மிருப்புத் தொடரருஞ் சுழற்றிச் சென்றெதி ரோச்சுப் தெழித்தும், பொருப்பின மலைந்த லெனக்கரி யினங்கள் போ ர்த்தொழில் பழகிடம் பலவால்

(இ - ள்) யானைக்கூட்டங்கள் இருப்பினாற்செய்த நெடிய வளைதடிகளையும் இருப்புலக்கைகளையுங் கொண்டு எதிரெதிராக மோதியடித்தும் ஒன்றோடொன்று தந்தங்க ளுடலிற்புதையும்படி குத்தியார்ப்பரித்தும், போர்புரிகின்ற இருப்புச்சங்கிலி களைக் கரங்களாற்சுற்றி எதிர்சென் றடித்துப் போர்செய்தும், மலைக்கூட்டங்கள் மாச்செய்தாற்போல, போர்த்தொழிலிற் பழகுமிடங்கள் எண்ணிறந்தனவாம் எ - று.

இருபுடை யொழுகும் பருமணி யிரட்ட விழிமதக் கலுழியங் கரட்க
கருஞ்சிமி ழிடைப்பச் சென்றுநீர் முகக்குங் களிற்றினந் துளைக்கைநீர் வீசி
மருவிய வினத்தோ டாட்டயா வனப்பு வாரிதி மடுத்தெழு புயலு [னவே.
முருவுகள் பலவாய்த் தம்முளே நெடும்போ ருவப்புறப் புரிதல்போன்ற

(இ - ள்) இருபக்கலிலுந் தொங்குகின்ற பருத்தமணிகள் ஒலிக்கவும், இழிகின்ற கன்னமதப்பெருக்கில் அழகிய கரியவண்டுகள் சத்திக்கவுஞ்சென்று நீரைமுகக்கின்ற யானைத்தொகுதிகள் துதிக்கைகளால் நீரை வீசி, பொருந்திய தமயினத்துடன் விளையாடுகின்ற அழகானது, கடனீரைப் பருகியெழும் மேகங்கள் பலவுருவங்களாய்த் தமக்குள் பெரிய போரினை விநோதமாகச் செய்தலைப்போன்றன. எ - று. (௨௪)

தண்டமுஞ் செண்டு வெளியுஞ்சே வகமுந் தளைத்திடுங் கூடமும் பலவு
மண்டிய தாரை மதப்பெரு மழையா லவைகலுஞ் சேதக மாக்குந்
திண்டிறற் களிறும் பிடிகளுங் கன்றுஞ் செறிதரு மொட்டகக் குழாமுந்
தண்டலை மருங்கும் வயற்கள மருங்குந் தண்கடன் மருங்குமெண் ணிலவே.

(இ - ள்.) தண்டமும், செண்டுவெளியும், சேவகமும், கட்டப்படுங்கூடமும் பிறவிடங்களும், நெருங்கிய மதப்பெருக்காகிய மழைத்தாரையால் நாடோறுஞ்சேறாக்குகின்ற மிக்க வலியுடைய ஆண் யானைகளும், பெண் யானைகளும், கோபிக்கும் நெருங்கிய ஒட்டகக்கூட்டங்களும், சோலையின் பக்கலிலும், வயலிலிட்ட (நெற்) களங்களின் பக்கலிலும், தண்ணிய கடலின்பக்கலிலும் எண்ணிறந்தனவாம். எ - று.

தண்டம் - யானைசெல்லும்வழி. செண்டுவெளி-குதிரைசெல்லும் வையாளி வீதி. சேவகம் - யானைதுயிலுமிடம். கூடம் - யானைகட்டுமிடம். (௨௫)

வேறு.

இந்திர னுலகமு மிரவி லோகமுஞ்
சந்திர திசையினா னுலகுந் தாமெலாம்
வந்தொரு நகரென மருவி னும்பரிப்
பந்தியின் புடைநகர்ப் பாத மொக்குமோ.

(இ - ள்) இந்திரலோகமும், சூரியலோகமும், சந்திரதிசையினனாகிய குபேரனது லோகமும், ஆகிய இவையெல்லாம் (ஒன்றுசேர்ந்து) வந்து, ஒரு நகரமென்பப் பொருந்தினாலும், குதிரைப் பந்தியையுடைய புடைநகரின் காற்பாகத்தை யொப்பாகுமோ? (ஒப்பாகாது) எ - று.

சந்திரதிசையினன் - குபேரன் என்றதை,

தணிகைப்புராணம்.

"துலாமணிந்தவர் சூளிகைத்தலைத்
துலாமிவர்ந்தெழுஞ் சோமதிக்கின
னிலாவிருமபொடு ணிறைந்ததாமென
நிலாவுமத்தலை யிவாந்துநிற்குமே"—என்னுஞ் செய்யுளிலுங்காண்க (௨௬)

வரையறு போரிடை வாவிச் சென்றுமீண்
டுரையருக் குவப்பினை யாக்கு மாவொடு
கரைவருந் தொறுமுருக் கரைந்து மீள்கலாக்
குரைகடற் பெருந்திரைக் குலமு மொக்குமோ.

இருண்மலப் பந்த நீங்கி யிருமையுங் கான்ற சோதி
யருவருத் தகலத் தள்ளி யருளொடு மன்னவளாவிப்
பருதியிற் கலந்து நிற்கும் பாயொளி விழியே போலத்
தெருளொடுங் கலந்து நிற்குஞ் செல்வர்தம் மடமு முண்டால்.

(இ - ள்) (அஞ்ஞான) இருளாகிய ஆணவமலப்பந்தத்தினின்றும் நீங்கி இம்மை மறுமைப்பலன்களையுங் கக்கிய சோறுபோல அருவருப்புற்றுத் தூரவிலக்கி, திருவருள் வழிசேர்ந்து, சூரியனுடன் கலந்து நிற்கும் பரவிய ஒளியையுடைய கண்ணைப்போல, ஞானத்துடன்கூடி நிற்குஞ் சிவஞானச் செல்வர்கள் வாழுந்திருமடங்களும் (எண்ணிறந்தன) உண்டாம். எ - று. (௧௧௧)

எழுத்திலக் கணமுன் னான விலக்கண மைந்துந் தேர்ந்து
வழுத்தப விளங்கு மற்றைக் கலைகளும் வல்ல நல்லோர்
குழுத்தக விருந்து நாளுங் கோதறு நூல்களை யாயும்
விழுத்தகு கழக நால்வர் வீதிக டோறு மேவும்.

(இ - ள்) எழுத்திலக்கணத்தை முதலாகவுடைய ஐந்திலக்கணங்களையுந் தேர்ந்து, குற்றமற விளங்குகின்ற பிறநூல்களிலும் வன்மையையுற்ற நல்லபுலவர்கள் கூட்டமாக விருந்து, தினந்தோறுங் குற்றமற்ற நூல்களை யாராய்ச்சிசெய்யும் மேன்மைபொருந்திய கல்விக்கழகமான நாற்குலத்தார்கள் தெருக்களிலெல்லாம் பொருந்தும் எ-று.

ஐந்திலக்கணங்கள்—எழுத்திலக்கணம் - சொல்லிலக்கணம் - பொருளிலக்கணம் - யாப்பிலக்கணம் - அணியிலக்கணம் எனப்படும். (௧௧௨)

எங்கணும் புராணஞ் சொல்வோ ரெங்கணும் புராணங் கேட்போ
ரெங்கணுந் தருமசாலை யெங்கணும் வேள்விச் சாலை
யெங்கணுந் தான மீவோ ரெங்கணுந் தானம் பெறுவோ
ரெங்குமங் கலங்கள் செய்வோ ரெங்குமங் கலங்கள் காண்போர்.

(இ - ள்) எவ்விடத்திலும் புராணம் பிரசங்கிப்பவர்களும், எவ்விடத்திலும் புராணசிரவணஞ் செய்பவர்களும், எவ்விடத்திலுந் தருமசாலைகளும், எவ்விடத்திலும் யாகசாலைகளும், எவ்விடத்திலுந் தானங்கொடுப்பவர்களும், எவ்விடத்திலுந் தானம்பெறுபவர்களும், எவ்விடத்திலும் மங்கலவினைகள் செய்பவர்களும், எவ்விடத்திலும் மங்கலச் சடங்குகளைப் பார்ப்பவர்களும் (ஆக அந்நகர் விளங்கும்) எ - று.

பூரண கும்பம் வைத்த புதுமலர்ப் பந்த ரெங்குந்
தோரண நிரையிற் றூக்குஞ் சுடர்மணிக் கோவை யெங்கும்
வாரணி நிரையில் வைத்த வார்கொடித் திரள்க ளெங்குஞ்
சாரண ரிருந்தெய்ப் பாறுந் தமனிய மாட மெங்கும்

(இ - ள்) பூரண கும்பங்களையமைத்த புதிய மலர்ப்பந்தர்களும், தோரண வரிசையில் தொங்கவிட்ட பிரகாசிக்கின்ற முத்துக் கோவைகளும், கடல் வரிசை போலக்கட்டிய நெடிய துவசத்தொகுதிகளும், சாரணர்களிருந்து இளைப்பாறுகின்ற பொன்னாலாகிய மாளிகைகளும் எங்கெங்கும் உள்ளன எ - று.

சாரணர் - ஓர்வகைத் தேவசாதியர். (௧௧௩)

சிவிகையுங் களிறு மாவுஞ் செழுமணிச் சகடு வட்டக்
கவிகையுங் கருவி மள்ளர் கணங்களு மறுகு வீதி

யவிரமணி மாடத் தோடு மவிரவன வாழி யோடு
புவிபுகழ் மலைகள் போர்கருப புக்கபா சறையே போலும்.

(இ-ள்.) பல்லக்குகளும், யானைகளும், குதிரைகளும், செழிய இரத்தினங்களாற்செய்த தேரகளும், வட்டமாகிய குடைகளும, ஆயுதங்களையேந்திய மள்ளர் கூட்டங்களும் நீங்காத (அந்நகர) வீதிகள், பிரகாசிக்கின்ற இரததினங்கள் பதிதத மாளிகைகளோடும விளங்குவன, சமுததிரததுடன் உலகமானது துதிசெய்கினற பர்வதஙகள் யுத்தஞ்செய்தற்குப் புகுநத பாசறையையே யொததிருககும எ-று

பாசறை - போர்மேறசென்றோ ருறைவிடம் (ககரு)

பமபிய மாடந தோறும பரிசன மருஙகு சூழக
கமபலம் விரிதது மேலாற கதிரமணி விதானஞ செய்து
கொமபனு ராடல பாடல குலாவுற விருககின றாதா
ருமபாநா டாள்வோ ரெலலா மொருஙகுவந திருநதா ரொத்தார்.

(இ-ள்) நெருஙகிய மாளிகைகளிலெல்லாம பரிசனாகள் பக்கலிற சூழும்படி, கமபலஙகளை (கீழே) பரபபி, மேலே ஒளிவீசுகினற இரததின விதானஙகட்டி, பூஙகொமபை யொததமாதாகள ஆடலபாடலகள்விளஙக(அவறறைககணடுஙகேடடும) இருககினறவாகள், தேவலோகததை யரசு செயபவாகளெல்லோரும ஒனறுகூடிவநதிருநதவாகளை யொததார்கள. எ-று.

விதானம - மேற்கட்டி. (ககசு)

நஞ்செழு முன்னாத நீமபா னரலையி லெழுநதோா வானே
தஞசமென றிருபபத தூய தணணமிழ தெழுநத பினனா
விஞசுறு வனபபிற றோனறி மேதினி யுரிததெனபா பாாபோன
மஞசணி மாட மெஙகும வதிகுவா மஙகை நலலாா.

(இ-ள்) (அரம்பையாகள) விடநதோனறு முனனரே, மதுரமாகிய பாற கடலிற் பிறந்து. ஒபபறற தேவலோகமே (நமககு) இருப்பிடமென்று வசிகக, பரிசுததமாகிய தண்ணிய தேவாமிர்தமானது பிறநதபிறகு, பூமி (தான, நமககு) உரியதெனறு மேமபட்ட அழகுடன்தோன்றி வந்தோாபோல, மேகநதவழும மாளிகைகளிலெலலாம நலல மாதாகள் வசிப்பார்கள். எ-று.

பாற்கடலிற் பிறநத அரமபாஸதிரீகள அதில நஞசுநதோனறினமையின தமது பிறபபை விஷததுடன தோனறியதாக அவமதிததுத தேவலோகததில வசித திருநது, பினனா அதில அமுதமபிறநதது கருதிமதிததுப பூமியிலேயே வநது வசிப பாாபோல மஙகையாகள் வாழவாாகள எனககொளக (ககஎ)

ஒருங்ககி லாரமாடத துளளுறப புகைததுப் பினனாச
சுருங்கைக டிறபப நீளுந தூநறும புகையி னோடு
மருஙகுறத தவழு நீல மழைகருலம வேறு காடடா
நெருங்கிய மாடங கறபி னேரிழை யவரைக் காடடும.

(இ-ள.) அகிறகட்டையையுஞ் சந்தனக கட்டையையும மாளிகைகளின் உள்ளே புகைபோட்டுபினனாச சாளரஙகளைத திறப்ப, ஒனறாக அதிகரிக்கினற பரிசுததமாகிய நலல புகையினுடன பககஙகளிற் பொருந்தத தவழுகினற மேககூட்டங்

களை வேறாகக்காட்டாத நெருங்கிய மாளிகைகளை கற்பினையுடைய மாதர்கள (செயலைக) காட்டா நிற்கும எ - று

மாளிகைகளிற்றோன்றிய கற்பினையுடைய மாதா பிறமசட்டததற்றுக் கணவ னைக்கலக்குமாறு, மாளிகையிற றோன்றிய புகையானது சாளரவழியாகசசென்று மேகததைககலககும எனக (ககஅ)

மேனிலை மாடத திட்ட விளக்கொடு சுவை மீனறேல
வானிடை யுடுவை வேறு வகுததறி தரவொண் ணாது
கானிவா திலக முணடேற கனனியா நுதலி னோடு
கூனிளந திஙகள வேறு குறிததறி தரவொண் ணாதே.

(இ - ள்.) அசைதலிலலையாயின, மேனிலையையுடைய மாளிகையில் வைத்த தீபததுடன, ஆகாயததிலுலாவும நக்ஷததிரததை வேறாகப பிரிததறிய முடியாது. மாதாகளுடைய நெறறியுடன, வாசமவீசுநதிலகமிருககுமாயினவளைந்த இளசசநதிரனை வேறாகக குறிபபிட்டறிய முடியாது எ - று.

மேனிலைகள நக்ஷததிரமணடல மளாவியும், மஙகையா முகஙகள் பூரண சநதிரனைபபோனறும விளஙகுமெனபது கருதது (ககக)

வதுவைசெய காலை யனபன மருவுமுன றமபாற போகப்
புதுநல நுகாவிந தாரப பூரிதது விட்ட பணபால
விதுவிளக கிரண்டின் முனனும மெய்யவன றிருமுன போலக
கதுமென நாணுக கொளளாா கலவியிற றிளைககு மாதா.

(இ - ள்) கணவன் மணவினை நடததுகையிற் கலததற்கு முனனா, தமமிடத்துள்ள போகமாகிய புதிய சுகததை நுகரசசெயது மிகபபூரிபபுற்ற குணததினால, சநதிரகாநதியுந தீபவொளியுமாகிய இரணடின முனனரும, சூரியசநநிதானததைப போல, போகததிறறிளைதத மாதாகள சிறிதும நாணமடையாாகள. எ - று. (கஉ0)

கலவியிற றிளைககு மாதா கதிாபொழி வதனச செவவி
நிலவினைக காநது வெளவி நிததலு நீஙகு மாறறான
மலாதலை யுலகை மெளள மறுவொடு பயினறு திஙக
ளிலகிய வுருவந தேயவ தீசசுரன சாாபு பெறறும.

(இ - ள) சநதிரனவன், புணாசசியிற களிக்கும மங்கையாகளது கிரணங் களைச் சிநதும முகததின அழகாகிய சநதிரிகையை நாடோறும மறைநது அபகரிததுச செலலுநதன்மையால, சிவபெருமானுடைய சாாபினையடைநதும, பரந்த இடததையு டைய உலகினா இகழுமபடி குறறததுடன சஞசரிதது உருவநதேயாநினறனன. எ-று.

கறறைமென குழலி னாகள கனனிமைப் பருவந தனனிற்
பொறறொடிக கரஙகள கூபபும புநதிபா வகததி னானு
மொறறைநாள வதுவைக காலத துவபபினி தளிதத லானு
மறறவா றானுமற் றிஙக ளாககமும பயினற தனறே.

(இ - ள) தொகுதியாகிய மெல்லிய கூநதலையுடைய மாதர்கள் தமது கன் னிப்பருவததில், பொனனாலாகிய வளையலையணிநத கைகளைக குவிக்கினற புநதி பாவகத்தினாலும், மணககாலததில ஒற்றைததினததிற் சநதோஷததை இனிதாக

கொடுத்தலாலும், சந்திரனானவன் தேயந்த வழியே தேயாமல் வளர்தலையும் பெற்றனன் எ - று.

புந்திபாவகம் - மனத்தினன்மையை வெளிப்படுத்தல். (கஉஉ)

கலவிசெய் காலத் தானுங் கதிர்நகை முறுவ னல்லார்
புலவிசெய் காலத் தானும் பொருக்கெனச் சிந்தக் கோவை
யிலகொளி மணிவீழ்ந் திட்ட விணையடி வருந்தத் தோக்கி
நிலனுற நடப்போர் வீதி நெடுங்கழ லுருட்டாந்து செல்வார்.

(இ - ள்) ஒளிவாய்ந்த முத்துப்போன்ற பற்களையுடைய மங்கையர்கள் புணர்ச்சிசெய்யுங் காலத்திலும், (கணவருடன்) ஊடல்கொள்ளுங் காலத்திலும் விரைந்து சிந்திய கோவைகளிலுள்ள ஒளிவிளங்கும் இரத்தினங்கள் வீழ்ந்து, (கிடத்தலால், நிலமிசை வைத்த இருபாதங்களின் வருத்தத்தையுங் கருதி, பூமியிற் பொருந்த நடப்பவர்கள் வீதிகளில் நெடியகால்களைவீசி நடவார்கள் எ - று.

கோவை - காஞ்சி மேகலைமுதலியன. கழல் தொடர்ந்து - வீரக்கழலணிந்தெனினுமமையும்.

"நெடுங்கழலுருட்டாந்து செல்வார்" எனப்பாடமாயின், (அவையுறுத்தாது) செருப்பணிந்து செல்வார்கள் எனக. (கஉ௩)

ஒருவர்மே லொருவர் வீசு மொள்ளிய வாசச் சுண்ணம்
பெருகிய புழுதி யானும் பேதையர் சிவிறித் தூநீ
ரருவிபாய்ந் தொழுக லானு மள்ளுற்று றடர்பொன் வீதி
மருவிய கழற்கா லார்க்கு வருத்தஞ்செய் தூர்தி யேற்றும்.

(இ - ள்) ஒருவர்மேலொருவர் வீசுகின்ற வொள்ளிய வாசனை தங்கிய சுண்ணப்பொடி பெருகிய புழுதியினாலும், மங்கையர்கள் எறிகின்ற புனிதமாகிய சிவிறிநீராகிய அருவியானது பாய்ந்து செல்லுதலாலும், நெருங்கிய பொன்மயமான வீதியானது சேறுபட்டு, பொருந்திய வீரக்கழலணிந்தவர்களுக்கு (நடக்க) வருத்தத்தையுண்டுசெய்து (அவர்களை) வாகனங்களி லேறச்செய்யும் எ - று.

சிவிறி - நீர்வீசுந் துருத்தி. (கஉச)

குழீஇய செம்பொன் மாடக் குடம்பைவாழ் குருவிக் கூட்டம்
வழுவறு மணியாற் பொன்னால் வனைந்து படுத்த முற்றம்
புழுதிசே றின்மை யாலே பூவைய ராடலுற் சிந்தும்
விழுமிய சுண்ணப் பூழ்தி மிக்குடைந் தாடிச் சேக்கும்.

(இ - ள்) கூட்டமாகிய செம்பொன்னாலாகிய மாளிகைகளிலுள்ள கூடுகளில் வாழுங் குருவித்தொகுதிகள், குற்றமற்ற இரத்தினங்களாலும் பொன்னாலும் வலிய தளவரிசைசெய்த முற்றங்களில் சேறு புழுதி யில்லாமையினால், நாகணவாய்ப் பறவைபோன்ற மாதர்கள் விளையாட்டில் வீழ்த்திய சிறந்த வாசச் சுண்ணமாகிய புழுதியை மிகுதியும் மூழ்கி விளையாடிச் சிவக்கும். எ - று. (கஉ௫)

மகிழ்நர்தம் புணர்ப்பி னின்ப வாரியிற் படியும் பெற்றி
முகிழ்நிதங் கொண்டு வாட்கண் மொழிதரா வியாவு மெய்ப்பி
னெகிழ்ந்த தலைக்கங் கேற்க நிகழ்ந்துகாட் டாது பொற்பூ
ணகிலர் மாத ரவ்வா றெப்பரிந் தகர்ந லார்கள்.

(இ - ள்) கணவருடைய புணர்ச்சிக்காலத்தில் இடைக்கடலிலெழுங்கு தன்மையை, ஒளியகண்கள் கூம்புதலுற்று வெளியிடா உருகியமனத்திற் சேரப உடலில் வெயர்வுண்டாகி விளக்காது (ஆதலால் இத்தகைய) அழகிய ஆபரணமணிந்த முலையையுடைய தேவமாதர்கள் இந்நகரமாதர்களை யெவ்வாறு ஒப்பார்கள் ? எ - று

சுந்தர மகளிர் தங்கள் தொடிக்கையாற் பனிநீர் வாக்கிச்
சந்தன மெருப்பெய் தோம்பத் தவிர்த்தரும் பின்றைத் தென்னுஞ்
சிந்தையின் மகிழ்வான் மன்றல் செய்ப்படு முலைச் செல்வ
மைந்துறு நிறையுள் ளார்பால் வளர்கொடி யாருஞ் சார்வார்.

(இ - ள்) அழகிய பெண்களுடைய வளையலணிந்த கையாற் பனிநீரையொழுக்கிச் சந்தனத்தை யெருவாக விரித்துப் பாதுகாக்க; தவிர்விட்டு அருமைப்படுத்த தென்னும் மனமகிழ்ச்சியினால், முலைச்செடிகள் மணஞ்செய்யப்படும் செல்வ வன்மைபொருந்திய நிறையுள்ளாரிடத்தில் வளர்கின்ற கொடியாருஞ் சார்வார்கள் எ - று.

மைந்துறுசெல்வ நிறையுள்ளார் பால வளர்கொடியாருஞ் சார்வார் - அழியாத செல்வநிலைபெறந்துள்ளவரிடத்து வளர்கின்ற கொடியவர்களுஞ் சேர்வார்கள் நிறையுள்ளார் பால வளர்கொடியாருஞ்சார்வார் - முலைக்கொடியாரிடத்து, வளர்கின்ற கொடிபோலும் மாதர்களும் சேர்வார்கள் இது வேற்றுப்பொருள் வைப்பு (கஉஎ)

அந்தர நெறிக ளாக வவிர்கதிர் முதலாங் கோளு
முந்தொளி நாளு மற்று முற்றெறழி லுஞ் நோக்கி
நந்தன முறுவ திந்த நகரமே துறக்க மன்று
வந்திடு கதியு மந்த வானபொருட் டவற்றுக் கின்றே

(இ - ள்) பிரகாசிக்கின்ற சூரியன் முதலாகிய கிரகங்களும், முற்பட்டொளி செய்யும் (அசுவினிமுதலிய இருபத்தேழு) நக்ஷத்திரங்களும், பிறநக்ஷத்திரங்களும ஆகாயவழியாகப்பொருந்தி, (இந்நகரத்து) அழகை நாடோறும்பார்த்து, நந்தனமாகப் பொருந்தியுள்ளது இந்த நகரமே (அல்லாமல்) சுவர்க்கமன்று அவற்றிற்கிடப்பொழுது (ஆகாயவழியாக) வருநடையும் அந்த அழுதங்காரணமாக (அன்றி, அங்குள்ள அழகு பற்றியன்று) எ - று. (கஉஅ)

தடங்கையி னடங்கும் பூவுந் தனங்களைப் பாய்ந் தளந்த மார்பு
மிடங்கொளுஞ் செல்வ மங்கை யிச்சையா லிருந்து வாழ
வடங்கரு வனப்புச் செய்த வாடக மாடந் தோறுங்
குடங்கையி னகன்ற வாட்கட் கோதையார் விழா வறாதால்.

(இ - ள்) விசாலமான கையில் அடங்கும் மலராகிய கொங்கையும், அக்கொங்கைகள் பாய்ந்து அளவுசெய்த மார்பும், இடமாகக்கொண்டு வாழுந்திருமகள் மன விருப்பின்படி பொருந்திவாழ, அளவில்லாத அழகு படுத்திய பொன்மாளிகைகளிலெல்லாம், உள்ளங்கைபோலும் பரந்த வொள்ளிய கண்களையுடைய மங்கையருடைய மங்கலச் சடங்குகள் நீங்கா எ - று

தடங்கையினடங்கும் பூவுந் தனங்கள்பாய்ந் தளந்த மார்பும் இடங்கொளுஞ் செல்வமங்கை—மார்பா கொங்கையையும், ஆடவர்மார்பையும் இடமாகக்கொண்ட திரு[illegible]னபதாம். (கஉகூ)

ஐந்துமூன் றடுக்கி யிட்ட வமளியிற் றுயிலு றாத
மைந்தர்க ளிலலை யாங்கு மாதரு மனைய ராகு
லெந்தரத் தடங்கு மகொலலோ வெழினகா வளங்க ளங்கு
மந்திர மியற்றிர சென்னை மல்லீசா வாழ்கின் றாரால்.

(இ - ள்) மூன்றடுக்கியிட்ட பஞ்ச சயனத்தில் நித்திரைபுரியாத ஆடவரிலர். அதுபோலவே மங்கையரும் அத்தகையினராயின, அழகிய அசசென்னை நகரவளங்கள் (எடுத்துச் சொலவதற்கு) என்னுடைய தரத்திலடங்குமோ? (அடங்கா) அவ்விடத்தில, சென்னை மல்லீசுரர் திருக்கோயில்கொண்டு வாழாநின்றனர் எ - று.

ஐந்தமளி—இலவமபஞசு, செம்பஞசு, வெண்பஞ்சு, மயிற்றூவி, அன்னத் தூவியெனப்படும. இவை மும்மூன்றிட்டன வெனபார "ஐந்து மூன்றடுக்கியிட்ட வமளி" என்றார். (கஙO)

புண்ணியம புரிந்தோர் வேறாய்ப் புகப்படுஞ் சிவலோ கந்தான்
புண்ணிய வுருவுங் காணப் போந்திருந் தனைய தாகு
மண்ணலா லயமவ வாறே யடுத்தனை குந்தந் தானு
நண்ணிய தனைய தாகு நாரணன கோயி லாங்கே.

(இ - ள்.) சென்னை மல்லீசுரரது திருக்கோயிலானது சிவபுண்ணியங்களைச் செய்தவர்கள் வேறாகப் புகப்படுகின்ற சிவலோகமானது, புணணிய வடிவத்தையுங் காணும்படி வந்திருந்ததையொக்கும அவ்வண்ணமே சென்னைகேசவர் திருக்கோயில் அங்கு வைகுந்தமும வந்திருந்ததையொக்கும். எ - று. (கஙக)

சென்னைமல் லீசர் சென்னை கேசவ ரிவரை யப்ப
னன்னையென றறிந்து பத்தி யாறபணி புரிகின் றாரு
முன்னுறப் பணிகின் றாரு முறைமுறை துதிக்கின் றாரு
மினனராய் வாழ்த லுற்றா ரிருநில மாந்த ரெல்லாம.

(இ - ள.) சென்னை மலலீசுரர் - சென்னைகேசவர் ஆகிய இவர்களை,(முறையே) தந்தைதாயரென்று தெரிந்து பத்தியோடு பணிவிடைசெயவோரும, திருமுன்னர்ப் பொருந்த வணங்குவோரும, முறை முறையாகத தோத்திரஞ்செயவோரும் (ஆகிய) இத்தன்மையராய, பெரிய வுலகிலுள்ள மானுடரயாவரும வாழ்வாராயினர் எ - று

அத்தகு கோயிற பாங்க ரவிர்மணிக் கோயில கொண்டு
சித்திபுத் திகளா வேட டோர்தஞ் சோகுந்தன் னருளே தனபாற
சித்திபுத் திகளாய் வைகத திகழ்பிர சனன வைங்கை
யுத்தம னிருந்தான் மூமமை யுலகமும போற்றி யுய்ய.

(இ - ள) அந்தத் தகுதியாகிய (சென்னைமலலீசுரர் சென்னைகேசவர்) திருக்கோயிலின (தென) பக்கலில, பிரகாசிக்கின்ற அழகிய திருக்கோயிலை யிடமாகக் கொண்டு, விரும்பினவர்களுக்குச் சித்திபுத்திகளை யளிக்குந் தமது திருவருளே தம் பக்கலிற் சித்திபுத்தி தேவிகளாய வீற்றிருக்க விளங்குகின்ற ஐந்து திருக்கரங்களை யுடைய உத்தமராகிய பிரசனன விநாயகக்கடவுள மூவுலகமுந் துதித்துப் பிழைக்கும் படி எழுந்தருளியிருக்கினறனர் எ - று.

பிரசன்னவிநாயகர் திருக்கோயில், சென்னைமல்லீசுரர் சென்னைகேசவர் திருக்கோயிலின் றென்பக்கலில், திருமதிலுக்கு நான்கு கஜதூரத்தில் தக்ஷிணமுக மாக விளங்காநிற்கும். (கநங)

வேறு

ஈங்காவத் திருந்தருளும் பிரசன்ன விநாயகர்தா மிறைஞ்சு மன்பர்க்
காங்காங்கு வரங்கொடுத்து விளையாடுங் கதைமுழுது மகிலந் தேரப்
பாங்கான வடமொழியிற் றொடைசெய்த பிருகுமுனி பரமற் போற்றி
நீங்காம னெடுங்கால மிருந்துமகிழ்ந் ததுமிந்த நிகரில் வைப்பாம்.

(இ - ள்) இவ்விதமாக அன்புகொண் டெழுந்தருளியிருக்கும் பிரசன்ன விநாயகப்பெருமான் தம்மை வணங்கும் அடியவர்கட்கு (அவர்கள் விரும்பிய) அவ்வவ் வகையே வரங்களை யளித்துத் திருவிளையாடல்க ளியற்றுஞ் சரிதமுழுவதையும் உல கின் ருணரும்படி, அழகான ஆரியபாடையிற் சுலோகரூபமாகச்செய்த பிருகு முனிவர், அவ்விநாயகக் கடவுளைத் துதித்து நெடுங்காலம் பிரியாதிருந்து களித்ததும் இந்தச் சமானமில்லாத இடமேயாம் எ - று. (கநச)

மாதாமணி முலைச்சுவடு மளைத்தழும்பு மினிதணிந்து மாவின் மூலத்
தேதமுயிர்த் தொகைக்ககற்ற விருந்தருளு மேகம்ப ரெதிரே வைகி
மாதவமுற் றியற்கும்ப மாதவனற் றமிழ்விரித்து வழங்குங் காஞ்சிக் [ம.
கோதியிடுங் குணக்கெல்லை யாய்ச்சிறந்து வாழ்வதுமிவ் வுரைத்த வைப்பா

(இ - ள்) (காமாட்சி யம்மையாருடைய) அழகிய முத்தாரமணிந்த முலையின் சுவடும், வளையின் தழும்பும் இனிதாகத் (தமது திருமேனியில்) தாங்கி, ஒப்பற்ற மாமரத்தின்கீழே பிராணகோடிகளுக்குத் துன்பங்களையகற்ற எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரேசுரர் திருமுன்னே வசித்திருந்து பெருந்தவஞ் செய்துமுடித்த பெருந்தவசி யாகிய அகத்தியமுனிவர் நல்ல தமிழ்ப்பாஷையைப்பரவச்செய்துவழங்கச்செய்தகாஞ்சி நகரத்திற்குச் சொல்லுகின்ற கிழக்கெல்லையாய்ச் சிறப்புற்று விளங்குவதுங் கூறிய இந்த இடமேயாம் எ - று.

ஏகாம்பநாதர் உமாதேவின் முலைச்சுவடும் வளைத்தழும்புமணிந்ததை,

காஞ்சிப்புராணம்.

"மணிமுலைக்குவட்டி னோடுவளைக்கையா னெருக்கிப்புல்லித்
தணிவருங்காதல்விம்மக் காதலித்தழுவலோடுந்
திணியிருளறுக்குஞ்சோதித் திருவுருக்குழைந்துகாட்டி
யணிவளைத்தழும்பி னோடுமுலைச்சுவடணிந்தாரையர்."—என்பதனாலும்,

அகத்திய முனிவர் காஞ்சியிலிருந்து தமிழ் விரித்ததை,

காஞ்சிப்புராணம்.

'காசியி னின்றும் போந்து கம்பர்தா மருளப் பெற்று
மாசிலாக் கச்சி மூதூர் மன்னிவீற் றிருந்து பூமே
லாசிலாத் தமிழ்ப ரப்பி யருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசினன் மலய வெற்பிற் குறுமுனி திருத்தாள் போற்றி."—என்பதனு
லுணர்க. (கநரு)

இயம்புமிரு தொடர்பானு மீங்கிருந்த பிரசன்ன விறைவர் நல்கு [ள
நயம்புணரி னருளானு நவையறுக்கும் வடமொழியு னடைபெற் றுள
வயம்புணரும் பார்க்கவத்தைச் செந்தமிழாற் புனைந்திந்த வள்ளறுணை மேற்
பயம்புணரா வையகம்போற் றச்சாத்தி டினைறவினையைப் பாற்றி னேனே.

(இ - ள்) சொல்லிய இவ்விரு சம்பந்தங்களாலும், இச்சென்னை நகரத்தி லெழுந்தருளிய பிரசன்ன விநாயகப்பெருமான் அருளிய நன்மைபொருந்திய இனிய திருவருளாலும், குற்றத்தை யொழிக்கும் வடமொழியில் நடைபெற்றுள்ள வெற்றி பொருந்திய பார்க்கவபுராணத்தைச் செந்தமிழ்ச் செய்யுள்களாற் செய்து, இந்தப் பெருமானுடைய திருவடியில், கடல்சூழ்ந்த உலகினர் துதிக்கும்படி, வினையை யொழிக்க நின்றவனாகிய அடியேன் சொல்லத் தொடங்கினேன் எ - று (௧௫௫)

திருநகரப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௧௧.

---

# நைமிசப்படலம்.

திருத்தகு மாயன் வேதன் சிவபிரான் மூவ ரோடு
விருத்திர னுவி யுண்டோன் விண்ணவர் பலரு மேவி
யிருத்தலின் முனிவர் வேள்வி யிலங்குநை மிசமாங் கான
முருத்தகு மேரு வொக்கு முருவமாத் திரமே வேறு.

(இ - ள்.) திருமால் - பிரமன் - சிவபெருமான் (ஆகிய) மூவர்களுடன், விருத்திராசுரனுயிரைப்பருகிய இந்திரனும், பலதேவர்களும் பொருந்கியிருத்தலின், முனிவர்கள் வேள்விவிளங்கும் நைமிசமாகிய கானமானது அழகமைந்த மேருமலையை நிகர்க்கும் (ஆயினும்) உருவமட்டுமே வேறு (ஆகத்தோன்றும்) எ - று.

கந்தபுராணம் - அண்டகோசப்படலம்

"மேருவரை யதற்குநடுப் பிரமன் மூதூர்
மிக்கமனோ வதியதற்கு மேலைத்திக்கில்
நாரணன்வாழ் வைகுந்தம் வடகீழ்த் திக்கி
னுதன்மா சோதிடக்ந் திசைக டோறு
மேரியவிந் திரன்முதலா மெண்மா தேயம்" என்றபடி, மேருமலையில் திரிமூர்த்திகள் இந்திராதி இமையவர்கள் யாவரும் வசிப்பார்போல, நைமிசத்திலும் அவிவேட்டு வசிக்கின்றனராதலின் "நைமிசமாங்கானம் மேருவொக்கும்" என்றும், நைமிசங் கானமாதலானும், மேரு மலையாதலானும் அவை தம்முள் உருவேறுபடுதலின் "உருவமாத்திரமே வேறு" என்றுங்கூறினார் (௧)

ஒருத்தனு விடத்தே சால விருப்பிறப் பெய்தி முத்தீ
மருவினான் மறையு மோம்பி வளருமைம் பொறியும் வாட்டித்
திருவளர் செயலக் காறுஞ் செய்தெழு பிறப்பு மோட்டிப்
பொருவிலட் டாங்க யோகம் பூண்டபுங் கவராங் குள்ளார்

(இ - ள்) ஒரு தேகத்திலேயே மிக்க இருபிறப்பையடைந்து, முத்தீக்களைப் பொருந்தி, நான்குவேதங்களையுங்கற்று, (விஷயங்களில்) வளாகின்ற ஐம்பொறிகளையும் அடக்கி, செல்வமிக்க அறுதொழில்களையுஞ்செய்து, எழுபிறவிகளையும் விலக்கி, ஒப்பில்லாத அட்டாங்கயோகத்தை மேற்கொண்ட வேதியர்கள் அந்நைமிசவனத்தில் வாழ்கின்றார்கள். எ - று.

தனு=உடம்பு இருபிறப்பெய்தல்=உபநயனகிரியை முடித்தல்; இது இயற்கைக்கண்ணுடன் தத்துவஞானச்சியை யடையக்கூடிய ஞானக்கண் பெறுமாறுசெய்யுங்கிரியை யெனப்பொருள்படும் பிறப்பாற் சூத்திரரும், சடங்காற் பிராமணருமாதலின், அவரை இருபிறப்பாளரென்றும், துவிசரென்றுங் கூறுவதுவழக்கு [இப்பெயர் க்ஷத்திரிய வைசியர்கட்கு முண்டு]

முத்தீ—காருகபத்தியம் - ஆகவநீயம் - தக்கணாக்கினி

நான்மறை—இருக்கு - யசுர் - சாமம் - அதாவணம்.

ஐம்பொறி—மெய் - வாய் - கண் - மூக்கு - செவி.

அறுதொழில்—ஓதல் - ஓதுவித்தல் - வேட்டல் - வேட்பித்தல் - ஈதல் - ஏற்றல்.

எழுபிறப்பு—தேவர் - மக்கள் - விலங்கு - புள் - ஊர்வன - நீர்வாழ்வன-தாவரம்

அட்டாங்கயோகம்— இயமம் - நியமம் - ஆதனம் - பிராணாயாமம் - பிரத்தியாகாரம் - தாரணை - தியானம் - சமாதி. (௨)

மணிமுடி யமரர் தாழ வளர்சடை மௌலி தாங்கி
யணிசெய்கற் பகமுஞ் சூழ வரையில்வற் கலைகள் சூழ்ந்து
பிணிசெயும் வினைக ணீறப் பிறங்கொளி நீறு பூசித்
துணியருட் கண்ண ராகத் துலங்குகண் மணிகள் பூண்டார்.

(இ - ள்) இரத்தின கிரீடமணிந்த தேவர்கள் வணங்கும்படி, வளர்கின்ற சடைமுடி தரித்து, அழகுசெய்கின்ற கற்பகமுஞ் சூழும்படி அரையில் மரவுரியுடுத்து, துன்பஞ் செய்யும் வினைகள் நீறும்படி ஒளிவிளங்குந் திருவெண்ணீற்றினை யுத்தூளனஞ்செய்து, துணிந்த கிருபா நோக்குடையவர்களாக விளங்குகின்ற வுருத்திராக்க மணிகளைத் தரித்தார்கள் எ - று (௩)

வேறு

செந்தீ வளர்க்கும் பெருஞ்சிறப்பாற் றேவர்க் கவியும் புவியுயிர்க
ணந்தா தளிக்கு மழைவளமு நாளு முனிவர் கொடுத்தலினுப்
சிந்தா குலமவிட் டலைகடலிற் சிறந்த பகலு மிரவேபோ
லந்தா மரைக்கண் வளர்கின்று னகிலம் புரக்கு மச்சுதனே.

(இ - ள்) செவ்விய யாகாக்கினியை வளர்க்கின்ற பெரிய சிறப்பினுலே, தேவர்கட்கு அவிப்பாகமும், உலகிலுள்ள ஆன்மாக்களை அழியாது காக்கும் மழைவளப்பமுந் தினந்தோறும் அம்முனிவர்கள் கொடுத்துள்ளதினுலே, உலகினைக் காக்குந் திருமால் மனக்கவலையின்றி அலைகள் பொருந்திய திருப்பாற்கடலில் இரவைப்போலவே நடுப்பகலிலுந் தன்னுடைய அழகிய தாமரை மலர்போலுங் கண்களை (குவித்து) அறிதுயில்புரிகின்றனன். எ - று

திருமால் உலகுக்குத் திதிக்கடவுளாயினும், நைமிசமுனிவரால் உலகிற்குக் குறைவில்லாது சுகமுண்டாயிருத்தல் கருதி, நித்திரைக்குரிய இரவுபோலவே பகலிலும் [illegible]கின்றனனென்பது கருத்து. (௪)

அவிகண் மிகவு மார்தலி னமலன் விளையாட் டயர்கின்றான்
புவியுண் டவன்கண் வளர்கின்றான் பூவன் மறைக ளுவல்கின்றான்
சவியின் னவர்கோ னவுணருயிர் தாக்கப் போர்க்கு நடக்கின்றான்
குவிபொற் சிகரக் கூவிரத்தேர்க் கோமான் முதலோர் திரிகின்றார்.

(இ - ள்) அவியுணவுகள் மிகவும் புசித்தலால், நிமலனாகிய சிவபெருமான் (ஆனந்தத்) திருக்கூத்தாடுகின்றான். உலகமுண்ட திருமால் (யோக) நித்திரை புரிகின்றான். தாமரைப்பூவிலுள்ள பிரமன் வேதங்களை யோதுகின்றான். அழகிய தேவராசனாகிய இந்திரன் அசுரருயிரைச் செகுக்கும்படி யுத்தத்திற்குச் செல்கின்றான். குவிந்த பொன்னாலாகிய சிகரமுங் கூவிரமும் வாய்ந்த தேரையுடைய சூரியன் முதலியோர் (உலாவித்) திரிகின்றார்கள். எ - று.

கூவிரம் - கொடி. (௫)

படுக்கும் பசுக்க ளொருபாலாம் பரிந்து சுரக்கும் பால்கறந்து
விடுக்கும் பசுக்க ளொருபாலாம் வேள்வி முடித்த மறையோர்க்குக்
கொடுக்கும் பசுக்க ளொருபாலாங் கோல மகளிர் மன்றலுக்குத்
தொடுக்கும் பசுக்க ளொருபாலாந் தூய முனிவ ரிடந்தோறும்.

(இ - ள்) புனிதமாகிய முனிவர் வாசங்களிலெல்லாம், ஒருபக்கலில் அகப்படுத்தும் பசுக்களாம் ஒருபக்கலில் (மனம்) பரிந்து சுரக்கின்ற பாலைக் கறந்து விடுகின்ற பசுக்களாம் ஒருபக்கலில் யாகமுடித்த வேதியருக்குத் தானமளிக்கும் பசுக்களாம் ஒருபக்கலில் அழகிய மகளிர் மணத்திற்குச் செலுத்தும் பசுக்களாம் எ - று. (௬)

மறையோ துநரு மாகமத்தின் வழிதேர் குநரு மங்கத்தின்
றுறைநா டுநருங் கற்பத்திற் றொகுத்த வினையிற் சாருநரு
முறையாற் புராண மூவாறு மொழிசெய் குநருங் கேட்குநருங்
குறையா வேள்வி முடிக்குநருங் குழீஇய குழூஉவெவ் விடனும்.

(இ - ள்) வேதபாராயணஞ் செய்பவரும், ஆகமார்த்தத்தை யாராய்பவரும், வேதாங்கத்தின் துறைகளை யுணர்பவரும், கற்பசூத்திரத்திற்குரிய செயல்களிற் செல்பவரும், பதினெண்புராணங்களையும் முறைப்படி பிரசங்கிப்பவரும், (அவற்றைச்) சிரவணஞ் செய்பவரும், குறையாத யாகத்தை முடிப்பவரும் (ஆகிய) கூடிய கூட்டங்களே எவ்விடத்திலும் (விளங்கும்) எ - று. (௭)

மதவேள் குடங்கைக் கணையான வழுக்கால் வழுக்கின் முனம்வீழ்ந்தா
மிதவே புரியு முனிவரிடமெய்தி னன்மையுஞ் சிவபெருமான்
பதமே விடுவெ னெனக்குறித்துப் பனிநீர்த் தடந்தோ றுற்பலமுஞ்
சதவா யிரமெல் லிதழ்விரிந்த தண்டா மரையுந் ததையுமே.

(இ - ள்) மன்மதனுடைய குடம்போன்ற கைக்கணையான குற்றத்தால் முன்னாக குற்றத்திற் படிந்தாம். நன்மையையேசெய்யும் முனிவர்கள்பால் அடைந்தால் (இனி) நன்மையுஞ் சிவபெருமானுடைய திருவடியின்பேரில் அணிவாகவென்று யோசித்து, குளிர்ந்த நீர் நிறைந்த தடாகங்களிலெல்லாம், உற்பலமலர்களும், நூறும் ஆயிரமுமாகிய மெல்லிய இதழ்கள் விரிந்த தண்ணிய தாமரை மலர்களும் நெருங்கியிருக்கும் எ - று. (௮)

கிழங்கு கனிகாய் மதுமலர்கள் கெழுத்த தளிர்மெல் லிலைசமிதை
வழங்கி முனிவர் குவப்பாக்கு மாசி லாத பெருந்தவத்தாற்
பழங்கண் சிறிது மறியாமற் படர்ந்த கிளைக ளுடனான்று
தழங்கு புகழ்நை மிசவனத்துத் தருவுங் கொடியும் பலவுமே.

(இ - ள்) குற்றமில்லாத பெரிய தவத்தால், துன்பமென்பதைச் சிறிது மறியாமல், படர்ந்த தமது சுற்றத்துடனே நெருங்கிய புகழ் விளங்கும் நைமிசாரணியத்தில் மரங்களும்கொடிகளும் (செடிகள் முதலிய) பலவும், கிழங்கு கனி காய் தேன் மலர்கள் நிறைந்தங்கிய தளிர்கள் மெல்லிய இலைகள் சமிதைகள் (முதலிய வற்றை) கொடுத்து, முனிவர்களுக்குச் சந்தோஷத்தை யுண்டு செய்யும் எ - று (௯)

தரங்கக் கடலிற் புத்தமுதந் தவள மதியிற் சுவையமுதும்
புரங்கள் கடந்த புண்ணியனாற் புசிக்கு மமரர்க் கவியுணவு
மிரங்கி யவனே கொடுப்பினல்லா லியார்வர் கொடுப்பா ரவனுருவாய்
வரங்கொ ளழன்மா தவர்கொடுப்ப வாங்கிச் சுரர்க்கு வழங்குமே.

(இ - ள்) அலைகள்பொருந்திய திருப்பாற்கடலிற்றோன்றிய புதிய அமுதத்தை யும், வெள்ளிய சந்திரனிடத்திற்றோன்றிய சுவையமைந்த அமுதத்தையும், திரிபுரங் களையெரித்த சிவபெருமானாற் புசிக்குந் தேவர்களுக்கு அவியாகிய உணவையும் அவ் விறைவனே மனமிரங்கிக் கொடுத்தாலல்லாமல் (வேறே) எவர் கொடுக்கவல்லவர்? (ஒருவருமிலர் ஆதலின்) சிறந்தயாகாக்கினியானது முனிவர்கள்கொடுப்ப வாங்கி, அவ்விறைவனுருவாய் நின்று தேவர்கட்குக் கொடுக்கும் எ - று (க0)

தவத்தால் வேள்வி யாற்றுதலாற் றுங்கண் மிகவு முடலவருந்தி
யவத்தா லுலக மனைத்தினையு மழியா தளிக்கு முனிவரர்கள்
சிவத்தான் மலமற் றுயர்வீட்டிற் சேர்ந்து வாழ்வ தலதுவந்
துவத்தான் மயங்கு மமரர்பதி துன்ன நினையா ரொருகாலும்.

(இ - ள்) தவத்தாலும் யாகஞ்செய்வதாலும் தாங்கள் மிகுதியும் உடலவருந்தி, அவமார்க்கத்தினால் உலகமுழுவதையும் அழியவொட்டாமற் காக்கும் முனிவர்கள் சிவத்தினால் மலபந்தமற்று உயர்வாகிய மோக்ஷத்திற் கலந்து வாழ்வதல்லது, த்வந் த்வத்தால் மயக்குறுந் தேவர்களுடைய பதவியையடைய ஒரு பொழுதுங் கருதமாட் டார்கள். எ - று

த்வந்த்வம் - ஒன்றற்கொன்று தொடர்ந்திருப்பது, பாசபந்தம். (கக)

பொற்றா மரையோன் மனத்தெழுந்து போந்தோர் நேமி தவம்புரிய
நற்றா ரணிவே றின்றெனவே நாட்டி யமர்ந்த நைமிசத்து
வற்றா வளமும் பெருமையுமார் வகுப்பா ரந்த வனத்திருந்து
முற்றா விழைவிற் சவுனகமா முனிவன் வேள்வி தொடங்கினனே.

(இ - ள்) அழகிய தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனுடைய மனத்திற் றோன்றித் தவஞ்செய்தற்கு நல்லபூமி (இதுவேயன்றி) வேறில்லையென்று ஒப்பற்ற சக்கரமானது நிலைநாட்டிப் பொருந்திய நைமிசவனத்தின் குறையாத வளப்பத்தை யுஞ் சிறப்பையும் சொல்லவல்லவரெவர்? அந்த வனத்திலிருந்து பெரு விருப்பாற் பெருமைதங்கிய சௌனகமுனிவன் யாகஞ்செய்யத் தொடங்கினன் எ - று

நைமிசம் - நேமிசம்பந்தம இது சௌனகராதி முனிவர்கள் பிரமனைத் நோக்கித தவஞ்செய்தற்குரிய புண்ணியபூமி யொனறனையெங்கட்கு வரையறுகக வேணடுமென வினவ, பிரமன் தருப்பையை வளைததோா சககரமாக்கி நிலமிசையுருட்டி, இதுவீழுமிடமே புண்ணிய பூமியெனவிடுப்ப, அவாகள அதனைப் பினறொடர்ந்து சென்றனா. அது தஙகியவிடமே நைமிசவன மெனப்படும. (கஉ)

வேறு

வெண்டிரு நீறறினா விளங்கு கண்டிகை
கொண்டொளி ருரததினா குடங்கைக குண்டிகைத
தணடின ரனைவருஞ சாாநது நைமிச
மணடினா சவுனகன மகததைக காணவே.

(இ - ள) திருவெணணீற்றினை யணிநதவாகளும, பிரகாசிக்கின்ற உருத்திராகக கணடிகையணிநது விளங்கு மாாபினையுடையவாகளும, குடம்போன்ற கையிற கமணடலமும தணடமுந தாஙகினவாகளும (ஆகிய) எலலோரும, நைமிசவனததை யடைநது சவுனகமுனிவன் யாகததைககாண நெருஙகினாாகள். எ - று (கங)

ஏதநீற றிடுமபதி னெண்பு ராணமுங
காதலா னுணாநதவன கால காலனறன
பாதமே யலலது பணித ராதவன
சூதமா முனிவனுந துனனி னனரோ.

(இ - ள) குறறததையொழிககும பதினெணபுராணஙகளையும் ஆசையுடன் அறிந்தவனும, காலகாலனாகிய சிவபெருமானுடைய திருவடியையனறி (பிறிதொனறை) வணஙகாதவனுமாகிய சிறநதசூதமுனிவனும(அவவிடததை)அடைநதனன எ-று.

காலகாலன் - சிவபெருமான் மிருகணடு புததிரராகிய மாாககணடேயருயிரைககவர வந்த மிருதயுவினுடைய உயிரைக கவாநதவனெனறது பொருள. (கச)

சயமலி நைமிசஞ சாாநது ளாாகளு
மயனிலத திருநதுசென றடுதது ளாாகளும
புயலெதிா மயிலெனப பொஙகு மோகையி
னயமொழி முனியெதிா நணணிச சூழ்நதனா.

(இ - ள.) கூட்டமிகுநத நைமிசவனததை யடைநதுளளவாகளும, பிறவிடஙகளிலிருநது வநது (அஙகே) சோநதுளளவாகளும, மேகததைக்கணட மயிலைபபோல அதிகரிககினற ஆசையுடன நலல சொறகளையுடைய சூதமுனிவனை எதிாகொணடு சென்று புடைசூழ்நதாாகள. எ - று. (கரு)

திருததிய வாதனச சேககை மீமிசை
யிருததினா பூசனை யியறறிக காதையி
னருததிமிக கவனிருந தயாவு மிாததபின
கருததுறு விழைவினுற கனாதன மேயினா.

(இ - ள்) திருததமாகிய ஆதனத்திட்ட மெத்தையின்மேரில் (சூதமுனிவனை) இருககச்செயது பூசிதது, சிவசரிததிரஙகளில் ஆசைமிகுநத அம்முனிவனிருந்து

இளைப்பாறிய பின்னர், மனத்திற்றோன்றிய ஆசையால் (அவனோடு பேசுகிற) கூறத் தொடங்கினார்கள். எ - று.

இருத்தினர் - முற்றெச்சம். (௧௬)

பண்டுறு பவந்தொறும் பண்ணி யுற்றிய
மண்டுபுண் ணியத்தினால் வரம்பின் மாதவ
அண்டரும் வியத்தகு மடிக ளும்மையாங்
கண்டனங் கடந்தனங் கலந்த மாயையே

(இ - ள்) எல்லையில்லாத பெருந்தவத்தையுடைய சூதமுனிவரே! தேவர்களும் வியப்புறுகின்ற சுவாமிகளே! அடியேங்கள் கீழ்ப்போன பிறவிகளிற்செய்து முடித்த மிக்க புண்ணியத்தினாலே, தேவரீரைத் தரிசித்தோம் மாயாசம்பந்தத்தைக் கடந்தோம். எ - று (௧௭)

வேறு

ஓதிய மறைகட் டமா றாறுபய னெளிது பெற்றும்
நீதியின் யாங்க ணிற்கு நிலைகளும் வழுவிற் றீர்ந்த
மோதிய வினைய ராகிப் பிதிரரு முய்ந்த ரானார்
காதியைம் பொறிவென் றுயைக் கண்ணுறக் காண்ட லாலே.

(இ - ள்) ஐம்பொறிகளையுங் கோபித்துச் சயித்த தேவரீரைக் கண்களாற் பொருந்தக் கண்டதனாலே, பாராயணஞ்செய்த வேதத்தாலுள்ளதாய பலனை யெளிதாகப் பெற்றோம் நீதியுடன் அடியேங்களிருக்கும் (வருணாசிரம) நிலைகளுங் குற்றத்தினின்று நீங்கின. எம்முடைய பிதிரரும் வினையையொழித்தவராகி யுய்ந்தரானார்கள் எ - று.

மோதிய வினையர் - வடநூன்முடிபு (௧௮)

எந்தமைப் பயந்த பேறு மிருமுது குரவர் பெற்றார்
வெந்துயர் விளைக்கு மாய வினையுடல் விடுத்து மண்மேல்
வந்திடு பயனும் யாங்க ணருவினம் பெறும்பே றெல்லா
மைந்துற வுடையோம் யாமே மனனுமா தவர்க ளேறே

(இ - ள்) நிலைபெற்ற பெருந்தவசிகளில் ஆண்சிங்கம் போன்றவரே! எம்மைப் (புதல்வராகப்) பெற்றதனாலாகிய பலனையும் எமது தாயதந்தையர் பெற்றனர் கொடிய துன்பத்தை விளைக்கும் மாயமாகிய வினைத்தேகத்தை யொழித்துப் பூமியிற் பிறந்த பயனும் யாங்களடைந்தோம் பெறத்தக்க பேறுகளையெல்லாம் மிகுதியாக வுடையோம் (ஆயினோம்) எ - று (௧௯)

எங்களுக் கும்மைப் போல விராறுட னாறு கூட்டித்
தங்கிய புராண முற்றுஞ் சாற்றவல் லவர்கள் யாவ
ரங்கவை யனைத்து முன்ன ரருளினு லருளிச் செய்தீர்
புங்கவ ரேறே வேறு புராணமுங் கூறல் வேண்டும்

(இ - ள்) வேதிய சிரேஷ்டரே! எங்களுக்குப் பதினெண் புராணங்களையுந் தேவரீரைப்போலச்சொல்ல வல்லவர்கள் யாவர்? அப்புராணங்களையெல்லாம் முன்னாகத் தேவரீரது கிருபையினால் திருவாய்மலர்ந்தருளினீர் (அவையேயன்றி) வேறு புராணமுஞ்சொல்லவேண்டும். எ - று.

இராறுடனாறு - பதினெட்டு (௨௦)

தவவலிச சவுன கனசெய் சததிர வேளவிக கோது
மவதியின பன்னீ ராணடு மடிகளபாற புராணக கேள்வி
யுவகையி னமுத மாநதி யுறுசுகம பெறுவ தன்றிக
கவாமனத தடியேஞ செய்யுங கடபபாடு வேறொன றிலலை.

(இ - ள்.) தவவனமையுடைய சவுனகமுனிவன் செயயுஞ சததிரயாகத திற்குச சொலலிய காலமாகிய பனனிருவருடங்களும, தேவரீரிடததிற புராணசிர வணமாகிய களிப்புடனகூடிய அமுததததைபபருகிப பொருநதிய சுகததையடைவதல லாது, பிளவுபட்ட மனததையுடைய அடியேஙகள செய்யுங கடமை பிறிதொனறு மிலது. எ - று. (உக)

பததியி னிவவா றெலலாம பகாநதமா தவரை நோககி
முததியை விழைநத சூத முனிவரன மகிழ்நது சொலவான
விததினை விததி யலலால விளைபயன கொளவா யாவா
பொததிய விறைவன மாணபும புகனறிடா புரையி னீஙகார.

(இ - ள) இவ்வகையாக வெல்லாமபததியுடனகூறிய முனிவாகளைபபார்தது, முததி மாககததைக் காமுற்ற முனிசிரேட்டனாகிய சூதன களிப்புறறுச சொலலத தொடஙகினன். விதையை விதைததலலாமல விளைபொருளைககொளளததககவா எவா? (அதுபோல) மலசம்பநததததினினறும நீஙகாதவாகள் (அருள) நிறைநத இறைவன புகழையுஞ (சொலவாரகளோ?) சொலலாாகள, எ - று (உஉ)

நடுநிலை பிழைதத லினறி நண்ணறி வுடைய ராகிக
கொடுவினை பலவு நீககிக கொழுநதெழு மனப ராகிப
படுமனத துறுதி யோடு பண்பினா கேடகப புககால
விடுவது புரியா தெநத விததையும விளமப வேணடும.

(இ - ள) நடுநிலை தவறுதலிலலாது, பொருநதிய அறிவினை யுடையவாகளாகி, கொடியவினைச சமயநதஙக ளெலலா வறறையு மொழிதது, கொழுநதுவிட்டெழுநத அனபுடையவாகளாய, மனததிலுணடாகிய (பதது) வலியுடன குணததினை யுடையோா கேடகபபுகுநதால, எவவகையையும விடாது சொலலவேணடும. எ - று

குலததிழுக கினறிப புததி கூாமையி னிகாபபா ரினறி
நலததகு தவநதா னஙக ளொடொறு மினிது போறறி
யலததக மணிநத பாதத் தமபிகை பாகா பததிக
கலததினை யிவாநதீா கேளவிக கடலகட வாமை யுண்டோ.

(இ - ள) குலபபழுதிலலாமல, புததி நுடபததில (தமமை) ஒபபாரிலலாமல, நன்மைபொருநதிய தவமுந தானமுந தினநதோறும இனிதாகக காதது, செமபஞசுக குழமபூட்டிய பாததததையுடைய உமாதேவியாைப் பாகமாகக கொணட பரமேசசுரருடைய பததியாகிய மரககலததினை யூாநதவாகளே! கேள்விககடலைக கடவாமை (உஙகளுககும) உணடோ? எ - று. (உச)

பகைநகை நொதும லினறிப பலலுயிா மாடடு மொதத
தகைபெறு முளததி னாக டாமவிழை காரியங்கள
மிகைபடாந துலகுக கெலலாம விழுபபயன பயநதே நிற்கும
வகையறி முனிவி ரீயி னலமிகு மதிததிட லாால.

(இ - ள்) பகையும், நட்பும், நொதுமலுமில்லாது, எல்லா வுயிர்களிடத்தும் ஒப்புமையுடைய மனம்வகித்தவர்கள் விரும்பிய செயல்கள் அதிகமாக விருத்தியாகி உயிர்கட்கெல்லாம் பெரும்பயனைக் கொடுத்தே நிற்கும் வகையை யுணர்ந்த முனிவர்களே! நீங்கள் நலவிடயத்தையே பொருளாக மதித்தீர்கள். எ - று.

நொதுமல் - பகைநட்புகளின்மை. (உரு)

கரும்புதின் பார்க்குக் கூலி கையிடைக் கொடுப்பார் போல
விரும்பிய வெமக்கு மேலும் விழைவினை விளைத்தீர் நும்பா
லரும்பிய காதன் முற்ற வறைத்து மென்று முன்னாப்
பெரும்பய னளிப்பத் தோர்ந்து பேசுவா னிதனைச் சொன்னான்.

(இ - ள்) கரும்பைத் தின்பவர்கட்குக் கூலியைக் கையிற் கொடுப்பவரை யொப்ப (புராணங்களைப் பிறர்க்குக்கூற) விருப்புற்ற வெமக்கு மிகுதியும் ஆசையை விளையச்செய்தீர்கள் உம்மிடத்துண்டாகிய ஆசையால் முழுவதுஞ் சொல்லுகின்றே னென்று, பெரும்பயனைக் கொடுப்பது கருதிக் கூறுகின்ற சூதமுனிவன் முதலில் இவ்வாறு சொல்லலாயினன் எ - று. (உசு)

நைமிசப்படலம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம் - ஙஙஎ

# புராணவரலாற்றுப்படலம்.

பகர்பிரமம் பதுமம்வயி ணவமே சைவம் பாகவதம் பவுடிகநா ரத
மார்க் கண்டந், திகழ்ந்தபண் ணவர்க்குரிய வாக்கி நேயஞ் செறிபிரம
கைவர்த்த மிலிங்கம் யார்க்கு, மகிழ்வுபுரி வராகமே காந்த மோடு வாம
னமே கூர்மமச் சியங்கா ருடம், புகரில்பிர மாண்டமெனு மிவைமூ வா
றும் புகல்கிரந்த நாலிலக்கம் புகலக் கேட்டீர்.

(இ - ள்) சொல்லுகின்ற பிரமம் - பதுமம் - வயிணவம் - சைவம் - பாகவதம்-பவுடிகம்-நாரதம்-மார்க்கண்டேயம் - விளங்கிய தேவர்களுக்குரிய ஆக்கிநேயம்-(புகழ்) நெருங்கிய பிரமகைவர்த்தம் - இலிங்கம் - எல்லார்க்குங் களிசெய்யும் வராகம், காந்தம் - வாமனம் - கூர்மம்-மச்சம் - காருடம் - குற்றமில்லாத பிரமாண்டம் என்று சொல்லப்பட்ட இவை பதினெட்டு புராணங்களும் சொல்லுகின்ற கிரந்தத்தொகை நாலிலக்கமாய் சொல்லக்கேட்டீர்கள்? எ - று (க)

இத்தகைய புராணமூ வாறு மேனு விலங்குகை லாயவரை யிறைவ
ன்பாதப், பத்திபுரி நந்திசனற் குமாரற் கோதப் பணிந்தவன்பால் வியாத
முனி பரிவாற் கேட்டு, மெத்துயதி வினையோடப் பார்மேற் சால விளக்கி
யது போன்முனிவர் வேறு வேறு, புத்திமகிழ் வொடுமவ்வழியே கேட்டுச்
செய்த புகரிலுப் புராணமூ வாறுண்டாமால்.

(இ - ள்.) இவ்வகைய புராணங்கள் பதினெட்டையும் விளங்குகின்ற கைலாய கிரியிலுள்ள சிவபெருமானுடைய திருவடியிற் பத்திசெய்த திருநந்திதேவர் சனற்குமார முனிவருக்குப் பூர்வஞ்சொல்ல, அச்சனற்குமார முனிவரிடம் வியாதமுனிவர்

வணங்கிக்கேட்டு மிகுந்த தீவினையானது ஒழியும்படி பூமியில் நன்றாக விளக்கியது போல, முனிவாகள வெவ்வேறாக மனக்களிப்புடன முறையே கேட்டுக்கூறிய குறற மிலலாத உபபுராணங்கள் பதினெட்டுள்ளன எ - று (உ)

சாறறுானற குமாரமே நார சிஙகந தருகாநதரு சிவதருமந தழை தூா வாசம, போறறியநா ரதமேகா பிலமெல லோரும புகழுசனஞ் சவு னகமாம பிரமாண டஞசீா, மாறறருமவா ருணஙகாளி புராண மேதது ம வாசிட்ட மிலிஙகமொடு சவுரம பாவம, பாறறியபா ராசாிய மாரீ சமபாா பகாசாமபம பாாககவமென றவறறின பேராம.

(இ - ள ) சனறகுமாரமுனிவா சொலலிய நாரசிஙகம-தருதியாகிய காநதம - சிவதருமம - (அனபு) தழைதத தூாவாசம - துதிககததக்க நாரதம் - காபிலம - எல லோரும புகழ்கினற உசனம - சவுனகம - பிரமாணடம - சிறபபொழியாத வாருணம- காளி-துதிசெயயும வசிட்டம - இலிஙகம-சவுரம-பாவஙகளேயொழிதத பாராசாிியம- மாரீசம - உலகஙகூறும சாமபவம - பாாககவம எனறு அவ்வுப புராணஙகட்குப பேரகளாம. எ - று. (ஈ)

வேறு

விலககரு முனிவா தமமால விளஙகிய வுபபு ராணந துலக்கிய கிரந்த மெல்லாந தொகையெரி லகக மாகு மலகக்ணே யறுககு மநதப புராணமூ வாற னுள்ளு நலககுமபாரக கவபு ராண நாயக மாகி நிறகும.

(இ - ள ) நீக்கற்கரிய (தவமுடைய) முனிவாகளால விளஙகிய உபபுராணங கள்கூடிய கிரநதமெல்லாவற்றிறகுந்தொகை இலக்ஷமாகும துனபததை யொழிக்கும அந்த உபபுராணஙகள பதினெட்டனுளளும நனமைமிகும பாாககவபுராணமானது தலைமையுற்று விளஙகும எ - று. (ச)

பிரணவப பொருளாயப பேத மபேதமே பேதாபேதம வரமலி பொருளா யொனறாய வரமபிலா வினப மாகும பரவிய வைநகைப புதகேண மானமியம பகரு நீரால விரவிய பாாகக வதகைத விநாயக புராண மெனபாா.

(இ - ள ) பிரணவப்பொருளாயும், பேதமாயும, அபேதமாயும், பேதாபேத மாயும, மிகசசிரேஷ்டமான பொருளாயும, ஒனறாகியும, எலலையிலலாத இனபமய மாயும (விளஙகி) துதிசெயயும ஐநது திருககரஙகளையுடைய கணேசப்பெருமானா் மகாத்மியததைக கூறுநதனமையால, இபபாாககவபுராணததை விநாயகபுராணமென்று சொலவாாகள. எ - று. (ரு)

புணணியந தருஙக ணேச புராணமுன கைலை வெறபி னணணிய வெணடோள் முககண ணுதனு ரருளிச செய்யப பண்ணிப தவததால வேதன பணிநதுறக கேடடுப பின்ன ரெண்ணிய வியாத மேலோ னிறைஞசிட வியமபினனே.

(இ - ள் ) புண்ணியததை யளிக்கும விநாயகபுராணததைக் கைலாயகிரியிற் பொருந்திய எட்டுத திருப்புயங்களையும் மூன்று திருவிழிகளையுமுடைய சிவபெரு மான் பூாவம் அருளிசசெயய, பிரமதேவன் தான்செய்த தவததினால மனம்பதிந்து

பொருந்தக்கேட்டு, பிறகு (யாவரும) எண்ணத்தக்க மேலோனாகிய வியாத முனிவனை (தனனை) பணிய (அதனை அவருககுக) கூறினன். எ - று. (சு)

வேரியங கமலப புததேன விளம்பிய முறைமை யோடே
சீரிய வியாத மேலோன றெளிததிடத தவஙகள சானற
கூரிய பிருகு வெனபான குரைகட லமிழ்த பொனன
வாரிய மொழியாற செய்யு ளாககின னகில முயய.

(இ - ள) தேன சொரியும் அழகிய தாமரைத தவிசில வீற்றிருககும பிரம தேவன் கூறிய கிரமபபடியே ஓதததி பெறற மேலோனாகிய வியாதமுனிவன திரு வாயமலாநதருள, மேமபட்ட தவஙகள் மிகுநத பிருகுமுனிவன சததிககினற (பாற) கடலிற றோனறிய அமிரதமபோல வடமொழியிற சுலோகஙகளாக உலகின ருயயும படி செயதனன. எ - று. (எ)

கருதுபா சனையே லீலா காணடமென றபபு ராணத
திருவகை யாகுங காணட மிரு நூறறைம பதுகாண டததுள
மருவிய வததி யாய மற்றவை யெலலாங கூறும
பொருவரு கிரநதம பனனீ ராயிரம பொருநதாநிறகும.

(இ - ள.) அப்புராணததில, தியானிககத தகக உபாசனா காணடம லீலாகாண டமெனறு காணடஙகள இருவகையாகும. அவவிருகாணடஙகளுள்ளும பொருநதிய அததியாயஙகள் இருநூற்றைமபது அவறறை யெலலாஞ் சொலலுகினற சமானமில லாத கிரநதஙகள பனனீராயிரம பொருநதியிருககும எ - று. (அ)

பாடிய தலைவன பேராற் பாரககவ புராண மெனறும
பாடிய செயயுள் கொளளும பாடடுடைத தலைவன பேராற
பாடியல கினற காணு பததிய மெனறும யாரும
பாடிய வாய ராகிப பயனமிகப பெறறு நினறார.

(இ - ள) நூலசெயத பிருகுமுனிவர் பெயரால பார்க்கவபுராணமெனறும், செய்த நூலினை மேறகொளளும பாட்டுடைத தலைவனாகிய கணேசன பெயராற் பெருமை பொருநதிய காணாபதயமெனறும,எலலோரும துதிககினற வாயையுடையவ ராகி (அதனால) பெருமபலனை யடைநது நினறாரகள. எ - று (கூ)

புரையற விளஙகு மிநதப புராணததைச செமபொன மேரு
வரையெனக குணமேம படட மாதவப பிருகு வெனபா
னரையருக கரையன சோம காநதனு தரவிற கேடபக
கரையறு காதல பொஙகக கடடுரைத திடடா னனறே.

(இ - ள) குற்றமற விளஙகும் இந்தப் பார்ககவ புராணததை மேருவாகிய செவ்விய பொன்மலைபோல மேம்பட்ட குணததையுடைய பெருந்தவஞ்செயத பிருகு முனிவனெனபவன மனனர்மனனனாகிய சோமகாநதன ஆசையோடுகேட்க, எலலை யிலலாத ஆசையதிகரிகக உறுதியாகக கூறினன எ - று. (க0)

வேறு

நித்தியமாய் நிர்க்குணமாய் நின்மலமாய் நிரஞ்சனமாய் நினைவுக் கெட்டா
சத்தியமாய்த் தற்பரமாயத தத்துவமாய்ச சசசிதா னநத மாகி [ச

யத்துவிதப பொருளாகி யகண்டபரி பூரணமா யமல ஞான [ட்பார்.
மெத்தியவுள் ளகநநதமாநத விநாயகமான மியநதவதகே தார விருமபிக கே

(இ - ள்) நித்தியமாகியும், குணரகிதமாகியும், மலரகிதமாகியும், பரிசுதத மாகியும, மனதகுங் கெட்டாத உண்மையாகியும், தானே பரமாகியும், தததுவமயமாகி யும, சததுச் சித்து ஆநநதமயமாகியும், இரணடறற பொருளாகியும, அகண்டபரி பூரணமாகியும, மலசம்பந்தமறற ஞானம பொருநதிய இதயததிலெழுநதருளியுமுள்ள விநாயககடவுளுடைய மானமியததைத தவமுடையவாகள விருபபுற்றுக கேட் பார்கள். எ - று. (கக)

விருத்திரனைக் கொனறுனு நான்முகனு மதுவுயிரா வீட டினுனு
முருத்திரனும வழிபடுமா றொருகுமொரு தனிமுதலா யுலகுக கெலலாங
கருத்தனுமாய் விளையாடுங கணபதிமான மியஙகணககில பிறவி தோறுந
பொருததமுறுந தவமபுரியார் விருமபினுமற றவாசெவியிற புகாதோர நாளும.

(இ - ள) இநதிரனும், பிரமதேவனும், திருமாலும, உருததிரனும வழிபாடு செய்யுமபடி யோககிய ஒபபறற தனிமுதலாகி, எலலா வுலகஙகட்குந தலைவனுமாகித திருவிளையாடல புரியும விநாயகப பெருமானுடைய மானமியமானது எணணிலலாத பிறவிகளிலெல்லாம் தவததைப பொருநதுமபடி செயயாதவாகள விருமபினூலும, அவாகள் செவியில ஒருநாளும புகமாட்டாது. எ - று.

விருததிரனைக கொனறுன - இநதிரன நானமுகன - பிரமன
மதுவுயிரா வீட்டினுன - திருமால இதனை,

விருத்தாசலபுராணம்.

"காதி ரணடினிற குறுமபியிற கணணாபா விரணடு
பேத மாகிய மதுவுடன கைடவன பிறநது
சீத ரனறனை பொருதனா சீதரன றேறறு
யாது செயகுவோ மெஙஙனம வெலலுவோ மெனறுன

றேறற மாய்வரங கேண்மினென றுரைததனன திருமால
தோற்ற நீவர மெனகொலோ தருகுவை சொலலா
யேறற மாகிய வெஙகளைக கேளவர மெனறா
மாறற மெனகையான மாயுமி னெனறனன மாயன

மாயன கையினுன் மதுவுடன கைடவன மடிநதார
தோய மீதினின மேதையைத தூாததனா புவிககு
மேய நாமமு மேதினி யாயது விரிஞச
னேய மேதினி யிறுகிடச சிவனபத நினைநதான."—எனவருவனவற்றுனறிக.

எவனுடைய வாணையினுற பிரமனுககுச சிருட்டியுமெவ் வுயிரும வாழ [ம
வுவணமுயாத தவறகளிபபு முருததிரனுக குலகமெலா மொடுககும வீறு
பவனனுககு வீகதலும பாறகாறகுச சரிததலுமபன ஞளும வைகு
மவனுடைய மானமியததை நாததிகாபா தகாமுதலோ ரறிய மாட்டார.

(இ - ள) எநத விநாயகக் கடவுளுடைய கட்டளையினுற் பிரமனுககுப் படைப்புத தொழிலும, கருடககொடியை யுயாததிய திருமாலுககு எலலாவுயிாகளும் வாழும்படி காததறறொழிலும, உருததிரனுக்கு எலலாவுலகங்களையுஞ் சஙகரிக்கும

வல்லபமும், வாயுவுக்கு வீசுதலும், சூரியனுக்குச் சஞ்சரித்தலும், எக்காலமும் உண்டாயிருக்குமோ, அந்த விநாயகக் கடவுளுடைய பிரபாவத்தை நாத்திக பாதகர் முதலானவர்களறியமாட்டார்கள். எ - று.

உவணமுயர்த்தவன்—திருமால். அஃதாவது காசிபர் மனைவியர் பதின்மூவரில் ஒருத்தியாகிய விநதை பெற்ற கருடன் தன் தாயகட்டளைப்படி தேவலோகஞ்சென்று அமுதகலசத்தை யெடுத்துக்கொண்டு எதிர்த்தோரை வென்றுவருகையில், திருமாலெதிர்க்க, இருபத்தொருநாள் அவருடன் தோல்வி வெற்றியின்றிச் செருச்செய்ய, திருமால் இவனைத் தந்திரமாக வெல்லவேண்டுமென்று கருதி, நீ விரும்பிய வரங்கொடுப்பேன் என, கருடன் நீ விரும்பின யான் வரங்கொடுப்பேனென்ன, நாரணன் நீ வாகனமாகுகவென, கருடனியைந்தனனென்பது இதனை,

காஞ்சிப்புராணம்

"வன்புள் வேந்தநின் வீர மகிழ்ந்தனன்
னென்பு டைவரங் கொள்ளென வீங்கிவ
னுன்பெ ருந்திறற் குணமகிழ்ந் தேகமற் றென்
றன்பு டைவரங் கொள்கெனச் சாற்றினன்
மாய னம்மொழி கேட்டு மகிழ்ச்சியிற்
றாயை யோதிய சொற்றவ றாயெனி
னீயெ னக்கு நெடுந்தகை யூர்தியா
யெய்து மிவ்வரம் யான்கொள நல்கென்றான்
ஆதி கூர்தர வம்மொழி கேட்டொரு
பூதத மெண்ணி யுயிர்த்து மொழிந்தமெய்
வார்த்தை யிறப்பிறழ வஞ்சியற் றுகெனச்
சீர்த்தி யாளன் விடைபெற்றுச் சென்றனன்."—என வருவனவற்றானறிக.

மறையிடத்து மரியயனிந் திரனாதி யமராமதி யிடத்துந் தோன்றா
துறையுமொரு பொருட்டனை வழிபடுவோர் தமக்கருளா லுருவு கொண்டு
நிறையவரங் கொடுத்தசரித் திரமனைத்தும் விளக்கிநிலை பேறு செய்த
குறைவறும்பு ராணத்தைக் குறித்தவர்க்கு நாற்பயனுங் கூடு மன்றே.

(இ - ள்) வேதத்திலும், விண்டு பிரமன் இந்திரன் முதலிய தேவர்களுடைய புத்தியிலும் கண்டறியத் தோன்றாமல் எழுந்தருளி யிருக்கின்ற ஒப்பற்ற பொருளாகிய விநாயக மூர்த்தி, தம்மை வழிபட்டவர்களுக்குத் திருவருளால், திருவுருவெடுத்து மிகுதியாகிய வரங்களைக் கொடுத்த சரித்திரங்களை யெல்லாம் விளக்கி நிலைபெறுதல் செய்த குறைவற்ற இப்புராணத்தை நினைத்தவர்களுக்கு, நால்வகைப்புருடார்த்தங்களுங் கைகூடும். எ - று.

நாற்பயன் - அறம் பொருள் இன்பம் வீடு என்னப்படும். (கச)

தங்குபெரும் புண்ணியத்தாற் கேட்டவர்க்குப் பாதகமெல்லாந் தகர நூறு
மைங்கைமதக் குஞ்சரத்தின் சரித்திரமெல் லாம்பிரம ஞானி சேட
னிங்கிவர்க்கு முறைப்பரிதா யினுங்கொடுத்து வியாதமுனி யியம்பு மாறே
நுங்களுக்கு மொழிவலென நோற்றவருந் தவசூத னுவலப் புக்கான்.

(இ - ள்) (தமக்கு) உண்டாகிய பெரிய புண்ணியத்தாற் சிரவணஞ் செய்தவர்க்குப் பாதகங்களெல்லாங்கெட அழிக்கத்தக்க, மதஞ்சொரியும் ஐந்து திருக்கரங்

களையுடைய விநாயகக்கடவுளுடைய சரித்திரங்களை யெல்லாம், பிரமன் ஆதிசேடன் முதலிய இவர்சட்குஞ் சொல்ல அரிதாயினும், வியாதமுனிவர் சொல்லியவகையே யுங்களுக்குச் சுருக்கிச் சொல்லுவேனென்று, அருந்தவஞ் செய்த சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர் எ - று. (௧௫)

புராணவரலாற்றுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௱௫௩.

# பதிகம்.

மதிமிகுஞ் சோம காந்தன் வனம்புகத் துணிந்த வாறுங்
கதிதரு மகற்கு நீதி கடைப்பிடித் துரைத்த வாறும்
விதியுளி யபிடே கித்து வேந்தவற் களித்த வாறும்
பதியகன் றில்லா ளோடும் படர்ந்து கான் புகுந்த வாறும்.

(இ - ள்) அறிவுமிக்க சோமகாந்த மன்னன் வனம்புகத் துணிந்தவகையும், நற்கதியைக் கொடுக்கத்தக்க புத்திரனுக்கு உறுதியாக நீதிமார்க்கத்தை யுரைத்தவகையும், அவனுக்கு விதிப்படி இராசியாபிடேகஞ்செய்து இராசரிகங்கொடுத்தவகையும், மனைவியுடன் நகரத்தினின்று நீங்கிச்சென்று வனத்தையடைந்தவகையும். எ - று

இதுமுதல் முப்பத்துநான்கு செய்யுள்களுங் குளகம் தண்டியலங்காரம் "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்றது சூத்திரம் (௧)

ஆங்குறை பிருகு வென்னு மறிஞனை யடுத்த வாறுந்
தீங்கறு முனிவன் பண்டு செய்வினை யிரண்டு மவ்வோ
றாங்கவற் குரைத்த வாறு மொளிர்மணி மௌலி வேந்தன்
றாங்கிய பிரம சாயை யொடும்பிணி நசிந்த வாறும்

(இ - ள்.) (சோமகாந்தன்) அவ்விடத்தில் வசிக்கும் பிருகுமுனிவனை யடுத்த வகையும், முற்காலத்தில் (சோமகாந்தன்) செய்த (நல்வினை தீவினையாகிய) இருவினைகளையும் குற்றமற்ற பிருகுமுனிவன் அவனுக்கு வெவ்வேறாகச் சொல்லியவகையும், பிரகாசிக்கின்ற இரத்தின கிரீடமணிந்த சோமகாந்தன் தாங்கிய பிரமஹத்தியையும் பிணியையும் விலகியவகையும் எ - று. (௨)

மறைநெறி வியாதன் புந்தி மயங்கிநான் மலரின் வைகு
மிறைவனை யடுத்த வாறு மிபமுகன் மனுவை வேதன்
முறையுளி வியாதன் காதின் மொழிந்தது மகணேசன் பாத
நறுமலர் மூவ ருந்தா நயந்துபா சித்த வாறும்.

(இ - ள்.) வேதநெறியையுடைய வியாதமுனிவன் மதிமயக்குற்று, அன்றலர்ந்த தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனை யடுத்தவகையும், பிரமதேவன் விநாயகக்கடவுளுடைய மந்திரத்தை வியாதமுனிவன் செவியில் முறைப்படி யுபதேசித்தவகையும், கணேசமூர்த்தியினுடைய பாதமாகிய தேனைப்பொருந்திய தாமரைமலரை மும்மூர்த்திகளும் விரும்பி யுபாசனைசெய்தவகையும். எ - று. (௩)

முதறொழின் மூவருககு முன்னவ னளித்த வாறு
மெததிய விசுவ மெலலாம விளஙகுதன னகட்டவா னோணா
யுய்த்ததனன றெரிதத வாறு முலகயன படைதத வாறுஞ்
சிததிபுத திகளை நாதா திருமணம புரிநத வாறும.

(இ - ள்) முன்னோனாகிய விநாயகபபெருமான் திரிமூர்த்திகளுக்கும் (சிருஷ டியாதி) முதறொழிலகளை (கைகூடுமபடி) திருவருள செயதவகையும, மிககவுலக மெல்லாம் விளஙகிய தமது திருவயிற்றில அவைகளைச செலுததி யுணாததியவகை யும, பிரமன உலகைச் சிருட்டிசெயதவகையும, விநாயககடவுள சிததிபுததிகளைத திருமணஞ செய்தவகையும் எ - று. (௪)

மாறுயா மதுகைத திண்டோள மதுகயி டவரைக் கொலல
வாறெழுத தரவப பளளி யமரஞ தரிதத வாறும
வீறுபுத திரனி லாமல வெறிவன மடுதத வீமன
றேறிய விசசு வாமித திரனகழல சோநத வாறும.

(இ - ள்) பகைமைமிகக வலிதஙகிய திணணிய தோளையுடைய மதுகயிட வாகளைச சஙகரிகக, சேடசயனததிலமாநத திருமால சடககரமநுவைச சபிததவகை யும, சிறப்புடைய மகபபேறினறி மணஙகமழும வனததையடைநத வீமன, தேறிய விசசுவாமிததிர முனிவருடைய பாதஙகளையடைநதவகையும எ - று. (௫)

புககவேல வீம னுககுப புநனமுனி யவனகு லததுத
தககநோய தீாதத வணணஞ சாறறிய வாறுந தககன
முககல ருபதேச ங்கொண முறைதெரித திட்ட வாறுந
தககனமுற பிறபபிற சாபந தாஙகிய துாைதத வாறும.

(இ - ள) (வனததிற) புகுநத வீமனுககு, (மேற்) கூறிய விச்சுவாமிததிர முனிவன, அவனுடைய குலததுததககன் நோயதீாநத விததைதைச சொலலியவகையும, தககன முககலமுனிவனுடைய உபதேசததைககொணட முறையைக கூறியவகையும, முறபிறபபில தககன சாபமபெறற துாைததவகையும எ - று (௬)

உறறவித தககன பணடைச சனனததி லுதிதத மைநதன
பறறில னாகி முததி படாநதமை யுாைதத வாறுங
கொறறவ னாக வேழங கோதையைச சூட்டத தகக
னறறமில் விதாபப தேய மாணடமை யுாைதத வாறும.

(இ - ள) பொருநதிய இநதத தககன முறபிறபபிற பிறநத புதல்வன பற் றிலலாதவனாகி முததியடைநதமை யுாைததவகையும, அரசனாகுமபடி யானையானது மாலைசூட்ட, தககன குறறமிலலாத விதாபபதேயததை யரசுசெயதமை யுாைதத வகையும எ - று (௭)

அநதமா தவனவ வீமற கருணமனுப புகனற வாறு
மைநதனா கியவு ருக்கு மாஙகதன முகுநதை சாபந
தநதிட மெலிநத வாறுஞ் சாாநதுநா ரதனை னறகு
வெநதிறற் சாபந் தீாவு மேதக வுாைதத வாறும

(இ - ள்.) அந்த விசுவாமித்திர முனிவன் அவ்வீமனுக்கு அருள்புரியும் மந்திரோபதேசஞ்செய்தவகையும், புதல்வனாகிய உருக்குமாங்கதன் முகுந்தை சாபங்கொடுக்க மெலிவுற்றவகையும், நாரதமுனிவன் அங்கு வந்து அவ்வுருக்குமாங்கதனுக்குச் சிறப்பாகச் சாபவிமோசனம் கூறியவகையும். எ - று. (அ)

இந்திரன் சாபம் பெற்ற தியம்பிய வாறுந் தேவர்
மந்திரி கவுதம் மன்பான் மனுப்பெற்ற துரைத்த வாறு
மிந்திரற் கதனை யன்னா னியம்பிய துறைந்த வாறு
மிந்திரன் பூசை யாற்றி விண்ணினமே லிருந்த வாறும்

(இ - ள்.) இந்திரன் சாபம் பெற்றதைச் சொல்லியவகையும், பிரகற்பதி முனிவன் கௌதமமுனிவனிடம் மந்திரோபதேசம்பெற்ற துரைத்தவகையும், அப்பிரகற்பதி முனிவன் அம்மனுவை இந்திரனுக்குரைத்ததைக் கூறியவகையும், இந்திரன் (விநாயகக்கடவுளைப்) பூசைசெய்து தேவலோகத்திலிருந்தவகையும் எ - று (கூ)

உருக்குமாங் கதன்பின் முத்தி கிளையொடு முற்ற வாறுந்
திருந்தறு தந்தை பான்மந் திரங்கிருச் சமத னென்பா
னுருக்கமொ டுற்ற வாறு முவன்வரம் பெற்ற வாறும்
பெருக்குறு வரங்க ளேற்றுத் திரிபுரன் பெற்ற வாறும்.

(இ - ள்) பின்னர், உருக்குமாங்கதன் தன் சுற்றத்தாரோடும் முத்திபெற்றவகையும், கிருச்சமதனென்பவன் குற்றமற்ற தன் தந்தையினிடமாக அன்புடன் மந்திர மேற்றவகையும், அவன் வரம்பெற்ற வகையும், திரிபுரன் தவஞ்செய்து பெருக்கமைந்த வரங்களைப் பெற்றவகையும். எ - று. (க0)

திரிபுர னுலக மூன்றுஞ் சென்றர சாண்ட வாறு
மரிமுதற் றேவ ரன்னா னறவரம் பெற்ற வாறு
முரியநல் வரந்த சண்ட னொருவனும் பெற்ற வாறு
மரியயற் கரியா னந்த முப்புர மழித்த வாறும்.

(இ - ள்) திரிபுரன் திரிலோகங்களிலுஞ் சென்று அரசுசெய்த வகையும், திருமால் முதலிய தேவர்கள் அத்திரிபுர னழிய வரம் பெற்றவகையும், விடபானஞ் செய்த ஒப்பற்ற சிவபெருமானும் (விநாயகரிடத்து) நல்ல வரங்களைப் பெற்றவகையும், விண்டுவுக்கும் பிரமனுக்கும் (தேடுதற்கு) அரிய சிவபிரான் அந்தத் திரிபுரத்தை யழித்தவகையும் எ - று (கக)

இமையவெற் பரையன் பாங்கர் ரம்பன் சதுர்த்தி நோன்பை
யுமையவள் கேட்ட வாறு முவந்தவ ணோற்ற வாறுங்
கமைபெறு பிருகு சொல்லக் கருத்தம னோற்ற வாறு
மமைகவு தமனுங் கோத் நளனனுட் டித்த வாறும்.

(இ - ள்) இமாசல மன்னனிடமாக உமாதேவியார் விநாயக சதுர்த்திவிரதத்தைக் கேட்டவகையும், அவ்வுமாதேவியார் களிப்புற்று (அவ்விரதத்தை) அநுட்டித்த வகையும், சாந்தம்பொருந்திய பிருகுமுனிவன் சொல்லக் கருத்தமன் அநுட்டித்த வகையும், பொருந்திய கவுதமமுனிவன் கூற நளன் அநுட்டித்தவகையும் எ - று.

சுந்தர மனைவி நோற்பத் தொக்கபா தலத்தி னீங்கிச்
சந்திராங் கதனம் மன்னு வந்து தானுநோற் றிருந்த வாறு

மைந்துறு மவுணர் தாகக மயிலூர்தி நோற்ற வாறும்
வெந்தன னுருவம் வேணடி வேள்மதன் றோற்ற வாறும்.

(இ - ள்) அழகிய மலைவியானவள் நோற்றலால், தொருதியாகிய பாதலத்தினின்று நீங்கி, சந்திராங்கதன் பூமியில் வந்து தானும் நோற்றிருந்த வகையும், மயில் வாகனமுடைய முருகப்பிரான் வலியுடைய அசுரனைக்கொல்ல நோற்றவகையும், வேளாகிய மதனனை சாமபரான தன் வடிவுபெறக் கருதி நோற்ற வகையும் எ - று.

மாதொரு பாகர் சீற வலியழி யாதி சேடன்
கோதற நோற்ற வாறுங் கொற்றவன் சூர சேனன்
பூதலம் விமானத் தோடு பொருக்கென விழிந்து நின்ற
மேதகு மகவான் றனனை விபபுற வினவ வாறும

(இ - ள) உமாதேவி பாகராகிய சிவபெருமான் கோபிக்க, வலியிழந்த ஆதிசேடன் குற்றமற நோற்றவகையும், அரசனாகிய சூரசேனன் விமானத்துடன் விரைந்து பூமியி லிறங்கிநின்ற மேமபட்ட இந்திரனைவியக்குமபடி வினவிய வகையும எ - று

மருவுசங் கடச துர்த்தி வானந்தன பிதிரர் சேரப்
புருசுண்டி நோற்ற வாறும புத்திரப பேறு வேண்டி
கிருதவீ ரியனகா னத்துக் கெழீஇத்தவம புரிந்த வாறுங
கருதுகோ ளாக வேயங் காரகன் றோற்ற வாறும

(இ - ள்) பொருந்திய சங்கட சதுர்த்தி விரதத்தை, புருசுண்டி யென்போன தனபிதிரர்கள மோக்ஷமடைய நோற்றவகையும, கிருதவீரியன புத்திரப்பேற்றினை விருமபி வனத்துச் சேர்ந்து தவஞ்செய்த வகையும, அங்காரகன நினைக்கத்தக்க கிரகமாகுமபடி நோற்றவகையும. எ - று (கரு)

எள்ளியே ரமபன பாங்க செய்திய சாபஞ் சோமன
றள்ளுற நோற்ற வாறுஞ் சங்கட சதுர்த்தி நாளில்
கொள்ளுறும புத்தி யினறிக் குளிறு கிறைவற கிட்டுத்
துளவிடைக் கரமபு லேசசி தூயவீ டடைந்த வாறும

(இ - ள) சந்திரன (யாவராலும) இகழ்வுற்று, விநாயகரிடம (அடைந்து) தான் பெற்ற சாபந் தள்ளுறுமபடி நோற்ற வகையும, சங்கட சதுர்த்தி நாளில் தனக்குத் தெரியாமல், [அபுத்தி பூர்வமாகிய] தண்ணிய அறுகினை விநாயகருக்குச் சாத்தி, துளவிடைக் கரமபுலேசசி புனிதமாகிய வீட்டையடைந்த வகையும. எ - று (கசு)

குறுகன லாசு ரபபோக கொடியனை விழுங்கும வெமமை
யறுகருச் சனையான முக்க ணெங்கர னீத்த வாறும
வறியவன செலவு மெய்த வளரறு கொன்று வாங்கி
யிறையவ னோந்து பலவே றதிசய மிழைத்த வாறும

(இ - ள) சமீபித்த அனலாசுரனென்னுந் தீயோனை விழுங்கிய வெப்பத்தை, திரிநேத்திரங்களையும் ஐந்து கரங்களையுமுடைய விநாயகக்கடவுள் அறுகருச்சனையா லொழித்தவகையும், தரித்திரன செலவமடையுமபடி வளர்கின்ற அறுகொன்றனை வாங்கி இறைவனாகிய விநாயகக்கடவுளாராயந்து, பலவேறு திறப்பட்ட அற்புதங்களைச் செய்தவகையும. எ - று (கஎ)

வரக்கவுண் டின்னி யனறன் மனைவியோ ரறுகு தூக்கித்
தரக்கன கங்கண் மூவா சகலமு நிகரா வாறு
மரக்கனை கிராத னென்னு மவாவன்னி யிலையொன் றாசித்
திரக்கமிக் குறுமே ரம்ப னெழிலுல கடைந்த வாறும்.

(இ - ள்.) சிறந்த கவுண்டின்னியனுடைய மனைவி ஓரறுகினை (குபேரன் முன் தராசில்) தூக்கிக்கொடுக்க, பொற்குவியல்களும் திரிமூர்த்திகளும் யாவும் நிகரா காத வகையும், அசுரனும் வேடனுமாகியவர்கள் ஓர் வன்னிபத்திரத்தின லாசித்துக் கிருபையை மிகுதியாகவுடைய கணேசமூர்த்தியினுடைய அழகிய வுலகத்தை யடைந்தவகையும் எ - று (கஅ)

இரணிய கசிபைக் காக்க விந்தினா மனுளற காற்ற
வரமினி தளித்த விண்டு விநாயகன மலர்த்தாள் போற்றிக்
கரவினமா வலியை வென்று வாமனன களித்த வாறு
மரவக லல்குற் கீர்த்தி யருமகப் பயந்த வாறும்.

(இ - ள்) இரணியகசிபனைக் கொல்ல விஷ்ணுமூர்த்திக்கு மிக்க வரத்தை இனிதாகக்கொடுத்த விண்டு விநாயகருடைய மலர்போன்ற திருவடியைத் துதித்து வஞ்சகமாக மாவலியைச் சயித்து வாமனன் சந்தோஷித்தவகையும், பாம்பின் படம் போலும் அகன்ற அல்குலையுடைய கீர்த்தியென்பவள் அரிய குழந்தையைப் பெற்ற வகையும். எ - று (கசு)

வன்னியின் பூசைப் பேற்றால் வல்விடந் தவிர்ந்த கீர்த்தி
தன்மக னுய்ந்த வாறுஞ் சமியுமந் தாரன் றானும்
வன்னிமந் தார மான வாறுமவ் வவர்கள் சாப
மன்னவர் மனைவி மார்க ளருச்சிப்பத் தீர்ந்த வாறும்

(இ - ள்) வன்னியின் பூசாபலத்தால் வலிய விடவேகத்தைத் தவிர்ந்த கீர்த்தியின் மகன் பிழைத்த வகையும், சமியும் மந்தாரனும் முறையே வன்னியும் மந்தாரமுமான வகையும், தேவர்கள் சாபம் அவர் மனைவியர் அருச்சனைசெய்ததால் ஒழிந்த வகையும். எ - று. (உ0)

சிப்பிரப் பிரசா தன்றான் கிளர்வரம் பெற்ற வாறு
மொப்பறு கிருத வீரி யன்மக வுயிர்த்த வாறும்
வெற்பிலிந் திரவி மானம் விண்ணிடை யெழுந்த வாறுந்
தப்பறு சூர சேனன் முத்தியிற் சார்ந்த வாறும்.

(இ - ள்.) சிப்பிரப்பிரசாதனென்பான் விளங்குகின்ற வரம்பெற்ற வகையும், சமானமற்ற கிருதவீரியன் மகவுபெற்ற வகையும், மலைபோன்ற இந்திரவிமானம் ஆகாயத்திலெழுந்த வகையும், குற்றமற்ற சூரசேனன் முத்தியிற் கலந்த வகையும். எ - று.

பரவிய பரசு ராமன் பல்வரம் பெற்ற வாறு
மிராவணன் பணிந்த வாறு மகத்திய னிறைஞ்சு மாறும்
விராவுகா சிபன்முன் னோனோர் பூசனை விளைத்த வாறு
மராவகட் டைசத் தோனு மாயிரம் புகன்ற வாறும்.

(இ - ள்.) துதிசெய்த பரசுராமன் பல வரங்களைப்பெற்ற வகையும், இராவணன் பூசித்த வகையும், அகத்தியன் பணிந்த வகையும், (அன்பு) கூடிய காசிபன்முதலானோர் பூசித்த வகையும், பாபத்தை உதரத்திற் (பந்தனமாகக்) கட்டிய விநாயகக் கடவுளுடைய சகத்திரநாமங்களைச் சாற்றிய வகையும் எ - று. (௨௨)

கணனெனு மரசனேன்ற கபிலமா தவன்கைச் சிந்தா
மணிகவர்ந் தரம்பு செய்ய மாதவன் போற்றிச் செய்த
வினையெரி வேள்வி நின்று மெம்பிரா னவதா ரஞ்செய்
தணிவகுத் தமர்ந்தன் னானை யழித்தது மீட்ட வாறும்.

(இ - ள்.) முன்னாளில், கணனென்னு மன்னன் பெருந்தவமுடைய கபிலமுனிவன் கையிலிருந்த சிந்தாமணியை யபகரித்துத் துன்பம் விளைப்ப, அக்கபிலமுனிவன் வளர்த்திய யூபங்கொத்துப்போன்ற யாகத்தீயினின்றும் எமது பெருமான் திருவவதாரஞ்செய்து அணிவகுத்திருந்து அக்கணனை யழித்து அச்சிந்தாமணியை மீட்ட வகையும் எ - று. (௨௩)

அம்புயத் திழவன் மேனா ளாவிப்ப வதனிற் றோன்றி
யும்பர்கண் முதலோர்க் கின்ன லுறுத்துசிந் தூரன் றன்னை
யம்பிகை யிடத்திற் றோன்றி யடற்கரி முகவ னாகித்
தம்பிரான் கொன்றெல் லோர்க்குந் தண்ணருள் புரிந்த வாறும்.

(இ - ள்.) தாமரைமலரில் வசிக்கும் பிரமன் முற்காலத்திற் கொட்டாவிவிட, அதினின்று தோன்றித் தேவர்கள் முதலானவர்கட்குத் துன்பம் விளைத்த சிந்தூரனென்பவனை, கணேசப்பெருமான் உமாபிராட்டியாரிடத்தில் வலிதங்கிய யானைமுகவனாகித் தோன்றிக் கொன்று யாவர்க்குந் தண்ணிய கிருபைபுரிந்த வகையும் எ - று.

வேந்தபி நந்த னன்றன் வேள்வியோ டேனை யோர்தங்
காந்தெரி வேள்வி யாதி கருமமுங் கெடுத்துத் துன்பே
யீந்தவிக் கினனை நாத னிருடிபார் சுவர்பாற் றோன்றிப்
போந்தமாத் திரத்திற் றாழ்த்திப் புவனங்கள் காத்த வாறும்.

(இ - ள்.) அரசனாகிய அபிநந்தனனுடைய யாகத்துடன், மற்றவர்களுடைய பிரகாசிக்கின்ற அக்கினிகாரியமாகிய யாகமுதலிய (புண்ணிய) கருமங்களையுங் கெடுத்து, (உலகுக்குத்) துன்பத்தையே கொடுத்த விக்கினனென்பவனை, விநாயகக்கடவுள் பார்சுவ விருடியிடமாகத் தோன்றி, வந்தமாத்திரத்திலே யடக்கி, உலகங்களைக் காத்த வகையும். எ - று. (௨௫)

தூமறை கவரச் சங்கா சுரனிறை மறையோ னாகி
மாமறை வழக்க ஞ்செய்து வருங்கம லாசு ரன்ற
னேமவல் லுயிரை வேள்வி யிடத்துதித் தெழுந்த மஞ்ஞைக்
காமரு பறவை யூர்ந்து கறுத்தருள் புரிந்த வாறும்.

(இ - ள்.) சங்காசுரன் புனிதமாகிய வேதங்களை யபகரித்தலால், விநாயகக் கடவுள் வேதியனாகிப் பெருமைபொருந்திய வேதவழக்கஞ்செய்து, வருகின்ற கமலாசுரனுடைய மூர்க்கமுற்ற வலியவுயிரை, யாகத்தினின்று தோன்றிய அழகிய மயிற்பறவையையூர்ந்து கோபித்து, அருள்புரிந்தவகையும் எ - று. (௨௬)

சிந்துவென் றுரைக்கு நீயோன் றேவரைச் சிறையில் வைப்ப
வந்தரி யிடத்தே ரமப வவதரித் தவுணர் செய்த
வெந்திறன் மாயை யெல்லாம் வென்றவன் றனையுங் கொன்று
நந்திய வேத நீதி வழங்கநன் றளித்த வாறும்.

(இ - ள்.) சிந்துவென்று சொல்லுங் கொடியோன் தேவர்களைச் சிறையிலிட, விநாயகக்கடவுள் உமாதேவியாரிடமாகத் திருவவதாரஞ்செய்து, அசுரர்கள் செய்த வெவ்விய வலியமைந்த மாயைகளையெல்லாம் வென்று அவனையுங்கொன்று, குறைவுற்ற வைதிக மார்க்கமானது நன்முக வழங்கும்படி அருளியவகையும் எ - று (உஎ)

மாதவ னென்னு மன்னன் மணமகள் சுமுதை யென்பாண்
மாதவம் புரிய வனுறை மருங்கொரு பாலனுகி
யேதமற் றவட்குச் செய்த வெறுழ்வலித் தூமன் றனைப்
பாதலத் தவிந்து வீழப் பராபரன் முனிந்த வாறும்.

(இ - ள்) மாதவனென்னு மரசன் மனைவியாகிய சுமுதையென்பவள் பெருந்தவஞ்செய்ய, பராபரனுகிய விநாயகக்கடவுள் அவளிடத்தில் ஒரு பாலனுகி, அச்சுமுதைக்குத் தீமைசெய்த பெருவலியுடைய தூமனென்பவனைப் பாதலத்தில் அழிந்து வீழும்படி கோபித்தவகையும் எ - று

பராபரன் - பரமும் அபரமுமானவன் பனக்கு மேம்பட்டது சிவமென்பது சித்தாந்தம். (உஅ)

பெருமறைக் காதி யான பிரணவ மனுவி னின்றும்
பொருகளி றீச னுகப் பொருந்துமை பிடியாய்க் கூடித்
தருமொரு தோன்ற லாகித் தந்திமா முகனைச் சாய்த்து
வெருவுறு மாயன் சாபம் விநாயகன் றீர்த்த வாறும்.

(இ - ள்) பெரிய வேதங்கட்காதியாகிய பிரணவமந்திரத்தினின்றும், சிவபெருமான் பேராபுரியும் ஆண் யானையாகவும், உமாதேவியார் பொருந்திய பிடியானையாகவுந் திருவிளையாடல்செய்து பெற்ற ஒப்பற்ற தலைவனுகி, வலிய கயமுகாசுரனைக் கொன்று, அஞ்சிய விஷ்ணுவின் சாபத்தை விநாயகக்கடவுள் தீர்த்தவகையும் எ - று.

கருதிய தருளே ரம்பன் கசியப னதிதி யோடு
பொருவறு தவங்க ளாற்றப் புத்திர னவர்கட் காகித்
திருகிய மனத்துத் தேவாந் தகனராந் தகனைச் செற்று
மருவுதன் னுலகங் காசி மன்னனுக் களித்த வாறும்.

(இ - ள்) (அன்பர்) எண்ணியவற்றை யருள்புரியும் விநாயகக்கடவுள், கசியப முனிவன் (தன் மனைவியாகிய) அதிதியுடன் ஒப்பற்ற தவங்கள்செய்ய, அவர்கட்குப் புத்திரனுகி, கோணிய மனத்தையுடைய தேவாந்தகன் நராந்தகன் என்போரைக் கொன்று, பொருந்திய தமமுடைய உலகவாழ்க்கையைக் காசிராசனுக்குக் கொடுத்த வகையும் எ - று (௩௦)

சுராசுர ரகற்றி வெற்றின் றூகைய னனத்திற் றூன்றி
விரவருள் வழங்குந் துண்டி விநாயக னுன தேவ

னரவணி விசுவ நாத லமர்நகாசி யெய்த
வரமலி திமோதா னனமெய் மனத்தினைத் திரித்த வாறும்

(இ - ள்) மிக்க அருள்சுரக்குந் துணைடி விநாயகக்கடவுள், தேவர் தன்பத்தையொழித்து, பார்வதிதேவியார் திருமுகத்தில்தோன்றிச் சாபபாபரணமணிந்த விசுவநாதப்பெருமான் அழகிய காசிநகரத்தையடையும்படி, மிக்க வரத்தைப்பெற்ற திவோதானனுடைய உண்மைமனத்தை மாற்றியவகையும் எ - று. (ருக)

விடமணி மிடற்றி னானே விநாயக னாகிச் சென்று
மடமறு மரீசி தன்பால் வல்லபை யாகி வைகு
தடவரை மாதை வேட்ட தன்மை திருமாமேயா னின்று
விடாதபு மாதராய் பன்னிரு வரை மணந்த வாறும்.

(இ - ள்) ஆலத்தையணிந்த கண்டத்தையுடைய சிவபெருமானே விநாயகக்கடவுளாகச்சென்று, அறியாமை நீங்கிய மரீசிமுனிவனிடத்தில் வல்லபையாகிப் பொருந்திய பார்வதிதேவியின் அமிசபூதையை மணமுடித்தது, அவ்வக்கினி முன்னரே திருமால் பெற்ற துன்பமற்ற பன்னிருமாதர்களை மணஞ்செய்தவகையும் எ - று

மாயவன் விநாய கன்பால் மற்றவன் கீதை கேட்டுத்
தூயமெய்ஞ் ஞானந் தன்னைத் தொல்லியல் புணர்ந்த வாறும்
மேயவிப் புராணங் கேட்ட வியாசனே ரம்பற் போற்றி
யாயுமிப் புராண மெல்லா மணிபெற விரித்த வாறும்.

(இ - ள்) விஷ்ணுமூர்த்தியானவர் விநாயகக்கடவுளிடத்தில் விநாயக கீதையைக்கேட்டுப் புனிதமாகிய உண்மை ஞானத்தின் பழமையாகிய இயற்கையையறிந்தவகையும், பொருந்திய இந்தப்புராணத்தைக்கேட்ட வியாசமுனிவன் விநாயகக்கடவுளைத் துதிசெய்து, ஆராய்கின்ற இந்தப்புராணத்தை அழகுற விரித்துக்கூறிய வகையும் எ - று. (ருங)

பன்னிய பிருகு தன்பாற் பார்க்கவ புராணங் கேட்ட
மன்னவன் சோம காந்தன் மழைமதக் களிற்றுத் தேவன்
றன்னுல கடுத்த வாறுஞ் சாற்றினன் சூதன் மேலோ
னன்னவ னுரைத்த வாறே யவையெலாம் புகலப் புகேன்

(இ - ள்) சொல்லிய பிருகுமுனிவனிடத்தில், பார்க்கவபுராணத்தைச் சிரவணஞ்செய்த சோமகாந்தராசன், குளிர்ந்த மதப்பெருக்குடைய யானைமுக விநாயகக்கடவுளுலகத்தைச் சேர்ந்தவகையும், சூதமுனிவன் (நைமிசாரணிய முனிவர்களுக்குக்) கூறினன் அம்முனிவன் கூறியவகையே அவற்றையெல்லாஞ் சொல்லத்தொடங்கினேன் எ - று.

பதிகமாவது - பலவகைப்பொருளையுந் தொகுத்துக் கூறுவது இங்கே விநாயகக்கடவுளுடைய பலவகை மான்மியங்களையுந் தொகுத்துக்கூறலால், பதிகமெனப் பெயர்வந்ததென்க

"பதிகக் கிளவி பல்வகைப் பொருளைத்
தொகுதி யாகத் தொகுத்துரைப் பதுவே"—என்பது சூத்திரம். (ருச)

பதிகம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் - ருஅரு

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

# முதலாவது

# உபாசனகாண்டம்.

## சோமகாந்தன் வனம்புகத்துணிந்தபடலம்.

கனியிள வாளைகய னின்றுமிசை வாவத்
துனணிய பசுங்கமுகின் மீதுவளர் தூவி
யன்னமெதி ரபாயந்தலகின வவ்வியமா தேயந்
தனிகரி லாதசவு ராட்டிரமென றுண்டே

(இ - ள்) மிக்க இளமையுடைய வாளைமீன்கள் கயத்தினின்று மேலேபாய, நெருங்கிய பசிய கமுகமரத்தின்மீது வளர்கின்ற தூவியையுடைய அன்னமானது எதிரேபாய்ந்து (அதனை) மூக்கால் கொத்திப்பொருந்துகின்ற தனக்குத்தானேயொப்பாகிய சவுராட்டிரதேயமென்று (ஓர் தேயம்) உண்டு எ - று.

கனியிளவாளை - நாகிளங்கமுகு என்றாற்போல தூவி - அன்னச்சிறகு அலகு - பறவைமூக்கு, இதனைத் துண்டமெனவுங் கூறுப

கயனின்றும் என்றும் பாடம். கயல் - சேற்கெண்டை (க)

நாவலர்க ளாவினிடை நாட்டியவந நாட்டி
லேவலரு மாதருமி யற்ற வெழின மிக்க
வோவமனை யார்புரியு மோரைமலி சோலைத்
தேவநக ரென்றுதிசை போமிசைய துண்டே.

(இ - ள்) நாவின்வன்மையுடைய புலவர்கள் நாவால் நிலைநிறுத்திய அச்சவுராட்டிரதேயத்திலே, அரிய மங்கையர்களும் ஏவல்செய்யும்படி அழகுமிக்க சித்திரம் போன்ற பெண்கள் செய்கின்ற விளையாட்டுகள் மிகுந்த சோலைசூழ்ந்த தேவநகரென்று திசைகளிற்சென்ற கீர்த்தியையுடையது (ஓர்நகரம்) உள்ளது. எ - று

ஓரை - மாதர் விளையாட்டு, இசை - கீர்த்தி (உ)

மாந்தர்மகிழ் கூரவள மாநகரி ருந்தே
யேந்துதிணி தோளினிரு மாநில னிறுத்தும
போர்த்தமரின வேந்தர்புறங் கண்டவருஞ் சோம
காந்தனெனும மன்னனரு ளாற்கடலை வென்றான.

(இ - ள்) மனிதர்கள் களிகூரும்படி வளமமைந்த சிறந்த தேவநகரத்திலிருந்து, உயர்ந்த வலிய புயத்தினையுடைய பெருமைதங்கிய பெரிய பூமியைத்தாங்குகின்ற யுத்தத்தில் வந்த அரசர்களைப் புறமுதுகு கண்டு வருகின்ற சோமகாந்தனென்னும் பெயரையுடைய மன்னவன் கருணையாற் கடலைவென்றவனும் எ - று.

இதுமுதல் ஐந்து செய்யுள்கள் ஒரு தொடர். (௩)

தக்கவறி வாலமரர் தங்குருவை வென்றான்
மிக்கபொறை யானெடிய மேதினியை வென்றான்
றொக்கவொளி யாலிரவி சூரியனை வென்றா
னக்கபுக ழாலுவவு நாண்மதியை வென்றான்.

(இ - ள்.) தகுதியாகிய உணர்வினாலே தேவர் குருவாகிய பிரகற்பதி முனிவனைவென்றவனும், மிகுந்த பொறுமையினாற் பெரிய பூமியை வென்றவனும், கூடிய வொளியினாற் சூரியனை வென்றவனும், விளங்குகின்ற கீர்த்தியாற் பூரணைச்சந்திரனை வென்றவனும். எ - று.

உவவு - உவாவென்பதன்றிரிபு. உவா - அமாவாசை பூரணைகள், இவற்றுள் நாண்மதியென்றது நோக்கிப் பூரணை யெனப்பட்டது. (௪)

ஆணையத னால்வடவை யங்கியினை வென்றான்
கோணையவலி யாற்குலவு மேருவரை வென்றா
னேணையுறு முளவலியி னேரிமையம வென்றான
வீணைவினை யானமிதுன கின்னரமும வென்றான்.

(இ - ள்.) கட்டளையினாலே வடவாமுகாக்கினியை வென்றவனும், அழியாத வல்லமையால் விளங்குகின்ற பெரிய மேருமலையை வென்றவனும், நிலையுடைமைதங்கிய மனவலியினாலே அழகிய இமாசலத்தை வென்றவனும், வீணைத்தொழிலினால் மிதுன கின்னரங்களை வென்றவனும். எ - று

வடவை - பெண்குதிரை. ஈண்டுப் பெண்குதிரை முகமுடைய அக்கினியையுணர்த்தியது இது சமுத்திரமானது தன் எல்லை கடவாதிருக்க இறைவனாற் கடலிற் றாபிக்கப்பட்டது இது எவற்றையுந் தீயாலழிக்குந் தருணத்தில் வெளிப்படுவது. இதனைக் கடையனலென்றும், ஊழித்தீயென்றுஞ் சொல்வதுமுண்டு. (௫)

கைக்கொடையி னாலெழுக ருமபுயலை வென்றான்
மெய்க்கணழ காலுருவ வேண்மதனை வென்றான
வைக்குநிதி யாலளகை மன்னவனை வென்றா
னெக்குமிகு போகமதி லிந்திரனை வென்றான்

(இ - ள்) கைக்கொடையினாலே, (கைம்மாறு கருதாத) கரிய சத்த மேகங்களையும் வென்றவனும், சரீரத்திலுள்ள அழகினால் அழகிய மதவேளை வென்றவனும், வைக்கின்ற நவநிதிகளால் அளகாபுரிக்கிறைவனாகிய குபேரனை வென்றவனும், எங்கும் மிக்க போகத்தால் இந்திரனை வென்றவனும். எ - று.

எங்கும் - எக்கும் வலித்தல

எழுபுயல்களா—சமவாத்தம் - ஆவர்த்தம - புட்கலாவர்த்தம் - சங்காரிதம்-துரோணம் - காளாமுகி - நீலவாணமெனபபடும. இவைமுறையே மணி - நீா - பொன பூ - மண - கல - தீக்களைப பொழிவன

எழுகருமபுயல - எழுகின்றகரியமேகமெனினுமமையும.
வேண்மதன - இருபெயரொட்டுபபணபுததொகை (௬)

தெளளுகலை யாறபெரிய சேடனையும வெனறு
ளுளளமகிழ நானமறையு மோதியதி றததாற
றளளரிய நீதிபுகல சாததிரம றிநதான
தொளளையறு தததுவசொ ரூபமுமு ணாநதான

(இ - ள்) தெளிந்த கலைஞானஙகளாற் பெரிய ஆதிசேடனையும் வெனறவனும், மனமகிழும நானகு வேதஙகளையுமோதிய திறததினல், தளளுதறகரிய நீதியுரைக்குஞ சாததிரஙகளை யறிநதவனும, துனபமறற தததுவசொருபததை யுணாநதவனுமாவான எ - று (௭)

வேறு.

உருவ வானே தீவினையை யொறுத்தும விததி யாதீசன
மருவு கேமங் கரனனமை வளாககு ஞான கெமமியனே
பொருவில சுபல னெனவைவா புரைதீ ரமைசச ருளாபகைஞா
குருதி பருகித் தரைதெவிடடுங கூாவேற சோம காநதனுககே.

(இ - ள) சததுருககளுடையஉதிரததைப்பானஞசெயதுமாமிசத்தைத் தேக்கெடுக்குங கூாமைவாயநத வேறபடைதாஙகிய சோமகாநதனுககு, உருவவான - தீவினைகளை யொழிககும விததியாதீசன - பொருநதிய கேமஙகரன - நனமையைப பெருகச்செய்யும ஞானகெமமியன - ஒப்பிலலாத சுபலன எனறு குற்றமிலலாத மநதிரிகள ஐவருளா. எ - று.

ஓதி யுணாநத மதியொளியா றுடைய பொறிபோற பயபபடலா
னீதி யுணாநது வழிநிறகு நிகரி லமைசசா தமைககூட்டிக்
கோதி லுலகம பொறிபததாக கூறக கோமான பணிமுடிததிட
டேதி லரையா நிலஙகொளள வெணணு மெணணம பெரிதுடையாா.

(இ - ள) கற்றறிநத ஞானவொளியுடைய சோமகாந்தனுககு, உடைய ஐம் பொறிகளபோலப பயனபடுதலால, நீதிமாாககததை யறிநது (அதன வழியில)நிறகும ஒபபிலலாத மநதிரிகளேக்கூட்டி, குறறமிலலாத வுலகமானது (அவனுக்குப்) பததுப பொறிகளெனறு சொலல, அரசன பணிததவறறை நிறைவேறறி அயலரசா பூமியைக கைககொளளுமபடி கருதுங கருததை மிகுதியாகவுடையவாகள. எ - று (௮)

கிரண மெறிககு மணிககொடிஞசிக ளோ்தோ ளாறுவா யிரததிரட்டி-
கரட மதஙகொப புளிததிழியுங களிறு பதினு யிரமாகும
விரவுநிறததுப பலபரியும விளமபிற பதினு யிரததிரட்டி
யரவ மலியும படைததானைக களவின ருகு மவனறனககே.

(இ - ள் ) அசசோமகாந்தனுககு, கிரணஙகள் வீசும இரததினக் கொடிஞ்சியானது விளங்குகின்ற தோகள ஆறுயிரம் கனனமதமானது கொபபுளிததுப் பாய

கின்ற யானைகள் பதினாயிரமாகும். கலந்த பல நிறத்தையுடைய குதிரைகளுஞ் சொல்லுமிடத்தில் இருபதினாயிரமாகும். ஓசைமிக்க ஆயுதத்தை யேந்திய சேனைக்கு எல்லையில்லாததாகும். எ - று.

தானை - காலாள் இச்செய்யுளால் அம்மன்னனுடைய சதுரங்க சேனையின் அளவை சொல்லப்பட்டது. (௧௦)

கற்பால வடமீன் புறங்கண்டாள் கவினு லிரதி சசிகமலை
பொற்பா ரரம்பை திலோத்தமையைப் பொருது புறங்கண் டாளாய
னிற்பாற கிழமை பூண்டறங்க ளெடுத்தாள் சுதன்மை யெனும்பெயரா
ணற்பயர் சோம காந்தனுயி ரிரண்டா மென்ன நண்ணினாள்.

(இ - ள்.) சோமகாந்த னில்லக்கிழமைபூண்டு இல்லற நடத்துபவள் சுதன்மையென்னும் பெயரினள், கற்பினால் அருந்ததியை வென்றவள்; அழகினால் இரதி - இந்திராணி - திருமகள் - அழகமைந்த அரம்பை - திலோத்தமை முதலானோரைவென்றவள்; நல்ல வுலகமானது சோமகாந்தனுக்கு உயிரிரண்டாமென்று சொல்லும்படி பொருந்தியவள் எ - று.

வடமீன் - அருந்ததி, வடக்கிலுள்ள நட்சத்திரம் வடதிசையிற் பல நக்ஷத்திரங்களிருப்பினுஞ் சிறப்புநோக்கி அருந்ததியையே யுணர்த்தியது. (௧௧)

இன்ன சுதன்மை வயிறுதித்தா னேமகண்ட னெனும்பெயரான்
கொன்னும் பதினா யிரம்யானை கோணா வலியான் பகைத்தெதிர்ந்த
மன்னர் நடுங்கப் புகையுயிர்க்கு மடங்க லனையா னிவர்பலரு
துன்ன வளர்செங் கோலோச்சிச் சோம காந்தன் வாழ்ந்திடுநாள்.

(இ - ள்) இத்தகைய சுதன்மையென்பாள் வயிற்றில் ஏமகண்டனென்னும் பெயரையுடைய புதல்வன் பிறந்தனன் அவன் பெரிய பதினாயிரம் யானைகளின் அழியா வலியுடையவன், பகைகொண்டெதிர்ந்த அரசர்கள் நடுங்கும்படி புகை யுயிர்க்கின்ற ஆண்சிங்கத்தையொத்தவன் இவர்களெல்லாரும் நெருங்கியிருக்க, சோமகாந்தன் வளர்கின்ற செங்கோலைச்செலுத்தி வாழுங்காலத்தில் எ - று. (௧௨)

பண்டு புரிந்த தீவினையாற் பாழி யுடம்பிற் குட்டநோய்
மண்டி யெழுந்து பிணங்குருதி வழியு முடைநீர் சீயுனைந்தங்
கொண்டு மணிமந் திரமருந்து குயிற்றுப் புரியுந் தொறுமந்தோ
மிண்டி வளர வெய்துயிர்த்து மேவந்தன வெறுத்தங் கிதுசெய்தான்.

(இ - ள்) சன்மாந்தரத்திற்செய்த தீவினைச்சம்பந்தத்தினால், பெருமை தங்கிய (தன) தேகத்திற் குட்டநோய் மிகுந்தெழுந்து, பிணமும் உதிரமும் சொரிகின்றமுடைநீரும் சீயும் இவைமுதலியனவும் பொருந்தி, மணி மந்திர மருந்துகளையோசித்துச் செய்யுந்தோறும், ஐயோ! அதிகரித்துவளரப் பெருமூச்சுவிட்டு, சோமகாந்தன (போகங்களை) வெறுத்து இவ்வாறு செய்தனன். எ - று.

மணி - வாலரசகுளிகை. (௧௩)

வேறு.

வெய்மலி மடங்கலேற றணையின வைகியே
வியவரி னமைச்சரை விளிப்ப மற்றவர்

பயனுற வந்தடி பணிந்தெ ழுந்தபின
னயமொழி யாலுள னைந்து கூறினன்.

(இ - ள.) வெற்றிமிகுந்த சிங்காதனத்திலிருந்து,வேவுகாரர்களால் மந்திரிகளை யழைக்க, அவர்கள் பயனபெறும்படி வந்து (மன்னவனுடைய) பாதங்களை நமஸ்கரித்தெழுந்த பின்னர், (சோமகாந்தன) மனமுவந்து இதமாகிய வார்த்தைகளாற் சொல்லலாயினன எ - று

மடங்கலேற்றணை - ஆணசிங்கங்களசுமந்த பீடம் (கச)

பொருந்தலர் பகைகெடப் பொருது வென்றனென
றிருந்திய வுலகெலாஞ் சிறப்பிற் காத்தனென
மருந்துணு மமரர்க்கு மகமு மாற்றினென
விருந்தினர் முகமலர் விளக்கங் கண்டனென

(இ - ள) சத்துருக்கள் பகைமையொழியும்படி (அவர்களுடன்) போர்செய்து வென்றேன, திருத்தமாகிய வுலகமுழுவதையுஞ் சிறப்புடன காத்தேன, தேவாமிர்தத்தைப் புசிக்கும் இமையவர்கட்கு யாகங்களுஞ்செய்தேன அதிதிகளுடைய முகமாகிய மலர்கள் மலர்ச்சிபெறச்செய்தேன எ - று (கரு)

சோலையோ டறக்குளந் தொட்டு மோதனச்
சாலையோ டனைத்துள தருமமாக்கியு
மாலைவாயக் கருமமென வடாக்கு நோயதவிர்
நூலையா னறிந்தில னுணித்த கேளவியீர்

(இ - ள) நுட்பமாகிய நூற கேளவியையுடையவர்களே! சோலைகளுடன தருமத்திறகாகக் குளங்களைத்தோண்டியும, அன்ன சத்திரத்துடன உள்ளனவாகிய தருமங்களையெல்லாஞ்செய்தும, ஆலைவாயிலகப்பட்ட கரும்பைப்போல(என்னைத்) துன்புறுத்தும நோயை யொழிக்கத்தக்க நூலினை யானறிந்திலேன எ - று

அனைத்துளதருமம - உண்டாகிய பிறதருமங்கள தருமம பலதிறப்படும் அவற்றுட் சிறந்தது முப்பத்திரணடுவகைத்து அவற்றை,

காஞ்சிப்புராணம்

"தெய்வந்தென புலத்தார பூத மானிடம பிரம மெனறே
யைவகை யெச்சம பூர்த்தந் துறந்தவர் மடங்க ளனபு
செய்யுமில் வாழ்வாரக் கில்ல மனைக்குப கரணந் தேமபூப்
பெய்தமை தண்ணீர்ப் பந்த ரெங்களும் பிறங்கு சோலை

இரப்பவர் குருட ரெவவ முற்றவர் புரத்தல் வெந்நோய
துரக்குநன மருந்து தூய மகவினை யோம்பல் சுண்ணம
பரித்தபார் கடைமேய் யெண்ணெய் பைமபுனல் குளிப்ப வேண்டி
மருக்கிளர் தூவர்க ளாதி மலரணை நிலனென கன்னி

கடிமணம் விளக்கு மாருக கடனெழித் திடுத லீச
னடியவர் விழைவ வீகை யக்கமா மணிவெண் ணீறு
படியிலாக் கடவுட் பூசை யுபகர ணங்கள பாசந்
தடிதரு வேத வாயமைச் சைவநூல புராண நலகல.

சிவபிரா னடிக்கீழ்ப் பத்தி செவியறி வுறுத்த லோடு
மூவகையி னபயம் யார்க்கும் வழங்குத லுள்ளிட் டோது
நவையிரி யறமெண் ணனகு நாடொறு நிகழ்ச்சி மாணப்
பவநெறி துரக்கு ஞானப் பைந்தொடி நிறுவிப் பின்னா"—என்பதனுணர்க.

சோமனே யெனவொளி துலங்கு மாட்சியாற்
சோமகாந் தப்பெயர் துன்னி னோனுட
லாமநோ யழிக்கவு நாட்டி னீங்குறுந்
தோமறு வுளத்தையுஞ் சுடுதல் வேண்டுமால்.

(இ - ள்.) சந்திரனேயென்று சொல்லும்படி ஒளிவிளங்கும் மேம்பாட்டினாற் சோமகாந்தனென்னும் பெயரையடைந்தேனைப் பயத்தைத்தருங் குட்டநோயானது உடலையழிக்கவும், நாட்டினின்று நீங்குறுந் குற்றமபொருந்திய மனத்தையுஞ் சுட வேண்டும். எ - று (கஎ)

இந்துமூன் றடுக்கிய வமளி மீமிசை
யிந்திர னணிவீற் றிருந்த தேசுற
நொந்துமவாழ்ந் திருக்கவே நோக்கு மெனனுடல்
சிந்தவே வாளினாற் சிதாத்தல் வேண்டுமால்.

(இ - ள்) மூன்றடுக்கிய பஞ்சசயனத்தில், இந்திரனும் மன நாணமுறப் பொருந்தியிருந்த அழகழியும்படி நோயுற்றும் வாழ்ந்திருக்கவே கருதும் என்னுடலைச் சிதறும்படி வாட்படையால் வெட்டுதல் வேண்டும் எ - று.

இந்திரனுண வீற்றிருந்த தேசுற என்பாடமாயின், ஏசுதலுறும்படி எனக. இந்திரன் என்பதன் பகுதியில் உயர்வுசிறப்பும்மைதொக்கது (கஅ)

பலபல வுரைப்பதென் பண்டை தீமையுங்
குலவிய பொழுதுநோய் குமைதரு தீமையும்
புலமையின் மிகுந்துளீர் புந்தி செய்மினோ
நலவழி யினிவனை நாடிச் சேறலே

(இ - ள்) நூற்புலமையின் மேம்பட்டுள்ளவர்களே! பல பல வார்த்தைகள் சொல்வதில் பயனென்னை? பழைய வினைத்தன்மையும் (தீமை) பொருந்திய காலமும், (குட்ட) நோய் துன்புறுத்துந் தன்மையும், மனதில் யோசிப்பீர்களாக இனி வனத்தைப் பொருந்திச்செல்லுதலே நலமான வழியாகும் எ-று (கக)

என்னினு மேம்படு மேம கண்டனை
மன்னிநும் மோடுமா நிலத்தைக் காக்குமா
றன்னியென் பொறையவன் பாங்க ராகுது
நன்னினு மென்னினுஞ் சார்பி னென்றனன்

(இ - ள்) என்னைக்காட்டிலும் மேம்பட்ட ஏமகண்டனை உங்களுடனிருந்து பெரிய பூமியைக் காக்கும்படி சொல்லி, என் சுமையை யவனிடத்திற் (சேரச்) செய்வோம் (இரசமயம்) தன் காரியத்திலும் என் காரியத்திலுஞ் சார்ந்திருப்பீராக. எ-று.

ஆங்கவ னுளத்துய ரலைப்ப வங்ஙனே
சோர்ந்தன னிணைமிசை சூழ்ந்து ளாரெலாம்

மீாநதவுள ளத்தரா யேங்கி யன்மைமயிற
சாாநதவன பரோநதுயா தாமு மெய்தினா

(இ - ள) பொருந்திய வுள்ளததில், துனபமானது வருதத, அப்பொழுதே சிஙகாதனததினபேரிலேயே உடல்சோர்ந்தனன் [மூாசசையாயினன] அவனைச சூழ்ந் திருந்த (மநதிரிமாா முதலான) வாகள யாவரும, இரஙகிய மனமுடையவாகளாயக கவலைகொணடு சமீபிததுசசெனறு அவனடையும வருததததைத தாமும அடைநதாாகள. எ - று. (உக)

கண்டவா சிலருளங் கரைநது கணகணீா
கொணடனா சிலாகரங குலைததிட டாாசிலா
தூணடமெற சுடடுவாா விரலவைத தாருடன
மணடிய நோயினை வைதிட டாாசிலா

(இ - ள) (அதனைக) கணடவாகளிற சிலா மனமுருகிக கணகளில நீர்வடித் தாாகள; சிலா கையை நெரிததிட்டாாகள, சிலா மூககினமேல நெடிய சுடடுவிரலை வைததாாகள, சிலா அவனுடலிற பொருநதிய(குடட)நோயைத திட்டினாாகள எ-று.

தெய்வநொாந தனாசிலா சிலாநெரி ததிரு
கைவருந தினாசிலா கையி னெறறுபு
மெயவருந தினாினி வியாதி நீாநதிவற
குயவுமுணா டோமென வுழிதந தாாசிலா.

(இ - ள) சிலா தெய்வத்தை நொநதாாகள, சிலா இரு கரஙகளையு நெரிததுவருநதினாாகள, சிலா கையாலடிததுககொணடு உடல வருநதினாாகள, சிலா இனி இவவரசனுககுக குடடநோயொழிநது பிழைததலுளதாமோவெனறு (மனஞ) சுழனறாாகள எ - று. (உங)

கலவியிற கேளவியிற காககு நீதியின
வலலவாக குறுஙகொலிவ வருததத மென்குவா
தொலவினைப பயனெவா துடைபப ரென்குவ
ரலலுற றிவவகை யழுஙகி னாரெலாம.

(இ - ள) (ஆஙகுறறிருநத) எல்லோரும, கலவியினாலுங கேள்வியினாலும் (பிரசைகளை) இரட்சிககும நீதியினாலும வலலவனாகிய இமமனனனுககு இவவருததம வரலாமோவெனபாாகள, ஊழவினையின பயனை யொழிப்பவா யாவரெனபாாகள; துனபுறறு இவ்வகையாக வருநதினாாகள. எ - று. (உச)

அநககண மவாதமை யமைசசா கையமைத
துககணை கிடநதவ னுழைசசென றுணசெவி
சுககுவைத தூதினா துலஙகு மாணெழின
மிககசாந தாறபியால வீசு விததனா

(இ - ள) அநதககணததிலேயே மநதிரிகள் அஙகுளளாாகை கையினாலமர்ததி, உடலிற்றுச சிஙகாதனத்திலிருநத சோமகாநதனிடஞ் சென்று, ஒள்ளிய காதுகளிற் சுககுவைததூதினாாகள. விளஙகுகினற சிறந்த அழகு மிக்க விசிறியால(மெல்ல) விசிறவிததாாகள எ - று (உரு)

சோகமங் கொழிதரச் சோம காந்தனு
நாகணை யுறங்கிய நாமச் சக்கர
மேகமங் கெழுந்தென மெல்ல வேயெழுந்
தேகன திணையடி யிதயத் தெண்ணினான்

(இ-ள்) அப்பொழுது சோகமொழிதலால், சோமகாந்தராசனும், சேஷ சயனத்திலுறங்கிய அச்சக்கரத்தருஞ் சக்கராயுதந்தாங்கிய மேகவண்ணனுகிய திருமால் எழுந்தாற்போல மெல்ல வெழுந்து, கடவுளுடைய திருவடியை மனதிற் சிந்தித் தான். எ-று. (உகூ)

வெந்திற லரசனுள விளைவு நோக்கிய
மந்திரத் தலைவர்கள் வணங்கிக் கூறுவா
ரிந்திரன் போலவே யிகலகத் டந்தெமைத்
தந்தைதா யினுமிகத் தாங்கி நின்றனை

(இ-ள்) மிக்கவலியுடைய மன்னவனமனத்துற்ற துன்பத்தைப் பார்த்த மந் திரி சிரேட்டர்கள் பணிந்து சொல்கின்றார்கள் இந்திரனைப்போலவே பகைமையொ ழித்து எங்களைத் தந்தைதாயைக்காட்டிலும் மிகவும்(தயையொடு)காத்தனை.எ-று.

அனையநீ யழிபிணி யடாக்குருஞ் செவ்வியி
னினைதரு வனத்திடை யேக விட்டெனை
மனையிடை வாழ்துமேன் மதியின் மிக்குளோந்
தனைநிகா தருமமுந் தகைக்குஞ் சாலவே

(இ-ள்) அவ்வகைய நீ குட்டநோயால் வருந்துங்காலத்தில், தனபஞ்செய யும் வனத்திற் செல்ல (உனை) விடுத்து, அறிவின் மேம்பட்ட நாங்கள் நல்லவீட்டில் (இருந்து)வாழ்வோமாயின்,தனக்குத்தானே சமானமாகிய தருமமும் (எங்களை நோக்கி) மிகச்சிரிக்கும் எ-று

அழிபிணி-துன்புறுத்துநோய் தருமமென்றது ஈண்டுத் தருமதேவதையை.

இருவகை யறம்பொருளீட்டி யாணையா
முருகெழு திகிரிநன் குருட்டி நீதிநூல்
கருதிய வாறுநின் காதற் புத்திர
னொருவனே யுலகெலா மோம்ப வல்லனே

(இ-ள்) இருவகைப்பட்ட தருமமும் பொருளுந்தேடி, ஆக்கினையாகிய நிறமிக்க சக்கரத்தை நன்றாகச்செலுத்தி நீதிநூல் எண்ணியவகையே உன ஆசைப் புதல்வனுகிய ஏமகண்டனொருவனே உலகமுழுவதையுங் காக்கவல்லவன் எ-று (உகூ)

வகைபெறு முலகவன் மதித்தோகக் காக்குமேற்
புகையுமிழ் தழலுமிழ் புலவு வேலினோய்
தகையுநின் னாணையா லீங்குத்த தங்கினு
மிகையலால் யாமெலா மவேண்டு மாறிலே.

(இ-ள்) புகைந்து தீயைச்சொரியும் புலானமணங்கமழும் வேற்படைதாங் கிய அரசனே! அவ்வேமகண்டன மதித்து உலகத்தைக் காப்பானுயின் ஒழிபபடும்.

யும) சயித்த பெருந்தவசிகள் சொல்லுதலால், ஒருநாளும் உமமுடன் செல்வேனல்லது இங்கிருக்கமாட்டேன என்று சொல்லினன். எ - று. (௬௪)

சூறை யாறபொரு தப்ப டுநதுணர் துனறி ளங்கொடி போலவும்
பாறு சூழுயில வேலகள் பாய்நதுப தைக்கு மான்பிணை போலவும்
வீறு மாய்நதுசு தனமை கட்புனல் வீழ நொநதிது விள்ளலு
மேறு போலம ருங்கி ருநதிடு மேம கண்டனி யமபுவான.

(இ - ள்) சுழல்காற்றினற் போர்செய்யப்படும பூஙகொதது பொருந்திய இளங்கொடிபோலவும், யுத்தபூமியிற் சூழ்ந்த கூர்மையாகிய வேலகள் பாயப்பெற்றுத் துடிககினற பெண்மான்போலவும, சுசனமையானவள் விளககமறறுக கண்ணீர்சொரிய மனநொநது இதனைக் கூறவும, ஆணசிஙகமபோலச் சமீபததிலிருந்த ஏமகணடன சொல்கினறான். எ - று (௬௫)

திஙகள செஙகதி ரீதத வானமுந தீயொ டாவொழி வேளவியு
மஙகை பற்றிய நாத னொடுரு மைநத னீஙகிய மாதருந
தங்க மைசசரி னொடு வேநதாத ணநத தேயமு மெனனவே
யிஙக ணினறுற மைபபி ரிநதர சாளு மெணணமி சைநதிலென.

(இ - ள்.) சந்திர சூரியாகளொழிந்த ஆகாயமும, நெருப்பும பசுவுமிலலாத யாகமும, அழகிய கையைப்பிடிதத கணவனுடன் அரிய புததிரனிலலாத மாதாகளும், பொருந்திய மந்திரிகளுடன அரசன் பிரிந்த தேசமும்போல, இவ்விடததிலிருந்து உமமைபபிரிநது அரசாட்சிசெய்யுங் கருததிறகுச சமமதிததிலேன எ - று. (௬௬)

புதகி ரன்கட னின்றெ டுத்தவர் பூசை யாறறியி றநதபின்
பதகி யாறபிதி ரர்கரு நலலவை பணபி னுறறுவ தேயலா
லத்த முயததர சாடசி செயதழி போக மூழ்தவ தலலவே
வைத்த செலவம திததி லேனுடன மாலவ னததுறு வேனென்றான்.

(இ - ள் ) மைந்தனுடைய கடமையாவது பெற்றெடுதத பிதாமாதாககளைப் பூசிதது, (அவர்கள்) மரணமடைநதபிறகு, பிதிராகட்குப பகதியுடன நலல (திலபிணட தாப்பணுதி)கிரியைகளை முறைப்படி செயவதேயலலாமல, பொருளைசசேர்த்து இராசரிகநடத்தி யழியததகக போசஙகளையநுபவிபபதலல (ஆதலின துனபத்தையே) பொருந்திய (இராச) செல்வததை மதித்திலேன. (நானும்) உம்முடனே பெரிய வனத்தை யடைவேனெனறனன. எ - று (௬௭)

தோம கன்றவ மைசச ருநதுணை யாவி யன்னசு தனமையு
மேம கண்டனும வேறு வேறினி தோதும வாரததையெ னுருசுதை
நாம வச்சிர வேலின மனனவ னனறு ஞுயததுள முஙகுளிர்ந
தேம கண்டனை வேறு நோககியெ டுததி ருமபொருள கூறுவான.

(இ - ள்.) குற்றமற்ற மநதிரிகளும உயிர்ததுணையாகிய சுதன்மையும, ஏமகண்டனும் வெவ்வேறு இனிதாகக்கூறிய சொற்களெனனு மமுதை, அசசததைததரும் வச்சிரவேலைததாஙகிய சோமகாநதன் நனறுககச செவியால மடுத்து மனமுஙகளிதது, (புதல்வனாகிய) ஏமகண்டனைத தனியாகப் பாரததுப பெருமபொருளாக வுளளவறறை எடுததுக்கூறுகினறான எ - று. (௬௮)

பிள்ளை மைப்பருவத்து ளாயலை பேதுகொண்டெவன் பேசினை
தள்ளருமபனு வற்றிறத்தொடு தந்தை தாயரை யோம்பியின்
றெள்ளருமபல தான மாதியி யற்றியேகய பூமியின
விள்ளருமபலி பிண்டமிட்டவன மெய்ச்சு புத்திர னாயினும்.

(இ-ள்) (மகனே! நீ) பிள்ளைப்பிராயத்து ளிருப்பவனல்லன; மதிமயக்கங்கொண்டு யாது கூறினை? நீகருத்தற்கரிய நீதிநூற்படி அன்னை பிதாக்களைப் பாதுகாத்துநின்று, இழிவில்லாத பலவகைத் தானமுதலியவற்றைச் செய்து, புண்ணிய பூமியிற் சொலலற்கரிய பலி பிண்டங்களைக் கொடுத்தவன மெய்ச்சத்தக்க புதல்வனானாலும். எ-று. (௩௯)

தாயர் தந்தையர் வார்த்தை யிறறவுருது நின்றிட லேழுத
லாய தன்மம றிந்த புத்திர னாவ தற்கரு மைந்தனே
மேய வென்னுரை கொண்ட மைச்சரி னோடு மேதினி காத்தியென
றேயும வண்ணமி யம்பி யுண்மனை யேம கண்டனொ டேயதினன

(இ-ள்) தாயதந்தைகளுடைய வார்த்தையிலிருந்து பிறழாது நிற்றலே சிறந்த தன்மமென்றறிந்த புத்திரனே பெற்றோர்க்கு அரிய மைந்தனாவான. பொருந்திய என் சொல்லைக்கேட்டு மந்திரிகளுடன உலகினைக் காக்கக்கடவையென்று தக்கபடி கூறி, ஏமகண்டனுடன அந்தப்புரமடைந்தனன் எ-று. (௪0)

ஒருவ ரெயதியி ருப்பி னும்பல ருற்று வைகின ரோவென
மருளும வண்ணநி ழற்றி ருங்கதிர் மாம ணித்திரண் மாளிகைக்
கருத லறகுரு மேற னொன்று காம ருந்தவி செய்திரு
வருமை மைந்தனை முன்னி ருத்திய வற்கு நீதியு ரைக்குமே.

(இ-ள்) ஒருவர் வந்திருந்தாலும பலர் பொருந்தியிருக்கின்றனரோ வென்று மயங்கும்படி நிழல்செய்கின்ற பெரிய கிரணத்தைச் சிந்துஞ் சிறந்த இரத்தினத் தொகுதிகளிழைத்த மாளிகையில, பகைஞர்க்கு இடியேறுபோன்ற சோமகாந்தன அழகிய ஓராதனத்திருந்து, அருமைப்புத்திரனை ஏமகண்டனைத் தன்முன்னிருக்கச் செய்து, அவனுக்கு நீதிமார்க்கங்களை யுரைக்கலாயினன். எ-று. (௪௧)

சோமகாந்தன் வனம்புகத்துணிந்தபடலம் முற்றிற்று.

ஆகந்திருவிருந்தம் - ௪௨௭

## அரசியற்கைப்படலம்.

இருணி றப்பெருங் கடன்மருங் குடுத்தெ தொளி ரிருநிலத் தவர்க்கெல்லாம்
வருண மேநிலை யெனுமிரண் டொடுங்கு வகுத்திடு மாசாரந்
தரும மெனபன வளவில வவையெலாஞ் சாற்றில னவைநிறக
வருமை மைந்தனே யுனக்குரித் தாகிய வரசிய லினிக்கேண்மோ.

(இ-ள்) (சோமகாந்தராசன் ஏமகண்டனை நோக்கி) என்னருமை மகனே! இருள்போலக் கருநிறமாகிய பெரிய கடலை யாடையாகவுடுத்தொளிரும் பெரிய உலகத்திலுள்ளவர்க்கெல்லாம விதித்திருக்கும வருணாசிரம தருமங்கள் அளவிலலாதன.

அவை யாவும் (உரைக்கப்பெருகுமாதலின்) சொல்கிலேன ஆகையிருக்க, உனக்குஇன்றியமையாததாகிய அரசியனீதியைமாத்திரங் (கூறுகின்றேன்) கேட்பாயாக. எ - று.

இச்செய்யுளால் இப்படலத்தின் பயனிதுவெனவிளக்கினா. (௧)

## தினகருமாரம்பம்.

விடியனே முந்துறக் கடிகையைந் தெனத்துயில விடுத்துடற் சுசிசெய்து
கடிமலாத் திரளமளிசோ பள்ளியைக் கடிந்துமே விடமவைகிக்
கொடிய வல்வினைக் குழாத்தினைப் பொடிசெயுங் கோமளப் பொடிபூசி
யடிக ளாகிய குரவனை வழிபடு மமலனை யகத்தெண்ணி

(இ - ள்) பொழுது விடிய ஐந்துநாழிகை முற்படத் துயினீங்கி, தேகத்தைச் சுத்திசெய்து, வாசந்தங்கிய மலர்த்தொகுதி நிறைந்த படுக்கையாகியசயனத்தை விடுத்துப் புறத்தே யமர்ந்து, கொடிய பாவகூட்டங்களை நீறறத்தக்க திருநீறிட்டுக்கொண்டு, தலைவனாகிய ஆசானையும உபாசனாமூர்த்தியையும் மனதிற் றியானித்து எ - று.

இதுமுதல ஒன்பது பாடல்கள் குளகம

மக்களுயிர்க குறுதிபயக்குந் துணையாயவற்றுள் "தெரிந்தோம்பித்தேரினு மஃதே துணை" எனவியந்தோதப்படும ஒழுக்கநெறியே சிறந்தது. அதுவும "மன்னா சீவழிப் பட்டதே மன்பதை" எனக் கூறியவாறு, அரசனநுஷ்டித்தாலன்றி, உலகினரநுஷ்டியாராதலின இவ்வரசன அரசியலை மொழிவதன்முன், நித்திய வொழுக்கத்திற் சிறிது தன்மைந்தனுக்குப் பொதுப்படக் கூறினன (௨)

பரந்த பூமியை யெதிருற நோக்குபு பாரெனப் படுந்தாயே
யரந்தை யின்றியான் றிரிதருந் தொறுமென தடியுன துருமீதே
நிரந்த ரித்துறப் படுமபிழை பொறுவென நெகிழ்ந்தவுள ளகத்தோடு
மிரந்து பின்னிரு மதப்பெருங் களிறதனை யினிதுறத் தியானித்து.

(இ - ள்) விசாலமான பூதேவியை யெதிராகப் பார்த்து, பூமியென்று சொல்லப்படுந் தாயே! துன்பமின்றி யான் சஞ்சரிக்கும பொழுதெல்லாம எனகால உன்வடிவின்மேற பொருந்தப் பரவிப்படிகின்ற குற்றத்தை (எண்ணாது) பொறுத்தருள்கவென்று, உருக்கமானமனதுடனே பிரார்த்தனை செய்து, பின்னா இருமதங்களையுடைய பெரிய யானைமுகமமைந்த விநாயகமூர்த்தியை யினிதாகத் தியானஞ்செய்து எ - று.

இருமதம - கன்னமதம கைமதம் என்பன

நோக்குபு - செய்பு என்னும வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். (௩)

எண்ணி லாகம மறைகட்கெலா முடிவென விருந்திடு மிறைதன்னைக்
கண்ணு றுதிவிண ணவர்களா யிருந்திடுங் கணேசனை மன்மாதி
நண்ணொ ணாத்தனா யகனைநாற பொருளையு நண்ணினா்க் கருள்வானை
யண்ண லாகிய் வனாதியை யனந்தரூ பியையருட் கடலானை

(இ - ள்) கணக்கில்லாத வேதாகமங்களுக்கெல்லாம முடிவாக வீற்றிருக்குந் தலைவனும, திருமால முதலிய தேவர்களாயிருந்திடுங் கணேசனும, மனுதிகளுக்கு எட்டாத முதல்வனும, அடைந்தவர்களுக்கு (தர்மமுதலிய) நால்வகைப்பட்ட புருடார்த்தங்களையுங் கொடுப்பவனும், கடவுளாகிய அநாதியும, அநந்தவடிவனும், கிருபா சமுத்திரமுமானவனும். எ - று

நாற்பொருள்கள் - அறம் - பொருள் - இன்பம் - வீடு என்பன. (௪)

சகல லோகமு மளித்திடுங் காரண மானதத் துவன்றனை
யகனு ருதவிக வினங்களே யாயினு மடுத்தவாக் கறுபபானைப்
புகல்வி நாயகக் கடவுளைப் புலரியின வணஙகுகின் றேனென று
மிகலசெய் காதலின் வழுததிமற றமரரை வேறுவே றுறநோககி.

(இ - ள) சாவலோக ரக்ஷண்ணிய காரணமாகிய தததுவசொரூபியும்,தன்னை யடுத்தவாகளுக்கு நீஙகாத விககினங்களே யானாலுந தீர்கக வலலவனுமா யிருக்கினற விநாயகப்பெருமானைப பிராதகாலவநதனஞ செயகினறேனெனறு, மிகக ஆசையுடன தியானிதது, பின்பு தனிததனி தேவவணககஞ செயது. எ - று. (௫)

உரக மாலையான சநதிர சேகர னுமுமையயி னுரிசூழ்நத
பரமன் பேரழ கினன்பெருங கருணையன பண்ணவ ரனைவோர்க்கும்
வரமெ லாஙகொடுத தருளபவன பாரபபதி மணாளனல வழிவாராப
புரமி லாவகை யழிததபுண ணியனறனைப புலரியிற றொழுகினறேன.

(இ - ள) சாப்பாபரணமணிநதவனும, சநதிர சேகரனும, புலிததோலை யாடையாக வணிநத பரமனும், சலட்சணனும, தயாநிதியும, தேவாக ளெல்லாருககும வரஙகளெல்லாவறறையுங கொடுததருளபவனும, உமாநாயனும, நலவழியில வராத திரிபுரங்களை நிலலாவழியாக எரிதத புண்ணிய மூாததியுமாகிய சிவபெருமானைப் பிராத கால வநதனஞ செயகினறேன (எனறு பணிநது.) எ - று. (சு)

பெதத முததியும பரப்புபெண ணரசியைப பிறழுமுக கணணுளைத
தததுவ ததினுக காதிகா ரணியையத தததுவங் கடநதாளைச
சித்தர் தேவாக டுதிகொளு மிறைவியைத திகழ்சமு சாரததின
புத்தி நீஙகுமா றருளுமபாரப பதிதனைப் புலரியிற றொழுகினறேன்.

(இ - ள) பெதத முததிகளை யருளபுரியும் பெணகளுயகியும, பிறழ்கின்ற மூன்று கணகளையுடையவளும, தததுவஙகளுககு ஆதிகாரணியும, தததுவாதீதியும, சிததியாளாகளுந தேவாகளுந தொழுமிறைவியும, விளஙகுகினற சமுசார பநத வினை நீஙகுமபடி யருளபவளுமா யிருககினற பார்பபதி தேவியைப பிராதகாலவநதனஞ செயகினறேன் (எனறுபணிநது) எ - று. (எ)

தொக்க பாவததைச சததுருக குழாததினைத தொடாநதுசென றிறுப்பா
தகக பூமகண மணாளனைப பாறகடற றனிததுயி லமாவானை [னைத்
மிகக வீரனுய வேதிய ரிடாதப வேறுவே றுருககொணடு
புகக மாயனை யிநதிர னிளவலைப புலரியிற றொழுகினறேன.

(இ - று) தொகுதியான பாவததையும, சததுரு கூடடததையுந தொடாநது சென்றொழிபபவனும, தகுநத தாமரைமலரில வசிககுந திருமகள் மணாளனும, திருப் பாற்கடலில ஒபபற்று (யோக) நிததிரைசெயபவனும, மேமபட்ட வைதீகாசகு இடரகற்றும்படி(தசாவதாரமுதலிய) வெவவேறுவடிவெடுத்த மாயாவீரனும, உபேநதிரனு மாயிருக்கினற விஷ்ணுமூாததியைப் பிராதகால வநதனஞ செயகினறேன (எனறு பணிந்து) எ - று.

இநதிரனிளவல் - இந்திரனுக கிளேயோன் ; உபேநதிரன்; மாவலியின் கர்வ பங்கநிமித்தம, இந்திரன்றுயாகிய அதிதியின் கோரிக்கைபபடி அவள் வயிற்றில் வாமனனுயவதரிதத முறையில திருமால இந்திரனுக்கு இளவலானதென் றறிக. (அ)

பெருமை நயக்குமெண் ணத்திணை யுடையவன பேணறி வொடுகன்ம
மருவு தறகுறு காரண மானவன மறையுரு வினனித்த
மிருளுந் தானவர் மாயையுந் துரப்பவ னியாவருந் தொழுதேத்தும
பொருவி லாதபே ரொளிவளர் பரிதியைப் புலரியிற றொழுகினறேன்.

(இ - ள்) பெருமைதங்கிய எவ்வகை யிலக்கங்களுக்குங் கருத்தனும், காக்கத்தக்க ஞானமும கருமமும (ஆதியவற்றின பலனகள்) அடைதற்குக் காரணமானவனும், வேதரூபியும், நாடோறும உலகவிருளையும அசுரமாயையையுந் தவிர்ப்பவனுமாகி எல்லோரும் பணிந்து துதிக்கும ஒப்பில்லாத பேரொளி வளரும சூரியபகவானைப் பிராதகால வந்தனஞ் செய்கினறேன எ - று. (௧)

முறையி னிவ்வகை வழுத்தியே யேனைய முடிகொளவா னவர்தமமைக
கறையி லாமுனி வோர்களை யனபினுற கருத்துறத் தொழுதேத்தி
யறையு நாடகடன விதிப்படி முடித்தபி னறங்களின வழுவாமே
நிறையும வேதிய ரமைச்சரா தியரொடு நிலமபுரப பதுமாண்பால.

(இ - ள்) கிரீடமணிந்த மற்றைய தேவர்களையும, களங்கமில்லாத முனிவர்களையும அன்புடன மனத்திற பொருந்த இவ்வாறு முறைப்படி துதித்து, சொல்லப்படும நித்தியானுட்டானத்தை விதிமுறையே செய்து, அதனபினனர் நீதி தவறுதபடி மிகுதியாகிய அந்தணர் மந்திரர் முதலியவரோ டளவளாவி உலகினைப் பாதுகாப்பது மாட்சிமையாகும. எ - று

இரண்டாஞ் செய்யுண்முதல் இதுகாறுங் கூறியவற்றை,

நித்தியகருமநெறி

"சீதங்கு செங்கதிர்கீழ்த் திகெழுமுன னாககடிகை
யோரைந் தெனவெழுந்தே யோரந்து.
சுசியெனினு மனறெனினுங் கூடியமெய்ச சுத்தி
யிசைவாகச செய்துநீ றிட்டு
ஒணசமயி ருத்திரனை நெஞ்சிற சதாசிவனை
யெணகிரியை யானுமாங் கே
யோகிவிந்து நாதம புருவனடு வுணஞானி
சோகமபா விததிடுக தோயந்து
இனன லறவியனற வாறுசெபித் தேமூல
மனனுமரன றுளிணையும வாழ்த்து"—என வருவனவற்றானும்,

இனியவை நாற்பது

"கணமூன றுடையானறுள சோதல கடிதினிதே
தொனமாண் டுழாயமாலை யானைத் தொழலினிதே
முந்துறப பேணி முகநான குடையானைச
சென்றமாந் தேத்த லினிது."—என வருவதனானுமுணர்க. (௧௦)

நீதி போதித்தல்.

அறத்துப்பால - இல்லறவியல

வேறு

ஒருப்படு மறத்தி னாலே யொண்பொரு ளினபஞ் செம்பொற
பருப்பதங் கடலபோல வந்து பயப்படு மதனைக் கேண்மோ

விருப்பொடு வெறுப்பி லாத மிகவெண் குணத்தோ டொன்று
மிருப்பவ னாவ னன்னா னிணையடி வணங்கல் வேண்டும்.

(இ - ள) (மகனே! நீ யடையவேண்டிய நாலவகைப் புருடார்த்தங்களுள்) ஒருமைப்பட்ட தருமத்தினாலே ஒளிரிய பொருளும் இன்பமும் மேருமலையுங் கடலும் போல வந்து பயனபடும் அதனைக் கேட்பாயாக விருப்பும் வெறுப்புமில்லாத மேம்பட்ட எண்குணத்தோடு கூடியிருக்கும் கடவுள் எவனோ அவனுடைய உபயபாதங்களைப் பணிதலவேணடும். எ - று.

இதுமுதல இருபத்துநான்கு அதிகாரங்களாலும், முப்பத்தொரு செய்யுள்களாலும் இல்லறவியல் சொல்லலாயினா

இச்செய்யுளால், * தெய்வந்தொழு எனக் கூறியதாம். இதனை,

திருக்குறள்.

"அகர முதல வெழுத்தெல்லா மாதி - பகவன் முதற்றே யுலகு.
வேண்டுதல்வேண் டாமை யிலானடி சோந்தாக்-கியாண்டு மிடும்பை யில.
அறவாழி யந்தணன் றாளசோந்தாக் கல்லாற-பிறவாழி நீந்த லரிது
கோளில்பொறியிற் குணமிலவேயெண்குணத்தான-ற்றாளை வணங்காத்தலை."

என்பதனானும்,

முந்நொள்ளாயிரம்

மன்னிய நாண்மீன் மதிகனலி யென்றிவற்றை
முன்னம் படைத்த முதல்வனைப்—பின்னரு
மாதிரையா னாதிரையா னென்றென் றயருமா
லூாதிரைநீா வேலி யுலகு.''—என்பதனானுமுணாக. (கக)

வேறு

அறமுதற் பொருளல் கமல னணையா
னிறுவுதற் கேதுவாய நிகழு மாமழை
வறுமையெய்தாவகை வயங்கு வேளவியை
யுறுதரு மங்களை யுஞற்றல் வேணடுமால்.

(இ - ள.) உலகமும், (அதனிடத்தில) அறமும் பொருளும் இன்பமும் மலாகிதனுகிய கடவுளருளால நிலைபெறுதற்கு ஏதுவாக நிகழ்கின்ற மழை வளமானது குன்றுவண்ணமாகப் பிரகாசிக்கின்ற யாகங்களையும், பொருந்திய தருமங்களையுஞ் செய்யவேண்டும். எ - று.

இச்செய்யுளால மழைவளம் பெருக்கு எனக் கூறியதாம். இதனை,

ஷை வான்சிறப்பு

"வானின் றுலகம் வழங்கி வருதலாற் - றானமிழ்த மென்றுணரற் பாற்று.
துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பாக்குத் - துப்பாய தூஉ மழை.
சிறப்பொடு பூசனை செய்யாது வானம் - வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம் - வானம் வழங்கா தெனின்."—என்பதனானும்,

* இவ்வதிகாரப் பெயர்களும் அவ்வவ்விடங்களிற் காட்டப்பட்டன.

நான்மணிக்கடிகை.

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையுந்
தவமிலா ரில்வழி யில்லை தவமு
மரசனு மில்வழி யில்லை யரசனு
மில்வாழ்வா ரிலவழி யில." —என்பதனானுமுணர்க. (கஉ)

விழுப்பொரு ளனைத்தையும் விளங்கத் தெள்ளுபு
முழுப்பவம் பொறியையு முனிந்து நீத்தவர்
வழுப்படா மறையவர் மற்றைக் கலவியோர்
குழுப்புறத் தாதரங் கூறல் வேண்டுமால்.

(இ - ள்) சிறந்த (அறமுதலிய) நாற்பொருட் பயனையும் (இத்தன்மையன வென்று) விளங்க வுணர்ந்து, பஞ்சேந்திரியங்களையும் முற்ற நிக்கிரகித்த சாதுக்கள் - குற்றமில்லாத அந்தணர்கள் - ஏனைய குலத்து வித்துவான்கள் (இவர்கள் கூடிய) சபையில் ஆசையதிகரித்தல் வேண்டும். எ - று.

இதுமுதல் மூன்று செய்யுள்களால் பெரியோரை வழிபடவெனக் கூறியதாம்.

இதனை, ஷை. நீத்தார்பெருமை.

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து - வேண்டும் பனுவற் றுணிவு.
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் - செயற்கரிய செய்கலாதார்." —என்பதனாறிக (கங)

நீத்தவ ராதியோர் நெருப்பு யிர்த்திடிற்
காத்திடுங் கடவுளுங் கலங்கு மாதலா
லேத்துவ ரேகட னென்று மைந்தனே
யாத்தர்கள் பொறுப்பரென் றவம தித்திடேல்.

(இ - ள்) புத்திரனே! துறந்தோர் முதலியோர் (எவற்றையும்) பொறுக்கத் தக்கவரென்று (அவரை) அவமதித்திடாதே அவர் மனங்கனறினால் (நம்மைக்) காக்கின்ற கடவுளாலும் அமைக்கவொண்ணாத தீங்குறும். ஆதலால், அவரை யென்றும் வந்தித்தலே உன்கடமை. எ - று.

இதனை ஷை, ஷை,

"ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா - னிந்திரனே சாலுங் கரி
குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி - கணமேனுங் காத்தலரிது." —
என்பதனானுணர்க.

குரவரைப் பெரியரைக் கூறு மாகம
விரவுறு மறைகளை மேதகு முபடி
பரவுத லலதவர் பாங்கர் நிந்தனை
கரவுற வுளத்தினுங் கருதொ ணாதரே.

(இ - ள்.) குரவரையாயினும், பெரியோரையாயினும், சொல்லுகின்ற ஆகமங்களையாயினும், பொருந்திய வேதங்களையாயினும், சிரத்தையுடன் பூசிப்பதலலது அவர்களிடத்தில், இகழ்வதற்கு மறந்தாயினும் மனதில இடங்கொடுக்கக் கூடாது.

இதனை, ஷை, ஷை,

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து - மறை மொழி காட்டி விடும்.

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்-செந்தண்மை பூண்டொழுகலான்" எனபதனானும்,

**கந்தபுராணம்.**

"தந்தைசொன் மறுப்பவாக டாயுரை தடுப்போ
ரந்தமறு தேசிகாத மாணையை யிகந்தோர
வந்தனைசெய் வேதநெறி மாறினாகண மாருச
செந்தழல வாயநிர யத்தினிடை சோவார"—என்பதனானும்,

**சூதசங்கிதை**

"அண்ணலம் பரனை யாசா ரியன்றனை யவம திததோ
ரெண்ணருங் காலம பவ்வீ யிடைததுளை கிருமி யாவா
தண்ணமா ரிவரா யெண்ணு திழிவுரை சாற்றி னோர்கள்
திண்ணமண ணவாவெ றுககத தீமுய லகனேய கொளவாா."—என்பத
னானுமுணர்க. (கரு)

தேங்குவின் போகமுஞ சிறநத முததியு
மீஙகுறு மாக்கமு மினிது நலகலா
லோஙகிய வறததினை யுளமுன் மூன்றினும்
பாங்குற நித்தலும பரிநது செயதியால.

(இ - ள்.) மிகுந்த சுவர்க்க போகததையும், சிறநத மோட்சத்தையும இவவுலகிற் பொருநதிய செல்வததையும் இனிதாகக கொடுததலால், உயாநத தருமததை, மனதிற கருதும (அறமபொருளின்பங்களாகிய) மூனறிலும, திருததமாக நாடோறும் ஆசையுற்றுச் செயக எ - று

இதுமுதல் மூன்று செய்யுளகளால் தருமததை விரும்புஎனக கூறியதாம.

இதனை, ஷை அறனவலியுறுததல

"சிறப்பீனுஞ் செலவமு மீனு மறததினூஉங - காகக மெவனோ வுயிாககு.
ஒலலும வகையா லறவினை யோவாதே - செலலுமவா யெலலாஞ செயல "என
பதனறிக (கசு)

வழுககறு மறததினை மறறுச செய்துமென
றொழுககிடா தொலலுறும வகையின னசொனு
மழுககெனு முளததழுக் காற வாமுத
லிழுககுறு வெகுளியு மினறிச செயகவே.

(இ - ள) (தேகம நிலையறறதாதலின) உனறைச் செய்யககூடிய குற்றமற்ற தருமததைப் பினனாச செயவோமெனறு நழுவவிடாமல, கடுஞசொலலும மனததழுக் காகியபொறாமையும, ஆசையும இழிவாகிய கோபமும முதலியன கலவாமல (விரைந்து) செயயக்கடவாய். எ - று.

இதனை, ஷை ஷை.

"அழுக்கா றவாவெகுளி யின்னசொன் னனகு - மிழுக்கா வியன்ற தறம்.
அனறறிவா மெனனா தறஞ்செயக மறறது - பொன்றுஙகாற பொன்றாத் துணை."
எனபதனானும,

பழமொழி

"காலைசசெய் வோமென் றறததைக கடைபவிடிததுச
சாலச்செய் வாரே தலைப்படுவார்—மாலை
கிடநதா னெழுத லரிதானமற் றெனகொ
லறங்காலை செய்யாத வாறு"—என்பதனுறுமுணாக (௧எ)

அன்புறு மறத்தினு லடுக்கு மினபமே
யின்பெனத் தக்கதா லேனை யினபெலாந
துன்பமும பழியையுந தோற்று மாதலால
வன்புறு மறததினை மறபபிற் கேடுறும

(இ - ள்) அனபமைந்த அறநூற்றினால (தன மனைவியை அடுக்கும இன்பமே இனபததை (புகழுடன) கொடுக்கததக்கதாம பிற (மாதருடன புணாதல முதலிய) இன்பஙகளெலலாம பாவததையும பழியையு முணடுசெயயுமாதலால், தீமையற்ற தருமததை மறந்தாற கேடு விளையும (எனறுணர்க.) எ - று.

இதனை, ஷை ஷை.

"அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை - மறததலி னூஉஙகில்லை கேடு.
அறததான வருவதே யினபமற றெலலாம - புறதத புகழு மில"-எனபதனுனும,

புறநானூறு

"எளிதென விகழா தரிதென வரையாது
நமக்குநீா நலகுதி ராயின மனததிடை
நினைபபினும் பிறககு மொழியினும மளவுந்
தொழிற்படிற் சினைவிடுஉப பயககு முணாததி
னிவணு முமபருந துணையே யதனுற
றுறைதொறுந துறைதொறு நோககி
யறமே நிறுததுமின றறிநதி சினோரே."எனபதனுனுமுணாக (௧அ)

வேறு

பிரம சாரி வனத்துறைவோன பேணுந றுறவி தெனபுலததா
குரவா தேவா விருநதொககல கோககண மறையோ ரிறநதோாக
ளிரவ லாள ருறுபபிலாக ளெய்தும பிணியா ளாகண்முதியோா
விரவு பாலா சிசுதமது மிசையா ரிவரை யோமபு கவே.

(இ - ள்) பிரமசாரிய விரதா - வானப்பிரததா - காககததகக சநநியாசிகள - பிதாதேவாகள - ஆசாரியா - தேவர் - விருநதினா - சுறறததாா - பசுககள - வேதியாகள - இறநதவாகள - (சாாபிலலாத) தரிததிராகள - அஙகவீனாகள் - பொருநதிய நோயாளாகள - விருததர்கள் - பாலாகள-கூடிய சிசுக்கள - தாம உணவளிகக உண்டு பிழைப்பவாகள் ஆகிய இவாகளை (இலலறததோன காக்கவேணடுதலின நீ அவ்வாறு) காததொழுகுவாய. எ - று.

இதனை, ஷை, இலவாழ்ககை.

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு - நல்லாற்றி னின்ற துணை
துறநதாாககுந் துவ்வா தவர்ககு மிறநதாாக்கு-மிலவாழ்வா னென்பான றுணை
தென்புலததாா தெய்வம் விருநதொகக லொனறுங-கைமபுலததா ரோமபறலை."
எனபதனுனும,

சூளாமணி.

"கறறவா கடவுட் டானசோநதவர் களைக ணில்லா
ரற்றவ ரநத ளை ரனறியு மவாகள போலவாக
குறறதோ ரிடுககண வநதா லுசவுதற குரிததன ரூயிற்
பெற்றவிவ் வுடமபுதனறை பெறுமபய னிலலை மனறே"—எனபதனனு
முணாக

வருவாயக கியைய வாழ்தலுறு மறுவில கறபின மனையாள்போற
பொருளயா வுளவா மதுவனறிய புகழுமமபயனு மிகவுணடாங
கருதா ரெதிரே யிமிலைறறுக காமா நடையு முறுமதனை
லொருவா தவளோ டுவபபுறவே யுறறு வாழத லறனகும.

(இ - ள) (கணவனுடைய) வரவுககுததகக (செலவுசெயது) வாழுங குற்ற மில்லாத மனைவியைப்போல (இலவாழ்வானுககுச) சிறநத பொருளகள் எவையுள வாகும. அதுவேயலலாமல (அவளால) கீரததியும பிரயோசனமும மிகுதியுமுண்டா கும. (தனகணவனைப) பகைஞாமுன வெளகாது நடககசசெயயும, ஆதலால மனையா ளுடன நீஙகாது சீரபபட வாழதல நலலறமாகும எ - று.

இசசெயயுளால மனையாணலமோமபு எனககூறியதாம

இதனை, ஷ, வாழ்ககைததுணைநலம

"மனைததககா மாணபுடைய ளாகிததறகொணடான-வளததககாள் வாழ்க்கைத துணை.
பெணணிற பெருநதகக யாவுள கறபெனனுந - திணமையுண டாகப் பெறின.
புகழ்புரிந திலலிலோாக கிலலை யிகழவாாமுன - னேறுபோற் பீடு நடை."—என்ப தனனும,

அறநெறிச்சாரம்

"மருவிய கற்பின மனையாளாடு தானு
மிருவராயக கொணடுயபபி னலலா—லொருவரா
லிலவாழ்ககை யெனனு மியலபுடைய வானசகடஞ
செலலாது தெறறிறறு நின று"—எனபதனனுமுணாக (உ0)

எழுமைப பிறபபுந தீவினைவந தெயதாச சிறபபுந தெனபுலததா
முழுது முவககுங கடனசால முடிககு மாணபும பெறுதலினற
பழுதி றவஙகண மிகபபுரிநது பயநத மைநதா தமையவாககுக
குழுமு மவையின முநதிருபப வறிவு கொளுததல வேணடுமால.

(இ - ள) (பெறறோருககு) எழுபிறபபிலு நனமையடைவிததலும், பிதுரர் முறறுந் திருபதியடையுங கடனகளை மிகுதியாகசசெயயு மாடசியும உணடாதலினல் குறறமிலலாத தவஙகளை மிகுதியாகச செயதுபெறற புதலவாகளை, அறிவாளா சபை யில முநதிருககததகும அறிஞராககுதல (ரனறோாகடன எனல) வேணடும. எ - று.

இசசெயயுளால மககளொடுமெகிழ எனககூறியதாம.

இதனை, ஷ புதலவரைபபெறுதல

"பெறுமவறறுள் யாமறிவதிலலை யறிவறிநத - மக்கட்பே றலல பிற.
எழுபிறபபுந தீயவை தீணடா பழிபிறஙகாப - பணபுடை மககட் பெறின
தமபொருளெனபதம மகக ளவாபொருள - தந்தம வினையான வரும.
தநதை மகறகாறறு நனறி யவையதது - முநதி யிருப்பச செயல."-எனபதனனும்,

வளையாபதி.

"உயர்குடி நனியிற் றோன்ற லூனமி லியாக்கை யாதன்
மயர்வறு கழிந்த கேள்வித் தன்மையால் வல்ல ராதல்
பெரிதுணர் வறிவே யாதல் பேரறங் கோட லென்றுங்
கரிதிவை பெறுதல் கூடா பெற்றவா மக்க ளென்பார்."—என்பதனானுமுணர்க ()

இடனும் பொருளு மேவலரு மிருந்து மப்ப யனென்னை யேவந்த
வுடலின் பயனு மவ்வன்பை யுறுத்து விடத்து நொதுமலரும்
படர்செய் பகையு முறவாக்கும் பற்று மளிக்கு மன்னைமைந்தா
தொடரின் வளர்க்கு மன்பதனைச் சோர்ந்து மன்பின் வழுவற்க.

(இ - ள்.) (அன்பானது) நொதுமலரையும், துன்பஞ்செய்யும் பகைவரையுந் தன்னவராகச்செய்யும் பற்றையும், நன்மனை மக்கட்பேற்றினையுமுண்டாக்கும். கிடைத்த மானுடதேகத்தின் பயனாகிய அன்பையுடைத்தா யில்லாதவிடத்தில (எவ்வளவு மிகுதியாக) இடமும் பொருளும் ஏவலுமிருப்பினும் பயன் யாது? (சிறிதுமில்லையாதலின்) நீ மறந்தாயினும் அன்பைக் கைவிடாதொழுகுக எ - று.

இதனை, ஷை அன்புடைமை

"அன்பீனு மார்வ முடைமை யதுவீனு - நண்பெனு நாடாச் சிறப்பு.
அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார் - மறத்திற்கு மஃதே துணை
புறத்துறுப் பெல்லா மெவன் செய்யும் யாக்கை - யகத்துறுப் பன்பி லவர்க்கு.
அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க் - கென்புதோல் போர்த்த வுடம்பு."—என்பதனானுணர்க. (உஉ)

வந்த விருந்து மலராத வதன நோக்கு முன்குழையு
மந்த வடைவா லகத்தன்பை யலர்ந்த முகத்தால் வெளிப்படுத்திச்
சந்த மணிவா யினுந்தோன்றச் சற்றும் வஞ்சங் கலவாமே
யுந்துஞ் சுவையின் மொழியென்று முரைத்தல் வேண்டும் பயன்வேண்டின்.

(இ - ள்.) (இல்வாழ்வோர்) பயன்பெறவேண்டின், உள்ளான நேசத்தை நகைமுகத்தாற் காட்டி, அழகிய சிறந்தங்கிய வாயில் (இன்சொல்) தோன்றச் சிறிதும் வஞ்சகமின்றி மதுரமாகிய உபசாரவார்த்தையை யெப்பொழுதுஞ் சொல்லவேண்டும். (அன்றி) மலர்ச்சியில்லாத (கடு) முகங்காட்டினால், பார்க்குமுன் முகம் வாடிப்போவார்கள். எ - று.

இச்செய்யுளால் வருவிருந் தூபசரியென்றும் நன்மொழி யுரையென்றுங் கூறியதாம்.

இதனை, ஷை விருந்தோம்பல்

"அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து - நல்விருந் தோம்புவா னில்.
மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து - நோக்கக் குழையும் விருந்து."—என்பதனானும்,

ஷை இனியவைகூறல்.

"இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ் - செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.
சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு - மிம்மையு மின்பந் தரும்."—என்பதனானும்,

ஏலாதி

"இனசொன மலாசசி யிடமினிதூண் யாரயாரக்கும
வன்சொற கீளந்து வருபபாளேல்—மெனசொல
முருந்தேய்க்கு முட்போ லெயிற்றினய நாளும
விருந்தேற்பா விண்ணோர் வினைந்து."—எனபசனுனுமுணாக (உரு)

பயன்கா ரணததைக குறியாமற பரிந்து காலத தாறசெயத
நயனுசேர நன்றி சிறிதேனு நாடி னதறகோ ரளவிலலை
பயனகா ரணதததைக குறிததினையும பததததிற புரிநத நன்றியையும
வியன்பூ தலததிற பெரிதாக விருமபி மதித்தல வேணடுமால.

(இ - ள்) எதிருதவி கருதாமல் ஆபததுக்காலததில் ஒருவா மனமிரஙகிச செய்த நனமை பொருநதிய உதவி சிறிதென்றாலும், ஆராயுமிடததில அவவுபகாரத திறகோா அளவிலலையாகும் எதிருதவி குறிததே செயினும ஆபததிற குதவினபடியால் அநநன்றியையும பெரிய பூவுலகததிற பெரிதாக எணணி மதிததல்வேணடும. எ - று.

இதுமுத லிரணடு செயயுள்களால் நனறிமறவாதேயெனக கூறியதாம.

இதனை, ஷை செயநநனறியறிதல.

"செயயாமற செயத வுதவிககு வையகமும-வானகமு மாறற லரிது.
காலததி னுற்செயத நனறி சிறிதெனினு-ஞாலததின மாணப பெரிது
பயனறாககாா செயத வுதவி நயனறாககி-னனமை கடலிற பெரிது."—என் பதனுனுணாக (உச)

நன்றி புரிநதோா மறறொருகா லவைகள் புரிநதா ராயிடினு
மொன்று முதவி யேமதிததிட டோமபா நவையை மறநதவரை
யெனறு மறவா திருநதிடுக விகபபிற கருவான மறையோரைக
கொனறு திரிவோா பிழைபிறககக குனற மெனவே பிழைபெருகும.

(இ - ள) (அவவாறு) நனறிசெயதவாகள, பின்னொருகாலததில தீமைகள செயதாாகளாயினும, அவாகள செயதிருககினற நனறியையே மதிததுயாததி, அத தீமைகளை மறநது அவரை என்றும வியககககடவாய. (ஏனெனில) செயநநனறி மறநத (பாவத) தால், கருவழிததல, கோவதை, பிரமகததி (முதலியன) செயது திரிவோ ருடைய பாவமுஞ சிறகும்படி, பழியானது மலைபோலப பெருகும. எ - று

இதனை, ஷை, ஷை.

"எழுமை யெழுபிறபபு முளளுவர் தங்கண-விழுமந் துடைப்பவா நட்பு
கொனறனன வினனு செயினு மவாசெய்த-வொனறுநன றுளளக் கெடும.
எநநன்றி கொனறாாககு முயவுணடா முய்விலலை-செய்நநனறி கொனற மகறகு."
எனபதனுனும,

புறநானூறு.

"ஆன்முலை யறுதத வறனில லோர்ககும்
மாணிழை மகளிா கருவுசிதைதத தோாக்கும
பாாபபாாத தபபிய கொடுமை யோாககும
வழுவாய மருஙகிற கழுவாயு முளவே
நிலமபுடை பெயாவ தாயினு மொருவன்
செயதி கொனறோாக குயதி யிலலென

வறம்பா டின்றே யாயிழை கணவ
காலை யந்தியு மாலை யந்தியும்
புறவுக் கருவன்ன புன்புல வரகின்
பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கிக்
குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலோ
டிரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக்
கரம்பி னுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
யமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்
ககலாச் செல்வ முழுவதுஞ் செய்தோ
னெங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாட் பாடே னாயிற்
படுபறி யலனே பல்கதிர்ச் செல்வ
யானோ தஞ்சம் பெருமவிவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்றுண் டாயி
னிமயத் தீண்டி யின்குரல் பயிற்றிக்
கொண்டன் மாமழை பொழிந்த
நுண்பஃ றுளியினும் வாழிய பலவே."—என்பதனானுமுணர்க (௨௫)

ஆக்க மொடுமைந் தனையளிக்கு மவற்றை மருமான வழிக்குநிலை
யாக்கு மனைய நடுநிலையை யடுத்தோர் முதனமூ வரினொப்ப
நோக்கு மதுசெய் யாதிகப்பி னுனித்துந் கருவி னமைந்தபயன்
போக்கியிடையே பயன்வேறு பொருந்தா பொருந்தும் பெரும்பிழையே.

(இ - ள்) (நடுவுநிலைமையானது) செல்வவிளைவையும் புத்திரப்பேற்றையுங் கொடுக்கும் அவற்றைப் பரம்பரையாக நிலைபெறவுஞ் செய்யும் (ஆதலின், கேடு அல்லது ஆக்கங்கருதி) அவ்வகையநடுவு நிலைமையை நண்பாமுதலிய முத்திறத்தவரில் (யாவரிடத்தும்) ஒப்பநோக்குதல் செய்யாதுவிடின், பெருங்குற்றம் பொருந்தும் கருவில் நுட்பமாக அமைந்த அமைப்பு ஒருவரையும் விடாது. எ - று.

இச்செய்யுளால் ஓரஞ்சொல்லேல் எனக் கூறினதாம்.

இதனை, ஷை நடுவுநிலைமை.

"செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி-யெச்சத்திற் கேமாப் புடைத்து.
கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்-கோடாமை சான்றோர்க் கணி.
கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்சம்-நடுவொரீஇ யல்ல செயின்.
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்-கோடாமை சான்றோர்க் கணி,"—என்பதனானும்,

சூளாமணி

"கோதி லாதவர் மக்கண் மக்களு
மேதி லாரவ ரியைந்த தீமையா
லாத லாற்றமர் பிறர்க ளென்பதங்
கோதி லாதவர்க் குள்ள தில்லையே."—என்பதனானுமுணர்க. (௨௬)

இலவி னிருந்தே யைம்பொறியு மெல்லா நுகரும் காலத்தனு
செல்லும் வழியெய் மொழிமனத்தைச் செல்லா தடக்கி னெழுபிறப்பு

நல்ல பயனை யானே மனை நல்ல வினைதீ வினையாகா
வல்ல லறுக்கு மறக்கடவு ளெடுக்கு மமர ருலக்கு றுமே.

(இ - ள்) (இல்வாழ்வோன்) தன் வீட்டிலிருந்தே ஐம்பொறிகளாலும் எல்லாப்போகங்களையும் அநுபவிக்குங்காலத்தில், மன வாக்குக் காயங்களைத் தத்தம் போக்கிற போகவிடாது அடக்கவல்லனாயின், எழுபிறவிகளிலும் (அவன் செய்வனவெல்லாம்) நன்கேயாம். நல்வினை தீவினையாக மாட்டாது. (அவன்) துன்பத்தையொழிக்குந் தருமதேவதை பொருந்திய தேவலோகத்தை யடைவான். எ - று.

இச்செய்யுளால் அடங்கியிரு எனக் கூறினதாம்.

இதனை, [illegible]

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற-மலையினு மாணப் பெரிது.
ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி-னெழுமையு மேமாப் புடைத்து.
கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி - யறம்பார்க்கு மாற்றி னுழைந்து"—என்பதனாலும்,

அறநெறிச்சாரம்

"இந்திரியக் குஞ்சரத்தை ஞான விருங்கயிற்றாற்
சிந்தனைத் தூண் பூட்டித் திறம்பெறப்பந் திப்பா
ரிம்மைப் பயனு மினிச்செல் கதிப்பயனுந்
தம்மைத் தலைப்படுப் பார்."—என்பதனாலுமுணர்க. (௨௭)

தாழ்ந்த வருணத் துதித்தவருந் தக்கோ ராவ ரொழுக்கத்தால்
வீழ்ந்த வொழுக்கத் தாரிழிவா மேலாம் வருணத் துதித்திடினுஞ்
சூழ்ந்து துணையாஞ் சிறப்பின்பஞ் சுரக்கு மதனா லுயிர்தனினும்
வாழ்ந்த வொழுக்க மோம்பிடுக வழுக்கி னிடும்பை யேதருமே.

(இ - ள்) இழிந்தகுலத்திற் பிறந்தவரும் நல்லொழுக்கத்தினால் உயர்குலத்துதித்தோராவர். உயர்குலத்திற் பிறந்தவரும் ஒழுக்கக்குறைவினால் இழிகுலத்திற் பிறந்தோராவர். ஒழுக்கமே கைவிடாதொழுகின் போகமுமுத்தியுந் தருதற்குங் கைவிடின் துன்பந் தருவதற்குந் துணையாம். ஆதலின், நல்லொழுக்கத்தை உன்னுயிரினும் அரிதாகப் பாதுகாக்கக்கடவாய். எ - று.

இச்செய்யுளால் நன்னடைவிடாதே எனக் கூறியதாம்.

இதனை, ௧௪. ஒழுக்கமுடைமை.

"ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க-முயிரினு மோம்பப் படும்.
பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்-தேரினு மஃதே துணை.
ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க-மிழிந்த பிறப்பாய் விடும்.
நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க-மென்று மிடும்பை தரும்."—என்பதனாலும்,

ஆசாரக்கோவை

"பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை
யிலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்று
மொழுக்கம் பிழையா தவர்"—என்பதனாலுமுணர்க. (௨௮)

காமங் குறித்துப் பாவத்திற் கலந்த பேதை யாருள்ளும
வாமங் கனிந்த பிறன்மனையை மதிக்கும் பேதை யோரபயத்தாற்
ருமங் கிழக்கு மறமபொருள்போற் சாற்று மினப முற்றத்துற
ரேமங் குதிப்பப் பிறன்மனைவி தோள்கா முறுதல சூழேலே.

(இ - ள்) காமமயக்கத்தால், பிறமாதா போகத்தை யிச்சிக்கும அறிவிலிகளிலும், அழகுமிகுந்த பிறனுடைய மனைவியின் போகத்தையிச்சிக்கும அறிவில்லாதவர், தாம் அப்பொழுது அறத்தையும பொருளையும இழப்பதுபோலவே, அச்சத்திஞல அப்புணர்ச்சி யின்பத்தையும் அடையாதவராவர் அதனல் குற்றமுண்டாகுமபடி நீ பிறன மனைவி தோணலத்தை விரும்புதல் மனத்திற் கொள்ளாதே எ - று

இதுமுதல இரண்டு செய்யுளால, பரதாரபோகம் விருமபாதே எனக் கூறியதாம.

இதனை, ஷை பிறனில்விழையாமை

"பிறன்பொருளாட் பெட்டொழுகுமபேதைமை ஞாலத்-தறமபொருளகண்டாாகணில. அறனகடை நின்ருரு ளெலலாம பிறனகடை - நின்ருரிற பேதையா ரில."—எனபத னுணாக. (உகூ)

பகையே பழியே பாவமே பயமே நானகுந் திணங்கொடுக்குந
தகையாா பெருமை முழுதழிக்குஞ சாாந்த பிறனில விழைவொழிந்தோா
தொகையா றமே பொருளின்பந் தோலாப பெருமை யொடுமேவாழ்வா
நகையா லதனைக் கனவிடத்து நவிற்றி யிடினுந தீங்காமே.

(இ - ள்) மனதிற் கொள்ளாது வெளிநகைபபாகப் பேசினூலும, நனவிலன்றிக் கனவில நினைத்தாலும் தீமை விளைவிக்கும பரதாரவிச்சையானது யாவாக்கும் பகை பழி பாவம அச்சங்களை யுணடுசெய்து பெருமையைக்கெடுக்கும. அஃதிலலாமையானது அறமபொருளினபங்களை யுண்டுசெய்து பெருமையுறச்செய்யும. எ - று.

இதனை, ஷை, ஷை.

"எனைத்துணைய ராயினு மெனனாந் தினைத்துணையுந-தேரான பிறனில புகல பகைபாவ மச்சம பழியென நானகு-மிகவாவா மிலலிறப்பான கண.
பிறனமனை நோக்காத பேராண்மை சானரோாக - கறனென்றோ வானற வொழுக்கு"—எனபதனும,

நாலடியார்

"காணிற குடிபபழியாங் கைபபடிற்றன கால்குறையு
மாணினமை செய்யுங்கா லச்சமா—நீணிரயத
துன்பம பயக்குமாற றுச்சாரி நீகணட
வினப மெனககெனைத்தாற கூறு

அறமபுகழ் கேண்மை பெருமையிந் நானகும
பிறனுா நச்சுவாாச் சோா—பிறனுா
நச்சுவாாச சேரும் பகைபழி பாவமென
றச்சத்தோ டிந்நாற பொருள"—எனபதனுமுணாக. (ஙo)

வெறுப்ப வொருவன காரணத்தான் மிகக மடத்தாற புரிபிழையைப
பொறுப்பி னதுவே பேறமாம புகழு நிறையு மிகவளருங

கறுப்பொன் றறியா வறிவினர்கள் கருத்தின் மகிழ்ச்சி யுள்வாரு
மொறுப்பின் வருவ தொன்றில்லை யதன்றே பொறுமை யுயிர்த்துணையாம்.

(இ - ள்.) ஒருவன் வெறுக்கும்படி (அசூயைமுதலிய) காரணத்தாலாயினும், மிக்க அறிவீனத்தாலாயினும், செய்த பிழையைத் தண்டித்தலால் வரும்பலனில்லை. பொறுத்துக்கொண்டால், பெருந்தருமமாம், கீர்த்தியும் மாட்சியும் பெருகிவளரும், கோபமென்பதைச் சிறிது மறியாத சாதுக்கள் மனத்திற் களிப்புண்டாகும்; ஆதலால் பொறுமையை உயிர்த்துணையாகக் கொள்ளக்கடவாய். எ - று

இச்செய்யுளால் சாந்தனாகவிரு எனக்கூறியதாம்

இதனை, ஷை பொறையுடைமை

'அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை யிகழ்வார்ப் பொறுத்த றலை
இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்-வன்மை மடவார்ப் பொறை.
நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை-போற்றி யொழுகப் படும்.
ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்-பொன்றுந் துணையும் புகழ்.
துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா-யின்னாச்சொ னோற்கிற் பவர்"—என்பத னானும்,

அறநெறிச்சாரம்

'எள்ளிய பிறருரைக்கு மின்னாச்சொற் றன்னெஞ்சிற்
கொள்ளிவைத் தாற்போற் கொடிதெனினு—முள்ளி
யறிவென்னு நீரா லவித்தடக்க லாற்றிற்
பிறிதொன்றும் வேண்டா தவம்"—என்பதனானுமுணர்க (ருக)

ஒழுக்கா றொழிக்கும் பொருளனைத்து மொழிக்கு மிம்மை மறுமையினும்
வழுக்கா றனைத்து முறுவிக்கு மருங்கு ளாக்குங் கேடுறுக்கு
மிழுக்கா றுடைய வெரிநிரையத் தேயக்கு மிதனா லெமகண்டா
வழுக்கா றுய பெரும்பகையை யமரா ரிடத்தும் புரியற்க.

(இ - ள்) எமகண்டா! பொறாமைக் குணமானது (ஒருவனுடைய) நல் லொழுக்கத்தை யொழிக்கும்; செல்வப்பெருக்கு முழுவதையு மழிக்கும், இம்மைச் சுகத்தையும் மறுமைக்கதியையுந் தீமைசெய்யும், அவனை யடுத்தவர்களையுங் கெடுக்கும், துன்பமுடைய தீமயமான நரகத்திற் பொருத்தும். இக்காரணங்களால், பொறாமையாகிய பெரியபகையைப் பகைவரிடத்திலேயுங் கொள்ளாது விடுக. எ - று.

இச்செய்யுளால் பொறாமைகொள்ளாதே எனக்கூறியதாம்

இதனை, ஷை, அழுக்காறாமை.

"ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத் - தழுக்கா றிலாத வியல்பு
அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம் - பேணா தழுக்கறுப் பான்
கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ - முண்பதூஉ மின்றிக் கெடும்
அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத் - தீயுழி யுய்த்து விடும்."—என்பத னானும்,

புறநானூறு.

"பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்

பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ
நல்லவை செய்த லாற்றீ ராயினு
மல்லவை செய்த லோம்புமி னதுதா
னெல்லாரு முவப்ப தன்றியு
நல்லாற் றுப்படூஉ நெறியுமா ரதுவே."—எனபதனுனுமறிக (கூஉ)

படுமுன பொருட்குப புதுவெள்ளம பழைய நீரை யுடைபபதுபோற
கெடுதி பயககுங் குடிகெடுககுங கெடாத பொருநதுன பழுமம்விளைக்கும
வடுமிக வியனற பழியென றும வளாககு மதனுன் மறுமையினு
நடுவு நிலையிற றிரிநதொருவா நனபொன கவரக கருதநெஞ்சேல.

(இ - ள்.) புதியவெள்ளமானது நிலையாயுள்ள நீரையுங கெடுப்பதுபோல, (ஒருவரிடத்து அபகரிதத பொருள) உண்டாகிய பழைய பொருளையுந் தொலைததுக கெடுதிசெய்யும, வமிசத்தை யழிக்கும; நீங்காக் கடுநதுயரையும விளையசசெய்யும், மறுமைப் பயனையழிககும, குறறமிக்கமைந்த பாவததை யெககாலமும வளரசசெயயும் (ஆதலால) நடுவுநிலைமை தவறிப் பரசொததை யபகரிக்க மனததிற கருதாதே. எ - று.

இசசெயயுளாற பிறாபொருள கவராதேயெனக கூறியதாம

இதனை, ஷை வெஃகாமை.

"நடுவினறி நனபொருள் வெஃகிற குடிபொன்றிக - குற்றமு மாஙகே தரும்.
சிற்றின்பம் வெஃகி யறனல்ல செயயாரே - மறறினபம வேணடு பவா
அஃகாமை செலவததிற் கியாதெனின வெஃகாமை - வேணடும் பிறனகைப் பொருள."—என்பதனுனும,

சாந்திபுராணம்.

"தானததிற் குரிதது மனறு தானினைந்தீயிற் சால
ானததி லுயகக நிற்கு மெசசததை யிழக்கப் பண்ணும
மானததை யழிககுந துயக்கின் மாற்றலாக் கடிமை யாககும்
ஊனததீ நரகத துயககும பிறர்பொரு ளுவக்கின வேநதே"—எனபதனுனு முணாக. *(கூகூ)

கேளிா பிரிவா நட்பினராய்க கெழுமு வாரு மிலராவா
மூளும வடுசசொ னோராக மொழிவ ரெவரு மாதலினு
ளுளு மறததைக் கொனறனநத நவைகள செயினு மெதிரானறு
மாள வுரைசெய் யினுஞ்செய்யேன மைநதா மறநதும புறஙகூறல.

(இ - ள) மகனே! (ஒருவன) நாடோறும தருமததையழிததுப் பல பாவங களைச்செய்தாலும் (ஒருவன) முனனினறு உயிா விழுமபடி பழிததுரைததாலும மறநதும புறஙகூறுதே (அவவாறு கூறின்.) உறவினா பிரிவா நட்பினராக விளஙகு வோர்கள அன்னியராவாாகள, அவாகள யாவரும மூளுகினற வடுமொழியை உனனை யெதிரிட்டுரைபபார்களாதலால எ - று.

இசசெய்யுளாற பிறரைப் பழித்துரையாதே எனககூறியதாம்

இதனை, ஷை புறஙகூறுமை

"அறனழீஇ யல்லவை செய்தலிற றீதே - புறனழீஇப பொயததது நகை [சொல்.
கணணினறு கணணறச சொல்லினுஞ் சொல்லறக-முன்னினறு பின்னோக்காச
பிறனபழி கூறுவான றனபழி யுளளுந - திறந்தெரிநது கூறப படும்.

பகச்சொல்லிக் கேளிர் பிரிப்பர் நகச்சொல்லி - நட்பாடல் தேற்றா தவர்."—என்பதனானும்,

பழமொழி.

"பண்டின ரென்று தமரையுந் தம்மையுங்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்
விண்டவரோ டொன்றிப் புறனுரைப்பி னஃதாற்
லுண்டவிற் றீயிடு மாறு"—எனபதனானுமறிக. (கூசு)

தகைமை யுடைய வழிவினாகள் சால வெறுப்பச் செயுமன்றி
நகையும் விளைக்கும் வெளிற்றறிவை நவிற்று நன்கு மதிப்பொழிக்கு
மிகைசெய் விழுப்பந் தபுமதனால் விழைவு மறமா திகள்பயவா
வகையி னுரைக்கும் பயனில்சொன் மைந்தா வுரையே லுரையேலே.

(இ - ள்) மைந்தனே! நுண்ணறிவாளர் மிகவெறுக்கச் செயும், அல்லாமலும் நகையையும் விளைக்கும், புல்லறிவை வெளிப்படுத்தும்; நன்மதிப்பைக்கெடுக்கும்; மேம்பாடு செய்கின்ற ஆசையை யழிக்கும். ஆனபடியால் அறம்பொருள் இன்பங்களை யிழக்கும் வகையிலுரைக்கும் பயனில சொற்களைச் சொல்லற்க; சொல்லற்க. எ-று.

இச்செய்யுளால் வீண்மொழி கூறாதே யெனக் கூறியதாம்.

இதனை, ஷை, பயனில சொல்லாமை.

"பல்லார் முனியப் பயனில சொல்லுவா - னெல்லாரு மெள்ளப் படும்.
நீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில - நீர்மை யுடையார் சொலின்.
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்-மக்கட் பதடி யெனல்."—என்பதனானும்,

ஏலாதி

"மையேய தடங்கண் மயிலன்ன சாயலாய்
மெய்யே யுணர்ந்தவர் தாமுரைப்பர்—பொய்யே
குறளை கடுஞ்சொற் பயனில்சொன் னான்கு
மறலியின் வாயினவர் மற்று."—எனபதனானுமறிக. (கூரு)

வேறு.

பாய்பல் பகைக்குந் தப்பிப் பாரிடை யுய்ய லாகு
மேயவெக் கதிசென் றாலும் விளிதரா தாங்கு சென்றே
யாயநன் றனைத்துந் கொன்றங் கருந்துயர் பலவு நல்குந்
தீயவல் வினையின் யாதுஞ் செய்யற்க வேம கண்டா.

(இ - ள்) ஏமகண்டா! உலகத்தில் எவ்வகைப்பட்ட பகைகட்குந் தப்பிப் (பிழைத்தாலும்) பிழைக்கலாகும் (ஆனால், தீவினையாகிய பகைக்குத் தப்பிப் பிழைத்தலரிது.) எப்பிறப்படைந்து எங்குற்றாலும் அஃதொழியாது, அங்கே சென்று நன்மையை முற்றுமழித்துக் கொடிய துன்பங்களைக் கொடுக்கும் (ஆதலின்) யாதொரு தீங்கையும் (எவர்க்குஞ்) செய்யவேண்டாம் எ - று.

இச்செய்யுளால் தீமை செய்யற்க எனக் கூறியதாம்

இதனை, ஷை, தீவினையச்சம்.

"தீயவை தீய பயத்தலாற் றீயவை - தீயினு மஞ்சப் படும்.
எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை - வீயாது பின்சென் றடும்.

தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந் - துன்னற்க தீவினைப்பால்."
என்பதனானும்,

நாலடியார்.

"பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு"—என்பதனானும்,

குண்டலகேசி.

"வாயுவினை நோக்கியுள மாணடவய நாவா
யாயுவினை நோக்கியுள வாக்கையது வேபோற்
றீயவினை நோக்குமியல் சிந்தனையு மிலலாத
தூயவனை நோக்கியுள துப்புரவு மெலலாம"—என்பதனானு மறிக. (௬௬)

ஊருணி நடுவூர் நின்ற வொண்பழத் தருவும போலப்
பேருறு முயறசி தனனாற பெருக்கிய பொருளக ளெலலாஞ்
சீருற யாவா மாட்டுஞ் செலுத்தியொப் புரவி னிறறி
யாருமொப் புரவாற கேடுண் டாயினு மதுவு நனறே

(இ - ள்.) நீ பெருமுயற்சியாற றேடிய பொருள்களை யெலலாம (பலாக்கும் பயன்பெறும்படி) ஊா நடுவிலிருக்கு தடாகமும், ஒள்ளிய பழத்தையுடைய மரமும் போலச் சிறப்புப்பொருந்த எலலோரிடத்திலும உதவி,முறைமைபபடி நிறைககடவை. பொருந்திய நலம விளைபபதாற் கேடுண்டாயினும (பினனா நலம விளைககு மாதலின) அதுவும் நல்லதேயாம. எ - று.

இச்செய்யுளாற் பரோபகாரஞ் செய எனககூறியதாம்.

இதனை, ஷை, ஒப்புரவறிதல.

"தாளாற்றித்தந்த பொருளெலலாந் தக்கார்க்கு - வேளாணமை செய்தற் பொருட்டு
ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம - பேரறி வாளன் றிரு
பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செலவ - நயனுடை யான்கட படின
ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன-விற்றுக்கோட் டக்க துடைத்து."
என்பதனானும்,

நீதிநெறிவிளக்கம்

"கண்ணோக் கருமபா நகைமுகமே நாணமலரா
வினமொழியின வாய்மையே தீஞ்காயா—வண்மை
பலமா நலஙகனிநத பண்புடையா ரனறே
சலியாத கற்ப தரு"—என்பதனானுமறிக. (௬௭)

இரப்பவன் வாளா வேக விலலெனு மெவ்வங் கூறு
திரப்பினை நிரப்ப னன்று மிதனினன் றுவ தாகு
மிரப்பவ னிலலென் றூர வியமபிய வெவவஞ் சொலலென்
றிரப்பினும் பிறர்பாற் கூறு திரக்கமோ டுதன மைந்தா.

(இ - ள்) மைந்தனே! (உன்னிடத்தில வந்து) யாசித்தவன் வீணாய் [வெறுங்கையனாய்]ச் செலல, (அவனை நோக்கி நீயாசித்ததை) உடைத்தாயில்லே

னென்னுந் துக்ககரமாகிய மொழியைச் சொல்லாமல், அவன் யாசித்ததைக் கொடுத்தல் உத்தமம். யாசித்தவன் தானறியேனென்று கூறிய சொற்களைச் சொல்லுகவென்று (உன்னை) வருந்திக்கேட்பினும் (அதனைப்) பிறரிடஞ் சொல்லாமல் அவன்பேரிற் கருணையோடு கொடுத்தல் மிகவுத்தமம் (எ - று)

இதுமுதல் மூன்றுசெய்யுள்களால் உதாரவானுக்கிரு எனக்கூறியதாம். (௫௮)

அருத்தியி னில்லென்ன னுமூ னளித்தலு மில்லென்ன றப்பா
லுரைத்தில னுக்ஞ சால வுதவலு மேற்கின் றானும
வருத்துற வில்லென்ன னுமை வழங்கிட லாவில் லெல்லாம்
பொருத்தலு மொன்றி னொன்று புகழ்மிக விளங்கி நிற்கும்.

(இ - ள்) வறுமையுடையோன் (உதவுக) என்றுரையாமுன்னர் (குறிப்பறிந்து) ஆசையுடன்கொடுத்தலும், (தன்பாலிரந்தவன்) பிறரிடத்துஞ்சென்று எளியோனென்று யாசியாவகையாகக் கொடுத்தலும், இரந்தவனே (தன்னிடம்) இரந்தோருக்கு வருத்தமுறும்படி இல்லையென்னாது கொடுக்கும்படி பெருஞ்செல்வத்தை யளித்தலும், ஒன்றற்கொன்று (முறையே) கீர்த்திமிக விளங்கிநிற்கும் எ - று. (௫௯)

நலமிகு செல்வம் பெற்று நல்குர வினைக் காத்த
லிலன்ற மாறி சீர்த்தி யில்லெனப் பிறர்சொ லெல்லா
வலனுரைக் கஞ்சி யேனும் வறியனை யில்லென் றெள்ளா
தலாபுகழ் பயனும் வேண்டி னுக்கையு மளிக்க மைந்தா.

(இ - ள்) மகனே! பரந்தகீர்த்தியும் புண்ணியமும் வேண்டுமாயின், நன்மைமிக்க செல்வத்தையடைந்து தரித்திரனைக்காத்திலன், அறம் பொருள் இன்பங்களாலாகிய கீர்த்தியடைந்திலன்; என்று பிறர் சொல்லுகின்ற வலிய வசைமொழிக்கு பயந்தாயினும் இரப்போனை யிவன் வறியனன்றோ வென்றிகழ்ந்திடாமல் உன் சரீரத்தையுங் (கேட்பின்) கொடுக்கக்கடவாய் எ - று

மேல் மூன்று செய்யுள்களின்கருத்தை, ஷை, ஈகை.

"நல்லா றெனினுங் கொளறீது மேலுலக - மில்லெனினு மீதலே நன்று.
இலனென்னு மெவ்வ முரையாமை யீதல் - குலனுடையான் கண்ணே யுள."—
என்பதனானும்,

புறநானூறு

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கு
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமா பார்க்குங் கல்லா வொருவற்கு
முண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவுமெல் லாமோ ரொக்குமே யதனாற்
செல்வத்துப் பயனே யீதல்
றுய்ப்பே மெனினே தப்பின பலவே"—என்பதனானுமறிக (௬௦)

சாதல்வந் தடுத்த காலுந் தனக்கொரு சாத லின்றிப்
பூதல மிறக்குங் காறும் புகழுடம் பிருக்கு மந்தக்
கோதறு புகழின் யாக்கை கொடையினுற செல்வங் கூர
வாழ்தலை யுடையா ரன்றே வானமும் வணக்கு மீரா.

(இ - ள்) (பூதவுடம்பழிய) மரணம்வந்து சேர்ந்த விடத்தும் தனக்கோரழி வின்றி, பூவுலகமிருக்குமெல்லையும் புகழுடம்பானது விளங்கும (ஆதலின்) அந்தப்புக ழுடம்பைத் தமதீகையாற் சிறப்புற வளர்த்து வாழ்பவர்களே (மண்ணுலகத்தாரே யன்றி) விண்ணுலகத்தாராலும் வணங்கப்படத்தக்கவர்கள் எ - று

இச்செய்யுளால் கீர்த்தியைத்தேடு எனக்கூறியதாம.

இதனை, ஷை, புகழ்

"ஈத லிசைபட வாழ்த லதுவல்ல - தூதிய மில்லை யுயிர்க்கு
ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற் - பொன்றாது நிற்பதொன் றில்
நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப் - போற்றாது புத்தே ளுலகு.
நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும் - வித்தகர்க் கல்லா லரிது."—என்பத னும்,

சூளாமணி

"ஒருவனை யிரண்டு யாக்கை யூன்பெய்து நரம்பு போர்த்த
வுருவமும் புகழு மென்றாங் கவற்றினு ளூழின் வந்து
மருவிய யாக்கை யிங்கே மாய்ந்திறு மற்ற யாக்கை
திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே"—என்பதனு மறிக. (சுக)

பொருட்பால் - அரசியல்.

உரைசெயு மறத்தி னாறு லொருகுடை நிழற்ற முந்நீர்த்
தரைமுழு தாள வேண்டிற் றகைபெறு மமைச்சு நாடு
புரையறு மரணே மிக்க பொருள்படை நட்பென் றாறும்
வரைசெயப் படாத யாக்கை யுறுப்பெனை மதித்துக் கோடி

(இ - ள்.) சொல்லுகின்ற தருமசாஸ்திரப்படி கடல்சூழ்ந்த உலகமுழுவதை யும் ஒருகுடைக்கீழ் அரசுசெய்யவேண்டுமாயின், தகுதியாகிய அமைச்சும் நாடுங் குற்ற மற்ற அரணும் மிக்கபொருளும் படையும் நட்புமென்று சொல்லப்படும் ஆறும் அள விடப்படாத உன சரீரத்தினுறுப்பைப்போலப் பேணிக் கொள்வாயாக எ - று.

இதுமுதல் இருபத்தைந்து அதிகாரங்களாலும் அறுபது செய்யுள்களாலும் அரசியல் கூறுகின்றார்.

இது முதல் நான்கு செய்யுள்களால் இராசாங்கம் பேணு எனக்கூறியதாம

இதனை, ஷை, இறைமாட்சி

"படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு"—என்பதனுணர்க (சுஉ)

வினையினஞ் சாமை நிற்றல் வினைஞருக் களித்தல் செய்யும்
வினையிடை மனமேற் சேறல் விளங்கிய வறிவு வல்லே
வினையினை முடித்த லாண்மை வெங்கொலை யாதி நீக்கல்
வினைவளர் மான மற்று மேந்தருக் கியல்பு மைந்தா.

(இ - ள்) தொழில்செய்தலில் அஞ்சாதிருத்தலும், தொழிலாளர்க்கீதலும், செய்தொழிலில் மனவெழுச்சியும், விளக்கமாகிய (கல்வி) அறிவும், விரைவிற்றொழின

முடிததலும, (பினவாஙகாத) ஆணடகைமையும, வெவவிய கொலைமுதலிய தீமைகளை நீககலும, தொடுதத கருமததை விடாத மானமும ஆகிய விவையாவும அரசாகளுக் கியறகையாம. எ - று

இதனை, ஷை, ஷை,

''அஞ்சாமை யீகை யறிவூகக மிநநானகு - மெஞசாமை வேநதற கியலபு
தூஙகாமை கலவி துணிவுடைமை யிமமூனறு - நீஙகா நிலனுள பவறகு
அறனிழுககா தலலவை நீககி மறனிழுககா - மான முடைய தரசு ''—எனபதி னுணாக. (சரு)

குடிதளா வுறற காலைக கொளபொரு ளாறி லொனறும
விடுவது செயது தஙகள் விழுககுறை முறைசொல வாாககுத
தடையறக காடசி நலகித தணணிய வினசொல காடடி
வடுவற விடுததுச சொலவாா வனமொழி பொறுததல வேணடும.

(இ - ள) தனகுடிகள தளாசசியடைநதகாலததில (நீதிமுறைபபடி) பெறும் ஆறிலொருகூறறாக கடமைபபொருளையும விடடுககொடுததும, தமது பெரிய குறைபாடுகளை முறைபபடிசொலலி யறிவிபபவாகளுககுததடையினறிக காட்சிகொடுததும, குளிாநத இத வசனஙகூறியும, உணமையைக குறறமற விடுததுச சொலவோருடைய கடுஞசொலலை (வெகுளாமல) அஙகீகரிததும அரசுசெயயவேணடும எ - று.

இதனை, ஷை, ஷை,

''காடசிக கெளியன கடுஞசொலல னலலனேல - மீககூறு மனன னிலம. [லகு.
செவிகைபபச சொறபொறுககும பணபுடை வேநதன - கவிகைக கீழததங கு
கொடையளி செஙகோல குடியோமப னானகு-முடையானும வேநதாக கொளி''
எனபதனானுணாக (சச)

செருவினொட டலைாக கொனறு திறைகொணடு நாடு காததுப
பொருளினை யீடடிக களவா புலலலா சுறற மாதி
பருததி லாமைக காததுப பயிலெற மாதி மூனறின
மருவுற விடுததுச செஙகோல வளாபபது மாடசி யாமே

(இ - ள) போாமுனையிற பகைஞாவதைததுக கபபமவாஙகி, தனநாடடைப் பாதுகாததுப, பொருளைச சமபாதிததுச, சோரா பகைவா சுறறததாா முதலியோரால அபகரிககபபடாமறகாததுப, (கடவுள அநதணாவறியோா முதலியவாகளுககாககும) அறததிலும, (படையரண முதலியவறறைப பேணும) பொருளிலும, (உறைவிடமபோக நுகாசசிமுதலியவறறை வளாபபடுததும) இனபததிலும பொருநதச செலவுசெயது செஙகோலை வளாபபது மாடசிமையாம எ - று.

இதனை, ஷை, ஷை,

''இயற்றலு மீடடலுங காததலுங காதத
வகுததலும வலல தரசு''—எனபதனானும,

திரிகடுகம்.

''பததிமை சான்ற படையும் பலாதொகினு
மெததுணைபு மஞசா வெயிலரணும—வைததமைந்த
வெண்ணி லுலவா விருநிதியு மிமமூனறு
மணணாளும வேநதற குறுபபு''—எனபதனானுமறிக (௫)

ஐயமே திரிவே யென்னு மவையற வறநூ னீதி
மையமால் யானை பாய்மா வனபடைத் தொழினூ லாதி
யையவே கற்றுக் கற்ற பண்பின ரோடு நாளு
முய்யவே யளவ ளாவி யுழைத்தவா நிற்றல் வேண்டும்.

(இ-ள்.) தருமநூல் நீதிநூல் இரத கஜ துரக பதாதித்தொழினூலாகிய சகல கலைகளையுஞ் சந்தேக விபரீதமற மெல்லக்கற்று, (அவற்றைக்) கற்றறிந்தவர்களோடு நாடோறும் உச்சீவிக்கும்படி பயிற்சிசெய்து விதித்திருக்கிறபடி நடக்கக்கடவாய். எ-று.

இச்செய்யுளால் கற்றுணர்ந்தொழுகு எனக்கூறியதாம்.

இதனை, குறள், கல்வி

"கற்க கசடறக் கற்பவை கற்றபி - னிற்க வதற்குத் தக [க்கு
எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங் - கண்ணென்ப வாழு முயிர்
யாதானு நாடாமா லூராமா லென்னொருவன் - சாந்துணையுங் கல்லாத வாறு."—
என்பதனானும்,

புறநானூறு

"உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே
பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலாற் றாயு மனந்திரியு
மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு
மூத்தோன் வருக வென்னா தவரு
ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே"— என்பதனானு முணர்க (௪௫).

உடல்வயத் தாகுஞ் சாதி யுயர்ந்தவர் சாதி தாழ்ந்தோர்
திடமுற வுயிரி னோடு செல்லுறுங் கல்வி தம்மா
லடாதரும் பெருமை யெய்தா ராதலா லகக்கண் ணாகித்
தொடர்புறுங் கல்வி கல்லாத் தொழிலினை விடலே வேண்டும்.

(இ-ள்.) உடல் வயத்தாலுண்டாகுஞ் சாதியிலுயர்ந்தவரும் சாதியிற்றாழ்ந்தவரும், வலிமைபொருந்த வுயிருடன் செல்லுகின்ற கல்வியால் அடையும் பெருமையை யடையமாட்டார்கள் ஆனபடியால் உள்ளக்கண்ணாகித் தொடர்கின்ற கல்வியைக் கல்லாதிருக்குங் குணத்தைப் பரிச்சேதமாக ஒழிக்கவேண்டும். எ-று.

இச்செய்யுளால் கல்லாமையொழிக வெனக்கூறியதாம்.

இதனை, குறள், கல்லாமை.

"நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம் - மண்மாண் புனைபாவை யற்று
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங் - கற்றா ரனைத்திலர் பாடு."—
என்பதனானும்,

இன்னாநாற்பது

"கல்லாதா னூருங் கலிமாப் பரிப்பின்னா
அல்லாதான் சொல்லு முரையின் பயனின்னா

இல்லாதா னல்ல விழைவினுறு வாங்கினுறு
கல்லாதான் கோட்டி கொளல் '—என்பதனுற்றுணர்க (சஎ)

வறுமையான மடமை தன்னுல் வருந்திநெஞ்சு சுழியுங் காலை
யுறுதிசெய் துணையாங் கற்ற வுணர்வினை வளர்க்கு மென்று
மிறுதியில் லாத வின்ப மீட்டுமா தலினுற் கற்று
மறுவறு மொழுக்க முள்ளார் வாய்மொழி கேட்டல் வேண்டும்.

(இ - ள்) வறுமையாலும் அறியாமையாலும் மனம் வியாகுலப்படுங்காலத்தில், தேறுதல் செய்யுந்துணையாகும் கற்றவற்றினறிவை விருத்திசெய்யும். எக்காலத்தும் அழிவில்லாத இன்பத்தை உண்டாக்கும் (ஆகையால்) கற்றறிந்து குற்றமற்ற நல்லொழுக்க முள்ளவர்களுடைய வாய்மொழியைக் கேட்கக்கடவாய் எ - று.

இச்செய்யுளால் கற்றறிந்தார் சொற்கேளெனக்கூறியதாம்.

இதனை, ஷை, கேள்வி.

"செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி - னான்றாரோ டொப்பர் நிலத்து.
கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற் - கொற்கத்தி னூற்றாந் துணை
இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே - யொழுக்க முடையார்வாய்ச் சொல்
எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு - மான்ற பெருமை தரும்"—என்பதனுலும்,

அறநெறிச்சாரம்

"மறவுரையுங் காமத் துரையு மயங்கப்
பிறவுரையு மல்கிய ஞாலத்—தறவுரை
கேட்குந் திருவுடை யாரே பிறவியை
நீட்குந் திருவுடை யார்"—என்பதனுலுமறிக. (சஅ)

இழிந்தவ னுயர்ந்த தொன்றை யியம்பினு முயர்ந்தோன் வாயி
னிழிந்ததொன் றுதித்தா லுள்ள வியல்பறிந் தோம்பி நீக்கிப்
பொழிந்தனன் பிறர்தாங் கூறும் புலப்படாப் பொருளுந் தெள்ளி
வழிந்தெனத் தெளியக் கேட்போர் மனங்கொளப் புகறல் வேண்டும்.

(இ - ள்) இழிந்தவன்வாயில் உயர் சொல்லொன்று பிறந்தாலும், உயர்ந்தவன்வாயில் இழிசொல்லொன்று பிறந்தாலும், (சொல்வானை நோக்காது) சொல்லின் பொருளையறிந்து (நன்றாயின்) உட்கொண்டு (அன்றாயின்) விலக்கி, பருப்பொருட்டாகப் பிறர்சொல்லும் புலப்படாப்பொருளையுந் தெளிந்து கேட்போர்க்கு எளிதிற் பொருள்விளங்க (அதினுண்பொருளை)ச் சொல்லுதல் வேண்டும். எ - று.

இதுமுதல் மூன்று செய்யுளால் நுண்ணறிவிறப்பில எனக்கூறியதாம்

இதனை ஷை, அறிவுடைமை.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்-மெய்ப்பொருள் காண்ப தறிவு.
எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய் - நுண்பொருள் காண்ப தறிவு."—என்பதனுனறிக. (சக)

எவ்வகை யுலகத் துள்ளா ரியல்புட னொழுகு கின்று
ரவ்வகை யொழுகி னன்றே யழிவன வருமுன் காத்துக்

தவ்வெனும் பழிபா வங்க டபுதியைய தாமை யநதி
செவ்விய நெறியி னுளு நு செலுததுக பொறிக ளோநதும்.

(இ - ள்) உலகத்திலுள்ளவர்கள் எவ்வகை நடக்கையாக நடக்கின்றனரோ அவ்வகைய நடக்கையிலிருந்து, கேடுவிளைவனவற்றை வருமுன்னரே (உணர்ந்து) தடுத்து, கெடுதியாகிய பழி பாவம் கெடுதி (இவை) அடையாது பயந்து ஐம்புலன்களை நன்னெறியில் நாடோறுஞ் செலுத்துக. எ - று

இதனை, ஷ, ஷ.

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ - நன்றின்பா லுய்ப்ப தறிவு.
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ - தஞ்ச லறிவார் தொழில்
எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை - யதிர வருவதோர் நோய்.
எவ்வ துறைவ துலக முலகத்தோ - டவ்வ துறைவ தறிவு."—என்பதனுனுணர்க.

நலமிகு வுயர்ந்தோர் தம்மை நண்புறத் தழுவிக் கொள்க
நிலவிய கயத்துப் பூவை நிகர்தரா துயர்ந்த கோட்டி
னலரென வவர்பா னிறக வாக்கமிக் கடுத்த காலை
மலர்வதும் வறங்கூர் காலைக் கூம்பலு மொழிக மைந்தா.

(இ - ள்.) மகனே! நன்மை மிக்குயர்ந்தோர்களை நட்புறும்படி தழுவிக்கொள்வாயாக அந்த நட்பை (முன்மலர்ந்து பிறகுவியும்) விளங்கிய நீர்ப்பூப்போல, மிக்க ஆக்ககாலத்தில அடுத்தலும் மிக்க வறுமைக்காலத்தில விடுத்தலும் இன்றி, (என்று மலர்ந்தவாறே யிருக்கும்) உயர்ந்தகோட்டின மலர்போல (ஒருதன்மையாக)க் கொண் டொழுகுவாயாக எ - று.

இதனை ஷ ஷ

"உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு"—என்பதனானும்,

பழமொழி

"அறிவினை மாட்சியொன் றில்லா வொருவன
பிறிதினை மாண்ட தெவனும்—பொறியின
மணிபொன்னுஞ் சாந்தமு மாலையுமற் றின்ன
வணியெல்லா மாடையிற் பின்"—என்பதனுனுமறிக (௬௧)

அருந்தவர் குரவர் முன்னோ ரந்தண ருயர்ந்தோர் தம்பாற்
றிருந்திய வணக்க மின்மை செருக்குவே ணடிப்பக் கத்தும்
பொருந்திய பொருள்கொ டாமை பொங்கிய வெகுளி காமம்
விருந்துசெய் கழிகண் ணோட்ட மிவையெலாம் விடுக மைந்தா.

(இ - ள்) மகனே! அரியதவசிகள், குருக்கள் (தந்தைதாய முதலிய) மூத்தோர்கள், வேதியர்கள், பெரியோர்கள் ஆகிய இவர்களிடத்திற் கீழ்ப்படியாமையும் செருக்குறுதலும், கொடுக்கவேண்டிய விடத்தும் பொருந்திய பொருளைக் கொடாமை, கடுங்கோபம் பெருங்காமம் புதிதாகச்செய்யும் பேருவகை மிதமற்ற தாட்சணியங் கொள்ளுதலாகிய இவற்றையெல்லாம் தவிர்க்கக்கடவாய் (இவை குற்றமுடையன வாகலின்.) எ - று.

இதுமுதல மூன்றுசெய்யுள்களால தவ்வொழிததொழுகு எனக்கூறியதாம்.

இதனை ஷை குறு[illegible]

"செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார் - பெருக்கம் பெருமித நீர்த்து
இவறலு மாண்பிறந்த மானமு மாணா - வுவகையு மேத மிறைக்கு"—என்பத
னானறிக (௫௨)

வேறு

குற்றம் புரியா திருந்துபிறர் குற்றங் களைக சிறிதேனுங்
குற்றம் புரியிற் சிற்றெரியைக் குவையை யழிக்கு மாறேபோற்
பற்றும் பெருவாழ் வினையழிக்கும் பகைவர்க் காக்க மிகப்பெருக்கு
முற்றும் பெருநோ யுழப்பிக்கு முனியா ராலு முனிவிக்கும்

(இ - ள்) (நீசிறிதும்) குற்றஞ்செய்யாதிருந்து பிறருடைய குற்றங்களைத் தீர்க்கக்கடவாய் சிறிது குற்றமேனுஞ்செய்தால், சிறுநெருப்பு [ஒருபொறி] வைக்கோற்போரைத் தகிக்கும் வகைபோல, பெரியசெல்வத்தைக் கெடுக்கும், பகைவர்க்குச் செல்வ மிகச்செய்யும் [தன்னை யெளியனாக்கும்], ஆயுள்முழுதுந் தீராப்பிணியால் வருந்தச்செய்யும், வெறுக்காதவர்களாலும் வெறுக்கச்செய்யும். எ - று

இதனை ஷை ஷை

"வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்-வைத்தூறு போலக் கெடும்.
தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின் - என்குற்ற மாகு மிறைக்கு"—
என்பதனானறிக (௫௩)

கன்று மினிய பொருள்பலவுங் காதல் பகைவ ரறியாமே
நன்று நுகர்க நினையென்று நன்கு மதித்து வியவற்க
நன்றி பயவா வினையினையு நண்ணு மத்தத்தான முடியற்க
வென்றி விளங்கப் புகழ்விளங்க விழுப்பம் விளங்க வேண்டிடினே

(இ - ள்) காரியசித்தி வேண்டுமாயின், விரும்பப்படும் ஆசையுடைய இனிய பல பொருள்களையும் பகைஞர்களறியாமல் நன்றாக அநுபவிக்கக்கடவாய் கீர்த்தி விளங்கவேண்டுமாயின் உன்னை நீயேமதித்து இறுமாப்பதைவிடுக மகிமை விளங்க வேண்டுமாயின் நன்றியைத் தராத (பயனற்ற) செயல்களையும் (நாம் செய்யவல்லோ மென்னுந்) தூரகங்காரத்தினாற் செய்யாதொழிக எ - று

இதனை ஷை ஷை

"வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க-நன்றி பயவா வினை
காதல காத லறியாமை யுய்க்கிற்பின்-ஏதில வேதிலார் நூல்"—என்பதனானும்,

திரிகடுகம்

"தன்னை வியந்து தருக்கலுந் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலு—முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையு மிம்மூன்றுஞ்
செல்வ முடைக்கும் படை"—என்பதனானுமறிக. (௫௪)

நுண்மை யறனு மிகத்தெளிந்து நூலி னியல்பு முலகியல்பும்
வண்மை யுறத்தேற் றிடுமாற்றல் வல்ல ராகி வளர்சீலந்
திண்மை யறிவா யுளின்முதிர்ந்தோர் சேர நன்கு மதித்திடுக
வெண்மை புரியா துயர்த்திடுக வியம்பும் வழிப்ப நின்றிடுக.

(இ - ள்.) அதிசூக்கும தருமங்களையும மிகவுமாராயந்து, சாஸ்திரவிதியும் உலகியற்கையும் வண்மையாக உணர்த்திடும் ஆற்றலில் எல்லாராய, வளர்கின்ற ஞானத்திலும உறுதிப்பாட்டிலும், அறிவிலும், வயதிலுமேம்பட்டோரை யறிந்து உயர்வாக மதிக்கக்கடவாய், (அவரை) அசட்டை செய்யாமல் மேன்மைப் படுத்தக கடவாய், (அவர்) கூறும் வழியே நடக்கக்கடவாய. எ - று

இதுமுதல மூன்றுசெய்யுள்களால் உயாந்தோரைச சிநேகஞ்செய் எனக் கூறியதாம

இதனை, ஷை பெரியாரைத் துணைக்கோடல

"அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை - திறனறிந்து தேர்ந்து கொளல
தம்மிற பெரியார் தமரா வொழுகுதல-வன்மையுளெல்லாந தலை" — எனபதனானறிக.

மழையின மிகுதி மழையின்மை வெளிநீப பிணிபால வந்ததுயா
குழைவிலெமரா தக்கோரைக் குறிந்து சாந்தி யாறகடியா
விழைவில பகைவா கள்வாவினை செயவாா றறா மிவாகளினும
மிழையை யுபாய நான்கானும பெயாக்கும பெரிய ரொனுந்துணையே.

(இ - ள்) பெரியோரெனனுந் துணையானது, மழையின மிகுதி-பெருமழை-மழையிலலாமை - கெடுகாற்று - அக்கினிபற்றுதல - கொடுமபிணி, ஆகிய விவற றால நேரிடு துன்பங்களை, குழைவிலலாத தெயவத்தையும சித்தியாளரையுங்குறித் துப் பரிகாரஞ்செயது நீக்கி, விருப்பமிலலாத பகைஞாகள - திருடாகள - தொழிலா ளாகள் - உறவினாகள ஆகிய விவாகளால விளையுந தீமைகளைச (சாமபேததான தண டஙகளாகிய) சதுாவித வுபாயஙகளினாலும விலக்கும. எ - று.

இதனை, ஷை, ஷை.

"உற்ற நோய நீக்கி யுறாஅமை முற்காக்கும
பெற்றியார்ப பேணிக் கொளல" — எனபதனானறிக. (நிசு)

நற்பான் மையினுற றேவாகளா னண்ண லாகு மெதிாவினையை
யுறபா தஙக ளானறிந்தே யொழிபபா மனிதா ராலவருவ
பொற்பா ரவரிங கிதஙகுணமா சாரஞ செயலாற புகக்றிந்து
பிற்பா லுறச்செய் குவரதனாற பெரியோா துணையே துணையாகும.

(இ - ள்.) தெயவத்தால வரும எதிாகால விக்கினஙகளை முறகாட்டுங் குறி களானறிந்து (பரிகாரமுதலிய) நறகருமஙகளாலொழிப்பாாகள மனிதரால வருந தீஙகுகளை அவருடைய அழகிய இஙகிதத்தினாலும குணத்தினாலும் ஆகாரத்தினாலும செயகையினாலும ஆயந்தறிந்து தவிரசசெயவாாகள ஆதலால (உனக்குப) பெரியோ ருடைய துணையே துணையாகும. எ - று

இதனை, ஷை, ஷை

"அரியவற்று ளெலலா மரிதே பெரியாரைப
பேணித் தமராக் கொளல "— எனபதனாலும,

சீவகசிந்தாமணி

"பாலவிளை பரந்து மேயும் படுகடல வளாக மெலலாங
கோலவிளை யாமற காத்துன் குடைநிழற றுஞ்சு ஞேக்கி
நூல்விளைந் தனைய நுணசொற் புலவரோ டறத்தை யோமபின
மேல்விளை யாத வின்பம வேந்தமற றில்லை கணடாய "— எனபதனாலுமுணர்க.

நல்ல வினைக்கு நற்பயனுந் தீய வினைக்குத் தீப்பயனும்
இல்லை யென்னும் வல்விழுத்தைப்பரு மெள்ளும் விடருந் தூர்த்தர்களுஞ்
சொல்லு நட்டு முதலாகத் தொக்க குழுவைச் சேர்ந்தொழுகிற்
புல்லு மறிவைத் திரித்திருமைப் பொருளுங் கெடுக்கும் புகழோடே.

(இ-ள்) (தாந்தாஞ்செய்யும்) நல்வினைக்கு நற்பயனும் தீவினைக்குத் தீப்பயனும் (உண்டாவது) இல்லையென்று (வம்புரை) கூறும் முழுமூடர்களும், இழுத்தைக் காமிகளும், தூர்த்தர்களும் (இழித்துச்) சொல்லுகின்ற நடத்தையுடையோரும் முதலாகச் சேர்ந்த (சிற்றினத்தார்) கூட்டத்தைச் சேர்ந்து நடந்தால், பொருந்திய நற்புத்தியை மாற்றி (அவர்களைச்சேர்ந்தோன்) அடையும் இம்மை மறுமைப்பயன்களையும் கீர்த்தியோடு கெடுப்பார்கள் எ-று.

இச்செய்யுளால் அற்பரைச் சேராதே எனக் கூறியதாம்.

இதனை, ஷை, சிற்றினஞ்சேராமை.

"சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான் - சுற்றமாச் சூழ்ந்து விடும்.
நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க் - கினத்தியல்ப தாகு மறிவு
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி-னல்லற் படுப்பதூஉ மில்." — என்பதனாலும்,

நான்மணிக்கடிகை.

'மொய்சிதைக்கு மொற்றுமை யின்மை யொருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போல மேனியைப் - பெய்த
கலஞ்சிதைக்கும் பாலின் சுவையைக் குலஞ்சிதைக்குங்
கூடாக்கட் கூடி விடின்" — என்பதனாலு முணர்க. (ருஅ)

செய்யும் பொழுதே யழிபொருளிற் சிறப்பத் தோற்பத் திரண்டினுமொன்
றுய்ய வுதவி யழிப்பக்கு மொண்மை வினையைத் தேர்ந்துளத்தி
னைய மன்ற வினத்தோடு மாய்ந்து தனித்தும் புரிந்திடுக
வெய்ய வாக்கங் கருதிமுதல் விளிக்கும் வினையைப் புரியற்க.

(இ-ள்) (ஓர்தொழிலைச்) செய்கையிலேயே செலவிடும் பொருளுக்கு மிக்க பொருளாவது ஒத்த பொருளாவது உண்டாகும்படி பின்பு தரத்தக்கதாகவுள்ள நல்வினையை, ஐயந்தீர்ந்த நல்லினத்தோடு யோசித்தாவது (நீயே) தனித்து மனத்திற் கருதியாவது செய்; ஆக பெரிய இலாபத்தை விரும்பி முதற்பொருளை யிழப்பிக்குந் தொழிலைச் செய்யாதே எ-று.

இதுமுதல் ஐந்து செய்யுள்களால் ஆராய்ந்து தொழில்செய் எனக் கூறியதாம்.

இதனை, ஷை, தெரிந்துசெயல்வகை.

"அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு - மூதியமுஞ் சூழ்ந்து செயல்
தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க் - கரும்பொருள் யாதொன்று மில்.
ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை - யூக்கா ரறிவுடை யார்" — என்பதனாலறிக.

வலியே காலம் வினையிவற்றின் மாற்றான் றனக்கு முனக்குமுள
பலவா நிலையும் வினைதொடங்கும் பண்பு மதற்கா மிடையூறும்
விலக்கத் ததனை விலக்குவதும் வெல்லு மாறும் வென்றதனு
லெய்ப் பயனு முதலனைத்து நேராத் தெளிந்தே வினைசெய்க.

(இ - ள்) வலிமை-காலம-இடமாகிய இவற்றினால், பகைவனுக்கும உனக்குமுள்ள பலவகையாகிய தாரதம்மியமும, தொழிலைத தொடங்கும முறையும், அதற்குவரும் விக்கினமும, நீங்கா விக்கினத்தை நீக்குவதும, செய்மடைதலும, செய முற்றதால வரும அழியாத இலாபமும முதலிய எல்லாவற்றையும நன்குணாந்தே ஓா தொழிலைச செய்வாயாக எ - று

இதனை, கெ, கெ

"வகையறச சூழா தெழுதல பகைவரைப
பாத்திப் படுப்பதோ ராறு "—என்பதனானறிக. (கூ0)

பெரிய முயற்சி வினைபயனைப பேறு வினையே பயனிலிந்தா
மரிய வினையே பின்றுயர மாக்கு வினையே புரிந்தாலும
பெரிய முயற்சி முதலாகப பேசும வினைக்கு மாறுதலையா
முரிய வினையை விடுத்தாலு முலவாப பெருமை யொழியுமே.

(இ - ள) மிக்க முயற்சியா லாகுந்தொழில - பயனறராத தொழில - அறபப பயன்றருந்தொழில - பினபு துனபம விளைக்குந்தொழில ஆகிய இவற்றைச செய்தாலும், மிக்க முயற்சியாலாகுந தொழில முதலாக (மேற) கூறிய தொழிலகட்கு எதிரிடையாகப பொருந்திய தொழிலகளைச செய்யாது விடுத்தாலும, கெடாத பெருமை கெடும் எ - று.

இதனை, கெ, கெ

"செய்தகக வல்ல செயககெடுஞ் செய்தகக
செய்யாமை யானுங கெடும "—என்பதனானறிக (கூக)

கொடுத்தல பொருள்வேட கையனிடத்துங குளிரசொற செவ்வி யானம
னடுத்துப பிறரோ டமராற்றி யயாந்தா னிவாபாங் கினுமவேறு [பிய
படுத்த துணையாம படையினனின பகுதி யொடுசே ராணிவாக
ளிடத்து மொறுத்த லிவற்றினவரா லிவாகீழ மக்க ளிடத்தினுமாம

(இ - ள) (உனபகைவரில) பொருளாசைக காரனைத தானவுபாயத்திலும நன்னடக்கை யாளனும சோமபலுள்ளோனும பகைவருடன போாசெய்து இளைத்தவனுமாகிய இவாகளைச சாமவுபாயத்திலும, துணைப்படையாளனும உனனோடு டிணக்க மறறவனுமாகிய இவாகளைப பேதவுபாயத்திலும, இமமூன்றுபாயத்தால் வசபபடாதவாகளும கீழ்மக்களுமாகிய இவாகளைத தணடவுபாயத்தாலும அடக்குக எ - று.

இதனை, கெ, கெ,

"எண்ணித துணிக கருமந துணிந்தபி - னெண்ணுவ மெனப திழுக்கு
ஆற்றின வருந்தா வருத்தம பலாநின்று - போற்றினும பொத்துப படும "—என்பதனானறிக. (கூஉ)

வலியா ரான காலத்து வழங்க லாதி மூன்றனையு
மெலியா ரிடத்துச செய்திடலு மெலியா ரான காலத்து
வலியா ரிடத்தி னொறுத்தலையும வகுக்கின வேந்தாக கவைமைந்தா
நலிவா மதனு லவரவா பா னடத்து முறைதோந தியற்றிடுக.

(இ - ள்.) மைந்தனே! வலியவராயிருக்குங காலத்தில தான சாம பேத வுபாயங்களையும மெலியவரிடத்திற செய்தாலும், மெலியவராயிருக்குங காலத்தில தணட

வுபாயத்தை வலியவரிடத்திற் செய்தாலும் அவை அரசர்க்குக் கேட்டை விளைக்கும். ஆதலால் அவரவரிடத்திற் செய்யத்தக்க வுபாயத்தைத் தெரிந்துகொண்டு தொழில் செய்வாயாக எ - று.

இதனை, தெ, தெ.

"நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர் - பண்பறிந் தாற்றாக் கடை.
எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு - கொள்ளாத கொள்ளா துலகு."
என்பதனானும்,

பழமொழி.

'தற்றூக்கித் தன்றுணையுந் தூக்கிப் பயன்றூக்கி
யுற்றது கொள்க மதிவல்லார் — மற்றதனை
யாதானு மொன்றுகொண் டியாதானுஞ் செய்தக்கால்
யாதானு மாகி விடும்"—என்பதனானுமறிக (சுங)

வினையின் வலியா திகனனும் வேறு வேறு சீர்தூக்கி
நினது வலிமிக் குழிவினையை நிகழ்த்து நிகழ்த்த காலத்துப்
புனையும் வென்றி யுறுவிழுக்கும் பொருந்து மதனை லவவிடத்து
வினையுந் தோல்வி யுறுங்குறைந்த விடத்தும் வினையை யெண்ணற்க.

(இ - ள்) தொழிற்பல முதலிய நான்கனையும் அளவிட்டு, உன்னுடைய பல மானது மிக்குள்ள காலத்தில் தொழில் செய்யத் தொடங்குக (செய்ய வினையும்) ஒப்பான காலத்திலும் அழகிய வெற்றி யுண்டாகாது கேடும் விளையும் ஆனபடியால் அப்பொழுது வருந்துகின்ற தோல்வியுண்டாகும். வலிகுன்றிய காலத்துந் தொழில் புரியக் கருதற்க எ - று.

இதுமுதல் மூன்று செய்யுளால் வலிமைகண்டு தொழில்செய்ய எனக்கூறியதாம்.

இதனை, தெ, வலியறிதல்

"வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந் - துணைவலியுந் தூக்கிச் செயல்.
உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி - யிடைக்கண் முரிந்தார் பலர்"— என்பதனானறிக

வினையின் வலியாதிகனனை யென்றது - தொழிற்பலம் - தன்பலம்-பகைவன் பலம் - தனக்கும் பகைவனுக்குமிருக்குந் துணைப்பலம் (சுச)

குறைந்த வலிய ராயினுங் கொற்ற மைந்தர் பலர்கூடி
னிறைந்த வலியெ னுமதனை னேரா தொழிக பலரோடுளத்
துறைந்த வூக்கந் தனைக்கொண்டே யுற்ற நினது வலியளவி
னிறந்தும் வினைமே னடவற்க விறவா வென்றி வேண்டிடினே.

(இ - ள்) வலிகுன்றியவர்களானாலும், வெற்றியமைந்த பலமாந்தர்கள் கூடி டில் (உனது) மிகுந்த வலிமை யாது பயனுடையதாம்? ஆதலால், பலருடன் பகை கொள்ளாதொழிக மனோற்சாகத்தையே பொருளாகக்கொண்டு உனக்கு அழியாத வெற்றி வேண்டுமாயின், இறந்தாலும் உன்வலி யளவைக்கடந்து, யாதொரு தொழி லையுந் தொடங்காதே எ - று.

இதனை, தெ, தெ.

"பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ் - சால மிகுத்துப் பெயின்.
நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி - னுயிர்க்கிறுதி யாகி விடும்"—என்பத னானறிக (சுரு)

வந்த பொருளிற் காற்கூறு வரும் விடாநீக் குதப்புகைத்து
மைந்த விருகா னிலைக்காக்கி மற்றைக் காலே வழங்கிடுக
சிந்து நெறிக ளிகலாமற் சேரு நெறிகள் சுருங்கிடினு
நந்த லிலதா பொய்ப்பினுமா நாடி னதிகச் செலவிழுக்காம்

(இ - ள்) மகனே! உனக்குக் கிடைத்த பொருளளவிற் காற்பங்கை இனி வரும் விக்கின நிவிர்த்தியின் பொருட்டு இருப்புவைத்து, அரைப்பங்கை உன் செலவிற்குபயோகப்படுத்தி, மற்றைக் காற்பங்கைத் தானஞ்சிகட்காகச் செலவிடுக, வரவு குறையினுஞ் செலவு அதனிற் குறைதல் நன்று வரவுஞ் செலவும் ஒத்திருப்பினும் கேடில்லை. வரவுக்கு மிஞ்சிய செலவுசெய்தல் கேட்டைத் தருமென்றறிக எ - று

இதனை, ஷை, ஷை

"ஆற்றி னளவறிந் தீக வதுபொருள் - போற்றி வழங்கு நெறி
ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை - போகா றகலாக் கடை
அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல - வில்லாகித் தோன்றாக் கெடும்"
என்பதனானும்,

இரும்பலகாஞ்சி

"ஆர்கலி ஞாலத் தறங்காவ லாற்சிறந்த
பேரருளி னாகுப் பெறலருமை யாதரோ
ஊதிறைய மாமகர வெள்ளத்து நாபபணும்
போமலைந்து வெல்லும் புகழ்"—என்பதனானுமறிக (௬௬)

ஆற்றன் மூன்று முபாயங்க ளனைத்து மிடத்தோ டமைந்திடினும்
போற்றி நினக்கு வென்றியுறும் பொழுது தோர்ந்தே வினைபுரிக
வேற்ற காலம் வருமளவு மெண்ணி யிருந்த வதுமைந்தா
வீற்றுச் சமாக்குப் பின்வாங்கும் வெற்றித் தகரே யாகுமால்.

(இ - ள்) மைந்தனே! மூவகையாற்றலும் நால்வகை யுபாயமும் தக்க விடத்துடன் வாய்ந்தாலும், சாத்து உனக்குச் செயமுண்டாகுங் காலமும் ஒத்திருக்கத் தெரிந்தே தொழில்செய்க ஒத்தகாலம் (வாய்த்திராவிடின் அது) வருமளவும் எதிர் பார்த்திருக்கவேண்டும். அது முட்டிச் செயிப்பதற்கு ஆட்டுக்கடாய் பின்வாங்குதல் போலுமென்று நினைப்பாயாக எ - று

இது முதலிரண்டு செய்யுள்களால் பருவம் பார்த்துத் தொழில்செய் எனக் கூறியதாம்

இதனை, ஷை, காலமறிதல்.

"அருவினை யென்ப வுளவோ கருவியாற் - கால மறிந்து செயின்
காலங் கருதி யிருப்பர் கலங்காது - ஞாலங் கருது பவர்
ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர் - தாக்கற்குப் பேருந் தகைத்து."—என்பதனானறிக. (௬எ)

மிகைமிக் கியற்றித் திரிந்திடினும் வெல்லுங் காலம் வருமளவும்
பகைமை புறத்திற் றோற்றுமற் பகைவர் தம்மைப் பணிபோடு
நகைசெய் தயப்போற் சுமந்திடுக நாடுங் காலம் வந்துவிடின்
றசைசெய் வினையை யமைவிற் றப்பா வண்ண முடித்திடுக

(இ - ள்) (உள்பகைவர்) மிக்கதீங்குசெய்து திரிந்தாலும் நீ பகைமையை வெளிக்குக்காட்டாமல் செயிக்குங்காலம் வருமளவையும் அப்பகைவரைத் தகுதியோடு சந்தோஷித்துச் சும்மாயிருப்பவன்போலவிருந்து தக்ககாலம் வாய்த்துவிட்டால், தக்கபடி செய்வினையை அப்பொழுதே தவறுமறப்படி முடித்திடு. எ - று.

இதனை, ஷை, ஷை

'பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்து - உள்வேர்ப்ப ரொள்ளி யவர்
செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை - காணிற் கிழக்காந் தலை
எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே-செய்தற் கரிய செயல்'—என்பதனாலும்,

சீவகசிந்தாமணி

"இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சா
மடப்பட லின்றிச் சூழு மதிவல்லார்க் கரிய துண்டே
கடத்திடைக் காக்கை யொன்றே யாயிரங் கோடி கூகை
யிடத்திடை யிரங்கச் சென்றங் கின்னுயிர் செகுத்த தன்றே"—என்பதனுமறிக. (சுஅ)

வாயி னூழில் வழங்கமற மதிலை வளைத்தொன் றற்கொன்று
மேய துணையாய பல்படையு மெலிவற் றிருப்ப மதிலகழி
யேய வியற்றி யரசிருக்க வேற்ற விடங்கை நிலத்தோடு
பாய புனலு முடையதுவே பகையை யழிக்கு மிடனாகும்.

(இ - ள்) வாசலும், நுழைவாசலும் வழக்கமறும்படி மதிலைவளைத்து ஒன்றற்கொன்று பொருந்தியதுணையாய பல்படைகளும் மெலிதலற்றிருக்க மதிலும், அகழியும் பொருந்தச்செய்து அரசிருப்புக்கொத்த தலவாய்ப்பும், பரந்தநீர்வளமுமுடைத்தாயிருப்பதுவே பகையைவெல்லுதற்கு இடமாம் எ - று.

இதுமுதலிரண்டுசெய்யுள்களால்இடமறிந்துதொழில்செய்யெனக்கூறியதாம்

இதனை, ஷை, இடனறிதல்

"தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது"—என்பதனானறிக (சுகூ)

ஊக்க மிலனா யினுமிடத்தோ டுற்ற வினைசெய் குவனாயி
னூக்க முடையாற் கிடனின்று மொழியு மூக்க மிலாதவனுக்
கூக்க முடையா னாயினு முற்ற படையும் பலவேனு
மூக்க மழிவ னிடத்தோடு முற்று வினைசெய் யாவிடினே.

(இ - ள்) ஊக்கமில்லாதவனாயினும் இடவாய்ப்பினையுடைய தொழிலியற்றுவானாயின், (பகைஞனாகிய) ஊக்கமுடையானுக்கு வெல்லுமிடனின்றி யொழியும் இடவாய்ப்போடும் பொருந்தி வினைசெய்யானாயின் ஊக்கமுடையவனாயினும் சேனைப் பெருக்கமுடையவனாயினும் எளியபகைவனாலுஞ் செயிக்கப்படுவான் எ - று.

இதனை, ஷை, ஷை

"ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து - போற்றார்கட் போற்றிச் செயின்.
சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா - னூக்க மழிந்து விடும்"—என்பதனாலும்,

பாரதவெண்பா

"வான்சேரிற் புள்ளஞ்சா வல்லரில சுறறிய
கானசேரி ணுமானின கணணஞசா —வானசே
சிகர வரைசேரிற றேனஞசா வஞசா
மிகுதீக கயஞசேரின மீன" —எனபதனுமறிக. (எ0)

பிறபபுங குணமு மறிவுமெனப பேறு மிவையுஞ செயலகளையுஞ
சிறக்குங் காட்சி யொடுகருத்தே செயிரி னூலென றிவைதமமா
னிறுக்கு மமைசசா முதலோரை நின்றா ராயந்து தெளிந்திடுக
வெறுக்கும வினையாற் றுறற்பொருட்டு மறைபோ காமைப பொருட்டுமே.

(இ - ள்) மந்திரித்தொழின முதலிய எத்தொழிலாயினும் ஒருவனைத்தெரிந்து கொள்ளுங்கால, தனதொழிலைச் சாதிக்கவும வஞ்சியாதிருக்கவுமாக (அவனுடைய) பிறப்பும் குணமும அறிவும செயலகளுமென்று சொலலுமிவற்றைக் காட்சிப்பிர மாணத்தாலும அநுமானப்பிரமாணத்தாலும ஆகமப்பிரமாணத்தாலும, (அறமபொரு ளின்பம் அச்சமாகிய இவற்றில வைத்துப) பரீட்சித்து நமபுவாயாக எ - று.

இது முதல் ஒனபது செயயுளகளால ஒருவனைப பரீக்ஷித்து நமபு எனக கூறியதாம. (எக)

அறவோர் புரோகி தரைவிடுத்திட் டவரா லிந்த வரசனறா
னறவோ னலல னிவறபோக்கி யறவோ டுரிமை யுடையானை
யுறவே வைத்தற் கெணணினமீ தொத்த தெவாக்கு நினகருத்தென்
லுறவோ தெனக்கு ளறவோடு மோர்ந்தே யொருவன றனைத்தெளிக.

(இ - ள) (தெரிந்து கொள்ளப்படுபவனிடத்தில) அறவோரையும புரோகித ரையும் விடுத்து அவரால இபபோதாளுமரசன தருமகுணமற்றவன(ஆதலால)இவனை நீக்கி, தருமகுணமுடைய மற்றொருவனை அரசனாக நியமித்தற்கு யோசித்தோம. இது எலலோருக்குஞ சமமதமாயிருக்கின்றது உன கருத்தியாது அதனைச் சொலலுக வென்று பிரமாணமாகக்கேட்டு (அறத்தினவழியிற) பரீக்ஷித்து ஒருவனைத் தந்திர மாகச சோதித்துததெளிக. எ - று. (எஉ)

சேனைத் தலைவ னொடுமவனைச் சேர்ந்தா ரையுமவிட் டிவவரச
னீனப் பொருளா சையனிவனை யிழுக்கிக் கொடையோ டுரிமையுடை
யானைப் புரத்தற் கெணணினமீ தமைந்த தெவாக்கு நினகருத்தென
றூனப் படாமை யுரைத்திடெனச் சூழொ டுரைபபித் தேதெளிக.

(இ - ள.) (தெரிந்து கொள்ளபபடுபவனிடத்தில) சேனபதியையும அவன் வகையினரையும விடுத்து இபபோதாளுமரசன இழிவாகிய பொருளாசையுடைய வன, (ஆதலால) அவனை நீக்கிக் கொடைத்தொழிலில வலல மற்றொருவனை அரச னாக்குமபடி யோசித்தோம் இது எலலோருக்குஞ சமமதமாயிருக்கின்றது உன சம மதம் யாது? ஒளியாதுரைக்கவென்று பிரமாணமாகச சொலலுவித்து (பொருளவழி யிற) பரீக்ஷித்து ஒருவனைச சோதித்துக்கொளக. எ - று (எங)

தொன்று தொட்ட வுரிமையொடு சூழ்ந்த தவமூ தாட்டியைவிட்
டொன்று முரிமை தனிவினனு ளுனைக்கண் டியங்கி யெனைவிடுத்தாள
சென்றங் கவளைக் கூடுதியேற சிறந்த பொருளுங் கூடுநினக
கென்று தெளியச் சூழறவோ டிசைபபித் திதனு னுந்தெளிக.

(இ - ள்) (தெரிந்து கொள்ளப்படுபவனிடத்தில்) பழமையேயுள்ள உரிமையளாக ஒரு தவமுதுமகளை விடுத்து இம்மங்கை உன்பேரில் மோகமுற்று (அழைத்து வருதற்கு) என்னையனுப்பினள். அவளோடு சென்று தழுவுவாயாயின் உனக்கு (இன்பமேயன்றிச்) சிறந்தபொருளுங் கைகூடும் என்று பிரமாணமாகச் சொல்லுவித்து (இன்பவழியில்) பரீக்ஷித்து ஒருவனைச் சோதித்துக்கொள்க எ - று (௭௪)

வேறு

ஒருமித்த பேலிட்டே யோரமைச்சன் றனைமன்னை யிகழ்ந்தோனை யோரானை,
யொருமையுற வழைப்பித்திங் கொருமைப்பாக் குழீஇயினனென் றுறுத்
திக்கால, லொருவனிலவ் வரசமைமை யொழிந்தகமுயன் றனிவனை யொ
றுத்துவேறே, யொருவனைப்பதவிக்கே நிறுத்தமுறை கருதனென் றெனச்
சூழ்ந்தோ ருரைப்பித் தேர்க

(இ - ள்) ஒரு மந்திரியைக்கொண்டு அவனுடைய வீட்டில் யாதேனு முகாந்தரம்வைத்து மற்றவர்களை யழைப்பித்து, இவர்கள் ஏதோ மோசஞ்செய்யக்கூடினாரென்று சாவற்படுத்தி, வேறொரு மந்திரியைக்கொண்டு இவ்வரசன் நம்மைக்கொலை செய்ய எத்தனித்தான் (அவன் நம்மைக் கொல்வதன்முன் நாம்) அவனைக்கொன்று வேறொருவனை யரசனாக்கச் சம்மதித்தோம் உன் கருத்தென்ன? பிரமாணமாகச் சொல் என்று சோதித்துக்கொள் எ - று

மேல் ஐந்து செய்யுள்களின் கருத்தை, ஷை, தெரிந்துதெளிதல்.

"அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
றிறந்தெரிந்து தேறப் படும்"—என்பதனானறிக. (௭௫)

வேறு.

நல்ல குடியிற் பிறந்தாரு நவையு மறப்பு மடிபிழைப்பென்
றல்ல லுறுக்கு மிவைமுதலா மனைத்து நீக்கிப் பழிக்கஞ்சி
யொல்ல லுறுநா ணுடையானே போந்து தெளியப் படுமைந்தா
வல்ல கலைதேர்ந் தாசற்றா ரிடத்தும் வெளிறு மருவிடுமே.

(இ - ள்) மைந்தனே! அருங்கலையுணர்ந்து குற்றமற்றாரிடத்திலும் வெளிற றிவு பொருந்தும் (ஆதலால்) உயர்குடியிற் சனித்த, ஆறு குற்றங்களும் மறதியும் சோம்பலும் பிழைத்தல் என்று சொல்லப்படுந் துன்புசெய்யும் இவைமுதலாகிய எல்லாக்குற்றங்களையு மொழித்துப் பழிச்சொல்லுக்குப் பயந்து பொருந்திய நாணமுடையவனே ஆராய்ந்து தெளியப்படத்தக்கவன். எ - று

ஆறுகுற்றங்கள் காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியமென்பன.

இச்செய்யுளின்கருத்தை, ஷை, ஷை.

"குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு - நாணுடையான் கட்டே தெளிவு.
அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா - லின்மை யரிதே வெளிறு"—என்பதனானறிக, (௭௬)

சுற்ற மிலரா னவர்தம்மைச் சூழ்ந்தல் பழிபா வமுநாணார்
பற்று மிலரா குவர்விடுக பண்பார் தருநற் குணங்களே
முற்று முடையா ரிலர்தனுனை முனியுங் குற்றங் குணமிவற்றைத்
தெற்றென் றுணர்ந்து குணமிகுந்த செம்மை யுடையார் தமைத்தெளிக.

(இ - ள்) குற்றமில்லாதவர்களை யோசியாதே (ஏனெனில் அவர்கள்) பழி பாவங்கட்கும் அஞ்சார்கள், பற்றில்லாதவர்களாவார்கள், அவரை விட்டுவிடு. குற்றமற்ற குணவான் கிடைப்பதும் அரிது. ஆதலால் வெறுக்கத்தக்க குற்றங் குணமென்னுமிவ் விரண்டையும் நன்றாக அளவிட்டுக் (குற்றங்குறைந்து) குணமிகுந்த செம்மையாளர்களைத் தெரிந்தெடுத்துக் கொள்வாயாக எ - று.

இதனை, ஷை, ஷை

"குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண் - மிகைநாடி மிக்க கொளல்.

அற்றாரைத் தேறுதல் வோம்புக மற்றவர் - பற்றிலர் நாணார் பழி"—என்பதனு னறிக. (௭௭)

பெருமை சிறுமை யளந்துகொள்ளப் பேணுங் கருவி தத்தமது

கரும மதுபோற் பிறக்கருவி கழியச் சிறந்த தெல்வழிக்

மருவு காத லாலழியா மாட்டு வினையை வையறக

வொருவர் தமையுந் தேராமே யொருகா லத்துந் தெளியற்க.

(இ - ள்) (ஒருவருடைய) மேன்மையையுங் கீழ்மையையும் அளந்தறிவதற்கு அவரவரது செய்கையே தவிர மற்றவை சிறந்த கருவியல்லவென்று அறிவாயாக (ஒருவர்பால்)பொருந்திய உள் காதலினிமித்தம் தெரியாதவரிடத்து ஓர் தொழிலைச் சுமத்தாதே (எப்படியாயினும்) பரீட்சைசெய்யாமல் ஒருவரையும் ஒருகாலத்திலும் நம்பாதே எ - று

இதனை, ஷை, ஷை

"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங் - கருமமே கட்டளைக் கல்

காதன்மை கந்தா வறிவறியாரைத் தேறுதல் - பேதைமை யெல்லாந் தரும

தேற்றக யாரையுந் தேராது தேர்ந்தபிற் - றேறுக தேறும் பொருள்."—என்பதனு னுணர்க. (௭௮)

தேர்ந்து தெளியப் பட்டவன்பாற் றேர்ந்தே வினையுந் தந்திடுக

தேர்ந்து தெளியப் பட்டவனைத் தீது காணத் தயிர்ற்க

தேர்ந்து தெளியப் பட்டவன்றீர் வினையை விடுமதனைத்

தேர்ந்து பகைவர் பிரித்திடுவர் தேரான் றெளிவே போற்கேடாம்

(இ - ள்) தீரத்தெரிந்து கொள்ளப்பட்டவனுக்கும் (இவனுக்கிதுதகுமென்று) தொழிலையும் ஆராய்ந்தே சுமத்துக (தொழில் சுமத்தியானபின்) அவன் ஒரு தீங்கும் செய்யக்காணாது சந்தேகியாதே (சந்தேகித்தால் தன்னை நம்பாமைபற்றி) அவன் தொழிலை (பாதுகாவாது) விடுவான் அதனைப் பகைவர் அறிந்து (அவனையுன்பால்) பிரித்து(க்கொண்டு ஏற்று)க்கொள்வார்கள் (அதனால்) பரீட்சைசெய்யாது நம்பினவன்போலக் கேட்டைய வேண்டியதாம் எ - று

இதனை, ஷை, ஷை

"தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை - தீரா விடும்பை தரும

தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந் - தீரா விடும்பை தரும"—என்பதனுனும்,

அறநெறிச்சாரம்

"பொருள்போக மஞ்சாமை பொன்றுங்காற் போந்த

வருள்போகா வாரறமென் றாற்ற—விருள்போகக்

கூறப படுங்குணத்தான கூரவேல்வல வேநதனுற்
றேறப் படுங்குணத்தி னை "—எனபதனுறுமறிக. (எக)

முன்னாப் பொதுவா கிபவினையின் மூள விடுத்துந தீதகற்றி
நன்மை புரிந்து வருமாயி னுடி யவனைச சிறநதவினை
தன்னில் விடுகக சிறநதவினை சாாநது புரிவா னிடைதிரியின
பின்ன ரவனைப பொதுவினையிற பெயாத்து நழுவ விடடிடுக

(இ - ள்) நீ தெரிநதுகொண்டவனை முதலிற் பொதுவான தொழிலில் விடுத்து, (அதில்) துனபததை விலககி நனமைசெயது வருவானுயின (பினனா) சிறநத தொழிலில விடுவாயாக. (அவவாறு) சிறநத தொழிலைப்பறறிச செயபவன இடையில திருததக குறைவடைநதால, மறுபடியும அவனை மாறறிப பொதுவாகிய தொழிலிற் புகசசெயது கைநழுவவிடககடவாய எ - று

இதுமுதல நானகு செயயுளகளால திறனறிந்து தொழிலிடு எனக்கூறியதாம். இதனை, ஷ, தெரிநதுவினையாடல.

"நன்மையுந தீமையு நாடி நலமபுரிநத - தனமையா னாளப் படும
எனவகையாற றேரியக கணணும வினைவகையான - வேறுகு மாநதா பலா"—எனபதனுனறிக

பொதுவினை - பலாகூடிச் சாதிப்பதற்குரியது சிறநதவினை - ஒருவனே சாதிப்பதறகுரியது (அ0)

ஆளு மரசன பாலனபு மவனுக காவ தறியறிவு
நாளு மவறறைக கலஙகாம லனறு முடிக்கு முளத்துணிவு
மூளும வினைக்கந தனகரததின மொயதத பொருளின விழையாத
கோளு முடையான புரிவினையிற குறற முறுது குணமேயாம

(இ - ள்.) அரசுசெயயும மனனனிடததில அனபும, அவனுககு வருவதையறியும விவேகமும, அவறறைச சோாவினறி நன்ருகச சாதிககும மனததுணிவும, வரும வினைகடகுத தன கையிலுளள மிகக பொருளில வாஞ்சியாக குணமும உடையவனே செயயுங கருமததைப பழுதுபடாது முடிபபவனுவான எ - று.

இதனை, ஷ, ஷ,

"அன்பறிவு தேற்ற மவாவினமை யிநநானகு
நன்குடையான கட்டே தெளிவு"—எனபதனுனறிக.

"கரததின மொய்த்த பொருளின் விழையாத கோள"எனபதற்கு, அரசனுல் வரையறுககபபட்டதினமேற பரிதானப் பொருள விருமபாமை யெனப்பொருள கூறினுமாம (அக)

தெளிநத வினையிற றெளிநதவனைச சிறநத காலத் தொடுமவிடுகக
விளைநத வறிவாற றலுமிலையேன மிகக வுரிமை நினபாலே
தளைநத மனத்தா னுயிடினுந தனபால வினையைச சாாத்தறக
வளைநது வினையில விடுததவனை யதற்குத தகுமா றுரிமைசெயக.

(இ - ள்) (தககோனெனத) தெளிநதவனை (இத்தன்மைத்தெனத்) தெளிநத தொழிலிற சமயம் வாயக்குமபோதெல்லாம வைககககடவாய. உன்னிடத்திலேயே

உரிமைமிக்க (அன்பால்) தன்னோடு மனமுடையவனானாலும், மிகுந்த அறிவும் திறமையு மில்லையாயின் (அவனுக்கு) ஓர் தொழிலைச்சுமத்தாதே. (தக்கோனென்) அளவிட்டு ஒரு தொழிலில் விடுத்தவனை அவ்வினைக்கேற்ப பக்ஷமவைப்பாயாக. எ - று.

இதனை, குறள், குறள்.

"அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்-சிறந்தானென் றேவற்பாற் றன்று.
செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ - டெய்த வுணர்ந்து செயல்.
வினைக்குரிமை நாடிய பின்றை யவனை - யதற்குரிய னாகச் செயல்."—என்பதனு னுணர்க. (அஉ)

வினைக்கண் முயற்சி தவறாது வினையன் கேண்மை வேறாக
நினைக்கு மவனமற றவவினையி னீங்கும பிறரு மதியேனரா
முனைக்கும வினைஞன கோடாதே முதிர்ந் துலகங் கோடாது
தனைப்பபின் வைக வெறுஞநாடிச் சாரும வினையு நாடுகவே.

(இ - ள்) தன்றொழிலிற் றளராவுறுதியற்று முயற்சியாளன உறவினனாகவும் வேற்றுமையாய நினைப்பாயாயின், அவன அத்தொழிலினின்றும் நீங்குவான். (அதனை யறிந்த) பிறரும அதனால் (உன்னைநம்பித் தொழில்புரிதற்கு) உடன்படார். முன்னிற்கும் கருமத்தலைவன நீதிபிறழானாயின், பன்ழமையாகிய கடல் சூழ்ந்த உலகமானது முறைபிறழாது. (ஆதலின்) நீ எக்காலமும் தொழிலாளன சோர்வையாராய்ந்து (பின்பு) தொழிற்சோர்வையும ஆராயவாயாக. எ - று

இதனை, குறள், குறள்

"வினைக்கண் வினையுடையான கேண்மைவே றாக - நினைப்பானை நீங்குந் திரு
நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான - கோடாமை கோடா துலகு"—என பதனும்,

பழமொழி

"காட்டிக் கருமங் கயவாமேல வைத்தவ
ராகக்குவ ராற்ற வெமக்கென றமாந்திருத்தன
மாப்புனா நோக்கின மயிலன்னாய பூசைக்குக
காபபுக்கதல புனமீன் றலை"—னெபதனுமறிக (அங)

பற்றும வெறுக்கை யொழிந்துழியும் பழைமை யெடுத்துப் பாராட்டுஞ்
சுற்ற மதனைப் பெருங்கொடையாற றாய மொழியாற றழுவுறுதி
னற்ற மவனுக்கு கொருகாலு மணுகா தாக்க மிகப்பெருகு
முற்ற நினைக்கும பகைவாதொழின முற்று நேம கண்டனே.

(இ - ள்) எமகண்டா! பொருந்திய செல்வமற்ற காலத்திலும, அதிநட்பைக் கொண்டாடும உறவினரைப பெரிய கொடைத்தொழிலாலும இனிய வசனத்தாலுந் தழுவியிருந்தால் அவனுக்கு ஒருகாலுஞ் சோர்வுவராது. செல்வமானது மிகுதியாக வளரும வெல்லக்கருதுகின்ற சத்துருக்களுடைய கருமங்கள் முடிவுபெறு (ஆதலின் உறவினரைத் தழுவிக்கொள்வாயாக) எ - று.

இச்செய்யுளால உறவினரை யாதரி எனக்கூறியதாம.

இதனை, குறள், சுற்றந்தழாஅல.

"பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல் சுற்றத்தார் கணணே யுள.
விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா - வாக்கம பலவுந் தரும.

கொடுத்தலு மின்சொலு மாற்றி னடக்கிய - சுற்றத்தாற் சுற்றப் படும்.
காக்கை கரவா கரந்துண்ணு மாக்கமு-மன்னநீ ரார்க்கே யுள" —என்பதனானும்,

பழமொழி.

"அல்ல லொருவற் கடைந்தக்கால் மற்றவற்கு
நல்ல கிளைகளென் பபடுவ—நல்ல
வினைமரபின் மற்றதனை நீக்கு மதுவே
மனைமர மாய மருந்து" —என்பதனானுமறிக. (அச)

வேறு.

பெருமிதம் பெரிய செல்வம் பேரழில் பெரிய வின்பந்
தருமிகு களிப்பின் மூழ்கித் தங்குழி நீமை கண்டாய்
வருமிகு பொச்சாப் பந்த மறவியா னினைக் காத்துப்
பொருமிகு பகையை வெல்லும் பொருளெலா மிழப்ப தாகும்.

(இ - ள்) ஏமகண்டா! கர்வகுணம் - மிக்கசெல்வம் - கட்டழகு - விடய போகம் ஆகிய விவற்றில் அதிமோகம்பற்றி மூழ்கிக் கிடப்பின், அளவிறந்த மகிழ்ச்சி யுண்டாகும் (அம்மகிழ்ச்சி செய்கை செய்யாமைகளில் மறவியுண்டாக்கும்) அம்மற வியால், உன்னைக்காத்து, போர்புரியும் மிக்கபகைஞரை வெல்லும் எல்லாப்பொருள் களையும் இழக்கச் செய்யும். எ - று.

இதுமுதல் மூன்று செய்யுள்களால் மறவிக்குணத்தை விடு எனக்கூறியதாம்.

இதனை, குறள், பொச்சாவாமை.

"இறந்த வெகுளியிற் றீதே சிறந்த - வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு
அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை - பொச்சாப் புடையார்க்கு நன்கு
முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை - பின்னூ றிரங்கி விடும்" —என்பதனா னறிக. (அரு)

உற்றிடு மாற்றன் மூன்று முபாயங்க ணான்கு நன்மை
பற்றிய தொழில்க ளைந்தும் பண்புறு குணங்க ளாறு
மற்றைய வினைத்து நேடா மனைபிறப் பேழன் காறும்
பற்றிடு நன்மை யின்றாம் பழுதுபொச் சாப்புச் சாரின்

(இ - ள்) கேட்டைத் தருவதாகிய மறவிக்குணம் பொருந்துமாயின், பொருந்திய மூவகையாற்றலும், நால்வகை யுபாயமும், ஐவகைத்தொழிலும், அறுவகைக் குணமும், மற்றையயாவும் கேடாம். அவனுக்கு வாரகின்ற எழுபிறவிகள் வரையிலும் அடையத்தக்க நற்செய்கை யில்லையாகும். எ - று.

ஆற்றல் மூன்று—அறிவு, ஆண்மை, பெருமை.

உபாயங்கள் நான்கு—சாமம், பேதம், தானம், தண்டம்

தொழில்கள் ஐந்து—எளியமுயற்சி, பயன்விளைவது, பெரும்பயன் றருவது, சந்தேகமில்லாதது, பின்நன்மை பயப்பது.

குணங்கள் ஆறு--அன்பு, நாண், ஒப்புரவு, தாக்ஷிணியம், வாய்மை, மாட்சிமை.

இச்செய்யுளின்கருத்தை, குறள், குறள்.

"புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில." —என்பதனானறிக. (அசு)

நெகிழ்ச்சியொன் றின்றிச் செய்ய நினைந்தகா ரியத்திற் சென்று
புகழ்ச்சிசெய் முயற்சி செய்யிற் பொருள்பய வாமை யில்லை
யிகழ்ச்சியிற் கெட்டார் தம்மை யெண்ணுதல் செய்வை யாயின்
மகிழ்ச்சியின் மைந்து றாத வண்மைவந் தடுக்கு மைந்தா.

(இ - ள்) மகனே! நீ செய்ய நினைத்த (காரியம் எத்தகையதாயினும்) அக் காரியத்திற் சிறிதும் மறவிக்குணமின்றிப் பிரவேசித்து, கீர்த்தியையுண்டுசெய்யும் முயற்சிசெய்து கொண்டிருந்தால், (அது முற்றிப்) பயன்கொடாமையில்லை (அம்மறவி யுன்னை நீங்குதற்குபாயங்கேள்) அளவிலுவகையால் இறுமாக்கும்பொழுது, அவ்வாறு முன் இறுமாந்து கெட்டவரை நினைப்பாயாயின் அது தானே யொழிந்துவிடும் எ - று

இதனை, குறு, குறு.

"அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக் - கருவியாற் போற்றிச் செயின்
இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தந்தம்-மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து."
என்பதனானும்,

சூளாமணி

"இகழ்ச்சி யிற்கெடு வார்களை யெண்ணுக
மகிழ்ச்சி யின்பத்தின் மைந்துறும் போழ்தெனப்
புகழ்ச்சி நூலுட் புகன்றனர் பூவினுட்
டிகழ்ச்சி சென்றசெம் பொன்முடி மன்னனே"—என்பதனானுமுணர்க. ()

எய்திய குற்றத் தோர்கள் யாவரா யினுங்கண் ணோடா
தைதென நாடி நீதி யறந்தலைப் பிழையா தண்டஞ்
செய்தலே செங்கோ லாகுஞ் செய்யகோ லின்றே லென்னை
முய்திசெய் மழையா னாக்க ளுறுபய னுற்ற போலும்.

(இ - ள) பொருந்திய குற்றமுடையோர் யாவராயினுந் தாக்ஷிணியம் பாராட்டாது அழகாக விசாரித்து, தருமநெறி தவறாமற்படி தண்டஞ்செய்தலே செங்கோன்மையென்று சொல்லப்படுவதாகும் (இம்முறை செய்தல்) பயனை யுண்டுசெய்யும் மழையினால் பிரஜைகள் பொருந்திய பயனடைதல்போலும் செவ்விய இராசநீதி தவறுமாயின் யாது பயனுண்டாகும்? (ஒன்று முண்டாகமாட்டாது) எ - று

இதுமுதல் ஐந்து செய்யுள்களால் நன்னீதிசெலுத்துது எனக்கூறியதாம்

இதனை, குறு, செங்கோன்மை

"ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந் - தேர்ந்துசெய் வஃதே முறை
வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன் - கோனோக்கி வாழுங் குடி"—என்பதனானறிக. (அஅ)

மழைவளஞ் சுரக்கு மாறும் வயனிலம் விளைபு மாறும்
விழையறம் வளரு மாறும் வேதநூல் விளங்கு மாறுந்
தழைபொரு ளீட்டு மாறுஞ் சமரிடை வெல்லு மாறும்
பிழைதப வாழு மாறும் பிறழ்தராக் கோலி னாகும்.

(இ - ள்) (அரசன் நீதி) தவறாத செங்கோலினாலே, (உலகத்திலே பருவ) மழைபெய்து செழித்தலும், விளைநிலங்கள் பயன்றருதலும், நினைத்தபடி தருமங்கள் விருத்தியாதலும், வேதசாஸ்திர விதிகள் பிரகாசித்தலும், பொருட்பெருக்கந்தேடுத

லும், (பகைவரைப்) போரில் வெல்லுதலும், அவக்கியாதியின்றி (குடிகள்சூழ) வாழ்ந்திருத்தலும், (ஆகிய இவையாவும்) உளவாகும். எ - று.

இதனை, ஷை, ஷை.

"அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய - நின்றது மன்னவன் கோல்.
குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன் - அடிதழீஇ நிற்கு முலகு.
இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட - பெயலும் விளையுளுந் தொக்கு.
வேலன்று வென்றி தருவது மன்னவன் - கோலதூஉங் கோடா தெனின்."
என்பதனானறிக. (அக)

கருவிற்குஞ் சாதி தமமாற் காமரா ருயிரைக் கொல்வோர்
வெருவரச் சூறை கொள்வோர் மேவியா றலைப்போர் கள்வ
ருருவளர் பிறனில் வேட்போ ருவாமுத லோரைக் கோறல்
பருவரு பாவ மன்று பயிர்க்களை களைதல் போலாம்.

(இ - ள்) ஆயுதப்பிரயோகம் - நஞ்சிடுதல் முதலியவற்றால் (ஒருவருடைய) அழகிய அரிய உயிரைக்கொல்வோரும், அஞ்சும்படி கொள்ளைகொள்வோரும், பொருந்திய வழிப்பறிப்போரும், சோரஞ்செய்வோரும், அழகுமிக்க பிறர்க்குரிய மனைவியைக் கூடுவோருமாகிய இவர் முதலியபாவிகளைக் கொல்லுதல் [மரணதண்டனை விதித்தல்] வருந்தத்தக்க பாவமாகாது (நற்குடிகளாகிய) பயிருக்கு (துஷ்டர்களாகிய) களைகளைக் களைதல்போலாகும். எ - று

இதனை, ஷை, ஷை.

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்"—என்பதனானறிக (கூ0)

பரிசனம் பகைவர் கள்வர் படர்தரு முயிர்க டாமென்
றுரைசெயைந் திடத்தி னுறு முலகிடை யிடையூ றெய்தா
வரிசையிற் காத்து நீதி வழுக்கினர் தமமை யொறுத்திக்
கரிசறப் பொருளுங் கோடல் காவலர் தரும மைந்தா.

(இ - ள்) தன்பரிசனர் - பகைவர் - திருடர் - செல்லுகின்ற (பறவை விலங்காதி) உயிர்கள் - தான் என்று சொல்லப்படும் ஐவகையிலும் பிரஜைகளுக்குத் துன்பமுண்டாகாமல் முறைப்படி யிரட்சித்து, நீதிதவறி நடந்தவர்களைத் தண்டித்துக் குற்றமறப்பொருளும் வாங்கிக்கொள்ளுதல் அரசர்க்குரிய தருமமாம். (இவைநீதியென்றெண்ணுதே) எ - று

இதனை, ஷை, ஷை.

"குடிபுறங்காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்"—என்பதனானும்,

திருத்தொண்டர்புராணம்

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர் புரக்குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தா
லூனமிகும் பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மா
லானபய மைந்துந்தீர்த் தரசாள்வா னலனன்றே."—என்பதனானுமறிக.

"பொருளுங்கோடல்" என்றதால், குடிகளிடத்து ஆறிலொருபங்கும், குறுநில மன்னர் பால் விதித்த நியமப்படி கப்பமும், குற்றஞ்செய்தோரிடத்து அபராதமு முதலியனவுங்கொள்க. (௬௧)

முறைமைமுட் டாது செய்து முழுநிலங் காப்பி னந்த
விறைவனைச் செங்கோல் காக்கு மெளியசெவ் வியனு மாகான்
குறைவளா குற்ற மோரான குணத்தொடு முறைசெய் யானை
நிறைதரு பாவந் தேய்க்கு நெடும்பகை யின்று மேனும்.

(இ - ள்.) உலகமுழுவதையுஞ் செங்கோன்முறை பிசகாது காப்பானாயின், அவ்வரசனை (காப்போர் ஒருவரிலராயினும்) அம்முறை பிசகாமையே காக்கும். (குறையறிவிப்பார்க்கு) எளிய சமயத்தனாயிராவிடினும், குற்றங்குறைகளை யறியாதவனாயினும், நீதிமுறைப்படி அரசுசெய்யாதவனுமாகிய மன்னனை, மிக்கபகை (வேறு) இல்லையாயினும் (அம்முறை பிசகாகிய அவனுடைய) நிறைந்தபாவமே கெடுக்கும். எ - று.

இதனை, ஷை, ஷை.

"இறைகாக்கும் வையக மெல்லா மவனை - முறைகாக்கு முட்டாச் செயின்.
எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன் - றண்பதத்தாற் றானே கெடும்."
என்பதனானும்,

சீவகசிந்தாமணி

"உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமா
லிறங்கு கண்ணிமை யார்விழித் தேயிருந்
தறங்கள் வௌவ வதன்புறங் காக்கலா"—என்பதனானுமுணர்க (௬உ)

அறுதொழி லாளர் நூல்க ளயர்ப்பரான் பயனிற் றுக்கு
முறைபெய லொழியுங் கூழுங் குடிகளு மொருங்கு நீங்கும்
பெறுபய னட்டிற் குன்றும் பிறங்கொளி நிலைபெ றாது
கறையின்மேற் பொருள்கைக் கொண்டு காவலை விடுப்பின் மைந்த.

(இ - ள்.) மகனே! (மன்னனானவன் மேற்கூறிய முறைதவறி) கறையின மேற்பொருளை விசேடமாகக் கைக்கொண்டு (பிரசைகளைக்) காத்தலை யொழிப்பானாயின், அறுதொழில்களையுடைய அந்தணர் வேதசாஸ்திர முறைகளை மறப்பார்கள், பசுக்கள் பால் கொடாதனவாம். மழையொழிந்து போம், (உணவாதிய) பொருள்களுங் குடிகளும் ஒருங்குகெடும், நாட்டிலுண்டாகிய பலன்கள் குறையும், கீர்த்தியும் நிலைபெறாது (தொலையும்) எ - று.

இச்செய்யுளால் அநீதியையொழி எனக்கூறியதாம்

இதனை, ஷை, கொடுங்கோன்மை.

"கோலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்-டல்லவை செய்தொழு
கூடொறு நாடி முறைசெய்யா மன்னவ - னாடொறு நாடு கெடும். [கும வேந்து.
கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச் - சூழாது செய்யு மரச
மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன-மன்னாவா மன்னர்க்கொளி
முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி - யொல்லாது வானம் பெயல்
ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர் - காவலன் காவா னெனின்"—
என்பதனானும்,

ஆசிரியமாலை

"தற்பாடு பறவை பசிப்பப் பகையற
நற்குலங் கொள்ளாது மாறிக் காலம்பொரச்
சினைவெண்டலைச் சிறுபுன் கொண்மூ
மழைகா லூன்று வளவயல் விளையா
வாய்மையுஞ் சேட்சென்று சாக்குந் தீதறப்
பிறவு மெல்லா நெறிமாறு படுமே
கடுஞ்சினங் கவைஇய காட்சிக்
கொடுங்கோல் வேந்தன் காக்கு நாடே"—என்பதனானுமறிக.

கறை - அரசன் கொள்ளுங் கப்பம். வேதியரறுதொழில்—ஓதல்-ஓதுவித்தல் வேட்டல் - வேட்பித்தல் ஈதல் ஏற்றலெனப்படும். (௬௬)

கடுமொழி கண்ணோட் டாமை கையிகந் திட்ட தண்டம்
நடுநிலை யின்மை செவ்வி யின்மைமந் முகமு றுமை
யுடனுறச் சூழ்ந்து செய்யா துறுபிழை யமைச்சாக் கேற்றல்
படுசமர்ச் சிறைசெய் யாமை பலவுந்தீங் காக்கு மைந்தா.

(இ - ள்.) மைந்தனே! கடுஞ்சொற் கூறுதலும், தாட்சணிய மில்லாமையும் குற்றத்திற்கேற்பச் சிட்சைசெய்யாமையும், நடுநிலைமைக் குணமில்லாமையும், (குறை யறிவிப்பதற்கு) எளிதிற் சமயங்கொடாமையும், ஒன்றையோசியாமல் (தானாகச்) செய்து விட்டுப் பொருந்திய பிழைப்பாட்டை மந்திரிகண் மேலேற்றலும், போர்செய் யுங்கால் (தன்னைக்காத்துக் கொள்வத ருப) புகலிடந் தேடிவைத்திராமையும், இவை முதலிய யாவும் பொல்லாங்கினை யுண்டுசெய்யும் எ - று.

இச்செய்யுளால் அச்சமுறுவியாதே எனக்கூறியதாம்.

இந்நூல், ஷ-, வெருவந்தசெய்யாமை.

"தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா - லொத்தாங் கொறுப்பது வேந்து.
அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்-பேஎய்கண் டன்ன துடைத்து.
கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ - நீடின்றி யாங்கே கெடும்
கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த - னடுமுரண் டேய்க்கு மரம்.
இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச் - சீறிற் சிறுகுந் திரு.
செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன் - வெருவந்து வெய்து கெடும்"
என்பதனானும்,

புறநானூறு.

"காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கு
மறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்து
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்

கருவியு முடலமு மெனவென் றுங் கலவியி னமதுள மறியாயா
வெருவுத லறவொரு வனிலின்ப மேவிலை சிலையுரு வாகென்றான் ''—

நின்ற வாசவன் முகத்தினை நெடுந்தவ னோக்கி
யின்று சாம்பர்செய் திடுகுவ னிந்திர னென்று
வொன்று வேட்டுவந் தாயக்குடன் முழுவதும் யோனி
நன்று மேவுக வெனப்பெருஞ் சாபநாட் டினனால் ''— என்பதனானுணர்க.

திருமால் —இவர் பூர்வம் தேவாசுரர்கட்கு நிகழ்ந்த யுத்தத்திற் றோல்வி யடைந்த தேவர்கட்குத் துணையாகத் தமது பஞ்சாயுதங்களுடன் செருச்செய்ய, அசுரர்கள் போர்புரியமாட்டாது புறமுதுகிட்டு ஓடினர் அப்பொழுது திருமாலுஞ் சக்கராயுதத்தை யெடுத்துக்கொண்டு அவர்களைப் பின்றொடர்ந்து கொல்லவேண்டு மென்னுங் கருத்தால் துரத்தினர். அசுரர்கள் பிருகுமுனிவர் மனைவியாகிய கியாதி யென்பவளிடம் அடைக்கலம்புக, கியாதி அவர்களைத் தன்றாச்சிரமத்திற் பாதுகாத்தனள். கோபத்தோடு பின்றொடர்ந்துவந்த மாதவனும் அவ்வாச்சிரமத்தினுள் நுழைந்தனன். அப்பொழுது அவரைக்கண்ட மாமியாகிய கியாதி யென்பவள் போற்றிநிற்ப, விஷ்ணுவானவர் அவளுடைய சிரத்தைத் துண்ணென வெட்டினர் அவள் பெருங்கூச்சலிட்டுக்கொண்டு வீழ்ந்திறந்தனள். அதனால் யோகத்திலிருந்த பிருகுமுனிவர் யோகநீங்கி நிகழ்ந்தவற்றை யுணர்ந்து துக்கமுங் கோபமு மிகலுக் கண்கள் சிவப்பவும் இதழ் துடிக்கவும் நெருப்புப்பொறி பறக்கவும் விண்டுவை நோக்கி, நீ அடாதகாரியஞ் செய்தமையின் தமோகுண சம்பந்தமான பத்துப்பிறவிகளடைகவெனச் சபித்து விடுத்து, சுக்கிரனாலுயிர்பெற்ற தம் மனைவியுடன் சிவத்தியானத்திலிருந்தனர் திருமால் சிவார்ச்சனைசெய்து அவற்றை நீக்கும்படி வரமேற்பச் சிவபிரான் எம்மடியார் கூற்றுப்பிழையாதாயினும், எம்மை நீ வழிபாடுசெய்தமையின் ஜநதில அநுக்கிரகமும் ஜநதில தண்டமும் புரிவோம் உன் பிறவிகள் பத்தும் உலகோபகாரமாமென்றருளினர் என்பது சரித்தசங்கிரகம்.

இதனை, காஞ்சிபுராணம் - அரிசாபபயந்தீர்த்தபடலம்.

சீற்ற மிக்கெழச் சேந்த கண்ணினன் றிகிரி யோச்சியங் கெய்து மாதவன்
போற்றி வாய்தலின் வைகு மாமியைப் பொருச்செ னச்சிரந் துணித்து வீழ்த்தலு
மேற்றெ ழுந்தகூ கூவொ லித்திர ளிருசெ வித்துளை யேறு மாமுனி
மாற்ற ருந்திறல் யோகு நீங்கிமுன் மனைவி பட்டது மற்று நோக்கினன்

கண்டு மாழ்கினன் றுயரின் மூழ்கினன் கண்கள் சேந்தன ளிகழ்து டித்தனன்
மண்டு வெங்கனற் பொறிதெ றிப்பவம் மாத வன்றனை வெகுண்டு நோக்கினா
னண்ட ளிக்கரத் தரிவை தன்னைமா றுனக்கு மாமியைத் தறுக ணாளனாய்
மிண்டி னாற்கொலை செய்து வீட்டினை வெய்ய பாவிநீ யுய்யு மாறெவன்

எடுத்தி யம்பிய சைவ மேயவற் றுள்ளு முத்தம மென்னி லாங்களுங்
கடுத்த தும்பிய கண்ட னாரடிக் கமல மன்றிவே றறிகி லேமெனிற்
றொடுத்த தூசகுமிச் சத்தி யத்தினுற் றுயரு ழந்துமீ நரக வல்வினை
மடுத்த வெம்பிறப் பொருப தெய்துக வழுவு பாதகக் குழிசி யாயினாய்.

நின்ற னக்கடுத் தொண்டு பூண்டவர் நெறிய லாப்புறத் தாற்று நூல்வழித்
துன்று தீக்கையுற் றென்று முப்புரஞ் சுட்ட வெம்பிரான் றிருவ டிப்பிழைத்
தொன்று மூன்றுதண் டேந்தி யீனரா யுலப்பி லாதவெந் நிரைய மேவுக
மன்ற வங்கவாக் கண்டு ளோர்களு மறலி யூரினைக் குறுகி மாய்கவே.

எவ்வ மேமிருந் தமோகு ணம்பயின் றிழிந்த யோனியின் மீன மாதியாம்
வெவ்வினைப்பவந் தோறுமின்னலே விரவு வாயென வெய்ய சாபமிட்
டவவி யதகொகை யிரிய நூறமப் பிருகு வெள்ளியா லாவி பெற்றெழு
நவ்வி வாள்விழி மனைவி தனனொடு நாரி பாகனை வழுத்தி வைகினன."—என்
பதனானுணர்க (கஈஎ)

தன்னா லாளப் படுமனைவி தன்னா லாளப் படுவானே
லன்னாற் கறனும் பொருளுமுள வாகா தொலலைப பொருளான்று
மன்னா பயன்கள் வினைமுடியா மறுமை யணுகா தெபபிழையு
முன்னும் பின்னும பெருநாணு மூவாப பழியு மறிமைந்தா.

(இ - ள்.) அரசனே! (இல்வாழ்க்கைக்குத் துணையாய்) தனனேவல் செய்யச் சம்பாதிக்கப்பட்ட மனைவிக்குத் தானேவல செய்யத் தலைப்படுவானாயின், அவனுக்கு அறமும பொருளும் உளவாகா முன்னுள்ள பொருளாலும் பயனுவராது. செயலகள முற்றுறா. (இவ்வாறு இம்மைப்பயனொழிவதன்றி) மறுமைப்பயனு முளதாகாது. எக்குற்றங்களும முறபட்டுவரும. பெரிய நாணமுங கெடாத பழியும பின்னா வரும. (ஆதலின) மகனே! (தையல் சொல்லைக் கேளாதே) எ - று

இச்செய்யுளால் மாதர்மொழிகொள்ளாதே யெனக் கூறியதாம்.

இதனை, குறள், பெண்வழிச்சேறல்.

"மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்-வேண்டாப் பொருளு மது.
பேணாது பெணவிழைவா னாக்கம பெரியதோர்-நாணாக நாணுத் தரும்.
மனையாளை யஞ்சு மறுமையி லாளன்-வினையாணமை வீறெய்த லின்று.
இலலாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று-நலலார்க்கு நலல செயல். [தது.
பெணணேவல செய்தொழுகு மாணமையி னாணுடைப-பெண்ணே பெருமை யுடை
அறவினையு மானற பொருளும் பிறவினையும-பெணணேவல செய்வார்க ணில"—
எனபதனானுணாக. (கஈஅ)

எழிலாற பாட லாடலினா லிச்சை பெருக்கி யுளமொவ்வா
மொழியாற செயலால வயமாக்கி முறறும பொருளைப பறித்துவிடும
பழிநா ணுத பரத்தையரைப பறறு ராயந்த பணபுடையா
ரொழியா ரவரைப பேதைமையி லொழியா ரேம கண்டனே.

(இ - ள) தங்கள் அழகாலும் நடனத்தாலும கீதத்தாலும் (பார்ப்போர்க்கு) ஆசைமூட்டி, மனதுக்கொவ்வாத (இச்சக) மொழியாலும (வஞ்சக) நடக்கையாலும் அவரை வசப்படுத்தி, பொருள் முழுவதையும் அபகரித்துவிடும் பழிக்கஞ்சாத விலை மாதரை ஆராய்ந்த நற்குணமுடையோர ஒழிப்பார்கள் (ஆனால) பேதைமைக்குணத்தினின்றும் விலகாதவர்கள அவர்களை நீங்கமாட்டார்கள. எ - று.

இச்செய்யுளால பரத்தையரை விரும்பாதே யெனக் கூறியதாம்.

இதனை, குறள், வரைவின்மகளிர்.

"அன்பின் விழையார் பொருள்விழையு மாயதொடியா - ரின்சொ லிழுக்குத் தரும்.
பயன்றூக்கிப் பண்புரைக்கும பண்பின மகளிர - நயன்றூக்கி நள்ளா விடல்.
பொருட்பெண்டிர பொய்மமை முயக்க மிருட்டறையி - லேதில் பிணந்தழீஇ யற்று
தந்நலம பாரிப்பார தோயார் தகைசெருக்கிப் - புன்னலம பாரிப்பார் தோள.
ஆயு மறிவின ரல்லார்க் கணங்கெனப - மாய மகளிர் முயக்கு."—என்பதனானும்,

சாந்திபுராணம்.

"ஆசை யலகுல் பெரியானை யருளு மிடையுஞ் சிறியானைக
கூசு மொழியும புருவமுங குடில மாகி யிருப்பானை
வாசக் குழலு மலாககணணு மனமுங கரிய மடவானைப
பூசல பெருக்க வலலானைப பொருநதல வாழி மடநெஞசே"—எனபதனு
னுமறிக. (கரு௯)

அறிவை யழிககுஞ செயலழிககு மழியா மானந தனையழிககுந
செறியு மறிஞா மதியாத செருககை விளைககு மீனமுஞ
முறியும வெறுபபு மிகவிளைககு முனிவு விளைககும பகையஞசாக
குறிகள விளைககு நகைவிளைககுங கொளளேல கள்ளுண டலைமைநதா.

(இ - ள) (கள்ளானது தனனைப்பழகினவனுடைய) பகுததறிவைககெடுக்கும், நன்னடககையை யொழிககும, கெடாதமனததைககெடுக்கும, மதிவாணாகள் பொருளாககொளளாத காவததையுணடுசெயயும, பெறறதாயும மனமுறியுமபடிவெறுப்பினை மிகுதியாக விளையசெயயும, பகைவா அசசடைடசெய்யததகக குறிகளையுங கொடுக்கும, (கணடோாககுச) சிரிபபையுணடாககும, ஆதலாற கடகுடிததலை நீ கொளளாதே எ - று

இசசெயயுளால் மதுபானஞ் செயயற்கவெனக கூறியதாம்.

இதனை, ஔஷ, கள்ளுண்ணாமை.

"உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங - கடகாதல கொணடொழுகு வார
உண்ணறக கள்ளை யுணிலுணக சானறோரா - னெணணப படவேணடா தாா.
ஈனறாள முகததேயு மின்னாதா லெனமறறுச - சானறோா முகததுக களி.
நாணெனனுநலலாள புறங்கொடுக்குங களளெனனும-பேணாப்பெருங்குறறததாாககு.
கையறி யாமை யுடைததே பொருளகொடுதது - மெயயறி யாமை கொளல"—என
பதனும,

அறநெறிச்சாரம்

"ஒளியு மொளிசான்ற செய்கையுஞ சானறோா
தெளிவுடைய னெனறுரைககுந தேசுங—களியெனறுங
கட்டுரையாக் கோதப படுமே லிவையெலலாம
விட்டொழிககும வேறுய விரைநது"—என்பதனு முணாக (கசo)

வென்றி வரினு மதனுனமுன மேவு மொனறற் காயிரமபின்
மனற விழககு மதுவனறி வைதத பொருளும வருவாயு
மனறி யனைததும பகைகொளளு மமைசச ராதி யுறுபபொழியு
மொனறு மொளிகல விகண்மறுமை யுறுதி யிலையாஞ சூதாடேல்.

(இ - ள்) சூதாடாதே! அதனுல் முதலில் (சிறிது) வெற்றிவரினும், பின்னர் அதற்காயிரம்பஙகு தோல்வியைததரும பண்டுள்ள பொருளும இனிவரும்பொருளுமல்லாமல எலலாவறறையும பகைவர்கள கொள்வாாகள் மநதிரிமுதலிய இராசாங்கஙகெடுமெ நல்வாககு கலவியறிவு மறுமைபபயன விளைககுஞ செயல் இவைகளும் இல்லாமற்செய்யும். எ - று.

இச்செய்யுளாற் சூதாடாதே யெனக்கூறியதாம்.

இதனை, ஷை, சூது.

"வேண்டற்கவென்றிடினுஞ்சூதினை வென்றதூஉ-தூண்டிற்போனமீன்விழுங்கியற்று.
ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதாகது முண்டாங்கொ-னன்றெய்தி வாழ்வதோ ராறு.
உருளாய மோவாது கூறிற பொருளாயம-போஒய்ப் புறமே படும
கவறுங கழகமுங கையுந தருக்கி-யிவறியா ரிலலாகி யாா
பொருள்கெடுத்துப பொயமேற் கொளீஇ யருளகெடுத-தலல லுழபபிக்குஞ்சூது."—
என்பதனானும்,

நாலடியார்.

"உருவழிக்கு முண்மை யுயாவழிக்கும வணமைத
திருவழிககு மானஞ் சிதைககு—மருவு
மொருவரோ டனபழிககு மொனறலல சூது
பொருவரோ தக்கோா புரிநது"—எனபதனானுமுணாக. (கஅக)

மனமெய்ம மொழிகள வருந்தாமல வகுத்துத தொழிலை மாறுபடா
வினிய வுணவை மிகப்பசித்து விடக்றி னுடற்குப பொருநதவுணின
முனிசெய் பிணிகட கிடனின்று முறைகள பிறழநது வநதுவிடிற
புனித முடைய வயித்தியரால வழிமின றவற்றைப போககுகவே

(இ - ள) மனமாவது தேகமாவது வாாததையாவது வருத்தமுறுதபடி தொழில்களைசசெயது, (உடறகூறறுககு) மாறுபடாத நலல வுணவை மிகபபசியுறறபொழுது சரீரத்துககமையப் புசித்தால, துனபுசெயகினற பிணிகட் கிடமிலலையாகும. இமமுறை பிசகிப பிணிவநதுவிடடால (அநுபவசாலிகளான) நல்ல வைததியாகளால (வைத்தியநூன) முறைப்படி நடநது அவற்றைத தீாததுககொளக எ - று

இசசெயயுளால நோய்ககிடஙகொடேலெனக கூறியதாம்.

இதனை, ஷை, மருநது.

"மிகினுங குறையினு நோயசெயயு நூலோா - வளிமுதலா வெணணிய மூன்று.
அறறு லளவறிந துண்க வஃதுடமபு - பெறறு னெடிதுயககு மாறு
அறற தறிநது கடைப்பிடிதது மாறலல - துயககத துவரப பசிதது
மாறுபா டிலலாத வுணடி மறுதது ணணி - னூறுபா டிலலை யுயிாககு.
உறறு னளவும பிணியளவுங காலமுங - கறறுன கருதிச செயல
உற்றவன றீாபபான மருநதுழைச செலவானெனன - றபபாலநாற கூற்றே மருந்து"—
எனபதனானுமறிக. (கஅஉ)

ஒழிபியல

உன்னன மொழிதல் செயன்மூன்றுங் தொழுககம வாயமை நாணொழுககார்
மனனு மனையிற பிறநதாாகண மலாநத வீகை யிசழாமை
நனனா மொழியு மவாககேயா நனமை பயவா வினைவறுமை
யினன விடுதலும புரியாாக ளே ம கணடா வினியறிமோ

(இ - ள) ஏமகணடா! குலாசாரமபேணுவோர்க்கு மனநினைவும் வாயச சொலலும் காயச்செய்கையுமாகிய மூனறும ஒததொழுகலும நனனடை பிழையாமையும் சததியந்தவறாமையும நாணஙகெடாமையாய்வாழ்தலும, முகமலர்ச்சி உதாரத்துவம் நனகுமதித்தல இனியவசனம ஆகிய இவையாவும் உளவாகும் மேலும், தாம்

வறுமையுற்றகாலத்திலும் பிறர்க்குத் தீமைவிளைக்குங் கருமங்களைச் செய்யார். அறிவாயாக. எ - று

இதுமுதல் பதினமூன்று செய்யுள்களால் ஒழிபியலும், இச்செய்யுளால் குலாசாரம்பேணுகவென்றுங் கூறியதாம்.

இதனை, ஷை, குடிமை.

"இற்பிறந்தார் கண்ணல்லலை தில்லை யியல்பாகச் - செப்பமு நாணு மொருங்கு.
ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று - மிழுக்கார் குடிப்பிறந் தார்.
நகையீகை யின்சொ லிகழாமை நான்கும் - வகையென்ப வாய்மைக் குடிக்கு.
விழுங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி - பண்பிற் றலைப்பிரித லின்று
சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற - குலம்பற்றி வாழ்துமென் பார்"—
என்பதனானும்,

ஏலாதி.

"சென்ற புகழ்செல்வ மீக்கூற்றஞ் சேவகம்
நின்ற நிறைகல்வி வள்ளன்மை - யென்று
மளிவந்தார் பூங்கோதா யாறு மறைவின்
வழிவந்தார் கண்ணே வனப்பு"—என்பதனானுமறிக. (கசக)

பெருக்கத்து யாவரும் பணிவொழியல் பேணும் பணிவு சுருக்கத்திற்
செருக்க லின்றி யமையாத சிறப்பிற் றேனு முயாமான
முருக்கும் வினையைச் செய்தினையன் மொய்ம்பார் மானங் கெடலூழ்வந்
துருக்கு மெனிற்சா மைமானை யுன்ன லேம் கண்டனே.

(இ - ள்) எமகண்டனே! செல்வம்பெருகிய காலத்து உயர்வாகிய பணிவு காட்டுதலாலும், செல்வஞ்சுருங்கிய காலத்துப் பணிவுகாட்டாமையாலும் யாதேனுமொன்று இன்றியமையாத விஷயமாயிருப்பினும், மானமழிதற் கேதுவாகிய காரியத்தை நிறைவேற்ற மனந்துணியாதே விதிவலியால் வலிதங்கிய மானங்கெடும்படி வருமாயின் (தன்னுரோமத்துளொன்றை யிழப்பினும் உயிரை யிழக்கும்) கவரிமானைப் போலப் பிராணனைவிடுவதாலுங் கௌரவத்தோடு வாழலாம். எ - று.

இச்செய்யுளால் மானமழியாதேயெனக்கூறியதாம்.

இதனை, ஷை, மானம்.

"இன்றி யமையாச் சிறப்பின வாயினுங் - குன்ற வருப விடல்
பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய - சுருக்கத்து வேண்டு முயர்வு.
மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை - பீடழிய வந்த விடத்து.
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்ன - ருயிர்நீப்பர் மானம் வரின்."—என்பதனானும்,

நான்மணிக்கடிகை

"பறைபட வாழா வசுணமா வுள்ளங்
குறைபட வாழா ருறவோர் - நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே வெதிர்சாந் தமக்கொவ்வாச்
சொற்பட்டார் சாவாதஞ் சால்பு"— என்பதனானுமுணர்க. (கசச)

ஐது குடியிற் பிறந்தருளா லாயந்து செல்வத் துயர்ந்ததனை
லெய்த லரிது பெருமையம் தெய்துங் கொடையொப் புரவாதி

செய்தற் கரிய செய்துபிறா செயிாகூ றுமற் றருக்காம
லுய்தி நெறியிற் பிறழாம லொழுகு வாாகருள் ளதுமைநதா.

(இ - ள்.) மகனே! மேற்குலத்திறபிறநது அரிய நூலகளையாராய்ச்சிசெய்து செல்வபபெருககடைந்ததினாலும பெருமையானது அடைதறகரியதாம் (அல்ல) அது ஈகை சமாத்ானநடைமுதலிய செயறகரிய செயலகளைசசெயது பிறா குறறஙகளை யெடுத்துரையாது இறுமாபபடையாது உசசீவிககததகக வழியினின்றுந தவறாமல நடப்பவாயட்கேயுள்ளது. எ - று.

இசசெயயுளாற் பெருமைதேடெனக்கூறியதாம்.

இதனை, கூஉ, பெருமை.

"ஒளியொருவர்க் குளள வெறுக்கை யிளியொருவக்-கஃதிறநது வாழ்து மெனல்
பிறப்பொககு மெலலா வுயிாக்குஞ் சிறப்பொவ்வா - செயதொழில வேற்றுமை யான்.
மேலிருந்து மேலலலாா மேலலலா கீழிருநதுங - கீழலலாா கீழல லவா.
பெருமை யுடையவ ராறறுவா ராற்றி - னருமை யுடையசெயல்.
பெருமை பெருமித மினமை சிறுமை - பெருமித மூாநது விடல."—எனபதனு ணும,

சீவகசிந்தாமணி

"கருங்கடற் பிறப்பி னலலால் வலம்புரி காணுங் காலைப்
பெருஙகுளத தெனறுந தோனறா பிறைநுதற் பிணையி னீரே
யருஙகொடை தான மாயநத வருநதவந தெரியின மண்மேன்
மருஙகுடை யவாகட் கலலான மறறையாக காவ துணடோ"—என்பதனானு முணாக. (௧௬௫)

அன்பொப் புரவு கண்ணோட்ட மழியா வாய்மை நாணுதி
யினபம பெருக்கு நற்குணஙக ளெலலா நிறைநத சானறோாக
டுன்புற் றவாக்கு மினியனவே சூழ்வா துணையின வினைமுடிபபா
வன்பிற றளராா நடடாாககு மடஙகித தோறற ஞானறே.

(இ - ள) (உயிாகளினபேரில்) இன்பு சமாதானம தாட்சணியம் உண்மை மானங்காததல முதலிய சீலஙகளையும் பெருககசெயயும நறகுணஙகளெலலாம நிறைந்த சான்றோாகள (தமக்கு நனமை செய்தவாக்கேயனறி அயலாருககும) தீமைசெயத வாக்கும் நன்மையே செயயக கருதுவார்கள துணைவாபாாததுச செயலமுடிபபார்கள். (தமக்கனபராானோர்) வனபுகொண டெதிர்ததுவரினும தளராார்கள். குறறத்தைப் பொறுக்கும்படி பணிதலுககும் நாணமடையார்கள எ - று.

இச்செயயுளான் மாட்சிமைப்படு எனககூறியதாம

இதனை கூஉ சானறாண்மை.

"கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து-சானறாண்மை மேறகொள் பவர்க்கு.
அன்புநா ணொப்புரவு கணணோட்டம வாயமையோ-டைநதுசால பூனறிய தூண.
ஆற்றுவா ராறறல் பணித லதுசானறோர் - மாற்றாரை மாற்றும் படை.
சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோலவி - துலையல்லாா கண்ணுங கொளல்.
இன்னாசெய் தாாககு மினியவே செய்யாககா - லென்ன பயததோ சாலபு."—என்பதனானும,

புறநானூறு.

"பொன்னுந் துகிரு முத்து மன்னிய
மாமலை பயந்த காமரு மணியு
மிடைபடச் சேய்வ வாயினுந் தொடைபட்
டொருவழித் தோன்றி யாஅங் கென்றுஞ்
சான்றோர் சான்றோர் பாலராப
சாலார் சாலார் பாலரா குபவே"—என்பதனுமறிக (கசசு)

ஆன்ற குடியன பெண்பதநல லறநீ திகளின வழுவாமை
சான்ற மககட பணபாகுந தனனை யுடையாா நகையானு
மான்று மிகழாா பகையிடித்து மதியா ரவா தநறகுணமே
யேனற வுலகம பாராட்டு மெலலாபபயனு மவா மாட்டாம.

(இ - ள) மேமபட்டகுலநலமும அன்பும எளிய சமயககாட்சியும் நல்லதருமமும நீதிமுறைகளிற பிசகாமையும், சிறந்த (மாநுடருககுப்) பண்புடைமை யாகும இந்தக் குணங்களையுடையவா நகைககுங காலத்தாயினும, பகைக்குங காலத்தாயினும, எப்பொழுதும் பிறரை யவமதித்துரையாா அவாது நறகுணஙகளையே பெரியவுலகமானது வியநதுரைக்கும். (அறமபொருளாதி) பயனகள்யாவும அவரிடத்திலேயே குடிகொளளும் எ - று

இச்செயயுளால் நன்னிலைதவறுதே யெனக்கூறியதாம்

இதனை, ஷை, பணபுடைமை.

"எணபதததா லெய்த லெளிதெனப யார்மாட்டும-பணபுடைமை யென்னும் வழக்கு.
அனபுடைமை யானற குடிப்பிறத்த லிவவிரண்டும-பணபுடைமை யெனனுமவழககு.
நயனொடு நனறி புரிநத பயனுடையார்-பணபுபா ராட்டு முலகு
நகையுள்ளு மினனு திகழ்சசி பகையுளளும-பணபுள பாடறிவாா மாட்டு.
பணபிலான பெறற பெருஞ்செலவ நனபால-கலந்தீமை யாறறிரிந தறறு."—என்பதனும,

புறநானூறு.

"உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமுத மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலா
துஞசலு மிலாபிற ரஞசுவ தஞசிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன பெறினுங் கொளளல ரயாவி
யாநன மாட்சி யனைய ராகித்
தமககென முயலா நோனருட்
பிறாககென முயலுந ருண்மை யானே."—என்பதனுமுணர்க. ()

வைத்துப பொருளைத் தானுகரான் வழஙகா னிருநதுஞ செத்தானே
செத்த பின்ன ரெனசெய்வான் றியாா கொளவ ரீட்டுதலான
மெத்தும் வருத்த மேயன்றி வேறென றிலலை யாதலினுற்
பொத்தும வெறுக்கை நனறியுறல புசித்து வழஙக லேயாகும.

(இ - ள்.) ஒருவன், பொருளை வைத்துக்கொண்டு அநுபவியாமலும், (பிற ருக்கு) வழங்காமலும் இருந்தால் அவனுயிரோடிருந்தும் செத்தவனேயாவான் இறந்த பின்னா (அப்பொருளை) யாதுசெய்ய வல்லவனாவான். கள்வர் முதலானோர் கொள் வார்கள் பொருள்தேடுதலாலுண்டாய பிரயாசமேயன்றி வேறோர் பலனுமில்லை ஆன படியால், மிகுதியாகிய செல்வத்தாற் பயன்பெறுதல் (தானும்) புசித்துப் (பிறர்க்குங்) கொடுத்தலேயாம் எ - று.

இச்செய்யுளாற் செல்வப்பயனை நுகரெனக்கூறியதாம்.

இதனை, ஷை, நன்றியில் செல்வம்.

"வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்-செத்தான் செயக்கிடந்த தில்.
பொருளானா மெல்லாமென் றீயா திவறு-மருளானா மாணாப் பிறப்பு.
ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்-தோற்ற நிலக்குப் பொறை.
எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா-னச்சப் படாஅ தவன்
ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்-றீத லியல்பிலா தான்
அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய-வொண்பொருள் கொள்வர் பிறர்"—
என்பதனானும்,

பாரதவெண்பா.

"தீயாலோ நீராலோ தேர்வேந்தா தம்மாலோ
மாயாத தெவ்வா வலியாலோ—யாதாலோ
விப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள் வைத்தார்க
ளெப்பொழுது நீங்கா திடர்."—என்பதனானுமறிக. (கசஅ)

இழிந்த தொழிலி னுறுவதே யெய்தற் கரிய நாணென்ப
ரொழிந்த மனவாக் குடலொடுக்க மொளிவா னுதலார் நாணியாங்
கழிந்து விடநாண் மண்கோடல் கருதார் நலமெல் லாமவளாப்பா
ரழிந்து நாணமற் றுயிர்வாழா ராவி யழிந்து நாணுள்வார்.

(இ - ள்) இழிவான தொழிலுக்கு நாணமடைவதே அடைதற்கரிய நாண மென்று பெரியோர் சொல்லுவர் அவ்வாறன்றி மனத்தினமைதலினாலாவது சொல வினாருழ்மையினாலாவது உடலினொடுக்கத்தினாலாவது உண்டாகும் நாணம் பிரகாசிக் கின்ற ஒளிபொருந்திய நெற்றியையுடைய மாதர்களுக்குரிய நாணமேயன்றதாம் அவர் நாண மழியும்படி பூமியைக்கொள்ளுதல் கருதார் நன்மையானவற்றையே செய்வார்கள். நாணத்தின்பொருட்டு உயிரைக்காவாது விடுவர் உயிரின்பொருட்டு நாணத்தைக் காவாது விடார். எ - று.

இச்செய்யுளால் நாணமழியாதிருவெனக் கூறியதாம்.

இதனை, ஷை, நாணுடைமை.

"கருமத்தா னாணுத னாணுந் திருநுத - னல்லவர் நாணுப் பிற.
ஊனுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல - நாணுடைமை மாந்தர் சிறப்பு.
பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக் - குறைபதி யென்னு முலகு.
நாணவேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம் - பேணலர் மேலா யவர்.
நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா - னாண்டுறவார் நாணாள் பவர்.
குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு - நாணின்மை நின்றக் கடை." — என் பதனானும்,

நாலடியார்.

"இழித்தக்க செய்தொருவ னார வுணலிற
பழித்தக்க செய்யான பசிதத றவேரு
விழித்திமைக்கு மாத்திரை யனரே வொருவ
னழித்துப் பிறக்கும பிறப்பு"—எனபதனுமுணாக. (௧௯௯)

எடுத்த கருமமுற்றுமை யெய்தின் முடித்தே விடுவலெனத
தொடுத்த முயறசி யறிவிரணடிற றேலா துயர்வார் குடிசெய்வா
ரடுதத பருவங் குறித்துமடி யாகக மானங கருதுவார
கெடுத்தல் புரிநதா ராதலிறற கினாக குடியூன றலினமைநதா.

(இ - ள்) மகனே! குடிசெயல் வகைசெய்வோர் தாமெடுதத காரியங்கட்கிடையூறு நேரிட்டாலும முயற்சிவலி விவேகம் ஆகிய இரணடினாலும் இவற்றை முடிதலேவீடுவேனென்று பினவாஙகாது மேமபடுவர். மானஙகருதுவோா தககாலத்தை யோசித்துச் சோமபி (காரியததைக) கெடுதலை செய்தவராவா. ஆதலால நீ குடிதகன்மை வளாக்கும் விஷயததில தளாசசியுறுதே. எ - று.

இச்செய்யுளாற குடிநலமபெருக்கு எனககூறியதாம.

இதனை, ௸, குடிசெயல்வகை.

"கருமஞ் செயவொருவன் கைதூவே னெனனும - பெருமையிற் பீடுடைய தில்.
ஆளவினையு மானற வறிவு மெனவிரணடி - னீளவினையா னீளுங குடி
குடிசெயவாாக கில்லைப் பருவ மடிசெயது - மானங கருதக கெடும.
இடுமைபக்கே கொள்கலங கொலலோ குடுமபததைக - குறற மறைப்பா னுடம்பு."
எனபதனும,

வெண்பாமாலை

'செயிராக ணிகழாது செஙகோ லுயாி
மயிாக்கண முரச முழஙக—வுயிாககெலலா
நாவ லகலிடதது ஞாயி றனையனாக
காவலன் சேறல கடன"—எனபதனுமுணாக. (௧௯0)

உழுவித திருவ ரிருவருமு விதது முழுது முணலாகு
முழுதுண் பவரே தமககுரிய ருபகா ரியரென் பாரவரே
தொழுதுண் பவரே பிறாககுரியா தொழினமுற றுமநது முழவினர்பான்
முழுது மடுபப வேண்டுதலின முதன்மைத துழவென றறிமைநதா.

(இ - ள்) புததிரனே! உழவுதொழில் வேளாளாக்குப பெரும்பானமையும் வைசியாககுச சிறுபானமையும் உழுதும உழுவிததும உண்பதறகுரியதாகும உழவுதொழில் செய்து புசிப்பவாகளே தஙகட்குரியவராவார்கள. அவாகளே யுபகாரிகளென்று சொலலப்படுவாாகள். ஒருவனைப் பணிசெயது சீவனஞ்செய்பவர்களே பிறருக்குரியவர்களாவாாகள். ஏருள மற்றைத தொழிலகளில் முழுதும் பயின்றாலும் உழவுதொழிலுடைய வேளாளாகளிடததில முழுதும் வநதடுக்கச்செய்தலின் உழதொழில் முதனமைத் தன்மையுடையதெனறறிவாயாக. எ - று.

இசசெய்யுளால் வேளாணமை பேணு எனககூறியதாம்.

இதனை, ஷை, உழவு.

"சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா - லுழந்து முழவே தலை.
உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா - தெழுவாரை யெல்லாம் பொறுத்து.
உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந் - தொழுதுண்டு பின்செல் பவர்
பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப - ரலகுடை நீழ லவர்.
இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது - கைசெய்தூண் மாலை யவர்.
உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம் - விட்டேமென் பார்க்கு நிலை."—
என்பதனானும்,

பெரும்பொருள்.

"யானை நிரையுடைய தேரோ ரினுஞ்சிறந்தார்
ஏனை நிரையுடைய ரேராளர்—யானை
படையோர்க்குஞ் சென்றி பயக்கும் பகட்டே
ருடையோர்க் கரசரோ வொப்பு"—என்பதனானுமுணர்க. (கஙிக)

வறுமை போல வின்னாது வறுமை யன்றி வேறிலை
மறுவின் மொழிகள் சோர்வுபடும் வாய்த்த குடிநற் செயன்மொழிக
ளிறுதி படுமற் றிரப்பாதி யெல்லாத் துயரு முடனுறும்
பிறனி னேக்கு மீன்றாளும் பிள்ளா யதுவந் திடினிறத்தல்.

(இ - ள்) மகனே! (மனிதர்க்குத் துன்பந்தரு மெவற்றினும்) வறுமைபோற் கொடியது அவ்வறுமையேயன்றி வேறின்று. வறுமைவரின் குற்றமில்லாத சொற்கள் சோர்வுபடும். பொருந்திய குலம் நற்செயல் மொழிகள் இவை யாவுமழியும். இரத்தல் முதலிய எல்லாத்துன்பங்களும் பின்றொடரும். பெற்ற தாயும் அன்னியனைப்போலப் பார்க்கும்படி செய்யும். (அது ஒருவேளை) வந்துவிடின் இறத்தல் நலம். எ - று.

இச்செய்யுளால் வறுமையடையாதேயெனக் கூறியதாம்.

இதனை, ஷை, நல்குரவு.

"இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி-னின்மையே யின்னா தது.
தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக-நல்குர வென்னு நசை.
நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்-சொற்பொருள் சோர்வு படும்.
அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்-பிறன்போல நோக்கப் படும்
நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்-யாதொன்றுங் கண்பா டரிது" — என்பத னானும்,

வளையாபதி.

"சொல்லவை சொல்லார் சுருங்குபு சூழ்ந்துணா
நல்லவை யாரு நனிமதிப் பாரலரா
கல்வியுங் கைப்பொரு ளில்லார் பயிற்றிய
புல்லென்று போதலை மெய்யென்று கொண்ணீ."—என்பதனானுமுணர்க ()

குறிப்பி னுணர்ந்து மொழியாமுன் கொடுப்பார் முன்னின் றிரந்துயிரைத்
துறப்ப தின்றிச் சிலர்வாழ்வர் தூய்மை மானங் கெடாமையினு
சிறப்ப வுயர்ந்த கொடைமையரே யெனினு மிரப்பா ரில்லாக்காற்
சிறப்பென் பெறுவ ரவராநே சிறப்பர் கரவா தவர்மைந்தா.

(இ - ள்.) மகனே! குறிப்பறிந்து இரவாமுன்னமே கொடுப்பவர் முன்னின்று பரிசுத்தமும் மானமும் அழியாமையினால் யாசித்து உயிரைப்போக்காமற் சிலர் வாழ்வார்கள் மிக்க மேன்மைவாய்ந்த ஈகையாளரேயானபோதிலும் யாசகரில்லாதவிடத்து என்ன சிறப்பினை யடைவார்கள்? (உள்ள பொருளை) ஒழியாது கொடுப்போர் சிறப்படைவா. (ஆதலின், நீ உத்தம யாசகரைக்கண்டு குறிப்புணர்ந்துதவுக) எ - று.

இச்செய்யுளால் யாசகரியற்கையை யறியெனக் கூறியதாம்.

இதனை, ஷை, இரவு.

"இரக்க விரத்தக்காக் காணிற் கரப்பி - னவர்பழி தம்பழி யன்று
இன்ப மொருவர்க் கிரந்த லிரந்தவை - துன்ப முறாஅ வரின்.
கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின் - றிரப்புமோ ரேஎ ருடைத்து
கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின் - றிரப்பவர் மேற்கொள் வது.
இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால - மரப்பாவை சென்றுவந் தற்று
ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள் - மேவா ரிலாஅக் கடை."—
என்பதனானும்,

புறநானூறு

"ஆடெரி படர்ந்த கோடிய ரடுப்பி
னாம்பி பூப்பத் தேம்புபசி யுழவா
பாஅ லின்மையிற் றோலொடு திரங்கி
யில்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொ றழூஉந்தன் மகத்துமுக நோக்கி
நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கண்ணென்
மனையோ ளெவ்வநோய் நீக்கி நிலைஇ
நிறபடர்ந் திசினே நற்போர்க் குமண
வென்னிலை யறிந்தனை யாயி னின்னிலை
கொடுத்துங் கொள்ளா தமையல னடுக்கிய
பண்ணமை நரம்பிற் பச்சை நல்யாழ்
மண்ணார் முழவின வயிரிய
ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே"—என்பதனானுமுணர்க. ()

கண்ணிற் சிறந்தார் தமமிடத்துங் காழ்த்த மானங் கெடநாவாற்
பண்ணாற் குரிய வறங்குறித்தும் படாநதொன் றிரவார் பெருமையினா
லெண்ணிற் சிறந்தார் முயறசியினா லேலா வுப்பில் வறுமபுற்கை
யுண்ணற் கமைந்த தமைத்ததென வுவப்ப ரேம கண்டனே.

(இ - ள்.) ஏமகண்டா! பெருமை குன்றிப்போகாவண்ணஞ் சிறந்த நடையுடையார் தமக்குக் கண்மணியைக் காட்டிலும மேம்பட்டவரிடத்திலும் வலிய மானங் கெடும்படி சென்று, செய்யத்தக்க தருமத்தினிமித்தமாவது நாவினால் ஒன்றையாசியார். தம்முயற்சியினாலே உப்பில்லாத வெறுங்கூழ் கிடைப்பினும காம புசித்தற்கமைந்து இதுவென்று களிப்புறுவார்கள். எ - று.

இச்செய்யுளால ஏற்பதிகழ்ச்சியெனக் கூறியதாம.

இதனை, ஷை, இரவச்சம்.

"கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு - மிரவாமை கோடி யுறும்.
இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து - கெடுக வுலகியற்றி யான்.

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக் - காலு மிரவொல்லாச் சார்பு.
தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த - தண்ணலி னூங்கினிய தில்.
ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற் - கிரவி னிளிவந்த தில்."—என்பதனானும்,

நாலடியார்.

"கரவாத திண்ணன்பிற் கண்ணனனார் கண்ணு
மிரவாது வாழ்வதாம் வாழ்க்கை—யிரவினை
யுள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ
கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு"—என்பதனானுமுணர்க (கருச)

அழுக்குற் றெவர்க்கும் வடுக்காண்பா ரச்ச மாசை யாலனறி
யொழுக்கம் புரியா மறைபிறர்பா லுய்த்து மொழிவார் தம்போல
விழுக்குக் கேதுங் கவலார்மு னேற்ற மாகிச் செம்மாப்பார்
மழுக்கு ளாரக்கே பயன்படுவா ரறிதும் வறியார்க் கிடார் கயவர்

(இ - ள்.) கீழ்மக்கள் எல்லோரிடத்தும் பொறாமையினாற் குற்றங் காட்டு வார்கள். அச்சத்தாலும் ஆசையாலுமன்றி ஒழுக்கஞ்செய்யமாட்டார்கள். இரகசியத் தைப் பிறரிடஞ் சென்று வெளியிடுவார்கள் தம்மைப்போல (பிறர்க்கு) அவமானநேரி டின் (அவர்க்காகச்) சிறிதுங் கவலைப்படார். அதற்காக முற்படப் பூரித்துக் களிப்பார் கள். தம்மைத் தண்டிப்பவர்க்கே கொடுப்பார்கள் எளியவர்க்கொன்றுங் கொடுக்கமாட் டார்கள் எ - று.

இதனாற் கீழ்மையகற்று எனக்கூறியதாம்.

இதனை, ஷ, கீழ்மை

"நன்றறி வாரிற் கயவர் திருவுடையா - நெஞ்சத் தவல மிலர்
அகப்பட்டி யாமாளாக் காணி னவரின - மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.
அச்சமே கீழ்கள தாசார மெச்ச - மவாவுண்டேல் உண்டாஞ் சிறிது.
அறைபறை யன்னவர் கயவர்தாங் கேட்ட - மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.
ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங் - கூன்கைய ரல்லா தவர்க்கு
உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல - வடுக்காண வற்றாகுங் கீழ்.
எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால் - விற்றற் குரியர் விரைந்து."—என்பத னானும்,

நான்மணிக்கடிகை

"மாசு படினு மணிதன்சீர் குன்றுதாம
பூசிக் கொளினு மிரும்பினுக்கண் மாசொட்டும
பாசத்து ளிட்டு விளக்கினுங் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும்"—என்பதனானுமறிக (கருகு)

அறக்கோ டரச நீதிபுரிந் தகிலம் புரந்து பொருளீட்டித்
திறத்தால வாழும் வகையெல்லாஞ் செல்வக் குமரற் கிவ்வாறங்
குறத்தா னியம்பித் திறற்சோம காந்த னுலக பாரமவ [ர்கள்.
னெறும்த்தோட் பெயாததுக் கொடுப்பான்பி னிதனைப் புரிந்தான் புலவீ

(இ - ள்.) இவ்வகையாக மனுதர்மமுறையுடன் இராசதருமத்தை நடத்தி உல கத்தைக் காத்து (தருமவழியிற்) பொருள்தேடி வலிமையோடு வாழ்கின்ற வகைமுழு

வனையும தன் செல்வப் புதல்வனுகிய ஏமகண்டனுக்குப் பொருந்தக்கூறி, வெற்றி பொருந்திய சோமகாந்தமன்னனை தனனுலகடாரத்தை அவனுடைய வலிதங்கிய தோளிற் பெயர்த்துகொடுக்குமபடி இதனைச் செயவானுயினன். புலவர்களே! எ - று.

அரசியற்கைப்படலம முறறிறறு.

ஆகந்திருவிருத்தம் - ருஅ௱.

# பட்டாபிடேகப்படலம்.

அத்தனுரு சோம காநத னகன்மனை நீங்கிப போநது
வைத்தவேத தவையின வைகிப பணபொடுங கணிதாக கூவி
யொததநா ளபிடேட கததுக குரைக்கென வவருந தெளளி
யுத்தரா யணததி னுதி யுறுமதிப பூச மெனறுா.

(இ - ள்) அரசனுகிய சோமகாநதன விசாலமான மாளிகையைவிட்டுப் புறம் போநது பெரிய இராசசபையிலிருநது நனமையோடுரு சோதிடாகளை யழைதது (என் மகனுகிய சோமகாநதன) பட்டாபிடேகததிற்குச சரியான தினஞ் சொலவீர்களாக வெனக்கட்டளையிட, சோதிடாகள் ஆலோசிதது உததராயணததின் முதலமாசயாகிய தைமாசததில வரும பூசநக்ஷததிரம (படடாபிடேகததிற்குத தககநாள்) எனறு சொன்னாகள. எ - று.

வேந்து + அவை = வேததவை இது வலிததலவிகாரம்

உததராயணம் — தைமாசமுதல் ஆறு மாசமும், தக்ஷிணயணம் — ஆடிமாசமுதல ஆறு மாசமுமாம் அதாவது சூரியன வடதிசையாகவுந தெனறிசையாகவுஞ் செல்வதோர் காலம். உததரம் - வடககு தக்ஷிணம - தெற்கு மதி - மாசம்; இது சந்திரன் ஒருமுறை வளாநது தேயுங்காலம். (க)

அமைசசரை முகநதி நோக்கி யணிமுடி கவிபப வெலலா
மிமைககுமு னியறறு வீரென றேவினன முடங்க னல்கிக்
குமைககுமவை வேற்கை மனனா கோதறு முனிவா சேய்மைத்
தமாக்குமற றெவாககுந தூதா தங்களை விடுததிட டானே.

(இ - ள்) மநதிரிகளை முகநோக்கி (ஏமகண்டனுக்கு) அழகிய மகுடாபிடேகஞ்செய்ய (வேண்டுதெலின, அதறகு வேணடுவன) வெல்லாவறறையும இமைப்பொழுதிற்கு முனனரே செயவீர்களாகவெனறு கட்டளைசெயது, (சததுருக்களைக் கொன்று) குவியலாக்குங கூர்மைவாயநத வேற்படை தாஙகிய சோமகாந்தமனனன் குற்றமற்ற முனிவர்களுக்குந தூரததிலுள்ள உறவினருககும் மற்றெல்லாருக்குந் திருமுகமீநது தூதாகளைச் செலுத்தினன். எ - று

அமைச்சர் - இராசகாரியங்களை யமைப்போர். முடங்கல் - ஓலை; இது முடக்கிச் செலுத்தலின் இப்பெயர்த்து (உ)

கருணையங் குரவற் கூவிக் கைதொழு திறைஞ்சி மைந்தற்
கிருநிலங் காவ லல்க விழைக்கென னபிடேட கததுக

கொருவில்வண் பொருள்கள் யாவை யுணாததுக வென்ன வன்னுன்
பொருளெலாந் தாலம போழிற் பொறித்தளித் திதுவுஞ் சொன்னுன்.

(இ - ள்.) கிருபை தங்கிய அழகிய ஆசிரியனை விளித்துக் கைகுவித்துப் பணிந்து, (அடிகளே!) என் மகனுக்கு இப்பெரிய பூமியின் இராசரிகங் கொடுக்கச் சம்மதித்துள்ளேன். (அவனுக்கு) மகுடாபிடேகஞ் செயய வேணடிய நீக்கப்படாத வண்மைதங்கிய பொருள்கள் யாவை? (அவற்றைத) தெரிவிக்கவேண்டுமெ னக்கேட்க, அவ்வாசிரியன் பனையோலையில் வேண்டுமெ பொருள்களையெல்லா மெழுதிகொடுதது இதுவுஞ் சொல்லினன். எ - று.

இயைாதனென் என்பதில என் தன்மை யொருமை வினைமுற்று விகுதி. (௩)

புண்ணிய பூமி முதகட புண்ணியன் சநநி தானந
தண்ணிய நதியின தீரந தகைநதவுய் யானந தனனி
லெண்ணுமிவ விடததுெ ளானறு மிடமிடத் துளுமீ சான
மண்ணுறு கிழககு தீசி யாமபி டேகத் தானம.

(இ - ள) புணணியபூமியும், புண்ணியசுரூபியாகிய திரிநேத்திரஙகளையுடைய சிவபெருமான் திருக்கோயிலும, தடபமாகிய நதிதீரமும, நெருங்கிய நந்தவனமு மென்று கணககிட்ட இடஙகளிலொனறும், அவ்விடததிலும் தென்கிழக்கு பொருந்திய கிழக்கு வடககு (ஆகிய இவற்றி லோா) திககும அபிடேகத தானமாம எ - று. (௪)

ஐமமுழ மாதி யைமபத் தைமமுழத தளவின காறு
மைமமுகி றவழ வாககு மணடபத தகறசி யாகுஞ
செமமணித தூண ாறு சோபதி னுறு முறும
பொய்மமுதல் கடிநது காவல் புரிதரும புலவு வேலோய்

(இ - ள்.) பொயமுதலியவறறைத தண்டிதது அரசுசெலுததும புலான்மண மமைந்த வேறபடை தரிதத அரசனே! மேகங்கள் தவழ்நதுசெலலுமபடி யியற்றும் அபிடேகமண்டபவிசாலம ஐநதுமுழமுதல் ஐமபததைநது முழததளவுவரையில உள்ள தாம். செவ்விய மாணிககததூணகள பன்னிரண்டுமெ, பொருநதியபதினாறும, முப்பத் தாறும் அமைநததாயிருப்பதாம எ - று.

பொய் என்றது ஈண்டுப் பொய் புகல்வோரை யுணாததியது (௫)

அரசுவீற் றிருத்தற் கொன்று மபிடேகஞ் செய்தற் கொனறும
விரசுபன் மணியாற் பொனனல் வெளளியாற றும்பி ரத்தாற
பரசுபத் திரபீ டநதாம பணணுவ தாமயா கததுக்
குரைசெயு மரமு மாகு முறறபான மரமு மாகும.

(இ - ள்.) அரசுவீற்றிருப்பதற்கொன்றும், பட்டாபிடேகஞ்செய்வதற்கொன் றும், (ஆகவிரண்டு) பததிர பீடஙகள, நெருஙகிய பலரததினஙகளாலாவது பொன் னலாவது வெள்ளியாலாவது தாமிரத்தாலாவது செய்யததக்கதாம். அல்லது யாகத் திற்குச சொல்லப்படட மரங்களாலுமாம. அல்லது பால்பொருந்திய மரங்களாலு மாம். எ - று.

யாகத்திற்குரிய மரங்கள - ஆல அத்தி அரசுமுதலியன.

பான்மரம் - பாலுள்ள மரங்கள். (௬)

ஒருமுழ முயர்ந்து செவ்வே யொன்றனை யகன்று முன்பி
னிருபடி யிணங்கி நான்கு பதத்தொடு மிருப்பச் சொன்ன
பொருள்களி னொன்றாற் செய்து பொருந்திய நிலத்திற் றிக்கிற்
குருமணி மண்ட பத்தைக் குயிற்றுமா றியற்று கென்றான்.

(இ - ள்.) ஒருமுழமுயர்ந்து, செவ்வையாக ஒன்றனைமுழமகன்று, முன்னும் பின்னும் இருபக்கலிலும் படிகளைப்பொருந்தி, நான்கு காலகளோடு மிருக்கும்படி, மேற் கூறிய பொருள்களிலொன்றாற் (பீடங்கள்) செய்து, (மேற்சொன்ன) தகுதியான இடத்தில (மூன்றுதிக்குகளில் ஒா) திக்கில நிறமமைந்த இரத்தின மண்டபத்தைச் செய்யும்படி கட்டளையிடுகவென்றான் (ஆசிரியன்) எ - று (எ)

அம்மொழி கேட்டு மன்ன னழைத்துவந் திறைஞ்சி நின்ற
கம்மியர் தம்மை நோக்கிக் கதிர்பொழி மணியும் பொன்னு
மிம்மெனு முன்னா நல்கி யிரண்டுபீ டஞ்செய் தீங்குத்
தம்மினொன் றியல்பும் கூறி மற்றதுஞ் சாற்று கின்றான்.

(இ - ள்) சோமகாந்தன (ஆசிரியன்கூறிய) அவ்வார்த்தையைக்கேட்டு,தான அழைத்துவந்து சேவித்துநிற்கின்ற தபதிகளைப்பார்த்து, ஒளிவிடும இரத்தினங்களும் பொன்னும் விரைவிற்கொடுத்து, இரண்டு பீடங்களமைத்து இங்குக்கொண்டுவாருங்க ளென்று, அவற்றின தன்மையையும் (ஆசிரியனுரைத்தவகையே) கூறி, மேலுஞ் சொல்லுகின்றான். எ - று.

கம்மியா - சிற்பர் (அ)

பணைமுழக் கறாத வாய்தற் பகட்டெழின் மதிற லத்தி
லணைதரு குணக்குத் திக்கி லைம்பதத் தைம்ப முழத்தி னெல்லை
துணையறு தூண்கண் முப்பத் தாறொடு துலங்க விண்ணு
மிணைதரா மண்ட பந்தா னொன்றுற விழைக்க வென்றான்.

(இ - ள) வாத்தியங்களின் ஓசையகலாத தலைவாயிலும பெருமைதங்கிய அழகிய மதிற்லத்தோடணைந்த கீழ்த்திசையில ஐம்பத்தைந்து முழவளவில ஒப்பற்ற முப்பத்தாறு தூண்களும விளங்கும்படி தேவலோகமும ஒப்பாகாத மண்டபமொன்று பொருந்தும்படி செய்வீர்களாகவென்று உத்திரவு செய்தனன. எ - று. (கூ)

நம்பனே புத்தி யென்று நலத்தகு சிற்பர் போந்து
செம்பொனை யுருக்கி வார்த்துத் திவ்வொளி மணிக்கால் யாத்துப்
பம்பெழிற் பீட மாக்கிப் படிகளும் பயிலச் சேர்த்து
வெம்புறு மடங்கற் றிண்கால் வெள்ளியா லியற்றி யிட்டார்.

(இ - ள்) அரசனே! புத்தியென்று கூறி, நனமைவாய்ந்த சிற்பர்கள்புகுந்து செம்பொன்னை யுருக்கிச்சாய்த்து, பிரகாசிக்கின்ற காந்திபொருந்திய இரத்தினங் களைப்பதித்து, அழகுபொருந்திய பீடமாகச்செய்து, படிகளும் பொருந்தவமைத்து, கோபமுற்ற சிங்கத்தின் வலிய காலகளை வெள்ளியினாற் செய்துவைத்தார்கள். எ-று.

கால்யாத்து - இதில கால் உபசர்க்கம (கo)

வேறு.

இருநில மகிழ்ந்து மணலசொரிந் திடியா வெழிலகொள நிலங்கீழ்ப்படுத்து
மருவுவித் தூரும மிடைப்படுத் ததன்மேன மரகதம படுத்தவன் குறட்டிற

குருமணிப் பதும ராகஞ்செய் தூண்கோமேதகஞ்செய் போதிகை கூட்டிப்
பருமணிப் புட்ப ராகவுத் திரத்தில வச்சிரப் பலகையும் பரப்பி.

(இ - ள்) பெரிய பூமியைத்தோண்டி மணலைப்பெய்து (தரையை) இடித்து, அழகுபெற நீலரத்தினத்தை யடியிற் பரப்பி, பொருந்திய பவளத்தை இடைப்படுத்தி, அதன்மேல் மரகதத்தைப்பரப்பிய வலிய குறட்டின்பேரில், நிறம்பொருந்திய பதும ராகரத்தினத்தாற் செய்த தூணும், கோமேதககற்களாற் செய்த போதிகையுஞ் சேர்த்து, பருத்த புட்பராகரத்தினத்தாற் செய்த வுத்திரத்தின்பேரில்,வச்சிரரத்தினத்தாற் செய்த பலகையைப் பரப்பி. எ - று

இதுமுதலிரண்டுபாடல்கள் குளகம். (௧௧)

கொடுங்கைகள் வயிடூ ரியத்தினும் யாளி வரிகுளிர் மதிச்சிலை யானுங்
கொடுங்கையிற் றாக்குங் கோவைநித் திலத்துங் குலாவுபித் திகைபளிக் கானு
நெடுங்களிப் பயப்ப வமைத்துநாற் புறத்து நிரைமணி வாயில்கள் விடுத்துப்
படுங்கதிர்க் கனகத் தகட்டகம் படுத்துப் பன்மணி மண்டபஞ் செய்தார்.

(இ - ள்) கொடுங்கைகள் வயிரேரியரத்தினத்தாலும், யாளிவரிசை குளிர்ந்த சந்திரகாந்தக் கல்லாலும், கொடுங்கையினின்று தொங்கவிட்டகோவைகள் முத்துக்களாலும், பிரகாசிக்கின்ற சுவர்த்தலங்கள் பளிங்குகற்களாலும் (கண்டமாத்திரத்திலேயே) பெருஞ்சந்தோஷத்தை யுண்டுசெய்யும்படி யியற்றி, நான்குபக்கங்களிலும் வரிசையாக அழகிய வாயில்களைவிட்டு, ஒளிவிடுகின்ற பொற்றகட்டையுள்ளே பரப்பிப் பல ரத்தினங்களாலாகிய மண்டபஞ்செய்து முடித்தார்கள். எ - று (௧௨)

வேறு

நீண்ட தூண்டொறு நீள்குலை வாழையு
மாண்ட பூகமு மாக்கமை வேழமு
மீண்ட யாத்து விதானத் திடையிடைத்
தூண்டு ருத்த விளக்குந் தூ்றுத்தனர்

(இ - ள்) நீண்ட தூண்கடோறும் நெடிய குலைகளையுடைய வாழைகளையும், மாட்சிமைதங்கிய கமுகுகளையும், நீண்ட கருப்பங்கழிகளையும் பொருந்தக்கட்டி, மேற்கட்டின இடையிடையில் தூங்காவிளக்குகளையுந் தூக்கவைத்தார்கள் எ - று.

அரும்பு பேரொளி மாலையு மாடியுஞ்
சுரும்பு ருமலர் மாலையுந் தூக்கினார்
விரும்பு நாரத்த மென்கனி யாதிகோத்
தொருங்கு நாற்றினர் ரோவியந் தீட்டினார்.

(இ - ள்) அரும்புகின்ற மிக்க பிரகாசத்தையுடைய இரத்தினமாலைகளையும், வண்டுகளுறுத்த மலர்மாலைகளையுங் கட்டினார்கள். இச்சிக்கத்தக்க நாரத்தம்பழமுதலியவற்றை யொருசேரக் கட்டித் தொங்கவிட்டார்கள். சித்திரமெழுதினார்கள். எ - று.

காமர் பன்மணித் தோரணங் கட்டினார்
வாம மண்டப மாடருங் காவணஞ்
சேம மண்டிலந் துன்ன வெடுத்தனர்
ஏம மென்னச் செழுங்கவின் செய்தனர்.

(இ - ள்) அழகிய பல மாணிக்க தோரணங்களைக் கட்டினார்கள். அழகிய மண்டபத்தருகே சந்திரமண்டலத்தை யளாவும்படி சோலைகளை வைத்தார்கள். சேம முண்டாகும்படி செழுமைதங்கிய அழகினைச் செய்தார்கள் எ - று

காவண மெங்கதல - சோலை வைத்தல் சோமமண்டிலந் தன்னொடெனும் அடைமொழி பால் நாட்டியசோலை யெனக்கொள்க. (௧௫)

ஆசன முன்ன ரடுத்திடுங் கடம்ப
ராசன் அத்திறை யாதன முன்னரமைந்த
தூசவப் பூங்கழ லாயணி மண்டப
மாறுக் கேட்பனர் முக்கின மென்றனர்.

(இ - ள்) ஆசன சமூகத்தையடுத்த தபதிகள் இரத்தினத்தாற் செய்த பீடத்தை முன்னே யிருக்கி, ஒலியையுடைய அழகியவீரக்கழலணிந்த அரசனே! சிவபிரானுக்குத் தக்கபடி இரத்தினங்களாலிழைக்கப்பட்ட அழகிய மண்டபத்தை நன்றுகச் செய்துமுடித்தோமென்று சொன்னார்கள் எ - று (௧௬)

அகிலங் காக்கு மரச னிரும்பொனுந்
துகிலும் பூணுஞ் சொரிந்தவர் போக்கினன்
முகிலு ரிஞ்சிய மொய்ம்மணி மண்டபஞ்
செகிலி னூலபுணர் தேசிக னண்ணினன்

(இ - ள்) உலகத்தைக்காக்கும் ஏமகண்டராசன் மிக்க பொன்னையும் வஸ்திரத்தையும் ஆபரணத்தையும் (மழைபோல மிகுதியாகச்) சொரிந்து அத்தபதிகளைச் செல்லவிடுத்தனன். இரத்தினங்கள் நெருங்கியுள்ள மேகமளாவிய மண்டபத்தைக் குற்றமில்லாத நூல்களை யாராய்ச்சிசெய்த ஆசிரியனடைந்தனன் எ - று (௧௭)

ஐம்பத் தைந்து முழத்தகத் தெல்லையுள்
நம்பு நூலபதி னூன்கிட்டு நன்பதம்
பம்பு நூற்றறு பத்தொன்ப தாக்கினன்
மொய்ம்பின் வீதிபன் மூன்றுபன் மூன்றுற

(இ - ள்) (அம்மண்டபங்கொண்ட) ஐம்பத்தைந்து முழத்தளவு தூரமும், விரும்பத்தக்க பதினான்கு நூல்கள் தட்டி (நெடுக்கிலுங் குறுக்கிலும்) பதின்மூன்று பதின்மூன்று வீதிகள் பொருந்தும்படி, நெருங்கிய நூற்றறுபத்தொன்பது இடங்களாகப் பிரித்தனன். எ - று

இரண்டு நூல்களிடையாலன்றி ஒரேலலை யுண்டாகாமையின், பதினான்கு நூல்களிட்டுப் பதின்மூன்று வரிசையாக்கினனென்றும், பதின்மூன்று பதின்மூன்றுகள் நூற்றறுபத்தொன்பதென்றும், அவை சதுரவடிவாகச் செய்தனனென்றுங் கண்டுகொள்க.

நாப்ப ணின்ற பதத்தொரு நான்முழத்
தாப்பின் சென்றவை லைமியானெடு
மூப்பி லாத முலையுமை யாளுற
நீப்பி லாமணி வேதிகை யாக்கினன்.

(இ - ள்) (அந்த நூற்றறுபத்தொன்பதிடங்களில) நடுவில் நின்ற பதத்திற் சிவபெருமானுடன் உமாதேவியார் வீற்றிருக்கும்படி, அருமையாகிய அழகியவேதிகை யொன்று செய்தனன் எ - று

ஆப்பின் சென்றவனுலறியான - பசுவின்பின் சென்றவனாகிய திருமாலாற் காணப்படாத சிவபெருமான். திருமால் கிருஷ்ணாவதாரத்தில் ஆயர்குலத்தில் அவதரித்துப் பசுமந்தை மேய்த்தமையின், அவனர் "ஆப்பின் சென்றவன்" எனப்பட்டனர்.

இது பதின்மூன்று வரிசைகளில் ஏழாம் வரிசையில் ஏழாம் வீடெனக்கொள்க.

மூப்பிலாத முலை - முதிராத இளந்தனங்கள்.

அதனைச் சூழ வெடுத்தவொண் கோட்டமும்
விதத்தி யேசுரர் வேதிகை யிட்டனர்
பதத்தைச் சூழ்பதம் பொட்டுந் தாதுவின்
கொத்துக் கென்று குயிற்றினர் வேதிகை.

(இ - ள) அதனைச் சூழும்படி யடுத்துள்ள எட்டுப்பதங்களிலும் விதத்தியே சுரர் எண்மருக்கும் வேதிகைகள் செய்தனர் விதத்தியேசுரர் வேதிகைகளைச் சூழ்ந்த பதங்கள் பதினாறிலும் தாதுவின் கூட்டத்திற் கென்று வேதிகைகள் செய்தனர் எ-று

இது பதின்மூன்று வரிசைகளில் ஆறு ஏழு எட்டு ஆகிய மூன்று வரிசையும் நாற்புறத்திலும் பொருந்தக்கூடியவை, என்றால் நடுவேயுள்ள ஒன்பது பதங்களில் சிவபிரானுக்கொன்றளித்துச் சூழ்ந்து நிற்பவையாம்

அதைச்சூழ்ந்த பதினாறு பதமென்றது - பதின்மூன்று வரிசைகளில் ஐந்து ஆறு ஏழு எட்டு ஒன்பது ஆகிய ஐந்து வரிசையும் நாற்புறத்திலும் பொருந்தக்கூடியவை, என்றால், சுற்றிலும் நான்கு வரிசைகள் வெற்றிடமாகக்கொண்ட ஓர் வரிசையெனக. (௨௦)

அடுத்துச் சூழ்ந்த பதமிரு நான்கையும்
விடுத்திடு யாரும் வழங்குறு வீதியாத்
தொடுத்து நோபத மூன்றுந் துவாரமாப்
படுத்த னர்திசை நான்கிலும் பண்புற

(இ - ள) (தாதுவின் கொத்துவரிசையை) அடுத்துச்சூழ்ந்த இருபத்து நான்கு பதங்களையும் யாவரும் உபயோகிக்கும் வீதியாகவிடுத்து, நாற்றிசைகளிலும் மும்மூன்றுபதவிகளைத் துவாரமாக அழகுறத் தொடுத்துச்செய்தனர் எ-று

அறு நான்குபதமென்றது - மூன்று முற்றபதத்துவரையிலுள்ளபதங்கள் நாற்புறத்தும் பொருந்தவந்தவை யெனக.

நோபத மூன்று என்பது ஏழாவதுவரியில் மூன்று. இதனை நாற்புறத்துங் கொள்க (௨௧)

ஒழிந்த நூற்றெண் பதந்தரு முருத்திரர்க்
கிழிந்தி டாமணி வேதியி யற்றினர்
மொழிந்த வீதியுள் முற்றமுறைமையா
லழிந்தி டாநவ குண்டமு மாக்கினர்.

(இ - ள) (இவ்வாறு கணக்கிட்டவைபோக) ஒழிந்த நூற்றெட்டுப் பதங்களிலும் நூற்றெட்டு ருத்திரர்க்கு, சிறப்புற்ற அழகிய வேதிகைகள் செய்தனர். முற்கூறிய (இருபத்துநான்கு பதங்களையுடைய) வீதியில், அழியாமையுடைய நவகுண்டங்களையுஞ் செய்தனர் எ-று

இந்த வீதிக்கும் நாற்றிசைத் துவாரங்கட்கு மிடையிலுள்ள இருபத்தேழு. இவ்வகையாக நான்குமூலைகளிலுஞ் சேர்க்க நூற்றெட்டாதல் காண்க. (உஉ)

அங்கு நீங்கி யடுத்தனன் மனையவன்
நீங்கி லாயமுன்னா நீட்டிய யாவையும்
ஈங்க ணுய்த்தனெ னென்றனு னோக்கினான்
பாங்கு ளார்க்குப் பணிபணிக் கின்றனன்

(இ - ள்.) அவ்விடத்தை நீங்கி மனனை யடுத்தனன் குற்றமில்லாத ஆசிரியரே! முன்னர்த் தேவரீர் எழுதிய வெல்லாப் பொருள்களையும் இவ்விடத்தி லமைத்தேன் என்று சொல்லவும் (அவற்றைப்) பார்த்தனன். அருகிலுள்ள (சீடர் முதலானவர்) வர்களுக்குப் பணிவிடைகள் கட்டளையிடுகின்றனன். எ - று (உ௩)

வேறு.

முக்கண்ணற் குரிய கும்ப மூன்றிழை நூலும் வெற்பின
மைக்கண்ணா ளிரண்டு சேர்த்த நாலுமற் றேனை யோர்க்குத்
தொக்கும் பட்ட கொவ்வொன் றாகவே சூழ்க தொக்கு
மிக்கபல் சமிதை யாதி வேறுவே றாய்க வென்றான்.

(இ - ள்) திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானுக்குரிய கும்பத்திற்கு மூன்றிழைகள் வாய்ந்த நூலும், பர்வதராஜ புத்திரியாராகிய கரிய கண்களையுடைய உமாதேவியாருடைய கும்பத்திற்கு இரண்டிழைகள் பொருந்திய நூலும், பிறதேவர் கட்குரிய தொகுதியாகிய கும்பங்கட்கு ஒவ்வோரிழையுடைய நூலுமாகச் சுற்றுக. தொக்கும், மேம்பட்ட பல்வகைச் சமிதை முதலியனவும் (அவரவர்கட்கேற்ப) வெவ்வேறாக ஆராய்ந்தெடுக்கவென்று சொல்லினன் எ - று.

தொக்கு - மரத்தின் பட்டைகள். சமிதை - ஓமவிறகு. ஆதியென்றதால் தளிர் பழ முதலியனவுங்கொள்க (உ௪)

தருப்பைக ளாய்ந்து செய்யத் தக்கன குரவன் செய்து
இருப்பவ னுர முன்னர் இறைவனு லேவப் பட்ட
திருப்பொலி யமைச்சர் யார்க்குஞ் செய்பணி செப்பி விட்டார்
விருப்பொடு பணிந்தெல் லோரும் வேறுவே றியற்றப் புக்கார்.

(இ - ள்) தருப்பைகளை யாராய்ச்சி செய்து, செய்யத்தக்க செயல்களைச் செய்து ஆசிரியன் அங்கே யிருக்க, முன்னர் அரசனால் கட்டளையிடப்பெற்ற செல்வ மிக்க மந்திரிகள் அவரவர்கட்கு (தாந்தாம்) செய்யத்தக்க காரியங்களைச் சொல்லிவிட் டார்கள். யாவரும் ஆசையுடன் பணிந்து வெவ்வேறாகத் தத்தமக்குரியதொழில்களைச் செய்யப் புகுந்தார்கள் எ - று (உ௫)

தெள்ளிய வேவ லாளர் செப்பலு மகிழ்ந்து போற்றி
வள்ளுவ னுண்டு பூசி வாலிய வணிந்து வீர
வெள்ளிய வேற்றுப் போர்வை விசிமுர செடுத்து வல்லே
கள்ளிவர் மாலை நெற்றிக் களிற்றினிட் டேறிச் சொல்வான்.

(இ - ள்.) தெளிவமைந்த ஏவலாட்கள் (இவ்வகையாகக்) கூறவும், வள்ளுவன் சந்தோஷித்துத் துதித்து அன்னம் புசித்து வெண்ணீறு பூசி வெள்ளணி யணிந்து,

வீரம்வாய்ந்த வெண்மைதங்கிய எருதின தோலாற் போர்வைசெய்து கட்டிய முரசத்தை யெடுத்து, தேன் சிந்தும் மாலையணிந்த சிரத்தையுடைய யானையின்பேரிலிட்டு விரைவாகத் தானுமேறி இதனைச் சாற்றுகின்றான். எ - று. (உ௬)

வாழியெந் ஞான்று மெங்கும் வைகிய தேவ தேவன்
வாழிய வேத நீதி மனுநெறிச் செங்கோல் வாழி
வாழிய சோம காந்த மன்னவன் கிளைக ளோடு
வாழிய வுலக மெல்லாம் வாழியிந் நகர மென்றான்

(இ - ள்) எவ்விடத்தும் எக்காலத்தும் விளங்குகின்ற தேவதேவன்வாழக்கடவன். வைதிகநெறிவாழக்கடவது மனுமுறைப்படி செலுத்துஞ் செங்கோல் வாழக்கடவது சோமகாந்தராஜன் தன் சுற்றத்தாரோடு வாழக்கடவன் உலகமுழுவதும் வாழக்கடவது இந்நகரம் வாழக்கடவது எ - று (உ௭)

கலைமகள் வீரச் செல்வி முன்னரே காணி கொண்ட
மலைநிகர் தோளி னுறுத் மண்மக ளோடு செல்வத்
தலைமக ளிவ்வர் நாளைத் தககவர் புணர்தத நின்று
ரிலைமுகப் பூணீ ரெல்லா மிருநகர் புகுக வென்றான்.

(இ - ள்) சரசுவதியும், விஜயலட்சுமியும் முன்னமே யிருப்பிடமாகக்கொண்ட மலைபோலப்பூரித்த தோளையுடைய எமகண்டராஜனுக்கு, பூதேவியும் சிறந்த திருமகளும் ஆகிய இவர்களை நாளைப்பொழுதில் மணம்புணர்த்தும்படி தக்கவர்கள் தீர்மானித்துளர் (ஆதலின்) தகட்டுவடிவாகச்செய்த முகத்தையுடைய ஆபரணமணிந்த நீங்களயாவரும் பெரிய இந்நகரத்தை யலங்கரிப்பீர்களாகவென்று கூறினன் எ-று

கல்வியும் வெற்றியும் முன்னரேயுடையனாதலின் "கலைமகள்வீரச்செல்வி முன்னரே காணிகொண்ட மலை நிகர் தோளினுன்" என்றும், பூபாரத்தையும் இராச செல்வத்தையுங் கொடுக்கப்படுதலின் "மண்மகளோடு செல்வத்தலைமகள் இவரைப் புணர்த்த"—என்றுங்கூறினர் (உ௮)

பண்டைய தினத்தின் மேலும் பரிக்க வறம்பா ரிக்க
மண்டிய பொருள்கை யில்லோர் மன்னவ னிதிப்பண் டாரம்
விண்டன வாயில் சென்று வேண்டுவ கொண்டு செய்க
வுண்டெனில் வெறுப்புத் தெய்வத் துளத்தது மொழிக வென்றான்.

(இ - ள்) முன்னைய நாளைக்காட்டிலும் (எல்லாப்பராக்கிரமங்களும்) வளருக தருமம் விருத்தியாருக மிக்கபொருள் கையிலில்லாதவர்கள் அரசனுடைய செல்வமாகிய பொக்கிஷத்தின் திறந்துள்ளவாயில்களிற்சென்று வேண்டுமளவும் (கேட்டுப்) பொருள்பெற்றுச்செய்க தெய்வத்தின் மனத்தில் வெறுப்பிருக்குமாயின் அதுவும் விலகுகவெனக்கூறினன். எ - று (உ௯)

இனியன நுகர்ந்து பூசி யெழில்கொள வணிந்து மென்றீங்
கனியென மொழிந்து ளின்பங் கனிதர வளவ ளாவிப்
புனிதனின் னவாக்குப் பூசை போற்றுக போற்று கென்று
நனிபல பொருளுஞ் சொல்லி நளிமுரச் செருக்கி னனே.

(இ - ள்) இனியனவாகிய வுணவுகளையுண்டு, (பரிமளவஸ்துக்களைப்) பூசி, (சிறந்த ஆபரணங்களை) அணிந்து, மெல்லிய சுவையமைந்த கனியைப்போல வசனி

த்து, மனத்தில் இன்பமதிகரிக்க (ஒருவரோடொருவர்) அளவளாவி, பரிசுத்தமாகிய தேவர்கட்குச்சிறப்புச்செய்யச் சிறப்புச்செய்கவென்று, பலபொருள்களையும் நன்றாகக் கூறிப் பெருமைபொருந்திய முரசத்தை யறைந்தனன். எ - று. (௩௦)

அறைபறை வகுத்துச் சொன்ன வரும்பொரு ளுணர்ந்தன் போடு
நிறைதரு மறங்க ளாற்றி நெடுநகர் முழுதுங் கோடித்
துறைபுநர் கரிக ளெல்லா முவந்தனர் தத்த மைந்தர்க்
கிறைமைவந் தடுத்தாங் குள்ள மாதிக ளினிய ரானார்

(இ - ள்) ஒலிக்கின்ற பறையறைந்து (வள்ளுவன் கூறியவற்றின்) அரிய பொருள்களை யறிந்து, அன்புடன் நிறைவாகிய தருமங்களைச்செய்து, பெரிய நகர்முழுவதையும் அலங்காரஞ்செய்து, அந்நகரவாசிகள் யாவரும் தத்தம் புதல்வர்களுக்குத் தலைமைவந்தாற்போல மனமுதலியன இனியவர்களானார்கள். எ - று. (௩௧)

சேனைகட் கிறைவ னேவச் சேவடி பணிந்து போந்து
யானைகட் கரசை யாதோ ரணருணல் லரசன் மண்ணித்
தேனிவா மதம றாத் திருமுக மெழுதி யோடை
பூநிற நுதலின் வீக்கிப் பொற்புறப் பண்ணி னானே

(இ - ள்) சேனைகளுக்குத் தலைவன் கட்டளை செய்ய, யானைகட் கரசாயுள்ள ஓர் யானையை, யானைப்பாகருள் தலைவனாயுள்ளவன் செவ்வந்த பாதங்களைப் பணிந்து வந்து, நிலைத்து வண்டுகள் மொய்க்கும் மதப்பெருக்கொழியாத அழகிய முகத்தில் (சித்திரம்) எழுதி, முகபடாத்தினை அழகிய நிறமமைந்த நெற்றியிற் கட்டி அழகுபெறச் செய்தனன். எ - று.

ஆதோரணர் - யானைப்பாகர் குத்துக்கோற்காரர்

யானை கன்னமதப் பெருக்குடைமையின் "தேனிவா மதமறாத் திருமுகம்" எனப்பட்டது. (௩௨)

வல்லவரு ளிறைவன் சென்று வார்கொடி யுயர்த்தித் தூசுங்
கலனுநன் கணிந்து பூட்டுங் கனைவாம் பரியும் பண்ணிக்
குலவிய கொற்ற வைவாள் கொடுமரம் பகழி யாதி
பலவுமுண் ணிறைத்து வைத்துப் பாழிதேர் பண்ணி னானே

(இ - ள்) தேர்ப்பாகர்களுட்டலைவன் சென்று நெடிய துவசத்தைக் கட்டி வஸ்திரமும் ஆபரணங்களும் நன்றாகப்பூட்டி, கட்டத்தக்க வேகத்தையுடைய தாவிச் செல்லுங் குதிரையையும் அலங்கரித்து, நெருங்கிய வெற்றிபொருந்திய கூர்மை வாய்ந்த வாளும் வில்லும் அம்பும் முதலிய பல பொருள்களையும் உள்ளே நிறைத்து வைத்துப் பெருமைபொருந்திய இரதத்தை யலங்கரித்தனன். எ - று. (௩௩)

வாதுவர் கிறைவன் சென்று வாசநீர் முழுது மாட்டிக்
கோதுமுற் றொழிந்து நல்ல குணத்ததாயப் பகைவ ருள்ளம்
பேதுசெய் கலினப் பாய்மாப் பேரொலிக் கலன்கள் பூட்டிக்
காதடி மயிர்க ளாத்துக் கவின்மிகப் பண்ணி னானே.

(இ - ள்) குதிரைச்சேவகருட் டலைவன் சென்று, வாசமமைந்த நீரினால் முழுதுங் கழுவி, குற்றஞ் சிறிதுமின்றி நற்குணமுடையதாய்ப் பகைவர் மனத்தைக்

குழம்பச்செய்யுங் கடிவாளம்பூண்டு பாய்ந்து செல்லுங் குதிரையை, மிக்க வொளி வாய்ந்த ஆபரணங்களைப் பூட்டிக் காதின் அடியிலுள்ள மயிர்களைக் கட்டி மிக்க அழகுடையதாகச் செய்தனன் எ - று.

வார்துவர் - குதிரைச்சேவகர். காதடி மயிர்களார்த்தல் - இது காதினடியில் வளர்ந்த மயிரைப் பின்னிவிடுதலாம். (௫௪)

சாரண ரடுத்து நின்று தகுதியி னளித்த வோலை
பேரணி யியகை யேந்திப் பொருடெரிந் தரச ராதிர்
சீரணி யியவெல் லாருஞ் செறிந்தவங் கத்த ராகிப்
பூரண வனப்பின் வாய்ந்த பூவைய ரோடுஞ் சார்ந்தார்.

(இ - ள்) மன்னர்முதலிய சிறப்புற்றயாவரும், (சோமகாந்தனவிடுத்த) தூதுவர் சமீபித்து நின்று, தகுதியோடு கொடுத்த திருமுகத்தைக் கையிலேற்று அதன் பொருளையுணர்ந்து, நெருங்கிய (நால்வகை) அங்கங்களையுமுடையவர்களாகி, நிறைந்த அழகுடன்பொருந்திய தத்தம் மனைவிமாருடன் (தேவநகரத்தை) அடைந்தார்கள். எ-று.

வாரண முழக்க மோர்பால் வாம்பரி முழக்க மோர்பாற்
றேரணி முழக்க மோர்பாற் செறிபடை முழக்க மோர்பா
லாரண முழக்க மோர்பா லாடலின் முழக்க மோர்பாற்
றோரண மாட வீதி தொறுநிறைந் திட்ட வன்றே.

(இ - ள்) ஒருபக்கத்தில் யானையின்முழக்கமும், ஒருபக்கத்தில் தாவிச்செல்லுங் குதிரையின் முழக்கமும், ஒருபக்கத்தில் அழகிய தேரின் முழக்கமும், ஒருபக்கத்தில் நெருங்கிய படையின் முழக்கமும், ஒருபக்கத்தில் வேதத்தின் முழக்கமும், ஒருபக்கத்தில் நடனத்தின் முழக்கமுமாகத் தோரணங்கட்டிய மாடவீதிகளிலெல்லாம் நிறைந்திருந்தன எ - று. (௫௫)

பூம்புன லாடு வாரும் பொழில்விளை யாடு வாருந்
தேம்பிழி மாந்து வாருஞ் செறிந்துவா தாடு வாருங்
காம்புறு மாட வீதிக் கோட்டணி நோக்கு வாரு
மாம்பல வினையின் வெவ்வே றாயின ரடுத்தோ ரெல்லாம்.

(இ - ள்) அங்குவந்தவர்கள் யாவரும் அழகிய நீரில் விளையாடுபவர்களும், சோலைகளில் விளையாடுபவர்களும், மதுரமாகிய கள்ளையருந்துபவர்களும், நெருங்கிச் சூதாடுபவர்களும், சனப்பெருக்குடைய மாடவீதியின் அலங்காரங்களைப் பார்ப்பவர்களுமாகிய பலதிறப்பட்ட செயல்களில் வெவ்வேறானார்கள் எ - று.

வாதாடுவாரும், என்பதற்குத் தாமுண்ட மதுமயக்கால் வாதுசெய்வோரு மெனப் பொருள் கூறினுமமையும்.

புனலாட்டு, பொழில்விளையாட்டு, கட்குடித்தல், சூதாடல் முதலியன பெருங்காப்பியத் துறுப்புகளிற் சேர்ந்தவை. (௫௭)

அனைவரு மினைய ராக வமைத்தநா ளடுத்த வேலை
புனைகழ லரச னேவப் புரையறு விதியி னுசான்
வினைமுடி நாட்கு முன்னே மேவிய மூன்று நாளின்
வனைகலத் தாறு மணிட்டு வண்முளை வித்தி னானே.

(இ-ள்.) (அத்தேவநகரத்திலிருக்கும்) எல்லோரும் இவ்வகையாக (சந்தோஷமுற்று) இருக்க, (பட்டாபிடேகத்திற்கு) நியமித்த தினம் நெருங்கவும், அலங்கரிக்கின்ற வீரக்கழலணிந்த சோமகாந்தமன்னன் உத்திரவுசெய்ய, குற்றமற்ற ஆசாரியன் பட்டாபிடேகஞ் செய்விக்குந் தினத்திற்கு முற்பட்டுப் பொருந்திய மூன்றாந்தினத்திலே, செய்யப்பட்ட பாலிகையில் மண்ணிட்டு, வண்மைதங்கிய முளைகளை விதைத்தனன் எ - று

பாலிகையில் மண்ணிடுதல் மிருத்சங்கிரகணமென்றும், முளைவித்துதல் அங்குரார்ப்பணமென்றுஞ் சொல்லப்படும் (௯௮)

வழிவரு நாளிற் கந்த மலர்பொரி யரிசி சாந்து
பொழிதயி ரளவ ளாவிப் பூசித்துப் பலிமு னிட்டுக்
கழிபெரு மகிழ்வி னோடு கடவுள ராரு மொல்லா
மொழியில ராக வீண்டை யுறுமென விளித்திட் டானே

(இ - ள்) அடுத்த தினத்தில் வாசந்தங்கிய மலர்களும், பொரியும், அரிசியும், சந்தனமும், பொழிகின்ற தயிருங்கலந்து, பூசையாற்றி, முற்பட்ட பலியிட்டு, மிக மேம்பட்ட களிப்புடன் தேவர்களாயுள்ளவர்கள் யாவரும் ஒருவருநீங்காமல் இவ்விடத்தில் வருவீர்களாகவென்று (மந்திரஞ்செய்யலால்) அழைத்தனன் எ - று. (௯௯)

ஏந்திலை வேலான் மைந்த னேமகண் டற்கு நல்ல
சாந்தியின் பொருட்டுப் பாகர் சமைத்தமா களிறு பொற்றேர்
காந்தொளிப் படையு மற்றக் கடன்முறை பூசை யாற்றி
யீந்தனன் மறையோர் தக்கோ ரிரவலர் தமக்கு மன்னம்.

(இ - ள்) ஏந்திய அச்சவடிவாகிய வேற்படையையுடைய சோமகாந்த மன்னன் மகனாகிய ஏமகண்டனுக்கு நல்ல சாந்திசெய்வதற்காகப் பாகர்கள் சமைத்த குதிரையும் யானையும் அழகிய தேரும் பிரகாசிக்கின்ற ஒளியையுடைய சேனையுமாகிய வற்றை அப்பொழுதே விதிமுறைப்படி பூசைசெய்து, வேதியருக்கும் தக்கபாத்திரர்களுக்கும் யாசகர்களுக்கும் அன்னமளித்தனன் எ - று (௱)

அற்றைநா ளிரவிற் றன்மு னுட்கப் புரிநாண் டாங்கிக்
கொற்றவன் மகற்கு மைந்தன் கோற்றொடி மனைக்கு நேரே
பொற்றகங் கணங்கை யாத்துப் புதிய லங்க மைந்தும்
பற்றின னணிந்து பூசை பண்ணுதல் வலித்தா னன்றே

(இ - ள்) அன்றைய இராத்திரியில் ஆசிரியன் முதலிற் பொற்காப்புக்கட்டிக் கொண்டு, அரசன் புத்திரனாகிய ஏமகண்டனுக்கும், அவனுடைய அழகிய வளையலணிந்த மனைவிக்கும், அழகுபெற்ற பொன்னாலாகிய கங்கணங்களைக் கையிற்கட்டி, புதிதாகச்செய்த ஐந்தங்கங்களையுங் கரத்திற்பெற்றுத் தரித்துப் பூசைசெய்வதில் வலியமனமுடையவனாயினன் எ - று

அங்கமைந்து - குண்டலம் மோதிரம் உபவீதம் வஸ்திரம் மிதியடி. இவை பலவகையாக வேறுபடக்கூறலுமுண்டு. (௱க)

பல்லிய மியம்பா நிற்பப் பாவைய ராடா நிற்ப
வல்லவா தியானத் தொடு மந்திரங் கணியா நிற்பச்

சொல்லிசை மறைக ளனைத்துஞ் சோதக ரோத்த நிற்ப
நல்லவர் பலரோர் கேட்ட நன்பொரு ளீட்டா நிற்ப.

(இ - ள்.) பலவாத்தியங்கள் ஒலிக்காநிற்கவும், சித்திரப்பதுமைபோன்ற மங்கையர்கள் நடனஞ்செய்யாநிற்கவும், ஜபத்தில் வல்லவர்கள் தியானஞ்செய்யவும் மந்திரங்களை ஜபிக்கவும், சோதகர்கள் சொல்லுகின்ற ஓசையையுடைய வேதங்களனைத்தையும் ஓதாநிற்கவும், நல்லவர்கள் பலர் (அவரவர்விரும்பிக) கேட்ட நற்பொருள்களைக் (கையால்) ஈட்டாநிற்கவும் எ - று. (௪உ)

பித்தியிற் சிறப்பின் முன்னாப் பேரெழில் வாய்ப்பச் செய்த
சித்திரத் தருவின் முக்கட் செழுமதக் களிற்றை நாட்டிப்
பத்தியிற் பூசை யாற்றிப் பலவகை யுணவு மூட்டி
வித்தக விடையூ றின்றி வினைமுடித் திடுக வென்றான்.

(இ - ள்) சுவர்த்தலத்தில், சிறப்பின் முதலிற் பேரழகுபொருந்தச் செய்து வைத்த சித்திரவடிவத்தில் மூன்றுவிழிகளையும் மதம்பெருக்கையுமுடைய யானைமுக விநாயகக்கடவுளை யாவாகனஞ்செய்து பத்தியுடன் பூசைசெய்து பலவகைப்பட்ட (மோதகமுதலிய) உணவுகளையுண்பித்து [நிவேதனஞ்செய்து] ஞானசுரூபியே! யாதொரு தடையுமில்லாது இந்தக்காரியத்தை முடிவுபெறச் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தனன். எ - று (௪௩)

சூரிய னாதி யாகத் தூயசண் டேச னீறா
நேருற நூலிற் சொன்ன நிலந்தொறுங் கலயந் தாவித்
தாருநற் பூசை யாற்றி யவரவர் தம்மை வெவ்வே
றேருறு பூசைக் கூறெய் தாவகை காக்க வென்றான்.

(இ - ள்) சூரியன் முதலாகப் புனிதமாகிய சண்டேசனீறாகிய வரிசைப்பட நூலில் வகுத்த நிலங்கடோறுங் கலயங்களைத் தாபனஞ்செய்து, பொருந்திய நல்ல பூசனையைச்செய்து அவ்வத் தேவர்களை வெவ்வேறாக அழகுபொருந்திய பூசைக்கு இடையூறு நேரிடாவண்ணங் காப்பாற்றுகவென்று பிரார்த்தித்தனன். எ - று. (௪௪)

பரப்பினன் சாலி தூணிப் பதக்கரி யதனிற் பாதி
விரிப்புறு மரியிற் பாதி வெற்றவெள் ளதிற்காற் கூறு
கரப்பிறா னியமொன் பானுங் கலந்ததன் மேலே வைத்தான்
சுரப்புறு மன்பு பொங்கத் துலங்குபொற் சிவகும் பத்தை

(இ - ள்) தூணிப்பதக்கு நெல்லும், அதிற் பாதி அரிசியும், பரப்பிய அரிசியிற் பாதி சுத்தமாகிய எள்ளும், எள்ளிற் காற்கூறு குற்றமில்லாத நவதானியங்களுங் கலந்ததும், (ஆக ஒன்றன்மேலொன்று வரிசையாகப்) பரப்பி, ஊற்றெடுக்கின்ற அன்பானது அதிகரிக்கும்படி சிவகும்பத்தை யதன்மேலே எழுந்தருளச்செய்தனன். எ - று

சாலி - ஓர்வகை நெல் (௪௫)

மங்கல வியங்கள் விம்ம வார்ந்தி முகந்து செம்பொற்
றுங்கவொண் குடத்தினை யானைச் சுவற்றலை வரிசை யோடு
மங்குவார் தடுத்த தூநீ ராடையில் வடித்து மெல்லப்
பங்கமுற் றறநா லெட்டுப் படியுறப் பூரித் தானே.

(இ - ள்) மங்கலவாத்தியங்கள் முழங்கவும், நெடிய நதியினின்று முகந்து செம்பொன்னாலாகிய புனிதமான பிரகாசம்பொருந்தியகுடத்தில் யானையின் மத்தகத் தின்பேரில் வரிசையாக அங்கே வந்துள்ள புனிதமாகிய நீரை வத்திரத்தால் மெல்ல வடிகட்டிச் சேறில்லாமல் அறப்போக்கி, முப்பத்திரண்டுபடி சலம்பொருந்தச் சொரிந் தனன். எ - று. (சசு)

பொன்னவ மணிகோட் டங்கற் பூரமே யகரு வாசந்
துன்னுசந் தனமே வெட்டி வேரொடு விரைகள் பலபூ
மின்னுபல பழங்கள் பற்பல வியன்கொடி பஞ்ச கவ்விய
மின்னவுஞ் சொரிந்து கூர்ச்ச மிலையிருங் கனிமேல் வைத்தான்.

(இ - ள்) பொன்னும் நவமணியும் கோட்டமும் கற்பூரமும் அகரும் வாசம் பொருந்திய சந்தனமும் வெட்டிவேரும் கூட்டமாகிய வாசனைத்திரவியங்களும் பல மலர்களும், ஒளிவாய்ந்த பல கனிகளும் பல பல பெரிய கொடிகளும், பஞ்சகௌவிய மும் இவைபோல்வனவுஞ் சொரிந்து, மாயிலை பெரிய நாரிகேள பலம் தருப்பைமுடி (இவற்றை) மேலே வைத்தனன் எ - று. (சஎ)

அடிப்பரப் பிருநீர் சொன்ன வளவினிற் பாதி யீச
னிடப்புறக் கரகத் துக்கு மிதற்குறு மளவிற் பாதி
கடப்பட விருத்து மெல்லாக் கலயங்க டமக்கு மாக்கிச்
சுடர்ப்பசுஞ் செழும்பொ னாதி சொரிந்தனைத் திணுக்கும் வைத்தான்.

(இ - ள்.) (சிவகும்பத்திற்குச்) சொல்லிய நீரின் அடிப்பரப்பிற் பாதி சிவ கும்பத்திற் கிடப்புறத்திலுள்ள உமாதேவி கும்பத்திற்கும், இதிற் சொரிந்த அளவிற் பாதி முறைமைப்படி யிருத்திய எல்லாக் கலயங்கட்குமாக (நீரை) சசொரிந்து, ஒளி விடும் பசுமைதங்கிய செழும்பொன் முதலியவற்றை (அவரவாககேறப) ப்பெய்து அவ்வக் கும்பங்கட்கும் (இலையுங் கனியும்) மேலே வைத்தனன். எ - று. (சஅ)

இருகலை வெவ்வே றெல்லாக் கும்பத்து மெய்த்தச் செய்து
கருவிறும் வித்தி யேசர் கலயமோ ரெட்டி னுள்ளும்
பெருகுபொன் வெள்ளி செம்பு பித்தளை யீயங் காரப்பொன்
றிருப்வெண் கலமிவ் வெட்டு மொவ்வொன்றுச் சேர்த்தி னானே.

(இ - ள்) எல்லாக் கும்பத்திலும் வெவ்வேறாக இரண்டாடைகளைப் பொருந் தக்கட்டி, (தம்மைப் பணிவோருடைய) பிறவியை யொழிக்கும் அஷ்டவித்தியேசுர ருடைய கலசங்களெட்டிலும் பெருகுகின்ற பொன் வெள்ளி செம்பு பித்தளை ஈயம் இரும்பு (தரா) வெண்கலம் ஆகிய இவ்வெட்டையும் ஒவ்வொன்றாக இட்டனன். எ-று.

அஷ்டவித்தியேசர்-அநந்தன - சூக்குமேசன-சிவோத்தமன-ஏகநேத்திரன - ஏகருத்திரன் - திரிமூர்த்தி - சீகண்டன் - சிகண்டீசன் எனப்படுவோர். (சகூ)

வேறு.

அருகுசூழ் கலைய மெட்டிரட் டியினு மகருகெந் தகமரி தார
மருவுமாட் சிதமே மனசிலை யிரதம் வழங்கிரண் டப்பிரங் கெட்டுத்
தெருளுறுங் கவுரி காஞ்சனஞ் சாதி லிங்கமே சிந்துரந் துத்த
மருளறு மிரண்டு விமலைகள் காந்தம் வகுத்தவீ ரெட்டையு மிட்டான்.

தவர்களாகிய முனிவர்கள் புடைசூழ, தீயைச் சொரியும் விழியையுடைய புலித்தோலில் வீற்றிருக்கக்கண்டார்கள். எ - று. (௧௫)

தம்பிரான் முகத்து ளொன்று சண்முக னானாற் போல
வம்பறுங் கமல வாழ்க்கை வானவன் முகத்து ளொன்றிங்
கும்பர்சூழ் பிருகு வாகி யுறைவதை யறியா ரெல்லா
மெம்பிரா னறுத்தா னென்ப ரெனவியந் தெய்ப்பச் சார்ந்தார்

(இ - ள்) சிவபெருமானுடைய திருமுகங்களிலொன்று முருகப்பெருமானை அவதரித்தாற்போல, வாசனையகலாத தாமரைமலரில் வாழும் பிரமதேவனுடைய முகங்களிலொன்று, இவ்விடத்தில் தேவர்கள் சூழ்கின்ற பிருகுமுனிவனாகி வீற்றிருப்பதை யுணராதவர்கள் யாவரும், (அம்முகத்தை) சிவபிரான் அறுத்துவிட்டன ரென்பாராக வென்று சந்தோஷமுற்றுச் சமீபித்தடைந்தார்கள் எ - று. (௧௬)

கண்டவர் கண்ணான் மீட்டுங் காணவுங் கூசு நீர்சோர்
புண்டரு குட்ட யாக்கைப் புரவலன் முதனால் வோருங்
கொண்டதம் பெயர்வெவ் வேறு கூறியெட் டுறுப்பு மைந்து
மண்டனிற் படிய வீழ்ந்து மலர்க்கரங் கூப்பி நின்றார்.

(இ - ள்) பார்த்தவர்கள் தமது கண்களால் மறுபடியும் பார்ப்பதற்குங் கூசும்படி சீழைச்சொரியும் புண்ணமைந்த குட்டநோய் பொருந்திய உடலையுடைய சோமகாந்தன் முதலிய நான்குபேர்களும், தாங்கொண்ட பெயர்களை வெவ்வேறாகச்சொல்லி எட்டுறுப்புக்களும் ஐந்துறுப்புக்களும் பூமியிற் பொருந்தும்படி, பணிந்து தாமரைமலர் போலுங் கைகளைக் குவித்துநின்றார்கள். எ - று

எட்டுறுப்புக்கள் பொருந்தப்பணிவது அஷ்டாங்க நமஸ்காரமென்றும், ஐந்துறுப்புக்கள் பொருந்தப்பணிவது பஞ்சாங்க நமஸ்காரமென்றுங் கூறப்படும். இதனை,

சூதசங்கிதை

"வலஞ்செய்து தண்டனை மானவிதி வழிதழுவத்
தலந்தன்னிற் பணிந்தெழுகத் தலைகரமற் றிருகன்னந்
துலங்குமோ வாய்புயங்க ளெனுமெட்டுந் தோய்மயி
ரிலங்குசிரங் கரமுழந்தா ளெனுமைந்து மிசைந்திடவே" — என்பதனுணர்க. இதிற் பஞ்சாங்க நமஸ்காரம் மாதர்கட்குரியதென்ப. (௧௭)

அவரவர்க் காசீர் வாத மருந்தவப் பிருகு கூறக்
கவர்கயிற் கழலா னுள்ளக் கரையறு மன்பு பொங்க
வுவரியுண் டெழுந்த கார்போ லொளிவிழி யுறைப்ப மெய்யி
னிவர்மயிர் பொடிப்ப வேர்ப்ப விழுதென வுருகிச் சொல்வான்.

(இ - ள்) அரிய தவத்தையுடைய பிருகுமுனிவர் அவரவர்கட்கு ஆசீர்வசனங்கள் சொல்ல, பிளவுபட்ட கடைப்புணர்வுடைய வீரக்கழலணிந்த சோமகாந்தன் மனதில் எல்லையில்லாத அன்பு அதிகரிக்கவும், கடலைப்பருகியெழுந்த மேகத்தைப்போல ஒளிபொருந்திய கண்கள் நீர்த்துளி சிந்தவும், உடலிற்பொருந்திய மயிர்க்கூச்செறியவும், வேர்க்கவும், நெய்யைப்போல வுருகிச் சொல்லத்தொடங்கினன். எ - று. (௧௮)

வேறு.

பண்டுபுரி தீவினையின் பயனாகி யுடலிடமாக்
கொண்டெழுந்தெ னழகுமுழுதுங் குமைத்தபெரு நோய்முகத்தாற்
றொண்டுபுரி நலவினையூழ் சூழ்ந்துபிடர் பிடித்துந்தப்
புண்டரிக மலர்ப்பாதம் போற்றலுறும் பயன்பெற்றேன்.

(இ - ள்.) முற்காலத்திற் செய்த தீவினையின் பிரயோசனமாகி, தேகத்தை யிடமாகக்கொண்டோங்கி, என் அழகு முழுவதையு மொடுக்கிய பெருவியாதியினால் தேவரீருக்குப் பணிவிடைசெய்யத்தக்க நலவினை யூழானது, என்னைப் பிடர்பிடித்துத் தள்ள (தேவரீரது) தாமரைமலர்போன்ற திருவடியைத் துதிசெய்யும் பயனை யடைந்தேன். எ - று. (க௯)

சென்றபல பிறவிகளுஞ் சேருமெதிர் பிறவிகளு
மொன்றியவிப் பிறவியொடு முறுவிழுப்பம் படைத்தனவா
மின்றுனது மலர்ப்பாத மிறைஞ்சலினென் றவமாதி
நன்றுபுரி வினைப்பயனு நண்ணியவென் பாலெந்தாய்

(இ - ள்) எந்தையே! கீழ்ப்போன பல சனனங்களும், மேல்வருஞ் சனனங்களும், பொருந்திய இந்தச் சனனத்துடன் அமைந்த சிறப்பினை யடைந்தனவாயின. இப்பொழுது தேவரீருடைய தாமரைபோன்ற பாதத்தை வணங்குதலின் என் தவமுதலிய நன்மைசெய்த வினைப்பயன்களும் என்னிடத்துற்றன எ - று (உ0)

எளியேனகல வியுங்குலமு மீண்டறிவும் பயன்பட்ட
வளியேனை யுயிர்த்தவரு மரும்பெரும்பே றுடையவரே
களியார்ந்த கற்பகத்தைக் கலந்தவர்க்குக் குறைவின்றே
யொளியார்ந்த நினதடியை யுற்றேற்குங் குறையுண்டோ.

(இ - ள) ஏழையேனுடைய வித்தையுங் குடிப்பிறப்பும் நெருங்கிய விவேகமும் பலனடைந்தன சாமானியனான என்னைப் பெற்றவர்களும் அரிய பெரிய பேற்றினை யுடையவர்களே. தேன்பொருந்திய கற்பகத்தருவைச் சேர்ந்தவர்க்குக் குறைவில்லையே (அதுபோல) ஒளிபொருந்திய தேவரீருடைய திருவடியை யடைந்தேனுக்குங் குறையுளதோ (இல்லை) எ - று (உக)

இம்மையிலே பாவவினை யாதுமிழைத்தே னல்லே
னம்மையிலே பெரும்பாவ மாற்றினே னாதலினா
லும்மையிலே பெருங்கதிக்கா முறுதியுமிங் கேயழியச்
செம்மையிலாக் கொடும்பிணியென் றேகமடர்ந் தெழுந்ததுவே.

(இ - ள்) இந்தப்பிறவியில் (அடியேன்) சிறிதும் பாவத்தொழில் செய்தேனல்லேன். முற்பிறவியிற் பெரும்பாவங்களைச் செய்துள்ளேன். ஆனபடியால் மறுபிறவியிற் பெருங்கதியை யடைதற்காகிய உறுதிப்பாடும் இப்போழுதே யழியும்படி செம்மையில்லாத தொழுநோயானது என்னுடைய தேகத்தைத் துன்புறுத்தித் தோன்றியுள்ளது எ - று. (உஉ)

அருந்தவத்தார் றனத்தா லவுடதமந் திரங்களினால்
வருந்தியவிப் பிணிவருந்த வருந்தியுந்தா னருந்தாம

விருந்தவையெலா மெருந்தீ ரெனவளர்ந்து விளைந்ததினிப்
பெருந்தவநின னருளன்றிப பெயாககுமொரு மருந்திலலை.

(இ - ள்) அரிய தவத்தினாலுந தானத்தினாலும அவுடதத்தினாலும் மநதிரஙகளாலும வருந்திய விப்பிணி வருந்த வருந்தியுந தான வருந்தாமற்படியிருந்து, அவையாவும் எருவும நீருமபோலககொண்டு வளாந்து பெருகியது பெருந்தவமுடைய பிருகுமுனிவரே! இனித தேவரீரது திருவருளன்றி (அதனை)யொழிக்கும ஒரு மருந்து (வேறே) கிடையாது. எ - று. (உ௩)

விலங்குபற வைகளுமற்றும விழுத்தவநின னாசிரமத்
திலங்குபகை வயிரமுற்று தினபமுறக காணடலின்ற
றுலங்கவருமபிணிப்பகையுந தொழுதகையேன றனைவருத்தா
தலங்கியினி யழியுமெனக கையமிலலை யையமிலலை

(இ - ள்) சிறந்த தவமுடையவரே! மிருகஙகளும பறவைகளும மற்றுள்ளனவுந் தேவரீருடைய ஆசசிரமத்தில விளங்கிய பகைத்தனமையைப பொருந்தாது களித்திருப்பக் காணப்படுதலால, தேவரீரைத தொழுகின்ற கையையுடைய என்னைத துன்புசெய்யும பிணிப்பகையும என்னை வருத்தாமல இனிச்சிறுகியழியும (என்பதில) எனக்குச் சந்தேகமில்லை, சந்தேகமிலலை எ - று (உ௪)

எனவுரைப்பப பிருகுவெனு மிருந்தவநதோன் றுளஞ்சூர்ந்து
தனதுளத்துத் தியானித்துச சார்ந்தபிணி முதனாடி
நினதுவிழை வினைமனனு நினமலனற றருளகூட்டு
மனமுளைந்து தவறுது வருமினைப்பா றுதியெனறுன.

(இ - ள்) என்று சோமகாநதன கூற, பிருகுவென்று சொல்லும பெருந்தவமுடையவர் கருணைமிகுந்து தன மனதில தியானஞ்செய்து, (அவனுக்குச) சமபவித்த நோயின காரணத்தை யோசித்து, அரசனே! உன விருப்பத்தை மலரகிதனாகிய கடவுளுடைய திருவருள கைகூடச்செய்யும மனவருத்தமுற்றுத தளரவேண்டாம வழி வந்த இளைப்பாறுகவென்றனா எ - று (உ௫)

உழையிருந்தோர பிருகுமுனி யுரைத்தகுறிப் பினையுணர்ந்து
விழைவிளைப்பூந் தயிலாதி மிகவாட்டி யறுசுவையுந
தழைதருநால வகையுணவுந் தகவூட்டி யுபசரிப்பக்
கழைசுளியுங களியானைக் காவலனுந தியாமகிழ்ந்தார.

(இ - ள்) அருகிலிருந்தவாகள பிருகுமுனிவருரைத்த குறிப்பையறிந்து விருமபத்தக்க வாசந்தங்கிய மலரெண்ணெய முதலியவற்றை மிகுதியாகவிட்டு முழுகுவித்து, அறுசுவைகளும பொருந்திய நாலவகை யுணவுகளையுந தக்கபடி யுணபித்து, உபசரணைசெய்ய, கட்டுத்தறியைக கோபிக்கின்ற களிப்பையுடைய யானைச்சேனை பொருந்திய அரசன முதலானோா அகங்களித்தாாகள எ - று

அறுசுவை: காாப்பு - துவாப்பு - கைப்பு - புளிப்பு - இனிப்பு - உவாப்பு எனப்படும நால்வகை யுணடி: உணணல - தினனல - நக்கல - பருகல எனப்படும் இவற்றுள் சோறு முதலியன வுணடல - கறி முதலியன தினனல் - தேன முதலியன நக்கல் - நீா முதலியன பருகல் எனப்படும். இவற்றுடன உறிஞ்சல ஒன்று கூட்டி ஐந்தெனபதுமுணடு. (உ௬)

என்றுமா தவர்கேட்ப விருந்தவத்துப பிருகுவின்பா
லன்றுவேற் கரத்தரச னடுத்ததுரைத் தவனவறருத
துனறுதீ வினைநனமை சூழ்நததுரைத்த வவவிரணடு
மினறுகூ றுவனமுறையே யெனச்சூத முனிபியமபும.

(இ - ள) என்று (இவ்வகையாக) பெருந்தவசிகளான நைமிசாரணிய முனிவர்கள கேட்கும்படி, சிறநத தவத்தையுடைய பிருகுமுனிவனிடததில வேற்படை தாங்கிய சோமகாநதமனனன் அடுதத வகையைககூறி, அபபிருகுமுனிவன் சோமகாநதனுககுப் பொருந்திய தீவினை நலவினைகளை யாலோசிததுக்கூறிய அவ்விரணடையும இப்பொழுது முறையே சொலகினறேனெனறு சூதமுனிவன சொலலலாயினன.எ-று.

சோமகாநதன் பிருகுமுனியையடுததபடலம் முறறிறறு.

ஆகத் திருவிருத்தம் - எசஎ.

---

# சோமகாந்தன்றீவினைப்படலம்.

கருவினை வேரொடுங் களைநத மாதவப்
பிருகுவின் பேரருள் பெற்ற மன்னவன்
றிருவிய லத்தினஞ் சென்ற மற்றைநாட்
பருதிவந தெழுமுனம் படுக்கை நீங்கினன்.

(இ - ள) பிறவியை வேரோடுமே பறிததெறிந்த பெருநதவமுடைய பிருகுமுனிவனுடைய பெருஙகருணையைபபெற்ற சோமகாநதராசன, செல்வமமைந்த அற்றையதினஙகழிநத மறுதினததில, சூரியன (உதயகிரியில) வந்து புறப்படுவதன்முன்னமே துயிலொழிநதனன எ - று

சோமகாந்தன தனறுயரகலததுகக பிருகுமுனிவா கருணையையடைந்த தினமாதலின அதனைத "திருவியலறறைநாள" எனறார். (க)

நாட்கடன முடிததன றுடி மைமவகை
வேட்கையுமு விடுததருள விரவு மெயததவன
றாட்கம லஙகளைச சாாநது தாழ்நதவன
வாட்கடைக கணடா மருஙகு வைகினன.

(இ - ள) நிததிபகருமததை முடிததனன பொருநதிய ஐவகை வேட்கையுமொழிததுக கிருபைபொருநதிய உணமைததவமுடைய பிருகுமுனிவருடைய திருவடிததாமரைகளை யடைநது பணிநது அவருடைய ஒளிபொருநதிய கடைக்கண்பார்வை யுணடாகுமபடி அருகிலிருநதனன எ - று (உ)

வேட்டன வேட்டவா விளைக்கு மைமகரன
சேட்டொளிப பதமலா சோநத மாதவன
வாட்டுமிப பிணியினை வாட்ட லாமென
விட்டிய பறவினை யெடுததுக கூறுவான.

(இ - ள்.) விரும்பிய பொருள்களை விரும்பியவகையே யுண்டுசெய்யும் ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக்கடவுளது பெருமையுற்றுப் பிரகாசிக்கின்ற திருவடித் தாமரைகளைச்சேர்ந்த பெருந்தவசியாகிய பிருகுமுனிவர் (சோமகாந்தனைத்) தனபுறத்துகின்ற இந்தக் கொடுநோயை யொழிக்கலாகுமென்று, (அவன்) தேடிய பழவினையை யெடுத்துச் சொல்லலாயினர் எ - று. (௩)

ஒன்னலா மணிமுடி யுரிஞ்சுந் தாளினோய்
மன்னிய விந்தமால் வரையி னோரபுறங்
கொன்னெடு நகரங்கொல் லார மென்றுள
தந்நகா நாயகனல் லறிவின் மிக்குளான்.

(இ - ள்) சத்துருக்களுடைய இரத்தினகிரீடங்கள் உராய்கின்ற பாதத்தை யுடைய சோமகாந்தனே! நிலைபெற்ற பெரிய விந்தகிரியின் ஓர் பக்கலில் பெரிய கொல்லாரமென்னும் நகரமொன்றுள்ளது அந்நகரத்து வர்த்தகன் (ஒருவன்) நல்ல அறிவின் மேம்பட்டவன் எ - று.

நாயகன் - வணிகன் (௪)

சித்துரு வப்பெயா சிவணி வாழ்தரு
மத்தகு வணிகனுக் கான்ற கற்பினுண்
மெத்தெழிற் சுலோசனை மெய்த்த வத்தினாற்
புத்திர னெனவுனைப் பொற்ப வீன்றனள்

(இ - ள்) சித்துருவனென்னும் பெயரையுற்று வாழ்கின்ற அந்தத் தகுதியாகிய வணிகனுக்கு மேம்பட்ட கற்பையுடைய அழகுமிக்க சுலோசனை யென்பவள் மனைவி அவர்கள் உடலவருந்திச் செய்த தவத்தினாலே உன்னைப் புதல்வனாக அழகு பெறப் பெற்றார்கள் எ - று. (ரு)

காமந்த னெனும்பெயா கலந்து பாலனு
யேமுறு தருணமவந் தெய்து செவ்வியிற்
றேமறு குடுமபினி யெனனுந் தோகையைத்
தீமுனா வரைந்துடன் சேர்த்தி னனரோ.

(இ - ள்) காமந்தனென்னும் பெயர்பெற்றுப் பாலவயதுடையவனாகி நல்ல வயதுவந்த காலத்தில், (உன் தந்தை) குற்றமற்ற குடும்பினியென்னும் பெயரை யுடைய மயிலின் சாயலையுடையவளை அக்கினி சாட்சியாக (உனக்கு) மணஞ்செய்து புணர்த்தினன். எ - று. (சு)

இடும்பெயாக் கேற்புற வெழுவா மைந்தரை
யடும்படை வாட்கணி யைவர் மாதரைக்
குடும்பினி யீன்றனள் குலவி வாழுநாள்
கடும்பழு நூந்தைவான் கதியிற் சென்றனன்.

(இ - ள்.) (குடும்பினியென்று) இடப்பட்ட பெயருக்குத்தக்கபடி ஏழு புத்திரர்களையும், (பகைவரைக்) கொல்லுகின்ற வாட்படைபோன்ற கண்ணையுடைய ஐந்து புத்திரிகளையும் அக்குடும்பினியென்பவள் பெற்றனள். (இவ்வாறு) கூடி வாழுங்காலத்தில், வயோதிகனான உன் பிதா நல்லகதியிற் போயினன் [மரித்தான்.] எ - று. (எ)

வருந்தியன் னையுமனு மரணஞ் செயதனை
டிருந்திய காவலா திரப் பாடியாய
முருந்தின முறுவலவே சையரின் றனனி நீ
யருந்தன மனைத்தையு மழிவு செயதனை.

(இ - ள) (அப்பொழுது உன) தாயும மனம வருந்தி அநுமரணஞ் செய்து கொண்டனள். திருந்தமாகிய தாயதந்தையர்களிறததாலால திருடனுய, முருந்து போனற இளமைவாயந்த பலவரிசையையுடைய வேசையாசுகததில விருப்புற்று, நீ அரிய செலவமுழுவதையும அழிததனை எ - று

அநுமரணம - கணவனிறநதது பொழுது தானுமிறததல. இஃதுடன்கட்டையேறுதல முதலியன முருந்து—மயிலிறகின அடி (அ)

தருமமன றுனக்கெனத் தாரஞ் சாற்றவும
பொருளவரு வாயகலம புவியில வாதியை
யிருமனப பெணடிரி னிழந்தில லாமையை
மருவிமிக விரநதுசின ளைவ ழுங்கினை

(இ - ள) இஃதுனக்கு நீதியனறெனறு, உன மனைவியானவள் சொலலவும், (கேளாவனுய) பொருளவரததக்கவழிகள கப்பலகள நிலங்கள வீடுகளமுதலியவற்றை, இருமனபபெணடிராற போகக்டிதது, இலலாமையாகிய தரித்திரததை யடைந்து மிகவும பிசசையெடுததுச சிலகாலங்கழிததனை எ - று.

தாரம-மனைவி. இது தனகணவனுல மங்கலதாரமணியபபெற்றவளெனபது.

இருமனபபெணடிா - வேசையா இவா அகததிலொனறும புறததிலொனறு மாக நடபபவராதலின இவவாறழைக்கபபட்டனா (௯)

வேறு

பொய்சகூ ளுரைத்தும பொயயுரைததுங குறளை யுரைததும பொருளீட்டி
மைசசூழ படைக்கட பொதுமாதா மகிழச சிலநாள வழுங்கினைபின
கைசசூ டகமபா டகங்குழைபூண கலமா திகளுங களவாண்டு
மெய்ச்சூழ் மகளிா கறபழிததும் விடரிற சிறநதோ னுயினையால்.

(இ - ள) பொயசசததியஞ்செயதும, பொயசசாட்சி கூறியும், கோள் சொல்லியும் (தீயவழியிற்) பொருளசமபாதிதது, மையெழுதிய வேற்படைபோனற விழியையுடைய வேசையா களிபபெயதச சிலகாலங் கொடுததுவநதனை. அதனபினனா, கையிலணியததக்க சூடகம - பாடகம - குண்டலம - ஆபரணங்கள் - பாததிரங்கள முதலியவற்றைத திருடியும, சததியக்காப்புடைய கறபுடை மகளிரைக் கறபழிததும் விடர்களிற சிறநதவனுயினை எ - று

பொதுமாதர் - யாவாக்கும பொதுவாயுள்ளவா முறை முதலியன கொள்ளாது பொருளகொடுபபோனுக்குப் பெணடாயிருநது உடனே விலக்குவோர். விடன்= வஞ்சகன. (௧0)

மைநதா மகளி ரொடுமபசியால வருநதி நாளுஞ் சரணினறிச
சிநதை தளர்நது குடுமபினிபோய்ச சேர்ந்தாள பிறநத மனைபின்னு
மந்த நகரி லிருநதுமது வாரநது களித்து முறைதிறமபிப
புந்தி விழைநத படியெநதப் பொல்லா வினையும புரிநதனையால்.

(இ - ள்.) (உன் செயல்களித்தன்மையவாயிருந்தமையின்) குங்குமபினியென்பவள் தன்புதல்வர்களும் புதல்விகளும் தானும் நாடோறும்பசியாலவருந்தி, காப்பாரில்லாது மனம் வாடி, தான் பிறந்த (தாய்) வீட்டிற்குப் போய்ச்சேர்ந்தாள். அதன்பின்னும் நீ அந்தப்பட்டணத்திலிருந்து கடகுடித்தூக்களித்து முறைதவறி மனம் விரும்பியவகையே யெல்லாத் தீவினைகளையுஞ் செய்தனை. எ - று. (கக)

வேந்த னறிந்து கடிதகற்ற வெய்ய வனத்திற் கள்வரொடு
போந்து பதிகர் துயிர்கொன்று பொருள்கைக் கவர்ந்து விலங்காதி
யேந்து படையா லழித்துமருந் திட்டாறலைப்போ ரையுங்கொன்று
மாய்ந்த வவர்தம் பொருண்மாதர் மற்றுங் கவர்ந்து நுகர்ந்தனையால்.

(இ - ள்) (அதனை, அந்நகரத்து) மன்னனவனுணர்ந்து விரைந்து உன்னை (அந்நகரவிட்டு) விலக்க, கொடிய காட்டில் திருடர்களுடன் சேர்ந்து, பதிகருயிரைக் கொன்று அவருடைய பொருள்களை யபகரித்து, மிருகமுதலியவற்றை (கரத்தில்) தாங்கிய ஆயுதத்தாற் கொன்று, மருந்துவைத்து, வழிபறிப்போரையும் மாய்த்து, இறந்த அவர்களுடைய பொருள்களையும் மனைவிமார்களையும் பிறபொருள்களையும் அபகரித்து அனுபவித்தனை எ - று

பதிகர் - வழிச்செல்வோர் (கஉ)

காதல் வேத முழுதுணர்ந்த கணவர்த் தனென்ன் றொருமறையோன்
போத வாறறி னெதிர்நோக்கிப் பொருக்கென் றடுத்துக் கரம்பிடித்தாய்
மோது கால் தூதெனவே முனனி வெருவி நெட்டுயிர்த்திட்
டாதர் காதிங் கென்னைக்கோற லரிய பொருள்கொண் டொழிகென்றான்

(இ - ள்.) (அவ்வாறிருக்கையில்) ஆசையுடன் வேத முழுவதையுங் கற்றுக் கணவாதத்தனென்று சொல்லும் வேதியனொருவன் வர, (அவனை) வழியெதிரே பார்த்து விரைந்து சமீபித்து (அவன்) கையைப்பிடித்தனை அவன் மோதுகின்ற காலதூதனைப்போல நினைத்துப் பயந்து பெருமூச்சுவிட்டு, ஐயோ என்னைக்கொல்லாது தருமமன்று. என் அருமபொருள்களைச் சூறைகொண்டு செல்லுகவென்றனன் எ - று.

முன்னே யொருத்தி தனைமணந்தேன் முடிந்தாள் பிதிரர் கடன்முடிப்பப்
பின்னே யொருத்தி தனைமணந்தேன் பிள்ளை யுயிராப் பருவத்தா
ளன்னா டனக்கோர் சரணில்லை யதனா லளியே னுனக்கபயங்
கொன்னே கோறல் புரியாது குலவும் பொருள்கொண் டொழிகென்றான்.

(இ - ள்) முதலிலே யொரு மனைவியை விவாகஞ்செய்தேன். (அவளோ) இறந்தனள் பிதிர் கடன்களைச் செய்துமுடிப்பதற்கு, பின்னர் மற்றொரு மனைவியை வதுவைசெய்தேன் (அவளோ) பிள்ளைபெறாத (இளம) பருவமுடையவள் அவளுக்கோர் ஆதரவுமில்லை. ஆனபடியால் ஏழையாகிய நான் உனக்குச் சரணம் வீணாகக் கொல்லாமற்படி (என்) பொருள்களைக்கொண்டு (என்னை விடுத்துச்) செல்லுகவென்றனன் எ - று (கங)

கள்ளே காமங் கொலைகளவு கலந்த தொன்று மிழுதை
கொள்ளா துயர்ந்தோர் கொளுத்தறிவைக் கூறு மவைநான் கினுமென்று
மெள்ளா வொருநீப னவன்மொழி வியன்பா றையிறகொட் டியதனிப்போற்
றள்ளா நினைத்த படிமுடித்தாய் பிரம சாயை சாரசு....

(இ - ள்) கள்ளுங் காமமுங் கொலையுங் களவுமாகியவற்றுட் சேர்ந்தொன்றானும், (இவ்விடயத்தில்) உயர்ந்தோர் கூறும் புத்தியைக் கீழ்மகன் கொள்ளான். சொல்லிய அவை நானகினின்றும் எக்காலமும் பிரியாத நீ அவ்வேதியன் மொழியைச் சிறிதுங் கவனியாது, கல்லிலடித்த தடியைப்போலத் தள்ளி நீ நினைத்தபடி முடித்தாய் [கொன்றாய்] பிரமகத்தி (அதனால் உன்னைத்) தொடர்ந்தது எ - று (கரு)

பன்னாளுழந்து பயன்சிறிது பயப்பத் தேறு நலவினையே
யின்னா மையையருங் கூரா ரிவ ரிழுதை சிறிதும் பெறப்பழியைச்
சின்னா ழிகையிற் புரிந்தூழி சென்று நரகத் துயருழப்பார்
மன்னா வினிப்புண் ணியங்கேண்மோ வென்று பிருகு வகுத்துரைப்பான்.

(இ - ள்) தீமைக்குப் பயப்படுவோர் பலநாள் அலைந்து சிறிய பலனைக் கொடுப்பதானாலும், நற்கருமத்தையே செய்வார்கள். கீழ்மகன் அற்ப பலனையும் அடையும்படி பழிசம்பாதிக்கச் சிலநாழிகையிற் செய்து, ஊழிகாலம் நரகத்திற்சென்று துயரமடைவான். சோமகாந்தனே! இனி நீ செய்த புண்ணியத்தையுங் கேட்பாயாகவென்று பிருகுமுனிவன் எடுத்துக்கூறலாயினன். எ - று. (கசு)

சோமகாந்தனறிவினைப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - எ௲௬.

# சோமகாந்தன் நல்வினைப்படலம்.

சொன்னவாறு நீ, துன்னுகானிடை,
மன்னிவாழுநா, ளின்னலெய்தினை

(இ - ள்.) மேற்சொல்லியவகையாக நீ நெருங்கிய வனத்திற் பொருந்தி வாழுகையில் துன்பத்தையடைந்தாய் எ - று (க)

நடுக்கந்தந்திரி, யடுக்குமவன்கப,
மெடுக்குஞ்சந்தியுந், தொடுக்குங்காசமும்

(இ - ள்) நடுக்கத்தைக்கொடுத்து அசசங்கொடுக்கும் வலிய கபமும், எடுக்கின்ற வாந்தியும், செலுத்துகின்ற கோழையும் எ - று (உ)

மூப்புமுற்றுறக், காப்புங்கைவிட,
நீப்பருந்துயாக், கோப்புக்கொள்ளலும்.

(இ - ள்) வயோதிகம் முழுதும் பொருந்தவும் காவலுங்கைவிடவும் நீக்குதற்கரிய துயர் மிகுதியும் உண்டாகவும். எ - று (௩)

வேறு

சாதற்றுயர்சார்ந்ததுபொருப்பென்
றோதத்தகுமோணபொருளும்யானும

போதககடியாதியெனவிலலின்
மாதுகவொருதூதினைவிடுத்தாய.

(இ - ள்.) மரணதுக்கமுண்டாயிறறு விரைவாகச சொல்லததக்க வொளி வாய்ந்த பொருளுமயானுமவர (செலவளிததது) விலககாதேயெனறு உன மனையாட்டிக்கு ஒரு தூதனைச செலுததினைய. எ - று. (௪)

இல்வினமாது - மனைககிழததி, மனைவி.

இனையாதிருளேகிமொழிதூதை
மனைமாதொடுமறறையருநோககிக
கனைபூஙகழறகாவலனெறுகரு
நினையாதகலெனறுமிகநீததாா.

(இ - ள்) வருநதாமறபடி இரவிலேயே செனறு கூறிய தூதவனை உன் மனைவியுடன மறறுளளோருமபாாதது, ஒலிககின்ற அழகிய வீரகழலணிநத அரசன் (அறிநதால) தணடஞசெய்வான (ஆதலின) எமமை நினையாது நீஙகுகவெனறு மிகவும் விலககினாாகள எ - று (௫)

இனியாதுசெயவாமெனவிருநது
தனியாமனமோடுககவெணணி
நனிபோனபிறபபிலுறுநனமை
முனியாதுனைமுறறவிதுசெயதாய.

(இ - ள) இனியாது செய்வோமெனறு ஒனறியான மனததுடனிருந்து மிகவும் யோசிதது, மிகுதியாகசசெனற பிறவிகளிற பொருநதிய புணணியகருமஙகளமுதிருமபடி கோபியாமல இதனைச செயதனை எ - று (௬)

உலகோரறியாதுனையிரநது
கலனுடைபொனறுதிகவாநதேகும
விலகாதொருவேதியனைநோககிக
குலவேதியரைககொணாகவெனறாய்.

(இ - ள்) உலகினருககுத தெரியாமல உனனிடம யாசிதது, ஆபரணம் ஆடை பொன முதலியவற்றைக் கைககொணடு செலலும உனனைபபிரியாத பிராமணனைபபாாதது, சிறநத அநதணாகளை யழைதது வருகவெனறு கூறினை. எ - று

உலகினரறிநதால தான பதிதனிடததிற பொருளேறறதறகாகக குலாசாரங கெட்டவனெனறு விலககுவராதலின "உலகோரறியாது" எனறாா. (௭)

அனனபலவாசசிரமநணணி
மனறுதரவானமுனிவாஙமமி
னனுயகனயநதினிதவிககும
பொனனுடைபொறபூண்பெறுதறகெனறான.

(இ - ள்.) அவவேதியன பல ஆச்சிரமஙகளை யடைதது, முனிவர்களே! நல்ல வணிகனெருவன் விருமபி யினிதாககொடுக்கும பொன ஆடை அழகிய ஆபரணமுதலியவறறைப பெற்றுக்கொளவதற்குப் பொருந்திய ஆசையுடன் வாருங்கள் னெறு கூறினன். எ - று. (௮)

உன்றீ துணரா தவரடுத்தா
ரன்றா தரவா லடிவணங்கி
நின்றா யநினை நோக்கிமுனி வோர்க
ணன்றே யெனநக் கிதுமொழிந்தார்.

(இ-ள்) அவ்வேதியர்கள் உன்றீமையை யறியாமல் (உன்பால் தானம்பெற) வந்தார்கள் அப்பொழுது நீ ஆசையுடன் அவர்கள் பாதங்களைப் பணிந்து நின்றனை. முனிவர்கள் உன்னைப்பார்த்து ஆ! நன்றாயிருந்ததென்று கூறி நகைத்து இவ்வாறு கூறினார்கள் எ-று. (௯)

வேறு

பாவியென் றறியா நீங்குப் படர்ந்தனம் பாவி யுன்னை
மேவினர் கண்டோர் கேட்டோர் விளம்பினோ ரிரந்தோ ரெல்லாந்
தீவினைச் சிமிழ்ப்பிற் பட்டுச் செறிநர குழப்ப ரற்றாற்
றாவிலுன் பொருளை யெல்லாந் தருமநீ விழைந்தா யாயின்

(இ-ள்) ஐயோ! நீ பாவியென்றறியாமல் இவ்விடத்திற்குவந்தோம் பாவி! உன்னைச் சமீபித்தவர்களும் பார்த்தவர்களும் (உன்பெயரைக்) கேட்டவர்களுஞ் சொன்னவர்களும் (உன்னிடம்) யாசித்தவர்களும் ஆகிய எல்லோரும் பாவவினையாற் பந்திக்கப்பட்டு, நெருங்கிய நரகத்திற் றுன்புறுவார்கள் ஆதலால் எண்ணில்லாத உன் பொருள் முழுவதையும் நீ தருமஞ்செய்ய விரும்புவாயாயின் எ-று (௧௦)

நெடிபடு வனத்தி லோர்சார் நின்மலக் கணேசன் கோயி
லடிமுதன் முடியின் காறு மலர்செழுந் தருவென் மாந்தர்
குடிகொளு மகமு நன்கு குயிற்றுதி யென்று நீங்கிக்
கடியறன் மனுக்கண் மூழ்கிக் கணித்துளந் தூய ரானார்.

(இ-ள்) சிள்வண்டுகள் பொருந்திய இவ்வாரணியத்திலே ஒருபுறம், மலரகிதனாகிய விநாயகக்கடவுளுடைய திருக்கோயிலை, அஸ்திபாரமுதற் சிகரம் வரையிலும், அலர்ந்த செழுமைதங்கிய மரங்களையும், இராக்காலத்தில் மானுடர் வசிக்கும் வீடுகளையும் நன்றாகச் செய்விப்பாயாகவென்று கூறி (அவனை) விலகி, வாசம்பொருந்திய நீரில் மந்திரபூர்வமாக ஸ்நானஞ்செய்து ஜபஞ்செய்து மனம் பரிசுத்தமடைந்தவர்களானார்கள் எ-று. (௧௧)

கடும்புகை விட்ட வாறுங் கரிசிலர் கரைந்த வாறு
மிடும்பைவந் தழிக்கு மாறு மெண்ணிமெய்ப் பொருளு மன்றப்
படும்பயப் பால வாகப் பண்ணுவ தைங்கைப் புத்தே
ணெடும்பெருங் கோயி லன்றி யில்லையென் னினைவுட் கொண்டாய்.

(இ-ள்) உறவினர் கைவிடுத்த வகையும், குற்றமில்லாத முனிவர்கள் கூறிய வகையும், (வயோதிகத்தால்) துன்பம்வந்து வருத்தும் வகையும் யோசித்து, எல்லாப் பொருள்களையும் பலன்பெறுந்தன்மையாகச் செய்யத்தக்கது ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக்கடவுளுடைய நெடிய பெரிய திருக்கோயிலன்றி (வேறு) இல்லையென்று மனத்திற்கொண்டனை. எ-று.

கடும்பு - உறவினர் (௧௨)

ஈட்டிய பொருளி னோடு மிடம்படு கோயி லாக்கக்
கோட்டமி லாத வன்பு குடிகொள வனாதி யான
சேட்டொளிக் கணேசர் கோலத் திருவுரு விருப்பக் கண்டு
வாட்டமுற் றொழிந்து தாழ்ந்து மருங்குசூழ்ந் தாடிப் பாடி.

(இ - ள்.) (அந்நிலவழியிற்)சேகரித்த பொருள்களுடன்,விசாலமான விநாயகப் பெருமான திருக்கோயிலை யடைந்து, கோணுதலில்லாத பக்தியானது (மனநிறை) குடி யிருக்க, அநாதியான மிக்க ஒளிவாய்ந்த கணேசப்பெருமானுடைய திருவுருவம் வீற் றிருப்பப்பார்த்து, வாட்டமுழ்ந்து மகன்று பணிந்து பிரதக்கணஞ்செய்து ஆனந்தக் கூத்தாடிப் (பலவகையாகப்) பாடி எ - று (கங)

கம்மிய ராதி யோரைக் கருவியோ டெப்பக் கூவி
விம்மொளிப் பொன்னாற் கெற்பக் கிரகத்தை விளங்கச் செய்து
செம்மணி யாதி செம்பொற் றகட்டிழைச் சேர்த்து முன்னே
கொம்மெனப் படுத்து நான்கு கோபுரந் திசைதொ றாக்கி

(இ - ள்) கம்மியா முதலானோரை ஆயுதங்களோடு வரும்படி விளித்து பூரித்த வொளியையுடைய பொன்னாற் கெற்பக்கிரகத்தை விளக்கமுறச்செய்து, பதும ராகமுதலியவற்றைச் செம்பொன்னாற் செய்த தகட்டிற் பதித்து முன்னே விரைந்து நான்கு கோபுரங்களை (நான்கு) திசைகளிலும் செய்வித்து எ - று

கெற்பக்கிரகம் - பெருமானிருக்கும் உள்ளிடம் இதன்முன்னுள்ள அறையை அந்தராளமென்றும், அதன்முன்னுள்ள விடம் அர்த்தமண்டபமென்றும், அதன்முன் னுள்ளது மகாமண்டபமென்றுஞ் சொல்லப்படும். (கச)

மண்டப மாட மேடை மடைப்பள்ளி யாக சாலை
விண்டொடு புரிசை யாதி வெள்ளியா திகளாற் கல்லாற்
கண்டவிட் டிகையாற் காழ்த்துக் கதிமிகு மரதகத்தால் வெவ்வே
றண்டாகம மியன்ற நாண வழகுறச் சிறப்பத் தாக்கி

(இ - ள்) மண்டபம் மாடம் மேடை மடைப்பள்ளி யாகசாலை ஆகாயமளா விய மதில் முதலியவற்றை வெள்ளி முதலிய உலோகங்களாலும், சலலாலும், இட்டி கையாலும், வயிரமுற்றுக் கனமிக்க மரதகாலும் வெவ்வேறாகத் தேவகம்மியனும் விச சுவகன்மனும் நாணும்படி சிறப்புறும்படி அழகாகச் செய்வித்து எ - று.

இட்டிகை - கருங்கல். (கரு)

வாயிலை நான்கின் முன்னு மணிப்புனற் றடாகந் தொட்டுக்
கோயிறன் புறத்து முற்றக் குலவுமா ராம மாக்கித்
தாயினு மினியாரகக் கான் தமனியப் பாத்தி ராதி
யாயின பின்ன ராதி சைவரிற் பூசை யாற்றி.

(இ - ள.) நான்கு கோபுரவாயில்களின் முற்படவும் அழகிய நீர்நிறைந்த தடா கங்களைத்தொந்த திருக்கோயிலைச்சூழ முழுவதும் நெருங்கிய பூந்தோட்டம் வைத்து, தாயைக்காட்டிலு மினியவராகிய இறைவர்க்கு உபயோகமான பொற்பாத்திர முதலி யன செய்வித்தபிறகு, ஆதிசைவர்களால (ஆகமோக்தமாகப்) பூசைசெய்வித்து. எ-று.

நாடகக் கணிகை மாதர் நல்லிய மியம்பு வோர்கண்
மாடக யாழின் வல்லோர் வாகனங் கவிகை யாதி
யாடக மணியிற் செய்த வணிகலம் பிறவு மல்கச்
சேடகம் பொலிந்தோர் போற்றத் திருவிழாப் பலவுஞ் செய்தாய்.

(இ - ள்) நடனஞ்செய்யுங் கணிகைமாதர்களும், நல்ல வாத்தியங்களை முழக்குவோர்களும், முறுக்காணியமைந்த வீணையில் வல்லவர்களும், வாகனம் குடைமுதலியனவும், பொன்னாலும் இரத்தினத்தாலுஞ்செய்த ஆபரணங்களும் பிறவும் பெருக, ஆகாயவாசிகளும் போற்றிசெய்யும்படி பல திருவிழாக்களையுஞ் செய்தனை. எ - று.

இன்னணஞ் சிறப்புப் பூசை யியற்றியே சிலநாட் செல்லத்
துன்னிய வாழ்க்கை நாளுந் துலைந்தது கால தூதர்
முன்னினர் பிடித்து வீக்கி முறைபுரிந் தீர்த்துச் சென்று
கன்னவில் புயத்துச் செங்கோற் காவலன் முன்னர் விட்டார்.

(இ - ள்) இவ்வகையாகச் சிறப்புப்பொருந்திய பூசையைச்செய்து சிலகாலங்கழிய, பொருந்திய (உன்) ஆயுட்காலமு மொழிந்தது இயமதூதர்கள் நெருங்கி (உன்னைப்) பிடித்துக்கட்டி முறைப்படி செய்து இழுத்துப்போய், மலையையொத்த தோளையுடைய இயமதருமராசனுக்கு முன்னே விடுத்தார்கள். எ - று (கஅ)

சினம்பொழி தரும வேந்தன் சித்திர குத்தற் கூவி
யினம்பிரிந் தடுத்த வின்னா னிருவினை யின்று காறுந்
தினந்தினஞ் செய்த வெல்லாஞ் செப்புதி யென்ன வன்னான்
கனம்பொழிந் தாங்கு முற்றுங் கரைந்துபின் னிதுவுஞ் சொன்னான்.

(இ - ள்) (பாவிகளைக் கண்டமாத்திரத்திற்) கோபத்தைச் சிந்தும் இயமதருமராசன் சித்திரகுத்தனென்னுங் கணக்கனைக் கூப்பிட்டு, தன்னினத்தாரை விட்டு வந்த இவன் இன்றையவரையில் தினந்தினஞ் செய்த நல்வினை தீவினைகளையெல்லாம் (கிரமமாகச்) சொல்லுகவெனக்கேட்க, அவன் மேகமானது மழைசொரிந்தாற்போல முழுவதையுஞ் சொல்லி, பின்னர் இதனையுஞ் சொல்லுகின்றான் எ - று. (கக)

பிறந்தநாட் டொடங்கி யின்னான் பேணிய தனைத்தும் பாவ
மிறந்திடு நாளிற் பாவத் தீட்டிய பொருள்க ளெல்லாஞ்
சிறந்தவைங் கரனுக் காக்கித் திருப்பணி செய்தா னென்றான்
மறந்தழை தரும வேந்தன் மதித்திது வகுக்க லுற்றான்.

(இ - ள்) பிறந்ததினமுதல் இவன் செய்தவை யாவும் பாவச்செயல்களே. ஆனால் (இறக்குங்காலத்தில்) தான் முன்னாட் பாவவழியிற்றேடிய பொருள்கள் முழுவதையுஞ் சிறப்புப்பொருந்திய கணேசமூர்த்திக்கு விநியோகப்படுத்தி (திருக்கோயில் முதலியனவாகத்) திருப்பணி செய்துள்ளன் என்று கூறினன். (அதனைக்கேட்ட) கோபமிகுந்த இயமதருமன் யோசித்து இவ்வாறு சொல்கின்றான். எ - று. (உ0)

பஞ்சியின் மலைக ளெல்லாம் படுத்தழற் பொறிபட் டென்ன
விஞ்சிய பாவ மெல்லாம் விநாயகன் பணியான் மாய்ந்த
தெஞ்சிய துளது தானு மிருநிலத் தலத்தி லென்று
நெஞ்சுற மதித்து நின்னை நேரெனு முகத்தி னோக்கி.

(இ - ள்) பஞ்சியின் மலைகளெல்லாம் பொருந்திய நெருப்புப்பொறிபட்டால் (அழிவது) போல, (நீ செய்த) மேம்பட்ட பாவங்கள் யாவும் விநாயகக்கடவுள் திருப்பணியால் ஒழிந்தன மிகுந்துள்ளதும் பெரிய பூமியில் அனுபவிப்பதல்லது இங்கு (அநுபவிப்பது) இல்லையென்று, மனதில் யோசித்து, உன்னை விரைந்து முகத்திற் பார்த்து. எ - று (உக)

அளவறு பாவஞ் செய்தங் கற்பமே நன்மை செய்தா
யுளவிரு பயனு முன்ன ருருப்பயன் றுகாதி கொல்லோ
வளமலி நன்மை முன்னர் மருவுதி கொல்லோ வென்று
ணிளகிய நெஞ்சி னீயங் கின்பமே முன்ன ரென்றாய்

(இ - ள்) கணக்கற்ற பாவத்தைச்செய்து சிறிது நன்மையே செய்தனை. உள்ளனவாகிய அவ்விருவகைப்பயனிலும் முதலிற் பாவபலனை யனுபவிப்பையோ வன்றி மிக்க நன்மையின் பலனை முதலிலனுபவிப்பையோ (எதைவிரும்புகின்றனை) என வினவினன் உருகிய மனதையுடைய நீ அப்பொழுது இன்பமே முதலில் (அநுபவிக்கத்தக்கது) என்று கூறினை. எ - று (உஉ)

அப்படி யாக வென்றே யகற்றின னீயு மேந்தா
யிப்படி மீது முன்ன ரெய்தரும் போக மூழ்கி
யுப்படி யின்ன னோயபின் னுழக்கின்று யிதுவுந் தீரக்
கைப்பிடி கனிபோ லைங்கைக் கடவுளைப் போற்று கென்றான்.

(இ - ள்) (இயமதருமன்) அப்படியேயாகுகவென்று உன்னை விலக்கினன். நீயும் (அதனால்) அரசனாய் இவ்வுலகத்தில் முதலிலே அடைதற்கரிய போகத்தில் மூழ்கி, அவ்வகையாகவே பிற்காலத்தில் இத்தன்மைய நோயிற் றுன்புறுகின்றாய் இந்நோயுந் தீரும்படி கையிலுள்ள கனியைப்போல ஐந்து திருக்கரங்களையுடைய கணபதியைப் போற்றல்செய்கவென்று பிருகுமுனிவர் கூறினர் எ - று. (உங)

காமந்த னெனும்பேர்க் கேற்பக் காமக னாகி நாளுந்
தோமந்த மின்றி யாற்றித் துரிசுறு பொருள்கள் கொண்டாய்
சாமந்தப் பொழுதிற் செய்த தருமத்தா லியம னீப்பிற்
சேமந்தன் பதந்த ரான்கொல் சேர்ந்தவர் தமக்கே ரம்பன்

(இ - ள்) காமந்தனென்னும் பெயருக்குப் பொருந்தக் காமமுடையவனாகி, முடிவில்லாது குற்றங்களையே செய்து, பாவம்பொருந்திய பொருள்களையே கைக்கொண்டு இறக்குந்தருணத்திற் செய்த தருமத்தால் இயமன் விடுவானாகில், விநாயகக்கடவுள் தன்னை யடைந்தவர்களுக்குச் சேமமாகிய திருவடியைத் தரமாட்டாரோ? (அவசியந்தருவார்) எ - று (உச)

இருவினை பிருகு வென்போ னெடுத்தியம் பியது சொற்று
முருவவார் சடையீர் மன்ன னுருக்கிளர் குட்ட நோயை
யருளினன் முனிவன் சீறி யகற்றிய திறக வென்னத்
தெருளுறு சூதன் மேலோன் சிந்தையின் மகிழ்ந்து கூறும்.

(இ - ள்) அழகிய நீண்ட சடையையுடைய முனிவர்களே! பிருகுமுனிவர் அரசனுடைய இருவினைகளை யெடுத்துக்கூறியதைச் சொன்னோம். பிருகுமுனிவர்

அவனுடலிற் பொருந்திய குட்டவியாதியைக் கோபித்து விலக்கிய வகையை யறியக் கடவீரகளென்று, ஞானம்பொருந்திய மேலோனாகிய சூதமுனிவர் மனதிற் களிப்புற்றுச் சொல்லுகின்றார் எ - று. (உ௫)

சோமகாந்தன நலவினைப்படல முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - எஅஅ

# சோமகாந்தனேய்தீர்ந்தபடலம்.

பிருகு மாதவன பேணுங் கருணையா
லருளு முண்மையை யமபுவித தேசினன
றிருளு ருதயீரத தானவன றேகநின
றுருவ வனபுளோ ராயிரந தோனறின

(இ - ள.) பெருநதவமுடைய பிருகுமுனிவனுடைய துதிககததகக கிருபையால் அருள்செய்த சததியசதைச சோமகாநதன தெளிவுறுமற சநதேகமுறறனன. (அப்பொழுது) அவனுடைய சரீரததிலிருநது (மாமிசததை) உருவும்படி வலிய பறவைகள ஆயிரககணககாகப பிறநதன எ - று. (க)

வசசி ரததின வடித்துவைதத தனனதோர
நசசு தணடகதி னண்ணிய மனனவ
னசசை யீரநதெழுந தாரநது வருததலு
மசச முற்றவ லஙகொணடு கூறுவான.

(இ - ள்) வசசிரம்போலவும வடிததுவைத்தது போலவுமுள்ள வொப்பற்ற விஷததன்மையுடைய மூககினால, பொருந்திய அரசனுடைய சரீரததைக குததிக்கிளம்பி ஆரப்பரிதது வருததவும, மனனன பயமுறறுத துனபமடைநது சொலகின்றான. எ - று. (உ)

ஓல வோல வுயாதவ வேதியா
வோல வோல வுனைசசர ணெய்தினே
னோல வோல வுறுதுணை வேறிலை
யோல வோல வொழிககினு நீஙகுறேன்

(இ - ள்) உயாநத தவததையுடைய வேதியரே! ஓலம் ஓலம். தேவரீரைச் சரணமடைநதேன ஓலம ஓலம. பொருநதிய துணைவேறில்லை. ஓலம் ஓலம். என்னை யொழிததாலும ஒழியமாட்டேன ஓலம் ஓலம எ - று

ஓலம் - அபயம். (௩)

மாத வபபெரு மாமலை யையவோ
சீத ளககரு ணைக்கடற் செமமலோ
காத ரக்கருங் கானங் கடததிமெய்ப்
போத முய்த்தருள் புண்ணிய மூர்த்தியோ.

தாவி லாத முனிக்கணத் தார்களு
மோவி லாவரு ளாற்றுய ருற்றனர்.

(இ - ள்) ஆ! ஆ! என்னே! என்னே! இப்பறவைகள் துன்புசெய்வது பாவம் இப்பழிசெய்கைப் பாரப்பதரிதென்று, கெடுதலில்லாத முனிவர் கூட்டங்களும் நீங்காத கருணையால் துன்பமடைந்தார்கள். எ - று. (சு)

வேறு

இன்ன தன்மைய ராயரு மேங்குறப்
பின்னல் வார்சடைப் பிருகு மாமுனி
மன்ன வென்மொழி வாய்மை யெண்ணிலை
யன்ன தீதினிவ் வல்ல லுற்றனை

(இ - ள்) (அங்குள்ளார்) யாவரும் இன்னதன்மையராக ஏக்கமடைய, பின்னலாகிய நீண்ட சடையையுடைய சிறந்த பிருகுமுனிவர் (சொல்கின்றார்) அரசனே! என் சொல்லைச் சத்தியமாக நீ யெண்ணினாயில்லை அவ்வகைய தீமையால் இந்தத் துன்பத்தை யடைந்தாய். எ - று (கய)

இனியென் வாய்மொழி யாது மையுறேல்
புனித னுக்குநீ யென்று பொள்ளெனக்
கனிவி னோடுமுங் காரஞ் செய்தனன்
பனிவி சும்பிடைப் பறவை மாய்ந்தவே.

(இ - ள்.) இனியென் சொல்லைச் சிறிதுஞ் சந்தேகியாதே. பரிசுத்தனுக்க வென்று விரைவாக ஆசையோடும் உங்காரஞ்செய்தனர். (அதனால்) குளிர்ந்த ஆகாயத்தில் (இருந்து துன்புசெய்த அந்தப்) பறவைகள் இறந்தன. எ - று (கக)

மிண்டு புள்ளற வேந்த னன்வினை
பண்டை வல்வினைப் பலவு முள்ளவென்
றுண்ட வண்டென வோகை பொங்கினன்
கண்டு ளாரெலாங் கவலை நீங்கினார்.

(இ - ள்) நெருங்கிய பறவைகளிறப்ப, சோமகாந்தமன்னன், பழமையாகிய தீவினைகள் பலவுமிருக்கின்றனவென்று, தேன்பெருகிய வண்டைப்போலச் சந்தோஷமிகுந்தனன் (அதனைப்) பார்த்திருந்தவர்கள் யாவருந் துன்பமகன்றார்கள் எ - று

புனம்பொ றாகரத் தப்பூரியாக
கவலை நோயெலாங் காற்று மைங்கர
னிவரு நூற்றினெட் டெட்டு மந்திரந்
தவறு தீர்ந்தமா தவனி யம்பியே

(இ - ள்.) சலத்தைப் பொற்பாத்திரத்தில் நிரப்பி, துன்பநோய்களையெல்லாம் விலக்கும் விநாயக மந்திரங்கள் நூற்றெட்டினை, குற்றமொழிந்த பெருந்தவமுடைய பிருகுமுனிவர் சபித்து எ - று (கரு)

செறிந்த வப்புனல் செங்கை கொண்டுமெய்
யெறிந்து ரப்பினு னிறைவ னுசியான

முறிந்து பாதக முற்று ருகக்கொடு
பறிந்து முன்னுறப் படியி னின்றதே

(இ - ள்.) பொருந்திய அந்த நீரைத் தமது செவந்த கையிற்கொண்டு (அரசன்) தேகத்தின்மேற் பெய்து அதட்டினார். தலைவராகிய பிருகுமுனிவர் ஆசீர்வசனத்தால், (அவனுடைய) பாவமெல்லாம் முறிந்து உருவமெடுத்து (அவனை) விலகி முறைபட்டு பூமியில் நின்றது. எ - று (கச)

வேறு

சிவந்து திரிந்து சரணீண்டு செறிந்து பரந்த மயிர்ச்சடையு
நிவந்து வளைந்த வெள்ளெயிறு நெடிய வடியு மகுழிவிழியு
மவந்த தீங்கா ரிருணிறமு மாழ்ந்த வயிறும் பனையேழி
னுவந்த வுயர்வு மதற்கேற்ற வுருவும் பலவுந் தோற்றியதே.

(இ - ள்) சிவந்து திரிந்து கால்கள் நெடுகி, நெருங்கிப்பரந்த மயிரையுடைய சடையும், உயர்ந்து வளைவுற்ற வெள்ளிய பற்களும், நீண்ட அடியும், ஆழமாகிய கண்களும், தீமையைக்கொடுக்கும் கரிய இருளின் மேனியும், ஆழமாகிய வயிறும், ஏழு பனைமரங்களின் விரும்பத்தக்க உயர்ச்சியும், அவ்வுயர்வுக்கேற்ற (காத்திரமான) தேகமும், (வேறு) பலவிதமுமாகத் தோற்றமுற்றது (அப்பிரமகத்தி) எ - று. (கரு)

வேறு

கறிக்கும் பற்களைக் கடபுரு வங்கண்மே
னெறிக்குங் கணலி னெருப்புக நோக்குறு
மெறிக்குந் தீப்படை யேந்தலைத் தின்னிய
குறிக்கு நக்குக் குனிக்குஞ் சுலாவுமே.

(இ - ள்) பற்களைக்கறிக்கும் கண்ணையும் புருவங்களையும் மேலேநெரிக்கும். கண்களில் நெருப்புப்பொறிசிந்த (உற்று) பபார்க்கும் அக்கினியாகிய ஆயுதங்களை யெறிக்கும் அரசனைத் தின்னயோசிக்கும் சிரித்துக்குனிக்கும். சுழும் எ - று

தின்னிய - செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (கசு)

தோளபு டைக்கு மிடிக்குரற் றோற்றுமுன்
னாளப டைத்திறங் காட்டியிந் நாளுநின்
வாளப டைத்தகை வன்மைமுன் காட்டென்று
தாளபெ யர்த்துத் தருக்கிய டுத்ததே.

(இ - ள்) தோள்களைக்கொட்டும். இடிபோன்ற குரலைக்காட்டும் முன்னாளைய படைத்திறத்தைக் காட்டி இக்காலத்திலும் வாட்படையேந்திய உன் வல்லமையை யென்முன்னே (இப்பொழுது) காட்டுகென்று கால்களைப் பெயர்த்து இறுமாந்து நெருங்கியது. எ - று. (கஎ)

பூத மின்னணம் பூபதி யைத்தொடர்ந்
தேத மெண்ணவுங் காரமெ ழுப்பிமெய்ய
மாத வன்கை மறித்துநீ யாரகொலோ
மோது நன்னெறைப் பூதமு னாக்குமால்.

(இ - ள்) பூதமானது இவ்வகையாகச் சோமகாந்தனைத் தொடர்ந்து தீமை (செய்ய) நினைக்க, உண்மைத்தவமுடைய பிருகுமுனிவர் உங்காரஞ்செய்து கையால் தடுத்து, நீயாரோ? நன்றாகக் கூறுகவென்ப பூதஞ் சொல்லுகின்றது. எ - று. (கஅ)

வேந்தன் மெய்யில் விரவிய சாயையா
னேந்த லின்கை யெய்திநந் தனையரிறை
போந்து ளேனவெளி புலவிய வெம்பசி
காந்து கின்றது கண்ணரு ளுண்டெனின்

(இ - ள்) யான் இவ்வரசனுடலிற் கலந்த பிரமசாயை. தலைவனே! உன்னுடைய கையாலிந்தத் தண்ணீரிலே (நூவடிவாக) வெளிப்பட வந்தேன். என்னைத் தொடர்ந்த கொடிய பசியானது கொளுத்துகின்றது. உம்மிடத்திற் கருணையிருக்குமாயின். எ - று (க௯)

கோனை மாதினைக் கூறு மமைச்சனை
யூனை யுண்டொழி வேனென விரத்தலும்
யானை மாமுகத் தேவர்தந் தாமலர்ந்
தேனை யுண்டுசெம் மாந்தவன் கூறுவான்.

(இ - ள்) இவ்வரசனையும் இவன்மனைவியையும், சொல்லுகின்ற மந்திரிகளையும் மாமிசம் புசித்து நீங்குவேனென்று யாசிக்கவும், சிறந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளுடைய செவ்வந்த பாததாமரைகளிலுண்டான தேனைப்பருகி யிறுமாந்திருக்கும் பிருகுமுனிவர் கூறுகின்றார் எ - று. (உ0)

மைந்து மிக்கவண் பூதமஞ் சற்கினி
சிந்தை யின்புறுஞ் செய்தியே செய்துமாற்
பொந்தி னுள்புகு வென்றெதி ரேற்றமாம்
பொந்து காட்டினன் புக்கது பூதமே

(இ - ள்) வலிமிக்க வண்மைவாய்ந்த பூதமே! பயப்படவேண்டாம். உன் மனங்களிக்கத்தக்க தொழிலே செய்வோம் இப்பொந்தினுட் புகுகவென்று கூறி, எதிரிலிருந்த மாமரப்பொந்தைக் காட்ட, அப்பூதமானது (அதில்) புகுந்தது எ - று.

புக்க பூதமும் பொந்துறு சூதமு
மொக்க வெந்தன பூதத்தி னுள்ளுயிர்
மிக்க பேரெழில் விண்ணவ னாகியே
தக்க மாதவன் றாள்பணிந் தோதுமால்

(இ - ள்.) (அவ்வாறு) சென்ற பூதமும், அப்பொந்தையுடைய மாமரமும் ஒன்றாக வெந்தன, பூதத்தினுள்ளே பொருந்திய உயிரானது மிக்க பெருமைவாய்ந்த அழகையுடைய தேவவுருவாகி, தகுதியாகிய சிறந்த தவத்தைச்செய்த பிருகுமுனிவர் பாதத்தை வணங்கிக் கூறுகின்றது எ - று (உஉ)

வேறு

பாவி யின்னவன் பழுவத் தென்னைமுன்
னாவி மாய்த்தன னினைய தீமையா

லோவில் வெந்துய ருற்று ளேற்குநின்
சேவை யானலஞ் சேர்ந்த தென்றனன்

(இ - ள்.) பாவியாகிய இவ்வரசன் என்னை முன்னாளில் காட்டிலே உயிரொழித்தனன் ஐயனே! தீமையால் ஒழிதலில்லாத கொடிய துன்பத்தை யடைந்துள்ளேனுக்குத் தேவரீருடைய தரிசனத்தால் நன்மையுண்டாயதென்று கூறினன் எ - று

வேறு

ஆய காலையி லைங்கர னேவலால்
றூய மானந் துன்னுந்து முன்போந்தது
மேயி னன்றில் விண்ணா றுத்தேகினன்
சாய நீர்மை தணந்துயர் தேவனே.

(இ - ள்) அந்தச்சமயத்தில், விநாயகக்கடவுளுடைய கட்டளையினால்; புனிதமாகிய விமானமொன்று விரைந்து முன்னேவந்தது. பிரமசாரியின் தன்மையை விலகி, உயர்ந்த தேவனானவன் அவ்விமானத்திலேறி ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு சென்றனன் எ - று. (உச)

கண்ட யாவருங் கண்களி கூர்ந்துளங்
கொண்ட வோகையர் கூத்து நவிற்றினர்
மண்டு தீவினை மாற்றிய மாதவன்
புண்ட ரீகப்பொற் றாண்மலர் போற்றினார்

(இ - ள்) (அதனைப்) பார்த்த எல்லோரும் கண்கள் களிப்புமிகுந்து மனதிற் கொண்ட ஆச்சரியமுடையவர்களாகி (ஆனந்தக்) கூத்தாடினார்கள். நெருங்கிய பிரமகத்தியை யொழித்த பிருகுமுனிவருடைய தாமரைமலர்போன்ற பாதங்களை (அரசன் முதலிய நால்வரும்) துதித்தார்கள் எ - று (உரு)

வாரி லாவிய மாதவ னேதுவா
னரச னேயுனை யண்மிய டுத்திடும்
பிரம சாயை பெயர்ந்தது கண்டனை
யுரவு நோயு மொழிதிறங் கேண்மதி

(இ - ள்) சிரேஷ்டம்பொருந்திய பிருகுமுனிவர் கூறுவார் மன்னனே! உன்னை நெருங்கிப்பொருந்திய பிரமஹத்தி யொழிந்தது பார்த்தனையா? வலிய தொழுநோயும் (இனி) ஒழியும் வகையை (என் சொல்லை இனியேனும்) மதித்துக் கேட்பாயாக எ-று.

வேறு

முக்கண் வேழமு கப்பி ரானெனை முற்று மாளும டிப்பிரான்
பொக்க முற்றும கற்ற வல்லபு ராண மன்னவ கேட்டுளே
னக்க ணேசபு ராண மேன்மையி னுன் கனற்றுன வல்வினை
தொக்க நோயக ரும ருந்து நீயது சூழ்ந்து கேட்பின லாதிலை.

(இ - ள்) திரிநேத்திரங்களையும் யானைமுகத்தையுமுடைய பெருமானும், என்னைமுழுதுங் காக்கின்ற திருவடியையுடையவனுமாகிய விநாயகக்கடவுளுடைய, தீமைமுழுவதையுமொழிக்கவல்லதாகிய புராணத்தை யான் கேட்டிருக்கின்றேன். அரசனே! அந்தக்கணேசப்பெருமானுடைய புராணமேப்பாட்டினால் உன்னுடைய

கொடியவினையும் ஒழிந்தது நெருங்கிய நோய்க்கும் நீ அதனைச் சிந்தித்துக்கேட்டா லல்லாமல் வேறேமருந்து இல்லை எ - று. (உஎ)

கோத னுங்கிய வேத னங்கிரு டங்கை யேந்திய தம்பிரான்
பாத கஞ்சமெ வணங்கி யன்றுப ரித்த மேன்மைய தாமது
மாத வங்கள்பு ரிந்து வேதமெ வரம்பு கண்டவி யாதனும்
போத மாந்தவ மேனுத வோர்ந்துபு கன்ற தாகுமெ னக்குமுன்.

(இ - ள்.) திருமால் பிரமன் அக்கினியை யங்கையிலேந்திய சிவபெருமான் (ஆகியஇவர்கள்) திருவடித்தாமரையைப் பணிந்து முற்காலத்திலபெற்ற மேன்மை யுடையதாகும் அப்புராணமானது பெருந்தவங்களைச்செய்து வேதத்தின் கரையைக் கண்ட வியாதமுனிவரும், தாமரைமலரிலுள்ள பிரமதேவன் (தனக்குச்) சொல்லத் தெரிந்து முன் எனக்குச்சொன்னதாகும் எ - று (உஅ)

முந்து செய்திடு வேள்வி வீரனமு டிப்ப மாழ்கிய தக்கனுஞ்
சிந்தை யைந்தும டக்கி நின்றதி ருந்தி ருந்தவ முக்கல
வந்த னன்புக லப்ப ணிந்தனி யார்ந்து கேட்டா தீர்ந்தீர்ந்
திந்து சேகர னின்ன ருட்குரி லக்க மாயமகிழ் கூர்ந்தனன்.

(இ - ள்) முதலிற்செய்த யாகத்தை வீரபத்திரரழிக்க மனஞ்சாம்பிய தக்க னும், மனத்தையும் ஐம்பொறிகளையும் அடக்கி, விளங்கியதிருத்தமாகிய பெரியதவத்தை முக்கலமுனிவர்கூற, வணங்கி, அன்புபொருந்திக்கேட்டுத் தன்னைநெருங்கிய துன்ப மொழிந்து, சந்திரனையணிந்த சிவபெருமானுடைய திருவருளுக்கிலக்காகிக் களிகூர்ந் தனன். எ - று. (உகூ)

பவங்க ளேழினு மீட்டு பாவம ழிப்ப தும்பயில் யாக்கையி
னவங்க ணேயமுத லான தீமைய றுத்து வேட்டதளிப்பது
நவங்க ளாகவி ருங்க திச்சுக நாளு நாளுமு றுப்பதுந்
தவங்க ளாதிவ ளர்த்து முத்தித ரிப்ப துமமதன் கேள்வியே.

(இ - ள்) ஏழுபிறவிகளிலுந் தேடிய பாவத்தையொழிப்பதும், எடுத்ததே கத்தின் கெடுதிகள் நோய்கள் முதலிய தீமைகளையொழித்து விரும்பியதைக் கொடுப் பதும், நூதனநூதனமாக மிக்கபெருகிய சுகங்களை தினந்தோறும் பொருந்தச்செய் வதும், தவங்கள் முதலியவற்றைப் பெருகச்செய்து முத்தியளிப்பதும் அப்புராண கேள்வியேயாம் எ - று

தவங்களாதியென்றதில் ஆதியென்பதால் தானமுதலியனவுங்கொள்க. (கூ0)

வருண மாச்சிர மத்தொ ழுக்கின வ ழாத மாண்புடை யார்களே
யருளவி நாயகா பத்தி யோடவா காதை கேள்வியி லாரவுமே
மருவு வார்களொ ழுக்கி லாமரு வார்கள் சாதிபி றப்பினு
மொருவு சாங்கரா நன்மை செயயினு முற்ற தீமைய ரொன்பவே.

(இ - ள்) வருணாச்சிரம தர்மங்களிற் றவறாத மாட்சிமையுடையவர்களே கிருபைவாய்ந்த விநாயகரிடத்திற் பக்தியுடன் அவர்சரித்தத்தைக்கேட்பதில் ஆசையும் பொருந்துவார்கள் நல்லொழுக்கமில்லாதவர்கள் அதனையடையார்கள். சாதிபிறப்புக களாலும் நீங்கிய சாங்கரர் நன்மையைச் செய்தாலும் பொருந்திய தீமைசெய்தவர் களேயெனப்படுவார்கள், எ - று. (கூக)

ஆதலானுயர் மாதவம்பல வாற்றி யாச்சிர மத்தொடு
கோதிலாவரு ணத்தி னின்றுகு ழைந்த வன்பினவி நாயகர்
பாத தாமரை போற்று பண்பினர் பாங்கி னல்லது மாண்மிய
மோது நீர்மைய தன்று பண்புளை யாத லானுனக் கோதுதும்.

(இ - ள்.) ஆனபடியால் உயர்ந்த பலபெருந்தவங்களைச்செய்து குற்றமில்லாதவருணாச்சிரம தருமங்களினின்றுகுழைவாகிய அன்புடன், விநாயகக்கடவுளுடைய பாததாமரைகளைத் துதிக்குந்தன்மையுடையவர்கள் சமீபத்திலல்லது, அவ்விநாயகபுராணம் சொல்லுந்தன்மையதன்று நற்குணமுடையையாதலால் உனக்குச் சொல்லுவோம்.

அருளெ னக்குளிர் தூங்கு தீர்த்தத டமாடி வம்மென மன்னவன்
பிருகு தீர்த்தம ணைந்து தாழ்ந்துபி றங்கு ரும்புன றோய்ந்தெழுந்
துருவின் மல்கிய வீர மொற்றியு டுத்து லாந்தது பூசிமெய்
மருவு கின்றசங் கற்ப மோதிவ குத்த னன்பிணி மாய்ந்ததே.

(இ - ள்) கிருபைபோலக் குளிர்ச்சிவாய்ந்த நீரையுடைய தடாகத்திலமூழ்கி வருகவென்று பிருகுமுனிவர் கூற, சோமகாந்தராசன் பிருகுதீர்த்தத்தை யடைந்து (அதில்) இறங்கி, விளங்குகின்ற மிக்கநீரில் ஸ்நானஞ்செய்து எழுந்து, உடலின்மிக்க ஈரத்தைத் துடைத்து உலர்ந்த (வேறு) வஸ்திரமுடுத்து, திருநீறணிந்து உண்மை பொருந்திய சங்கற்பஞ்செய்துகொண்டு புராணசிரவணஞ்செய்ய ஆரம்பித்தனன். அவனுடையநோய் (அப்பொழுதே) ஒழிந்தது என்று. (௩௩)

நோயி னீங்கிய யாக்கை பன்முறை நோக்கி நோக்கியி ராவெலாந்
தீய சொற்பன மார்ந்து கண்கடி றந்து ளானென வுண்மகிழ்ந்
தாயு நூலரு மாத வன்புடை யண்மி யன்பொடு தாழ்ந்தெழுந்
தேயு நின்னரு ளெய்தி னேன்மிக வெய்த ரும்பய னெய்தினேன்.

(இ - ள்.) நோயினின்றொழிந்த தேகத்தைப் பலமுறை பார்த்துப் பார்த்து, இராமுழுதும் தீயசொப்பனங்கண்டு கண்களை விழித்துள்ளவனைப்போல மனங்களித்து, நூல்களை யாராய்ந்த அருந்தவமுடைய பிருகுமுனிவர் அருகிற்சென்று, அன்புடன் பணிந்து எழுந்து (கூறுவான்) பொருந்திய தேவரீருடைய திருவருளை யடைந்தேன். அடைதற்கரிய பெரும்பலனைப் பெற்றேன் என்று. (௩௪)

காத லாரும் புராண கேள்வியிற் கற்ப மாத்திர மேசெய
வேத மானபெ ரும்பி ணித்தொடர் யாவு நீங்கின வென்சொல்கே
னாத னேயுனை நண்ணி னார்க்குநண் ணாத மேதகு நன்பொருண்
மாத ராதல நாக பாதல மாக வைப்பினு மில்லையே.

(இ - ள்) ஆசைபொருந்திய புராணகேள்வியிற் சிறிதே செய்ய, குற்றமாகிய பெரிய பிணிச்சம்பந்தமுழுவதும் ஒழிந்தன (இவ்வற்புதத்தை) என்னென்று சொல்லுவேன். தலைவரே! தேவரீரை யடுத்தவர்களுக்குக் கிடைக்கரிய நல்லபொருள் சிறந்த தராதலத்திலும் நாகலோகத்திலும் பாதலலோகத்திலும், தேவருலகத்திலும் (ஒன்றும்) இல்லை. என்று. (௩௫)

ஆரு மற்றுறை யூரு மற்றெழி லாக்க மற்றரும் போகமற்
றேரு மற்றியல் பாக வூங்கிருந் தேனை வம்மென் வேயழைக்

தோரு மாநல முய்ந்து ளாய்க்குத வப்படு மெய்ப்பொரு ளாயினேன்
சாரு மாவிய லாதி லையினிச் சாற்றல் வேண்டும் புராணமே.

(இ - ள்) யாவரும், வாசஞ்செய்யும் ஊரும், அழகும், செல்வமும், அரிய போகங்களுமின்றித் தனியாக அங்கிருந்தவனை ஒருக்கவென விளித்துப் பொருந்திய சிறந்த நன்மைசெய்த தேவரீருக்குக் கொடுக்கப்படும் (காணிக்கைப்) பொருளாயினேனுடைய பொருந்திய உயிரல்லாமற் பிறிதில்லை இனி (விநாயக) புராணத்தைக் கூறவேண்டும் எ - று (௧௬)

என்ன மன்னனி யப்பி ருகுவி ரங்கி யோகைம ருங்கழைத்
தன்னை யன்னவ னன்னை மன்னவ னாகை யங்கையிற் றைவரத்
துன்ன தாதன மொன்று நல்கினன் சார்ந்து மைந்தனு முன்னொளி
தன்ன முமபுனை யாத பேரொளி தாங்கி னானறை யாடவன்

(இ - ள்) என்று கூறிச் சோமகாந்தன் (எதிரில்) நிற்க, தாய்போன்ற (கருணைவாய்ந்த) பிருகுமுனிவர் சந்தோஷமிகுந்து (அருகில்) அழைத்து, அவனுடலை அழகிய கையினாற்றடவி, தன்னுடைய ஆசனமொன்று கொடுத்து, அங்கு பொருந்தவும், முன் பிரகாசித்த பூமியையாண்ட மன்னனாகிய சோமகாந்தன் தன் தேகத்தையுமொவ்வாத பேரொளியைப் பெற்றனன் எ - று (௧௭)

கண்ட யாருமவி யந்து ளாரகவ லைப்பெ ருங்கடன் மூழ்கிய
தொண்டை வாயசுந் தன்மை யும்பொருள் சூழு மைச்சரும் வானமிழ்
துண்டு ளாரினு வந்து காதைபொ ருங்கு கேட்பவி ரும்பினார்
மிண்டு நோய்முனி வேந்த னிற்பிரி வித்த வண்ணமி தாகுமே

(இ - ள்) (அதனைப்) பார்த்த எல்லோருஞ் சந்தோஷித்தார்கள் பெரிய துன்பசாகரத்திலமிழ்ந்த கொவ்வைக்கனிபோன்ற வாயையுடைய சுதன்மை (யென்னும் அவன் மனைவி) யும், உண்மைப்பொருளை யாலோசிக்கும் மந்திரிகளும், தேவாமிர்தத்தைப் புசித்தவர்களைப்போல ஒன்றுகக் களித்து விநாயகக்கடவுள் சரிதையைக் கேட்க அவாவினார்கள் (சோமகாந்தனை) நெருங்கிய நோயினை முனிசிரேஷ்டரான பிருகுமுனிவர் பிரியச்செய்தவகை இதுவேயாகும் எ - று. (௧௮)

என்று சாலமொ ழிந்த சூதனவி யாத னென்னுமி ருந்தவற்
கன்று வேதனு ரைத்த வாறறி வாயெ னப்பிரு குப்பெய
ரொன்று மாமுனி சோம காந்தனு வப்ப வோதிய வண்ணமே
நன்று நாமவ லாற்றி னோதுத லுடு ஞனருளிடுறை

(இ - ள்.) என்று மிகுதியாகக்கூறிய சூதமுனிவர், பெருந்தவமுடைய வியாத முனிவருக்குப் பூர்வம் பிரமதேவர்கூறியவகையே அறியக்கடவாயென்று, பிருகு முனிவர் சோமகாந்தராசன் சந்தோஷிக்கக்கூறியவிதமாக நன்மைபொருந்திய ஏரன முறையாக விநாயக மான்மியத்தைச் சொல்லுவேனென்று திருவருளமிக்கவராய் ஆரம்பித்தனர். எ - று (௧௯)

சோமகாந்தனுய்தீர்ந்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - அ௨௯

# வியாசர்பிரமதேவனையடுத்தபடலம்.

பண்ணிய பெருந்தவன் பராசரப்பெயர்
நண்ணிய முனிவர னயந்தரு மைந்தனாய்த்
திண்ணிய விண்டுவே சிறப்பத் தோன்றினான்
விண்ணவர் வியத்தகு வியாத னென்னவே

(இ - ள்) பெருந்தவஞ்செய்தவனும் பராசரனென்னும் பெயர்பெற்றவனு மாகிய முனிவரனுக்குப் புதல்வனாக, வலிமைவாய்ந்த திருமாலே தேவர்கள் விரும்பத் தக்க வியாதமுனிவனென்னும் பெயருடன் சிறப்புற்றுப் பிறந்தனன். எ - று.

பூர்வம் மச்சகெந்தியென்பவள் கங்கையில் ஓடஞ்செலுத்திக்கொண்டிருக்கையில் அவ்வோடத்திலேறிச்சென்ற பராசரமுனிவர் அவளைக்காமுற்று அவளுக்குக் காப்பவாசத்தாலுண்டாயிருந்த துன்மணத்தைவிலக்கிப் பரிமளகெந்தியென்னும் பெயர் வழங்கும்படி நறுமணமருளி அவ்வோடத்திற் புணர்ந்தனர் அதனால் வியாதமுனிவர் தோன்றினரென்பது சரிதமாதலாலும், துவாபரயுகங்கடோறுந் திருமாலே வியாதனாகத்தோன்றி வேதங்களைப்பாகுபடுத்துவனென்பது நூலொழுக்காதலாலும் "பராசரப் பெயர் முனிவன் மைந்தனாய் விண்டுவே வியாதனெனத் தோன்றினன்" —என்றார்.

சுருதியை வரம்புறத் தொகுத்துச் செய்தபின்
சுருதியின் பொருள்களை மிருதி போலவே
பொருள்பட விளக்கிய புராண முந்தொகுத்
தருளொடு மொழிவதற் காரம் பித்தனன்

(இ - ள்) வேதத்தை யளவுபடச் சுருக்கிச்செய்தபிறகு, வேதத்தின் பொருள்களை மிருதிபோலவே பொருள்படும்படி விளங்கச்செய்த புராணங்களையுந் தொகைப்படுத்திக் கிருபையுடனே சொல்லுவதற்கு ஆரம்பஞ்செய்தனன் எ - று. (௨)

மருங்கமழ் கொன்றையார் மணிப்பொற் றேர்முரிந்
திருக்கவு மியாருமுன் னிறைஞ்சி யேத்தவு
முருக்கிள ரைங்கரத் தொருவன் சேவடி
கருக்கிய சிந்தையாற் றொழுந்து போற்றிலன்

(இ - ள்) மணம்வீசுங் கொன்றைமலர் மாலையணிந்த சிவபெருமானுடைய நவமணிமயமான அழகியதேரை (தன்னைப் பணியாமையால்) முரியச்செய்திருந்தும், எல்லோரும் முற்பட வணங்கித் துதிசெய்துவந்தும், அழகுவிளங்கும் ஐந்துதிருக்கரங்களையுடைய விநாயகப்பெருமானது செவ்விய திருவடிகளை, இறுமாந்த மனத்தாற் பணிந்து போற்றினானலன் எ - று. (௩)

வழிபடு கடவுளு மதித்தெ டுத்திடுஞ்
செழிபொருட் கேற்புடைத் தாய தெய்வமு
மழிவினுக் கழிவுசெய் தருளு மாமதம்
பொழிமுகத் தவனெனப் புந்தி தேர்ந்திலன்.

(இ - ள்.) வழிபடத்தக்கதேவனும், மதித்தெடுத்துக்கொண்ட சிறந்த பொருளுக்கு ஏற்புடைக்கடவுளும், தன்னைப்பணியாமைக்குத் தீமைசெய்தருளும் [illegible]

களைச் சொரியும் யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளென்று (அவ்வியாதமுனிவன் தன்) மனத்திற் றெளிந்தானில்லன். எ - று (௪)

ஆனையா னொருமருப் பைங்கை வார்செவி
யேகநா யகனரு ளெய்து மாறில
னாசையா லெடுத்தவொண் பொருளிற் சிந்தனை
மூகையாயத் தளர்ந்தனன் முடிவு தேர்ந்திலன்.

(இ - ள்) ஆனபடியால், ஒற்றைக்கொம்பையும் ஐந்து திருக்கரங்களையும் நெடியதிருச்செவியையுமுடைய ஏகநாயகராகிய விநாயகப்பெருமானது திருவருளை யடையும்வகை பெறாதவனாய், (தான்) ஆசையோடெடுத்த சிறந்த பொருளிலே, ஊமைபோல முடிவையறியாது மனத்தளர்ச்சியுற்றனன். எ - று (௫)

வேறு

சீந்தா நின்ற செம்மணி நாகத் தெனமேற
நீந்தா நின்று மந்திரம் வல்லோ னிலைசெய்தாங்
கேந்தா நின்ற வொருவ லைகக்கோ னினியாமே
காந்தா நின்ற காரண முள்ளங் கடிசெய்ய

(இ - ள்) (யாவரும்) விரும்புகின்ற மாணிக்கத்தை (உச்சியில்) உடைய சர்ப்பவேகமானது நீங்கிக்கொண்டு எழும்படி (மந்திரம் வல்லானொருவன்) மந்திரத்தை விரைவாக நிலைநிறுத்தியதுபோல, ஏந்துகின்ற ஒற்றைக்கொம்பினையுடைய விநாயகக்கடவுள் கோபிக்கின்ற காரணமானது வியாதமுனிவருடைய மனத்திற்குத் துன்பு செய்ய. எ - று (௬)

மடியோ பித்தோ வென்றோ னுள்ள மயல்செய்து
படியா தென்றே யையமுழந்தான் பருவந்தான்
பிடியா தொன்றுங் கண்டில னல்லே பெயர்வுற்றுக்
கடியார் கஞ்சப் பூவணை யான்பொற் கழலார்ந்தான்

(இ - ள்) மடியோ பித்தமோ அப்பொழுது என்மனத்தை மயக்கியவகை ஏதுவென்று சந்தேகித்தான், துன்பமடைந்தான், (எதனிடத்திலும்) சிறிது நம்பிக்கையுங்காணாது விரைந்து அவ்விடம் விட்டு நீங்கி வாசனைபொருந்திய தாமரை மலர்ப்பீடத்தையுடைய பிரமதேவனது அழகிய பாதங்களையடைந்தனன். எ - று

அன்பு துளும்பத் தண்டென வீழ்ந்தா ரணமொழித்
துன்ப நிறைந்த வுள்ளமு கத்திற் சுடர்கிறப
முன்புற விட்ட வாதனம் வைகி முனிவேந்த
னென்பெற வந்தாய் சொல்லென வேதற் கிதுசொன்னான்.

(இ - ள்) அன்பானது துளும்பும்படி தண்டாகாரமாக வீழ்ந்து வேதமொழிகளாற்றுதித்து வருத்தமிக்குடைய மனமானது முகத்திலே நன்குவிளங்க, தனக்கு முன்னர் இடப்பட்ட பீடத்திலிருந்து, யாதுபெறக்கருதிவந்தனை? அதனைச் சொல்கவென (ப்பிரமன்கேட்க) முனிவர் தலைவனான வியாதமுனிவன் பிரமதேவனுக்கு இதனைக் கூறினன். எ - று (௮)

நாத்திக ரேயாய் நான்மறை நிந்தை நவிலவாரா
யாத்தனு ளாத்த தத்தமொ ழுக்கா சாரங்க
ணீத்தவ ரேயாய் நீடுல கத்தோர் நிறையினறிப்
போத்துநி றைந்தா ரன்னது தீர்க்கும் பொருணாடி

(இ - ள்) பெரிய நிலவுலகத்திலுள்ளவர்கள் நாத்திகர்களாய், நான்குவேதங்களையும் நிந்திப்பவர்களாய், கடவுளருளிய தங்கடங்களுக்குரிய ஒழுக்காசாரங்களையொழித்தவர்களாய்க் குற்றமிகுந்தார்கள். அதனைத்தீர்க்கும் பொருளைத்தேடி எ - று

இதுமுதலிரண்டுபாடல்கள் குளகம்

நிறை - ஆண்மைக்குணம் நான்கனுளொன்று அவை அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி யெனப்படும் (கூ)

செய்வன செய்யா தொழிவன வன்றோ தெரிவெய்தி
யுய்வன நாடி யோங்கு கதிக்க ணுறுமாறே
பொய்வகை தீர்ந்த புராண மனைத்து மும்புரையிலவோய
கைவளர் நெல்லி போலெளி தாக்குங் கடன்பூண்டேன்.

(இ - ள்) குற்றமில்லாத பிரமதேவரே! செய்யத்தக்குவனவும் செய்யத்தகாது விலக்குவனவும் (இவையென) அவர்கள் தெரிந்துகொண்டு உச்சீவிக்கும் வழிகளைத் தேடி உயர்பதவியை யடையும்வகையே, பொய்யமாக்கமொழிந்த புராணங்களையெல்லாம், கையில் உயர்ந்த நெல்லிக்கனிபோல எளிதாக (விளங்க) ச்செய்யுங் கடமையை மேற்கொண்டேன் எ - று

செய்வனவென்றது விதித்தனவெனவும், செய்யாதொழிவனவென்றது விலக்கியன வெனவுங்கொள்க (௧௦)

நித்திய மேனை மித்தியம் யாக நிகழுமன்று
வித்தகு கன்மம் யாவுநி றைந்த வெழில்வேதக்
கொத்தினுண் மேன்மேற் கைவளர் புந்தி குழைவுற்றுப்
பித்தின னேனெ னினினி செய்கேன் பிழைகாணேன்

(இ - ள்) நித்தியம் - நைமித்திகம் - யாகம் - செய்யத்தக்கதிருமணம் இந்தத் தகுதியாகிய கருமவிதிகளெல்லாம் நிறைந்துள்ள அழகிய வேதத்தின் கூட்டத்தில் மேன்மேலும் மனங்குழைந்து வெறிபிடித்தவனானேன் இனி யாது செய்குவேன்? தவறினைக் காணகிலேன். எ - று

நித்தியம் - தினமுஞ் செய்யக் கடமைப்பட்டுள்ள கருமங்கள். நைமித்தியம்- ஒவ்வொரு நிமித்தம் பற்றிச் செய்யுங் கருமங்கள் (௧௧)

பூரண மான வென்னறி யாமை பொடிசெய்யுங்
கார்ண மோது வேறெவர் வல்லார் கருதென்று
நாரண னன வியாத னுரைப்ப நனறுளளி
யாரண னென்னை புன்னகை கொண்டு தறைகின்றான்

(இ - ள்) நிறைவாகிய என்னுடைய அறியாமையை நீறுசெய்யும் வகையை யோதுக. வேறே (அவ்வாறோத) வல்லவர் யாவர்? (உள்ளத்தில்) கருதுகவென்று, விஷ்ணுவின் அபராவதாரமாகிய வியாதமுனிவன் கூற, பிரமதேவனானவன் நன்றாக யோசித்துப் புன்சிரிப்புடன் பகல்கின்றனன். எ - று (௧௨)

வேறு

அநாதியே யமல னாகி யழிவினா ரழிவு செய்யும்
விநாயக னருளின் றாயின் மெல்லிய கரும மேனுந்
தனாது கைக்கூட லின்றிச் சாம்புவன் புத்தி கூர்மை
மனாதிமூன் வலிமிக் குள்ள வரம்பெறு தலைவ னேனும்

(இ-ள்) அநாதியாகவே நின்மலராகி, தம்மைப் பூசியாதவர்கட்கு இடுக்கண் விளைக்கும் விநாயகக்கடவுளுடைய திருவருளில்லையாயின், புத்தி நுட்பமும் மனவாக்குக்காயங்களின் வலிமையும் மிக்குள்ள மேன்மைபெற்ற ஒருவனாயினுஞ் சாமானிய காரியமாயினுந் தனக்குக் கைகூடுதலில்லாது மனஞ்சாம்புவான் எ-று.

மனாதியென்றதால் வாக்கையுங் காயத்தையும் உடனெண்ணப்பட்டன (கூ)

பறவைசட் கரசன் மேனாள் பணிவிசும் பமுதங் கொண்மார்
செறுநர்மிகு வலியா லைங்கைச் செம்மலை வணங்கா தேகி
நறவுமிழ் துளபத் தண்டார் நாயகன் மொழியால் வெல்ல
வறநினைந் தாதி யானா னப்பிறை தருக்குச் கொண்டு

(இ-ள்) பறவைகளுக்கெல்லாம் அரசனாகிய கருடன் முற்காலத்திற் குளிர்ச்சி பொருந்திய ஆகாயத்தினின்று தேவாமிர்தத்தைக் கொண்டுவரும்படி, பகைஞரை வெல்லும் பேராற்றலால், ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக்கடவுளைப் பணியாது சென்று, தேன்சொரியுந் தண்ணிய துளவமாலையையணிந்த விஷ்ணுமூர்த்தி தன் மொழியால் வெல்ல, சருமத்தைக்கருதி (அதற்கு) வாகனமாயினன் எ-று.

பறவைகட்கரசன் துளபத்தண்டார் நாயகன் வாகனமானான் என்றது—பூர்வம் காசிபமுனிவர் மனைவியர் பதின்மூவரில் கத்துரு விநதையென்னும் இருவரும் தமதழகாற் றருக்கி அழகில்லாள் கறை யிருப்பதென்று தீர்மானித்துக்கொண்டு காசிபரை வினவ, காசிபர் கத்துருவே சிறந்தவளென்றுரைப்ப விநதை சிறைப்பட்டு, தன்னைச் சிறைதவிர்க்கும்படி கத்துருவை வேண்ட, அவள் விண்ணுலகிலுள்ள அமிர்தத்தை வருவித்துக்கொடுப்பின் நீ சிறைநீங்குவையென, விநதை காசிபரருளாற் கருடனை மகனாகப்பெற்று அவனுக்கு முறையிட, கருடன் விண்ணிடையடைந்து ஆங்கிருந்த காவலரை வென்று அமுதங்கொண்டு திரும்புகையில், திருமால் அவனையெதிர்த்து இருபத்தொருதினங்கள் போர்புரிந்தும் அவன் தோல்வியடையாமையின் வஞ்சனையால் வெல்லவேண்டுமென்றுட்கொண்டு, புள்ளரசே! உன் வலிக்கு வியந்தேன், நீ வேண்டும் வரத்தைக் கேட்டுக்கொள் என, கருடன் விண்டுவே! உன் வலிமைக்கு மனங்களித்தேன் நீ விரும்பிய வரத்தைப் பெறுகவென்றனன்; திருமால் இதுவே சமயமென்றுட்கொண்டு, நீ காசிபன் மதலையாயச் சொற்பிசகாதவனாயின் நீ யெனக்கு வாகனமாகுகவென், கருடன் முகூர்த்தகாலம் யோசித்து, வார்த்தைபிசகாமல் அங்ஙனமேயாகுகவென்று விடைகொண்டு விநதையையடைந்து அமுதையளித்து அவள்சிறையை யகற்றி விண்டுவுக்கு வாகனமாயினனென்பதாம் [விநதைக்குச் சுபர்ணையென்றும் பெயர்] இதனை

காஞ்சிபுராணம்

ஐம்புள் வேந்தனை வீர மகிழ்ந்தன
னென்பு டைவரங் கொள்ளென வீங்கிவ
னும்பெ ருந்திறற் குமகிழ்ந் தேனமற் றென
றன்பு டைவங் கொள்ளெனச் சாற்றினன்

மாய னம்மொழி கேட்டு மகிழ்ச்சியிற
றூயை யோதிய சொற்றவ ருமெனி
னீயெ னக்கு நெடுந்தகை யூதியா
யேயு மிவ்வரம யானகொள நல்கெனருன்

ஆர்த்தி கூர்தர வம்மொழி கேட்டொரு
மூர்த்த மெண்ணி யுயிர்த்து மொழிந்தமெய்
வார்த்தை யிற்பிறழ் வஞ்சியற் ருகெனச
சீர்த்தி யாளன விடைபெற்றுச சென்றனன — என்பதனுனறிக (க௪)

உருத்திரக் குரிசில பாங்க ருற்றவீ ரியத்திற றேனுமிக
கருத்தினுங் கடத்தன முற்றுக கருங்கடல கடக்கு மாற்றல
செருத்தகு மனுமான மனமேற சிலையிரா கவனைத் தாங்கிப்
பெருத்தவுட டருக்கி னுமேல பிழைநோய பல்கா லுற்றுன

(இ - ள்) உருத்திரபகவானிடத்துப பொருந்திய வீரியத்தினுற்றேனறி, மன திறைலுந தாணடுதல முடியாத கரிய கடலினைக கடக்கும வல்லபமும போாவலிமையு முடைய அநுமான விசேடித்த மனகாவத்தால (ஐங்கரக்குரிசிலை யடிபரவாது) பூமி யினமேல், கோதணடமேந்திய இராமமூர்த்தியைச சுமந்து பலமுறை துனபநோயை யடைந்தான. எ - று (க௫)

திருமறு மாரப னுன திரணடவார சிலையி ராமனா
பொருவலி வாலி முனனாப போாத்திறந தெளிய னுை
னிருநிலத தனைக ரினனு மிலகிய வொற்றைக கோடுத
தருவினை யடுத்த லினறித தருககினுற றெருமந தாரே.

(இ - ள்) திருமறுமாரபனுன திரட்சிவாய்ந்த கோதணடமேந்திய இராம மூர்த்தி (விநாயகபூசை செய்யாது) போாபுரியும வல்லபமுடைய வாலி (எனனும் வானரவீரன) முனனே போர்வல்லபத்திற றேல்வியடைந்தனன பெரிய பூமியில் இன்னும எணணிறந்தவாகள ஒற்றைக்கொமபினையுடைய கறபகத்தருவை யொத்த கணபதியை யாசிரயிககாமல் இறுமாப்பால துனபுற்றாரகள. எ - று (க௬)

திருமறுமாரபன் - திருமகளையும் சிவறசமெனனும மறுவையுமுடைய மார் பையுடையவன

பிரணவ முனனா வைகும பெருமறை தொகுத்த காலை
பிரணவ முன்னே தாமற பேசுத லினமை யாலே
பிரணவ மொழியாற றனனைப பேசினை யெனவுட கொண்டு
பிரணவப் பொருளா யுளளான பேரிடா காத்தா னனறே

(இ - ள) பிரணவமானது முன்னேவிளங்கும் பெரியவேதங்களைத தொகை செய்தகாலத்தில், பிரணவத்தை முதலிற்சொலலாமல் வேதமோதுதலில்லாமையால், பிரணவசபத்தால தனனைத்துதிசெயதனையெனறு திருவுளளஞ்செயது, அப்பிரண வத்தின பொருளாகிய கணேசப்பெருமான பெரிய துனபங்களை (வரவொட்டாமற்) காத்தனன. எ - று. (க௭)

கருதிக ளுலக்குக கோதத் துணிந்தாண் மயேசன் றானுங்
கருத்தன முற்று விக்குங் காரணங் குறித்தன றேகொற்

சுருதியின முனன ரநதத தொனமனு வைததான போனு
முருவமு மிடாதீப பானுக கோமெனு மொழியே யாமால.

(இ - ள்) வேதஙகளை உலகததாருககுக் கூறத்தொடங்கிய காலத்தில், சிவ பெருமானுந் தானகருதியதை முடிவுபெறசசெயயுங காரணத்தைக்குறிததுததானே வேதாரமபததில அநதபபழமையான பிரணவததை அமாததினனபோலும விக்கினங்களை விலக்கும விநாயகபெருமானுக்குத திருவுருவமும் ஓமெனறு சொலலபபடும அபபிரணவமேயாகும. எ - று (கஅ)

எததகு தொழிறகு முனனா யாவரு மிறைஞச நிறகு
மத்தகு தேவ தேவாக காலைய மாகை யாலே
யுத்தம வோஙகா ரததை யுரைககுமந திரஙக டோறும
வைததனா முனனாத தொன னூன மரபறிந தோாக ளெலலாம.

(இ - ள) எவவகைய தகுதியுடைய கருமஙகளுஞ செயவதற்கு முறபட, எலலோரும பணிசெயய விளஙகும அநதத தகுதிபபாடடினையுடைய தேவதேவனாகிய விநாயகபெருமானுககு வாசஸதானமாயுளளபடியால, பழமையாகிய நூனமரபினை யுணாந்த பெரியோாகளயாவரும உததமமாகிய ஓஙகாரததை, சொலலுகினற மநதிரஙகளிலெல்லாம் முதலிற பொருததினாாகள. எ - று (ககூ)

அவனவ ளதுவாய் நினறே யனைததையு முடிககின் றானு
மவரவா தியானித தேதத வவரவாக கருளசெய வானு
மவரவா மனதிக கெடடா வருமபொரு ளாயி னானு
மவிாமறை யினனு மன்மை மொழியினு லளககின றானும

(இ - ள) அவன அவள அது (எனனும மூ) வடிவாக விளஙகியே எலலாச் செயல்களையும முடிக்கின்றவனும, அவரவாகள தியானஞ்செயது துதிததலால அவரவாகளுககுத திருவருளசெயபவனும, அவரவாகளுடைய மனமுதலியவறறிறகதீதமான அரியபொருளாகவுளளவனும, விளஙகுகினற வேதங்கள் இன்னும அனமைச சொலலினால அளவிடபபடுபவனும எ - று

இதுமுதல மூனறுசெயயுளகள் குளகம

அவன அவள அது எனபவறறில முதலிரகூறியவிரணடால ஆணபெண் ணெனறும உயாதிணையெனறும,பினனாககூறியதனால அஃறிணையெனறுஞ்சுட்டினா

அனமைமொழியினு லளககினறானெனறதை, "திருவிளையாடறபுராணததில "அலலை யலலையீ தெனமறை களுமனமைச சொலலி னறறுதித திளைக்குமிச சுநதரன"—எனவருவதனானுமுணாக (உ0)

இநதிர னனன வூாதி யிலககுமி மாாபன கீறறுச
சநதிரன் முடியில வேயநத தழலுமிழ சூலத திணைகை
யநதண னேனைத தேவ ரனைவரு மாணை நீவாா
சுநதர மலாததாள் போறறித தொழுமுத லாயி னானும

(இ - ள) இநதிரனும, அனனவாகனனாகிய பிரமனும, திருமகளைத திருமார்பிலுடைய திருமாலும,சநதிரதுண்டததைத திருமுடியிலணிநத தீயைச்சொரியுஞ் சூலப்படையேநதிய வலியகையையுடைய சிவபெருமானும், பிறதேவாகளும் எல்லோ

ருங் கட்டளைகடவாது அழகிய தாமரைமலர்போன்ற திருவடியைத் துதித்துவணங்கும் முதற்கடவுளானவனும். எ - று.

அந்தணன் - பிராமணன் - என்பெபிராமணனென்றது தேவர்கட்கெல்லாம் அந்தணனான சிவபெருமானை இதனை,

காஞ்சிப்புராணம்.

"பிராமண னீயே கடவுளர் தம்முட் பிறருகார் வேனையோர் தம்முட்
பிராமணன யானே பிராமணன் றனக்குப் பிராமணன் கதியுனை யிகழ்வோன்
பிராமண னல்லன் றனக்குல தெய்வம் விண்டுபின் னென்றனைத் தொழும்ப
பிராமணற் கிரண்டும் பயப்படா நிரயம் புகுவனென் றுயாமறை பேசும்."—என பதனுனறிக (உக)

ஒன்றனைச் செய்கின் றானு மொன்றனை யொழிக்கின் றானு
மொன்றனை விடுத்து வேறே யொன்றனை முடிக்கின் றானு
மன்றினாக கிடாசெய் வானு மைந்தொழிற் கரனார் போலத்
துன்றினாக் கிடாக் மாபபத் தோன்றிய கணேச னென்ப.

(இ - ள) (செய்யக்கருதிய) ஒரு கருமத்தைச் செய்கின்றவனும், ஒரு கருமத்தை நீக்குகின்றவனும், ஒன்றை விலக்கி மற்றொன்றை முடிக்கின்றவனும், தன்னைப் பணியாதாக்கு இடர் விளைப்பவனும், (சிருஷ்டி முதலிய) பஞ்சகிருத்தியங்களுக்குச் சிவபெருமானைப்போல, தம்மை யடைந்தவர்கட்குத் துன்பங்களை யொழிக்கத் திருவவதாரஞ் செய்த கணேசமூர்த்தியென்று (அறிஞர்கள்) சொல்வார்கள். எ - று (உஉ)

அன்னவன் பாதப் போதை யாக்கையே மொழியே நெஞ்சே
யின்னவற் றொன்றி னானு மிதமுறப் பணிந்தா யல்லை
தனைனிக ரில்லா விதத்தைத் தருக்கின்ற சுயம்பா வித்த
வுன்னவ மதிப்பி னாலே யுறுதுய ருழந்தா யங்கே

(இ - ள) அவ்வகைய கணேசப்பெருமானுடைய திருவடித்தாமரையைக் காயமும் மனமும் மொழியுமாகிய இவற்றுளொன்றினாலேனும் இதமுண்டாகும்படி பணிந்தாயல்லை தனக்குத்தானே யொப்பாகிய விதியாகாவத்தாற் சுயம்பாவித்த உன்னுடைய அவமதிப்பினாலே பொருந்திய துயரத்தை யடைந்தாய். எ - று. (உ௩)

ஆயிரங் கோடி கற்ப மாரவமோ டேக்கி னாலும்
பாயிரந் தானு முற்றப் பண்ணுதல் கூடா தாகு
மாயிரும் புவனம் போற்றும் வாரண முகபபி ரானைப்
போயிரந் தருளும் வண்ணம் பூசனை புரிந்தி டாயேல்.

(இ - ள.) பெரிய விசாலமான உலகினர் துதிசெய்யும் யானைமுக விநாயகப் பெருமானையடைந்து யாசித்துத் திருவருள்புரியும் வகையாகப் பூசைசெய்யாயாகில் (விநாயகர் திருவருளின்றி) ஆயிரங்கோடி கற்பகாலங்கள் ஆசையோடு முயன்றாலும் பாயிரமும் முற்றச்செய்தல் (உன்னால்) கூடாததாகும். எ - று (உச)

வேறு

சுமுகரே யேக தந்தரே கபிலர் சூழ்கெசு கன்னரே நாக
மிமிழ்தரு மிலம்போ தரரெழில் விகட ரிலகிய விக்கின ராச

ரமைவர்சூழ்ந் தேத்துங் கணாதிபர் தூமகேதுநன் றருள்கணாதிபர்க்
குமிழொளிய பாலசந்திரர் தானமூற்றிருந் தொழுங்கசா னனரே.

(இ - ள்) சுமுகர் - ஏகதந்தர் - கபிலர் - (அடியவர்கள்) சூழ்கின்ற கெசகன்னர் - நாகமானது விளங்குகின்ற இலம்போதரர் - அழகிய விகடர் - விளங்கிய விக்கினராசர் - ஞானிகள் சூழ்ந்து துதிசெய்யுங் கணாதிபர் - தூமகேது - நன்மைகொண்ட திருவருள் செய்யுங் கணாதிபர் - ஒளிசிந்தும் பாலசந்திரர் - மதப்பெருக்கானது ஊற்றெடுத்தொழுகுங் கசானனர் எ - று

இதுமுதலிரண்டு பாடல்கள் ஒருதொடர் (உரு)

வக்கிர துண்டர் விளங்கிய சூர்ப்ப கன்னரே ரம்பரான வரங்க
டொக்கருள் கந்த பூர்வரென் றேவ சொல்லிய பெயர்ப்பதி னாறும்
மிக்குரைத் திடினுங் கேட்பினும் வித்தை விவாகம்வேட் டெழும்பிர வேச
நிக்கம மெப்போர் யாகமா திகளு நினைக்குமுன் முற்றுறும் பிள்ளாய்

(இ - ள்) வக்கிரதுண்டர்-விளங்கிய சூர்ப்பகன்னர் - ஏரம்பர் - சிறந்த வரங்களைத் தொகுதியாகவருளுங் கந்தபூர்வர் என்று சொல்லப்பட்ட பதினாறு திருநாமங்களையும் விசேடமாகச் சொன்னாலும் (பிறர் சொல்லக்) கேட்டாலும், வித்தை விவாகம் விரும்பியுண்டாகின்ற முயற்சி வியாபாரம் மோதுகின்ற போர் யாகம் முதலியனவும் எண்ணுவதன் முன்னரே (கைகூடி) முடிவுபெறும், பிள்ளாய்! எ - று

நிகமமென்றது நிக்கமமென விரிந்தது (உசா)

ஆதலா லவனைப் பூசனை யாற்றி யறிவினை யழித்திடு மைய
லேதநீத் தெண்ண மினிதுற முடியா விரும்புக ழெய்துக வென்றுன்
வேதனீ தோதவுள் ளத்தே யென்று வியாதமா தவனுள மகிழ்ந்து
போதமே வடிவாங் கணேசனைப் பூசை புரிவதெவ் வாறென விரந்தான்.

(இ - ள்.) ஆனபடியால், அவ்விநாயகப்பெருமானைப் பூசைசெய்து மதியைக் கெடுக்கும் அறிவின்மையாகிய துன்பத்தைவிலக்கி, உன்கருத்தை இனிமையாகமுடித்துப்பெரிய கீர்த்தியைப்படைவென்று (பிரமதேவன்) கூறினன் பிரமதேவன் இத்தனைச்சொல்ல, பெருந்தவமுடைய வியாதமுனிவன் உண்மைதானென்று மனமகிழ்ந்து, ஞானமே சுரூபமாகிய விநாயகக்கடவுளை யெவ்வகையாகப் பூசைபுரிவதென்று யாசித்தனன் எ - று

முடியா - முடிந்து இது செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் (உஎ)

இதுமலர்த் தவிசின் வீற்றிருந் தருளும் பிரமனை வியாதமா முனிமுன்
கதுமென வடுத்த வாற்றினிச் சோம காந்தனே யயன்முனி தனக்கு
விதுவணி சடிலத் தைங்கரப் பெருமான் வியத்தகு மந்திரஞ் செவியின்
மதிதரப் புகன்ற மரபினை யென்று வழங்குவன் பிருகுமா தவனே.

(இ - ள்) தாமரைமலர்ப்பீடத்தின்மேல் எழுந்தருளியிருக்கும்பிரமதேவனை, பெருமைதங்கிய வியாதமுனிவன் முற்காலத்தில் விரைந்து அடுத்தவகை யிதுவாகும். சோமகாந்தராசனே! பிரமதேவன் வியாதமுனிவனுக்கு, சந்திரனையணிந்த சடையையுடைய ஐந்துகரங்களமைந்த விநாயகப்பெருமானுடைய துதிக்கத்தக்க மந்திரத்தைச்

செவியினிடத்திற் பொருந்த உபதேசித்தகைகையை இனிக் கேட்பாயாகவென்று பெருந்தவசியாகிய பிருகுமுனிவன் கூறலாயினன் எ - று (௨௮)

வியாசர் பிரமதேவனையடுத்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௮௫௫

# வியாசருபதேசம்பெற்றபடலம்.

புயாசலத் தரவ மாலை பூண்டபுண் ணியன்மே போற்ற
கயாசுரன் றுவி யுண்ட கண்ணுதற் பெருமா னீன்ற
தயாநிதி கணேச னென்னுஞ் சாமியா கமத்திற் றான்
வியாத்தனே சத்த கோடி வியன்மனு விளம்பப் பட்ட.

(இ - ள்) புனிதமாகிய வியாசமுனிவனே! புயமாகிய மலையின்மேற் சர்ப்ப மாலையணிந்த புண்ணியசொரூபியும், யுத்தஞ்செய்யவந்த கயாசுரனுயிரைப்பருகிய நெற்றிக்கண்ணையுடையவருமாகிய சிவபெருமான் ஈந்தருளிய தயாநிதியாகிய கணேசமூர்த்தியென்னுங் கடவுளது ஆகமத்தில், எழுகோடி மகாமந்திரங்கள் சொல்லப்பட்டுள்ளன எ - று

சிவபிரான் அரவமாலைபூண்டது

கருடனுடைய தொந்தரவைச் சகியாத சர்ப்பங்கள் சிவபெருமானைப் பூசை செய்து அவர் திருவருள் பெற்று அவருக்கு ஆபரணங்களைப்போல அவ்வெம்பெருமானுடைய கட்டளையால் அவருடைய திருமேனியில் ஒசிக்கலாயின. பின்னொருகாலத்தில் விண்டுவோ டங்கடைந்த கருடனைக்கண்டு சுகமாவென அச்சர்ப்பங்கள் வினவினவென்பதாம். இதனை,

காஞ்சிப்புராணம்

விதிமுறைச்சிவபூசனையாற்றிமால்விடைக்கொடிப்பெருமானினை
புதியபூங்கழலருச்சனைப்பேற்றினுறைபுள்ளிறைமிடலெய்தி
யதிரவுறுத்தெமையலைத்திடவெரீஇயினமடைக்கலம்புகுந்தேயயாங்
கதியெமக்குவேறிலையென்றிரத்தலுங்கண்ணுதலருள்கூர்ந்து

பன்னகங்களைப்பணியெனத்தாங்கினன்பன்னகாபரணன்ற
னின்னருட்பெறுமதனையானமற்றவையெந்தைபாலிரியோங்கு
துன்னுவெம்பணைக்கரழலுழைக்கலுழனேசுகங்கொலென்றனசாமே
பன்னுமேன்மையினவிறையினவிமொழிபாலெலாமெடுத்தோதும் — எனவருதலறிக.

அன்றியும், சிவபெருமான் பிக்ஷாடனராகவும் திருமால் மோகினியாகவும் தாருகவனமுற்று அம்முனி மங்கையர் கற்பையும் அம்முனிவர் தவத்தையு மழித்ததனையின், அவர்கள் சினந்து அபிசாரவேள்வி செய்து அதிற்றோன்றிய புலி மான் முதலியவற்றை விடுத்து, அவைகள் எம்பெருமானைத் துன்புசெய்யாமையினே அதினின்று தோன்றிய எண்ணிறந்த சாப்பங்களை இறைவர்மேல் விடுப்ப, இறைவர் அவற்றைப் பற்றிக் கருடனுக்கஞ்சி நம்பாலிருக்குங் கட்செவிகளோடிருக்கவென்று அணிந்து கொண்டதும் ஓர் காரணமாம் இதனை,

### கந்தபுராணம்.

"ஏந்திய பின்னர் வேள்வி யெரியதற் கிடையே யெண்ணில்
பாந்தளங் கொழுந்து தீயோர் பணியினாற் சிறந்து கொண்டு
போந்தன வற்றை மாயோன் புள்ளினுக் கருளித் தன்பால்
சேர்ந்தோர் பணிக ளோடுஞ் செவ்விதிற் பூண்டா னெங்கோன்"—என்பதனாலுணர்க.

### கயாசுரனுயிருண்டது

யானைவடிவுடைய கயாசுரனென்னும் அசுரனொருவன் சங்கரனை வழிபட்டு வலிமிக்கோனாய்த் தேவர் முனிவர்களைத் துன்புறுத்த அவர்கள் சிவபெருமானை யடைக்கலம்புகுந்து நிற்ப, கயாசுரன் அவர்களிருந்த மணிகர்ணிகையென்னு மிடத்தை யடைந்து ஆர்ப்பரித்து அவர்களை விளிக்க, இறைவர் உக்கிரப்பெருவடிவேற்று அவ்யானையைத் தள்ளி அதன் தோலையுரித்து ஆடையாக வணிந்தனரென்பது சரிதம். இதனை,

### கந்தபுராணம்

"மதித்த வேழமாந் தானவன் வருதலும் வடவை
யுதித்த வனையுமச் சுற வெரிவிழித் தொருதன்
கதித்த தாள்கொடு தள்ளவே கயாசுரன் கவிழ்ந்து
பதைத்து வீழ்தலு மிதித்தனன் சிரத்தையோர் பதத்தால்.

ஒருப தத்தினைக் கவானுறு திருக்கரத் துகிரால்
வெரிந்நி டைப்பிளந் திருதாள் புடைமேவக்
குருதி கக்கியே யோலிட வவுணர்தங் குலத்துக்
கரியு ரித்தனன் கண்டுநன் றுமையுங் கலங்க.

ஆரு நாயக னஃதறிந் தயிர்த்தொகை யனைத்தும்
வாளி லாதுகண் ணயாவது மாற்றுதன் மதித்து
நீளி ருங்கரி யுரித்திடு மதளினை நிமலன்
றோளின் மேற்கொடு போர்த்தன னருள்புரி தொடர்பால்"—என்பதனாலுணர்க. (௧)

அவற்றுளுஞ் சிறந்த தாகு மாறெழுத் ததனுண் மேலாந்
தவற்றினை யறுக்கு மேகாக் கரமிது தன்னை நினைக்க
கவற்றிய மம்மர் தீரக் கரைகுதும் வாசத் தேனோ
றுவமுறு பூந் தடத்து ளாடித் துணைந்தினி வருதி யென்றான்.

(இ-ள்) அவ்வேழுகோடி மகாமந்திரங்களிலும் (ஆறெழுத்துக்களாகிய) ஷடக்ஷரமந்திரஞ் சிறந்ததாகும் அவ்வாறெழுத்துக்களிலுங் குற்றத்தினையொழிக்கும் ஏகாக்ஷரமந்திரம் மேம்பட்டதாம். இதனை உன்னையூடிய மயக்கமொழியச்சொல்லுவோம் வாசம்பொருந்திய மதுரமாகிய தேனைச்சிந்தும் மலர்கள் பொருந்தியதடாகத்தில் மூழ்கி ஈண்டு விரைந்து வருகவெனப் பிரமதேவனை கூறினன் எ-று. (௨)

விதிப்படி நறுநீ ராடி மேவிய வியாதன் காதிற்
றுதிப்பவர்க் கின்ப நல்குந் தோடவிழ் மலரான் கங்கை
நதிப்புனல் வேணி வைத்த நாற்றவாய்க் களிற்றின் பாதம்
பதிப்புறு முளத்தா னீக்கைப் பண்ணிமந் திரத்தைச் சொன்னான்.

(இ - ள்) கடவுள் வந்தனென்று மதித்து, மனவுறுதிப்பாட்டுடன் தண்டஞ் செய்து, அடியேன் அறிவினிடத்தில் எழுந்தருளியிருக்க வேண்டுமென்று யாசித்தால், மலடியாயிருந்தவள் தான் வருந்திப்பெற்ற குழந்தைக்காக மனமிரங்குவதுபோல, அசையாநின்ற செவியையுடைய யானைமுகக்கடவுள் அடிக்கடி பிரசன்னராய் எல்லா வரங்களையும் (நீ விரும்பியவண்ணமே) கொடுப்பார் எ - று

வதிக என்றும் வினைமுற்று ஏவலுணர்த்த வியங்கோள் (எ)

இவ்வகை மடங்க லூர்ந்தோன் பூசை யாற்றிற்
செவ்விய சித்தி யெட்டுஞ் செங்கையி னெல்லி யாகுங்
கவலைநோய் பல்லு நீங்குங் கருதிய கரும முற்று
மவ்விய மகன்று சிந்தை யறங்கொளு மதுவே யன்றி

(இ - ள்) இவ்வண்ணமாகச் சிங்கவாகனமேறிச் செலுத்தும் ஏரம்பமூர்த்தியாகிய கணேசப்பெருமானது பூசையைச்செய்தால், செவ்விய அட்டமாசித்திகளுஞ் சிவந்த கையிலுள்ள நெல்லிக்கனிபோலக் கைகூடும்; துன்பநோய்களெல்லா மொழியும், எண்ணியகாரியங்கள் முடிவுபெறும், மனத்திற் பொறாமை விலகி தருமங் குடிகொள்ளும், அவ்வளவோடல்லாமல் எ - று.

சித்தியெட்டு - அணிமா - மகிமா - கரிமா - இலகிமா - பிராப்தி - பிராகாமியம் - ஈசத்துவம் - வசித்துவம் அவற்றில் அணுமாப்போலாதல் அணிமா, மகத்துவமாதல் மகிமா, தன்னுடற்கண்டிப்பின்றியக் கண்டிப்புள்ளவற்றை யுருவவல்லனாதல் கரிமா, இலகுத்துவமாதல் இலகிமா, வேண்டுவனவடைதல் பிராப்தி, நிறையுள்ளாதல் பிராகாமியம், ஆட்சியுள்ளாதல் ஈசத்துவம், எல்லாந் தன்வசமாக்க வல்லனாதல் வசித்துவமெனப்படும் (அ)

தங்கிய மலங்கள் சிந்தப் பாங்கதோ ரருளி னன்றே
மூங்கியோ ரருகிச் சீவன் முத்தராம் பெரும்பே றெய்திப்
புங்கவர் வணங்க மேலாய்ப் பொலிகுவர் கவன் பூசை செய்யார்க்
கெங்குமே யிடருஞ் சூழ்வுற் றின்னலே புரியா நிற்கும்

(இ - ள்) தானடைந்த மலங்களையொழித்து, பொருந்திய பெருமைவாய்ந்த திருவருளில் அப்பொழுதே மூழ்கியமர்ந்து, சீவன் முத்தராகிய பெரிய பேற்றினையடைந்து, தேவர்கள் பணியும்படி மேன்மையுற்று விளங்குவார்கள் (விநாயகக்கடவுளைப்) பூசைசெய்யாதவர்களுக்கு எவ்விடத்திலுமுள்ள துன்பங்களுஞ் சூழ்ந்துகொண்டு தீமையே சம்பவிக்கும் எ - று

சாலச்சிறந்து என்பதில், சால உபசருக்கம் (கூ)

கணபதி பூசை யாற்றுங் காதலர் தம்மைக் கண்டோர்
குணமெடுத் துரைப்போர் பண்பிற் கூடுவோ ருவப்போ ரெல்லா
மணவுறு முப்பயன் பேறு மடைகுவ ரதுசெய் யாத
பிணமெனக் கண்டோர் தாமும் பெறுகுவர் தீமை யெல்லாம்.

(இ - ள்) கணேசப்பெருமானுடைய பூசைசெய்யுங் காதலர்களைத் தரிசித்தவர்களும், (அவர்களது) நற்குணங்களை யெடுத்துச்சொல்பவர்களும், (அவர்களுடன்) ஆசையாகக் கூடுபவர்களும், (அவர்களைக்கண்டுங் கேட்டும்) களிப்பவர்களும் ஆகிய யாவரும் பொருந்திய மூன்று பயன்களையும் பெறுவார்கள் அவ்விநாயகபூசை செய்ய

ட்டாத (நட்டப்) பிணங்களை யெதிரிற் கண்டவர்களும் எல்லாத் துன்பங்களையும் அடைவார்கள் எ - று.

மும்மை - இம்மை மறுமை வீடு என்பன

பிணம் நடவாமையாலும், அது நடக்கையில் எதிர்காணுதலில்லாமையாலும் நடைப்பிணமென்றும், (௧௦)

நாத்திக ரொழுக்கம் விட்டோர் நவைபிறர்க் குரைப்போர் சோரர்
தூர்த்தர்தூ நெஞ்ச மில்லாத் துட்டர்க ளாதி யோர்க
ளேத்தினர் சரணஞ் சார்ந்த விடத்துமிம் மனுவோர் தாமை
நீத்திடல் வேண்டு மோதலி னெடுநர கனைத்துந் தோய்வார்.

(இ - ள்) நாத்திகர்கள் - ஆசாரங்களைவிட்டவர்கள் - பிறர்க்குக் குற்றங்கூறுவோர் - திருடர்கள் - புனிதமான மனமில்லாத துன்மார்க்கர்கள் முதலானவர்கள், துதித்தவர்களாகி (தம்மை) சரணமடைந்த விடத்திலேயும், (அவர்களுக்கு) இவ்விநாயக மந்திரத்தை யுபதேசியாமல் நீக்கிவிடல்வேண்டும் (அவ்வாறன்றி) உபதேசித்தால் மிக்க நரகங்களிலெல்லாம் மூழ்குவார்கள் எ - று

நாத்திகர் - தெய்வமும், இம்மைமறுமையும், சுவர்க்க நரகங்களுமில்லை யென்போர். இவர் ஆஸ்திகரல்லாதவர் (௧௧)

வணக்கமன் பருளா சார மறைநெறி யொழுக்க நல்லோ
ரிணக்கமந் திரத்தி னாவ லிவைமுத லுடையோர்க் காயிற்
பிணக்கறு தீக்கை யாற்றிப் பேசுக விருவர் தாமுங்
கணக்கிலப் பேரின்ப வீடு கைக்கொள்வர் காணி யாக

(இ - ள்) கீழ்ப்படிதல் - அன்பு - கிருபை - ஆசாரம் - வைதிகநெறியினடத்தல் - நல்லோர் சகவாசம் - மந்திரத்தில் இச்சை, இவை முதலிய குணங்களையுடையவர்களுக்காயின், குற்றமற்ற தீக்ஷைசெய்து உபதேசிக்கக்கடவை (அவ்வாறாயின், உபதேசிப்போனும் அதனைப்பெறுவோனுமாகிய குருசீடர்) இருவரும் எல்லையில்லாத பேரின்பவீடாகிய மோக்ஷத்தைத் தமது வாசஸ்தானமாகக் கைக்கொள்வார்கள். எ-று.

சந்திரன் முடியில் வைத்த தம்பிரான் கருணை கூர்ந்து
முந்தெனக் கருளிச் செய்த முறையுனக் குரைத்தே னென்னா
வெந்துயர் முழுது நீங்கி வியாதனீ தனுட்டித் தோரை
யெந்தையிங் கொழியா வண்ண மியம்புக வென்று தாழ்ந்தான்.

(இ - ள்) சந்திரனை முடியிலணிந்த எம்பெருமான் கிருபைமிகுந்து முற்காலத்தில், எனக்குத் திருவாய்மலர்ந்தருளிய முறைப்படியுனக்குக் கூறினேனென்று பிரமதேவன் கூற, வியாதமுனிவர் (தனக்குற்ற கொடிய துன்பமுழுதும் ஒழிந்து, எந்தையாகிய பிரமதேவரே! இவ்விரதத்தை யநுட்டித்தவர்களை இப்பொழுது (சிறிதும்) நீங்காவகையாகக் கூறவேண்டுமென்று பணிந்தனன். எ - று

தம்பிரான் - தனக்குமேற் றலைவனில்லாதவன் என்றும் தனக்குத்தானே பிரானென்றும் பொருள்படும். (௧௨)

கொற்றவெண் குடையி னீழற் குவலய முழுதுங் காத்த
வெற்றிவேன் மன்னன் [illegible] வியாதனுக் [illegible]

திற்றெனை லாகு மூவ ரினிதுபா சித்த வாறு
தெற்றெனத் தெளிக வென்று செப்புவன் பிருகு மேலோன்.

(இ - ள்) வெண்கொற்றக்குடை நீழலில் உலகமுழுவதையுங் காத்த வெற்றி பொருந்திய வேற்படையேந்திய சோமகாந்த ராசனே! பிரமதேவன் வியாதமுனிவனுக்கு உபதேசித்தது இதுவேயாகும். மும்மூர்த்திகள் இனிதாக உபாசித்தவகையையும் நன்றாகத் தெளியக்கடவாயென்று, மேலோனாகிய பிருகு முனிவன் சொல்லத்தொடங்கினன். எ - று (௧௪)

வியாசருபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௮௬௬.

---

## மூவருமுபாசித்தபடலம்.

விரும்பித் தாழ்ந்த வியாதனை நோக்கியே
யரும்பு விண்டல ரம்புயச் சேக்கையான்
கரும்புந் தேனுங் கலந்தெனக் கல்லொடு
மிரும்பு முண்ணெகக் கிளக்க லுரைப்பனால்

(இ - ள்) அரும்புகள் வாயவிண்டலர்ந்த தாமரைமலராய பீடத்தையுடைய பிரமதேவன் தன்னை விரும்புற்றுப் பணிந்த வியாதமுனிவனை நோக்கி, கரும்பிரசத்தையுந் தேனையும் (ஒன்றுசேரக்) கலந்தாற்போல, கல்லும் இரும்பும் உள்ளமெகக்கு விட்டுளகும்படி சொல்லுகின்றான். எ - று

கரும்புந்தேனுமென்றதாற் சுவைபடவெனக் கொள்க. கல்லும் இரும்பும் போன்றவன்னெஞ்சரும் உள்ளமுருக வென்பார் "கல்லொடு மிரும்பு முண்ணெக்கிளக்க" என்றார். (௧)

தேவர் தானவர் சித்தர் முனிவர
ரோவி லாத வுரக ரியக்கர்கள்
மேவு சாரணர் விஞ்சையர் கின்னரர்
பாவு மானிடர் பலவகை யோர்களும்

(இ - ள்) தேவர்கள் - தானவர்கள் - சித்தர்கள் - முனிவரர்கள் - கெடுதலில்லாத நாகர்கள் - இயக்கர்கள் - பொருந்திய சாரணர்கள் - வித்தியாதரர்கள் - கின்னரர்கள் - பரவியமனிதர்கள் - (இன்னும்) பலவகைப்பட்டவர்களும் (ஆகியவர்களின் தொகுதியில்) எ - று.

உரகம் - பாம்பு. உரம் - மார்பு - கம - நடத்தல். இது மார்பானடப்பதென்னுங் காரணப் பொருளுடையதோர் சொல். (௨)

வேறு

சங்கரன் பூசனை யன்பி னாற்றுபு
பங்கயன் கதிகளிற் படர்ந்து மேலாம்பல

ரங்கவர் தம்மிலியா னறிந்த வாறுமின்
றிங்குறச் சிலர்தமை யியம்பக் கேட்டியால்.

(இ - ள்) ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகப்பெருமானது பூசையை அன்புடன்செய்து, கெடுதலில்லாத உயர்கதிகளிற் சென்றிருப்போர் எண்ணிறந்தோர் அவ்வகைய சிறப்படைந்தவர்களில், யான் தெரிந்தவகையாக இப்பொழுது சிலருடைய சரிதங்களைச் சொல்லக் கேட்பாயாக எ - று. (௩)

பண்டொரு பிரளயம் பட்டாந்த செவ்வியி
னண்டரு மறிவரு மமல நாயகன்
கொண்டதத் துவங்களைக் குறித்தொ டுக்கினன்
மண்டிய வுயிரிளைப் பாறும் வண்ணமே.

(இ - ள்) தேவர்களும் அறிதற்கரிய நிமலனாகிய கணேசப்பெருமான் முன்னொரு பிரளயங்கழிந்த (பிற) காலத்தில், நெருங்கிய வுயிர்கள் இளைப்பாறும் வகையாகத் தத்துவங்களை யெல்லாந்தன்னிடத் தொடுக்கிக்கொண்டனன் எ - று

உயிரிளைப்பாறுதல் - பலவுடல்களிற் புகுந்தும் பிரிந்தும் வருந்திய துயரொழிதலாம் அதாவது முத்தியடைதல். (௪)

நீடிய பிரளய நீங்க முன்புபோற்
கூடிய முதற்றொழில் குயிற்று வெண்ணுபு
நாடிய வயிவுரு நயந்தெ டுத்துநின்
றீடியன் முக்குணத் தெய்வம் நல்கினன்

(இ - ள்) மிக்கபிரளயமொழிய, பண்டுள்ளதுபோலவே யியல்ல முதற்றொழில்களை நடத்தக்கருதி, (அன்பர்கள்) நாடியறியத்தக்க திருவுருவத்தை விரும்பி யெடுத்துத் தோன்றி, சமானமான இயல்பினையுடைய முக்குணவிசிஷ்டர்களான எங்களைப் படைத்தனர். எ - று

எங்களை யென்றது பிரம விஷ்ணு உருத்திரர்களை முக்குணங்கள்—இராசோகுணம் - தமோகுணம் - சத்துவகுணமெனப்படும் (௫)

இகலறு மறைகளு மிருளி னீங்கிய
தகவுறு பெரியவர் தாமு மெங்களைத்
தொகவுறத் தோற்றிய தூய மூர்த்தியைத்
துகளறு வக்கிர துண்ட னென்பரே

(இ - ள்) பகைமையற்ற வேதங்களும், (அஞ்ஞானமாகிய)அந்தகாரத்தினின் றொழிந்த தகுதியுடைய பெரியோர்களும்,எங்கள் மூவரையுந் தொகுதியாகப்படைத்த புனிதராகிய விநாயகப்பெருமானைக் குற்றமற்ற வக்கிரதுண்டமூர்த்தியென்று சொல்வார்கள் எ - று (௬)

ஆரணி யயனென வானை யாங்களும்
பிரமமி னதுவெனப் பேணிக் காணிய
விரவிய வெறுவெளி விரிவு முற்றுறப்
பரவினந் தேடினம் பயன்பெற் றேமலம்.

(இ - ள்) உருத்திரன் விண்டு பிரமன் என்றுகிய நாங்களும் பரப்பிரமப் பொருள் இன்னதென்று விரும்பிக் காணும்படி, பொருந்திய வெறுவெளியின் பரப்பு முழுவதும் பரவினோம் தேடினோம் (ஆயினும் இவற்றாலெல்லாம்) சிறிதும் பயனடைந்திலோம் எ - று.

காணிய - செய்யியவென்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். (எ)

அருந்தவந் தேவர்க ளாண்டி னாயிரம்
புரிந்தனம் புரிதலும் பொற்பத் தோன்றினன்
திருந்திய வடியவர் சென்று தோய்தொறும்
விருந்துறப் பெருஞ்சுகம் விளைக்கு மெம்பிரான்.

(இ - ள்) (நாங்கள் மூவரும்) ஆயிரந் தேவவருடங்கள் வரையில், அரிய தவத்தைச் செய்தோம் (அவ்வாறு தவஞ்) செய்யவும், திருத்தமாகிய அடியார்கள் சென்று பணியுந்தோறும் விருந்தாகக்கொள்ளும்படி பெரிய சுகத்தைக்கொடுக்கும் எமது கணேசப்பெருமான் அழகுறப் பிரசன்னமாயினன் எ - று. (அ)

வேறு

கோடி சூரிய வுதையமுங் குருட்டிருளென்ன
நீடு பேரொளி வெளியெலா நிரந்தரித் தொளிரச்
சூடு மாமணி முடியுங்குண் டலமுந்தோள் வளையும்
பீடு சேர்தரு பேரணி கலமுநூ புரமும்.

(இ - ள்) கோடி சூரியோதயமுங் குருட்டுத்தன்மைபொருந்தியுள்ள இருளென்று சொல்லும்படி, மிக்க பேரொளியானது வெளிமுழுவதும் நிறைந்து பிரகாசிக்க, அணிந்த சிறந்த இரத்தின கிரீடமுங் குண்டலமும் வாகுவலயமும் பெருமைதங்கிய பெரிய ஆபரணங்களும் பாதசரமும் எ - று.

இது முதல் மூன்று பாடல்கள் ஒருதொடர். (கூ)

பெருத்து வார்புழைக் கரமுமேந் தியபிறை மருப்பும்
விருத்து மாமுரண் மதம்பொழி வேழத்தின் முகமுஞ்
செருத்து ழாவுவாள் கேடகம் வேல்சிலை செறிந்த
கருத்து ழாவிய கரங்களுந் தாண்மலர்த் துணையும்.

(இ - ள்) பூரித்து நீண்ட துளைபொருந்திய கரமும், கரத்தில் தாங்கிய பிறைச்சந்திரன்போன்ற கொம்பும், (அடியவருள்ளத்திற்கு) விருந்தாகத்தோன்றும் பெருமைபொருந்திய வலிமைவாய்ந்த மதஞ்சொரியும் யானையின் முகமும், போரில் துழாவுகின்ற வாள் பலகை வேல் வில் இவை பொருந்திய கற்பகத்தருவையொத்த கரங்களும் உபய திருவடித்தாமரையும் எ - று.

கேடகம் - வட்டவடிவானதோர் ஆயுதம். இது வாளால் வெட்டுங்கால் தடைசெய்ய வுபயோகமாவது. விருத்து - விருந்தென்பதின் வலித்தல். விருந்தென்பதை முகத்திற்கு விசேடமாகக்கொள்க. (௧௦)

கீற்று வானமதிக் கண்ணியுங் கேழ்கிள ரகலத்
தூற்று தேமலர்க் கொன்றையு முலகெலா மொடியுமி

னீற்று தீவிழிப் பாலமு நிறைந்தபே ரழகுந்
தோற்றி நேரெதிர் நின்றவச் சுரூபனைக் கண்டாம்.

(இ - ள்) ஈற்றாகிய வெள்ளிய சந்திரனாகிய சிரோமாலையும், நிறம்விளங்கும் மார்பில ஒழுகுகின்ற தேன்பொருந்திய மலராகிய கொன்றைமாலையும், உலகமுழுவதும் இமைப்பொழுதில் நீறுபடுத்தும் அக்கினிக்கண்பொருந்திய நெற்றியும், நிறைந்துள்ள சிறந்த அழகுந்தோன்றச் செய்து, நேரே பிரசன்னமாகநின்ற அந்த (பிரணவ) சுரூபனைத் தரிசித்தோம் எ - று. (கக)

அச்ச மோடெழு மன்பினு லகந்தடு மாற
வுச்சி மேலிரு கரங்குவித் தொய்யென வெழுந்திட்
டிச்சை யாற்றினிற் பன்முறை யிறைஞ்சினஞ் சூழ்ந்து
நச்சி யாடினம் பாடினம் நயந்தகு துதிகள்.

(இ - ள்) அச்சத்துடன் தோன்றிய அன்பினால் மனந்தடுமாற, இருகைகளையுஞ் சிரசின்மேலே கூப்பி, விரைவாகவெழுந்து, விருப்பின்படி அநேகமுறை பணிந்தோம், பிரதக்ஷணஞ்செய்து விரும்பி ஆனந்தக்கூத்தாடினோம், விரும்பத்தக்க (பலவிதமாகத்) துதிகளைப்பாடினோம் எ - று. (கஉ)

நிருவி கற்பமாய் நிறைந்தவா னந்தபூ ரணமாய்
நிருவி காரமாய் நிர்க்குண மாயதத் துவமாய்
நிருவி சேடமாய் நிரஞ்சன மாகியொன் றாலு
நிருமி தப்படாக் கணேசநின் னிணைக்கழற் றொழுதாம்

(இ - ள்) நிர்விகற்பமாகியும், நிறைந்த இன்பபூரணமாகியும், விகாரஹீனமாகியும், நிர்க்குண தத்துவமாகியும், நிர்விசேடமாகியும், நிரஞ்சனமாகியும் விளங்கி, ஒன்றாலும் அளவிடப்படாத கணேசமூர்த்தியே! தேவரீருடைய திருவடிகளைப் பணிந்தோம் எ - று

இதுமுதற் பன்னிரு செய்யுட்களால் மூவரும் கணேசனைத் துதிசெய்தமை கூறுகின்றார்

விகற்பம் - சாஞ்சலியம் விகாரம்-அவஸ்தை நிர்க்குணம்-தாகுணரகிதம். சேடம் - மிகுதி நிருவிசேடமென்றது தன்னையன்றியோர் பொருளில்லாதது. (கங)

பிரம மாயொளி யாயநிரா காரமாய்ப் பெரிதாய்த்
தரணி யாதித்தத் துவமெலாங் கடந்ததத் துவமாய்
வரமெ லாந்தரும் வள்ளலா யேகமாய் வதியும்
பரம னாகிய கணேசநின் பதமலர் தொழுதாம்.

(இ - ள்) பிரமமாகியும், ஒளியாகியும், உருவிலியாகியும், பெரிதாகியும், பிருதிவி முதலிய தத்துவங்களையெல்லாங் கடந்த தத்துவமாகியும், (அவரவர்கள் வேண்டிய) வரங்களையெல்லா மருள்செய்யும் வள்ளலாகியும், ஒன்றியாகியும் விளங்கும் சிறந்தவராகிய கணேசப்பெருமானே! தேவரீருடைய திருவடித்தாமரையை (யாங்கள்) பணிந்தோம் எ - று.

ஆகாரம் - உருவம். வள்ளல் - வரையாது கொடுப்போன். (கச)

என்று நீங்குறாத் திருவுரு வுடையதா யெங்கு
மொன்றி நின்றுணர் சிதானந்த வுருவாயத்
துன்றும் யோகினர் தியானிக்கப் படுஞ்சுக மாகிச்
சென்று சேர்தராக் கணேசனின் றிருவடி தொழுதாம்.

(இ - ள்) எக்காலத்து மகலாத திருவுருவத்தையுடையதாகி, எல்லாவிடத்துங் கலந்துநின்று அறியத்தக்க சிதானந்த ரூபியாகி, நெருங்கிய யோகவான்கள் தியானிக்கப்படுகின்ற சுகமாகி, (சாமானியர்) சென்று அடையக்கூடாத கணேசப்பெருமானே! தேவரீருடைய திருவடியைப் பணிந்தோம் எ - று. (௧௫)

உலக காரண காரண மாயுயிர்க் குயிரா
யிலகு ஞானியர் தமையிழந் தெய்துநற் பேறாய்ப்
பலவு மாய்ப்பரப் பிரமமாய்ப் பரேசமாய்ப் பரமாய்த்
திலக மாகிய கணேசனின் றிருவடி தொழுதாம்.

(இ - ள்) உலக காரணத்திற்குக் காரணமாகி, உயிர்களுக்கெல்லாம் உயிராகி விளங்குகின்ற ஞானிகள் தம்மை யொழிந்து அடைகின்ற நல்லபேறாகி, பலபொருள்களுமாகி, பரப்பிரமமாகி, சிறந்த ஈசத்தன்மையாகி, பரமாகி, திலகமாக விளங்கிய கணேசப்பெருமானே! தேவரீருடைய திருவடியைப் பணிந்தோம் எ - று.

தமையிழந்து என்பதற்குத் தற்போதமொழிந்து என்பது பொருள். பரம் - தனக்குமேல் நாயகமில்லாதது. (௧௬)

சகல லோகமும் படைத்தளித் தழிக்குந்தற் பரமா
யகில லோகத்தும் புகலிடந் தனக்கிலா வமைவாய்ப்
புகலு லோகங்க ளனைத்துக்கும் புகலிடந் தானும்
பகவ னாகிய கணேசனின் பதமலர் தொழுதாம்.

(இ - ள்) எல்லாவுலகங்களையுஞ் சிருட்டிசெய்து காத்துத் துடைக்கின்ற தனக்குத்தானே பரமாகி, உலகமுழுவதிலும் பொருந்திய புகலிடந்தனக்கில்லாது சொல்லுகின்ற உலகங்களெல்லாவற்றுக்கும் புகலிடந்தானாகி, பகவானாகி விளங்கிய கணேசப்பெருமானே! தேவரீருடைய திருவடித்தாமரையைப் பணிந்தோம் எ - று.

பகவன் - அறுகுணச்செல்வன். அவை சர்வஞ்ஞத்துவம் சர்வேசுவரத்துவம் சர்வநியந்திருத்துவம் சர்வாந்தர்யாமித்துவம் சர்வகற்பிதத்துவம் சர்வசத்தித்துவமெனப்படும். அன்றியும், தன்வயத்தனாதல் முதலிலனாதல் உடம்பிலனாதல் எல்லாநலனுமுளனாதல் எங்கும்வியாபகனாதல் எவற்றிற்குங்காரணனாதல் என்பதுமுண்டு. (௧௭)

உகத்துக் காதியாய்த் தேவருக் காதியா யுலவாச்
சுகத்துக் காதியாய்ச் சுரர்களுக் கீசராய்ச் சுடரு
மகத்துக் கீசராய்க் கணங்களுக் கீசராய் மதிப்போ
ரகத்துக் கூடிய கணேசனின் னடியிணை தொழுதாம்.

(இ - ள்) உகத்துக்கு முதலாகி, தேவர்களுக்கு முதலாகி, உலகத்துக்கு முற்பொருளாகி, தேவர்கட்குக் கடவுளாகி, பிரகாசிக்கின்ற யாகத்திற்குக் கடவுளாகி, கணங்கட்கெல்லாம் பிரபுவாகி, பெரியோருடைய மனத்திற் பொருந்திய கணேசப்பெருமானே! தேவரீருடைய உபயபாதங்களைப் பணிந்தோம். எ - று. (௧௮)

இராசதத் தொழி லாகிய சிருட்டியை யிப்பற்ற
விராவி ராசதத் துருக்கொடு பிரமனுய மேலாயப்
பராவு வித்தைக ளனைத்திறகும பயிலபிறப் பிடமா
யொராது நினறருள் கணேசநின னொளிரபதந தொழுதாம

(இ - ள) இராசதகாரியமாகிய படைத்தலைசசெயய, இராசதங்கலந்த உருவததைக்கொணடு பிரமனுகி, மேமபடுத துதிசெயயும் வித்தைகளெலலாவறறுக்கு ஞ சொலலுகினற பிறபபிடமாகி, நீஙகாது(எஙகும) வியாபித்திருக்குங கணேசபபெருமானே! தேவரீருடைய பிரகாசிக்கினற திருவடியைப பணிநதோம எ - று (௧௯)

சோரவி லாதசாத துவிதநற றொழிலெனுந திதிக்குச
சார்வ தானதா மதநதனி லுருவுகொண டரியாயத
தீரவி லாப்பகை யசுரரைச செகுததிருந தேவாக
காரவ மேயருள கணேசநின னருடபதந தொழுதாம

(இ - ள) குறைதலிலலாத நலல சாததுவிதகாரிய மென்று சொலலபபடும இரட்சித்தலைசசெயதறகு, பொருநதியதாகிய தாமதகுணத்தினிலுருவுகொண்டு விஷ்ணுவாகி, நீங்குதலிலலாத பகைமையுடைய அசுரர்களைக கொனறு, பெருமையாயந்த தேவர்களுக்கு ஆசையையே யருளசெயகினற கணேசப பெருமானே! தேவரீருடைய அருள்வடிவாகிய திருவடியைப பணிநதோம எ - று (௨௦)

தாமதத் தொழி லானசங் காரமாற றுதற்குத
தோமகற றுசாத துவிதத்திற றோனறுருத் திரனு
யேமமுறறிமை யோர்முனி வோரொலா மிறைஞசச
சேமமைபபதாங கணேசநின சேவடி தொழுதாம

(இ - ள) தாமதத்தொழிலாகிய சஙகாரகிருத்தியத்தைச செய்வதறகு, குற்றத்தை விலக்குஞ் சத்துவகுணத்துடன் றோனறிய உருத்திரனுகி, இனபமடைநத தேவர்களும முனிவர்களும யாவர்களும பணியச சேமநிதியாகிய கணேசபபெருமானே! தேவரீருடைய செவவியதிருவடியைப் பணிநதோம எ - று (௨௧)

கிரண பநதியாற பயிரையுங கிளாககதைப பெருக்கற
பரவு தேவாக டமமையு மகிழவித்துப பாரபபாாக
கரசனுயுலகததுவெப பறுத்திடுந திஙகட
சொருவ மாகிய கணேசநின றிருவடி தொழுதாம

(இ - ள) கிரணவரிசையினுற பயிர்களையும, விளஙகுகினற அமுதபபெருக்கினுற் றுதிசெய்கினற தேவர்களையும விருபபுறச்செயது, வேதியாகளுககு மனனவனுகி, உலகத்திலுள்ள வெபபததை யொழிததிடுஞ் சநதிரசொருபியாகிய கணேசப் பெருமானே! தேவரீருடைய உபயதிருவடியைப பணிநதோம எ - று (௨௨)

ஒளிபபி ழமபதாய மேகவா யுவினுரு வாகி
விளிப்பில காலங்க டெரிபபதாய்த தொழிலெலாம விளைத்துக
களிப்ப தாயபபல சததிப தானசெங கதிராய்த
தெளிபப நினறருள கணேசநின சேவடி தொழுதாம

(இ - ள்) பேரொளிபபிழமபாகி, மேகம் வாயு இவறறினுருவாகி, அழிவில் லாத காலஙகளைக் (கணககிட்டுக) கட்டுளைபபதாகி, (சிருஷ்டியாதி) கிருததியஙகளை யெலலாஞ்செயது சநதோஷிபபதாகி, பலசததிகளாகிய சூரியனுகி, உணமையாக விளஙகியருளுங கணேசபபெருமானே! தேவரீருடைய சிவநததிருவடியை யாஙகள பணிநதோம எ - று. (உ௩)

நிரப்பி றனமமாய்த் துறககமாய நிரநதரத் துவமாயத்
தரைசசொ ரூபமாயச சமுததிர மாயததிசைச சுரராயக
கரபபி லாவுல கனைததுமாயக கலநதுநின றருளும
பரபபி ரமமாங கணேசநின பாதஙக டொழுதாம

(இ - ள) குறைவிலலாத தருமமாய, மோகஷமாய, நிறைநத தததுவஙகளாய், பிருதிவியின் சொரூபமாய, சமுததிரமாய, திககுபபாலகாகளாய, கெடுதலிலலாத வுல கததில் எலலாம (தானுக அவறறுட) கலநது விளஙகியருளும பரபபிரமமாகியகணே சபபெருமானே! தேவரீருடைய திருவடிகளைபபணிநதோம. எ - று (உ௪)

சாமி நின்னிரு தாணமலா சாாநதவ ரெல்லா
நாம வெமபிணி நவிவொரீஇ நறசுக மடைவ
ராமி தைததெரிந தியாஙகளு முனைச்சர ணடைநதே
மேம மலகுறக காததியென றேததின மிரநதேம.

(இ - ள) கடவுளே! தேவரீருடைய உபயபாததாமரைகளை யடைநதவாகள யாவரும, அசசநதருங கொடிய பிணிததுனப நீஙகி நலலசுகததையடைவாாகள, ஆகிய இதனை யுணாநது அடியேஙகளுந தேவரீரைச சரணமடைநதோம நனமை யதிகரிககுமபடி (அடியேஙகளையுந தேவரீா) காபபாறறுக வெனறு துதிததோம; யாசிததோம எ - ற (உ௫)

என று மூவரு முபாசிதத வியலபிது வாமென
றனறு நானமுகன வியாதனுக கருளிய தாக
நனறு தோநதனை யினியவா பெறறநல வரமு
நினறு கேளென நிகழததுவன பிருகுமா தவனே.

(இ - ள) எனறிவ்வகையாக மூவரும உபாசனைசெயத தனமை யிதுவாகு மெனறு, அககாலததிற பிரமதேவன வியாதமுனிவனுககு அருளிசசெயததாகநனருக வுணாநதனையா? இனி அமமூவாகள பெறற நலலவரஙகளும (ஒரேவழியில மனதை நிறுததி) நினறு கேடபாயாகவெனறு, பெருநதவசியாகிய பிருகுமுனிவன (சோம காநதமனனனுககுச) சொலலததொடஙகினன எ - ற. (உ௬)

மூவருமுபாசிததபடலம முறறிறறு.

அகத் திருவிருத்தம் - ௮௬௫

---

# மூவரும் வரம்பெறுபடலம்.

மூவரும வழிபடு முறைமை யோதலு
மேவிய காதலின வியாத மாமுனி
தேவநங களுககிறை செயத நனறியை
யோவற மொழிகென வுரைககும வேதனே

(இ - ள) திரிமூாததிகளும விநாயகோபாசனைசெயத முறைமையைக கூற வும, வியாதமுனிவன பிரமதேவரே! உஙகளுககுததலைவராகிய கணேசபபெருமானசெய்த நனமையைக் குறைவினறிச சொலலவேணடுமெனப பொருநதிய விருப்புடனே கேட்க, பிரமதேவன சொலலலாயினன ' எ - று
செயத நனறியென்றது ாணடு அருளியவரததை (க)

துதிததிரந தெதிருறத தொழுது நிறறலுங
கதிததவைங கரபபிரான கருணை கூாநதுநா
துதிரகிரங கினமிது துதிககின ருருககு
மதிததன வழங்குறும வரமுங கொளகென ருன.

(இ - ள) (நாஙகள) தோத்திரஞசெயது யாசிதது எதிராகப பணிநது நிற்கவும, சிறநத ஐநது திருககரஙகளையுடைய கணேசபபெருமான கிருபைமிகுநது, உங்கள தோததிரஙகட்கு மனமுருகினேம. இததோததிரததால துதிசெயகினறவாகளுககு (அவாகள) மதிததபொருளகளைக கொடுபபோம, வேணடிவரததையும நீஙகள பெறுவீாகளாக வெனறனா எ - று (உ)

இரங்குபொன னூபுரப பதததி னெமபிரா
னுரங்கொளும பததிமை யுதவிக காபபதே
வரஙகடைக கணிதகொரு பணிவ ழுஙகினுஞ
சிரஙகொடு செயகுறு மென று செபபினும

(இ - ள) ஒலிககினற பொனனூலாகிய பாதசரததை யணிநத திருவடியையுடைய எமதுபெருமானே! (தேவரீரிடததில) உறுதியாகிய பததிமையை யருககிரகிததுக காபபதே (விருமபிய) வரமாகும திருககடைககணேக்கஞசெயது ஓா தொழிலைக் கட்டளையிடடாலும (அதனைத) தலையாறசெயவோமெனறு கூறினேம எ - று
சிரஙகொடுசெயதல - தலைமையாககொணடு செயதலெனபதாம. (௩)

முககுணத துதிததுளீா முடிவில் பத்தியும
விககின மினமையு மிதபப நலகினேந
தககநம பணிகளுந தருதுங கேணமினென
றககண முககணெம மடிகள சாறறுமே.

(இ - ள) மூனறுவிழிகளையுடைய எமது விநாயகக்கடவுள முககுணவசததராகப்பிறநதவாகளே! அழிவிலலாத பததியும இடையூறிலலாமையும மிகுதியாக அநுககிரகிததோம. தகுதியாகிய நமமுடைய தொழிலகளையும (உஙகளுக்குக) கொடுப்போம கேடபீாகளாகவெனறு, அபபொழுது மேலுஞசொலலுகினறாா எ - று. ()

வேறு

இராச தத்துரு வாயயன் யாவையும் படைக்க
வொராது காக்கசாத் துவிதமா யொளிமணி வண்ணன்
மராது டைக்கதா மதத்துரு வாயுருத் திரனை
நராவ ணைத்தபூங் குழையினு னறைந்திவை யளித்தான்.

(இ - ள்) பிரமன இராசததுருவமாய எலலாவற்றையுஞ சிருட்டிப்பானுக. பிரகாசிக்கின்ற மணிவண்ணனுகிய திருமால சாத்துவிகரூபியாய (அவற்றையெல்லாம)நீங்காமற காக்கக்கடவன உருத்திரன தாமதத்துருவாய் அழிக்கக்கடவன என்று, சர்ப்பங்களாலாகிய அழகிய குண்டலமணிந்த விநாயகக கடவுள வரமளித்து (பின வரும) இவற்றை (எங்களுக்குக) கொடுத்தனா எ - று (௫)

வேத சாத்திர புராணங்கண் மிகுகலை சிருட்டிக்
கேத நீங்கிய வலியொடு மெனக்கினி தளித்துக்
காதல யோகத்தின வேண்டுருக் கைக்கொளுஞ சத்தி
யோது காவலசெய் வலியொடு மாயனுக் குதவி.

(இ - ள) வேதங்கள சாத்திரங்கள புராணங்கள மிக்ககலைஞானங்கள்(ஆகிய இவற்றை) படைப்புக்கு வேண்டிய குற்றமொழிந்த வலிமையுடன எனக்கு நன்றுகக்கொடுத்து, விரும்பத்தக்க யோகவல்லமையால வேண்டியவடிவங்களைக் கைக்கொள்ளத்தக்க சத்தியும், சொல்லுகின்ற காப்புத்தொழில்செய்யும வல்லபமும விண்டுமூர்த்திக்குக கொடுத்து. எ - று

மாயன - மாயைசெயவோன (௬)

ஏக மாகிய வக்கர சடக்கர மனுவு
மேக னுயுல கனைத்தையு மிறுத்திடும வலியு
மேக நாயக னுருத்திரற் கருளின் னென்று
வேக மாகிய பூவினன வியாதனுக் கிறுத்தான்.

(இ - ள) ஏகாட்சரமந்திரமும், சடட்சரமந்திரமும, ஏகனுகி உலகங்களை யெல்லாம அழிக்குமவல்லபமும, ஏகநாயகனுகிய கணேசப்பெருமான உருத்திரமூர்த்திக்குககொடுத தருளினரென்று, ஒப்பிலலாததாகிய தாமரைமலரிலெழுந்தருளியுள்ள பிரமதேவன வியாதமுனிவனுக்குக கூறினன. எ - று (௭)

இன்ன வாவர மூவரும பெற்றதென் றெறிவேன்
மன்னா மன்னவன மகிழ்கொள வுரைத்தருள் வரதன்
றன்னு ளேயுல கனைத்தையுங் காட்டுதன மையையு
முன்னி யோதுத றொடங்கினன முதிர்புகழ்ப் பிருகு

(இ - ள) மிக்ககீர்த்தியுடைய பிருகுமுனிவன மூவரும வரமபெற்றது இன்ன வகை யென்று, எறிகின்ற வேற்படைதாங்கிய இராசராசனுகிய சோமகாந்தன் களிப்பெய்தக்கூறி, அவ்விநாயகக கடவுள் தனக்குள்ளே உலகங்களை யெல்லாங காட்டிய வகையையுஞ சிந்தித்துச சொல்லத்தொடங்கினன எ - று.

வரதன - சிரேஷ்டமானவன, வரங்களைத தருவோன. (௮)

மூவரும வரமபெறுபடலம முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௦௩.

# விசுவரூபங்காட்டியபடலம்.

கறஙகு வெணடிரைப பாறகடற கணபடை கொளளு
மறஙகொள சக்கர வானவ னாகிய வியாத
வுறஙக லினறிநன றுணாடடி யெனமது வொழுகு
நிறஙகொ ளமபுயச சேககையா னிதுநிகழத தினனால.

(இ - ள) சததிககினற வெளளிய அலையையுடைய திருப்பாற கடலிலே துயிலபுரியும, கொலைததொழிலைக கொணட சககராயுதததை யேநதிய திருமாலின அவதாரமாகிய வியாதமுனிவனே! சோாவிலலாமல நனறாகமதிததுக கேடபாயாக வெனறு, தேனசிநதுஞ செநநிறமபொருநதிய தாமரைமலாப பீடததையுடைய பிரம தேவன இதனைக கூறுவானாயினன எ - று

திருமாலின சககரம சுதரிசனமெனபபடும (க)

தேவ தேவரு மறிவருந தேவதே வனைபபின
மேவு மாாவமோ டடுததிடு வியாத நானிறைஞசி
மூவு ருதவ வுலகினைப படையென மொழிநது
யாவ தாககுமா றிதனையு மியமபென விரநதேன

(இ - ள) தேவாகளுககுத தேவாகளாயுளளவாகளும் அறிதறகரிய பெருந் தேவனாகிய கணேசமூாததியை அடையும ஆசையுடனே யாசிரயிதத வியாதமுனி வனே! நான (கணேசபபிரானைப) பணிநது, அழிவிலலாதவரே! தேவரீா உலகஙகளைப படைககவெனக கடடளையிடடீா செயயததககது யாது? இதனையுங கூறுகவெனறு யாசிதநதேன. எ - று.

மூவுருதவவுலகினை யெனறும பாடம. (உ)

கருணை நாயகன கடைககணித தெனையெதிா நோக்கிப
பொருவி லாதவென வயிறறினுட புகுநதுலக கனைதது
மொருவு றுவகை நோககவென றுயிரென வெனனை
யுருவ வாாகரப புழைவழி யுளளுற விடுததான்.

(இ - ள) கிருபாநாயகராகிய விநாயககடவுள கடைககணணோககஞ செயது என்னையெதிரேபாாதது, சமானமிலலாத எனவயிறறினுளளே பிரவேசிதது உலகங களையெல்லாம (ஒனறும) நீஙகாவகையாகக காணுகவெனறு, உயிரைப்போல எனனை அழகுபொருநதிய நெடிய துதிககையின துளைவழியே உடசெலலவிடுததனா எ - று.

நடஙகை யுளளுற யானபுகும பொழுதுதாள வணஙகிக
கடஙக விழுககுமா னனபபிரான கனைளருள வாங்கி
யுடஙகு நினறமற றிருவரு முளளுறப புகுநதா
ரடஙக நோககினா மவனவயிற றகிலலோ கமுமே

(இ - ள) விசாலமான துதிககையுளளே யான பிரவேசிககும பொழுது, சமீபததிலிருநத (விஷ்ணுருததிராகளாகிய) ஏனையவிருவரும, மதசலததை யொழுக குமு (யானை)முகததையுடைய விநாயகக கடவுளுடைய திருவடியைபபணிநது அகரு

டைய திருவிழியருளையடைந்து, (துதிக்கையின்) உள்ளேயடையப் புகுந்தார்கள். (நாங்கள் மூவரும்) அவர் வயிற்றிலிருந்த லோகங்களை யெல்லாம் முழுவதும் பார்த்தோம். எ - று. (௪)

வேறு

அகட்டிடையே யளவிறந்த வண்டங்க ளுறங்கிடந்த
பகட்டெழிலச்சே ரவற்றொன்ற னுட்புகுந்து பார்ப்பளவிற்
றகட்டுவரா லுகள்கடல்சூழ் தரைநடுவு மதன்கீழ்மேன்
முகட்டளவும் பலவுலகு முறையிரவளத்தி னிருந்தனவால்

(இ - ள்) (அவ்விநாயகக் கடவுளுடைய) வயிற்றிலே எண்ணிறந்த அண்டங்கள் பொருந்தவிருந்தன. பெருமைபெற்ற அழகமைந்த அவ்வண்டங்களுளொன்றிற் பிரவேசித்துப்பார்க்கையில், அச்சவடிவாகிய வராலமீன்கள் புரளுகின்ற கடல்சூழ்ந்த தரைநடுவிலும் அதன்கீழும் மேலேயுச்சியளவும் அநேக உலகங்களும் வளமிகுந்து வரிசையாயிருந்தன. எ - று. (௫)

நாதங்க ளோரிரண்டாய் நலமருளுஞ் சதாசிவமாய்ப்
பாதங்க ளொருநான்கும் பதநான்கும் பயில்வித்த
வேதங்க ளறியாத விநாயகர்தந் திருவருளாற்
பூதங்க ளோரைந்தும் புரையின்றி யெதிர்கண்டாம்.

(இ - ள்) நாதங்களோரிரண்டாகி, நன்மை செய்கின்ற சதாசிவமாகி, நான்கு பாதங்களும் நான்குபதங்களும் பயில்வித்தனவாகிய வேதங்களும் அளவிட்டறியாத கணேசப்பெருமானுடைய திருவருளினாலே ஐம்பூதங்களையுங் குற்றமின்றி யெதிரே பார்த்தோம். எ - று.

நாதங்கள் - இருவகை யிந்திரியங்களெனினுமொக்கும். (௬)

பண்டையூ ழிகடோறும் படைத்தவரும் புரித்தவரு
மண்டுபே ருலகனைத்தும் வருத்தமறத் துடைத்தவருங்
கொண்டபே ரதிகாரங் கொள்ளாது விடுத்தருளே
கண்டுபே ரானந்தக் கடன்மூழ்க வெதிர்கண்டாம்.

(இ - ள்) முன்னேகழிந்த ஊழிகளிலெல்லாஞ் சிருட்டிசெய்தவர்களுங் காத்தவர்களும் நெருங்கிய பெரிய உலகங்களையெல்லாம் வருத்தமின்றிச் சங்கரித்தவர்களும் (தாம் அக்காலத்திற்) கொண்ட பெரிய அதிகாரங்களைக் கொள்ளாமல் விடுத்து, திருவருளையே தரிசித்து, பேரானந்தக் கடலின் மூழ்கியிருக்க (அவர்களையும்) எதிரிற் பார்த்தோம் எ - று (௭)

அதிகாரம் புரிகின்ற வலரவனு மாயவனு
நதிபாயுஞ் சடைமவுலி நாயகனு மெண்டிசையின்
வதிவோரு மருக்கருருத் திராவசுக்கண மருத்துவருங்
கதிசேரு நவகோளுங் காதலிப்ப வெதிர்கண்டாம்.

(இ - ள்) அதிகாரத்தைச் செய்கின்ற பிரமதேவனும் திருமாலும் கங்காநதி பாய்கின்ற சடைமுடியையுடைய உருத்திரனும், எட்டுத்திசைகளில் வசிக்கும் திக்குப

யாளர்களும் சூரியர்களும், உருத்திரர்களும், வசுக்களும், மருத்துக்களும், உயர்கதி யையடைந்த நவக்கிரகங்களும், ஆசையுற எதிர்ப்பட்டோம் எ - று.

எண்டிசையின் பதிகளோர் - இந்திரன் அக்கினி இயமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன். அருக்கர் பன்னிருவர் - தாதுரு சக்கரன் அரியமன் மித்திரன் வருணன் அஞ்சுமான் இரணியன் பகவான் திவச்சுவான் பூடன் சவித்துரு துவட்டன். உருத்திரர் பதினொருவர் - மாதேவன் அரன் உருத்திரன் சங்கரன் நீலலோகிதன் ஈசானன் விசயன் வீமதேவன் பவோற்பவன் கபாலி சௌமியன். வசுக்கள் எண்மர் - அனலன் அனிலன் ஆபஞ்சைவன் சோமன் தரன் துருவன் பிரத்தியூசன் பிரபாசன். மருத்துக்கள் எழு - கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு கீழ் மேல் பல யோனியுயிர். நவகோள் - சூரியன் சந்திரன் அங்காரகன் புதன் குரு சுக்கிரன் சனி இராகு கேது (அ)

கின்னரர்கந் தருவர்கரு டர்களியக்கர் கிம்புருடர்
தந்நிகரில் லாசித்தர் சாத்தியர்பன் னகருரகர்
துன்னியமற் றமரரையுந் தொகுமசுரர் அரக்கரையும்
மன்னியவன் னவர்க்குரிய மாதரையு மெதிர்கண்டாம்

(இ - ள்) கின்னரர்கள் கந்தருவர்கள் கருடர்கள் இயக்கர்கள் கிம்புருடர்கள் தமக்குத்தாமே நிகராகிய வித்தியாதரர்கள் சித்தர்கள் சாத்தியர்கள் பன்னகர்கள் உரகர்கள் நெருங்கிய மற்றைத் தேவசாதியரையும், தொகுதியாகிய அசுரரையும், அரக்கரையும், பொருந்திய அவ்வவர்க்குரிய மனைவியரையும் எதிர்ப்பட்டோம் எ - று.

ஒவிலருட் சனகாதி யோகியர்நா ரதராதி
தேவர்முனி வரர்விட்டர் முதலாகச் செப்புறும்
பாவுபுகழ்ப் பிரமமுனி வரராயினமா னிடர்தமையுங்
காவினமலை கடலாறு தடமினையு மெதிர்கண்டாம்

(இ - ள்) குறைவில்லாத அருள்வாய்ந்த சனகாதியோகிகளும் நாரதர் முதலியவர்களும், தேவர்களும், முனிசிரேஷ்டர்களும், வசிஷ்டர் முதலாகச்சொல்லத்தக்க கீர்த்தியுடைய பிரமரிஷிகளும், மனிதர்களும் ஆகியவர்களையும், கெடுதலில்லாத மலை கடல் ஆறு தடாகம் (முதலிய) இவற்றையும் எதிர்ப்பட்டோம் எ - று.

சிங்கமுதன் மிருகங்க டிகழ்கலுழன் முதற்பறவை
தங்கியகற் பகமாதி தருக்காம வல்லிமுதல்
கொங்கிணைபூம் பசுங்கொடியம் புயமாதி பன்மலரும்
பங்கமறு சராசரமாம் பரப்பனைத்து மெதிர்கண்டாம்.

(இ - ள்) சிங்கமுதலிய மிருகங்கள், விளங்குகின்ற கருடன் முதலியபறவைகள், பொருந்திய கற்பகமுதலிய தருக்கள், காமவல்லி முதலியமகரந்தமமைந்த மலர்க் கொத்திணையுடைய அழகிய பசுங்கொடிகள், தாமரை முதலியபலபுட்பங்கள், குற்றமற்ற சரம் அசரமாகிய உலகமுழுவதையும் எதிர்ப்பட்டோம் எ - று. (கக)

வேறு

நாற்பிறப்பி னெழுவகைத்தோற் றத்தெண் பத்து நான்கு நூறா
யிரமாம் யோனிபேதம், மேற்புடைய பலபொருளு மண்டந் தோறுமிவ்
வகையே யெதிர்நோக்கி யெண்ணில் கால, நோற்பவரு மெய்தரிய பரம

ணந்த னொண்டருந்திப புறத்தேக நோக்கி னேமங், காற்றலில மாதலின்
லென்ன செயகே மவனடியே பரசினமா லளவில வேதம.

(இ - ள்.) நாலவகைப்பிறபபிலுலேயான எழுவகைத் தோற்றததையுடைய எண்பததுநானகிலட்சம யோனிபேதம பொருந்திய பல பொருளகளும, அண்டஙகளி லெல்லாம இவ்வகையாக நேரேபார்தது, எண்ணிலலாத காலமவரையில, நோறபவா களும அடைதறகரிய பேரானநததலை மொணடுபெருகிப்புறதத்தேசெலலயபாாததோம. அபபொழுது வலலபமடைநதிலேமானபடியால, யாதுசெய்வோம அளவிலலாத வேத மொழிகளால் அவவிநாயகருடைய திருவடியைத துதிததோம. எ - று. (கஉ)

நாறபிறப்பு - அணடசம. சுவேதசம, உறபீசம, சராயுசம, அவறறுள முட் டையினினறு தோனறுவன அணடசம, வியாவினினறு தோனறுவன சுவேதசம, கருபபையினினறு தோன்றுவன உறபீசம, பூமியினினறு தோனறுவன சராயுசமெ னப்படும.

எழுவகைததோறறம, தேவா, மனிதா, விலஙகு, புள நீாவாழ்வன, ஊாவன தாவரம எனபனவாம

எணபததுநானகு நூறுயிரம யோனிபேத மெனபதை,

"ஊாவபதினொன்று மொனபது மானுடம
நீாபபறவை நாற்காலோா பபபதது—சீரிய
பநதமாந தேவா பதினுன கயனபடைதத
அநதமில சீாததா வரநா லைநது."—எனபதனுனறிக (கங)

கறஙகுதிரைப பெருஙகடலசூழ நெடிய வேலைக கதுவுமணா லளவி டினு மளவு காணுத, திறஙகுலவு மணடமெலா மநடடிற றேறறுந தே வாகடந தேவேச கணேச நினபொற, பிறஙகுபத மடுததோாகண முத்தி யெய்திற் பேணுமடி யேஙகளுககுப பேறு காத, வறஙகுலவு பொருள காம முளவோ வென்னு மருநதுதிகேட டருளகூாநதங கமல நாதன

(இ - ள) சுழலகினற அலையையுடைய பெரியகடலைச சூழ்நத நீணடகடற கரையைக கலஙகசசெயகினற மணலகளையளவுகணடாலும, அளவுகாணமுடியாத வலி மிகுந்த அணடங்களை யெலலாம் வயிறறிலே வைததுததோனறச செயயுந தேவாக ளுககெலலாந தேவேசனே ! கணேசபபெருமானே ! தேவரீருடைய அழகிய திருவடி யை யடுததவாகள் மோடசததை யடைவாாகளாயின விருமபுகினற அடியேஙகளுக குப பெறுதறகரிய அறமும பொருளும இனபமும உளவோ' எனறு, யாஙகள கூறிய அரிய தோததிரததைககேடடு, அமலராகிய கணேசபபெருமான (எஙகளபேரில) திரு வருள மிகுநது. எ - று (கச)

புகுநதவழி யேயெனனைப புறததுப போககிப பொலஙகுழைசே ரிருகாதின வழியே யைநதேன, றெகிழநதொழுகு மலாததுளவ விதழி மாலைத தேவரையும புறமவிடுநதா னெனறுவேத, னெகிழ்நதவுள வியா தனுககுப புகனறு னெனறு நெடியதவப பிருகுமுனி சோம காநத, னக நதமையுய வுரைததயனு ருலக மீள வருநதவஞசெய தாக்கியது மறையப புககடல.

(இ-ள்) உள்ளேபிரவேசித்த வழியாகவே யென்னைப்புறஞ்செல்லவிடுதலும் அழகிய குண்டலமணிந்த இருசெவிகளின் வழியாக, பசியதேனைத் துளித்தொழுகுகின்ற மலர்கள் பொருந்திய துளவத்தையும் கொன்றையையும் (முறையே) மாலையாக வணிந்த விஷ்ணு உருத்திரனென்னுந் தேவர்களைப் புறத்தே செலலவிடுத்தனனென்று, பிரமதேவன் உருகிய மனத்தையுடைய வியாதமுனிவனுக்குக் கூறினனென்று, பெருந் தவத்தைச்செய்த பிருகுமுனிவர் சோமகாந்தனுடைய மனங்களிப்பவுரைத்து, மீண்டும் பிரமதேவன் அரியதவத்தைச்செய்து உலகத்தைப் படைத்தவண்ணத்தையுங் கூறத் தொடங்கினன். எ-று. (௧௫)

விசுவரூபங்காட்டிய படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௬௬௩௰

# பிரமசிருட்டிப்படலம்.

மதமிக கொழுகுங் கவுளைமா முகவ
னுதரத் தினெழிந் தபினீ புரியு
மதனைப் புகலவா யெனவங் கைகுவித்
திதமிக வியா தனிரந் தனனே

(இ-ள்) மதமானது மிகுந்தொழுகுகின்ற கன்னத்தையுடைய யானைமுகக் கடவுள் திருவயிற்றினின்று நீங்கிய பின்னர், நீசெய்த அவற்றைச் சொல்லுவாயாகவென அழகிய கையைக் கூப்பி நன்மை மிகுந்த வியாதமுனிவன் (பிரமதேவனை) யாசித்தனன. எ-று. (௧)

முருகார் முமலர்ப் பிரமன் முரல்வண்
டருகார் மதக்க கவுளா னைமுக
னிருகா ழுமிறைஞ் சியிரும் பிறவி
யொருகா லுமுறுக் கதையோ துவனால்.

(இ-ள்) வாசமபொருந்திய தாமரை மலரிலுள்ள பிரமதேவன், ஒலிக்கின்ற வண்டுகள் அருகே யாடாநின்ற மதப்பெருக்கமைந்த கவுளையுடைய யானைமுக விநாயகக்கடவுளது உபய திருவடியைப் பணிந்து பெரிய பிறவியை ஒருகாலத்திலும் அடையாத சரித்தை உரைக்கத் தொடங்கினன். எ-று.

கடவுள்-யானைமதஞ் சொரியுமிடம் இருமபிறவியென்றது நீங்காமைபற்றி.

இருக்கா தியினு லறியா விறைவ
னுருக்கா தலினு னினையா துளமார்
தருக்கா லுலகந் தரவே முயல
வெருக்கா ணவெழுந் ததுவிக் கினமே.

(இ-ள்) இருக்கு முதலிய வேதங்களால் அறியப்படாத தலைவராகிய கணேசப்பெருமானது திருவுருவத்தை ஆசையோடு தியானஞ்செய்யாது மனத்திற் பொரு

நதியா இறுமாப்பினால் உலகத்தைப் படைக்கும்படி எத்தனிக்க, இடையூறும் அச்ச முண்டாகும்படி தோன்றியது. எ - று (௩)

முடியொன் றிருநீண் முகமூன் றுவிழி
கடியொன் றியநாற் சிகைகா துகளைந்
தடியா றுகையே ழொடுமெய் சமுற
நெடிதாக கையினின் றனபற் பலவே

(இ - ள.) ஒரு சிரமும், இரண்டு நீண்ட முகங்களும், மூன்று கண்களும், மணம்பொருந்திய நான்கு சடைகளும், ஐந்து செவிகளும், ஆறு கால்களும், ஏழு கைகளுங்கொண்டு அச்சமுண்டாகப் பெருவடிவத்துடன் பற்பல உருவங்கள் தோன்றின எ - று (௪)

இவ்வா றெழிலின் றிபுறப் பெவையு
மொவ்வா தனவா யெதிருற் றவைதாந்
துவ்வா னமிழ்தந் தொடர்சே வரினென்
னைவா யறிவுங் கெடவார்த் தனவே.

(இ - ள) இவ்வகையாக அழகில்லாது அவயவங்கள் யாவும் (ஒன்றற்கொன்று) ஒத்திராதனவாகி, அவை யெதிர்ப்பட்டு, உண்ணத்தக்க சிறந்த அமிர்தத்தைப் பின்தொடர்ந்த சேவனைப்போல என்னுடைய ஐவகைத்தான அறிவுங் கெடும்படி ஆர்ப்பரித்தன எ - று

துவ்வான் என்பதில் - து - புனிதமெனினுமொக்கும் (௫)

எள்ளுஞ் சிலவெற் றமெய்யுஞ் சிலவாய்
விள்ளுஞ் சிலவெய் துறுபா வைவிழிக்
கொள்ளுஞ் சிலகூ டியலைத் துவிழத்
தள்ளுஞ் சிலதாக் கினசிற் சிலவே

(இ - ள) (அவ்விகார ரூபங்களில்) சில இழித்துப்பேசும் சில அடிக்க வெழும், சில வாய்திறந்துபேசும், சில கொடுமை பொருந்திய கட்பார்வையைச் செய்யும்; சில ஒன்றுகூடியலைத்து விழும்படி தள்ளும் சிற்சில மோதின (இவ்விதமாக வெண்ணிறந்த துன்புகள் செய்தன) எ - று. (௬)

இவ்விக் கினமென் கொலெழுந் தநமைக்
கவ்விக் கடுகின் றதெனக் கவலுஞ்
செவ்விக் கணமுந் தொதாசிந் தையெனக்
கவ்விக் கினரா சனருட் டிறனால்

(இ - ள) இவ்விடையூறு யாதோ? (இவ்வாறு) எழுந்து நம்மைக் கவ்விக்கொண்டு துன்புறுத்துகின்றதென்று, மனம் வருந்துஞ் சமயத்திலே, அந்த விக்கினராசப் பெருமானாகிய விநாயகக்கடவுளுடைய திருவருட்டிறத்தினாலே எனக்கோர் எண்ணமுதித்தது எ - று (௭)

முக்கட் கனியா னைமுகன் கழலைக்
கைக்கூப் பினிபோற் றுநர் நாசம

மிகுதிப் படைப்புக் குவிழைந் தமையாற்
றொக்குந் துயரஞ்செய் ததுசூழந் திடமே

(இ - ள்) மூன்று கண்களையும் மதக்களிப்பையு முடைய யானைமுக விநாயகப் பெருமானது திருவடியைக் கையிலுள்ள கனியைப்போலத் தியானஞ்செய்யாது, சுயேச்சை மிகுந்து படைத்தற்றொழில் செய்வதற்கு விருப்பினமையால், இங்கண் சூழ்ந்து நெருங்கித் துன்புவிளைத்தது எ - று (அ)

இனிமென் புனலா டியெழுந் துமிகப்
புனிதங் கொடுபூம்பகை முகனன் மனுவை
நனியெண் ணினலா துநமைத் தொடருந்
துனிதீர் வரிதென் றுதுணிந் திடினான்

(இ - ள்) (இக் கீரவேண்டுதலின்) இனி மெல்லிய புனலின் மூழ்கியெழுந்து மிகவும் பரிசுத்தனாகி, துவாரம்பொருந்திய கையையுடைய யானைமுக விநாயகப் பெருமானது மந்திரத்தை மிகவுங் கணித்தாலன்றி நம்மைத் தொடர்ந்துள்ள துன்பம் ஒழிதலருமையென்று துணிவுற்றயான் எ - று (௯)

வேறு

விதியுளிமென் புனலாடி வெண்ணீறு மெய்ப்பணிந்து
கதியருளு மேரம்பன் காமாதிரு வுருவனைத்து
மதியிலுறத் தியானித்து வளர்யோகத் தினிதிருந்தேன்
பொதிதருமவ் வியோகத்துப் போந்ததெனக் கொருகாட்சி

(இ - ள்) விதிப்படி மெல்லிய நீரின் மூழ்கி, உடலில் திருவெண்ணீற்றினை யணிந்து, உயர் பதவியை யநுக்கிரகிக்கும் ஏரம்ப மூர்த்தியின் அழகிய திருவுருவ முழுவதையும் புத்தியிற் பொருந்தத் தியானஞ் செய்து, உயர்கின்ற யோகமாகத்தில் இனிதாகப்பொருந்தியிருந்தேன் பொதிந்துள்ள அந்த யோகத்திலே எனக்கொரு தோற்றம் உண்டாயிற்று எ - று (௧0)

எழுகடலும் வரம்புகடந் தெங்குநிமிர் புனலிடையோர்
பழுமரத்தி னிலையொன்றிற் பாலனொருவன் றுயிலக்
கழுமலற வடுத்தவனைக் கைபெயர்த்துத் துயிலெடுத்தே
னொழுகுமத முகத்தொடுதன் னுருவுதெரித் தருளினனே

(இ - ள்) சத்த சாகரங்களும் எல்லைதாண்டி யெங்கும் அதிகரித்துள்ள நீரிலே, ஓர் ஆலமரத்தின் இலையொன்றிலே பாலனுருக்கொண்டொருவன் (யோக நித்திரை செய்ய, (யான்) துன்பமகல அவனைச் சமீபித்துக் கையாற்றட்டி நித்திரை விழிக்கச் செய்தேன் (அவன்) மதமொழுகும் யானை முகத்துடன் (விநாயகக்) கடவுளுடைய திருவுருவத்தைத் தரிவித்தருளினன் எ - று

பழுமரம் - ஆலமரம்
யோகத்திற் காட்சியென்றது ஓர் சொப்பனமெனக் (௧௧)

ஆங்கவனை யடிவணங்கி யடியேற்குச் சிருட்டிமுனந்
தாங்குகவென் றருள்புரிந்தாய தமியேனு மதுகொண்டு

பாஙகுபெற முயலவுற்றேன பலவிடரு மலேப்பவது
நீஙகினே னினிபபடைக்கு நிலேயருளென றேனெனலும்.

(இ - ள) அபபொழுது அவ்விநாயகக் கடவுளேத திருவடியிற் பணிந்து கட வுளே! அடியேனுககுச் சிருட்டித தொழிலேச் செய்கவென்று முனனமே திருவருள செய்தீர், எளியோனும அக்கட்டளேயை மேறகொணடு தகுதியாக முயறசி செயதேன. பல துனபஙகளு முணடாகி வருதத அரளேயொழிநதேன இனிச சிருட்டி செய்யும நிலேமையைத திருவருள புரிகவென்று கூறினேன (அபபடியான) சொலலவும எ-று.

எனனருளா லாவதென வெண்ணுது நினைவியா
வுன்னியிட ருழநதனேமற றாயினறி முடிவெயதப
பனனுதிமோ ரக்கரத்தைப பதிலக்கங கணிமுடிவின்
முனனுதுமென றமமனுவை மொழிநதருளி ஞனிறைவன.

(இ - ள.) எனனுடைய திருவருளால் நிகழ்வதே என்றுகருதாமல், உனது வலலமையா லாவதெனறு கருதிதகுனபமடைநதனே. இனி, இடையூறிலலாமல நிறை வேற ஏகாட்சர மநதிரத்தை யுபதேசிபபோம. (நீயதனேப்) பதிலட்சந்தரம சபிக்கக் கடவாய. இறுதியில யாம பிரசனன மாவோமெனறு திருவாய மலாநதருளி, இறைவ ராகிய விநாயகக்கடவுள அமமநதிரத்தை யுபதேசிததருளினர் எ - று (சுங)

யோகததி னருளசெய்த வுறுதிபிடித தேவனன
வேகத்தி னுமனுவை யிராறுவரு டதலெலலேத
தாகததிற கமலத்தோரா தாளுனறி நினறெண்ண
நாகததை வயிறறசைதத நமபெருமா னெதிாநினறுன.

(இ - ள) யோகிருககையில், திருவருள் புரிநத வுறுதிமொழியைப் பற்றுகக் கொணடு, ஏகாடசரத்தாலான அமமநதிரததைப பனனிரு வருட காலம் வரை யில நீரிலுளள தாமரை மலரில ஓர காலேயூனறி நினறு சபிகக, சாபபததை (க்கச்சாக) வயிறறிற் கட்டிய நமது கணேசப்பெருமான் பிரசனன மாயினா எ - று. (சுச)

ஒருகரததின மழுபபடையு மொருகரததிற கமணடலமு
மிருகரததி னபயவர தமுநதாஙகி யெதிாநினற
பொருவிலியை வேதஙகட கெட்டாத பூரணனேக்
கருவிலியைக கதியிலியைக கைதொழுது வணஙகினேன்.

(இ - ள) ஓர் திருககரததில் மழுவாயுதமும, ஓர் திருக்கரததிற் கமண்டலமும், இரண்டு திருக்கரஙகளில (முறையே) அபயவரதமுங கொணடு எதிரே தோன்றிய ஒப்பில்லாத கணேசப் பெருமானும், வேதஙகடகு அதீதனுகிய பரிபூரணனும், பிறவி யிலலாதவனும, (தனககு மேலோர்) கதியில்லாதவனுமாகிய தலேவனேக் கைகூடபபி நம ஸ்கரித்தேன். எ - று. (சுரு)

தோற்றுமே யுலகனேத்துந் தோறறியளி யாதளித்துப்
பாறறுமே பாறறியிடும பண்ணவநின பதமபோறறி
தேறறுமே யுயிரனேததுந தேறறிமல மாயைகனம
நீறறுமே நீறறியரு ளினமலநின பதமபோறறி.

(இ - ள்) உலகங்களையெல்லாம் படையாமலே படைத்து, காவாமலே காத்து, அழியாமலே யழித்துவிடுகின்ற தேவனே! உன்னுடைய திருவடிகள் காக்க. தேறாமலே உயிர்களைத் தேற்றி, மலமாயா கன்மங்களை நீக்கியருள்கின்ற மலரகிதனே! உன்னுடைய திருவடிகள் (அடியேனைக்) காக்க. எ - று.

இச்செய்யுளால் சிருஷ்டியாதி காரியங்கள் இறைவனுடைய இச்சை மாத்திரையாய் நிகழுமெனக் கூறினதாயிற்று. (௧௫)

உரையானு முணர்வானு முடலானு மறிவரியாய்
வரைமார்பு திணிதோளு மதிமுடியு மலர்ப்பதமும்
விரையார்குங் குமக்கலவை மெய்யணிந்த கோலமுமாய்க்
கரையாநெஞ் சமுங்கரையக் கண்ணெதிர்நின் றனைபோற்றி

(இ - ள்) வாக்கினாலும் மனத்தினாலும் தேகத்தினாலும் அறிதற்கரியவனே! மலையையொத்த மார்பும் வலிதங்கிய புயமும் சந்திரனையணிந்த திருமுடியும் தாமரை மலர்போன்ற திருவடியும் வாசம்பொருந்திய குங்குமச்சாந்தையணிந்த தேகப்பொலிவுமாக, உருகாத மனமுருகும்படி என் கண்ணெதிரே தோன்றியவனே! போற்றி. எ - று.

இன்னவா றேத்தெடுத்தேத்தற் கேரம்ப னருள்கூர்ந்தே
யுன்னினீ கொள்வரங்க ளுரையென்ன வெதிர்வணங்கி
நின்னதாண் மறவாத நிலையருளி விக்கினங்க
ளென்னுறா வகையுலகந் தோற்றவர மருளென்றேன்.

(இ - ள்.) இவ்வகையாகத் துதிசெய்த வெனக்கு ஏரம்பமூர்த்தி திருவருள் மிகுந்து, நீ விரும்பிக் கொள்ளும்படி (கருதிய) வரங்களைக் கூறுகவென்று வினவ, (யான் அப்பெருமானை) எதிரே பணிந்து, தேவரீருடைய திருவடியை (எப்பொழுதும்) மறவாததன்மை யருள்செய்து, இடையூறுகள் சம்பவியாதவிதமாக உலகத்தைப் படைக்க வரமருள்கவென்று யாசித்தேன். எ - று. (௧௬)

வரமருளி யேரம்ப னகிழ்கூர்ந்து நந்தமக்குப்
பரவுறுஞ் சத்திகளும் பலவவற் றுண் ஞானமென
விரவுறுங் கிரியையென மிக்குளசத் திகட்டமைக்
கரவிலுளங் கொண்டுலகங் காண்கவென மறைந்தனனால்.

(இ - ள்) விநாயகக்கடவுள் (அவ்வாறே) வரமநுக்கிரகித்து, களிப்புமிகுந்து நமக்குத் துதிக்கத்தக்க எண்ணிறந்த சத்திகளுமுள. அச்சத்திகளில் ஞானமென்றும், பொருந்திய கிரியையென்றும் மேம்பட்ட இரண்டு சத்திகளை வஞ்சமில்லாத (உன்) மனசிற்கொண்டு, உலகங்களைப் படைப்பாயாகவென்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினார். எ - று. (௧௭)

கொடுத்தவரஞ் சிரமீது கொண்டுளத்திற் றியானித்தேன்
மடுத்தவிரு சத்திகளு மற்றொருவர் நிகரின்றித்
தொடுத்தபெரு வனப்பினராய்த் தொல்லுலகை மந்திரமா
வெடுத்துரைக்கும் பெயர்சித்தி புத்தியென வெதிர்போந்தார்.

(இ - ள்) (விநாயகக்கடவுள்) பிரசாதித்த வரத்தை உச்சிமேற்கொண்டு மனத்தில் தியானஞ்செய்தேன். நிறைவாகிய (அருளையுடைய) அவ்விரு சத்திகளும், பிற

ரொருவர் (தமக்கு) ஒப்பில்லாமல் நெருங்கிய பேரழகுடையவர்களாய், பழமையாகிய உலகினர்க்கு மந்திரமாய் எடுத்துச்சொல்லுகின்ற சித்திபுத்திகளென்ப பெயர்கொண்டு எதிர் தோன்றினார்கள் எ - று (௨௦)

எதிர்போந்த மாதரைநா னினிதிறைஞ்சித் தவமவளார்
துதிராமை யெனைக்காப்ப வுற்றருளு மன்னைமீர்
முதிராத வொடுமெனக்கு மூவாத மங்களிர்களாயப்
பிதிராத வரமருளிப் பேணுகவென் றிரந்திட்டேன்

(இ - ள்) எதிரே வந்த இருமாதர்களையும் நான் இனிமையாக வணங்கி, என் தவமானது வீணே கெடாமல் அடியேனைக் காப்பாற்றும்படி எழுந்தருளிய தாய்மார்களே! மிக்க ஆசையுடன் எனக்கு நற்புத்திரிகளாய் நீங்காத வரத்தையுந்தவிக் காப்பீர்களாகவென்று (அவர்களை) யாசித்தேன். எ - று

மூவாத - கெடாத. (௨௧)

சத்தியிரு வருமத்தற்குத் தாமிசைந்து வரங்கொடுப்ப
முத்திவெளி தடுத்தாரின் முகமலர்ந்து விநாயகனைச்
சித்தியொடும் புத்தியொடுஞ் சேர்ந்திருக்குங் காட்சித்தகப்
பத்திமிகத் தியானித்துப் படைத்திடமர் தொடங்கினேன்.

(இ - ள்) இரண்டு சத்திகளும் அவ்வெண்டோளுக்கு இணங்கி (அவ்வாறே யாகுகவென்று) வரமுதவ, இலேசாக மோட்சத்தை யடைந்தவர்களைப்போல முகமலர்ச்சிகொண்டு, விநாயகக்கடவுளைச் சித்திபுத்தியென்னுஞ் சத்திகளுடன் சேர்ந்து விளங்கும் பாவனையாக மிக்க பத்தியுடன் தியானஞ்செய்து, (உலக) சிருட்டியைச் செய்யும்படி ஆரம்பித்தேன் எ - று (௨௨)

வேறு

வழுவின் றியென் றுமனத் தொழிலா
லெழுமைந் தரைமுந் துறவின் றவரைப்
பழுதின் றுபடைத் திடுவீ ரென்றுந்
தொழுதங் கவரே கினர்சூழ் துறவில்

(இ - ள்) குற்றமில்லாமல் என் மனச்சிருட்டியால் முற்பட ஏழு புதல்வர்களைப் படைத்து (புத்திரர்களே! அங்கலக்ஷணக்) குறைவின்றிச் சிருட்டியைச் செய்யுங்களென்று அவரைநோக்கிக் கூறவும், அவர்கள் பணிந்து கடுந்துறவிகளாய்ச் சென்றார்கள் எ - று (௨௩)

இசையா தவரே கியிருந் தவமுற்
றசையா வருளா லருளாவீ டுற்று
நசையாற் பினுநா னெழுமைந் தரமை
வசைதீ ரவுயிர்த் துவகுத் தனனே

(இ - ள்) அவர்கள் (என் மொழிக்கு) இணங்காமற் பெருந்தவத்தைச்செய்து நீங்காத திருவருளால் இன்பவீட்டை யடையவும், நான் (மீண்டும் சிருட்டித்தொழில் பெருகும்படி) பெருவிருப்பினோடு பின்னும் ஏழு புத்திரர்களைக் குற்றமறப்பெற்று (அவ்வாறே) கூறினேன் எ - று. (௨௪)

ஆனோரு முன்னோரி னகல விட்டும்
பின்னோன் சனகா தியரே யருளோர
நன்னா ரதமுனை யுந்தன் றுதவி
யென்னாக் கையினுமா வையுமீன் றனனே

(இ - ள்) அவர்களும் தம் முன்னோரைப்போலவே (துறவிகளாய்) சென்று விடவும், நான் அதன்பின்னர் சநகாதியரையும், மிக்க அருள்பொருந்திய நாரதாதியரையும் நன்குபடைத்து, என் சரீரத்தினின்றும் (மற்றுமுள்ள) எல்லாவற்றையும் படைத்தனன். எ - று.

சநகாதியர்—சநகன் - சநந்தனன் - சநாதனன்-சநத்குமாரனெனப்படுவோர்.

நாரதாதியர்—சத்தவிருடிகள் - கர்த்தமர் - நாரதர் - தக்ஷர் எனப்படுவோர்.

வேறு.

அந்தணர் குலமு மங்கியு முகத்தி லரசரைப் புயத்திலவர் துடையிற்
சுந்தர வணிகர் குலத்தினைப் பதத்திற் சூத்திரர் தமையுமுன் படைத்துச்
சந்திரன் மனத்திற் றழற்கதிர் விழியிற் சாற்றிய முகத்தினிந் திரனை
மந்தணை மாகுஞ் செவியினிற் பிராண மருத்துக ளுந்தியில் வானம்,

(இ - ள்) வேதியர் குலத்தையும் அக்கினியையும் முகத்தினின்றும், அரசர்களைத் தோளினின்றும், அழகிய வைசியகுலத்தை நெடிய துடையினின்றும், சூத்திரர்களைப் பாதத்தினின்றும் முற்படச் சிருட்டிசெய்து, சந்திரனை மனத்தினின்றும், சூரியனை விழியினின்றும், சொல்லுகின்ற இந்திரனை முகத்தினின்றும், பிராணாதி வாயுக்களை மறைவிடமாகிய செவியினின்றும், ஆகாயத்தை உந்தியினின்றும். எ - று

இதுமுதலிரண்டு பாடல்கள் ஒருதொடர். (உ௬)

முடியினிற் றுறக்க மாதியா மும்பர் மொய்த்துவாழ் பதங்களை முன் மொ
வடியினிற் பூமி யறைந்திடு காதி லாசையா ரெட்டையு மாக்கி [ழிந்த
நெடியகுன் றாதி சராசர மனைத்து நிலைபெற வளித்தனென் னென்னப்
படியறத் தவத்து வியாதனுக் குரைத்தான் பங்கய நாண்மலர்ப் பிரமன்.

(இ - ள்) மோட்ச முதலியனவாகிய தேவர்கள் நெருங்கிவாழும் பதவிகளை முடியினின்றும், பூமியை மேற்கூறிய பாதத்தினின்றும், திசைகளெட்டையும் (முன்) சொல்லிய காதினின்றும் படைத்து, நெடிய மலைமுதலிய சராசரப்பொருள்களையும் நிலைபெறும்படி சிருட்டிசெய்தனன் என்று, அன்றலர்ந்த தாமரைமலரில் வெழுந்தருளியுள்ள பிரமதேவன் ஒப்பற்ற தவத்தைச்செய்த வியாசமுனிவனுக்குக் கூறினன் எ-று

நாண்மலர் என்பதற்கு நாளத்தையுடைய மலரென்றும் பொருளாகும்.

நாள் - அம் —நாளம் அம் - சாரியை (உ௭)

உருத்திரர் மாயனக்கர் ஈரமனு றுப்பவர் காமிசைப
பாலர், திருத்தறு மனுக்கள் முனிவர்கள் வசுக்கள் செழித்திடு மியக்
கர்கள் கணங்கள், கருத்துறு திசைக ணதிகட ருக்கள் களுலிய பறவை
கள் பசுக்கள், பொருந்துயிர் வருக்க மெனவிரு பதினொரு சருக்கமா..
பொலிந்ததிவ் வுலகம்

(இ - ள்) உருத்திரன் - திருமால் - பிரமன் - அக்கினி - சலம் - பூமி - பொருந்திய ஆகாயம் - காற்று - திக்குப்பாலகர்கள் - திருத்தம் பொருந்திய மநுக்கள் - முனிவர்கள் - அட்டவசுக்கள் - நெருங்கிய இயக்கர்கள் - (பதினெண்) கணங்கள் - எண்ணத்தக்க கிரகங்கள் - நதிகள் - கடல்கள் - விருட்சங்கள் - நிறைந்த பறவைகள் - பசுக்கள் [நாற்காலிகள்] பொருந்திய உயிர்களாகுமென்று சொல்லப்படும் இருபத்தொரு பிரிவாக உலகமானது விளங்கியது எ - று. (௨௮)

எயிற்றுக்கா தருநதி வளைசூழ் கமலத் திருந்தவன் வையகம்
படைத்த, தழிந்தவர் புனற்று மனையினர் நடுங்க வழுவுயிர் வேறாக்
தரச, செறிந்தபூங் கந்தற் சித்திபுத் திகடந் திருமணஞ் செப்புதும் வினை
கள், பறிந்துபா முராக்க கேணபதி யென்று பன்னுவன் பிருகுமா தவனே

(இ - ள்) பகைவர்கள் அஞ்சும்படி நெருப்பைக் கக்கும் வேலாயுதம் ஏந்திய கையையுடைய சோமகாந்த மன்னவனே! வண்டுகள் அடித்து மகரந்தப் பொடியை யுண்டு மொய்க்கின்ற தாமரை மலரில் வாழும் பிரமதேவன் உலகத்தைச் சிருட்டிசெய்த வகையைத் தெரிந்தவாறு சொன்னோம் நெருங்கிய மலர்மாலையணிந்த அளகபாரத்தையுடைய சித்திபுத்திகளது திருமணத்தை (இனி)ச் சொல்லுவோம் வினைகள் கெட்டொழிய மதித்துக் கேட்பாயாக வென்று பெருந்தவசியாகிய பிருகு முனிவன் சொல்லலாயினன் எ - று (௨௯)

பிரமசிருட்டிப் படலம் முற்றிற்று

அகத் திருவிருத்தம் - ௯௪௯.

# திருமணப்படலம்.

தொழுகுல மாகி முன்னர்த் தோன்றிய மகளிர் பின்னர்
பழுதறு தேவ யாங்குப் படர்ந்தனர் தெரிக்க வென்ன
விழுமிய வியாதன் கேட்ப வேதனு மகிழ்ந்த னோதந்
செழுவிய திருக்கல் யாணத் திறத்தினைச் செப்ப லுற்றான்

(இ - ள்) வணங்கத்தக்க சிரேஷ்டமாகிப் பூர்வத்திலே தோன்றிய (சித்திபுத்திகளென்னும்) மாதர்கள் அதன் பின்னர் எங்குச் சென்றார்கள்? பிரமதேவனே! அதனைக் கூறுகவென்னச் சிறப்புடைய வியாசமுனிவன் கேட்க, பிரமதேவன் மனங்களித்து, அம்மாதர்களுடைய சிறப்பமைந்த திருமணஞ் செய்ததைச் சொல்லத் தொடங்கினன் எ - று. (௧)

உலகெலாம் படைத்த பின்றை யுயிர்த்தொகை பலவு மோங்கி
நிலவிவாழ் கின்ற நாளி னின்மலக் கணேசன் பாதம்
நலமெலா நிறைந்து நின்ற நாரத முனிவன் போற்றக்
குலவுமா தரவிற் சென்றான் கோதறு கயிலா யத்தில்

(இ - ள்) உலக முழுவதையும் சிருட்டித்தபிறகு, பலவகைப் பிராணகோடிகளும் விருத்தியடைந்து விளங்கி வாழுங்காலத்தில், மலரகிதராகிய கணேசப்பெருமானை நன்மை முழுவதும் நிறைந்து விளங்கும் நாரதமுனிவர் துதிசெய்யும்படி விளங்கிய ஆசையுடன் குற்றமற்ற திருக்கயிலாயகிரிக்குச் சென்றனர். எ - று. (௨)

அரியணை மீது வைகு மைங்கரன் பாதம் போற்றிப்
புரிநரம் புளார்ந்த வீணைப் புத்தமு தினிது தேக்கி
விரிபுகழ் பாடிச் சால மெய்யருள் பெற்றுப் பின்னர்த்
தெரிவதொன் றுண்டு நாயேன் செப்புவேன் கேட்க வென்றான்.

(இ-ள்) சிங்காதனத்தின் பேரில் எழுந்தருளியிருக்கும் ஐந்து திருக்கரங்களையுடைய விநாயக மூர்த்தியின் திருவடியைத் துதித்து, புரியினையுடைய நரம்புகளைத் தைவந்து, வீணையினிடத்துண்டாகிய புதியஅமுதத்தைப் பெருக்கி, (அவருடைய) பரந்தகீர்த்தியைத் துதிசெய்து, மிகுதியாக அவரது உண்மை யருளையடைந்து, பிறகு நாயினை யொத்த அடியேன் யோசிப்ப தொன்றுண்டு, சொல்கின்றேன், கேட்பீர்களாகவென்று கூறலாயினன் எ-று (௩)

முள்ளரைக் கமலச் சேக்கை முன்னவன் றியானித் திட்ட
வுள்ளத்தி ருந்து போந்தா ரோரிரு மாதராந்த
வெள்ளெழின் மாதர் மன்ற லாற்றினின் பாலராகத்
தெள்ளிய மனத்தி லெண்ணஞ் செய்தன னனைய செல்வன்

(இ-ள்) முட்கள் பொருந்திய அரையையுடைய தாமரை மலரில் வசிக்கும் முன்னோனாகிய பிரமதேவன் தியானஞ்செய்த மனதிலிருந்து ஒப்பற்ற இரண்டு கன்னியர்கள் தோன்றினார்கள் அள்ளிக்கொள்ளத்தக்க அழகையுடைய அம் மங்கையர்கள் மணவினையாற்றால் தேவரீரை யடையத்தக்கவர்களென்று அந்தப் பிரமதேவன் தெளிந்த தன் மனதில் யோசித்திருக்கின்றனன் எ-று (௪)

இலக்கண மான்ற மைந்தர்க் கினிதுற வமைக்குங் காலை
மலக்குறும் பகற்று நின்மெய் வடிவினை யெண்ணும் வேதன்
விலக்கற மடவார்க் காயின் விளம்புமம் மடவார் தங்கள்
கலக்கமில் வடிவ முற்றுங் கருதுவன் வேறென் சொல்கேன்.

(இ-ள்) பிரமதேவன் சிறந்த ஆண்மக்கட்கு (உத்தம) இலக்கணங்களை இனிதாக வமைக்குங் காலத்தில், மலக்குறும்பை யகற்றுந் தேவரீருடைய திருவுருவத்தின் சொரூபத்தைத் தியானிப்பான் நீங்குதலற்ற மாதர்கட்கு (இலக்கணங்களையமைப்பது) ஆனால், (முன்சொல்லிய அம்மங்கையர்களது) கலக்கமில்லாத உருவமுழுவதையுந் தியானஞ் செய்வான் (அவர்கள் சிறப்பைப்பற்றி) வேறே யாது சொல்லுகேன்? எ-று (௫)

பெருத்திடல் சுருங்க லின்றிப் பொருத்தமே லணிச்சம் பூமேல்
விருத்தினுங் குழைந்து மென்மை யெய்துவார் கொடியின் மேனியு
முருத்தகு கவிகை சங்க முற்றுளை பல்வுந் தாங்கித்
திருத்தகு கமலம் வென்று சிவந்தவா ளடிகண் மாதோ.

(இ-ள்) உருவமைந்த குடை சங்கம் இவைபோன்ற பலரேகைகள் பொருந்தி, சிறப்புப் பொருந்திய தாமரைமலரைச் சயித்துச் சிவப்புற்ற (அவர்கள்) உள்ளங்கால்கள் பூரித்தல் மெலிதல் (முதலிய தோடங்கள்) இல்லாமல், இரைத்த மெல்லிய அனிச்ச மலரின்மேலிற் பொருத்தினாலும் வாடிக்கன்றிப்போகும் நெடிய கொடி மின்னலை யொத்திருக்கும் எ-று (௬)

(இ - ள்) மிகப் பூரித்திருத்தல் மிக்க உயர்வுற்றிருத்தலென்று சொல்லுங் குற்றங்களினீங்கி, தகுதியாகிய அளவுடன் பருத்துத் தோன்றி மென்மைத் தன்மை பொருந்திய குதிக்காலின் அழகு அளவில்லாத தவக்கதையுடையவர்கள் ஆருதாரத்திலும் அடைய வாடி அகப்படுத்துகின்ற அழகிய பந்தினைப்போலும் எம்பெருமானுகிய தேவரீருடைய கையிலுள்ள பந்தினையும்போலும் விளங்கும் எ - று (௧௧)

நரம்பெழு லுயர்த லின்றி நலத்தகத் தசைந்து செம்பொன்
வரம்புசெய் சிறுத ராசின் வட்டமாம் பரட்டின் வண்ண
நரம்பொடு மயிர்தோற் றாக நறுந்துடைக் கணைக்கா லேனை
யரம்பையும் வருந்தச் செய்கை வாவுநா ழிகையும் போலும்

(இ - ள்) பரட்டின் அழகானது நரம்பெழுச்சலும் உயர்தலுமில்லாது நன்மை பெற்ற தசைபிடியுற்று, செம்பொன்னை யளவிடுகின்ற சிறு தராசின் வட்டவடிவாம். நரம்பும் மயிருந் தோன்றாத நல்ல துடை கணைக்கால்கள் நோக்க அரம்பையும் வருந்தச்செய்து அவாவுகின்ற நாழிகை வட்டிலையும்போலும் எ - று (௧௨)

ஏற்றுத லின்றித் தாள வட்டமாய்த் தசைந்து நுண்மை
முற்றவுங் கமியா திருக்கு மொய்யெழின் முழந்தாள் முன்னர்ச்
சொற்றமென் குறங்கு சேர்ந்து துணைசெய்ந் திடுநா லாறெ
ழுற்றிடும் விரலி னெல்லை யுறுவது நிதம்ப மன்றே

(இ - ள்) ஏறுதலில்லாமல் தாளவட்ட முற்றத் தசைகொண்டு நுண்மை முழுதும் வெல்லும் அழகு மிக்க முழங்காலானது முற்கூறிய மெல்லிய துடையுடன் சேர்ந்து துணைகொண்டிருக்கும். நான்கும் ஆறுமென்று பொருந்திய விரற்கடையின் அளவு பொருந்தியது நிதம்பமாகும் எ - று (௧௩)

பெருகிய மதமா யானைப் பிடியொடு கமட மென்று
மருவிய நிதம்பத் தலகுன் மயிருறச் சதுர மாகா
துருவமிக் குயரா நீளா தாழ்த்தா வுயர்ந்த போதித்
தருவளர் இலைசிற் றால வட்டமுந் தாழ்த்தி வைக்கும்

(இ - ள்.) பெருகிய மதமயக்கத்தையுடைய யானைப்பிடியையும் ஆமையையும் வென்று பொருந்திய நிதம்பத் தலகுலானது மயிருறாதும், சதுரமாகாதும் உருவம் பெற்று, உயராதும், நீளாதும், ஆழாதும், உயர்ந்த அரசமரத்தில் வளர்கின்ற இலையையும், சிறிய ஆலவட்டத்தையும் அவமானப்படுத்திவைக்கும் எ - று (௧௪)

வாரிச மராவின் மானின் குளம்படி மருட்டித் தேசாய்ச்
சீரெலி மயிர்போ லச்செறிந் துமென் மயிரு ளோங்கி
யாரெழின் மணிகொண் டாகா மடிப்புமிக் ககற்சி வாய்ந்த
தேருறு பள்ள மான சுழியிவை யிலது செவ்வாய்

(இ - ள்) (நிதம்பத்தின்) செவ்வியவாய தாமரை இதழையும், பாம்பின் படத்தையும், மான்குளம்படியையும் மயங்கச்செய்து ஒளிமிகுந்து, சிறந்த எலியின்மயிர் போல மெல்லிய மயிர்கள் நெருங்கி, உள்ளேயுயர்ந்து, அழகுபொருந்திய மணியைக் கொண்டு, விலக்கத்தக்க மடிப்பும் மிக்கவிரிவும் இடப்புறத்துப் பள்ளமும் பொருந்திய சுழியும் (ஆகிய) இக்குற்றங்களில்லாததாகும் எ - று (௧௫)

பருத்துயர்ந் துறவு மென்மை பயின்றன சகனங் கொங்கை
வருந்திட வறுமை யெய்தி யிருந்தது மருங்கு லுந்தி
பொருந்தக வகன்று தாழ்ந்து வலஞ்சுழித் துயரு ரோமஞ்
செருத்தரு நரம்பு நீங்கித் திகழ்ந்தொளி பயிலா நிற்கும்

(இ - ள்) சகனங்கள் பூரித்துயர்ந்து மிகவுமென்மைத்தன்மை பெற்றன. கொங்கைகள் வருந்தும்படி வறுமையடைந்து இடையானது தளர்ந்தது. கொப்பூழ் அழகுபொரு விசாலமாகிய ஆழமுற்று வலஞ்சுழிபெற்று, உயர்ந்த உரோமங்களும் போர்செய்யும் நரம்புகளுமொழிந்து பிரகாசித்து ஒளிவிளங்காநிற்கும் எ - று.

சகனம் - துடையின் உட்பிரதேசம்.

செருத்தரு நரம்பென்றது பின்னிக்கொண்டிருத்தலின் (கசு)

பல்வகைச் சுழியு ரோமம் பருத்தநீண் மடிப்பு மின்றி
நல்வரை மூன்று தாங்கி நறியவா லிலைபோல் வாய்ந்து
சொல்வரை கடந்த தேசிற் றுலங்கிய வயிற்று நாப்ப
ணளவைகொண் டொழுகிற் றென்ன வணிந்தது ரோம வல்லி

(இ - ள்.) பலவிதமான சுழிகளும் உரோமங்களும் பருத்து நீண்டமடிப்புகளுமில்லாமல், நல்ல மூன்று வரைகளைப்பொருந்தி, நல்ல ஆலிலைபோலமைந்து, சொல்லத்தக்க எல்லையில்லாத அழகுடன் விளங்கிய வயிற்றினமத்தியில், இருளானது அளவுகொண்டொழுகினாற்போல உரோமவல்லியை யணிந்துள்ளது எ - று.

உரோமவல்லி என்றது உரோமாவிசை. வல்லி - கொடி (கஎ)

என்பொடு நரம்பு ரோம மிவைகடோற் றாதுமெல்லென்
றின்புறத் தசைந்து சீர்கொண் டிருந்தன விலாப்பு றங்க
ளன்புறு மிசைய மாழா தங்குல மறுமூன் றாகி
மின்படைத் தசைந்து ரோமம் விரவுறா திருந்த தன்றே.

(இ - ள்) விலாப்புறங்கள் என்பும் நரம்புமாகிய இவைகள் தோன்றாமல், மென்மையாய், இன்பமுறத்தசைபொருந்திய சிறப்புற்றிருந்தன. ஆசைபொருந்திய இசயமானது ஆழமற பதினெட்டங்குலவளவாகி ஒளியுற்றுத் தசைப்பிடிகொண்டு உரோமங்களின்றி யிருந்தது எ - று (கஅ)

புடைபரந் தெழுந்து நீலம் புணர்த்திய தெனக்கண் வாய்ந்து
மிடையற மிடைந்த மார்பின் வியனிட முற்று மாய்ந்து
தடையறப் பணைத்து விம்மித் தம்முளே யிரண்டு மொத்திட்
டிடையினை வருத்தி யண்ணாந் திருந்தன முலைக ளம்மா

(இ - ள்) குசங்கள் பக்கத்திற் பரவித்தோன்றி நீல ரத்தினத்தைப் பதித்தாற்போலச் சூசுகம்பெற்று, நெருக்கமற நெருங்கி, மார்பின் விசாலமான இடமுழுவது மாராய்ந்து தடையின்றிப் பூரித்து இறுமாந்து தமக்குள்ளே தாமிரண்டும் சமானமாகி, இடையைத் (தாங்கவொட்டாது) துன்புறுத்தி அண்ணாந்திருந்தன எ-று.

முலைக்கண்களைச் சூசுகமென்றும் சிலீமுகமென்றுஞ் சொல்வர். அண்ணாந்தல் - மேனோக்கி யிருத்தல் (ககூ)

கணணிணை பருக்த னீடல கவினறி யாழுகல கொஙகை
திணணிய திரிகை யேபோ றிகழுநதடி கனதது மேலே
நணணுரு நோக னீஙக லமைற லெவவா வாத
லெணணிய கடின நணண லிளையடுத தோாககு மெயதா

(இ - ள) மூலைககணக ளிரணடும சனததல் நீளுதல அழகிய முலையாழந் திருசதல, கொஙகையானது வலிய திரிகையைப போலிருநது அடியிற கனசது மே லே பொருநதிய உருவமிலலாகதல விலகியிருததல அழகிலலாதிருததல (ஒனறறகொ னறு) ஒததிராதிருததல நினைககததகக காடினயததை யடைதல (எனறு சொலலப் படும) இககுற்றஙகள அவாகளை யடுததவாகளுககும வரயாடடா எ - று

திரிகை - இடககைமேளம் இயநதிரம - குலால சககிரம (௨௦)

கழுததடி யெழுந ருழ்தல கவினற வெனபு தோறறன
முழுததவிக குறற மினறி மொயயழ கெறிககுந தோளகள
பழுததபத திரணடு வெயயபோற பிணததன பெருதத லெனபு
குழுததக நரமபு ரோமங் கூடினோ தொடகு மெயதா.

(இ - ள) கழுததானது அடி கனததல தாழநதிருததல அழகு கெடும்படி யெனபுகள தோனறுதல (ஆகிய) நிறைதத இக குறறஙகளிலலாமல நெருஙகிய அழ கைவீசும தோளகளானவை குறறமறத திரடசியுறறு மூஙகிலபோலக கிளைததிருந தன பெருததலும எலுமபுகளும கூடடமாகிய நரமபுகளும அவாகளை யடைநதவாக ளுடைய தோளகளுககு முணடாகா. எ - று (௨க)

சநதுக டசைநது தோனறு வாயின தடவு முனகை
மைநதுறு மகரம போனறு வாாநரம புரோமந தோறறு
சொநதளி ரஙகை காணிற செறிமுயல வயிறறின மெலலென்
றுநதெழிற கவிகை யாமை யூாவளை வரையின வாயநத

(இ - ள) சநதுகள தசையுறறுத தோனறுதனவாயின தடவுகினற முன கையானது வலிபொருநதிய மகரததைபபோல நெடிய நரமபுகளும உரோமஙகளும தோனறுவாயின. செவவிய தளிாபோனற உளளஙகையானது வனததில நெருஙகிய முயலின வயிறறைபபோல மெனமையாய அழகமைநத குடை ஆமை நகாகினற சஙகு இவறறைபபோனற இரேகைகள பொருநதின எ - று

தடவுதல - வீணைவாசிததற றொழிலினைறு (௨௨)

செஙகயல கமலஞ் சோசொத திகமவலம புரிது லாககோ
றஙகிய நுகமே வாயநத சகடுறழ வளைகைக காஙகிக
துஙகநால வருணத துளளுந துலைவிலசெல வகதத ராமேற
ரஙகளா தமைமுன பூசை யாறறிய தவததோா போலும.

(இ - ள) செவவையாகிய கயலும, பதுமமும, பொருநதிய சொததிகமும, வலம்புரியும, துலாககோலும, பொருநதிய நுகமும, அழகு அமைநத சககரமும போ னற இரேகைகளைக கையிறபெறறு, புனிதமான நாறகுலததிலும அழிவிலலாத செல வததை யுடையவாகளாயிருபபோா அமமாதாகளைப பூாவததிற பூசைசெயததலல தவ முடையவாகள போலும எ - று

சயல - மசசரேகை கமலய - பதுமரேகை சோதநிகம - ஒரடையாளம வலமபுரி - சஙகரேகை சகடு - சககிரரேகை மறறவைவெளி (௨௩)

விடைகரி பரிமா தோட்டி வீசுசா மரையே நேமி
வடுவிலவச் சிரமபோற றிறறு மருவிமன னவர்பா லாரு
றடுகதை சூலம வேலவா ளவைபொரு வரைக டாஙகிக
கொடைநனி வழஙகு வோரக கோதையா கரஙகும பிடடோர.

(இ - ள) இடபம - யானை - குதிரை - அஙகுசம - வீசுகினற சாமரை - சக்கிரம்-குறறமிலலாத வசசிரம் இவறறைபபோல இரேகைகள பொருநதி அரசாகளைக கூடி வாழ்வோாகளும, போர செயயததகக சூலம வேல வாள முதலிய அவவாயுதங களைத தாஙகியகைகளையுடையவாகளாயப பெருஙகொடை கொடுபபவாகளும அமமா தாகளுடைய கைகளைப பணிநதவாகளாவாாகள. எ - று. (௨௪)

நிரநதுபல வரைக டமமு ணெருஙகுத லறவுநீஙகல
பரநதெழு நரமபு வீஙகல பதுமரே ரஙகை மாடடு
மரநதைசெய நரமபு ரோம மாருதல புறஙகை மாடடும
வரநதரு மனனோ செஙகை வணஙகினோ தமககு மெய்தா.

(இ - ள) (தமமைபபணிவோாககுவேணடிய) வரஙகளைக கொடுககும அவர்களுடைய சிவநத கையைபபணிநதவாகளுககும, வரிசையுறறுப பலரேகைகள தமமில நெருஙகியிருததல - இரேகையினறி யிருததல - பரவியெழுநத நரமபுகளதோனறல முதலியன தாமரைமலாபோனற உளளஙகையிலும, துனபுசெயகினற நரமபுகளும உரோமமும பொருநதல புறஙகையிலும, உணடாகமாடடா. எ - று, (௨௫)

ஒடடகந தவளை செநநா யுரகஙகேள் கழுகு பூனை
கடடிய கழுதை யோரி கடுததிடும வரைகை யுறறு
முடடுற வருநது வோரு மொயவரை யீடடி போலங
குட்டமுற றவரு மநதக் கோதையா கரநதா ழாதோர.

(இ - ள) ஒடடகம தவளை செநநாய பாமபு தேள கழுகு பூனை கழுதை நரி இவறறைபபோனற இரேகைகளைக கையிறபெறறு (செயதொழிலகளில) இடையூறு (பாருநத வருநதுகினறவாகளும, நெருஙகிய மூஙகில ஈடடி இலைபோல அஙகுடடமுடையவாகளும அநதககனனியாகளது கரஙகளைப பணியாதவாகளாவாாகள. எ - று.

கயிரவ மனைய செவவாயக கனனிய ரஙகை நெறறிப
பயிலபெரு விரலகள வெனற பஙகய முகையை நீலச
செயிரறு முகையை வெனறு சிவநதுநல வரைகள வாயநத
வுயிரினு ளுயிராய நினறோ யொழிநதபல விரலு மாதோ.

(இ - ள) உயிாகளுககுளளே யுயிராக நினறவிநாயகக கடவுளே! செவ்வாம்பன மலாபோலச் சிவநத வாயையுடைய அககனனியாகளது அழகிய கையிலுளள பெருவிரலகள தாமரைமொட்டினைவெனறனவாம (பெருவிரல) நீஙகிய பலவிரலகளும நீலோறபலமொட்டினை வெனறு செநநிறமுற்று நலலரேகைகள பொருந்தியுள்ளனவாம எ - று (௨எ)

விளைநதழ கெழிக்கு மஙகை விரலினரு சிவதத லினறி
வளைநதிட லிடையி னீஙகல மயிாநரம பணிநத லோஙக
லளைநதிடு மெனமை யினறி யறவுமெல லெனற லநத
தளைநதமெய வனபபி னாாபாற சாாநதவா தாமுங காணாா.

(இ - ள) அழகுமிகுநது விளஙகுங கைவிரலகள சிவததலிலலாமல, வளைவுறல நடுவேவிலகியிருததல மயிரும நரமபும பெறறிருததல இளைததிருததல கலநத மெனமைத தனமையினறி மிகவுங கடினமாயிருததல முதலிய குறறஙகள, அநதசசேதக வழகுமிககுளளமஙகையாகளைச சாாநதவாகளுங காணமாடடாாகள ஏ - று (உஅ)

வளருகிா கிளியின வாயபோல வாாநதுசேந தொளிாநத சொனன
வொளளிழை மகளிாக் கனறே யொளளுகிா கணடி லாாககும
பளளமாய விடலவெள ளெனறல பணைபறஞ சரச ரததல
புளளியாய வெணமை தோறறல பொறகெனல புணாநத ராவே.

(இ - ள) மேறகூறிய ஒளளிய ஆபரணமணிநத மாதாகளுககு, கூாமையான நகஙகள கிளியினவாயைபபோல வளைநது செநநிறமுறறுப பிரகாசிததன அவாகளுடைய ஒளிவாயநத நகஙகளைப பாாததவாகளுககும (நகஙகள) பளளமாய விடுதல வெணமையாயிருததல அழகு நீஙகசசரசரததல புளளியுடையதாய வெணணிறங காணடால பொறகெனல முதலியகுறறஙகள உணடாகமாடடா. ஏ - று. (உகூ)

வெரிநதலைக் கிடநத வெனபு மெனறசை மூடப பட்டு
வரிநதிடற கரிய நலல வனபபுள மடநல லாாககுத
தெரிநதிட னரமபு ரோமஞ சோாநதுதாழந துயாநது கூனி
யிருநதிட லவைாத தாழநத விடடிடை யவாககு நனறு

(இ - ள) நலல அழகமைநத அவவிளமாதாகளுககு முதுகிலிருநத வெனபு மெலலியதசையான மறைககபபடடுச சிததிரிககறகரியன (எனபு) தெரிதல நரமபும உரோமமுஞ சோநது தாழநதாவது உயாநதாவது கூனறடநதாவதிருததல முதலிய குறறஙகள அமமஙகையாகளைப பணிநத அழகிய இடையையுடைய பெணகளுககு முணடாகமாடடா. ஏ - று. (கூ0)

கோணுத னரமபு தோறறல குறுமயிா கிளைதத லீளல
மாணுற வுறற லினறி வணசவல வனபபு வாயநத
பேணுமங குலஙக ளெனகிற பிறஙகுபு திரணடு பூக
நாணுற வாாகண மூனறு நணணிய கெழிலசோ களைடம.

(இ - ள) கோணுதலும நரமபுகாணப படுதலும நிறமமைநத மயிாகள கிளைததலும நீளுதலும மாடசிமையொழிய வாடுதலுமிலலாத வணமைபொருநதிய முததுககள அழுகுறறன அழகுவாயநத சமுததானது விருமபததகக நானகு அஙகுலஙகளில விளஙகித திரடசியாகிக கமுகமரமும நாணமுறப புமபடி மூனறுரேகைகளைப பொருநதின. ஏ - று

பிறஙகுபு - செயபுஎனனுமவாயபாடடு இறநதகால வினையெசசம (கூக)

குறுகிய பிடறு நெட்டைக் கொழுங்களம் பெருத்த கண்ட
முறுமயிரக் கழுத்து நேர்ந்த வொண்களம் மடிப்புக் கண்டம்
பெறுமட வார்க ளெல்லாம் பிரமனார் மகளி ரான
சிறுநுதன் மாதர் கண்டந் தியானஞ் செய்யாத தீயோர்.

(இ - ள்) குறுகியகழுத்து - மசாத்த நெட்டைக்கழுத்து - கனத்த கழுத்து - மயிர்பொருந்திய கழுத்து - இளைத்த வொள்ளிய கழுத்து - மடிப்புடைய கழுத்து ஆகிய இவற்றைப் பெற்றமாதர்கள் யாவரும், பிரமதேவன்பெற்ற புத்திரிகளான சிறிய நெற்றியையுடைய சித்திபுத்திகளது கழுத்துகளைத்தியானஞ்செய்யாத தீயவர்களாவார்கள். எ - று (௩௨)

இருப்பக்க பாதல் பள்ள மியைந்திட னரம்பு ரோம
மருவுதல் குறுக னீளல் வளைதலவ் வற்றுதலு மின்றி
யிருவிர லளவின் வட்ட மாயத்தகைசெந் தெழில்கொண் டின்பந்
தருவன பிரம னீன்ற தையலார் சுபுக மாதோ.

(இ - ள்) பிரமதேவன்பெற்ற அம்மங்கையர்களது மோவாய்கள் இருபிளவாதல் - பள்ளம்பொருந்தல் - நரம்பும் மயிரும் பொருந்தல் - நீண்டிருத்தல் - வளைந்திருத்தல் - இளைத்திருத்தலாகிய குற்றங்களில்லாமல், இருவிரல்களி னளவுடையனவாய வட்டவடிவினவாயத்தகையுற்று அழகுபெற்றுஇன்பந்தருவனவாயிருந்தன எ-று.

செந்துகிரக் கடிகை போலத் திரண்டிரு புடையுங் கூம்பிச்
சுந்தர வரையொன் றெய்திக் கீழிதழ் துலங்கா நிற்ப
வந்தினமே லதரஞ் சற்றே யுயர்ந்தழ கெழிலக்கு மென்பப்
பைந்தொடி முனைக்கைச் செவ்வாயப் பணிமொழிப் பாவை மார்க்கே.

(இ - ள்) பசிய வளையலையணிந்த முன்கையையும் செவ்விய வாயையும் பணிமொழியையுமுடைய அப்பொற்பதுமைபோன்ற மங்கையர்களுக்கு, செவ்விய பவளத்துண்டுபோலத் திரட்சியுற்று இருபுறங்களுஞ் சிறுத்து அழகிய ஓர்ரேகையுற்றுக் கீழுதடுவிளங்க, மேலுதடுசிறிதுயர்ந்து அழகைக்கீசர்ந்தருமென்று (மேலோர்) சொல்லுவர் எ - று (௩௩)

இதழிரண் டென்ன நாப்ப ணிரேகையாழ்ந் திருத்தல் வீங்கன்
மதர்ரறக் கருகல் வெண்மை மருவலு னுதல்கீழ் வாய்ந்த
வதரமே லிதழ் ரோம மணிந்தகன் றிடலு மெய்தா
பதமரு ளனைய மாதர் பவளவா யதரிசித் தோர்க்கே.

(இ - ள்) இதழ்கள் இரண்டென்று (கண்டோர்) சொல்லும்படிநடுவே இரேகைபதிந்திருத்தல் - பருத்தல் - மதர்ப்பொழியக் கறுத்தல் - வெண்ணிறமெய்தல் - தொங்குதல் - கீழ்பொருந்திய அதரம் மேலிதழ் (இவை) மயிர்கள் விரவப்பெற்று அகலமாதலும், நற்பதவியைக் கொடுக்கும் அம்மங்கையர்களது பவளம்போன்ற இதழ்களைத் தரிசித்தவர்களுக்கு உண்டாகமாட்டா எ - று (௩௪)

முருந்துவெண் முத்த முல்லை முகையினெண் ணான்கு வெண்பற்
றிருந்திரண் டொழுங்கு மொத்த சேயரிக் கண்ணி னார்க்குப்

பரந்துயாந் தகன்று நீண்டு பசுமையாய்ப் பொன்மை யாகிக்
கரிந்துதுன் புறுத்து மூரல் கண்டவர் தமக்கு மெய்தா

(இ - ள) செவ்விய அரிபரந்த கண்களையுடைய அம்மங்கையர்களுக்கு மயிலிறகின் அடியும் வெள்ளியமுத்தும் முல்லையரும்பும்போல வெண்மைநிறம் வாய்ந்த முப்பத்திரண்டு பற்களும்,திருத்தமாகிய இரண்டுவரிசைகளு மொத்திருந்தன விசாலமாகி உயர்ந்து விலகி நெடுகிட பசுநிறமாகிப பொன்னிறமாகிக கரிந்து (இவ்வகைய குற்றங்களால்) துன்புசெய்யும் பற்கள் (அம்மங்கையர் பற்களை) தரிசித்தோர்க்கும் உண்டாகமாட்டா. எ - று (௯௬)

திண்ணிய கற்புச சான்ற சித்திபுத் திகட்குச் செய்ய
வண்ணமாய மென்மை யாகி வயங்கின மணிநா வன்மை
வெண்ணிறங் கருமை நீண்டு வீங்குத லகல லாதி
நண்ணுநா வனரோ செந்நா நாடினோ தமக்கு மெய்தா.

(இ - ள) வலியமைந்த கற்பினறன்மை மிக்க அந்தச சித்தி புத்திகளுக்குச் செந்நிறமாகியும மென்மைத் தன்மையாகியும அழகியநாக்கள விளங்கின கடினத்தன்மை - வெண்ணிறம - கருநிறம் - நீண்டுபருத்தல - அகன்றிருத்தல முதலிய குற்றங்களைப பொருந்திய நாக்கள அம்மங்கையர்களது செந்நிறமமைந்த நாக்களை நினைத்தவர்களுக்கும உண்டாகமாட்டா. எ - று. (௯௭)

இழுதென மென்மை யெய்தி யிங்குலி கத்திற சேர்ந்த
செழுவிய வுணறு வந்தத் தேவியாக கமைந்த வெண்மை
யொழுகுதல கருமை வன்மை யோங்குத லுற்ற லாதி
வழுவுறு முண்ணு வனரோ மருங்குளார் தமக்கு மெய்தா.

(இ - ள) இழுதுபோல மென்மைத்தன்மையுற்று இங்குலிகத்தைபபோலப் பொருந்திய செழுமைதங்கிய உணறுகள அம்மங்கையர்களுக்குப பொருந்தின வெள்ளென்றிருத்தல கருமைவன்மைகள பெறுதல உயர்தலபொருந்தல முதலிய குற்றம பொருந்திய உணறுகள அம்மங்கையர்களது சமீபத்தி லிருப்பவர்களுக்கும உண்டாகமாட்டா எ - று

இழுது = நிணம (௯௮)

கண்ணிணை யிடுகல் செல்லா கவுட்டிணை கரித்தல் செல்லா
வண்ணவெண் பற்க டோற்று வழிதனறி நகைபி றாது
புண்ணிய நிலத்தி னுக்கு பொருள்களு மெழுந்து பூப்ப
நண்ணிய கொடியே போலு நங்கைமார் நகைக்குங் காலை.

(இ - ள) அம்மாதர்கள் சிரிக்குங்காலையில் இருவிழிகளுஞ் சிறுகாமலும, இருகன்னங்களுஞ் சுருங்காமலும அழகிய வெள்ளியபற்கள் வெளியே தெரியாமலும் புன்சிரிபபுண்டாவதன்றிப பெருநகையுண்டாகாது புண்ணியகரமாகிய நாலவகை நிலங்களினின்றும எல்லாப்பொருள்களும் தோன்றி விளங்கப பொருந்திய கொடி மின்னலையொக்கும. எ - று (௯௯)

துளைசிறுத் திரண்டு பாலுங் கொருபுடை சற்றே யோங்கி
வளர்கொடி நாசி யெள்ளின் மலர்பொரு மாதராக்கு

மறுவுற வலஞ்செல் பார்வை மாறுகண் புருவின் வண்ணம்
முறுநய னங்க ளன்றே யூரினுற் றவர்க்கு மில்லை,

(இ - ள்) யானை ஆடு எருமை இவற்றின் கண்போன்ற கண்களும், வட்டமாகிய கண்களும் உயர்ந்துள்ள கண்களும் (கடைப்பார்வை) பிறழும்படி காணுங் கண்களும் குற்றம்பொருந்த வலப்புறஞ் செல்லும் பார்வையுடைய கண்களும் விகாரமாகிய கண்களும் புருவின்வண்ணம் பொருந்திய கண்களும் ஆகிய இவை அம்மங்கையர் வசிக்கும் நகரத்திலுள்ளவர்க்கு மில்லையாகும் எ - று.

கறை - உரல் கறையடி - உரல்போன்ற அடியையுடைய யானை. (சச)

வாரிமை யிரண்டு மார்ந்த மயிரிடை நீங்கி நிற்றல்
சீரிய பொன்மை யெய்த றிண்ணிதிற் பருத்தல் சால
நேரிய தாத லின்ன நிகழ்தரா பிரம னீன்ற
வேரியங் கூந்தன் மாதர் விழியிமை நோக்கு மோர்க்கே

(இ - ள்) பிரமதேவன்பெற்ற வாசம் பொருந்திய அழகியகூந்தலையுடைய அவ்விருமங்கையர் கண்ணிமை நோக்க கண்டோர்களுக்கு, நெடிய இமைகளிரண்டும் பொருந்திய மயிர்கள் நடுவே விலகிநிற்றலும் சிவந்த பொன்னிறமாதலும் வலியுற்றுத் தடித்தலும் மிகவும் இளைத்திருத்தலும் இவ்வகையகுற்றமுடையனவாகமாட்டா எ-று.

ஒண்மணிப் புருவ மொன்றோ டொன்றுறத் தடுவிற் போன்று
தண்மயிர்ப் பருத்த னீட றமனிய நிறத்த தாதல்
வண்மையின் வனப்பு நீங்க லிடையிடை யகறன் மன்று
பெண்மையிற் சிறந்த வந்தப் பெதும்பையாம் பருவத் தார்க்கே.

(இ - ள்) பெண்டன்மையின் மேம்பட்ட அந்தப் பெதும்பைப்பருவமாகிய மாதர்களுக்கு, ஒளிவாய்ந்த அழகிய புருவங்கள் ஒன்றோடொன்று பொருந்தாமல், போர்புரியும் வில்லையொத்து, குளிர்ச்சிபொருந்திய மயிர்கள் பருத்தலும் நீளுதலும் பொன்னிறமாதலும் வண்மையாகிய அழகொழிய இடையிடையே விலகிநிற்றலும் பொருந்தமாட்டா எ - று.

பெதும்பை - பெண்கட்குரியதோர் பருவம் அது எழுவகை பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண்ணெனப்படும். அவற்றுள் எட்டுவயதுமுதல் பதினொருவயதுவரையிற் பெதும்பை (சசு)

வள்ளையின் வார்ந்து தாழ்ந்து மடற்கழி நலத்து முன்னர்த்
தள்ளிய முந்த மன்றூர் தடஞ்செவி முரிப்பி னீங்கி
யெள்ளிய நரம்பு ரோம மெழுந்துமேல் வளைந்து யாந்து
நள்ளிய காதி னோரந் நங்கையர்ப் பணியா தோரே

(இ - ள்) தேவாமிர்தம்போன்ற அம்மங்கையர்களது விசாலமான செவிகள் வள்ளைக்கொடிபோல நெடுகித் தாழ்ந்து மடலுற்று நன்மைபெற்று முன்னர்த் தள்ளியன முரிதலில்லாது இழிந்துதக்க கூற்றக்க நரம்பும் மயிருந்தோன்றி மேலே வளைவுற்று உயர்ச்சிகொண்டு நட்புக்கொள்ளத்தக்க காதுகளையுடையவர்கள் அம்மங்கையர்களை வணங்காதவர்கள் எ - று. (சஎ)

புரிவிரற் கமல வாய்ந்து முழுமதி யிடைப்போழ்ந் தொப்ப
மேவிய வெய்ய மாகி யிளிர்நரம் புரோம நீத்த

தூவியன் னத்தை யொத்தோர் சுடர்நுதல் சுவத்திகம்போற்
பாவிய விரேகை நெற்றிப் பாவையர் மவரைத் தாழ்ந்தோர்.

(இ - ள்) தூவியையுடைய அன்னத்தைப்போன்ற அவர்களது பிரகாசிக்கின்ற நெற்றிகள், மூன்று விரற்கடை யகலமுற்றுப் பூரணசந்திரனை நடுவிற் பிளந்தாற்போற் பொருந்திய உருவமுடையதாகி, பிரகாசிக்கின்ற நரம்பும் உரோமமுமொழிந்தன. சுவத்திகத்தைப்போல இரேகைபொருந்திய நெற்றியையுடைய மாதர்கள் அம்மங்கையர்களைப் பணிந்தவர்கள் எ - று.

தூவி - மயிர். இஃது அன்னத்தூவி மயிற்றூவி யென்பன வழக்கு. அன்னத்தையொத்தோரென வுவமித்தது அவர் நடையைக்குறித்த உவமமெனக் (௬௮)

மதியென வொளிர்ந்து சீத மருவிவான் கங்கை பூத்த
பொதியவிழ் புதிய கஞ்சம் போன்மென மலர்ந்த மாதர்
கதிர்மிழ் முகஞ்சீ மந்த விரேகைகள் கவின்று வார்ந்து
துதிசெய வொளிர்ந்த வென்பர் தொழுதவர் தாமு முய்ய.

(இ - ள்) அம்மங்கையர்களது கிரணங்களைச்சிந்தும் முகங்கள் பூரணசந்திரன் போலப் பிரகாசித்து, குளிர்ச்சிபெற்று, சிறந்த கங்காசலத்திற் புடபித்த முறுக்கவிழ்ந்த புதிய செந்தாமரைபோலுமென்று சொல்லும்படி மலர்ந்தன. வணங்கினவர்கள் கடைத்தேறும்படி சீமந்தரேகைகள் அழகுற்று நெடுகித் துதிசெய்யும்படி பிரகாசித்தனவென்று சொல்லுவார்கள் எ - று. (௬௯)

கட்டழு கெறிக்கும் வேதன் கன்னியர் தமைச்சார்ந் தோர்க்கு
மொட்டுசீ மந்த ரேகை யொருத்தன்மத் தகமே நேர்ந்தென்னி
முட்டற வுயர்ந்து வட்ட மாயெழில் மொய்க்கு நேர்ந்து
விட்டற வீங்க னீளல் விரித்தலன் னவையெய் தாவே.

(இ - ள்) பிரமதேவன் பெற்ற பேரழகு விளங்கும் அக்கன்னியர்களை யணுகினவர்களுக்கும் சீமந்தரேகையுற்று, யானையின் மத்தகத்தை யொத்த சிரமும் தடையற வுயர்ந்து வட்டவடிவமாகி அழகுமிகும் பிரகாசமின்றி மிகப்பூரித்தல் உயர்தல் பரத்தல் ஆகிய இக்குற்றங்களடையா எ - று. (௭0)

வண்டினந் தொடர்ந்தா லென்ன மைகொடு நூற்றா லென்னக்
கொண்டலக ணடுத்தா லென்னக் கூந்தலங் கமுகார்ந் தென்னக்
கண்டவர் வியப்ப வார்ந்து கமழ்ந்துநெய்த் திருண்டு தாழ்வுற்
றுண்டொரு கறுப்பு மிக்கென் றுரைகொடா வினோமென் கூந்தல்.

(இ - ள்) பூங்கொத்தை யணிந்த (அவர்களுடைய) மெல்லிய கூந்தல்கள் வண்டுக்கூட்டங்கள் நெருங்கினாற்போலவும், மையினாலெழுதினாற்போலவும், மேகமானது துயில்செய்தாற்போலவும், அழகிய கூந்தற் கமுகுபொருந்தினாற்போலவும், பார்த்தவர்கள் ஆச்சரியமுறப் பொருந்தி நீண்டு மணமுற்று நெய்ப்பசைகொண்டு கருமையுற்றுத் தொங்கி, தமக்கு மேம்பட்டதாகிய கறுப்பொன்றுண்டென்று சொல்லப்படாதன (ஆயிருந்தன) எ - று. (௭௧)

இடையிடை வெளிக டோற்ற விறப்பவுங் குறுக னீளல்
கடைபிளந் திருத்தல் செம்மை காருசன் நிறத்த வாத

லடைவற வுலறல வனமை யணுகுதல குழைத லினமை
சடைபட லிணைய கூநதல சாாநதவா தமகருஞ சாரா

(இ - ள) இடையிடையே சநதுகள காணுதல - மிகுதியுங குறுகல - (அதிக மாக) நீளுதல - முனை பிளவுபட்டிருததல - செமமை பொனமையாகிய நிறஙகளை யடைதல - பொருநதாதுலறல - வலிமையாயிருததல - மெனமையாறிருததல - சிக் குபபடுதல இவவகைய குறறமுடைய கூநதலகள (அமமஙகையாகளை) அடைநதவா கடகும உணடாகமாட்டா எ - று (௫௨)

சுடாறுதற புருவ நாபபண டுணடகதி னுதியிற சோந்த
விடலறு மீறுபபெற றோரும விழுததக விடபபாற புளளி
வடிவின தாகிச சேநத மறுவினா றாமுஞ செமபொற
குடநிகா வலபபாற கொஙகை யமமறுக கூடி னோரும.

(இ - ள) பிரகாசிககினற நெறறியும, புருவமததியும, மூககு முனையுமாகிய விடததிற பொருநதிய நீககுதலறற மறுபபெறறவாகளும, இடபபுறததில மேனமை பொருநதப புளளிவடிவாகிச சிவநத மறுவினையுடையவாகளும, செமபொனனுலாகிய குடமபோனற வலபபுறககொஙகையில அழகிய மறுபபெறறவாகளும எ - று

இதுமுதல நானகு பாடலகள ஒருதொடா (௫௩)

கடிபபுறத தலாமென கையிற கழுததிலஞ செவியிற காமா
கொடிறறினின மறுபெற றோருங குவவுவா ணுதலி னோது
வடிததமுத தலைய சூல வரையுறப பெறறோா தாமுந
தடககைமாா புநதி தனனிற சாாவலஞ சுழியி னோரும

(இ - ள) கடிதடததின புறததிலும, மலாபோனற மெலலிய கையிலும, கழுததிலும, அழகிய செவியிலும விருமபததகக கனனததிலும மறுவையுடையவாக ளும, பெருமைபொருநதிய ஒளளிய முகததில அழகுற வடிதத முததலைகளையுடைய சூலமபோனற இரேகையை யடையபபெறறவாகளும, விசாலமான கையிலும மாா பிலும உநதியிலும வலஞசுழி பொருநதபபெறறவாகளும எ - று (௫௪)

வலஞசுழி முதுகி னொனறு வலமபடக கிடககின றோரும
வலஞசுழி யிரணடு சொனன வெரிநதலை வதிகின றோரும
வலஞசுழி யகனற வலகு லடிபபுற மருவி னோரு
நலஞசெறி யாணடில போலு நனசுழி யாயகுற றோரும

(இ - ள) முதுகில ஓா வலஞசுழியினை வெறறியுணடாகுமபடி பெறறவா களும, மேறகூறிய முதுகில இரணடு வலஞசுழிகள இருககபபெறறவாகளும, பரநத அலகுலினடியில வலஞசுழி யொனறு பெறறவாகளும, அவவலகுலில நனமைமிகக சககரமபோலும நலல சுழியை யுடையவாகளும எ - று. (௫௫)

ஒருசுழி மூககிற பெற்ற வொணடொடி யோரு மேனைக
கருஞசுன மறுவி ரேகை காமரு சுழியுற றோரு
மருமலாப பொருட்டு வாழககை வானவன வளாகக லுற்ற
விருவர்கம பாதப போது மிறைஞசிமுன னருளபெற் றோரே.

(இ - ள்.) நாசியில் ஓர் சுழியைப்பெற்ற மங்கையர்களும் ஏனைய நீளக்கத்தக்க நன்மைபொருந்திய மறுக்களும் அழகிய சுழிகளும் அடையப்பெற்றவர்களும், வாசம்பொருந்திய தாமரைமலர்க்கொட்டையில் வாழ்க்கையையுடைய பிரமதேவன் வளர்த்த அவ்விருமங்கையர்களது திருவடித்தாமரைகளையும் பணிந்து பூர்வத்தில் (அவர்களது) திருவருளைப் பெற்றவர்களானார்கள் எ - று (௫௬)

கருநிற மறுவொர் மூக்கி னுதிபுறக் கலந்து ளோருங்
கருத்தமெட் டெள்ளர்ச்சே போலும் வடிவு புறங் காலைப் பற்றிய
பெருகிய வலகு லந்தம பிறப்புக்குத் திகழுகின் றோரு
மொருசுழி கடிதொட் டலகு லளவுமுற றுஎளிர்கின் றோரும்.

(இ - ள்) கருநிறம்பொருந்திய மறுவை நீண்ட மூக்கின் முனையிற் பொருந்தப்பெற்றவர்களும், கருத்தத்தக்க எள்ளைப்போலுங் கொசுகைப்போலும் வடிவானது புறங்காலமுதற் பரந்த அலகுலவரையிற் பிரகாசிக்கப்பெற்றவர்களும், ஒரு சுழியானது கடிமுதல் அலகுலவரையிற் பொருந்தி விளங்கப்பெற்றவர்களும் எ - று

இதுமுதல் நான்கு செய்யுள்கள் ஒருதொடர்
கொசுகு - மசகம் (௫௭)

கடிமுதல் வயிற்றின் காறு மொருசுழி கதுவி னோருங்
கடிமுதல் வயிற்றின் காறு மிருசுழி கதுவி னோரும்
வடிபொருங் குவளைக் கண்ணின் மருவிய சுழியி னோரு
நெடியவொண் ணுதன்மேற் சால நிகழ்வலஞ் சுழியி னோரும்.

(இ - ள்) கடிமுதல் வயிற்றினெல்லையும் ஒரு சுழி யிருக்கப்பெற்றவர்களும், கடிமுதல் வயிற்றினெல்லையும் இருசுழிகளிருக்கப்பெற்றவர்களும், கூர்மைவாய்ந்து போர்புரியுங் குவளைமலர்போன்ற கண்களிற் பொருந்திய சுழியினையுடையவர்களும், நீண்ட ஒள்ளிய நெற்றியின்பேரில் மிகுதியாய் விளங்கும் வலஞ்சுழிகளையுடையவர்களும் எ - று (௫௮)

சுழிவல மிடமாய்க் கூந்த றுவளபிடர்க் கதுவி னோரு
மழகிய வரையி னுப்ப வெளிழிற் செவிக்கண் மீதிற்
குழல்வளர் சியினுர் சிக்கட் கூடிய சுழியி னோரும்
விழிதுயி லுற்ற காலை விளங்குபற் கறிக்கின் றோரும்.

(இ - ள்) அளகமானது துவளுகின்ற பிடரின்பேரில் வலமிடமாகச் சுழிகள் பெற்றவர்களும், அழகுவாய்ந்த அரைநடுவிலேயும் அள்ளிக்கொள்ளத்தக்க அழகையுடையசெவிகளின்பரிலேயும், கூந்தல் வளர்கையையுடைய உச்சியினிடத்திலும் பொருந்திய சுழியையுடையவர்களும், நித்திரைசெய்கையிலே, பிரகாசிக்கின்ற பற்களைக் கறிக்கின்றவர்களும் எ - று (௫௯)

இலக்கண நெறியி னீங்கு மினையன பிறவும் பெற்றுங்
கலக்கஞ் செறுத லாதிக் கரிசினைப் பெற்றோ ரெல்லா
நலக்குறாண மலரின் மேலோ னுற்றவப் பேறுய்த் தோனி
யலக்கணவை யகத்தி னீக்கு மங்கலார் வடிவு காணர்.

(இ - ள்) (உத்தம) இலக்கணமாக்கத்தினின்று விலகிய இத்தன்மையவான பிறவற்றையும் பெற்று வருந்தத்தக்க துன்பமடைதல் முதலியகுற்றங்களை யடைந்

தவர்கள் யாவரும் நன்மைபுரியும் அன்றலர்ந்த தாமரைமலரின்மேற் பொருந்திய பிரமதேவனுடைய நல்ல தவப்பலனாகத்தோன்றி, உலகிற்குத் துன்பத்தை விலக்கும் அவ்விருமங்கையர்களது வடிவத்தைக் காணாதவர்களாயினார்கள். எ - ள. (௩௦)

மனமொழி வடிவுக் கெட்டா வரம்பிலின் பத்தைக் கற்றோர்
மனமொழி வடிவுங் கெட்டுச் சுவையொடு மாணச் சொற்றுங்
கனகனே நிகரின் மாதரா ரெழி லியற்பிற் றென்றே
நின்றுமுன் னுரைத்த னுள்ள வாறெவர் நிகழ்த்த வல்லார்

(இ - ள) மனவாக்குக் காயங்கட்கு நீதப்பட்ட எல்லையில்லாத சுகத்தைக் கற்றவர்கள் மனவாக்குக்காயங்கட கெட்டொகையுடன மாட்சியுறச் சொன்னாற்போல, ஒப்பில்லாத அம்மங்கையரழகு இத்தன்மைத்தென்று தேவரீர்முன்னே (ஒருவாறு) கூறினேன் கடவுளே! (அதனை) உள்ளபடி யெவர்தாமெடுத்துச்சொல்லவல்லவர்? (ஒருவருமிலர்) எ - று (௩௧)

வேறு

என்று வீணைகை யேந்திய நாரதன்
மன்ற லோதியா ரணிமையு ரைத்ததும்
நன்று கேட்டு மகிழ்ந்தரு ணல்கினான்
கொன்றை வேணிக் குழகன் குமாரனே.

(இ - ள.) என்று (இவ்வகையாக) வீணையைக்கையிலேந்திய நாரதமுனிவன் வாசம்பொருந்திய கூந்தலையுடைய சித்திபுத்திகளது அழகை (வாணித்து)ச் சொல்லவும், கொன்றைமலர் மாலையணிந்த சடையையுடைய சிவபெருமானாரது புத்திரராகிய விநாயகக்கடவுள் நன்றாகக் கேட்டுக்களித்துத் திருவருள்செய்தனர் எ - று

நாரதர்வீணையை மகதி யெனப்படும் (௩௨)

ஐயன் மெய்ப்பருள் கொண்டடி தாழ்ந்துபோய்
கையில் வீணை கதுவிய மாதவ
னைய நுண்ணிடை நங்கைய ரின்புற
வைய முய்ய மதித்திங் கோதினான்

(இ - ள) கையிலே மகதிவீணையைத்தாங்கிய பெருந்தவமுடைய நாரதமுனிவன் விநாயகப்பெருமானுடைய அழியாத திருவருளைப்பெற்று, அவருடைய திருவடியைப்பணிந்து சென்று, இளைக்கின்ற நுட்பமாகிய இடையையுடைய சித்திபுத்திதேவிகள்களிப்பெய்தவும், உலகங்கள் கடைத்தேறவும் யோசித்து (அவர்களிடத்தில்) இதனைக்கூறினன் எ - று (௩௩)

பொன்ற யங்கிய பூணிளங் கொங்கையீர்
மின்ற யங்கு விநாயகன் மெய்ப்பத
மொன்று மன்பி னுவந்து பணிந்தனே
னின்று நுங்கள் வனப்பு நிகழ்த்தினேன்.

(இ - ள்) பொன்னாற்செய்து பிரகாசிக்கின்ற ஆபரணமணிந்த முதிராத தனங்களையுடைய மங்கையர்களே! விநாயகக்கடவுளுடைய பிரகாசம் பொருந்திய

மெல்லிய திருவடியைப்பொருந்திய அன்புடன் களித்து வணங்கி (அவர்முன்) நின்று உங்கள் சவுந்தரியத்தை யுரைத்தேன் எ - று (௬௪)

விதுவ ணிந்த விநாயக னெம்பிரான்
பதும நேர்முகப் பாவையிர் நுங்களை
வதுவை யாற்ற மதித்திருக் கின்றனன்
னிதுநி கழ்ந்த படியென வியம்பினான்

(இ - ள்) செந்தாமரை மலர்போன்ற முகத்தையுடையவர்களே! சந்திரனை (சிரோமாலையாக) அணிந்த எம்பெருமானாகிய விநாயகக்கடவுள் உங்களைத் திருமணஞ் செய்யும்படி திருவுள்ளங்கொண்டிருக்கின்றார் இது நடக்கத்தக்கதென்று (அவர்களுடன்) கூறினன் எ - று

பாவை - பதுமை இது உவமவாகுபெயர் (௬௫)

வேறு

இன்னணமு னித்தலைவ னேற்புநவி யப்பக்
கன்னிபரு மன்றல்புரி காதலிரு ந்தார்
நன்னரவரை வால்வரை நாயகன்ம ருங்கு
மன்னுவது செய்திடம தித்தனனெ ழுந்தேன்

(இ - ள்) முனிவர்தலைவனான நாரதமுனிவன் இவ்வாறு பொருந்தக்கூற, (சித்திபுத்திகளாகிய) கன்னிகைகளும் (விநாயகக்கடவுளை) திருமணஞ்செய்யும் விருப்போடிருந்தார்கள் (வியாசமுனிவனே!) யான் அவர்களை நல்ல மணவினையால் ஐங்கரக்கடவுள்பாற் பொருந்துதல்செய்ய யோசித்தெழுந்தேன் எ - று (௬௬)

முக்கண்முக மைந்துடைய முன்னவனை மூவாத்
தக்கன்மக மீறுபுரி சங்கரனை விண்ணோர்
தொக்கனர்தொ ழுங்கயிலை துன்னினனவைக்கட்
புக்கடிவ ணங்குபுபு கழ்ந்தினிது நின்றேன்

(இ - ள்) திரிநேத்திரங்கள்பொருந்திய ஐந்து திருமுகங்களையுடைய முதற்கடவுளும், அழியாத தக்கன்செய்த யாகத்தை யழிவுபடுத்தியவனுமாகிய சிவபெருமானை, தேவர்கள்கூடிப் பணிகின்ற திருக்கைலையையடைந்து சபையினுட்சென்று (அவருடைய) திருவடியைப் பணிந்து தோத்திரஞ்செய்து இனிதாக நின்றேன் எ-று

தொக்கனர் துன்னினன் என்ற வினைமுற்றுக்கள் வினையெச்சப்பொருளில் நின்றன. வணங்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் (௬௭)

வந்தவர வென்கொலெனு மங்கையுமை பங்காக்
கெந்தைநின திண்ணருளி னெங்களையு யிர்த்தோற்
கிந்திரையு நாணுமெழின் மங்கையரை யீந்தற்
கந்தணநின் சிந்தையறி தற்கெனவி சைத்தேன்.

(இ - ள்) நீ வந்தவருகை யாதென வினவிய உமாதேவி பாகராகிய சிவபெருமானுக்கு, எந்தையே! அந்தணனே! தேவரீருடைய திருவருளால், எங்களைத் தந்தருளிய கணேசப்பெருமானுக்கு இந்திரையும் நாணமடையத்தக்க அழகமைந்த சித்தி

புத்திதேவிகளை மணஞ்செய்விக்கத் தேவரீருடைய திருவுள்ளத்தை புணர்த்தரகென்று கூறினேன் எ - று

இந்திரை - ஸ்ரீதேவி (௬௮)

திங்கண்முடி வேய்ந்தசிவ னார்கருணை கூர்ந்து
நங்கைமுக நோக்கவுமை நங்கையெனை நோக்கி
ஐங்கரன யக்குமருண் மைறலனை யோர்க்கு
மங்கலம தாமதுவை யந்துகடி தென்றாள்

(இ - ள) சந்திரனை முடிமேலணிந்த சிவபெருமானார் பொருந்திய கிருபை மிகுந்து உமாதேவியின் திருமுகத்தைப்பார்க்க, உமாதேவியார் என்னைப்பார்த்து, ஐந்து கரங்களையுடைய கணேசருக்கு விருப்புண்டாக்குந் திருமணம் எல்லோருக்கு மங்கலத்தை யுண்டுசெய்வதாம் (ஆதலின் அதனை) விரைவிற்செய்க வென்றனர் எ-று

குரவரிசை யங்கருணை கொட்டுமுக வேழ
வரத்தனைப் பொருத்திவ ணிங்கிபடி யேனைமுன்
பரவிரு சத்திகளை யித்தனையன் றேயவ
விரவுமல ரோதியரை வேட்டருள்க வென்றேன்.

(இ - ள) குரவர்கள் சம்மதித்தலால், கிருபையைச் சொரியும் யானைமுக விநாயகக்கடவுளைச் சமீபித்து எதிரபணிந்து, சுவாமிகளே! முன்னேயான தற்செய்ய இருசத்திகளை யுதவினீரன்றோ? அமரலர்கள் பொருந்திய கூந்தலையுடைய சித்தி புத்திகளைத் திருமணம்புரிந்தருள்வீராகவெனக் கூறினேன் எ - று

குரவர் - தாயதந்தையர் வரதன் - வரங்களைக் கொடுப்போன் அல்லது சிறந்தவன். (௭௦)

நின்றனுருவில் யாது நிகழ்கின்றதது வன்றி
மன்றுலகில் வேறுநிக ழாமரபி னாலும்
கன்னியரை நீவதுவை காணினல தின்பந்
துன்னுதலு றாதுலக மெனவிதுவுஞ் சொன்னேன்

(இ - ள) தேவரீருடைய திருவுருவில் எது நிகழுகின்றதோ அதுவேயல்லது பிறிதொன்று நிலைபெற்ற வுலகத்தில் நிகழாத மரபுவழியால், அச்சித்திபுத்திகளைத் தேவரீர் திருமணம் புரிந்தாலன்றி உலகத்தில் இன்பமென்பது பொருந்த மாட்டா தென்று இதனையு முரைத்தேன் எ - று (௭௧)

நிலைக மாந்தரொடு பெண்கணினை வொத்துக்
கூடினது வென்றொழினை கோத்தறவ ளர்த்துப்
பீடுதர லல்லவை பெறுதல்புரிந் து
நாடுமெனை யாண்டருள்க வென்றுநனி வுற்றேன்.

(இ - ள) தொன்மையாகிய வுலகத்தில் ஆண்மக்களோடு பெண்மக்கள் மனமிசைந்து சேர்ந்தால், அச்செயல் என் படைப்புத்தொழிலைக் குற்றமறப் பெருக்கி நன்மையைத் தருவதால், திருமணஞ்செய்வித்தல் கருதிவந்த அடியேனை யாண்டருள வேண்டுமென்றும் விண்ணப்பஞ்செய்தேன். எ - று. (௭௨)

வேறு

அட்ட மூர்த்தி யத்தற்கிறை வற்றநீ
பெட்ட யன்றல பிறக்குமு யற்சிசெ
யிட்ட மாகிய யாவர்க ளோடுநாஞ்
சட்ட வெய்துதுந் தாழ்க்கலை யென்றனன்

(இ - ள்) எண்வகைமூர்த்தங்களாகவிளங்கும் விநாயகக்கடவுள் அவ்வேண்டுகோளுக்கு இணங்கினவராகி, நீ விரும்பத்தக்க திருமணத்தை முடிக்கும் முயற்சியைச் செய்வாயாக நாம் இஷ்டமாகிய எல்லாரோடும் திருத்தமாக வருவோம் காலந் தாழ்க்காது செல்கவென்றனர் எ - று

அட்டமூர்த்தி யென்றமை, திருவாசகம் "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான், உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே, பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ" என்பதனாலறிக (எங)

கருணை நாயகன் கண்ணருள் கொண்டுபோய்த்
திருவி னாயகன் சேவடி தாழ்ந்துநான்
மருவின் வார்குழ லார்மண மோதிப்பின்
பொருவில் சத்திய லோகம் புகுந்தனன்

(இ - ள்) நான் கிருபாமூர்த்தியாகிய கணேசப்பெருமான் கடாட்சம் பெற்றுச் சென்று, இலக்குநாயகனாகிய திருமாலின் செவ்விய திருவடியைப் பணிந்து, வாசம் பொருந்திய நீண்ட நல்ல கூந்தலையுடைய சித்திபுத்திகளின் திருமணத்தைக் கூறிப் பிறகு ஒப்பில்லாத (என்னுடைய) சத்தியலோகத்தை யடைந்தேன் எ - று (எச)

வேறு

முனிவர ரெழுவரை முடிகொள் வேந்தரைப்
புனிதவா னவர்களைப் புலவர் மன்னனைக்
கனிமொழி யவரொடுங் கடுக வம்மினென்
றினியமங் கலம்பொறித் தெய்த வுய்த்தனன்

(இ - ள்) சப்த விருடியரையும், கிரீடமணிந்த மன்னர்களையும், புனிதமான தேவர்களையும், தேவராசனாகிய இந்திரனையும், தத்தம் மனைவிமார்களோடும் விரைந்து வாருங்களென்று இனிமைபொருந்திய திருமணத்திருமுகம் வரைந்து (அவர்கள்பால்) அடைய (தூதுவரை)ச் செலுத்தினேன் எ - று

முனிவரரெழுவர்—அத்திரி ஆங்கிரசன் கௌதமன் சமதக்கினி பரத்துவாசன் வசிட்டன் விசுவாமித்திரன் என்பவர் அன்றியும், அகத்தியன் ஆங்கிரசன் கௌதமன் காசிபன் புலத்தியன் மார்க்கண்டன் வசிட்டனென்பதும் வழக்கு. (எரு)

மாதவ வசிட்டன்முன் மாத வத்தரு
மிந்திரன் முதலிய தேவர் கூட்டமும்
பாதலத் தவரும்பார்த் திவரும் யாவருங்
காதலி மாரொடுங் களித்து நண்ணினார்.

(இ - ள்) (பிரமன் செலுத்திய சித்திபுத்திகளின் திருமணத் திருமுகங் கண்டு) பெருந்தவமுடைய வசிட்டன் முதலாகிய சிறந்த தவசிகளும், திருமால் முதலாகிய தேவர்கூட்டத்தவர்களும், பாதலவாசிகளும், அரசர்களும், மற்றெல்லோரும் (தத்தம்) மனைவிமார்களோடும் விருப்புற்று வந்தார்கள் எ - று.

சீதரன் - ஸ்ரீதேவியை மார்பிலணிந்தவன், திருமால். (௭௬)

நிதிமணித் தருக்களு நீடு தேனுவுங்
கதிர்மணி யிழைகளுங் கருத்தின் வேட்டவுந்
முதிர்சுவை யுணவுமுன் னணைஞ ரோடு
பதியினர் கைக்கொளப் பணிப்பச் செய்தனன்

(இ - ள்) நிதிகளும் மணிகளும் தருக்களும் பெருமை மிக்க காமதேனுவும் (ஆகியவை) பிரகாசமுடைய மணிகளிழைத்தபணிகளும், மனதில் விரும்பியனவும், சுவை முதிர்ந்த வுணவும், (ஆகியவிவற்றை) நெருங்கினவர்களுடன் அந்நகரவாசிகள் கைக்கொள்ளும்படி கொடுக்கச்செய்தனன் எ - று.

நிதி—சங்கநிதி பதுமநிதியென விரண்டு இவை முறையே சங்கரூபமும் பதுமரூபமு முடையனவாய்த் தம்மிடத்துள்ள பொருளை யெடுக்குந்தோறுங் குறையாது கொடுக்கு மியல்பின.

மணி—சிந்தாமணி - சூடாமணி - சியமந்தகமணி முதலியன.

தருக்கள்—கற்பகம் - அரிசந்தனம் - சந்தானம் - பாரிசாதம் - மந்தாரமென்பன இவை விரும்பியவற்றைக் குறைவின்றிக் கொடுக்கும்.

தேனு—பசு. (௭௭)

நச்சிய மயனிரு நகரங் கோட்டினை
யிச்சையி னியற்றின னியற்று மன்றலுக்
கச்செழு மண்டப மகத்தி னாக்கினன்
விச்சுவ கன்மனென் றுரைக்கு மேதையான்

(இ - ள்) (யாவரும்) விரும்பிய மயனென்பவன் திருநகரத்தைத் தன் விருப்பின்படி அழகுசெய்தனன் செய்யத்தக்க திருமணத்திற்காகிய அந்தச் செழிய மண்டபத்தை விசுவகன்மனென்று சொல்லப்படும் அறிவினையுடையவன் மனதால் நிருமித்தனன் எ - று.

மயன் - அசுரகம்மியனென்றும், விசுவகன்மன்-தேவகம்மியனென்றுஞ் சொல்லப்படுவர் இவர்களே சிறப்புநூல் வல்லவர்களாம். (௭௮)

வனப்பினை முழுவது மடித்து நான்முகன்
மனப்பெரு முயற்சியின் வருத்த மாநகர்க்
கனப்பெரு மயனடி மனத்துக் காக்கிய
வினைப்படு மெழிலெவ ரியம்ப வல்லவர்

(இ - ள்) நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் அழகு முழுவதையும், வடித்தெடுத்து மனத்தின் பெருமுயற்சியினால் சிருட்டிசெய்த சிறந்த அந்நகரத்திற்கு, அப்படிப்பட்ட பெருமைவாய்ந்த மயனென்பவன் திருமணத்திற்காகச் செய்த மிகுதியாகிய அழகை யெவர் தாமெடுத்துச்சொல்ல வல்லவராவர்? எ - று. (௭௯)

வேறு

முத்தின் றோரண பந்தியு முதிர்குலை வாழைக்
கொத்துமம் பூகமுங் குளிர்மணிப் பந்தருங் கொடியும்
பித்தி யோவியப் பிறக்கமும் பிறங்குவே திகையின்
வைத்த பூரண கும்பமும் வயின்வயின் விளங்கும்

(இ - ள்.) முத்தாலாகிய தோரணவரிசையும், முதிர்ந்த குலையையுடைய வாழைமரக்கூட்டங்களும், கமுகமரங்களும், குளிர்ச்சிவாய்ந்த முத்துப்பந்தர்களும், துவசங்களும், சுவர்த்தலத்தெழுதிய சித்திரப்பிரகாசமும், விளங்குகின்ற திண்ணையின்மேலமைத்திய பூரணகும்பங்களும் இடங்கடோறும் விளங்கின எ - று.

பூரணகும்பம் - நிறைகுடம் (௮௰)

வடாது மால்வரை மருட்டிய மாற்றுயர் பொன்னாற்
றடாத பேரொளி மணிகளாற் சமைத்தயா நகரின்
விடாத பேரெழில் நோக்கவிண் காவல னளவிற்
படாத வாள்விழி படைத்திலே னெனப்பரி வுழந்தான்.

(இ - ள்) பெரிய வடமலையாகிய மேருமலையை மயங்கச்செய்த மாற்றுயர்ந்த பொன்னாலும், தடைசெய்யப்படாத பேரொளிவாய்ந்த இரத்தினங்களாலுஞ் செய்யப்பட்ட அச்சிறந்த நகரத்தின் நீங்காத பேரழகைப் பார்க்கும்படி எண்ணிக்கையிலடங்காத (அநேக கோடி) ஒளிபொருந்திய விழிகளை யடைந்திலேனென்று, தேவர்க்கிறைவனான இந்திரன் துன்பமிகுந்தான் எ - று.

இந்திரன் தன் ஆயிரங்கண்களாலுங் கண்டுமுடியாமையின் "அளவிற் படாத வாள்விழி படைத்திலே னெனப்பரி வுழந்தான்" என்றார்

வடாதுவரை - மேரு வடதிசையிற் பல மலைகளிருப்பினும் அது பொன்மலையாதலாலும் சிவபிரானுக்கு வில்லானதாலும் பூமத்தியிலிருந்து அதனைச்சுமத்தலாலுஞ் சிறப்புநோக்கி அதனையே கூறுதல் வழக்கு. (௮௧)

இந்தி ராதியர் வேறொரு துறக்கமெய் தினர்போ
லந்தி லேர்கையி லழுந்தின ரந்நக ரவரு
மெந்தை யாகடிக் கியற்றுபுத் தெழிலவர் களிப்பான்
முந்து நோக்குறு முயர்பதி முற்றினா ரனையார்.

(இ - ள்) இந்திரன் முதலிய இமையவர்கள் வேறொரு சுவர்க்கலோகமடைந்தவர்களைப்போல, அவ்விடத்திற் சந்தோட (சாகர) த்தில் மூழ்கினார்கள் அந்நகரவாசிகளும் எந்தையாகிய கணேசப்பெருமானுடைய திருமணத்திற்குச் செய்த புதிய அலங்காரத்தினாற் பெருகிய களிப்பால், முற்பட்டுச்சொன்னத உயர்ந்த பதவியை யடைந்தவர்களை யொத்தார்கள் எ - று

அந்தில் - அவ்விடம், அசை. "அந்திலாங் கசைநிலை யிடப்பொரு ளாகும்" - என்பது சூத்திரம்

புத்தெழில் - புதுமை - எழில் (௮௨.)

ஆழி ரட்டிய கோடியென் றாழ்மம் புவியுங்
கூறு நெத்திரண் முழுதுங் கூடவந் நகரம்

வீறு பெற்றவர் நாளினும் விளங்குகா லத்தால்
வேறு பட்டில தவையெலா மொருங்கிய விளைவால்

(இ-ள்) பன்னிருகோடி சூரியர்களும், சந்திரர்களும் சொல்லுகின்ற நக்ஷத்திரத்தொகுதி முழுவதும் ஒன்று சேர்ந்து பெருமைபெற்ற அகசாபத்திலும், அந்நகரமானது விளங்குகின்ற காலத்தினாலுண்டாகும் வேறுபாட்டையடைந்ததில்லை (என்னெனில்) அவையாவுந் தம்மிடத்தொருங்குள்ள தன்மையால் எ-று (௮௩)

காம தேனுவி னுண்டியுங் கற்பகத் திழையும்
வாம மேகலை மகளிரு மைந்தரும் பெறலாற்
றாமெ லாமுரு வொத்தலிற் றம்முளோ வில்லை
நாம மாத்திரம் வேறுபா டெண்ணவிற் றுவண

(இ-ள்) காமதேனுவினாற் கொடுக்கப்படும் உணவுகளும், கற்பகத்தருவினாற் கொடுக்கப்படும் ஆபரணங்களுமாகிய இவற்றை, அழகிய மேகலாபரணமணிந்த மாதர்களும் ஆடவர்களும் பெறுவதால், தாங்கள் யாவரும் வடிவமொத்திருத்தலால் தங்கட்குள்ளே வேறுபாடில்லாமல், பெயர்கள் மாத்திரமே வேறுபாடுகளைச் சொல்லாநின்றன எ-று (௮௪)

பாரி சாதமந் தாரங்கற் பகம்பசுந் தேவ
தார மேவுசந் தானமென் றிவையெனத் தழைந்த
வேரி தாழ்பொழில் விம்மிதம் பற்பல விளைப்ப
ஆரு நோக்கின ரவ்வயி னவ்வயி னகலார்

(இ-ள்) பாரிசாதம் - மந்தாரம் - கற்பகம் - பசிய தேவதாரம் - பொருந்திய சந்தானமென்று சொல்லப்படும் இப்பஞ்சதருக்களும் நெருங்கிய தேன்பாயுஞ் சோலைகள் எண்ணிறந்த விம்மிதங்களை யுண்டுசெய்ய, (ஆங்கடைந்துள்ள) எல்லோரும் அவ்விடங்களை விட்டு நீங்காதவர்களாகிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள் எ-று (௮௫)

வேட்ட வேட்டவை கற்பக மாதிகள் வீச
வேட்டை தீர்தர வேற்றிள மகளிரு மிலங்குஞ்
சேட்டு மாமுடி மைந்தருந் திகழ்விளை யாட்டுக்
கோட்டி மேயினர் குளிர்மலர்ப் பொதும்பரு நகரும்

(இ-ள்) விரும்பிய பொருள்களை விரும்பியவகையே கற்பகத்தரு முதலியன வீசுதலால் (தமது) ஆசையகலும்படி (அவற்றைப்) பெற்று, இளமைவாய்ந்த பெண்களும் பிரகாசிக்கின்ற சிறந்த பெருமைபொருந்திய முடியையணிந்த புருடர்களும், நிறமமைந்த மலர்களையுடைய சோலைகளிலும் நகரத்திலும், விளங்குகின்ற விளையாடல்களைச் செய்யுங் கூட்டங்களாயினார்கள். எ-று

ஏட்டை - ஆசை. ஆறு - கடைக்குறைந்து ஆவென நின்றது. (௮௬)

வாச மென்புன லாடியு மலர்ந்தபூம் பொழிலி
னூச லம்மனை கந்துக மாடியு முவந்து
நேச மல்கிய வன்பரி னூடியு நெடுங்கட்
காசு லம்பிய முலையினா ரிலங்குளங் களித்தார்

(இ-ள்) மணமெய்திய மெல்லிய நீர்விளையாடல் செய்தும், விகசித்த மலர்ச் சோலையில், ஊசல் அம்மனை கந்துகம் இவ்வாடல்கள் செய்தும், சந்தோஷித்தும்,

அன்புமிகுந்த கணவரிடத்தில் மனநாடியும், நெடியகண்களையுங் காசானது அசைகின்ற முலைகளையுமுடைய மாதர்களிற் சிலர் மனங்களித்தார்கள் எ - று.

ஊசல் - ஊஞ்சல் அம்மனை இஃதிக்காலத்து எழுங்காயெனப்படும் கந்துகம் - பந்து காசு - நவமணிகள் அல்லது ஓர்வகை மாதரணிவடம். (௮௭)

கிள்ளை மென்சொலாற் பூவையின் கிளவியைக் கீழ்ந்துங்
கிள்ளை மென்சொலைப் பூவையின் கிளவியாற் கீழ்ந்து
நள்ளு மென்பிடி யாடலை யன்னத்தா னலிந்துங்
கள்ளுலாங் கோதையர் தம்முளே சிலருளங் களித்தார்

(இ - ள்) கிளிகளின் மெல்லிய சொற்களால் நாகணவாய்ப்பறவைகளின் சொற்களைக் கீழ்ப்படச்செய்தும், கிளிகளின் மெல்லிய சொற்களை நாகணவாய்ப்பறவைகளின் சொற்களாற் கீழ்ப்படச்செய்தும், விரும்பத்தக்க மெல்லிய பெண்யானையின் நடையை அன்னப்பறவையால் துன்புறுத்தியும், தேன்பொருந்திய அளகத்தையுடைய மங்கையர்களிலே சிலர் மனமுவந்தார்கள் எ - று (௮௮)

களிசெய் வேழத்தின் வென்றியுங் கவன்வாம் பரியின்
விளிவில் வென்றியு மேழக்குஞ் சிவல்கவு தாரி
யொளிறு கோட்டுடை வாரணம் போரிடை யுறுத்து
வெளிறில் வென்றியும் வேந்தருட் சிலர்கொடு வியந்தார்.

(இ - ள்) மதக்களிப்பைச் செய்யும் யானையினாலாகிய வெற்றியும், நடையுடன் தாவிச்செல்லும் குதிரையினாலாகிய அழியாதவெற்றியும், ஆடு - சிவல் - கவுதாரி-பிரகாசிக்கின்ற உச்சிக்கொண்டையையுடைய சேவற்கோழி ஆகிய இவற்றின் சண்டையால் உண்டாகும் வெளிறற்றதன்மையற்ற வெற்றியுங்கொண்டு மன்னவருட் சிலர் மனங்களித்தார்கள் எ - று

கவனம் - குதிரைநடை

சிவலெனினுங் கவுதாரியெனினுமொக்கும் ஆயினும் அவ்விரண்டனையுங் கூறியிருத்தலின் அவற்றின் உட்பேதங்களெனக்கொள்க (௮௯)

சுருதி யாதிக டெளிற வுணர்ந்துசூழ் வினையை
யொருவு மாதவ வசிட்டர் தியற்று வாதங்
டரும வாதமு மருத்தவா தமுந்தகு காமப்
பொருளின் வாதமு முத்திவா தமுமபுகன் றிருந்தார்

(இ - ள்) வேதமுதலியவற்றை (ஐயந்திரிபு அறியாமையென்னும்) குற்றங்களொழியக்கற்று, தம்மைச்சூழ்ந்த வினைத்தொடக்கை யொழித்த பெருந்தவமுடைய வசிட்டர்முதலிய ஆங்கிருந்த பெரியோர்கள் தருமவாதமும் அருத்தவாதமும் தகுதியாகிய காமப்பொருளினையுடைய வாதமும் மோட்சப் பிரதிபாதகமான வாதமுஞ் செய்துகொண்டிருந்தார்கள். எ - று

இச்செய்யுளால் ஆங்கிருந்த வசிட்டராதியோர் சதுர்வித புருஷார்த்தங்களைப்பற்றி ஒருவரோடொருவர் வாதித்துக்கொண் டிருந்தாரென்றவா. (௯0)

சனக ராதியாம் யோகியர் தத்துவன் மொழிந்த
வனக மாகிய வாகமத் தளவையா லருளாற்

சிறந்து விளங்கின். கொழுகொம்பில்லாமல் தளர்கின்ற இளங்கொடியைப்போல நமஸ்கரித்து எழாதவர்களுடைய நிதம்பங்களே ஆடைகளோடிருந்தன. எ-று. (௧௬௯)

அண்ணன் மார்பக மணைக்கமாட் டாதகைத் தனையி
னண்ணி லேமென நகைவளை நழுவின சிலர்க்கு
வண்ண வார்குழன் மனநெகிழ்ந் தமைதெரிப் பதுபோற்
றிண்ணென் யாப்பினி னீங்கற நெகிழ்ந்தன சிலர்க்கு.

(இ-ள்) விநாயகக்கடவுளுடைய திருமார்பினைத் தழுவமாட்டாதகைகளிற் பொருந்தியிரோமென்று சிலர்க்குப் பிரகாசிக்கின்ற கைவளைகள் நழுவின. சிலர்க்கு அழகிய நெடிய கூந்தல்கள், அவர்கள் மனமுருகினமையை விளக்குவதுபோல வலிய கட்டுதலினின்றும் விலகி மிகவுஞ் சோர்ந்தன. எ-று (௧௭௦)

ஆடி னார்சில ரவிநயத் தாலகந் தெரித்துப்
பாடி னார்சிலர் பரிவொடு குறிஞ்சிப்பண் ணமைத்து
நீடி னார்சிலர் நிமலனைக் கூடுபா வனையி
னூடி னார்சில ருன்னிய பாவனைக் கலப்பின்.

(இ-ள்.) சிலமாதர்கள் (காமவெறியால் தம்மைமறந்து) ஆடினார்கள். அவிநயமுறையுடன் தம்முடைய மனக்கருத்தை வெளியிட்டுச் சில பெண்கள் பாடினார்கள். அன்புடன் குறிஞ்சிப்பண்பொருத்திச் சிலநங்கையார்கள் நிலைத்தார்கள். எண்ணத் தக்க பாவனைப்புணர்ச்சியால் சில பெண்கள் (இறைவனைப்) புணர்கின்றபாவனையாக ஊடல்கொண்டார்கள். எ-று.

காமமேலீட்டினால் அவர்கள் செய்வதுதெரியாது ஆடல்பாடல் முதலியவற்றைச் செய்தார்களென்பது கருத்து (௧௭௧)

இனைய வாறுபன் மாதரு மேத்தினர் மயங்க
வினையெ லாந்துமித் தவன்விளை மதச்சலத் தா
னனைய மாமுகத் தொருத்தலை நலத்தர வுந்திப்
புனையும் வீதிகள் வலம்வந்து கோயிலுட் புகுந்தான்.

(இ-ள்.) இவ்வகையாகப் பலமங்கையர்களுந் துதிசெய்து (காம) மயக்குறும்படி, வினைச்சம்பந்த முழுவதையுமழிக்கும் ஞானசொரூபியாகிய கணேசப்பெருமான் மணமமைந்த மதப்பெருக்கினாலே நனைகின்ற பெரிய முகத்தையுடைய அயிராவணமென்னும் வெள்ளானையை நன்மைபெறச் செலுத்தி, அலங்கரித்திருக்குந் திருவீதிகளை வலமாக (ப்பவனி)வந்து திருக்கோயிலினுள்ளே பிரவேசித்தனர் எ-று. (௧௭௨)

தருவுந் தேனுவுஞ் சங்கமுந் தாமரை நிதியுந்
திருவி னீடுசிந் தாமணித் திரள்களும் வெவ்வே
றுருவு தாங்கிநின் றவ்வவ ருவக்குமா விருந்து
பருவ மாமழை போலுமெனப் பணையொடும் பகர்ந்த.

(இ-ள்.) கற்பகத்தருவும், காமதேனுவும், சங்கநிதியும், பதுமநிதியும், செல்வமிகுந்த சிந்தாமணியுமாகிய (இவற்றின்) திரள்களும் பலபலவடிவங்களெடுத்துநின்று காலத்திற் சொரியும் பெருமழைபோலுமென்று சொல்ல, அவரவர்கள் களிப்பெய்தும்படி சிறந்த விருந்தினைத் தருதலைச்செய்தன. எ-று (௧௭௩)

வரைந்த நாடொறு மன்றன்மங் கலவினை சாலப்
புரிந்து சாறுமுற் றியவழி நாட்பொலந் தவிசிற்
றெரிந்த பூணிழை மாதொடுஞ் சிவபிரா னிருப்ப
வரந்தை தீர்தர வனைவரு மடுத்திறைஞ் சினரால்.

(இ - ள்) அளவிட்ட தினங்கடோறும் திருமணத்தின் மங்கலச்சடங்குகளை மிகுதியாகச்செய்து மகோற்சவமுடிந்த மறுநாளினத்தில், அழகிய பீடத்திற் சிறந்த ஆபரணங்களை யணிந்த உமாதேவியாருடன் சிவபெருமானார் எழுந்தருளியிருக்க, துன்பமகலும்படி எல்லோரும் ஒருங்குசேர்ந்து வணங்கினார்கள் எ - று.

சாறு - திருவிழா; ஈண்டுத்திருமணம். (கஎச)

மாயன் மாதிரத் தலைவர்கள் பதினொரு மூவர்
மேய சாரணர் கின்னரர் மேதகு சித்தர்
தூய மாதவர் தொல்புவி யரசர்க ளெவரு
மேயு மாறருள் கொண்டுதம் முலகமெய் தினரால்.

(இ - ள்) திருமால் - அட்டதிக்குப்பாலர்கள் - முப்பத்துமூன்று தேவகை யினர் - பொருந்திய சாரணர்கள் - கின்னரர்கள் - மேம்பாடுடைய சித்தர்கள் - புனித மாகிய பெருந்தவசிகள் - பழமையாகிய பூலோக மன்னர்கள் - முதலிய எல்லோரும் (சிவபெருமானுடைய) திருவருளைப் பொருந்துமாறு கொண்டு தங்கடங்களுலகங்களை யடைந்தார்கள் எ - று.

பதினொருமூவரென்றது முப்பத்துமூவர்; அவர்கள் ஆதித்தர் பன்னிருவர்; அச்சுவினிகள் இருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மரெனக. (கஎரு)

கந்த ராதிமுன் னுடன்வரு காரண ரெவரு
மைந்த ராகிய கணேசரு மணமக ளிர்களுங்
கொந்து லாமலர்க் குழன்மின்னை மணியொடுஞ் சூழ
வெந்தை யாரெழுந் தருளினர் திருக்கயிலாயம்.

(இ - ள்) (இளைய பிள்ளையாராகிய) முருகக்கடவுள் முதலாக முன்னே உடன்வந்த முக்கியமானவர்கள் யாவரும், (மூத்த) பிள்ளையாராகிய கணேசப்பெருமா னும், (சித்தி புத்திகளாகிய) திருமணப்பெண்களும், மலர்க்கொத்தமைந்த கூந்தலையு டைய உமாதேவியாரும் உடன்சூழ்ந்துவர, எமது தந்தையாராகிய சிவபெருமானார் திருக்கயிலாயகிரிக் கெழுந்தருளினர் எ - று. (கஎகூ)

அங்கு வீற்றிருந் தைம்முக ரைந்தொழில் புரிய
வெங்க ணாயக னாகிய வேரம்ப னிருபா
றங்கு மாதரா ரோடுதன் னுலகினை யடுத்துப்
பொங்கு சீர்த்தலி னளவளாய்ப் போகமுற் றிருந்தான்.

(இ - ள்.) ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமானார் அக்கைலாயகிரியி லெழுந்தருளியிருந்து பஞ்சகிருத்தியங்களைச்செய்ய, எங்கள் தலைவராகிய விநாயகக் கடவுள் இருபுறங்களிற் பொருந்திய சித்தி புத்தி தேவியருடன் தமதுலகினைச்சார் ந்து, அதிகரிக்கின்ற ஆசையுடன் அளவளாவி இன்புற்றிருந்தனர். எ - று.

ஐம்முகன் — ஈசானம் தற்புருடம் அகோரம் வாமதேவம் சத்தியோசாதமென்னும் ஐந்து திருமுகங்களையுடையவன் ஐந்தொழில் — சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அநுக்கிரகமென்பன. (கஎஎ)

அன்று மன்றலி னுடனிருந் துய்ந்தன னதனை
யின்று சொல்லியு முய்ந்தன னென்னவியா தனுக்கு
மன்றன் மென்மலர் வாழ்க்கையான் வகுத்தன னென்னு
நன்று சாற்றினன் பிருகுமா தவனரா திபற்கு.

(இ - ள்) அக்காலத்தில், திருமணத்திலுடனிருந்து உச்சீவித்தேன் அதனை யிப்பொழுது (உனக்குச்) சொல்லியும் உச்சீவித்தேனென்று, வியாசமுனிவனுக்கு மணம்பொருந்திய மெல்லிய தாமரைமலரில் வாழ்க்கையுடைய பிரமதேவன் கூறினனென்று, சிறந்த பிருகுமுனிவர் சோமகாந்தமன்னவனுக்கு நன்றாக(எடுத்து)க் கூறியருளினர் எ - று. (கஎஅ)

சித்தி புத்திகட் டிருமணஞ் செப்பினம் வியாத
பைத்த பன்னகப் பள்ளியான் கமலைதன் பாவி
மெத்து வண்டிறன் மதுகயி டவருயிர் வீத்த
வத்தி றத்தினைக் கேளென வறைகுவன் மலரோன்.

(இ - ள்) வியாதமுனிவனே! சித்தி புத்தி தேவிகளது திருமணவிபவத்தை யெடுத்துச் சொன்னோம். (இனி) படத்தையுடைய ஆதிசேடனைச் சயனமாகவுடைய திருமாலை விநாயகக்கடவுளைத் துதிசெய்து, மிக்க வண்மைதங்கிய வலியமைந்த மதுகயிடவர்களென்னு மசுரர்களை யுயிர்போக்கிய அத்திறத்தையுங் கேட்பாயாகவென்று பிரமதேவன் கூறலாயினன். எ - று. (கஎகூ)

திருமணப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ககஉரு

---

## விண்டு சடக்கரமனுட்டித்தபடலம்.

பண்டொரு காலத் தண்ணிப் பாற்கட லரவப் பள்ளி
விண்டுகண் டுயிலும் போதவ் விண்டுவின் காதி னின்று
மண்டிய மதுகை சான்ற மதுகயி டவர்க ளென்னு
மண்டர்க ளிடுக்க ணூட்ட வசுரர்க டோன்றி னாரே

(இ - ள்.) முன்னொருகாலத்திலே, திருப்பாற்கடலிற் சேடசயனத்திலே திருமால் (யோக) நித்திரை புரிகையில், அத்திருமாலின் காதுக்குறும்பியிலிருந்து ஒருங்கிய வலிமை மிக்க மதுகயிடவர்களென்று, தேவர்களிடுக்கணடையும்படி இராக்கதர்கள் பிறந்தார்கள். எ - று.

இடக்கண்டுடித்தல் துர்ச்சகுனமாதலின் மதுகயிடவர்கள் தோன்றியபோது அமரர்க்கு அஃதாடிற்றென்பார் "அண்டர்களிடுக்கணூட்ட" என்றார். (க)

வேறு

வெருக்கு விழியு மிடிக்குரலும் வெருக்கொ ளுருவும் பிறையெயிறுந்
திருக்கி விடுத்த முகமயிருஞ் செங்குஞ் சியுநன் றுடையவராய்த்
தருக்கி யுறங்கு நெடுமாயன் றனையு நிந்தித் தருந்தவத்தி
லிருக்கு முனிவர் பெரியவர்க ளெல்லா ரமையு மவமதித்தார்.

(இ - ள்) பூனையின் கண்போன்ற கண்களும், இடியொலிபோன்ற குரலும், (கண்டோர்) அச்சங்கொள்ளுதற்கேற்ற தேகமும், பிறைச்சந்திரன்போன்ற (வளைவாகிய) தந்தங்களும், முறுக்கிவிட்ட முகமயிரும், சிவந்த தலைமயிரும், (ஆகியவிவற்றை) நன்றாக அமைந்தவர்களாய், (அவ்வசுரர்கள்) இறுமாந்து துயில்புரியும் நெடிய திருமாலையு நிந்தித்து, அரிய தவஞ்செய்கிற பொருந்தியிருக்கும் முனிவர்கள் பெரியோர்கள் முதலிய யாவரையும் அவமதித்தார்கள் எ - று.

வெருகு - பூனை பிறையெயிறு - வக்கிரதந்தம் குஞ்சி - ஆண்மகன் தலைமயிர் நெடுமாயன் - திரிவிக்கிரமாவதாரங்கொண்டு நெடுகிய விண்டு. (௨)

வடிக்கு மறையி னெறியொழுக்க மாற்றிப் புவியி னுயிர்வதைத்து
முடிக்கு முடிவைத் துயருலகின் முடியா தமரு மிமையவரை
யடிக்க நினைந்தவ் விருவோரு மலர்மீ திருக்கு மெனைமுன்னாட்
பிடிக்க வடுத்தா ரவர்க்கஞ்சிப் பேதுற் றுருவங் கரந்தேனால்.

(இ - ள்) தெளிவிய வைதிகமார்க்கத்தில் நடத்தலை மாறுபடுத்தி, உலகிலுள்ள பிராணிகளைத் துன்புசெய்து சிரத்துக்கு முடிசூடி, உயர்வாகிய (தேவ) லோகத்தில் இறவாதிருக்குந் தேவர்களைத் துன்புசெய்யக்கருதி, அந்த (மதுகயிடவர்கள்) இருவரும் முதலிலே தாமரைமலரின்பேரில் வசிக்கும் என்னைப் பிடிக்கும்படி நெருங்கினார்கள் (யான்) அவர்களுக்குப்பயந்து மதிமயக்கமடைந்து என் வடிவை மறைத்தேன் எ - று.

பேதுறல் - புத்தி மயங்கல் (௩)

உருமுக் குரல்வேங் கையினகம்போ லுருக்கொள் பகன்றை மலர்த்தொ
மருமக் குரிசின் மதக்களிற்று வானப் பெருமா டிருவருளாற [டையன்
கருமைக் கடல்போ னிறத்தவரைக் கமலத் தடங்கட் புயல்வண்ண
னிருமைப் பயனுங் கெடவழிக்கு மென்று திருப்பாற் கடலடுத்தேன்.

(இ - ள்) இடிபோன்ற குரலொலியையுடைய புலியினகம்போலுமுருக்கொண்டுள்ள கொன்றைமலர்மாலையையணிந்த திருமார்பையுடைய தலைவராகிய மதம்பொழியும் யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளது திருவருளால், கருங்கடல்போலும் நிறமமைந்த மதுகயிடர்களை, பரந்த தாமரைமலர்போலுங் கண்களையுடைய மேகவண்ணனாகிய திருமால் (அவர்களது) இருமைப்பயனுங் கெடும்படி யழிப்பாரென்று திருப்பாற்கடலையடைந்தேன் எ - று.

உருமுக்குரல் வேங்கையினகம்போ லுருக்கொள்பகன்றையென்றது புலிநகக்கொன்றை இது புலிக்கொன்றையென்றும், கிலுகிலுப்பையென்றும் வழங்கும். உருமுக்குரலென்றது வேங்கைக்கு விசேடணம். (௪)

உறங்கு மவரை யிடையெழுப்ப வுயர்மா மறையோ தாமையினுன
மறங்கொ ளபரிக்கு மரவணையி னலர்க்கண் படுக்கு நெடுமாயன்

றிறங்கொப் பளிக்கு நித்திரையாந் தேவி யவனை விட்டொழிய
வறங்கொண் மனத்து வியாதனென்று மந்த ணாள வழுத்தினேன்.

(இ - ள்.) தருமநெறி பொருந்திய மனமுடைய வியாதமுனிவனே! நித்திரை செய்யும் அத்திருமாலைத் துயிலுணர்த்த உயர்வாகிய சிறப்பமைந்த வேதமோதாமையினாலே, வன்மைமிகுந்த சேடசயனத்தில் தாமரைபோன்ற கண்கள் துயிலுந் திருமாலின் திறமிக்க நித்திரையாகிய தேவியானவள் அவரைவிட்டு விலகும்படி (அவளை நான்) துதிசெய்தேன் எ - று. (௫)

சாவித் திரியாய்ச் சந்தியாய்த் தக்க சுவாகா சுவதாவாய்ப்
பாவித் திடுமுத் தொழிலாகிப் பண்ணு வோராய்ப் பார்ப்பதியாய்
மேவுற் றிடுநற் கலையாதி வெவ்வே றுளகாலமா
யாவித் தயரும் பசிதாக மாகிப் பசியா மாமாயி

(இ - ள்.) சாவித்திரியாகியும், சந்தியாகியும், தக்க சுவாகாவாகியும், சுவதாவாகியும், வழங்குகின்ற முத்தொழில்களாகியும், (அவற்றைச்) செய்பவர்களாகியும், பார்ப்பதியாகியும், பொருந்திய நல்ல கலைமுதலிய வெவ்வேறு வகைப்பட்ட காலமாகியும், கொட்டாவிவிட்டு இளைப்படையச்செய்யும் பசிதாகமாகியும், பசியாகியுமுள்ள மகாமாயியே! எ - று.

சாவித்திரி முதலியன சத்திவிசேடங்கள். சுவாகா சுவதாவென்பன மந்திரவிசேடங்கள். கலையாதி வெவ்வேறுளகாலமென்றது பரமாணு இரண்டுகொண்டது அணு அது மூன்றுகொண்டது திரிசரேணு அது மூன்றுகொண்டது துடி அது மூன்றுகொண்டது வேதை. அது மூன்றுகொண்டது லவம் அது மூன்றுகொண்டது நிமிஷம். அது மூன்றுகொண்டது கலை அது ஐந்துகொண்டது காட்டை அது பதினைந்துகொண்டது லகு. அது பதினைந்துகொண்டது கன்னல் அல்லது கடிகை அது இரண்டுகொண்டது முகூர்த்தம் அது நான்குகொண்டது பொழுது அது இரண்டுகொண்டது நாள் அது பதினைந்துகொண்டது பட்சம் அது இரண்டுகொண்டது திங்கள் அது இரண்டுகொண்டது இருது. அது மூன்றுகொண்டது அயனம் அது இரண்டுகொண்டது ஆண்டு என்றுசொல்லப்படும். ஆண்டு அல்லது வருடம் நூறுகொண்டது மானுடர் ஆயுள்காலம் மேற்கூறிய மானுடநாள் முப்பதுகொண்டது தென்புலத்தோர்க்கு ஒருநாள் அவ்வகைத் திங்கள் பன்னிரண்டுகொண்டது தேவர்களுக்கு ஒருநாள். அவ்வகைய நாள்கள்கூடிய ஆண்டு பன்னீராயிரங் கழிந்தால், தேவர்களுக்கோர் ஊழியாம். நாலைசையூழி யாயிரஞ்சென்றால், பிரமனுக்கொருபகல். இவைமுதலியன காலவிசேடங்கள். (௬)

இருளு மிருளு மிரவாதி யிருக்கா திகளா மறையாதி
மருவு மலகி லுயிர்கட்டோறும் வளர்சத் திகளும் பலவாதி
பருகு மமுத மயமாதி பாவாய் நின்சீர் பகர்வாரியார்
பொருவி லாதாய்க் கினிதடியேன் புகலப் படுவ தொன்றுளதால்.

(இ - ள்.) இருளுமிருளத்தக்க இரவாயிருக்கின்றனை இருக்கு முதலாகிய வேதங்களாயிருக்கின்றனை பொருந்திய எண்ணில்லாத உயிர்களிடத்திலெல்லாம் வளர்கின்ற பல சத்திகளாயிருக்கின்றனை பருகத்தக்க அமுதமயமாயிருக்கின்றனை. பொற்பதுமைபோல்பவளே! உன்னுடைய சிறப்பை யெடுத்துச்சொல்பவர்கள் யாவருளர்?

சமானமில்லாத உனக்கு இனிதாக அடியேன் சொலத்தக்கதொன்றுண்டு (அஃதென்னெனில்.) எ - று. (எ)

அரக்கர் அவுணர் முதலான வரட்டர் முடிசெங் களத்துருட்டிப்
புரக்கும் பெருமா னுலகளந்த புலவர் பெருமா னாபாகலி
துரக்கும் பெருமா னுன்வயத்தாயத் துயிலகின் றுனமற றவன்விழிப்ப
விரக்கம் புரிந்து புறத்தேகா யெற்று நெனினீங் குரைப்பக்கேள்.

(இ - ள்.) அரக்கர் அவுணர் முதலாகிய அரட்டர்களுடைய முடிகளைச் செவ்விய போர்க்களத்தில் உருளச்செய்து (அடியார்களைக்) காக்கும் தலைவனும், (திரிவிக்கிரமாவதாரங்கொண்டு மாவலிபால் மூவடிமண் யாசித்து) மூவுலகங்களையும் திருவடியாலளந்த தேவராசனும், பதர்களுடைய துன்பங்களை யொழிக்கும் கடவுளுமாகிய திருமால் உன் வயமாகித் துயில்புரிகின்றனராதலின், அவ்விறைவன் கண்விழிக்கும்படி தயைபுரிந்து புறத்தே செல்வாயாக அஃதியாதெனின் இப்பொழுது சொல்வதைக்கேட்பாயாக. எ - று

அரக்கர் - இராட்சதர். அவுணர் - அசுரர் அரட்டர் - குறுநிலமன்னர்கள்; ஏண்டுக் கொடியோரையுணர்த்தியது (அ)

தொக்க தவத்தான் முற்பிறப்பிற் றேலா வரமென் பாற்பெற்றார்
மிக்க மதுகை யுடையவராய் விண்டு செவியி லிப்பிறப்பின்
மக்க ணெங்கச் சுரர்கணெங்க வந்தார் மாயன் கரத்தனழித்
தக்க வுயிர்சாம் பாரொன்னார் தாக்க முயன்று ரீங்கடுத்தேன்.

(இ - ள்) மிகுந்த தவத்தினால், சென்ற சனனத்தில் தோல்வியடையாத வரத்தை யென்னிடத்திற் பெற்றவர்களாகிய மேம்பட்ட வெற்றியை யுடையவர்களாய், இந்தச்சனனத்தில், திருமாலின் காதுகளில் மானுடர் நடுங்கவும் தேவர்கள் நடுங்கவும் பிறந்தார்கள். (அவர்கள்) விண்டுவினுடைய திருக்கரங்களாலன்றித் தகுதியாகிய உயிர் கழியமாட்டார்கள் [இறவார்கள்] என்னை யெதிர்க்க முயற்சிசெய்தார்கள் (அவர்கட்கஞ்சி) ஈண்டுப் போந்தேன் எ - று (௯)

அதனுற் றிருமால் கண்படைநீத் தவுண ராவி தமைச்செகுப்பக்
கதமார் திகிரிப் படையானைக் கழன்று நீங்க வேண்டுமென
விதமார் மொழியாற் றுத்திரித்த வெள்ளைக்கன் றிரங்கி நித்திரையற்
புதமார் தரவே விலகியது புருடோத் தமனு மெழுந்திருந்தான்.

(இ - ள்.) அக்காரணத்தினால் விண்டு பகவான் துயிலொழிந்து அவ்வவுணர்களுயிரைக் கொல்லும்படி, கோபம் பொருந்திய சுதரிசனமென்னுஞ் சக்கராயுதமேந்திய திருமாலைப்பிரிந்து நீ செல்லவேண்டுமென்று இதவார்த்தைகளால் துதிசெய்த வெனக்கு அப்பொழுது (மனம்) இரங்கி நித்திரையானது அற்புதமாக விலகிற்று புருடோத்தமனாகிய திருமாலும் (துயிலொழிந்து) எழுந்திருந்தனர் எ - று.

புருஷ உத்தமன் = புருஷோத்தமன். புருஷர்களிற் சிறந்தவனென்பது பொருள். (௧௦)

ஆய பதத்தி னவுணர்களா லலைப்புண் டமரர் மந்தாருந்
தூய திருப்பாற் கடலடுத்துத் தொழுது முறையிட் டாரெடியோன்
மேய வெண்ணப் பாரத் திங்கடுப்ப வினைந்த கருமம் யாதெனனைப்
பாய பரவைத் திருப்பாயற் பகவ கேளென் றிதுசொன்னனை.

(இ - ள) ஆகிய அந்தச்சமயத்தில் (மேற்கூறிய) அசுரர்களால் துன்பமடைந்துள்ள தேவர்களும் புனிதமாகிய திருப்பாற்கடலையடைந்து (திருமாலைப்) பணிந்து (தங்கள் குறைகளைச்சொல்லி) முறையிட்டார்கள் திருமால் (ஆங்குப்) பொருந்திய எனனைப்பார்த்து நீ யிங்குவருதற்குண்டாய காரியம் யாது? எனவினவ, பரவிய பாற்கடலிற் சிறந்த சேடசயனத்துள்ள பகவானே! கேட்பாயாகவென்றிதனை (அவருக்கு)ச் சொன்னேனை. எ - று

பாயல் - படுக்கை. பகவன் - அறுகுணச்செல்வனை (௧௧)

வேறு

மாயை மிக்கவர் மதுகயி டவரென விருவர்
தூயை நின்செவி யழுக்கினிற் றோன்றின ரவர்க்குந்
தாயை தந்தையை யென்னினைப் பிறர்களைச்சாற் றுது
சேயை யென்னுமா றவர்களைச் செகுத்திடா யென்றேன்.

(இ - ள) பரிசுத்தனே! மாயாசத்தி மிக்கவர்களாகிய மது கயிடவரென இரண்டசுரர்கள் தேவரீருடைய காதுக்குறும்பியிற் பிறந்தார்கள் அவர்களுக்குத் தாயுந் தந்தையுமென்று தேவரீரைப் பிறர்கூறவொட்டாமல், அன்னியனென்று சொல்லும்வகையாக அவர்களைச் சங்கரிப்பீராகவென்று (திருமாலைநோக்கிக்) கூறினேன். எ - று.

தாயை - தந்தையை—என்பவற்றில் ஐகாரங்கள் சாரியைகள் "வண்டமர் கொன்றை யான்முன் வந்துநீ யாரையென்றான்" என்றாற்போல சேயை - தூரத்திலுள்ளவன். (௧௨)

நஞ்ச மன்னதா னவர்திற முழுவது நாடி
யஞ்ச லீரென வமரருக் குரைத்தம ரர்க
ணெஞ்சு துண்ணென நெடும்படை பலவுங்கொண் டெழுந்து
கஞ்சம் வென்றகை வலம்புரி சோதத்தின கனிவாய்.

(இ - ள) விடம்போன்ற அவ்வசுரர் வலப்பமுழுவது மறிந்து, பயப்படாதீர்களென்று தேவர்களுக்குக்கூறி, பகைவர்கள் மனந்துண்ணென்னத்தக்க பெரியபலபடைகளையுங்கொண்டு எழுந்திருந்து, தாமரைமலரைவென்ற திருக்கரத்திலேந்திய வலம்புரிச்சங்கத்தை (கொவ்வை) க்கனிக்குச் சமானமான திருவாயில்வைத்து எ - று,

இச்செய்யுளில் வலம்புரியென்றது பாஞ்சசன்னியம் (௧௩)

ஊழி நாளையி லாழிபோ லரப்பிய சங்கம்
வாழி வார்செவி நுழைதலு மதுகயி டவர்க
டாழி லாதவிவ் வொலியொலி யெழுப்பிய தகையான்
பாழியானவ னெடுபொரல் பாழியென் றெதிர்த்தார்.

(இ - ள்) ஊழிக்காலத்திலெழுகின்ற சமுத்திரம்போலக் கோஷித்த சங்கொலியானது சிறந்த நெடிய செவித்துளையில் நுழையவும், மதுகயிடவர்கள் குறைதலில்லாத விசயங்கொலி யெழுப்பியவன் சக்கிரியானே மேம்பாடுடையனென அவனுடன் போர்செய்தல் மேம்பாடென்று (திருமாலுடன் போர்புரிய) எதிர்த்தார்கள். எ - று.

ஒற்றை மாமலை வரவெதி ரோங்கிரு மலைபோ
யுற்ற தாமென வவணவர் கொடியனே யடுத்துக
கொற்ற மேவிய தானவர் குவவுத்தோ டடினவு
முற்றி னேமது திருமா றுன்னினை யென்றார்.

(இ - ள்) ஒன்றியாகிய பெருமலைவருகையில், அதற்கெதிர்சென்று உயர்ந்த இரண்டுமலைகள் எதிர்த்தாற்போல, நெடிய கருடக்கொடியையுடைய திருமாலை நெருங்கி, வெற்றியைப்பொருந்திய மதுகயிடவர்கள் (எங்கள்) குவிவாகிய தோள்களின் தினவு தீரந்தோம் அஃதகலுமாறு கருதினையென்று சொன்னார்கள், எ-று.

கொடிய ரின்னணங் கூறலுங் குவலய முண்டோ
னெடிவ துணமையே நுங்கடோட் டினவொரு காலு
மடைவ தன்றியே யடக்குது மஞ்சலி ரென்றன
படைவ ழங்கினார் பாவமே யுருக்கொண்ட பதகர்.

(இ - ள்) தீயோராகிய மதுகயிடவர்கள் இவ்விதமாகச்சொல்லவும், உலகமுண்ட (திருவாயையுடைய) விஷ்ணுமூர்த்தியானவர், உங்களுடைய தோட்டினவு அழிவதுண்மையே அது (மீண்டு) ஒருகாலத்திலும் வருவதல்லாம லடக்குவோம். அஞ்சாதீர்களென்றனர் பாவமேவடிவாகக்கொண்ட கீழ்மக்கள் ஆயுதங்களையுப்யோகித்தார்கள். எ - று (௧௬)

கூளி வான்படைக் கொற்றவை யெழுந்துகூத் தாட
வாளி தூரப்பாகண மாற்றுவர் வசிர மெறிவா
ராளி யேறென வார்ப்பார்க ளயிலெறிந் திடுவார்
தூளி போர்த்தெழச் சுற்றுவர் வாளமர் தொடங்கி

(இ - ள்) கூளிகளாகிய பெரிய சேனையையுடைய துர்க்காதேவி (களித்து) எழுந்து நடிக்கும்படி அத்திரங்களைச் சொரிவார்கள், (பாணங்களை) விலக்குவார்கள், வசிரத்தை வீசுவார்கள், ஆணயாளியைப்போல ஆரவாரிப்பார்கள், வேற்படைகளை யெதிர் செலுத்துவார்கள், வாட்போர்செய்யத் தொடங்கித் தூளிபோர்த்தெழும்படி (வலசாரியிடசாரியாகச்) சுற்றுவார்கள் எ - று.

கூளி - கழுகு, பூதம் (௧௭)

அண்டம் வாயவிட் வடுக்கலக ளகநெகிழ்ந் துடையக்
கொண்ட லீருக்கக் குணைகடல் வரம்பினைக் கடப்பத்
தண்ட மேந்தின ரெதிரெதிர் தாக்குபு பாசங்
கண்டு நேருற வீசுவர் கடிவாகைப் படையால்.

(இ - ள்) அண்டமானது வெடிபடவும், மலைகள் உள்ளுருகியுடைபடவும், மேகங்கள் (சூல்கொண்ட) நீரைச்சிந்தவும், ஒலிக்கின்ற கடலானது தன் எல்லையைக

கடக்கவும், தண்டாயுதமேந்தினவர்களாய எதிரெதிரே யடித்துக்கொண்டு பாசத்தைக் கொண்டு நேர்நேராகக் கட்டுவார்கள் கையிலுள்ள ஆயுதங்களால் அறுப்பார்கள் எ-று.

முடியை யன்னதான மொய்ம்பமர் தோளினை யத்தனு
கடிகொண் மார்பினை யன்னதாற் கவானை மற் றத்தனு
லடியை யன்னதா லங்கையை யங்கையாற் றாக்கிப்
படியி லாதமற் போரையும் பன்முறை புரிந்தார்.

(இ - ள்.) முடியை முடியாலும், வலியமைந்த தோளைத் தோளாலும், மணமமைந்த (மலர்மாலையணிந்த) மார்பை மார்பாலும், தொடையைத் தொடையாலும், அடியை யடியாலும், உள்ளங்கையை யுள்ளங்கையாலுமடித்து, எல்லையில்லாத மற்போரையும் பலமுறை செய்தார்கள் எ - று

கடிகொள் மார்பு - அழகிய மார்பெனினுமாம் அங்கை = அகங்கை இது "அகமுனர்ச்செவிகை வரினிடையன கெடும்' என்றுஞ்சூத்திரத்தாய்து (௧௯)

இன்ன வாறமர் பன்னெடுங் காலமேற் றியற்றிப்
பொன்னை மார்பகத் திருத்திய பொன்னுடைப் பெருமா
னன்ன தானவர்க் காற்றில னுடைந்தெனத் தருவ
னென்ன வேகரந் தெய்தினு னிருங்கயி லாயம்

(இ - ள்) இவ்வகையாக அநேககாலவரையில் ரெதிர்த்துப் போர்செய்து, திருமகளை மார்பிற் பொருத்திய பொன்னுடையணிந்த திருமால், அம்மதுகயிடவர்களுக்கு ஆற்றுதவராகி யுடைந்தோடி கந்தருவனென்று சொல்லும்படி மறைந்து, பெரிய கயிலாயகிரிக்குச் சென்றனர். எ - று

பொன் உடை - பீதாம்பரம் கந்தருவர் மாயாவித்தையில் வல்லவராதலின் அவரையொப்ப மறைந்தனரென வுவமித்தார் (௨0)

வெள்ளி யங்கிரிச் சாரலின் விரிமலர்ப் பொதும்ப
ருள்ளி ருந்திடந் தழுவியா முறுநரம் புணர்ந்தான
றெள்ளு மின்னிசைத் திவவியாழ்த் தலைவருக் கிடமாய்
நள்ளி ருஞ்செவி யேறவு நாதனு ரறிந்து

(இ - ள்) அழகிய வெள்ளிமலைச்சாரலில் விகசித்த மலர்கள் பொருந்திய சோலையிலிருந்து, வீணையிற்பொருந்திய நரம்புகளை யிடம் வகை முதலியன வுணர்ந்ததைவந்தனர் தெள்ளிய இனிய இசையையுடைய தட்டவர்த்தகக் யாழ்வல்லோருக்கு இடமாகிக்குளிர்ந்த பெரிய (குண்டலமணிந்த) செவிகளில் நுழையவும் சிவபெருமானர் அதனை யுணர்ந்து எ - று

இதுமுதலிரண்டு பாடல்கள் குளகம் (௨௧)

பிருட்டி தந்தனை நிகும்பனை யழைத்திரும் பிரச
மருட்டு மெல்லிசை யாழெழூஉம் வானவ னெளியா
விருட்ட னுக்குசெங் கவுத்துவ மார்பின னென்னக்
தெருட்டி மற்றவற் கொணர்கெனச் செப்பினா விடுத்தார்.

(இ - ள்) பிருட்டிதந்தனையும் நிகும்பனையும் விளித்து, பெரிய தேனமணத்தை மயக்கிய மெல்லிய இசையையுடைய வீணை வாசிக்கும் தேவன், பிரகாசத்தினுல்

வனமாலி - துளவமாலை யணிந்தோன்
குளிரா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (உ௯)

ஒருவா ரொருவென் செவியி
லிருதா னவரெய் திமிகப்
பொருதா ரவர்போ ரிடைநான்
வெருவா மையைவிட் டனனே

(இ - ள்.) (மூவுலகங்களிலும்) ஒப்பற்ற தலைவனே! ஒப்பற்ற என் காதுக் குறும்பியில் (மதுகயிடவரென்னும் பெயரையுடைய) இரண்டசுரர்கள் (யாதுகாரணத்தாலோ) தோன்றி, (பலரையும் வதைத்து இறுதியில் என்பால் வந்து) மிகுதியும் போர்செய்தார்கள் அவர்களோடு செய்யும் யுத்தத்தில், அடியேன் (பிறரிடம் போர் செய்கைபோல நில்லாது) அஞ்சாமையை விட்டுவிட்டேன் [பயந்தேன்] எ - று

முத்தா முனையார் செருவி
லத்தா னவரா வியுணா
வைத்தேனை மனமாண் டவலி
யைத்தா வெனவேத் தினனே

(இ - ள்) முத்தனே! (சயம் அபசயமென்னு மிரண்டிற்கும்) துணிவு பொருந்திய போர்செய்கையிலே, (மதுகயிடவரென்னும்) அவ்விரண்டசுரர்களுடைய உயிரைப் பருகும்படி (என்னுள்ளத்திற்) கருத்துக்கொண்டேன் (அஃதிங்ஙனமே நிறைவேறுவதாக) மனத்தால் அளவிடப்படாத வல்லபத்தைத்தருக என்று (திருமால்) துதி செய்தனர். எ - று (௩௰)

வேறு

கொன்றையின் மலர்வேய்ந்த கொற்றவ ரருள்செய்வார்
மன்றலந் துளவோய்நீ வன்சமர்க் குறுநாளே
வென்றியங் குசமேந்தும் விநாயகன் வழிபாட்டி
னொன்றினை யலையத்தா லொன்னலர்க் குடைந்தனையால்.

(இ - ள்.) கொன்றைமலரை யணிந்த வெற்றிபொருந்திய சிவபெருமான் அருளிச்செய்கின்றார் மணம்பொருந்திய அழகிய துளவமாலையணிந்த திருமாலே! நீ வன்மைதங்கிய போருக்குச்செல்லுங்கையில், வெற்றிபொருந்திய அங்குசத்தைத் (திருக்கரத்துத்) தாங்கிய விநாயகக்கடவுளை வழிபாடுசெய்யாதவனாயினை அக்குற்றத்தினாற் சத்துருக்களுக்குத் தோல்வியடைந்தனை எ - று (௩௧)

பாசமங் குசமேந்தும் பண்ணவன் வழிபாட்டி
னேசமுற் றினியந்த நேரலார்த் தமைவென்று
மாசறு மொளியோடு வாழ்குதி மணிவண்ணா
தேசவிர் வழிபாடுஞ் செப்புது முறக்கேளாய்.

(இ - ள்.) பாசாங்குசங்களை (திருக்கரத்தில்) ஏந்திய விநாயகக்கடவுளை வழிபடுதலில் விருப்புவைத்து, இனி அந்த (மதுகயிடவரென்னும்) பகைஞரைச் சயித்து, குற்றமற்ற கீர்த்தியோடுமே வாழக்கடவாய் மணிவண்ணனாகிய விண்டுவே! ஒளிவிளங்கும் (அவ்விநாயகக்கடவுளுடைய) வழிபடுதலையும் (முறைப்படி) சொல்லுவோம். பொருந்தக் கேட்பாயாக எ - று. (௩௨)

சிந்தூர மொளிர்மேனிச் சிந்தூர முகச்செம்மன்
மந்திரம் பலவுள்ளு மாயவ நினக்கொத்த
மந்திர மெழுத்தாறுய வருமனு வாமதனைச்
சிந்தையின் மகிழ்கொள்ளச் செப்புது நின்செவியில்.

(இ - ள்) மாயனே! சிந்தூரம்போற் (சிவந்து) பிரகாசிக்குந் திருமேனியையுடைய யானைமுக விநாயகக்கடவுளது பல மந்திரங்களிலும் உனக்குத் தகுதியான மந்திரம் ஆறெழுத்துக்களாய் வரும் மந்திரமாகும் அதனை நீ மனத்திற் களிகொள்ளும்படி உன் செவியி லுபதேசிப்போம் எ - று.

எழுத்தாறுயவரு மனு - சடக்கரமந்திரம் (௩௩)

வேறு

கங்கையிற் படிந்து மாயன் கடிகவம் மென்றுகூறி
யங்கவன் றோய்ந்து நண்ணு வாகம முறையாற் றீக்கை
மங்கலந் தழையச் செய்து வக்கிர துண்டற் கோதை
தங்குமா றெழுத்தை யோதி யனுட்டிப்புஞ் சாற்றி னானே.

(இ - ள்) மாயைகளையுடைய விண்டுவே! சிவகங்கையில் மூழ்கி விரைவில் வருகவென்று திருவாய் மலர்ந்தருளி, திருமால் அவ்வகையே ஸ்நானஞ்செய்துவர, ஆகமவிதிப்படியே மங்கலமிகும்படி தீக்கையியற்றி, வக்கிரதுண்டராகிய கணேசப் பெருமானுக்கு அன்புபொருந்திய சடக்கரமனுவை யுபதேசித்து அதனை யநுட்டிக்கும் வகையையுந் திருவாய்மலர்ந்தருளினார் எ - று.

மாயன் - அண்மைவிளியாதலி னியல்பாயிற்று (௩௪)

அண்ணலா ரருளிச்செய்த வருடலைக் கொண்டு தாழ்ந்து
மண்ணெலாம் வாரி யுண்ட மாதவன் விடைபெற் றேகித்
திண்ணமா ரன்பி னோடு சித்திசேத் திரத்தை வல்லே
நண்ணியாங் கிருந்து நாளு நன்மனுக் கணித்தல் செய்தான்.

(இ - ள்) உலகமுழுவதையும் வாரிப்புசித்த திருமால் சிவபெருமானார் திருவாய்மலர்ந்தருளிய திருவருட்டிறத்தைச் சிரமிசைக்கொண்டு பணிந்து, (இறைவர்பால்) விடைபெற்றுச்சென்று, உறுதியாகிய அன்புடன் சித்திசேத்திரமென்னு மிடத்தை விரைவாக வடைந்து அவ்விடத்திற்பொருந்தி, நல்ல சடக்கரமந்திரத்தைக் கணிப்பாராயினார் எ - று. (௩௫)

பூம்புனல் படிந்து பூதி திருவுருப் பொலியப் பூசி
யோம்புமந் திரத்தைச் சொல்லி யுறையிடுஞ் சுத்தி யாக்கத்
தேம்புன லங்கை தன்னாற் புரோக்கணஞ் சிறப்பச் செய்து
சாப்பிய வேங்கைத் தோன்மேற் றவளவத் திரமு மிட்டு.

(இ - ள்) பொலிவாகிய நீரில் மூழ்கி, திருமேனியானது அழகுறும்படி திருவெண்ணீற்றை யுத்தூளனஞ்செய்து, காக்கத்தக்க மந்திரத்தைச் சபித்து, வசிக்கு மிடஞ் சுத்தியாகும்படி மதுரமாகிய நீரை அழகியகையினாற் சிறப்பாகப் புரோக்கணஞ் செய்து, குவிந்த புலித்தோலின்மேலில் வெண்மையாகிய ஆடையை விரித்து எ - று.

புரோக்கணம் - தெளித்தல் (௩௬)

வடகிழக் கென்னுந் திக்கு வக்திர னாகவைகிக்
கடகரிப் பாகன் போலக் கதழ்பொறி யைந்து மோம்பி
யிடவிய புறமு முள்ளு மிருபத்து முப்பத் தொன்று
மடைவுற நிசித்துப் பூத மாதியுஞ் சுத்தி செய்து.

(இ - ள்) வடகிழக்காகிய ஈசானதிக்கிலே முகம்வைத்தவராக விருந்து, மதத்தையுடைய யானைப்பாகன் (அதையடக்குவது) போல வேகமாகிய ஐம்பொறிகளையும் (புறஞ்செல்லாது) காத்து அகன்ற புறம்பும் உள்ளும் ஐம்பத்தோரெழுத்துக்களை நியாசஞ்செய்து, பூதமுதலியவற்றைச் சுத்திசெய்து எ - று (௩௭)

மூலமா மனுவை யுன்னி முற்றுறப் பிராணா யாமஞ்
சாலவே யியற்றி யுள்ளந் தழைதரத் தியானித் தின்பச்
சீலமார் கணேசன் றன்னைத் தேவர்கட் கிறையை யன்பாற்
கோலிய வாக னாதி பதினாறுங் கொளப்பூ சித்து.

(இ - ள்) சிறந்த மூலமந்திரத்தைத் தியானித்து, முடிவாகப் பிராணாயாமத்தை மிகுதியாகச்செய்து மனமானந்தத் தழைக்கும்படி தியானஞ்செய்து, (தம்மைப் பணிவோரிடத்து) இன்பமுறுஞ் சீலமும்பொருந்திய கணேசப்பெருமானாகிய தேவர்களுக்குத் தலைவனை அழகியவாகனமுதலிய பதினாறுங் கொள்ளும்படி பூசித்து எ-று.

மந்திர மான வாறு வன்னமும் வருட நூறு
பிந்துறக் கணித்த வேலைப் பிறைமருப் பொழுகு தானச்
சிந்துர முகவன் றோன்றித் தெரிசனங் கொடுத்தா னாகச்
சுந்தர நெடுமா றாழ்ந்து சூழ்ந்துகை தொழுது நின்றான்.

(இ - ள்) மந்திரமான சடக்கரங்களையும் விந்துவுடன் பொருந்த நூறுவருடகாலங் கணித்தவுடனே பிறைச்சந்திரன்போன்ற தந்தத்தையும் ஒழுகுகின்ற மதத்தையுமுடைய யானைமுகக்கடவுள் ஆங்கெழுந்தருளித் தரிசனங்கொடுத்தனராக, அழகிய விண்டுவான (அவரைக் கண்டவுடனே) பணிந்து பிரதக்கணஞ்செய்து கைகூப்பி நின்றனர் எ - று. (௩௯)

நின்றவன் முகத்தை நோக்கி நிமல னருளு முன்பே
யொன்றநம் பூசை யாற்றி னென்னல ரெதிர்ந்த போரின்
வன்றிற லுடைவ தின்றே மற்றது கிடக்க மாய
வின்றுனக் கெய்த வேண்டிற் றியம்புதி தருது மென்றான்.

(இ - ள்) (அவ்வாறு) நின்ற திருமாலின் முகத்தைப்பார்த்து 'அமலராகிய கணேசப்பெருமான் அருச்சிசெய்யினும் பொருந்த நம்முடைய பூசையை முன்னரே செய்திருந்தால் நீ சத்துருக்களை யெதிர்த்த யுத்தத்தில் வலியல்லபங் கழிவதில்லையே? அஃதிருக்க விண்டுவே! இப்பொழுது உனக்கு அடையவேண்டியதைக் கூறுக (அதனைக்) கொடுப்போமென்று கூறினார் எ - று (௪௰)

சிறுமதி யொளிர்ந்த வேணிச் சிந்துரக் கடவுள் கூற
மறுவலும் வணங்கிக் கண்ணன் மலர்க்கைவாய் புதைத்துச் சொல்வா
னறுவினைக் கற்பகத்தை நண்ணினல் குரவு முண்டோ
விறைவனை யெதிரே கண்ட வெனக்கொரு குறையு முண்டோ.

(இ-ள்) இளஞ்சந்திரன் பிரகாசிக்குஞ் சடையையுடைய யானைமுக விநாயகக்கடவுள் (இவ்வாறு) அருளிச்செய்ய, விண்டுமூர்த்தி மீண்டும் அவனைப்பணிந்து தாமரைமலர்போன்ற கையால் வாயைப்பொத்திச் சொல்லுகின்றார்: நலமெண்மை பொருந்திய கற்பகத்தருவை (ஒருவர்) அடைந்தால் அவர்க்குத் தரித்திரமுமுளதோ? (இல்லை; அதுபோல) எமது கடவுளை நேரே தரிசித்த அடியேனுக்கு ஒருகுறைபாடிருக்கின்றதோ? (இல்லை) எ-று (௪௧)

ஆயினு மடியேன் றுஞ்சு மளவிலென் செவியின் வந்த
மாயிரும் புவன மஞ்சு மதுகையி னவரைக் கொல்லத்
தீயுயர் மதுகை வேண்டும் விளம்பிய விவரை யன்றித்
தீயமற் றெவரே யெனு மென்கையா லிறக்க வேண்டும்

(இ-ள்) ஆயினும், அடியேன் நீர் அருள்செய்யும்பொழுது என் செவியின்கண் பிறந்த, சிறந்த பெரிய உலகமுழுவதும் அஞ்சத்தக்க மதுகையுடையவர்களைக்கொல்ல மிகச் சிறந்த வல்லமைவேண்டும் (ஏனெனில்) கூறிய இவர்களையல்லாமல் கொடியோர் எவர்களாயினும் (என்னை வென்றதால்) என்கையா லிறக்கவேண்டும் எ-று (௪௨)

கடையனேற் குன்பா லென்று மைகயக லாத பத்தி
யடைவது மவேண்டுங் குற்ற மாற்றினும் பொறுத்தல் வேண்டு
முடையவ வென்றான் கேட்ட வுப்பன்மா முகத்து வள்ள
றொடைசெய்பல் வரமு நல்கிச் சூழ்ந்துமே லிதுவுஞ் சொன்னான்.

(இ-ள்) (என்னையடிமையாக) உடையவரே! கீழ்மைப்பட்ட எனக்குத் தேவரீரிடத்தில் எப்பொழுதும் நீங்காத பத்தியுண்டாயிருத்தலும் வேண்டும் (அறியாமையால்) குற்றஞ்செய்தாலும் (தேவரீர் திருவுள்ளம்) பொறுத்துக்கொள்ளவும் வேண்டுமென்று கேட்டனர் (அதனைத்) திருச்செவியேற்ற சிறந்த யானைமுக வள்ளலாகிய கணேசப்பெருமான் தொடர்ச்சியாகவுள்ள பலவரங்களையு மருளி மேலே யோசித்து இதனையுஞ் சொல்லினர் எ-று (௪௩)

வலிபுகழ் தேசு நெஞ்சின் மதித்தவர் முடித்தன் மற்று
நலிவற நினக்குத் தந்தா நாமவை யவுண ரிப்போ
தொலிகெழு மாயை தன்னு ளுறைந்தா ரிருக்கின் றாரங்
கொலிகெழு மந்திரத்தைக் கருதிச்செல் லவரைக் காண்பை

(இ-ள்) வலிமையும் புகழுஞ் சோதியும் மனத்திற் கருதியவர்களைக்கொன்றலும், பிறவுமாகிய வரங்களைக் கெடுதலற வுனக்குக்கொடுத்தோம் அத்தன்மைத்தாரும் வேறுபடையேந்திய அசுரர்கள் இப்பொழுது ஒலியமைந்த மாயையினுள், தமதுருவை மறைந்திருக்கின்றார்கள் நம்முடைய ஒலிமிக்க மந்திரத்தைத் தியானித்துக்கொண்டு செல்க (அதனால்) அவரைக்காணுவை எ-று

ஒலிகெழுமாயையென்றது மூலமாயையை விசேடித்தவாம (௪௪)

என்றிவை யனைத்துங் கூறி யெம்பிரான் மறைய மாயன்
வென்றனம் பகையை யென்று விநாயகன் கழலைப் போற்றி
நன்றொளிர் பளிக்கா னெண்கு வாயில்க ளுடைய கோயி
லொன்றுசெய் ததிலே ரம்ப வுருவங்க ளடக்கி னாக்கி.

(இ - ள்.) என்றிவையாவு மருளிச்செய்து, எமது கணேசப்பெருமான் அந்தர்த்தானமாக, திருமால் (இனிய) பகைவரை வென்றேமென்று விநாயகக்கடவுள் கிருபையைத் துதித்து நன்றாகப் பிரகாசிக்கின்ற பளிங்குகற்களால் நான்கு (திருக்கோபுர) வாயில்களையுடைய திருக்கோயிலொன்று அமைத்து, அதில் விநாயகக்கடவுளுருவைக் கண்டகியின்றுச் செய்து (பிரதிட்டைசெய்து) எ - று.

கண்டகி - ஓர் நதி. ஈண்டு அதிலுள்ள செந்நிறக்கற்கள். (௬௫)

திவ்விய பொருள்கைக் கொண்டு சிறப்புறப் பூசை யாற்றி
யெவ்வம் விட்டகலச் சித்தி யீதலா னமரோர் திக்கு
வெவ்வினை தீர்க்குஞ் சித்தி விநாயக னென்பப் பேரிட்டா
னவ்விதி யானுஞ் சித்தி கேத்திர மாமந் தானம்.

(இ - ள்) சிறந்த உபகரணங்களைக் கையிற்கொண்டு சிறப்பாகப் பூசைசெய்து, துன்பமானது விட்டொழிய (இஷ்ட) சித்தியைக் கொடுத்ததலால் அப்பெருமானுக்குக் கொடிய வினையை யொழிக்குஞ் சித்திவிநாயகரென்று திருநாமஞ்சூட்டினார். அவ்விதியினாலும் அவ்விடமானது சித்திகேத்திரமென்பதாம். எ - று (௬௬)

நாயக னெனத்தான் கொண்ட நாரணன் றனக்கு மேலா
நாயக னாகி வேட்ட நல்வரங் கொடுத்த மாண்பான்
மேயவங் குசத்தி னாற்கு விநாயக னென்னு நாமந்
தூயவிண் ணவர்க ளெல்லாந் தொடுத்தெதிர் துதித்துத் தாழ்ந்தார்.

(இ - ள்) தானே (தி)நாயகனென்ப பெயர்கொண்ட திருமாலுக்கு மேலாகிய நாயகனாகி, அவர் விரும்பிய நல்ல வரங்களை யநுக்கிரகித்த மேம்பாட்டினால், பொருந்திய அங்குசத்தையுடைய கணேசப்பெருமானுக்கு விநாயகனென்னுந் திருநாமத்தைப் புனிதமான தேவர்கள் யாவருஞ் சேர்ந்து எதிரே தோத்திரஞ்செய்து பணிந்தார்கள் எ - று.

நாயகன் - தலைவன். விநாயகன் - தனக்குமேல் தலைவனில்லாதவன் இதில், வி - எதிர்மறைப்பொருட்குறித்தோர் வடமொழி யுபசர்க்கம். (௬௭)

கடங்கவிழ் முகத்தி னானைக் கருத்தினு ளிருத்திக் கொண்டு
விடங்கலுழ் திகிரிச் செம்மல் வெளிக்கொடு சென்றா னாக
வடங்கலா ரான வந்த வவுணர்க ணட்டுப்போர் வேண்டி
யுடங்குவந் தெதிரே நின்று நகைத்திஃ துரைக்க லுற்றார்.

(இ - ள்) மதம்பொழியும்(யானை)முகத்தையுடைய விநாயகக்கடவுளை மனதிலெழுந்தருளியிருக்கச் செய்துகொண்டு, விடத்தைச்சொரியுஞ் சக்கராயுதமேந்திய திருமால் வெளிப்பட்டுச் சென்றனராக, சத்துருக்களான அந்த மதுகயிடவாகளென்னும் அசுரர்கள் பார்த்து, மோதத்தக்க போரினை விரும்பி, ஒன்றாகவந்து நேரேநின்று சிரித்து இதனைச் சொல்வதாயினார்கள் எ - று. (௬௮)

சோர்ந்துமுன் பொருத போது சிறுமுத்தி கொடுப்பக் கொண்டு
தீர்ந்தனை நாணி லாமற் றிரும்பிவந் தனைவந் தாய்க்கெ
கோர்ந்திடும் பெரிய முத்தி யுதவுதுங் கொள்க வென்றார்
பேர்ந்தெதிர் தகரென் றெண்ணீர் பேதையீ ரென்றான் மாயன்.

(இ - ள்) முன்னாள்கூடிய போர்ச்சிந்தகாலத்தில், சிறுமுத்தியைக்கொடுக்கக் கொண்டோடினை! மீண்டும் நாணமின்றி (எதிர்க்கவந்தனையே? அவ்வாறு) வந்தவனுக்கு இப்பொழுது அறியத்தக்க பெரிய முத்தியைக்கொடுப்போம்! அதனையுங் கொள்ளக் கடவை! என்று கூறினர்கள் ஓடியெதிர்க்கின்ற ஆட்டுக்கடாவெனக் கருதாதீர்கள் அறிவிலிகளே! என்று திருமால் கூறினார் எ - று

முத்தி - திசை ஈண்டு ஓடுதலைக்குறித்தது. (௪௯)

அவ்வுரை கேட்ட லோடு மழலென வெகுண்டு மாயோய்
செவ்விய நான்கு தோளிற் சிறந்தனை யிருவே முக்கு
மிவ்விரு தோளே யமையு மிருவர மொருவ னோடு
தெவ்வினை செய்தல் வேண்டாஞ் செருச்செயக் கென்று நேர்ந்தார்.

(இ - ள்) அவ்வார்த்தைகளைக் கேட்டவுடனே அக்கினிபோலக் கொதித்து, மாயவனே! செவ்வையாகிய நான்குதோள்களோடு விளங்குகின்றனை எங்களிருவருக்கும் இவ்விருதோள்களேயானபடியால் இருவர் ஒருவனுடன் பகையினர் (போர்செய்தார்கள்) என்று சொல்லல்வேண்டுவதில்லை போர்புரிகவென்றிசைந்தார்கள். (மதுகயிடவர்கள்) எ - று

இவ்விருதோள் = இரண்டு இரண்டு தோள் "ஐம்பதொழித்தவெண்ணொன்பது மிரட்டின - முன்னதின் முன்னல வோட வுயிர்வரின் - வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி" என்பது சூத்திரம். (௫௦)

ஏற்றுவர் கதையால் வேலா லெறிவரோச் சுவர்வாள் வாளாற்
பற்றுவர் பாசம் விட்டுப் பாற்றுவ ரதனை யெஃகாற்
புற்றர வனைய வாளி புதைபடத் தொடுப்பர் வீழ்ப்பர்
முற்றுவர் மல்லுப் போரின் முழங்குவர் வீர வார்த்தை.

(இ - ள்) (அவ்விருவரும்) கதையாலடிப்பார்கள், வேலாலெறிவார்கள், கூரிய வாளால் வெட்டுவார்கள், பாசத்தை வீசிக்கட்டுவார்கள், அதனை எஃகாயுதத்தாலறுப்பார்கள்; புற்றினின்று புறப்பட்ட சர்ப்பங்களைப்போன்ற பாணங்களை (உடல்) மறைபடும்படி பிரயோகிப்பார்கள், வீழ்த்துவார்கள், மற்போர்போல முடிப்பார்கள், வீரச்சொற்களைப் பேசுவார்கள். எ - று (௫௧)

இன்னண நெடும்போ ராற்று மெல்லையி லெழுந்த செங்கேழ்க்
கன்னலைத் துணித்தா லன்னக் கதமெழீஇ நேமி தூண்டி
யன்னதா னவர்க ளாவி யரவணைப் பெருமா னுண்டான்
மின்னவிர் விசும்பின் றேவர் விரைமலர் மாரி தூர்த்தார்.

(இ - ள்) இவ்வகையாகப் பெரும்போர் செய்கையில், எழுந்த செந்நிறமமைந்த கரும்பைத் துணித்தாற்போல, சேடசயனமுடைய பெருமானாகிய திருமால் கோபத்தோடெரிகின்ற சுதரிசனத்தைச் செலுத்தி அவ்வசுரர்களுடைய உயிர்களைப் பருகினார். மின்னலை வீசுகின்ற ஆகாயத்தினின்று தேவர்கள் வாசனைதங்கிய மலர்மாரி பொழிந்தார்கள். எ - று. (௫௨)

பங்கயத் தவிசின் வாழ்க்கைப் பண்ணவ னெனப்பட் டோனு
மங்கவ னடியிற் றாழ்ந்தே னவனெனக் குரைக்க லுற்றான்

றுங்கலை லவுண ரோடு தொக்கபோர் நெடுநா ளாற்றிப்
பங்கமுற் றகன்று வெள்ளிப் பறம்பினைச் சார்ந்து தாழ்ந்து.

(இ - ள்) தாமரைமலர்ப்பீடத்தில் வீற்றிருக்கும் பிரமதேவனென்று சொல்லப்பட்ட யானும் அப்பொழுது அவ்விட்டுணு மூர்த்தியின் பாதங்களிற் பணிந்தேன். அத்திருமால் எனக்குக் கூறத்தொடங்கினர் நலவலியமைந்த மதுகயிடவர்களுடன் நெடுநாள் பெரும்போர் செய்து (ஆதலால்) அவமானமடைந்து (அவ்விடம்விட்டு) நீங்கி வெள்ளிமலை (யாகிய திருக்கயிலை) யை யடைந்து பணிந்து எ - று (௫௩)

மாட்கத் திவவு நல்யாழ் வார்நரம் பமிழ்தந் தேக்கிப்
பாடகத் துளிர்மென் பாதப் பாவையை முதலா னோர்க
ளோடகத் தலைவ னோடு நயந்துள மகிழ்ந்த பின்றை
யேட்டகக் கொன்றை யான்பெ லேரம்பன் மனுவுட் கொண்டு.

(இ - ள்) முறுக்காணிகளையுடைய தடவத்தக்க நல்ல வீணையினுடைய நெடிய நரம்புகளாலாகிய அமிழ்தத்தை மிகவுண்டு, பாடகமணிந்த மாந்தளிர்போன்ற மெல்லிய பாதத்தையுடைய உமாதேவியார் முதலானவர்கள் சிவபெருமானுடன் விரும்பி மனமகிழ்ந்தபிறகு, அகவிதழ்கள் பொருந்திய கொன்றைமாலை யணிந்த சிவபெருமான் உபதேசித்தருளிய விநாயகமந்திரத்தை மனத்திற்கொண்டு எ - று. (௫௪)

சித்திக்ஷேத் திரத்தி னண்ணித் தீதறு மனுவை யெண்ணி
யத்திமா முகவன் றோன்றி யருளிய வரத்தா னீண்டு
வைத்தவா ளவுண ராவி மாய்த்தனெ னந்த
வுத்தமன் றனைப்பூ சை யுஞற்றுதி நீயு மென்றான்.

(இ - ள்) சித்திக்ஷேத்திரத்திற் சென்று, குற்றமற்ற அம்மந்திரத்தைத் தியானஞ்செய்து, சிறந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் பிரசன்னராகி யநுக்கிரகித்த வரத்தினால், திரும்பிக் கூர்மைவாய்ந்த வாளாயுதமேந்திய மதுகயிடவர்களென்னும் அசுரர்களுயிரை யழித்தேன் ஆனபடியால் அந்த உத்தமராகிய கணேசப் பெருமானை நீயும் பூசைசெய்கவென்று கூறினர் எ - று (௫௫)

செங்கண்மால் கூற யானுஞ் சித்திக்ஷேத் திரத்தை யெய்தி
வெங்கண்வா ளரவங் கொண்டு வீக்கிய வுதரத் தானைப்
பொங்குகா தலினற் பூசை புரிந்தன னமரர் தாமு
மங்கணர் கணேசர் மாய னம்பிகை யெனையுந் தாழ்ந்தார்.

(இ - ள்) செவ்விய (தாமரைமலர்போலும்) கண்களையுடைய திருமாலுரைத்தலின், (பிரமனாகிய) யானும் சித்திக்ஷேத்திரமடைந்து, கொடுங்கண்களையுடைய வொளிய நாகத்தாற்கட்டிய (அரைப்பட்டிகை பொருந்திய) திருவயிற்றையுடைய கணேசப்பெருமானை மிக்க ஆசையுடன் பூசனைசெய்தேன். தேவர்களும் சிவபெருமானும் கணத்தலைவர்களும் திருமாலும் உமாதேவியாரும் மற்றெல்லோரும் (அவ்விநாயகக்கடவுளைப்) பணிந்தார்கள். எ - று (௫௬)

இக்கதை கேட்டோர் கெந்த விடர்களு மகலு நன்மை
தொக்குறும் வியாத வென்று தோட்விழ் மலரோன் சொன்னா
னுக்கிர வேலோய் காணென் றுணர்த்தினன் பிருகு வென்போ
னைக்கொடை சிறந்த சோம காந்தனென் றரசற் கம்மா.

(இ - ள) வியாதமுனிவனே! இச்சரித்தனைக் கேட்டவர்களுக்கு எவ்வகைய துன்பங்களும் விலகும் நன்மைகள் கைகூடும் என்று, இதழ்களவிரிந்த தாமரைமலரில் வசிக்கும்பிரமதேவர் கூறினார் உக்கிரமான வேற்படையேந்திய சோமகாந்த மன்னனே! அறியென்று பிருகுமுனிவர் கையினறு வெளிப்பட்டதிலே மேம்பட்ட சோமகாந்தனென்னும் அரசனுக்குச் சொல்லினார். எ - று.

அம்மா - அசை (௩௭)

ஆறெழுத் தாழி யேந்தி யனுட்டித்த வாறு தோந்தே
னீறிலி காதை யின்னு மியம்பென வியாதன் வேண்ட
வீறுயர் விசுவா மித்த திரனைவேல் வீமன் சார்ந்து
பேறுபெற் றதனை முற்றப் பேசுவன் வாசக் கஞ்சன்.

(இ - ள்) சக்கராயுதமேந்தியதிருமால் சடக்கர மனுவை யனுஷ்டித்தவகையையுணர்ந்தேன் நித்தியனுன அவ்விநாயகப்பெருமானது சரிதங்களை யின்னுங் கூறுகவென்று வியாதமுனிவன் கேட்க, மேன்மைமிக்க விசுவாமித்திரமுனிவனை வேலேந்தியவீமராசன் சார்ந்து (புத்திரப்) பேற்றினை யடைந்தவரலாற்றைப் பிரமதேவர் முழுவதுங் கூறலாயினர் எ - று (௩௮)

விண்டு சடக்கரமனுட்டித்தபடலம் முற்றிற்று.

ஆகந் திருவிருத்தம் - ௧௧௮௩

# விசுவாமித்திரனை வீமனடுத்தபடலம்.

கஞ்சப் பொருட்டி னரிதேறிக் சமஞருல் வளையின் முள்ளிமுத்து
மஞ்ச முயிர்த்த தனசினையு மயிர் திரண்டும் விரிசிறையுட
டுஞ்சப் பொதிந்திட் டடைகிடக்குந் தறைசூழ் நறுமலர்த் தடமருதம்
விஞ்ச வளர்ந்த துயர்நாடு விதர்ப்ப நாடென் றுளதாமால்

(இ - ள) அன்னங்கள் தாமரைமலர்க்கொட்டையில் அருமையாகவேறி, சூல்நிறைந்த சங்குகள் ஈன்ற பிரகாசிக்கின்ற முத்துக்களையும், தாம் பெற்ற முட்டைகளையும் (வேறுபாடு) தெரியாமல், இரண்டையும் விரிந்த சிறகுகளுட் பொருந்தப் பொதிந்துகொண்டு அடைகாக்கும் நீர்த்துறை சூழ்ந்த நல்ல மலர்த்தடாகங்களையுடைய மருதநிலமானது அதிகரிக்க வளங்கொடுத்துயர்வுற்ற நாடு விதர்ப்பநாடென்று (ஒன்று) உண்டு எ - று (௧)

வள்ளைச் செவியின் மடமாதர் வள்ளைக் குறங்கு மலர்ப்பொழிற்பைங்
கிள்ளைப் பறவை யெழுவாளை கெண்டைக் குலங்கள் துயிலெடுப்ப
வள்ளிச் சொரியு மணித்தரங்க வகழி புடைசூழ் நகர்புரிசை
கள்ளப் பொறியாற் பகைகடக்குங் கவுண்டின் னியமென் றோங்கியதால்.

(இ - ள.) வள்ளைக்கொடிபோலுஞ் செவியினையுடைய இளமாதர்கள் வள்ளைக்கு உறங்குகின்ற மலர்ச்சோலையிலுள்ள பசிய கிளிக்குஞ்சுகளை, எழுகின்றவாளைமீன்களுங் கெண்டைமீன்களுமாகிய கூட்டங்கள் துயிலெழுப்பும்படி (அவற்றை)

வாரிச்சொரிகின்ற அழகிய அலைகள்பொருந்திய அகழியாற் புடைசூழப்பட்ட நகரம், மதிலானது (தன்னிடத்தமைந்த) வஞ்சகமாகிய பொறிகளாற் சத்துருக்களை வெல்லத்தக்க கவுண்டின்னியமென்று விளங்கியது. எ - று.

பொறி - மதிற்பொறி, சூத்திரங்கள், எந்திரங்கள் (௨)

அந்த நகரத் திருந்துலக மாளு மரசன் றவசீலன்
சந்த மறையின் முறைபிறழான் றானஞ் சொரியு மலர்க்கரத்தான்
மைந்து மிகுந்த திணிதோளான் மாறாத் தரும சிந்தையான்
வெந்த மதவே ளெழுந்தனைய விளங்கு வனப்பி னுருவத்தான்.

(இ - ள்) அந்தக்கவுண்டின்னிய நகரத்திலிருந்து உலகைக்காக்கும் மன்னவன் தவசீலனும், ஒலியையுடைய வேதமுறை பிறழாதவனும், தானத்தைச்சொரியுங் கமலமலர்போன்ற கையையுடையவனும், வலிமிகுந்த திணிய தோளையுடையவனும், நீங்காத தருமசிந்தையையுடையவனும், (சிவபெருமானால்) வெந்தொழிந்த மன்மதன் உயிர்பெற்றெழுந்தாற்போலப் பிரகாசிக்கின்ற அழகமைந்த உருவினையுடையவனும் எ - று.

இதுமுதலிரண்டுசெய்யுள்கள் ஒருதொடர். (௩)

ஓரா யிரம்ம மறையவரு மொருபான் கோடிச் சேனைகளுந்
தீரா துடன்சூழ்ந் தரவெங்குஞ் செல்லுஞ் சூரன் ஞாதியரும்
பாரார் வேறு மன்னவரும் பணியும் பதத்தான் பணியாரை
வேரோ டறுக்குஞ் சிறந்ததான் வீம னென்னு மியற்பெயரான்.

(இ - ள்) சிறந்த ஓராயிரம் பிராமணர்களும் ஒருபதுகோடிச் சேனைகளும் நீங்காமல் (தன்னை) புடைசூழ்ந்துவர எவ்விடத்துஞ் செல்லுஞ் சூரனும், ஞாதிகளும் புவியையாளுகின்ற பிறமன்னர்களும் வணங்கும் பாதங்களை யுடையவனும், தன்னை வணங்காதவர்களை முதலறக்களையுங் கோபத்தையுடையவனுமாகிய வீமராசனென்னும் இயற்பெயருடையவன் எ - று.

ஞாதியர் - தாயபாகமுடையார் (௪)

வேறு

வீரவேன் மன்னவன் விழையுங் கற்பினாள்
பூரநூற் றவகை முறுவல் செய்தலாற்
சாருகா சினியெனச் சாற்று நாமத்தா
ளோருமா நலமெலாந் திரண்ட வுள்ளத்தாள்.

(இ - ள்) வீரம்பொருந்திய வேலேந்திய வீமராசன் விரும்பத்தக்க கற்பினையுடையவள், தந்தபந்திகள் தெரியாதவகையாகப் புன்னகைசெய்யுங் காரணத்தால் சாருகாசினியென்று சொல்லும்பெயரையுடையவள், அறியத்தக்க சிறந்த நன்மைமுழுவதும் ஒன்றுசேர்ந்த வுள்ளத்தையுடையவள். எ - று.

சாருகாசினி - சாருஹாசினியென்பதன் திரிபு சுந்தரமான சிரிப்பையுடையவளென்பதுபொருள். (௫)

பூதுகக்குறை வாள்கண் மொழிதப் பாதுகோன்
பொருக்கடிந் திருநிலம் புயத்தி னேந்துபு

விதுக்குறை வாணுதல் விளங்கு வெண்ணகை
மதுக்குழன் மனைவியின் வாழு நாளையில்.

(இ - ள்) வீமராசன் பேரறிவுடையவர்கள் சொற்றவாறு பொதுத்தன்மையகற்றிய பெரியபூமியைத் தோளிற்றாங்கி, சந்திரனுடம்போன்ற வெள்ளிய நெற்றியையும் பிரகாசிக்கின்ற வெள்ளிய பல்வரிசையையுந் தேனிருந்த கூந்தலையுமுடைய மனைவியாகிய சாருகாசினியுடன் வாழ்ந்திருக்குங் காலத்தில் எ - று.

முதுக்குறைவாளரென்றது மந்திரி புரோகிதர் முதலானோரை. பொதுக்கடிதலாவது தனக்கேயுரிமையாக்கல். (௬)

புத்திர னின்மையாற் புலர்ந்த நெஞ்சினன்
பத்தியிற் றேவர்கள் பணிக ளாற்றினன்
மெத்திய தானங்கள் விதியிற் செய்தன
னெத்திறத் தருமமு மினிதி யற்றினன்

(இ - ள்) புத்திரப்பேறில்லாமையால் வருந்திய மனமுடையனாகிப் பத்தியுடன் தேவர்களுக்கு (செய்யத்தக்க) பணிவிடைகளைச் செய்தனன்; மிகுந்த தானங்களை விதிப்படி (சற்பாத்திரர்களுக்குக்) கொடுத்தனன்; எவ்வகைப்பட்ட தருமங்களையும் இனிதாகச் செய்தனன் எ - று. (௭)

செவ்விய வேள்விகள் சிறப்பச் செய்தன
னிவ்வகை நல்லவை யெவையு மீட்டியு
மெவ்வமில் புத்திர னெய்தப் பெற்றிலன்
கொவ்வைவாய் மனைவியை யணுகிக் கூறுவான்

(இ - ள்) செம்மையாகிய யாகங்களைச் சிறப்புடனே யாற்றினனே; இவ்விதமாக எல்லா நற்காரியங்களையுஞ் செய்தும், துன்பமில்லாத புத்திரனை யடையப்பெற்றானிலன் (ஆதலின் மனம்வெறுத்து) கொவ்வைக்கனிபோன்ற வாயையுடைய மனைவியாகிய சாருகாசினியை விளித்து (இவ்வகையாகச்) சொல்லுகின்றான் எ - று.

புத்திரன் - மகன். தந்தைதாயரைப் புத்தென்னு நரகினின்று விடுவிப்பவனென்பது தாற்பொருள். புத்தென்றது பிள்ளைப்பேறில்லாதார் புகுநரகின் பெயர்.

கொம்மைவெம் முலையினாய் கோதில் புத்திரர்
தம்மையெய் தாதவர் தரணி யாளினு
மிம்மையு மறுமையு மெய்தி டாரெனி
னம்முடை வாழ்க்கையு நவையில் பாலதோ.

(இ - ள்) குவிவாகிய வலியமுலையினையுடையாளே! குற்றமில்லாத புத்திரர்களையடையப்பெறாதவர்கள் உலகமுழுதும் அரசாண்டாலும், இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் அடையமாட்டாரென்று (சாத்திரங்கள்) கூறுகின்றன, நம்முடைய உயிர்வாழ்தலும் நன்மையையுடைய தாகுமோ? (ஆகாது) எ - று. (௮)

வேறு

அமராபதித் தேவரிவ ரவ்வியகவ் வியமேலார்
கமலமுகத் தாயகமது கட்டமுகம் பெருந்திருவும

விமலமுறுங் குடிப்பிறப்பும் வியனில்வாட்சியுமவலியுந்
தமமறுநூற் பயிற்சிகளுஞ் சகலமுமவீ ணாயினவே

(இ - ள்.) தாமரைபோலும் முகமுடையவளே! தேவர்களும் பிதிர்த்தேவர்களுமாகிய இவர்கள் அவ்வியகவ்வியங்களின்மேல் விருப்புறாதிருப்பவர்கள் நமதுபேரழகும், பெருஞ்செல்வமும், பரிசுத்தமாகிய (உயர்) குடிப்பிறப்பும், சிறந்த இல்வாழ்க்கையும், வல்லபமும், தாமதகுணமற்ற நூலாராய்ச்சிகளும் யாவும் வீணாயின எ - று.

தேவர்களுக்குக்கொடுப்பதை அவ்வியமென்றும், பிதிரர்களுக்குக் கொடுப்பதைக் கவ்வியமென்றுங் கூறுதல்வழக்கு (௧௦)

நெடும்படுகா னகத்தேகி னேரிழையா யொருவாற்றுங்
குடிவளர்க்கா முளைவந்து கூடலுமா மதனின்றேற்
படியறுவான் கதிசேரும் பயப்பாடி லையமிலை
முடிவிதுவே யாருமென மொழிந்தமைச்சர்க் கிதுசொன்னான்.

(இ - ள்) சிளாணுகள் பொருந்திய வனத்திற்குச் சென்றால், ஒருவகையாக மரபுவளர்த்தற்குப் புத்திரப்பேறுவந்து கைகூடலுமாகும் அஃதுமின்றாயின், குற்றமற்ற சிறந்த கதியிற்சேரும் அச்சத்திற் சந்தேகமில்லை. இதுவே தீர்மானமாமென்று கூறி, மந்திரிகளுக்கு இதனைக் கூறினன். எ - று (௧௧)

சூழ்ச்சிமிகு மந்திரிகா டொல்பவத்தில் யான்செய்த
வூழ்ச்செயப்ப யன்றோமனைவி யுஞற்றியதீ வினைப்பயனோ
வாழ்ச்சிதனக் கிதம்புரியு மக்கட்பே றெமக்கின்மை
தாழ்ச்சியித னென்மனைவி தனொடுகான் புகுகின்றேன்.

(இ - ள்) ஆலோசனைமிகுந்த மந்திரிகளே! இல்வாழ்க்கைக்கு நன்மையையுண்டுசெய்யும் மக்கட்பேறு எனக்கில்லாமை பழைய சனனங்களில் யானியற்றிய ஊழ்வினைசெய்யும் பயனோ? (அல்லது) என்மனைவிசெய்த தீவினையின்பயனோ? (அறிகிலேன்) தாழ்வாகிய இதனால் யான் சாருகாசினியுடன் வனத்திற் செல்கின்றேன் எ-று

எண்பொருளு நிலமனைத்து மிருவிரும் பகுத்தாளக்
மீண்டுவரி னென்பாலை விடுத்திடுக மீளேனேற்
காண்டகுநும் வழிவழியுங் கைக்கொள்க வெனச்செப்பி
பூண்டபெருங் காதலினான் மொய்குழலா ளொடுமெழுந்தான்.

(இ - ள்) மிக்க பொருளும் நிலமுமாகிய வெல்லாவற்றையும் நீங்களிருவரும் பாகித்துக்கொண்டு ஆளக்கடவீர்கள் (கடவுளருளால் மகப்பேற்றுடன்) திரும்பி வந்தேனாகில் என்னிடத்திலேயே கொடுத்துவிடுக திரும்பிவாரேனாயின், வரத்தக்க உம்முடைய பரம்பரையின் வழியே கைக்கொள்ளக்கடவீர்களென்று சொல்லி, வீமராசன் மிக்க பெருவிருப்புடன் நெருங்கிய கூந்தலையுடைய மனைவியோடெழுந்திருந்தான் எ - று (௧௨)

சுமந்துவெனு மந்திரியுஞ் சூழ்ச்சிமனோ ரஞ்சிதனு
மமைந்தவுளத் திருவோரு மமையாத துயர்விழிநீ
ருமிழ்ந்தனராய் மிகவாடி யுயிரனையா னுணையினை
விமிழ்ந்திடப்பா டிருந்தனரா களிறைவன்வனத் தேகினான்.

(இ - ள) சுமநதுவெனறு சொல்லபபடுமெ மநதிரியும ஆலோசனையில வலல மனோரஞசிதனெனபவனுமாகிய ஒனறுபட்டமனமுடைய விருவாசனும அடஙகாத துயரததுடன கணணீாசொரிநதவாகளாய மிகவும வாட்டமடைநது உயிாபோனற அரசனுடைய ஆககினையாற கட்டபபட்டு ஊரிலிருநதாாகள. வீமராசன (மனைவி யுடன) வனததுககுசசென்றுன எ - று (கச)

தொககவனத தலமருஙகாற றுெலைவினை நலைகூட்ட
மிககதவ விசுவா மிததிரனவா ழாசசிரமம
புககனனமா ஞாககருககுப் பொருவினமறைப பொருளவிாிககுந
தககமுனி வரனபதததைச சாாநதுமனை யொடுநதாழநதான

(இ - ள) நெருஙகிய வனததிலே துனபுறறுழலலைகயில, நலஞானதது டைககூட்ட மிகக தவததையுடைய விசுவாமிததிரமுனிவா வாழகினற ஆசசிரமததிற புகுநது, சீடாகளுககு ஒப்பிலலாத வேதாநதின பொருளை விளககுகினற தகுதியாகிய அமமுனி சிரேட்டருடைய பாதஙகளையடைநது மனைவியுடன (வீமராசன) பணிந தனன. எ - று

தொககவெனறது மிருகஙகணெருஙகிய அலலது மரஙகணெருஙகியவெனக கொளக (கரு)

வணஙகுமனி வேற்கரதது மனனனுககு மாமுனிவ
னிணஙகுறவா சீாவதிபபா னெசசமுனக காகவெனப்
பிணஙகுதலில லாவுளததிற பேசியெழுந திருவெனன
வணஙகினொடு மனஙகுளிாபப வரசனெழுந தெதிாநினறுன.

(இ - ள) (அவவாறு) பணியும அழகிய வேறபடைதாஙகிய கையையுடைய வீமராசனுககு, சிறநதவிசுவாமிததிரமுனிவன இணககமாக ஆசீாவதிபபவராகி,சநததி பெருகுவதாகவெனறு குறறமிலலாதமனததுடனகூறி யெழுநதிருககவென, வீமராசன மனைவியுடன மனககுளிாசசியுறறு எழுநது அவா எதிரேநினறனன எ - று.

ஆசீாவதிபபான - ஆசீாவதிபபானுகி யெனப்பொருள. (கசு)

வேநதாகளே றெநீயாா விளஙகியவெம மாசசிரமம
போநதவருட் பயனினறிப் போனவாக ளாமிலலை
யாயநதநின துளநதாாவ மறைததின்றிய றருதுமெனா
வாயநததவ விசுவா மிததிரனுா மகிழநதுரைததாா.

(இ - ள) அரசாகள (ஆகிய யானைகட்குச) சிஙகமபோலபவனே! நீயாவன? விளககமுறற வெம்முடைய ஆசசிரமததிறகு வநதவாகளிற பயனிலலாமல (வறிதே) சென்றவாகளிலா. எணணிய உன மனவிருபபததைக கூறுவையாயின, (அதனைக) கொடுபபோ மெனறு, பொருநதிய தவததைசசெயத விசுவாமிததிர முனிவா களிததுக கூறினா. எ - று

அறைகுதி எனபதில கு சாரியை (கஎ)

விசுவா மிததிரனா விளமபியசொல லமுதருநதி
யெசசமீன றவனபோல விதயமொடு முகமலாநது
நசசுமா தரவோடு நராதிபனசொல வானடியேன
மெசசியசீாக கவுணடினிய வியனகாவாழ தருமவீமன.

(இ - ள்.) விசுவாமித்திர முனிவர் கூறிய சொல்லமுதத்தை (செவியால்) அருந்தி, புத்திரனைப் பெற்றவன் (களிப்படைவது) போல மனமும் முகமும் மலர்ச்சியுற்று, விருப்பத்தக்க ஆசையுடன் வீமராசன் சொல்கின்றான் (அடியேன்) மெச்சத்தக்க சிறப்புடைய பெரிய கவுண்டின்னிய நகரத்தில் வாழ்கின்ற வீமராசன் எ - று.

இவள்சாரு காசினியென் பாளெனக்கு மனைமாது
தவமாதி பலபுரிந்துந் தனயனுறா மையின்வருந்தி
யவமான வாழ்க்கையினை யறத்துறந்தா ரணியத்துக்
கவலைபெறுந் தமையாதோர் கைகூட லினைக்கண்டேன்.

(இ - ள்) இவள் அடியேனுக்கு மனைவி - சாருகாசினியென்னும் பெயருடையாள் தவமுதலியபலவறங்களைச் செய்தும் புத்திரனுண்டாகாமையினால் வருத்தமுற்றுப் பயனற்ற வாழ்க்கையை யறவேயொழித்து வனத்தில் (வந்து) கவலைப்படும் எங்கட்கு யாது நற்றவமோ கைகூடுதலால் தேவரீரைத் தரிசித்தேன் எ - று.

தவமாதி - என்றது தானயாகமுதலியன (௧௯)

கனகவரை யடுத்தோர்க்குங் கற்பகத்தை யடுத்தோர்க்கு
மனவிழைவு முற்றாத மாபுனிதா வையகத்தி
லனகநினை யடைந்தேனு மருமகவுண் டெனத்துணிந்தேன்
புனிதநின் றருளுரையாற் புத்திரனின் றேபயந்தேன்.

(இ - ள்) புனிதமானவரே! இப்பூமியிலே, பொன்மலையாகிய மேருவை யடுத்தவர்களுக்கும் கற்பகவிருட்சத்தை யடுத்தவர்களுக்கும் மனவிருப்பம் முடிவுபெறாத வழக்கமுண்டோ? தேவரீரை யடைந்தவனும் அரிய புத்திரனையடைவேனென்று மனத்துணிவுற்றேன் பரிசுத்தமானவரே! தேவரீருடைய திருவருளால் புத்திரனை யிப்பொழுதே பெற்றேன் எ - று (௨௰)

தக்கதவத் தால்வேத சாத்திரவி சாரணையான்
மிக்கதய வாற்பொறுமை விரதத்தால் வேள்வியினாற்
பொக்கமறும் வித்தையினாற் புகழ்தானந் தருமத்தா
லொக்குநரில் லாயுரைத்த வுயர்மொழிவீ ணாகாதே.

(இ - ள்) தகுதியாகிய தவத்தினாலும், வேதசாத்திரங்களின் விசாரணையினாலும், மிகுந்த கிருபையினாலும், சாந்தத்தினாலும், விரதத்தினாலும், யாகத்தினாலும், உண்மையாகிய வித்தையினாலும், கீர்த்தியினாலும், தானதருமங்களாலும், சமானமானவர் ஒருவருமில்லாத முனிவரே! தேவரீர் கூறிய உயர்வாகிய வார்த்தை (ஒருகாலத்தும்) வீணாகமாட்டாது. எ - று (௨௧)

எனவழுத்தி யடியேன்மு னியற்றியதீ வினைதெரிந்து
பனவவுரைத் தறத்தீர்த்துப் பரிசுத்த னாருமவகை
யினியுபா யமுமியம்ப வேண்டுமென விரத்தலொடு
முனிவன்மகிழ்ந் துளத்தெண்ணி முடிவேந்தற் குரைசெய்வான்.

(இ - ள்) என்று துதித்து, முனிவரே! அடியேன் சன்மாந்தரத்திற் செய்த தீவினையை யறிந்து கூறி, அதனை விலக்கிப் பரிசுத்தனாகத் தக்க நல்ல வுபாயத்தையுஞ் சொல்லவேண்டுமென்று யாசிக்கவும், விசுவாமித்திரமுனிவர் களித்து மனதில் யோசித்து முடியணிந்த வீமராசனுக்குக் கூறுகின்றார். எ - று. (௨௨)

நின்குலத் தோர் விநாயகனை நித்தலும் பூசனை புரிந்து
நன்குமிகப் பெற்றார்க ளரசே நீயு மிந்த
மின்கொடிபோ லிடைமனைவி விழைவினாலே விடுத்தலினா
லின்குதலை மழலைமொழி யெச்சமிழந் தாயம்மா

(இ - ள்) அரசனே! உன்குலத்துப் பெரியோர்கள் விநாயகக்கடவுளைத் தினந்தோறும் பூசைசெய்து நன்மைகளை மிகுதியாக அடைந்தார்கள்; நீயோ இந்த மின்னற்கொடிபோலும் இடையையுடைய மனைவியினுடைய விருப்பத்தினால் அதனை விட்டபடியால், இனியகுதலையாகிய இளஞ்சொல்லையுடைய குழந்தையை(ப்பெற்று) இழந்திருக்கின்றனை எ - று (௨௩)

விதர்ப்பமென்னு நாடாளும் வீமவினி விநாயகனை
மதர்ப்பிணைவிழி யாளோடு மகிழ்விமத வெறுமணியைக்
கதிர்ப்பவுயிர்ப் பாயநுமக்குக் கணேசர்குல தெய்வதமா
யதிர்ப்புள்ளத்திற் றுயரகற்றி யாண்டதுங்கே ளென்மொழிவான்.

(இ - ள்) விதர்ப்பமென்று சொல்லும் நாட்டை யரசுசெய்யும் வீமராசனே! நீ இனி மதர்த்த கண்களையுடைய உன்மனைவியுடன் விநாயகக்கடவுளை (பூசித்து) மகிழ்ச்சி செய்வாயாக; புத்திரரத்தினத்தை விரைவிற்பெறுவாய்; உங்கட்குக் கணேசப்பெருமானே பயமமைந்த மனத்துயரை யொழித்துக் குலதெய்வமாக, ஆட்கொண்ட சரிதையையுங் கேட்பாயாகவென்று விசுவாமித்திரமுனிவர் கூறலாயினர் எ - று

விசுவாமித்திரனை வீமனடுத்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௨௦௭.

---

# தக்கன் பிணிநீங்குபடலம்.

தொழில்புகழ் வீமநுங் குலத்து ளோர்கண்முன்
வழிவழி யரசுசெய் மறுவி லாதமே தம
பொழிமழை மதிதொறும் பூக்கு மாட்சியாற்
கழிமகிழ் தருங்கரு நாட தேயமே

(இ - ள்) தெளிவிய கீர்த்தியையுடைய வீமராசனே! உம்முடைய குலத்தோர்கள் பூர்வத்தில் வழிவழியாக அரசுசெய்துவந்த குற்றமில்லாத இடமானது மாதந்தோறும் பொழிகின்ற மழையானது அதிகரிக்கும் மாட்சிமையால் மிக்க களிப்பைத் தருங் கருநடதேசமாகும் எ - று

வழிவழியாக - பரம்பரையாக (௧)

கடவுளர் புகழ்கரு நாட தேயத்தி
லிடையலா திறையிட வரசர்கள் வாழ்பதி
படர்புகழ்ப் பொருட்கும பானு மாநக
ரிடர்கெட வரசுசெய் திருந்த காலத்தில்.

(இ - ள்) தேவர்களும் புகழத்தக்க கருநடதேசத்திலே, சத்துருக்கள் கப்பங்கொடுக்க அவர்கள் வாழ்ந்த நகரமாகிய படர்ந்த புகழையுஞ் செல்வத்தையுங் கொடுக்கத்தக்க பானுபுரநகரத்தில், துன்பமொழிய இராசரிகஞ்செய்துவந்த காலத்திலே எ - று.

திறை - அரசனுக்குக் கொடுக்கும்வரி இதனை இறையென்றுஞ் சொல்வது வழக்கு. கடவுளென்னுஞ் சொல்லிறுதியில் உயர்வு சிறப்பும்மை தொக்கது (௨)

வழுவிலா வலவனென்னு மன்னவ னினிதாளுங்கா
கெழுதகை முறையினாளுந் திறைமை செய்யுநாட்
கழுமிய கற்பினாள் கமலை யெனப்படுவாள்
பழுதுறு மொருமகப் பயந்து நோக்கினாள்.

(இ - ள்.) குற்றமில்லாத வல்லவனென்னும் அரசன் உனக்கு எழுந்தலை முறையினாலே நன்கு அரசுசெலுத்துங்காலத்தில் (அவன் மனைவியாகிய) மிக்க கற்பினையுடைய கமலையென்று சொல்லப்படுபவள் குற்றம் பொருந்திய ஒரு பிள்ளையைப் பெற்று (அதனைப்)ப் பார்த்தனள் எ - று

கழுமுதல் = நிறைந்திருத்தல (௩)

விழியிலன் செவியிலன் விளம்பும் வாக்கிலன்
கழியமெய் விரவிய கறைசெய் புண்ணுளன்
பழிதரு குறளனென் பாலனப் பாலனைத்
தழிஇய துழந்தன ளவல நீங்கிலாள்

(இ - ள்) கண்ணில்லாதவனும், காதில்லாதவனும், பேசும் வாயில்லாதவனும், தேகத்திற்கலந்த கறைசெய்யத்தக்க மிக்க புண்ணுள்ளவனும், பழிக்கத்தக்க குள்ளமானவனுமாயினன் என்புத்திரன் புத்திரனென்று, பெருந்துயரடைந்தவள் கிலேசம் நீங்கினாளில்லை. எ - று (௪)

மறுபுல மன்னவர் வசைகள் கூறுபு
முறுவல்செய் திடவரு முடைகொண் மைந்தனைப்
பெறுதலி னிலைமையே பெரிதின் பாமென
வுறுவிழி நெடும்புன லுகுத்து மாழ்கினாள்

(இ - ள்) மறுதேயத்தரசர்கள் நிந்தைச்சொற்களைச் சொல்லி நகைசெய்திடும்படி தோன்றிய முடைநாற்றத்தையுடைய புத்திரனைப் பெறுதலைக்காட்டிலும், பெறாதிருத்தலே மிகநல்லதாமென்று, பொருந்திய கண்களினின்றும் மிக்க நீரைச் சிந்தித் துன்புற்றாள் எ - று

கூறுபு - செய்பு என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம் (௫)

பாவமிப் பிள்ளையின் பரிவு பார்த்திடப்
பூவினன் னென்றலைப் பொறித்த தென்கொலோ
மேவிய பிணியினை மெலியு மைந்தனுஞ்
சாவது வாழ்தலிற் றக்க தென்றனள்.

(இ - ள்) (ஐயோ!) இப்பிள்ளையின் பரிதாபத்தைக் காணும்படி தாமரைமலரில்வாழும்பிரமதேவன் எனசிரசிலெழுதிய தென்னபாவமோ? பொருந்திய நோயினால்

வருந்துகின்றபிள்ளையும் உயிர் பிழைத்திருத்தலினும் இறத்தலே தகுதியாயுள்ளது என்று கூறினள் எ - று. (சு)

வில்லெதிர் நுதலினாள் வெதும்பி நைந்தலும்
வல்லவ னடுத்துறு மகனை நோக்கினா
னல்லது நல்லதென் றற்ற வப்பயன்
சொல்லுவ தன்றெனத் தானுஞ் சோர்ந்தனன்

(இ - ள்) வில்லைப்போன்ற புருவத்தையுடைய கமலையென்பவள் வருந்தித் துக்கிக்கவும், வல்லவனென்னுமரசன் அவளைச் சமீபித்து, பெற்ற பிள்ளையைப்பார்த்தான்; என் உத்தமமாகிய தவத்தின்பலன் நன்றாகவிருந்தது நன்றாகவிருந்தது, அது சொல்லத்தக்கதன்று என்று தானுஞ்சோர்வடைந்தனன் எ - று (எ)

ஊழ்வினை வந்தக்காற் றுளைந்தென் னாவதென்
றாழிமா லனையவ னகத்திற் றேற்றினான்
வீழிவாய்க் கமலைநீ வெதும்ப லென்றுதன்
வாழிமா மனையையும் வருட்டித் தேற்றினான்

(இ - ள்) ஊழ்வினையால் நேரிட்டதற்குத் துன்பமடைந்து ஆவதற்கது யாது? என்று, சக்கரமேந்திய திருமாலையொத்த வல்லவராசன் மனதிற்றணிவுகொண்டான்; வீழிக்கனிபோலும் இதழையுடைய கமலையே! நீ துன்புறாதே யென்று, தன் சிறப்புள்ள மனைவியையும் வருட்டித் தேற்றும்படி எ - று.

வருட்டி - வற்புறுத்தி (அ)

துன்பொரு காலத்துத் துளைந்தா ளார்களே
பின்பொரு காலத்தி னெளிதி னெய்துவார்
நன்பொறி யிழந்தவிந் நவைகொள் பிள்ளையே
யன்புறு நன்மக வாகு மாதராய்

(இ - ள்) ஒருகாலத்திலே துன்பத்தினால் வருந்தினவர்களே (பின்) ஒருகாலத்தில் இன்பத்தை யெளிதாக அடைவார்கள் (அதுபோல) பெண்ணே! நல்லபொறிகளையிழந்த இக்குற்றம்பொருந்திய குழந்தையே (ஒருகாலத்தில்) அன்புபொருந்திய நல்ல குழந்தையாகவாகும். எ - று (கூ)

மணிகண்மந் திரமருந் திவற்றின் மாற்றுவோந்
தணிவிலத் தாயிழாய் தவங்க டானங்க
ளணிவிர தங்களா திகளி னீக்குவாம்
பிணிமலர்க் குழலிநீ யென்று மென்றனன்.

(இ - ள்) மணி மந்திர அவுடதங்களாகிய இவற்றினால் (குற்றங்களை) ஒழிப்போம், தீராவிடில் தவங்கள் தானங்கள் அழகிய விரதங்கள் முதலியவற்றினால் நீக்குவோம், கட்டப்பட்ட மலர்மாலையணிந்த கூந்தலையுடையவளே (வருந்தாது இக்குழந்தையைக்) காப்பாற்றுகவென்று கூறினன். எ - று (௰)

அவலமென் கடலிடை யழுந்து மாதரா
கவலையிற் றிறிதுகை யகன்று கணவனும்

குவலய நீரொடு குளிர்ந்த நீரினு
றவலரு மைந்தனைச் சால வாட்டினாள்.

(இ - ள்.) துன்பமென்னுங் கடலிலமிழ்ந்த கமலையென்பவள் கவலையினின்
றுஞ் சிறிது விலகி, கண்ணென்று சொல்லுங் குவளையினின்று வருகின்ற நீருடன்
குளிர்ந்த நீரினாலுங் கெடுதலற்ற புத்திரனை மிகுதியாக முழுக்கினாள். எ - று.

குவலயம் - குவளைமலர் இது கண்ணுக்குவமிக்கப்பட்டது கண்ணீராலுந்
தண்ணீராலு முழுக்காட்டினாளென்பது கருத்து (௧௧)

போதக மனையவன் பொருவி னூல்வழிச்
சாதக மாதிக டமையச் செய்தபின்
மேதகு கணிதரை வினவித் தக்கனென
றோதக வழைத்தன னுருமக் கனறனை

(இ - ள்.) யானைக்கன்றை யொத்த வல்லவராசன் ஒப்பில்லாத நூல்களிற்
கூறியவகையே சாதகருமமுதலியவற்றை நன்றாகச்செய்து, பிறகு மேம்பட்ட கணித
நூற்புலவரைக்கேட்டுத் தக்கனென்று சொல்லும்படி ஒப்பற்ற புத்திரனைக் கூப்பிட்
டனன். எ - று.

கணிதர் - சோதிடர்.

சாதகன்மமாவது அதகிரமந்திரத்தால் நூறு ஓமஞ்செய்து வாமமந்திரத்
தாற் புத்திரன் முகத்தை யவ்லோகிப் பஞ்சப்பிரம மந்திரங்களை யுச்சரித்து உச்
சியைமோந்து புருடமந்திரத்தை வலக்காதிற் செலுத்தல் ஆதிகளென்றது உத்தாபன
முதலியன உத்தாபனமாவது அசுத்தமாகிய அறையினின்றும் சுத்தமாகிய உயர்ந்த
வட்டத்திற் குழந்தையைச் சோடசக்குங்கிரியை உத்தாபனத்தின் பின் செய்யவேண்
டியது நாமகரணமாதலின், தக்கனென்றழைத்தனனென்றார் அது பெயரிடுதலிற
செய்யுங்கிரியை அதன்பின்னர் நான்காமாதத்திற் சந்திமித்தலும், ஆறுமாதத்தில
அன்னப்பிராசனமும், பதின்மூன்று மாதத்திற் சவுளமும், ஐந்தாமவருடத்தில உப
நயனமுமுதலியனவாம் பிரவாசம் - குழந்தையைக்கொண்டு கோயிலுக்குச் செல்லல்
உபநயனம் - பரசிவத்தைத் தரிசிப்பித்தற்குச் சமீபமாகிய நயனத்தையுண்டாக்குங்
கிரியை. (௧௨)

வெள்ளணி யணிந்தநா டொட்டங்கி வேந்தர்கோன்
பிள்ளையைக் குறித்தற மாதி பேணியும்
விள்ளுதல் கண்டில னவிழுமந் தொடர்பிணி
தெள்ளிய வாண்டிப னிரண்டு சென்றவே.

(இ - ள்.) வெள்ளணியணிந்த தினமுதற்கொண்டு ராசராசனாகிய வல்லவன்
தன் புத்திரனைக் குறித்துத் தருமமுதலியவற்றைச் செய்தும், துன்பத்தைச்செய்யுங்
கொடியநோய்கள் நீங்குதலைப் பார்த்திலன் (இவ்வகையாகத்) தெளிந்த பன்னிரண்டு
வருடங்கள் சென்றன. எ - று.

வெள்ளணியணிதல் - மனைவி மகவுயிர்த்த காலத்து வெள்ளணியணிவது.
இது முன்விளக்கப்பட்டது (௧௩)

வல்லவன் மனைவியை யழைத்துக் கூறுவா
னெல்லையில் பொருளெலா மிழந்து மெய்யுட

லலலொடு பகலருந தவததின வாடியுரு
செலலலசெய மகனபிணி தீரக கணடிலேன.

(இ - ள) வலலரைாசன தன மனைவியை விரிதநுசசொல்கினறுன கணக
கில்லாத பொருணமுழுவதையும (தானதருமஙகளாற) போககடிததும, இரவுமபக
லும அரிய தவஙகளால எனனுடைய தேகமிளைத்தும, துனபுசெயகினற மகனுடைய
பிணிகள போககககாணகிலேன (இனியாதுசெயவது ?) எ - று (கச)

மறறுள பொருளகளு மாயு முனமக
னுறறிருந தனனெனி லொழியக கொண்டுபோ
சறறினித தாழ்ககலை யெனனத தையலாள
பெறறவத தினததினும பெருநதுன பெயதினுள.

(இ - ள) மிகுதியாகவுளள பொருளகளும ஒழியுமுனனர், மகன (உன்பால
அன்பு) உறறிருநதானுயின (அவனை யிஙகிருநது) அகலககொண்டுபோவாயாக. சிறி
தும இனிககாலநதாழ்ககவேணடாமெனறு வலலரைாசன கூற, கமலையெனபவள (அப்
புதலவனை) ஈனற அககாலததைககாட்டிலும மிகக வருததமடைநதாள எ-று (கரு)

வே று

அனனோ வனனோ மன்னவ னெனுசத கழலாகி
யென்னோ வானே லெனனினிச செயவே னெனநொநது
கொனனோய் கொணட மைநதனை வலலே கொணடாவா
மின்னே யனன நுணணிடை வாட வெளிககொணடாள.

(இ - ள்) ஐயோ! ஐயோ! அரசன மனஙிற கோபாககினிகொணடு எனனை
நோவானுகில் இனி யாது செயகுவேன? எனறு வருநதி அசசமபொருநதிய நோ
யைககொணட புததிரனை யுடனே கொணடு, ஒசிகினறதாகிய மினனலையெ நிகாதத
நுண்ணிய இடையானது ஒசியுமபடி (கமலை யெனபவள அநதபபுரததினினறு) வெ
ளிககொண்டு சென்றுள. எ - று

ஆவுதல - வளைதல, ஒசிதலெனறும (கசா)

பறறா யாரே பணடுசெய நலலூழ படாகாலை
யுறறா யாரே யோஙகிய தீயூ ழுறுகாலை
யெறறோ வெனன விரஙகலி னெனறு மிடபாதைப
பெறறோ னலலாற காபபிலை யெனறே பெயாகுறறுள

(இ - ள.) பூரவததிறசெயத நலவூழினபயன வளருஙகாலததிற சததுருகக
ளாயுள்ளோர் யாவர்? மிகுதியாகிய தீயூழினபயன் வருஙகாலததில நடபாயுளளோர்
யாவர்? எறறோவெனறு கவலவதினுல எனனவரும? வாமபாகததில் உமாதேவியாரை
யுடைய சிவபெருமானையலலாமல ஆதரவின்றெனறு கருதிச சென்றனள. எ - று.

வெளளிடை நீநதிக கலலத ரதக மிகுபேயததோ
துளளூறு மானின கனறெனன வோடிச சுரநீநதக
கள்ளாகள சூழ்நது நிலலென வாரதது கலனகொளளா
கொளளவுள வாடி மெனமெல வோரூா குறுகுறறுள.

(இ-ள்) வெளியைக்கடந்து கல்வழியுங் கானலும் மிகுந்த அருநெறியில் துள்ளிச்செல்லும் மான்கன்றுபோல ஓடிப்பாலை நிலத்தைநீந்த, திருடர்கள் சுற்றிக்கொண்டு நில்லென்றுபறித்து, ஆபரணங்களைக் கொள்ளைகொள்ள, மனம்வருந்திப் பையப்பைய ஓரூரையடைந்தனள். எ-று. (கஅ)

பொருளினை யேநற் பொருளென வேட்டுப் புவிகாப்போ
னருளினை யில்லா னைமனை மைந்த னவாத்தம்மை
யொருவின னென்னி னெண்கல மெவ்வா றொழிவாரோ
கருவினை மாக்க ளென்றனு ருகக்கோர் களைகாணாள்.

(இ-ள்) செல்வத்தையே உத்தமப்பொருளென்று விரும்பி உலகினை யரசு செய்யும் அரசன் (சிறிதும்) கிருபையையுடைத்தாயில்லாதவனாய் மனைவியும் புத்திரனுமாகிய எம்மை நீக்கினனென்று சொன்னால், தீச்செயல்புரிபவர்கள் [கள்வர்கள்] பிரகாசிக்கின்ற ஆபரணங்களைக் களவாடா தொழிவார்களோ? என்று (தன்னுட்டேர்மானித்துத்) துன்பத்திற்கோர் எல்லைகாணாதவளாகி எ-று. (கக)

களை - தீர்வு, பரிகாரம்

வன்பசி தாக மலைக்க வருந்த மகனோடு
முன்பசி தாகங் கண்டறி யாதாண் முகம்வாடித்
தன்பழ வாழ்வும் வந்தவெ றுப்புந் தக்நாடி
யென்புரி வாநா மென்புரி வாமென் றிதுநேர்ந்தாள்.

(இ-ள்) முன்னேபசியையுந் தாகத்தையும் பார்த்தறியாத கமலையென்பவள் வலியபசியுந் தாகமும் மிகவருத்தத் தன்புதல்வனுடன் முகம்வாட்டமுற்று, தன்னுடைய பழைமையாகிய வாழ்க்கையும் (இப்பொழுது) வந்தவெறுக்கத்தக்க நிலைமையும் தகுதியாகயோசித்து, நாம்யாதுசெய்வோம்? நாம் யாதுசெய்வோம்? என்று, இதனைத் துணிந்தாள் எ-று. (உ0)

மைந்தனை நாடி வாழ்க்கையை விட்டே வனம்வந்தாம்
வந்துழி யாவி மாய்ந்தன மாயின் மகனுய்த்
லெந்தவு பாயந் தன்னினு மில்லை யிரந்தேனு
நைந்துயிர் போகா தோம்புது மென்று நவையில்லாள்.

(இ-ள்) குற்றமில்லாத கமலையென்பாள் புதல்வனைவிரும்பி (இராச)சுகத்தைக் கைவிட்டு வனத்திற்குவந்தோம் (அவ்வாறு) வந்தவிடத்தில் உயிர்விடுவோமானால் (நமமுடைய) புதல்வன் பிழைப்பது எவ்வுபாயத்தாலுமில்லை (பிறரிடம்) வருந்தி யாசித்தாலும் உயிர்போகாமல் (அவனைக்) காப்போமென்று சொன்னாள் எ-று.

குறுகிய சிற்றூ ரதனிடை யோர்பாற் குளிர்கங்கை
நிறுவிய வேணி நின்மலர் கோயி னிலையெய்திச்
சிறுவனை வைத்துச் சேரணி மைக்கட் டிகழ்கின்ற
வுறுநக ரெய்திப் பலிகொடு மீண்டே டினளுண்டாள்

(இ-ள்) தாமடைந்த சிறிய ஊரினொருபக்கலில், குளிர்ந்த கங்காசலத்தைத் தரித்திய சடையையுடைய அமலராகிய சிவபெருமானது திருக்கோயிலில் நிலைத்துச் சிறுவனையிருக்கச்செய்து, பொருந்திய சமீபமாகவுள்ள நகரத்தையடைந்து பிச்சை கொண்டு திரும்பி (அவனை) உண்பித்து (த்தானும்) உண்டனள். எ-று. (உஉ)

வேறு

அண்டர்கள் பெருமான் கோயி லமர்ந்தவூர்க் கடுத்த தோருங்
குண்டின புரத்தை நாளுங் குறுகிமை பலிகொண் டூட்டி
யுண்டனள் வசிக்கு நாளி லொருதின மகனோ டவ்வூர்ப்
பண்டைநல் வினைவந் தெய்தப் பட்டனள் பலிக்கு மன்னோ

(இ - ள்.) தேவநாயகராகிய சிவபெருமானுடைய திருக்கோயில்பொருந்திய அசிரமத்தாருக்கு அடுத்துள்ள குண்டினபுரத்தை நாடோறுமடைந்து தனைப்பொருந்திய பிச்சையெடுத்துவந்து (அவனை) உண்பித்து, (தானும்) உண்டுவாழுங்காலத்திலே, ஒருநாள் தன் மகனோடும் அவ்வூரிற் பிச்சையெடுக்கச்சென்றனள் (அப்பொழுது) அவனது பூர்வசன்ம புண்ணியம் வந்துசெய்தலால் எ - று.

"பண்டைநல் வினைவந்தெய்த" என்றது மேல்வருஞ் செய்யுளில் "முற்கல ரெதிரே போந்தார்" என்பதனைக்கொண்டு முடிகின்றது (உ௩)

வீதியிற் செல்லும் போது வியனகர்க் கடுத்த கானிற்
சாதியின் வயிர மின்றித் தழைத்துப லுயிரும் வாழும்
போதியல் சோலை சூழ்ந்த பொருவிலா சிரமம் வைகு
மூதியல் சிவமே நாடு முற்கல ரெதிரே போந்தார்

(இ - ள்.) வீதியிற் செல்லுங்காலத்தில், பெரிய அந்நகரத்திற்கடுத்த வனத்திலே சாதிப்பகைமையில்லாமற் பல பிராணிகளும் நெருங்கி வாழும் மலர்கள் பொருந்திய சோலைசூழ்ந்த ஒப்பில்லாத ஆசிரமத்திலே வசிக்கும் பழமைத்தன்மையுடைய சிவத்தையே விரும்பும் முற்கலமுனிவர் (அவர்களுக்கு) எதிரே வந்தனர். எ - று.

சாதியின் வயிரமின்மையென்றது பாம்புங் கருடனும், எலியும் பாம்பும், எருதும் பசுவுமாகிய இவைபோல்வன பயமில்லாமலும் பகைமையில்லாமலும் ஒன்றுகூடி வாழ்தல் முதலியன. இது அங்குள்ள தலவிசேடம் மூர்த்திவிசேடம் பெரியோர் மகிமையென்னு மிவற்றுளொன்றெனத்தகப்பெறும் (உ௪)

முனிவகல் கணேச பத்தி முற்கல முனிமெய்க் காற்று
னணியுடம் பொங்கு நோய நலிபிணி தீர்ந்து தக்க
னினியன மொழிந்தான் கேட்டான் யாவையுங் கண்டா னீண்டான்
புனிதனு யடந்தா னந்தப் பூசுர னியல்பென் சொல்வேன்

(இ - ள்.) கணேசப்பெருமானுடைய பத்தியுடையவரும் கோபமொழிந்தவருமாகிய முற்கலமுனிவருடைய தேகத்திற்படிந்த காற்றுனது நன்றாக அவனுடம்புமுழுவதும்படிய, துன்புசெய்கின்ற நோய்விலகி, தக்கனானவன் இனிய வார்த்தைகளை (வாயால்) உரைத்தான், (பிறர் சொல்வதைச் செவியால்) கேட்டான், எல்லாவற்றையும் (கண்ணால்) கண்டான், (உடல்) நீண்டான், (ஒருகுறைபாடுமின்றி) பரிசுத்தனுமாக நடந்தான்; அந்த முனிவரனுடைய இயற்கையை யென்னென்று சொல்லுவேன்? எ - று.

பூசுரன் - பூலோகதேவன்; வேதியன்; முற்கலன் (உ௫)

முருகனோ காம வேளோ முகுந்தனோ வென்னத் தக்கன்
பெருகொளி யழக னாகி யுருப்பெலாம் பிறங்க நற்றா
யிருவிழி களிப்ப நோக்கி யெடுத்தணைத் துச்சி மோந்து
ஞருகிய வார்வக் கண்ணீ ரொழுக்கமெய் பூரித் தாளே.

திருந்திய வரங்க ணல்கிச் சிந்தையிற் றிறம்பாப் பத்தி
பொருந்திய தக்கன் முன்னாப் பொற்புறத் தோன்றி நின்றார்.

(இ - ள்.) வருந்துகின்ற உண்மைத்தன்மையுடைய அவர்கட்கு கணேசப்பெருமான் வரமருளும்படி திருவுள்ளங்கொண்டு, முருந்தையொத்த பல்வரிசையையுடைய கமலையென்பவளுக்கு முன்னே பொருந்தும்படி முதலிலே தரிசனமளித்துத் திருந்தமாகிய வரங்களைக்கொடுத்து, மனதில் அகலாத பத்தியைப் பொருந்திய தக்கனுக்கு முன்னே அழகுபெறப் (பின்னர்ப்) பிரசன்னமாயினார். எ - று.

முருந்து - மயிலிறகினடி. (௩0)

ஒருமுழந் தாளிற் செங்கே ழொருபதம் வைத்த கோலத்
தொருமருப் பிரண்டு காது முக்கணு நான்கு தோளும்
பொருவில்பொன் னுடையு மேனைப் பொலங்கலம் பலவுந் தோன்ற
விருவருக் கரியா னிற்ப விணைவிழி மலரக் கண்டான்.

(இ - ள்) ஒரு முழங்காலிலே, செந்நிறம்பொருந்திய ஒருபாதத்தைப்பொருந்திய திருக்கோலமாகிய ஒற்றைக்கொம்பும் இரண்டுசெவிகளும் மூன்று விழிகளும் நான்குதோள்களும் ஒப்பில்லாத பொன்னுடையும் பிற அழகிய ஆபரணங்கள் பலவுந் தோன்றும்படி, (பிரமன் திருமாலென்னும்) இருவருக்கும் அறியப்படாத கணேசப்பெருமான் நிற்க, (தக்கன்) இருவிழிகளும் மலரும்படி தரிசித்தனன் எ - று.

பொன்னுடை - பீதாம்பரம். (௩௧)

அச்சமு மன்புந் தோன்ற வடியிணை பணிந்து சூழ்போந்
துச்சியிற் கரங்க ளேற வொளிவிழி யருவி தாழ
விச்சுவ ரூப னான விநாயகப் பெருமான் றன்னை
மூச்சக முழுதும் போற்று முதல்வனைத் துதிக்க லுற்றான்.

(இ - ள்) அச்சமும் அன்புந் தோன்றும்படி (விநாயகக்கடவுளுடைய) திருவடிகளை வணங்கிப் பிரதக்கணஞ்செய்து, கரங்கள் சிரமிசை யேறவும், பிரகாசிக்கின்ற கண்களிலிருந்து (ஆநந்த) அருவி யொழுகவும், விச்சுவரூபராகிய விநாயகப்பெருமானென்னும் மூவுலகத்திலுள்ள வெல்லோருந் துதிசெய்யும் முதற்கடவுளை (பின் வருமாறு) துதிசெய்யலாயினன் எ - று.

விச்சுவரூபன் - உலகரூபி. மூச்சகம் - சுவர்க்கமத்திய பாதலமென்னும் மூன்றுலகங்கள். முதல்வன் - ஒவ்வொரு கருமத்திற்கும் முதலிற் பணியத்தக்கவன்.

வேறு.

வேதகா ரணனுநீ வேதமோர் நான்குநீ
பாதமோர் நான்குநீ பதங்களோர் நான்குநீ
போதலை மலையமர் புவனகா ரணனுநீ
நாதநின் பெருமையை நவிலவல் லாரெவர்.

(இ - ள்.) வேதகாரணரும் தேவரீரே! ஒப்பற்ற நான்கு வேதங்களும் தேவரீரே! நான்குபாதங்களும் தேவரீரே! நான்கு பதங்களும் தேவரீரே! காலம் கடல் மலை பொருந்திய பூமியாகிய இவற்றிற்குக் காரணரும் தேவரீரே! நாதனே! தேவரீருடைய பெருமையைச் சொல்லவல்லவர் யாவர் எ - று.

பாதநான்கு - சரியை கிரியை யோகம் ஞானம் மற்றவை வெளி. (௩௨)

புராதனப் பொருளுநீ புறம்பினு முள்ளினும்
விராவுமெய்க் கரியுநீ மிகுமுப நிடதநீ
சராசர வுருவுநீ தத்துவ முழுதுநீ
பராபர நினதியல் பகரவல் லாரெவர்.

(இ - ள்.) பழமையாகியபொருளுந்தேவரீரே! புறத்திலும் அகத்திலுங்கலந்த உண்மையாகிய சாட்சியுந்தேவரீரே! மேம்பட்ட உபநிடதங்களுந்தேவரீரே! சராசரங்களினுருவமுந்தேவரீரே! தத்துவங்கள் யாவுந்தேவரீரே! பராபரனே! தேவரீருடைய இயற்கையைச் சொல்லவல்லவர் யாவர்? எ - று.

உபநிடதம் அநேக ஆயிரமெனக் கூறப்படும் அவற்றுள் ஈசாவாசியமுதல் முத்திகோபநிடத மிறுதியாக நூற்றெட்டுச் சிறந்தனவென முற்காலத்துத் தொகுக்கப்பட்டுள்ளன அவற்றையும் மதக்கோட்பாடுடையார் தத்தமக்கேற்றவாறு கையாண்டு வருகிறார்கள் (௯௪)

மூவர்கா ரணனுநீ மூன்றுகா ரணமுநீ
மூவகை யுலகுநீ மொழியுமுச் சுடருநீ
மூவகை யுயிருநீ மூவகை யுருவுநீ
தேவனே நினதருள் தெளியவல் லாரெவர்.

(இ - ள்.) மூவர்க்குக் காரணருந்தேவரீரே! மூன்றுகாரணங்களுந் தேவரீரே! மூவகை யுலகங்களுந்தேவரீரே! சொல்லுகின்ற முச்சுடர்களுந்தேவரீரே! மூவகை யுயிர்களுந்தேவரீரே! மூவகை யுருவமுந்தேவரீரே! தேவனே! தேவரீருடைய திருவருளைத் தெளியவல்லவர் யாவர்? எ - று.

மூவர் - பிரமன் விண்டு உருத்திரன் மூன்று காரணங்கள் - முதற்காரணம் துணைக்காரணம் நிமித்தகாரணம் மூன்றுலகு - சுவர்க்கம் மத்தியம் பாதலம். முச்சுடர் சூரியன் சோமன் அக்கினி. மூவகையுயிர் - விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர். இவருள், ஆணவமல மொன்றையுடையவர் விஞ்ஞானகலரும், ஆணவகன்ம மலங்க ளிரண்டையுடையவர் பிரளயாகலரும், ஆணவகன்மமாயை யென்னு மும்மலங்களையுடையவர் சகலருமாவர். மூவகையுரு - தூலவுரு சூக்குமவுரு காரணவுரு.

இந்திரி யங்களி னிசையதி தெய்வநீ
யிந்திரன் முதலிய வெண்டிசைத் தேவர்நீ
யந்தியும் பகலுநீ யறுவகைப் பருவநீ
யெந்தைநின் னுருவினை யியம்பவல் லாரெவர்.

(இ - ள்.) இந்திரியங்களின் சொல்லத்தக்க அதிதெய்வங்களுந் தேவரீரே! இந்திரன் முதலிய எட்டுத் திக்குப்பாலர்களுந் தேவரீரே! அந்தியும் பகலுந் தேவரீரே! அறுவகைப்பருவங்களுந் தேவரீரே! எந்தையே! தேவரீருடைய செயல்களைச் சொல்லவல்லவர் யாவர்? எ - று.

அறுவகைப்பருவம் - கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முதுவேனிலென்பன (௯௫)

ஏகனீ யனேகனீ யிருளுநீ யொளியுநீ
போகிநீ யோகிநீ புலவரெல் லாருநீ

சாகர மேழுநீ தடவரைக் குலமுநீ
மாகநின் னடிமலர் மருவவல் லாரெவர்.

(இ - ள்.) ஏகமானவருந் தேவரீரே! அநேகமானவருந் தேவரீரே! இருளுந் தேவரீரே! வெளிச்சமுந் தேவரீரே! போகியுந் தேவரீரே! யோகியுந் தேவரீரே! தேவர்கள் யாவருந் தேவரீரே! சமுத்திரங்களேழுந் தேவரீரே! விசாலமான மலைத் தொகுதிகளுந் தேவரீரே! ஆகாயரூபியே! தேவரீருடைய திருவடித்தாமரையைப் பொருந்த வல்லவர் யாவர்? எ - று.

ஏகன் - ஒன்றியானவன். சாகரமேழு இவை உவர்நீர் நன்னீர் பால் தயிர் நெய் கருப்பஞ்சாறு தேன் என்பவற்றை யுடையவை. (௬௭)

அறைபிர மேயநீ யப்பிர மேயநீ
பறையுமப் பாவனை யுநீ பாவனாதீதநீ
நிறைபரப் பிரமநீ நிலமுதலைந்துநீ
யிறைவநின் னருளினை யெய்தவல் லாரெவர்.

(இ - ள்.) சொல்லத்தக்க பிரமேயமுந் தேவரீரே! அப்பிரமேயமுந் தேவரீரே! சொல்லத்தக்க பாவனையுந் தேவரீரே! பாவனாதீதமுந் தேவரீரே! நிறைந்த பரப்பிரமமுந் தேவரீரே! நிலமுதலிய ஐம்பூதங்களுந் தேவரீரே! இறைவரே! தேவரீருடைய திருவருளையடைய வல்லவர் யாவர்? எ - று.

நிலமுதலைந்து மண் நீர் தீ காற்று ஆகாயம். பிரமேயம் - அளவிடக்கூடியது.

மிருதிநீ புராணநீ வேறுபல கலையுநீ
வருணமோர் நான்குநீ வனமுப வனமுநீ
தருவொடு கொடியுநீ சகலசெந் துக்களுநீ
யொருவநின் றனணிய லுணரவல் லாரெவர்.

(இ - ள்.) மிருதிகளுந் தேவரீரே! புராணங்களுந் தேவரீரே! வேறுவகைப்பட்ட பலகலைகளுந் தேவரீரே! வருணங்கள் நான்குந் தேவரீரே! வனங்களும் உபவனங்களுந் தேவரீரே! மரங்களுங் கொடிகளுந் தேவரீரே! சகலசெந்துக்களுந் தேவரீரே! ஒப்பற்றவரே! தேவரீருடைய இயற்கையை அறியவல்லவர் யாவர்? எ - று.

மிருதி - தருமநூல் பதினெட்டு அவையாகஞ்ஞவல்கியர் பெயரானவிளங்கும். அவை மநு அத்திரி ஹாரிதம் விட்டுணு யாஞ்ஞவல்கிய முதலியன. புராணங்கள் - மகாபுராணங்கள் பதினெட்டு; உபபுராணங்கள் பதினெட்டு. கலை - அறுபத்துநான்கு வகைத்து. வருணம் நான்கு - பிராமணன் அரசன் வசியன் சூத்திரன். (௬௯)

காமமா திகளுநீ கடுமபசி தாகநீ
நாமநித் திரையுநீ நகுவினோ தங்களுநீ
யேமமார் பொறையுநீ யின்பநீ துன்பநீ
வாமனே நினகழன் மதிக்கவல் லாரெவர்.

(இ - ள்.) காமமுதலியனவுந் தேவரீரே! கொடுமையாகிய பசியுந்தாகமுந் தேவரீரே! அச்சந்தரும் நித்திரையுந்தேவரீரே! சிரிக்கத்தக்க அற்புதங்களுந்தேவரீரே! இன்பம்பொருந்திய சாந்தமுந்தேவரீரே! இன்பமுந்தேவரீரே! துன்பமுந்தேவரீரே! வாமனே! தேவரீருடைய திருவடியைத் தியானிக்கவல்லவர் யாவர்? எ - று

காமமாதிகள் - காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம். வாமன் அழகுடையவனென்றும் குறுகிய வடிவுடையவனென்றும் பொருள்படும். (௪0)

அருளுநீ மறமுநீ யன்புநீ வன்புநீ
தெருளுநீ மருளுநீ செலவநீ வறுமைநீ
வெருளுநீ தேறறநீ வேறுநீ யொன்றுநீ
குருவநின் குணங்களைக் குறிககவல் லாரெவர்.

(இ - ள்) அநுக்கிரகமுந தேவரீரே! கோபமுந தேவரீரே! அன்புந் தேவரீரே! பகைமையுந் தேவரீரே! ஞானமுந தேவரீரே! அஞ்ஞானமுந் தேவரீரே! செல்வமுந் தேவரீரே! தரித்திரமுந தேவரீரே! மயக்கமுந தேவரீரே! தெளிவுந தேவரீரே! வேறெவையுந தேவரீரே! ஒவ்வொன்றுந் தேவரீரே! குருவானவரே! தேவரீருடைய குணங்களைக் குறிக்கத்தக்கவா யாவா? எ - று (௪௧)

புண்ணிய தலங்கணீ பொருவிறீர்த் தங்கணீ
வண்ணமூர்த் திகளுநீ வரநதரும வள்ளனீ
பண்ணியம பலவுநீ பரமகப பொருளுநீ
யண்ணலே நினசெய லறியவல லாரெவா.

(இ - ள்) புண்ணியஸதலஙகள் தேவரீரே! ஒப்பிலலாத தீர்த்தங்கள் தேவரீரே! அழகிய மூர்த்திகளுந தேவரீரே! வரங்களை யுதவும வளளல தேவரீரே! பல பண்ணியங்களுந் தேவரீரே! சிறந்த மதத்தின பொருளுந தேவரீரே! தலைவரே! தேவரீருடைய செயலகளை யறிய வலலவா யாரோ? எ - று (௪௨)

செயவினை முதலுநீ செயபபடு பொருளுநீ
செய்வினைத் தொழிலுநீ செய்கரு மப்பய
னுய்வகை யவரவாக குதவவல் லவனுநீ
மெய்வலாய் நினதியல விளககவல லாரெவா.

(இ - ள்) செயகினற வினைமுதலுந் தேவரீரே! செய்யப்படுகினற பொருளுந் தேவரீரே! செயகினற வினைத்தொழிலுந தேவரீரே! (அவரவா) செய்கின்ற கருமப்பயனை அவரவாககு உயவகையாகக கொடுககவலலவருந தேவரீரே! மெய்மையில் வல்லவரே! தேவரீருடைய உணமையியலபை விளக்கவல்லவர் யாவா? எ - று.

வினைமுதல செயபபடுபொருள வினைததொழிலென இலக்கண முறையாக [கருத்தா] எழுவாய, செயப்படுபொருள, [வினைமுற்று] பயனிலையெனச் சொலலணி செய்யப்பட்டது. (௪௩)

குணமொடு குறிபல கொள்கைகொள் ளாயெனி
னணிமலா மணமென வாகமையி னுயிரெனப்
பணியுயி ரறிவெனப பயிலுமத துவிதமாங
கணபதி நினதியல காணவல லாரெவா.

(இ - ள்.) அழகிய மலரும் மணமும்போலவும், உடலுமுயிரும்போலவும், பணிக்கினற உயிருமுணர்வும் போலவும் விளஙகுகின்ற அத்துவிதமாகிய கணநாதப் பெருமானே! தேவரீா குணமுங் குறியும பலவகைக் கொள்கையுங் கொள்ளீராயின் தேவரீருடைய இயலபைககாண வல்லவா யாவர்?, எ - று.

அத்துவிதம - இரண்டன்மை (௪௪)

என்றுதோத் திரம்பல வியம்பிய தக்கன்மு
னன்றுதன் னுருவமே நான்மறை யாளனு
மன்றுநேர் காட்டுபு மதமழை கயமுக
னென்றுநின் றுதிகளுக் குவந்தன மென்றனன்.

(இ - ள்) என்று பலதோத்திரங்களைக்கூறிய தக்கனென்பவனுக்குமுன்னே, மதநீரைச்சொரியுங் குளிர்ந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் நன்மைபொருந்திய தமதுருவமே நான்குவேதங்களிலும் வல்ல முற்கல முனிவராகப் பொருந்தக் காட்டி, நீயுரைத்த உன்னுடைய தோத்திரங்களுக்கு மகிழ்ந்தோமென்றனர் எ - று.

காட்டுபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். காட்டியெனப்பொருள். (௪௫)

தம்பிரா னருளலுந் தக்கன் மீட்டுமப் பணிந்
தெம்பிரா னடியனே னில்லினைத் திருவுமுற்
றும்பரார் புகழ்தர வோங்கிநான் வாழுமா
நம்பிரான் றருகென நாதனு மோதுவார்.

(இ - ள்.) (இவ்வகையாக) விநாயகக்கடவுள் அருள்புரியவுந் தக்கன் மறுபடியும் வணங்கி, எமதுபெருமானே! அடியேன கிரகத்தில் அட்டலட்சுமிகளும் பொருந்தித் தேவர்களும் புகழும்படி மேம்பட்டு யான் வாழும் வகையாக வரந்தருக நம்பிரானே! எனவேண்ட விநாயகக்கடவுள் திருவாய்மலர்ந்தருளுகின்றார் எ - று.

வேறு.

முக்கல னெனும்பெயர் முன்னெமாற் பெறுந்
தக்கவ னவ்வுருச் சார்ந்த நம்முடை
மிக்கவிவ் வுருவுகாண் விளம்பு மன்னவன்
பொக்கமற் றெமதடி போற்றும் பத்தியான்.

(இ - ள்) முற்கலனென்னும் பெயரைப் பூர்வத்தில் எம்மாற்பெற்ற தக்கவனாகிய அவனுடைய உருவத்தைச்சார்ந்த நம்முடைய மேம்பட்ட இவ்வடிவினைக் காணாயாக சொல்லிய அம்முற்கலமுனிவன் பொய்ம்மையின்றி எம்முடைய திருவடியைத் துதிசெய்யும் பத்தியுடையவன். எ - று. (௪௭)

பொக்கம் - பொய்ம்மை.

அவனுயிர் நமக்குரு வான பெற்றியா
லவனுரு நமதுரு வதனைத் தேற்றுவா
னவனுரு வாகியு மளித்துங் காட்சியை
யவனுருக் காற்றினின் னரிட்டந் தீர்த்தனன்.

(இ - ள்.) அம்முற்கலனுடைய உயிரானது நமக்கு வடிவமானதன்மையால், அவனுருவமே நமதுருவமென்பதனைத் தெளிவிக்கும்படி அவனவடிவமாகியுங் காட்சியைக்கொடுத்தோம். அவன் தேகத்தினின்று தோன்றிய காற்றினால் உன்னுடைய துயரத்தை விலக்கினோம் எ - று. (௪௮)

அன்னவன் றனைச்சர ணடைதி தக்கனே
நின்னுள விழைவெலா நிரப்பு வானுயர்

பொன்னக ரரசெனப் பொலிவை போகென
முன்னவன் மறைந்தனன முடிகொள வீமனே.

(இ - ள்.) தக்கனே! அமர்முறகலமுனிவனைச் சரணமடையக்கடவை. (அவனே) உன்னுடைய மனதிலுள்ள விருப்பங்களையெல்லாம் நிறையச்செய்வான். (அதனால்) உயர்வாகிய பொன்னகரத்திற் கரசனாகிய இந்திரனைப்போல விளங்குவை. செல்லவென்று திருவாய்மலர்ந்தருளி மறைபட்டவராகிய விநாயகக்கடவுள் அந்தாத்தானமாயினார் கிரீடமணிந்த வீமராசனே! (என்று விசுவாமித்திர முனிவர் அவனுடன் கூறினார்) எ - று. (சக)

தக்கன்பிணிநீங்குபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஉ௫௯

---

# முக்கலர்தக்கனுக்குபதேசித்தபடலம்.

கற்றைச் சடிலத் தேரம்பன் காட்சி கொடுத்து மறைதலோடும்
பெற்றம் பிரிந்த கன்றெனவும் பெற்ற தாய்ப் பிரிந்த மகவெனவும்
பற்றும் பொருளைக் கைப் பெறறிழந்த படர்கூர் வறுமை யானெனவுஞ்
சற்றுந் தரியா துளங்கலாயத் தக்க னிலமேல் வீழ்ந்தெழுந்தான்.

(இ - ள்) கற்றையாகிய சடையையுடைய விநாயகக்கடவுள் காட்சியளித்து மறைந்தவுடனே, தக்கன் பசுவைப்பிரிந்த கன்றுபோலவும், பெற்றதாயைப் பிரிந்த பிள்ளைபோலவும், தேடத்தக்க பொருளைக் கையிற்பெற்றுப் போக்கடித்த துன்பமிக்க வறுமையாளன்போலவும், சிறிதுபொழுதுந் தாளாமல் மனங்கலங்கிப் பூமியின் மேல்விழுந்து (புரண்டழுது) எழுந்தான் எ - று. (க)

சென்ற திசையை யெதிர்நோக்குந் திசைகடோறுந் துரீஇச் செல்லு
நின்று பெருமா னருள்புரிந்த நிலத்திற் கிடந்து புரண்டலறு
மன்றல் கமழ்ந்த முடி மிலைந்த மாலை யெனவே மலர்ந்ததுணர்க்
கொன்றை மரத்தை யெதிர்வணங்குங் குறுகித் தழுவி நனிமோகக்கும்.

(இ - ள்) (விநாயகக்கடவுள்) சென்றதிசையை யெதிரேபார்ப்பான், திசைகளிலெல்லாந் தேடிச்செல்லுவான்; கணேசப்பெருமான் நின்று அநுக்கிரகஞ்செய்த விடத்தில் விழுந்து புரண்டு அலறுவான் வாசனைவீசுந் திருமுடியிற்கட்டிய திருமாலையைப்போல மலர்ந்த மலர்க்கொத்துக்களையுடைய கொன்றைமரத்தை யெதிரே பணிவான், நெருங்கி (அதனை)த் தழுவி மிகவும் மோப்பான். எ - று.

காளைச் சுரும்பு நறைபருகுங் கமலத் தடமே புள்ளினமே
வாளைக் கயமே யகன்றில்களே மாட நிரையே கபோதகமே
பாளைக் கமுகே மட்டறபனையே பயிலு மன்றிற குருகினமே
தாளைக் கருதார்க் கருளாத சாமி வரவுங் கண்டீரே.

(இ - ள்) இளம்பருவமுடைய வண்டுகள் தேனைப்பருகுந் தாமரைத்தடாகமே! பறவைச்சாதிகளே! வாளைமீன்கள் பொருந்திய கயங்களே! பொருந்திய

ஆணன்றில்களே! வரிசையாகிய மாடங்களே! கபோதகங்களே! பாளைகளையுடைய கமுகமரங்களே! மடலையுடைய பனைமரங்களே! சஞ்சரிக்கும் அன்றிற் பறவையினங்களே! (தம்முடைய) திருவடியைத் தியானஞ்செய்யாதவர்களுக்கு அருள்புரியாத சாமியாகிய கணேசப்பெருமான் எழுந்தருளவுந் தரிசித்தீர்களா? எ - று.

கபோதகம் - கருமபுறா அகன்றில் - ஆணன்றில்

'வாளைக்கயமே மகன்றில்களே'' எனப்பாடங்கொண்டு, ''வாளைமீன்கள் பொருந்திய கயத்தினமேவும் அகன்றில்களே'' எனப் பொருளுரைப்பாரு முளர் (௬)

ஐயன் மலர்ந்த கருணைமுக மனைய முகம்பெற் றீரென்று
வெய்ய களிற்றி னடிதாழும் விளங்கு முருவி னிறத்ததெனச்
செய்ய தளிரைக் கரங்கூப்புந் தேவ னடிபோன் மலர்ந்ததெனப்
பெய்யு மதுப்பங் கயமலரைப் பெரிது மிறைஞ்சிப் பழிச்சுமால்

(இ - ள்) எம்பெருமானுடைய மலர்ந்த கிருபாமுகத்தையொத்த முகத்தைப் பெற்றிருக்கின்றீர்களென்று, கொடியயானைகளின் காலகளைப் பணிவான், பிரகாசிக்கின்ற (இறைவர்) திருவுருவைப்போல நிறமுற்றிருந்ததென்று சிவந்ததளிர்களைக் கைகூப்புவான்; கணேசருடைய திருவடிபோல மலர்ந்துள்ளதென்று தேன் சொரிகின்றதாமரைமலரை மிகவும் வணங்கித் துதிபுரிவான் எ - று (௭)

மெழுகா ரழலுற் றெனவிளகி மெய்வே றாகி யிவ்வாறே
யெழுபே ரரவ மந்தரத்தா லிலகு மருளா ழியைக்கலக்கி
முழுதா னந்தச் சுவையமுத மொண்டு பருகி மாணாக்கர்
குழுவா தரிக்கு முக்கலனார் கோதி லிருக்கை யெனறடைந்தான்.

(இ - ள்) மெழுகானது பொருந்திய தீயிற்பட்டாற்போல (மனம்) இளகி, உடல் வேறுபட்டு இவ்வகையாகவே, எழுகின்ற பேரொலியையுடைய மந்தரத்தினால், பிரகாசிக்கின்ற கிருபைக்கடலைக் [கடைந்து] கலக்கி மிக்க ஆனந்தமென்னுஞ் சுவையையுடைய அமுதத்தைமொண்டு பானஞ்செய்து, மாணாக்கர் கூட்டத்தைக் காக்கும் முற்கலமுனிவருடைய குற்றமில்லாத ஆச்சிரமத்திற்போய்ச் சேர்ந்தனன். (தக்கனென்பவன்) எ - று (௮)

தாவில் வேத முதலான சகல பொருளு மிகத்தெளிந்து
தேவ தேவன் றிருவடியைச் சிறப்ப வுணர்ந்த வருந்தவத்தான்
மேவி யோகப் பெருவலியால் வேண்டு முருவங் கொளத்தக்கான்
பூவில் வேறு கதிரவன்போற் பொலிமுக் கலனை யெதிர்கண்டான்.

(இ - ள்.) கெடுதலில்லாத வேதமுதலிய எல்லாப்பொருள்களையு மிகுதியாகத்தெளிந்து தேவதேவனுடைய திருவடிகளை மேம்படத்தெரிந்த, அருந்தவத்தினாலும், பொருந்திய யோகத்தின் மிக்கவலிமையாலும் விரும்பிய வுருவங்களைக் கொள்ளத்தக்கவராகிய பூமியிலுள்ள வேறுசூரியனைப்போல விளங்கும் முற்கலமுனிவரை யெதிரேகண்டனன். (தக்கன்) எ - று (௯)

மன்னுங் கருணை விழிமூன்று மலர்க்கை நான்கும் பேரழகு
துன்னு மேனி யவயவமுந் துலங்கச் சிறப்பந் தாழாமே
பொன்னின் மணியி னுருக்கொண்டு பூசை புரியுங் கணபதியி
னன்னர் மலர்ச்சே வடித்துணையு நயப்ப நோக்கி யெதிர்பணிந்தான்.

(இ - ள்.) நிலைபெறுங் கிருபையையுடைய திருவிழிகள்மூன்றும், தாமரை மலர்போன்ற திருக்கரங்கள் நான்கும், மிக்க அழகும், நெருங்கிய பிற அவயவங்களும் விளங்க, சிற்பவிதிமுறைபிறழாது பொன்னாலும் நவமணியாலும் உருவஞ்செய்து பூசைபுரியுங் கணேசப்பெருமானுடைய நல்ல மலர்போன்ற சிவந்த உபயபாதங்களும் விரும்பித் தரிசித்து எதிரே வணங்கினன். எ - று. (எ)

தண்ட மெனவே விழுந்தபடி தரையி னெடிது கிடந்தெழுந்து [யத்
கொண்டன் மழையின் விழிபொழியக் கோடை யெனநெட் டுயிர்ப்பெறி
தொண்டு புரிந்து பரவசனாய்த் தொழுது நிற்ப வவனையெதிர்
கண்டு பெருகன் பினைவியந்து கருணை கூர்ந்து முனிச்செல்வன்.

(இ - ள்.) தண்டத்தைப்போல விழுந்தபடியே பூமியின்மேலே நெடுநேரமிருந்து (பின்னர்) எழுந்து, மேகமழையைச்சொரிவதுபோல, கண்கள் (நீரைச்) சொரியவும், கோடைபோலப் பெருமூச்செறியவும் பணிவிடைசெய்து, பரவசனாகிப் பணிந்து (தக்கன்) நிற்க, முனிச்செல்வராகிய முற்கலமுனிவர் அவனை யெதிரேபார்த்து மிக்க அன்பினைவியந்து கிருபைமிகுந்து. எ - று. (அ)

வேறு.

பெயரினைக் கியாது பிள்ளாய் பேணிவாழ் நகரம் யாது
நயமுற மனத்தின் வேட்ட நன்பொரு ளதுசொல் லென்றான்
றயவுறு முனிவன் செஞ்சொற் றண்ணமிழ் துண்டு தக்க
னயாவுதீர் தங்கை கூப்பி யனைத்தையுஞ் செப்ப லுற்றான்.

(இ - ள்) பிள்ளாய்! உனக்குப்பெயர்யாது? விரும்பிவசிக்கு நகரம்யாது? நன்மைபெற மனதிற்கருதிய நற்பொருள் யாது? அவற்றைச் சொல்கவென்றனர். கிருபைபொருந்திய முற்கலமுனிவரது செவ்விய சொற்களாகிய குளிர்ந்த அமிர்தத்தைப்பருகி, தக்கன் சோர்வகன்று அழகியகைகளைக்குவித்து (அவர்வினாவியவற்றிற்கு விடையாக) எல்லாவற்றையுஞ் சொல்லத்தொடங்கினன். எ - று. (கூ)

வேறு.

தேனொழுகு சோலைவளர் தேயங்கரு நாடம்
பானுபுர மவாழ்பதிய திகச்சிர சானும்
வானுயர்சி றப்புடைய வல்லவனென் றந்தை
கானொழுகு கூந்தலுடை யாள்கமலை நற்றாய்.

(இ - ள்) தேனொழுகுஞ் சோலைகள் வளரப்பெற்ற கருநாடதேயம் - அதின்கண் யான் வாழுநகரம் பானுபுரம் - அப்பானுபுரத்தில் அரசுபுரியும் மிக்க உயர்ந்த சிறப்புக்களையுடைய வல்லவராசனே என்பிதா - தேன்சொரியும் அளகத்தையுடைய கமலையென்பவள் என்னுடைய நற்றாய். எ - று.

நற்றாய் - ஈன்றதாய். (க0)

காட்சியொடு கணனுமுனா கேள்வியொடு காது
மாட்சிபுரி வாக்குமற வன்குற ளனுகி
மாட்சிசெய்பெ ரும்பிணியின் மூழ்கிமுடை நாற
நாட்செய்பவ மாம்பொழுதே நாயடியே னுற்றேன்.

பத்தியும ளித்தருளக வென்றுபணிந் தானப்
புத்திரனை நோக்கியுயா பூசுரனவி ளம்பும

(இ - ள்.) அத்தன்மையாகிய (சிறப்பினையுடைய) தேவரீருடைய திருவரு
ளால் உலக வாழ்க்கையையடைய விரும்பினேன் திருவிழிகளாற் கிருபைதந்து பத
திமையையுங் கொடுத்தருளவேண்டுமென்று (தக்கன்) வணங்கினன். அச்சிறுவனு
கிய தக்கனைச்சிறந்த முக்கலமுனிவா பாாத்துக்கூறுகின்றா எ - று

விழிக்கருணை - கிருபாநோக்கம பூசுரன - பூலோகதேவன , அாதணன. ()

வேறு

நீயே பெருமபாக கியமுடையை நீயே யுடமபின பயனபெறறோய்
நீயே வேணடுங் காரியத்தை முடித்துக் கொண்ட நிறைதவத்தோ
னீயே முக்கண் விநாயகனபா னிகரி லாத வனபுடையை
நீயே முறறத் துறநதோனு நீயே சீவன முத்தனுமே.

(இ - ள.) நீயேமிகக செலவததைப்பெறறவன. நீயே (மானுட) தேகத்தா
லாய பிரயோசனததை யடைந்தவன, நீயே செயயவேணடிய காரியததைச்செயது
முடிததுககொணட நிறைநத தவததையுடையவன; நீயே திரிநேத்திரங்களையுடைய
விநாயகக கடவுளிடததில ஒபபிலலாத அனபுடையவன நீயே முறறததுறநதவனும
நீயே சீவன முததனுமாயினை எ - று. (௧௬)

தேவ வருட மாயிரமபின செலல வரிய தவமுடித்தும
பாவ மகலத் தியானித்தும பலவே றுன பணிபுரிந்து
மேவ வெனசருத கெரிசனந்தா னீந்தா னிலலை யிமிாசுருபபு
பூவ ரிதழித் தொடைவேயந்த பொலமபூஞ சடிலத தேரமபன.

(இ - ள ) ஆயிரந் தேவவருடங்கள கழிபததக்க அருந்தவஞ்செயது முடித
தும், பாவமொழியுமபடி தியானஞ்செயதும, பலவேறு வகைபபட்ட பணிவிடைகளைச
செய்தும, ரீங்காரஞ்செயயும வணடுகளபொருந்திய அழகிய கொன்றைமலாமாலை
யணிந்த அழகிய பொனனிறமபொருந்திய சடையையுடைய விநாயகககடவுள எனக
குப் பொருந்தத் தரிசனங்கொடுத்தானிலன எ - று

மானுடவருடம ஒன்றுகொணடது பிதுராகட்கோா தினமென்றும அவ்வகைய
தினங்களாலாய வருடமொன்று கழிவது தேவாகடகோா தினமென்றுஞ் சொல்லப்
படும். அவவகைய தினங்களாலாய வருடததைத தேவவருடமெனபா (௧௭)

வேறு

மூவாக ளுலகத் தாாகக முத்தொழில புரியு மாபோல
மூவாக டமககுத தானே முத்தொழில புரியா நின்ற
மூவாகண முதலவனை முதலிலா முதலவன பாத
மூவகைக் கரணத் தானு முயங்கினோ நினையா ரொப்பாா.

(இ - ள ) (பிரமனாதி) மூாததிகள மூவரும உலகத்தாருக்கு (சிருட்டிமுதலிய)
முத்தொழிலகளைச்செயயும வகைபோல, (அப்பிரமனாதி) திரிமூர்த்திகளுக்கே (சிருட்
டியாதி) முத்தொழில்களைச செய்கின்ற திரிமூாத்திகளுமயகனுகிய ஆதியில்லாத முதற
கடவுளாகிய கணேசபபெருமானுடைய திருவடியை (மன வாக்கு காயமென்னும்) திரி

கரணங்களாலும் (முறையே) சிந்தித்துத் துதித்துப் பணிந்தனே. உனக்குச் சமான மாவார் யாவர்? (ஒருவருமிலர்) எ - று.

மூவர்கள் - பிரமன் விஷ்ணு உருத்திரன். முத்தொழில்-ஆக்கல் காத்தல் அழித்தல். மூவகைக்கரணம் - மனம் வாக்கு காயம் (௧௮)

அந்தணர்க் கழலின் வண்ண மாகியே யாகும் யோகர்க் கெல்லா
மந்திர வண்ண மான வள்ளலென் கணேசுற் றுங்குன்
முந்துறத் தோற்றித் தெல்லா மொழிந்தனை யுதவுங் கைம்மா
றெந்தெனத் தழுவிக் கொண்டங் கிலகுட லிறைவ னிட்டான்

(இ - ள்) வேதியர்களுக்கு யாகாக்கினியின் வடிவமாகி, யோகஞ்செய்வோர் யாவர்க்கும் மந்திரவடிவமாகிய கணநாதப்பிரான் என் கண்ணெதிரே பொருந்தினது போல, உன்முன்னே பிரசன்னமானதை முழுவதுங் கூறினை. (உனக்குயான்) செய்யத்தக்க பிரதி யுபகாரம் யாது? என்று, (முக்கலமுனிவர் தக்கனுடைய) விளங்குகின்ற உடலைத் தடவினார் எ - று.

வள்ளல் - வரையாது கொடுப்போன். எந்து - எது என்றதன் விகாரமென் றுரைப்பது, தெலுங்குபாஷையிலிருந்துவந்த திசைச்சொல்லென்றுரைப்பது கொள்க (௧௯)

அளவளா யிருந்த பின்றை யக்கர மொன்றே யாகி
வளமெலா மருளே ரம்பன் மந்திரந் தக்கன் காதிற்
கொளவுப தேசித் தெண்ணுங் கொள்கையு மருளிச் செய்தா
னிளவலைக் காணு ணாடி யெய்தினள் கமலை தானும்.

(இ - ள்) (இவ்வாறு) அளவளாவியிருந்த பிறகு, (முக்கலமுனிவர்) எழுத்தொன்றேயாகி எல்லா நலத்தையுங் கொடுக்கத்தக்க விநாயகப்பெருமானுடைய மந்திரத்தை, தக்கன்செவியிற்கொள்ளும்படி உபதேசித்து, அதனைக் கணிக்கும் முறைமையையும் அருளிச்செய்தனர். கமலையென்பவள் தன் புத்திரனைக் காணுதவளாகித் தேடிக்கொண்டு (அங்கு) வந்தனள் எ - று.

அளவளாவல் - கலந்துபேசல் முதலியன. "மந்திரம்" என்றதை "அக்கர மொன்றேயாகி" என்றதால் ஏகாட்சரமந்திரமெனக். (௨0)

வணங்கினள் முனிவன் பாதம் வழுத்தினள் விருடி நோக்கி
யணங்கனை யிவனு நீயு மருமறை யளந்து மெட்டாக்
குணங்குறி கடந்த நாதன் கொழியருட் கிலக்க மானீர்
பிணங்குபல் வினையும் வென்றீர் பெறுவதென் னினிமே லென்றான்.

(இ - ள்) முக்கலமுனிவருடைய திருவடியைப்பணிந்து துதிசெய்தனள். முக்கலமுனிவர் (கமலையைப்) பார்த்து, பெண்ணே! இச்சிறுவனும் நீயும் (ஆகிய இருவரும்) அரிய வேதங்கள் தேடியுங் கண்டறியாத குணங்குறிகள் கடந்த விநாயகக்கடவுளுடைய மிக்க திருவருளுக்கு இலக்கானீர்கள், துன்புசெய்யும் பலவினைகளையு மொழித்தீர்கள்; இனிப்பெறவேண்டியது யாதுளது? என்று கூறினார். எ - று.

வணங்கினளென்பது முற்றெச்சம் (௨௧)

மந்திர மான வேத வன்னனின் மகற்குச் சொன்னேனு
சிந்தையிற் கணித்து முற்றிற் றிகிரியோன் றிருட்டி மன்மே

விந்திரன் முதலோ ரெண்ண விருந்தர சாளும் வாழ்க்கை
தந்திடு மிறைவ னென்று சாற்றின னிதுவு மேலோன்.

(இ - ள்) (மகா) மந்திரமாகிய ஏகாட்சர மந்திரத்தை உன்புதல்வனுக்குபதேசித்தோம் அவன் மனத்தாற்கணித்து முடிப்பானாயின், பூமியின்மேலே ஒரே சக்கரத்தைச்செலுத்தி, இந்திரன்முதலிய தேவர்களும் (அவன் போகத்தை) எண்ணும்படி வீற்றிருந்தரசாளவான தலைவனாகிய கணநாதப்பெருமான் நல்வாழ்வுதருவான் என்று, மேலோனாகிய முத்கலமுனிவன் இதனையுங்கூறினன் எ - று (௨௨)

என்றுரை யாடும் வேலை யிலங்குவேல் வீமன் றாழ்ந்து
கன்றுநோய் முனிவன் மெய்யிற் காற்றினான் முழுதுந் தீர
வன்றுவல் விரைந்தே ரம்ப லவனெதிர் தோன்ற வன்னோன்
றொன்றுசெய் தவம்யா தென்னச் சொல்லுவான் காதி மைந்தன்.

(இ - ள்) என்றிவ்வாறு சொல்லுங்காலத்தில், பிரகாசிக்கின்ற வேற்படைதாங்கிய வீமராசன்பணிந்து, துன்புசெய்கின்ற நோயானது முத்கலமுனிவனுடைய உடற்காற்றினால் முழுதுமொழியவும், அக்காலத்தில் விநாயகக்குரிசில் அவனுக்கெதிரே மிகவும் விரைந்து பிரசன்னமாகவும் அந்தத் தக்கனென்பவன் பூர்வத்திற்செய்த புண்ணியம் யாது? என (விசுவாமித்திரமுனிவனை)க்கேட்க, காதிராசன் புதல்வராகிய விசுவாமித்திரமுனிவர் கூறுகின்றார். எ - று. (௨௩)

முத்கலர்த்தக்கனுக்குபதேசித்தபடலம் முற்றிற்று

ஆகந் திருவிருத்தம் - ௧௨௭௯

## வல்லாளன்வேதனை நீங்குபடலம்.

மந்தி யுகள மலர்செழுந் தேன் மழையிற் பொழியும் பொழிலுடுத்த
சிந்து தேயந் தனில்வளத்தாற் சிறந்த பல்லி யெனும்புரத்தில்
வந்த வசியன் கலியாண னென்னும் பெயரான் மனைகற்பி
னிந்து மதியோ டறம்பலவு மியற்றி யினிது வாழுநாளில்.

(இ - ள்) மந்திகள் பாய்தலாற் பூக்களிலுள்ள செழியதேனானது மழையைப்போலச் சொரிகின்ற சோலைசூழ்ந்த சிந்துதேசத்தில், பலவளங்களாற் சிறப்புற்ற பல்லிபுரத்திலே பிறந்த கலியாணனென்னும் பெயரையுடைய வைசியன் தன்மனைவியாகிய கற்பினையுடைய இந்துமதியென்பாளுடன் பலதருமங்களையுஞ்செய்து இனிதாகவாழுங்காலத்தில் எ - று. (௧)

இந்து மதியென் பாள்வயிற்றி னீட்டுந் தொல்லைத் தவக்குறையான்
மைந்த னொருவன் வந்துதித்தா னணிகன் சால வினைபலவுஞ்
சிந்தை மகிழ வினிதாற்றிச் செம்பொன் முதலாம் பலபொருளு
மைந்த னுளாக் குளந்தழைப்ப வளித்து நாளும் வினைபுரிந்தான்.

(இ - ள்) இந்துமதியென்பவள் வயிற்றில், தான்தேடிய பழையதவக்குறை வினையுடைய புதல்வனொருவன் வந்துதோன்றினன். (அதனால்) கலியாணவசியன்

மிக்க பலசெயலகளையும மனஙகளிககுமபடி இனிதாகச்செயது, செமபொன்முதலா கிய பலபொருளகளையும வேதியாகளுககு மனமடஙகுமபடி தானஞ்செய்து தினந தோறும நறகருமஙகளைச செயதனன. எ - று (௨)

நனறு மனையி னலஙகரிதது நாணமூன றுன நறறினத தி
லொனறுங கணிதா வலலவனென றுரைபபக கேடடு வலலாள
னென்று பெயரிட டானவசிய னிருநது தவழநது நடநதறிவு
துனற வெழில்சோ வலலாளன சுடாவெண மதிபோல வளாநாளில்.

(இ - ள) அவ்வைசியன் மிகுதியும வீட்டில் அலங்காரததைசசெயது மூன் றுநதினமாகிய நாளில, பொருநதிய சோதிடாகள வலலவனெனறு சொலலககேடடு (அககுழநதைககு) வலலாளனெனறு பெயரிடடான (முறையே) உட்காாநது தவழநது நடநது அறிவுடைய அழகு மிகக வலலாளன பிரகாசிககினற தாவளயமான சநதிரன போல வளருஙகாலததில எ - று (௩)

வே று.

புறுவின மலகிய பொனனணி மாடனு
சிறுருட னுடடயா செவவியி னீஙகிச
சுறுமலி பூநதடந துனன வெபூநத
விறனமலி சோலையி லெய்தின னோாநாள.

(இ - ள) புறுவின தொகுதிமிகக பொனனாறசெயத அழகிய மாளிகையி னினறுஞ சிறுவாகளுடன நீங்கி ஒருநாள விளையாடலசெயயுஙகாலததில் மகரமீன கள மிகக மலாததடாகஙகள பொருநத வளாநத தேனகூடுகள மலிநத சோலையில் அடைநதனன. எ - று

செவவி - காலம சுறு - ஓாமீன இறால - தேனகூடு (௪)

நலங்கிளா முனவினை நண்ணலு மாஙகோ
ருலங்கொடு வைததொரு கொமபின னென்றே
யலஙகிய தீமபுன லாடடி நறுஙகே
ளிலங்கலா தூய்பபணிந தேததி யகனறுன்.

(இ - ள) நனமை விளஙகும பூர்வ புண்ணியமடையவும், அவவிடததிருநத ஓா உருணடகல்லைக கொண்டுவநது வைத்து ஏகதநதனாகிய விநாயககடவுளேயெனறு, (அதனை) அசைகினற மதுரமாகிய நீராலபிடேகிதது, நலலதேனுடன பிரகாசிககும மலர்களாலருச்சிதது வணஙகித் துதிதது நீஙகினன எ - று

ஒருகொம்பினனெனறது விநாயககடவுள கயமுகனெடு போர்புரிகையில் அவன எவவகையாயுதததாலு மிறவாது வரமபெறறிருபபது கருதித் தமதுவலக் கொமபைமுரிததெரிந்தனரெனபது சரிதமாதலின. (௫)

மற்றைய நாளுந மகாருட னேகிப
பறறின் மலாபபசும பநதரு மிடடு
முறறின மெனன முடித்தன னணைற
கறறபி லாவிளை யாடடரும பூசை.

(இ-ள்) (அதன்பின்னிட்ட) மற்றைத்தினத்திலும் சிறுவர்களுடன் சென்று மனப்பற்றுடன் பசியமலர்களாற் பந்தருமிட்டு முன்னாளிற்செய்ததுபோலவே விளையாட்டாலாகிய அரியபூசையை விநாயகக்கடவுளுக்குக் குற்றமில்லாது செய்துமுடித்தனன். எ-று. (௬)

வேறு.

இன்ன வாறுவல் லாளன்பூ சையி யற்று நாளினி லோர்தினந்
தன்னை நேருமக் காரின வாழ்வு தங்கி ருமபதி நின்றுபோ
யன்ன மாடும லர்த்தடங்க ளணிந்த சீதள மார்ந்துகார்
மின்ன லாவிய சோலை யெய்திமி குஞ்சி றார்களை யேவினான்.

(இ-ள்) இந்தவகையாக வல்லாளன் பூசைசெய்து வருநாளில் ஒருநாள் தனக்கொப்பான புத்திரர்களுடன் வாழ்ந்தங்கிய பெரியநகரத்தினின்றும் புறஞ்சென்று, அன்னங்கள் மூழ்கும் பூந்தடாகங்கள் அழகுற்றுக் குளிர்ச்சிபெற்று மேகமும் மின்னலுங்கலந்த சோலையையடைந்து, மிக்கசிறுவர்களை (தொழில்செய்ய) ஏவினான் எ-று.

பலர்கள் காவண நாட்டி னார்பலர் பல்வி யங்களி யம்பினார்
சிலர்செ ழுங்கனி யீட்டி னார்சிலர் தேம லர்த்தொடை யாக்கினார்
சிலர்செ ழும்புன லுய்த்த னார்சில ராணி லந்துமிய்த் தார்சிலர்
இலகு சாந்தமு ரைத்த னார்சில ரின்ன ராயினர் யாவரும்

(இ-ள்) பலர்பந்தலிட்டனர், பலர்பலவகை வாத்தியங்களை முழக்கினர். சிலர் செழுமைதங்கிய பழங்களைச் சேகரித்தனர், சிலர் தேன் சொரியும் மலர்மாலைகள் தொடுத்தனர்; சிலர் மலர்களும் செழிய நீருங்கொண்டுவந்து கொடுத்தனர் சிலர் பஞ்சகவ்வியங்களைச் சேகரித்தனர், சிலர் விளங்குகின்ற சந்தனமரைத்தனர்; எல்லாரும் இவ்வகையாக (வல்லாளனுடைய கணேசபூஜைக்கு உபகரணங்களைச் சித்தஞ்) செய்பவரானார்கள் எ-று. (௮)

நிறைக யப்புன லாடி மெய்யில்வெண் ணீறு பூசிவல் லாளனு
நறைம லர்த்தழை யால யத்தினை நண்ணி நாதனை யன்பினோ
டுறையின் மென்புன லாட்டி வண்டுமு ழங்கு மாலைய ணிந்துபின்
குறைவி லுண்டிக ளுங்கி யங்கைகு வித்தி றைஞ்சியி ருந்தனன்.

(இ-ள்) வல்லாளன் நிறைந்த ஆழமாகிய நீரின்மூழ்கி, உடம்பிற்றிருவெண்ணீற்றினை (உத்தூளனமாக)ப்பூசி, தேனொழுகும் மலர்களால் மிக்குவிளங்குந் திருவாலயத்தை யடைந்து விநாயகக்கடவுளை அன்புடன்முறைப்படி மெல்லிய நீரால் அபிடேகித்து வண்டுகளொலிக்கு மலர்மாலையைச் சாத்திப்பின்னர் மிகுதியாகிய நிவேதனஞ்செய்து அழகிய கரங்களைக்கூப்பி வணங்கியிருந்தனன். எ-று.

வல்லாளன் ஸ்நானஞ்செய்து திருவெண்ணீறு சண்ணித்துத் திருவாலயமடைந்து அபிடேகித்து மலர்மாலைசூட்டி நிவேதித்து நமஸ்கரித்திருந்தனனென்பது கருத்து. (௯)

காலை யுண்டிமெ யோடு செவியுண் டிக்க டந்து வெங்கதிர் சாயுந்திடும்
வேலை யுங்கிர கத்தின் மைந்தர்கள் மேவு றுமையி லின்றவ
ரால மென்னவ முன்று போயகக் கவியா ணுக்கறை வார்கண்ணின்
சீல மைந்தனொ மைந்த னைக்கொடு சென்று மீண்டில னின்னமும்.

(இ - ள்) காலையுணவுடன் உச்சிக்காலவுணவுமொழிந்து, வெவ்விய கிரணங்களையுடைய சூரியன் (மேற்கடலிற்) சாய்கின்ற(மாலைக்) காலத்திலும் பிள்ளைகள் வீட்டில்வாராமையால், பெற்றோர்கள் விஷத்தைப்போலக் கோபித்துச்சென்று கலியாணனுடன் சொல்லுவார்கள் உன்னுடைய நல்லபுத்திரன் எங்களுடைய பிள்ளைகளை யழைத்துக்கொண்டுபோய் இதுவரையில் வந்தானில்லன். எ - று (௪௦)

உனக்கு மைந்தனை நீயொ றுத்திலை யொறுத்தி டாயெனி லியாங்களே
நினக்கு மின்னலு றப்பி டித்துநெ ரேலெ னத்தெறு வாமலத்
தனற்கொ ழும்படை மன்ன வற்கறி வித்து நின்னைப் கணப்பதித்
தனக்க யற்புலத் தோட்டு வாமிது சத்த மென்றுக லாய்த்தனர்

(இ - ள்) உன் மகனாகிய வல்லாளனை நீ தண்டிப்பாயாக (அவ்வாறு நீ) தண்டிக்காவிடின் நாங்களே உனக்குத் துன்பமுண்டாகும்படி (அவனைப்) பிடித்து விரைந்து தெறுவோம் அல்லது தீயைச்சிந்தும் வெவ்வியபடையையுடைத்தாகிய அரசனுக்குணர்த்தி, உன்னை இவ்விசாலமான நகரத்திற்குப் புறத்திலேயோட்டிவிடுவோம். இது நிச்சயமென்று வருத்தினார்கள். எ - று (௪௧)

நகரு ளாரனை வோரு மின்னணம் நைய வோதலு மோய்வென
வகனி லாவிய கோப மூளவ் மூன்று கண்கள்சி வப்பெழ
மிகவு நீளொரு தண்ட மேந்துபு வேக மோடுந டந்துபோய்ப்
புகரி லாணிறை பூசை யாற்றுபு லத்தை முட்டினன் னெட்டியே

(இ - ள்) நகரவாசிகளெல்லோரும் இவ்வகையாக வருந்தும்படி சொல்லவும் விரைவில் மனத்திலுண்டான கோபமானது பற்றியெரியக் கண்கள் செம்புண்டாக, மிகவும் நீண்டதோர் கோலைத்தாங்கி விரைவாக நடந்துசென்று, குற்றமில்லாத வல்லாளன் செய்கின்ற (பத்திநிறைந்த விநாயக) பூசைசெய்யும் இடத்தையடைந்து சேர்ந்தனன் எ - று (௪௨)

விண்டு தேன்வழி மென்ம லர்த்தளிர் பெய்ந்த பந்தரை வீட்டிரு
ண்டரா லறி யாவி நாயக வள்ள லார்பா மூர்த்தியை
மிண்டி னோடுமெ டுத்தெ றிந்துவெ ருக்கொ ளாமைந் தனையன் பறத்
தண்டி னாற்கறை சோர மொத்தினன் சண்டன் மேவரு காட்சியான்

(இ - ள்) இயமனையொத்த தோற்றத்தையுடைய கலியாணனென்போன் வாய்விண்டு தேன்சொரியும் மெல்லியமலர்களாலும் தளிர்களாலும் மேய்ப்பெற்ற பந்தலை வீழ்த்தினன், தேவர்களாலறியப்படாத விநாயகப்பெருமான் பொருந்தியுள்ள மூர்த்தியை மத்தாலெடுத்தெறிந்து, பயங்கொண்ட மகனாகிய வல்லாளனை ஆசை யகலத்தண்டத்தினால் உதிரமொழுகும்படி புடைத்தான் எ - று (௪௩)

அடித்தும் வெப்பம றாமை யாற்கலி யாண னானும்வல் லாளனைப்
பிடித்தி றுக்கிம ரத்தி னோடுபி ணித்த னன்பொறை நீர்மகன்
விடுத்தி டென்றையெ னப்ப ணிந்தனன் வெய்ய பாவியி ரங்கிலன்
மடித்த றுவாயி தழ்த்தி னன்று நின்று மலங்க வன்சொனி கழ்த்தினன்.

(இ - ள்) கலியாணன் (அவ்வாறு) அடித்தும் கோபமொழியாமையால், பயப்படுகின்ற வல்லாளனைப்பிடித்து இறுக்கி மரத்துடன்கட்டினன் குற்றமில்லாத வல்லாளன் என் பிதாவே! என்னைவிட்டு விடுவாயாகவென்று வணங்கினன் கொடிய

பாவியாகிய கலியாணன் மனமிரங்காமல் வாயைமடித்து உதட்டைககடிதது எதிர்நின்று வருந்தும்படி கொடுஞ்சொற்களைக்கூறினான். எ - று. (கஅ)

முட்டி லாமலவி நாயக னபணி முற்றி னுய்க்கவ னேயினிக
கட்ட விழ்த்திடுஞ் சோறு நீருங் கரத்தின வேட்டவு நல்கிடு
மொட்டி யுனனுயிர் காககு மிலலினு ளுறுதொ ழிநதிடி னுய்நததனை
யெட்டின மாண்டனை யென்று கூறின னேநதி லானின கனறனன்.

(இ - ள்.) இடையூறிலலாமல விநாயகபூசையை முடிதத உனககு அவ்விநாயகனே இனிககட்டவிழ்ப்பான, சோறும நீரும விரும்பியனவுங கையிற்கொடுபபான; தொடர்ந்து உனனுயிரைககாபபான வீட்டிறகு வராதொழிநதாற பிழைததாய, (அவவாறினறி) வநதால இறநதாய எனறு கூறி அயலானைபபோல நீஙகிசசெனறான எ-று.

முககண யானைமு கதத வாநினை முறறு நமபிய நாயினேன
றுகக மாறநிடின விககி னஙகடு ரககு நாதனெ னுமபெயா
தகக தோசுடா கால மாறினுஞ சாாநத வனபாத மககெலாந
தொகக பேரருண மாறி லாயெனச சொலலி மைநதனி தோதுவான்.

(இ - ள்) மூனறு திருவிழிகளையுடைய யானைமுகமவாயநத விநாயககடவுளே! தேவரீரை முழுவதும நமபிய அடியேன துககமனுபவிததால் (தேவரீருககு) விககினஙகளை யொழிககும விககினராசபெருமானெனனும பெயா தகுதியுடைய தோ? சுடாகாலமாறினுழும (தேவரீரைச) சாாநத அடியவாகளுககெலலாம பேரருள் புரிதலில மாறுபடுதலில்லாதவரே! எனறு கூறி, வலலாளன (மேலும) இதனைச சொல்கினறான். எ - று

“சுடாகால மாறினும” எனறதறகு, இருசுடாகள காலமாறிததோனறி மறையினும எனறுவது, சுடாகளும காலமும நிலைமாறினுலும எனறுவது பொருளகொளளலாம (கசு)

வேறு.

யாவ னொருவ னாலயததை யிறுததான கணேசா திருவுருவை
யாவ னொருவ னெடுததெறிநதா னெளியே னுடலெயத தோாபெருக
யாவ னொருவன பிணிததிட்டா னிறைவன றனககு நிநதனைகள
யாவ னொருவ னெணணுமு மிசைததா னநதக கொடுமபாவி

(இ - ள்) எவனொருவன (யான கணேசபபெருமானுககியற்றிய) ஆலயததை யழிததனனே, எவனொருவன கணநாதபபெருமானுடைய திருவுருவை யெடுததெறிநதனனே, எவனொருவன அடியேனுடலில உதிரமபெருகுமபடி கட்டிவிட்டனனே, எவனொருவன யோசியாமறபடி எமபெருமானுககு நிநதனைசொலலினனே அநதக் கொடிய பாவியானவன எ - று

இதுமுதலிரணடு பாடலகள குளகம.

இசசெயயுளிலுளள கொடுமபாவியெனனு மெழுவாயவருஞ் செய்யுளிலுளள பிழையுறுகவென்பதைப பயனிலையாககொணடது. (கள)

குருடாய் மூகை யாய்வெதிராய்க குறளா யுருவிற் கறைசீயும
பெருகா நிறதும புணணுமாயப பிழை யுறுக பெருகுமதத

தொருதே வனுக்கு நானடிமை யுண்மை யாமே லெனச்சபித்திட்-
டுருகா நின்ற தன்னுளத்தி னுலவை வேய்ந்தை யுறப்பிணித்தான்.

(இ - ள்.) மதம்பொருந்தும் விநாயகப்பெருமானுக்கு நானடிமைப்பட்ட துண்மையாகில், அவன் குருடனும் மூங்கையாயும் செவிடாயும் குள்ளனும் தேகத்தில் உதிரமுஞ்சீயும் பெருகவொழுகும் புண்ணுடையவனுமாகிக் கனப்படையக்கடவன் என்று சாபமிட்டு, உருகுகின்ற தன் மனத்தில் உலவை [கிலுகிலுப்பை] மாலையணிந்த விநாயகப்பெருமானைப் பொருந்தப்பதித்தனன் எ - று. (௧௮)

உலவை - புலிநகக்கொன்றை அல்லது விலங்கின் கொம்பெனினுமாம்.

உடலே கயிற்றாற் கட்டுண்ட துள்ளத்துக் கதுவின் றெனத்தேற்றப்
படாதீ ரமரர் பெருமானைப் பற்றிப் பிணிப்பா மெனவன்பின்
மிடலாற் பிணித்துத் தன்னுயிரை விளிப்ப முயன்ற சிறுவனெதிர்
கடமா முகவன் றரியாதோர் காமர் மறையோ னெனப்போந்தான்.

(இ - ள்) தேகமே கயிற்றினால் கட்டுப்பட்டது மனதுக்கு அசத்தையில்லையே ஆகையால், குற்றமற்ற தேவர் தலைவரான கணேசப்பெருமானைப்பிடித்து (மனதிற)கட்டுவோமென்று, அன்பின் வலிமையாற் பிணித்துத் தன் பிராணனைவிட முயற்சி செய்த சிறுவனாகிய வல்லாளனுக்கெதிரே, மதஞ்சொரியும் யானைமுக விநாயகக்கடவுள் மனந்தாளாது அழகிய ஓர் வேதியராக எழுந்தருளினார் எ - று. (௧௯)

பருதி யெழலும் வல்லிருளும் பனியு முடைந்தா லெனமுந்நூன்
மருமம் புரள வருமறையோன் வடிவு நோக்கி வல்லாள
னிருகைப் பிணிப்பு முடற்புண்ணு மிமைக்கு மளவின் விட்டகலப்
பொருவி லிறையே யிவனென்று பொருக்கென் றிறைஞ்சி யிதுசொன்னான்.

(இ - ள்) சூரியன் உதயஞ்செய்யவும் மிக்க இருளும் பனியுமொழிந்தாற்போல, உபவீதமான முப்புரிநூல் மார்பிற் புரளுகின்ற வேதியனுடைய உருவத்தைப் பார்த்து, வல்லாளன் தன் இருகரங்களைக் கட்டியகட்டும் தேகத்திலுள்ள புண்ணும் விநாடிப் பொழுதில் விட்டொழிய, இவரைத்தானே சமானமில்லாத விநாயகக்கடவுளென்று விரைந்துபணிந்து இதனைச் சொல்லினன் எ - று.

வல் - வலிமை. ஈண்டுமிகுதியை யுணர்த்தியது. (௨0)

வேறு.

தந்தை தாய் சுற்ற முற்றுங் கதியென் றடிய னென்றும்
யித்தலை யகத்தின் வேறே யிலையெனா வின்று ணர்ந்தேன்
முந்துல கனைத்துந் தோற்றி முடித்தருள் முதல்வ மூவா
வந்தண வென்ற மைந்த னந்தணன் றழுவிச் சொல்வான்.

(இ - ள்) அடியேனுக்கு இவ்வுலகத்திலே பிதா மாதா உறவினர் முதலிய யாவுந் தேவரீரேயல்லாமல் வேறே யொருவருமிலர் என்பதை 'யிப்பொழுதுணர்ந்தேன் முற்பட்ட உலகங்களை யெல்லாம் படைத்தழித்தருளும் முதல்வனே! அழியாத அந்தணனே! என்று வல்லாளன் கூறினன். அந்தணர் (வடிவாக வந்த கணேசப்பெருமான்) தழுவிச் சொல்லுகின்றார் எ - று.

தோற்றி முடித்தருள் என்றதை "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால் "காத்து" எனவும் வருவிக்கப்பட்டது. (௨௧)

நமக்கப ராதஞ் செய்த நவையினா நமக்குப பத்தா
தமக்கப ராதஞ் செய்த நறுகண ரிவாக ளெல்லாங்
குமைக்குமவெந் நிரையத் துன்பங் கூர்வர்கண் மறுமை யிம்மை
யிமைக்குமுன் முடிவு காணு விடுமைபெறா யுழப்ப ரற்றால.

(இ - ள்.) நமக்கு அபராதஞ்செய்த குற்றமுடையவர்களும், நமக்கு அன்பராயுள்ளவர்களுக்கு அபராதஞ்செய்த அஞ்ஞானமக குணமுடையவர்களுமாகிய இவர்கள் யாவரும் குவிகின்ற கொடிய நரகவாதனையை மிக்கடைவார்கள், மறுமையிலும இம்மையிலும விரைவில் ஒழிதலில்லாத துன்ப நோயால் வருந்துவார்கள் எ - று.

இருவர்க ளிடத்துங் குற்ற மியைத்தலை யானுற் றென்னை
வெருவர விட்ட சாப மெய்ப்பயன் விளைத்த மைந்தா
பொருமுத லொழிந்து நீயும் போக்கறு வரங்கள் கேளாய
தருகுது மென்றான் கேட்டு நகைமுந்து வல்லாளன் சொல்வான்.

(இ - ள்) (யானும் என் அன்பனுமாகிய) இருவர்களிடத்துங் குற்றஞ்செய்த (உன் தந்தையாகிய) வல்லாளனுக்கு பெரும்பீதி அச்சமுண்டாகும்படி (நீ) கொடுத்த சாபத்தின் உண்மைப்பயனை உண்டாக்கினாய் மகனே! நீயும் துன்பமடைதலொழிந்து அழியாத வரங்களைக் கேட்பாயாக (அவற்றைத்) தருவோமென்று (விநாயகக்கடவுள்) கூறினார். வல்லாளன் (அவ்வார்த்தையைக்) கேட்டு மனங்களித்துச் சொல்கின்றான் எ - று. (உ௩)

தாமரை பழித்த நின்பொற் றாளிணை நீங்கா வன்பே
யேமுற வடியேற் கீக வெம்பிரா னெந்த நாளுந்
தோமற விங்கே வைகத் தொழுபவர்க் கெல்லாம் வேண்டுங்
காமமு மளிக்க வென்றான் கருணையின் மறையோன் சொல்வான்

(இ - ள்) செந்தாமரை மலரைவென்ற சேவடியுடைய அழகிய உபயபாதங்களிற் பிரியாத அன்பினையே அடியேனுக்கருளுக எம்பெருமானே! எந்தக்காலத்துங் குற்றமற இவ்விடத்திலிருந்து நமக்க (சேவித்து) வணங்குபவர்கட்கெல்லாம் வேண்டிய இஷ்டசித்திகளைக் கொடுத்தருள்கவென்ன (வல்லாளன்) கூறினான். வேதியனாக வந்த விநாயகக் குரிசில் பெருமையுடன் சொல்கின்றார் எ - று. (உ௪)

உனக்குநம் பாதப் போதி லொழிதரா வன்பு தந்தோ
மென்றுநின் பெயர்முன் னாகப் பெயரிட்டிவ் வுலகம் போற்றத்
தனக்குறு வரங்கள் கொள்ளத் தங்கியிங் கிருந்துங் கண்டாய
மனக்களிப் பொடுமண் விண்ணும் வந்துநம் மைப்பூசை செய்க.

(இ - ள்) உனக்கு நம்முடைய திருவடித்தாமரையில் (ஒருபொழுதும்) நீங்காத அன்பினை யளித்தோம் எமக்கு உன்னுடைய பெயரை முதலாக (வல்லாள கணேசனென்று) பெயரிட்டு இவ்வுலகமானது துதித்தற்காக உனக்குவேண்டிய வரங்களைப்பெற இங்குத் தங்கியிருப்போம் மனக்களிப்புடன் பூலோகமுந் தேவலோகமும் எம்மை வந்து பூசைசெய்க எ - று. (உ௫)

இங்குறு நமது மூர்த்தி யாவரே தெரிசித் தாலு
மங்கவர் தமக்கு வேட்ட வரும்பொரு ளெளிதுண் டாகு

திங்கணல் விழாவே யாட்டை விழாத்தின விழாவு மீங்கே
மங்கல மாக வுண்டா மைந்தனே யறியென் றேத்தி

(இ - ள்) இங்கே பொருந்திய நம்மூர்த்தியை எவர்தாந் தரிசித்தபோதி லும், அவர்களுக்கு விருப்புற்ற அரிய பொருள்கள் சுலபமாக உண்டாகுக. நல்ல மா சோற்சவமும் வருடோற்சவமும் நித்தியோற்சவமும் இவ்விடத்தில் மங்கலகரமாக உண்டாகும் மகனே! அறிகவென்று (விநாயகக்கடவுள்) உரைத்தருளி எ-று. (௨௬)

வேதிய ருருக்கப் போந்த விநாயகர் மூர்த்தி யாகி
மூதுல கனைத்தும் போற்ற முகிழ்ப்பெருங் கருணை யோடு
மேதக விருந்தா ரங்கு விளம்பிய காதை கேட்டோர்
கோதறப் படித்தோ ரெல்லாங் குறைவில்செல் வத்த ராவார்.

(இ - ள்) பிராமணவடிவாக எழுந்தருளிய விநாயகக்குரிசில் மூர்த்தியாகி, பழமையாகிய உலகமுழுதுந் துதிசெய்ய அரும்புகின்ற பெருங்கிருபையுடன் அங்கு மேம்பட வெழுந்தருளி யிருந்தனர். கூறிய இச்சரித்திரத்தைக் கேட்டவர்களும், குற்ற மறப் படித்தவர்களுமாகிய யாவருங் குறைவில்லாத செல்வத்தையுடையவர்களாவார் கள் எ - று. (௨௭)

வெற்றிவேல் வீம நக்கன் மேவுற்ற பிறவி சொற்று
முற்றவப் பிறப்பின் மைந்த னொருவல்லா ளனென்போன்
முற்றிய கணேசர் தம்மான் முத்திசேர் தன்மை கேளென்
றற்றமில் விசுவா மித்தி ரனவற் கறைய லுற்றான்.

(இ - ள்) வெற்றி பொருந்திய வேற்படையேந்திய வீமராசனே! தங்களு டைய பொருந்திய பூர்வஜன்மத்தைச் சொன்னேன்; பொருந்திய அப்பிறவியில் இளை யோனாகிய வல்லாளனென்பவன் (அன்பு) முதிர்ந்த கணேசமூர்த்தியால் முத்தியடைந் ததையுங் கேட்கவென்று, சோர்வில்லாத (தவத்தையுடைய) விசுவாமித்திர முனிவர் வீமராசனுக்குச் சொல்லலாயினர் எ - று. (௨௮)

வல்லாளன் வேதனைநீங்குபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௩௫௦

## வல்லாளன் முத்தியடைந்தபடலம்.

சொல்லாதி யின்று தொட்டொண் ணாதா
னல்லேலே யொருமூர்த்தி கொடி ருப்ப
வல்லா ளன்மகிழ்ந் துமுன்போ
லல்லா தரவாற் பணிவு யந்தான்.

(இ - ள்) வாக்கு முதலியவற்றினால் பற்றமுடியாத கணேசப்பெருமான் அன்றிரவிலேயே ஒருமூர்த்தியாக வெழுந்தருளி யிருப்ப, வல்லாளன் மனக்களிப்புற் றுப் பண்டுபோலவே நல்லாசையுடன் பூசைசெய்தலை விரும்பினன் எ - று.

சொல்லாதி என்றது வாக்கு மனம் காயமென்னுந் திரிகரணங்களை. (௧)

பூம்பந் தர்புதுக் கியற்றி மூழ்கித்
தேம்படைப் புனற்றீங் கனிந றுங்காய்
யாம்பன் மலரா திபல விட்டி
யாம்பன் முகனர்ச் சனைசெய் தான்.

(இ-ள்) அழகிய பந்தரைப் புதிதாக்கி நீரில் மூழ்கி, வாசந்தங்கிய நல்ல சலமும், மதுரமான பழமும், நறிய காய்களும், அலரிமலரும் முதலிய பலவுபகரணங்களைச் சேகரித்து, யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் பூசையைச் செய்தனன். எ-று

முன்செய்த பந்தரை அவன் தந்தையாகிய கலியாணன் அழித்தமையின் அதனை மீண்டும் சரியாக்கினனென்பார் "பூம்பந்தர் புதுக்கி" என்றார். (உ)

இவ்வா றவன்பூ சைசெய்தி ருப்ப
வவ்வா றிடர்செய் தகலு நாயகன்
றுவ்வா தகலாத் தசுடு சாபத்
தெவ்வா னுறுநோய் கொடுதி கைத்தான்.

(இ-ள்) இவ்வகையாக அவன் (கணேசமூர்த்தியைப்) பூசைசெய்துகொண்டிருக்க, அவ்வகையாக (வல்லாளனை முன்பு) துன்புசெய்தகன்ற கலியாண வைசியன், அநுபவியா தொழியாத சுடுசாபப்பகையாற் பொருந்திய நோயினைக்கொண்டு (செய்வதுணராது) திகைப்புற்றனன் எ-று

சுடுசாபம் - சுடுகின்ற சாபம், அதாவது கொடிய சாபமென்பது பொருள்.

வேறு

மைந்தனுட னாடியமா காரிரிய னாறாம்
ரிந்துமதி கேள்வனிக னையதியல் செய்து
பந்தமுற விக்கிமக னைபரிவி லாதுய்
வந்தனனெ னச்சொலவு மாழ்குமனை யாளைமுன்

(இ-ள்) சிறுவராகிய, வல்லாளனுடன் விளையாடிய பிள்ளைகள் ஓடி, மனம் வருந்தும் இந்துமதியின் முன்சென்று, இந்துமதியே! கேட்பாயாக (நின்கணவனாகிய) கலியாணன் உன்மகனை யடைந்து துன்புறுத்திப் பந்தப்படும்படி கட்டி மனமிரங்காதவனாய் வந்தனனென்று சொல்ல எ-று (ச)

கண்ணறிவு வாக்கறிவு காதறிவு நீங்கிப்
புண்ணுறுவ னாகிவரு பந்தியும்புண் ணாகி
நண்ணினனை வைக்கடன யந்துமிழு நாயகன்
பண்ணின்மொழி யிந்துமதி பார்த்துமிக வாடி

(இ-ள்) துன்பமாகிய கடலில் விரும்பி வீழ்ந்த கலியாணனென்னும் வைசியன் கட்புலனாலாகிய அறிவும் வாக்கினாலறியும் அறிவும் காதாலாகிய அறிவுமொழிந்து, புண்ணுடைய வடிவினனாகி, வாகின்ற மனமும் புண்பட்டுப் பொருந்தினனை. பண்ணொலிபோலுஞ் சொல்லையுடைய இந்துமதியென்பாள் (அதனைப்) பார்த்து மிகவும் வாட்டமடைந்து எ-று.

"கண்ணறிவு வாக்கறிவு காதறிவு நீங்கி" என்றது, குருடு மூங்கையுஞ் செவிடுமாகி யென்பதாம். (ரு)

என்னையித் துவந்தபடி யென்னிறைவ னுக்கென்
றுன்னியுள் ளைந்துருகி யுண்கணா றல்சோர
வன்னிமிசை வன்னிவளை யப்படுநர் வெந்நோய்
துன்னுமிசை வேறுபிணி துன்னுநரு மொத்தாள்.

(இ-ள்) என் கணவனுக்கு இத்துன்பம் நேர்ந்தமைக்கு யாது காரணம்? என்று கருதி, மனம் வருந்தியுருகி, மையூட்டிய கண்களினின்றும் நீர் சொரிய, நெருப்பின்மேலே நெருப்பு வளையப்பட்டவர்களையும், கொடிய நோயின்மேற் பொருந்திய வேறு நோய் சேர்ந்தவர்களையு மொத்தனள் எ-று.

வன்னியாவது நோயாவது பெற்றோர் அதனால் துன்படைவராகலின் அவர்கட்கு அதன்மேல் வேறோர் வன்னியும், பிணியும் நேரின் அவர்கள் துயர்சகிப்பதருமையாதல்போல, மைந்தன் அடியுண்டு கட்டப்பட்டனனென்று கேள்வியுற்ற துயரத்துடன் கணவன் குருடு செவிடு ஊமை தொழுநோய் முதலிய துன்பங்களை யடைந்தது கண்ட துயரத்தால் அவ்விந்துமதியை "வன்னிமிசைவன்னி வளையப்படுநர், வெந்நோய் துன்னுமிசை வேறு பிணிதுன்னுநருமொத்தாள்" என்றார். (௬)

செல்வமொடு நல்லிளமை சேர்ந்தபொழு தானு
மில்வரையி றந்தகல்வி யாதவிய லானைப்
பல்வகைய றங்களன் பரிவொடு புரிவானைப்
புல்வினையி லானிவனைப் புல்லுவது மீதோ

(இ-ள்) செல்வமும் நல்ல யவ்வனமும் கூடியகாலத்திலும் இல்லங்கடந்து புறஞ்செல்வதறியாத இயல்புடையவனும், பலவகைப்பட்ட தருமங்களை அன்புடன் செய்பவனும், சேர்த்தக்க தீவினைகள் (சிறிதும்) இல்லாதவனுமாகிய இவனை, இவ்வகைத் துன்பமோ அடைவது? எ-று. (௭)

பண்டுபுரி தீவினைப யந்ததிங் கெனக்கோ
மிண்டினமக னைப்படரின் வீழ்த்ததிங் கெனக்கோ
தண்டமக னைப்புரித றக்கதென வேயென்
றெண்டொடிபு லம்பிமக னுற்றுழிந டப்பாள்

(இ-ள்) முற்பிறப்பிற் செய்த தீவினையால் வந்தது இதுவெனச் சொல்லவோ. கொடுமையால் மைந்தனைத் துன்பத்தில் வீழ்த்திய பலன் இதுவெனச் சொல்லவோ. புத்திரனைத் (தவறி நடக்கையில்) தண்டனைசெய்தல் தக்ககாரியமே யென்று, ஒள்ளியவளையலை யணிந்த இந்துமதி யென்பாள் புலம்பிக்கொண்டு புத்திரனிருந்த விடத்திற்கு நடந்தாள் எ-று. (௮)

வேறு.

இட்டிய வயன்மனை யேழை மாதரொ
டுடன்வர நகர்ப்புறத் தொய்யெனச் சென்றியாங்
கடலிய முகப்பிரா னடிகள் பூசனை
நடவுதன் மைந்தனை நயப்ப நோக்கினள்

(இ-ள்) இடங்கொண்ட அயல்வீடுகளிலுள்ள சிலமாதர்கள் கூடவர நகரின் புறத்திலே விரைந்துசென்று, ஆங்கே வலிய யானைமுகத்தையுடைய விநாயகப

பெருமானுடைய திருவடிகளிற் பூசைநடத்துந் தன் மகனாகிய வல்லாளனை அன்புறப் பார்த்தனள். எ - று (௯)

கட்டப்பட் டிருகையுங் காத்தப் பட்டுடல்
சொட்டப்புண் ணீர்மகன் றுயருற் றானென
விட்டப்பட் டுளஞ்சிறா ரியம்பிற் றுண்மையி
னொட்டப்பட் டலனென வுழையார்க் கோதினள்.

(இ - ள்) இருகரங்களுங் கட்டப்பட்டு, அடிக்கப்பட்டு, உடலினின்று உதிரஞ் சொட்டப்பட்டு மகன் துன்பமடைந்தனனென்று, இளம்பிள்ளைகள் இஷ்டத்துடன் சொல்லியது உண்மையிற் சோர்ந்திலனென்று அருகிலிருந்த மங்கையர்களுக்கு (இந்துமதி) கூறினள். எ - று (௧௦)

உழைவரு மாதரு முவப்ப நோக்கியிம்
மழைமதக் களிற்றினை வணக்கஞ் செய்திவன்
விழைவொடு பூசனை விளைக்கும் பெற்றியாற்
குழைவில னுடலமென் றேதுக் கூறினார்

(இ - ள்) பக்கலில் வந்த மங்கையர்களும் களிப்புண்டாகக் கண்டு, இவன் இக்குளிர்ந்த மதநீரைச் சொரியும் யானைமுகமுடைய கணநாதனைப் பணிதல்செய்து ஆசையுடன் பூசைசெய்யும் பேற்றினால், உடலமெலிந்தானில்லை என்று (அதற்குக்) காரணஞ் சொன்னார்கள். எ - று. (௧௧)

கையணி முகவனைக் கருணை யாளனைச்
செய்யசந் தனந்தணி திகழ்ந்த தேசுடை
மெய்யனை வழிபடு மிக்க பத்தியி
னையனுக் கிணையிலை யகிலத் தென்றனர்

(இ - ள்) கையையுடைய அழகிய (யானை) முகம்வாய்ந்தவனும், கிருபாமூர்த்தியும், குளிர்ந்த செஞ்சாந்தணிந்த ஒளிவாய்ந்த திருமேனியுடையவனுமாகிய விநாயகக்கடவுளை வழிபாடுசெய்யும் சிறந்த பத்தியில், அழகிய இவ்வல்லாளனுக்கு இவ்வுலகத்தில் நிகரானவரில்லரென்றுசொன்னார்கள். எ - று (௧௨)

வேறு

சந்திரன்பெய ரிரண்டுடன் றரித்துவாழ் நற்றாய்
மைந்தனைங்கரன் பூசனை வகுப்பது நோக்கிச்
சிந்தை நின்றெழு மன்பொடு திதலைமென் முலையின்
வந்த தண்பயம் பாய்தரத் தழீஇக்கொடு வகுப்பாள்

(இ - ள்) சந்திரனுடைய பெயர்களிரண்டை யொன்றாக்கொண்டு வாழும் நல்ல தாயாகிய இந்துமதி, தன்புதல்வன் (வல்லாளன்) ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமானுடைய பூசையைச் செய்தலைப்பார்த்து, மனத்தினின்றுண்டான அன்புடன், பசலைபூத்த மெல்லிய முலையினின்றுண்டான தண்ணிய பாலானது பாயும்படி (மகனைத்) தழுவிக்கொண்டு சொல்லுகின்றாள் எ - று

இந்துவென்பதும், மதியென்பதும் தனித்தனியே சந்திரன் பெயர்களாதலின் இந்துமதியைச் "சந்திரன் பெயரிரண்டுடன் றரித்துவாழ்நற்றாய்" என்றார். (௧௩)

பிள்ளைமைப் பருவத்தானீ பெருமதக் களிற்று
வள்ளலைப் பணிவாய்மைக் கைக்கோடலின் மைந்தா
துள்ளலைப் பெருங் கடலுடை யுடுத்ததொல் லுலகி
னுள்ளுடற் பயன் பெற்றனம் நானுநந் தையுமே

(இ - ள்) மகனே! மிக்க மதநீர்சொரியும் யானைமுகக் கடவுளை வணங்கும் விரதத்தை நீ குழந்தைப்பருவத்திலே கைக்கொண்டபடியால், துள்ளுகின்ற அலைகளையுடைய கடலுடைசூழ்ந்துள்ள பழமையாகிய உலகத்தில் நன்மைதரும் உடலாலாகிய பயனை நானும் உன் தந்தையுமே யடைந்தோம் என்றவாறு.

"மகன்றந்தைக் காற்றுமுதவி யிவன்றந்தை - யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்" என்றது திருக்குறளாதலின், சற்புத்திரனை யுன்னைப் பெற்ற நாங்கள் உடலின் பயனை யடைந்தோமென்பது கருத்து. (க௪)

கால மொன்றிடைக் கணபதிக் கருச்சனை யாற்றி
ஞால மொப்புற வில்லிடை நண்ணலா காதோ
கோல வில்லிடைப் பூசனை புரிதலா காதோ
சால விட்டெமைப் புறத்தே யெய்துறத் தகுமோ

(இ - ள்) (குறித்த) ஒருகாலத்தில், கணேசப்பெருமானுக்குப் பூசைசெய்து, உலகினர் ஒப்ப வீட்டிற்கு வரக்கூடாதோ? (அல்லது) அழகிய வீட்டிலேயே (அப்பெருமானுக்குப்) பூசைசெய்யக்கூடாதோ? எம்மை மிகவும் பிரிந்து ஊர்க்குப் புறம்பே பொருந்துதல் தகுமோ? என்றவாறு. (க௫)

காறணங்களுங் கண்டிலேம் மெய்த்தகு நுந்தை
யூறு சேர்குட்ட னையுமூ மையாயக் குருடாய்க்
கூறு வார்த்தைகே ளாச்செவி டாயுளங் குன்றுந்
வீறு காணுறுந் துயரினை யிப்பவந் தடைந்தேன்

(இ - ள்) களிக்கத்தக்க உன் பிதா ஊனமமைந்த தொழுநோயாளனையும் ஊமையாயும் குருடனாயும் சொல்லுகின்ற சொல்லைக் கேளாத செவிடனாயும் மனம் வருந்துகின்றனன் (இதற்குக்) காரணங்களுங் காணகிலோம் முடிவு காண்டற்கரிய துன்பமுடையவளாய் (அவற்றை உனக்குச்) சொல்ல (இங்கு) வந்து சேர்ந்தேன் என்றவாறு.

காரணம் எதுகைநோக்கிக் காறணமென்றது. (க௬)

வேத சாத்திரம் யாவையு மீன்றவர் வெகுண்டு
மோதி நீதியின் மைந்தரை நிறுவுதன் மொழியு
மாத லானுனை நுந்தைதண் டித்தது மறமே
யேது தாதைசெய் யினுமகன் காப்பது மியல்பே

(இ - ள்) வேதசாஸ்திரங்கள் யாவும், பெற்றோர் புத்திரர்களை (அவர்கள் தவறியவிடத்தில்) கோபித்து அடித்து நீதிவழியிலே (அவர்களை) நடத்துதல் (முறையென்று) கூறுகிறதாதலின், உன்னை உன்பிதா தண்டித்ததும் (பிதா) தருமமேயாம். தந்தை யெதனைச்செய்தாலும் மகன் (அவனை) இரட்சிப்பதும் (புத்திரருக்கு) இயற்கையே என்றவாறு. (க௭)

மைந்த புத்திர தருமநீ மதித்துவெப் பகன்று
நுந்தை வெம்பிணி தீருமா றுவனுமந் திரங்கள்
சுந்த மாமணி மருந்திவை தம்முளயா தியைவ
தந்த நல்லுபா யத்தினை யாற்றுதல் வேண்டும்

(இ - ள்) மகனே! நீ புத்திர தருமத்தை யெண்ணிக் கோபமொழிந்து, உன் பிதாவின் தீப்பிணியகலும் வகையாக, சொல்லத்தக்க மந்திரம் - அழகுடைத்தாகிய மணி - மருந்து ஆகிய இவற்றில் எது பொருந்துவதோ அந்த நல்ல உபாயத்தை நீ செய்தல்வேண்டும் எ - று (௧௮)

கேண்மை மைந்தர்கட் டந்தைதாய் வார்த்தைகீழ்ப் படாத
வாண்மை யேயற மென்பரா ரணமுத லுணர்ந்தோர்
காண்மை யாத்தவென் முகத்தினை யென்கட் டுரைகேளென்
றேண்மை யார்ந்தவ ளியம்பவல் லாளன்பார்த் திசைக்கும்.

(இ - ள்) ஆசைப்புதல்வர்கள் தந்தை தாய் இவர்கள் கூறும் வார்த்தையைத் தாழ்வுபடுத்தாத ஆட்சியே உத்தம தருமமென்று வேதமுதலியவற்றை யுணர்ந்தவர் கூறுவர். மைதீட்டிய வென்முகத்தைப் பார், என் உறுதிமொழியைக் கேள் என்று, மெலிவையுடைய இந்துமதி யென்பாள் கூற, வல்லாளன் (தன் தாயைப்) பார்த்துச் சொல்லுகின்றான் எ - று (௧௯)

வேறு.

கருவாய் வளர்தரு காலு மகட்டிற் கழன்றுபுறத்
துருவாய் வளர்தரு காலு முயிர்க்குயி ராயெவையுந்
தருவா னுமாய்த் தந்தை தாயரு மாமொரு தந்தனரோ
விருமா நிலத்தினை வாரோ வெனக்கப் பனனையுமே.

(இ - ள்) (தாய் வயிற்றில்) கருவாகி வளருங்காலத்திலும், வயிற்றினின்றும் நீங்கிப் புறத்தே உருவாகி வளருங்காலத்திலும், உயிர்க்குயிராகி பல்லாவற்றையுந் தருபவனுமாய், தந்தை தாயருமாகிய ஏகதந்த விநாயகக்கடவுளல்லாமல், பெரிய பெருமைதங்கிய உலகத்தில் வருந்துபவர்களோ எனக்குத் தந்தையுந் தாயுமாவார்? எ-று

இருமாநிலத்தினைவாரோ வென்பதை இருமாநிலத்து இனைவாரோவென்றாவது, இருமாநிலத்தில் நைவாரோவென்றாவது பிரிக்க. இனைதல் நைதல் இவ்விரண்டும் வருந்துதலென்னும் பொருளுடையன (௨௦)

ஆமே யொருவ ரொருவர்க் கிடரை யகற்றுவது
மாமே யொருவ ரொருவர்க் கிடைநன்மை யாக்குவதுந்
தாமேது செய்தன ரன்னது தாமே புசிப்பதன்றிப்
போமே தலையிற் பொறித்தான் பிழைத்து நினைப்பினுமே.

(இ - ள்) ஒருவருக்குற்ற துன்பத்தை விலக்குவது ஒருவருக்கு (சாத்தியம்) ஆமோ? ஒருவருக்கு நன்மையுண்டு செய்வதும் ஒருவருக்கு (சாத்தியம்) ஆமோ? தாம் எதைச் செய்தனரோ, அதைத் தாமே புசிப்பதல்லது, தலையில் எழுதிய பிரமதேவனே மீண்டு கருதினாலும் (அது அவரை) விட்டுப்போமோ? எ - று. (௨௧)

கொற்றவர் காரியந் தமமிசை வினவிக் குமரர் செய்தங்
குற்றன ரேனு மொறுக்கவல் லாரோ வவர்தத்தவர்கண்
மற்றவர் தமமை யொறுத்தயிர் வாழினு மன்னர்பணிக்
கற்றமெ லாமபுரிந் தாலுயிர் கூடுங்கொ லாரணங்கே

(இ - ள்.) அரசனுடைய காரியத்தைத் தமமுடைய அநுமதியிலலாமல், புதல்வர் செய்திருந்தாராலும், பெற்றோர்கள் தண்டிக்க வலலவர்களோ? அவர்களைத் தண்டித்து உயிர் வாழ்ந்தாலும் அரசனுடைய பணிவிடைசகுப பலவிதஇடையூறுகள் செய்தால் உயிருடன் வாழமுடியுமோ? மாதே! எ - று. (உஉ)

வெந்தவெண் ணீறணி வானும விழிக்கடை நோக்கிநிற்கு
மந்த விநாயக ராலயந் தள்ளி யதுக்கியென்னை
யெந்தை பிரானுரு வத்தையுங் கையா லெடுத்தெறிந்தான
வந்தது காணுத நூலவழு வாததோர் வனபிணியே.

(இ - ள்.) நீறறிய வெள்ளிய விபூதியை யணிந்த சிவபெருமானும, கட்கடையினால் தரிசித்துக்கொண்டிருக்கும் அந்த விநாயகப்பெருமானுடைய திருவாலயத்தைத் தள்ளி, என்னையடித்து, என்னுடைய தந்தையுந் தலைவனுமாகிய கணேசப்பெருமானுடைய திருவுருவத்தையுங் கையினலெடுத்தெறிந்தனன் அதனால், கெடாததோர் வலிய நோயானது (அவனுக்கு) வந்து சமபவித்தது. எ - று. (உ௩)

இம்மையின் மாத்திர மேயன்றி யிந்நோ யுழப்பன்கண்டாய்
செம்மைசெய் கோலுடை வல்லவன் கற்பிற் றிருந்திழையா
யும்மையி னீயுங் கமலையென் ருருவை யுனவயிற்றி
னம்மகல யாணனென்ன பானறக்க னென்னவந் தல்லலுற்றே

(இ - ள்) அவன் இப்பிறப்பின மட்டுமன்றி, (மறுமையிலும) இக்நோயாற்றுனபுறுவான் செம்மையாகச் செலுத்துங் கோலினையுடைய வலலவராசன கற்பிற்குரியமனைவியாய நீயுங் கமலையென்னும் பெயருற்று வருவை உன வயிற்றில் இக்கலியாணன் தக்கனென்னும பெயருடன் பிறந்து (இந்நோயால்) துனபமடைந்து. எ-று.

பன்னிரண் டாண்டி னளவும பலபரி காரஞ்செய்தும்
துன்னிய நோயதொலை யாமையி னறறுனி கூர்ந்துயிர்த்த
மன்னவ னின்னொடு நீக்கிட முக்கல மாதவனுற
பின்னல மெய்துவிர் செல்லினி யென்று பெயர்த்தனமே.

(இ - ள்) பன்னிருபிராயம வரையிலும பலவகைப்பட்ட பரிகாரங்களைச் செய்தும், பொருந்திய நோயொழியாமையினால, பெற்ற தந்தையாகிய வல்லவராசன துனபமிகுந்து உன்னுடன் (அவனை)விலக்க, சிறந்த தவசியாகிய முக்கலமுனிவரால், பின்னே நனமையடைவீர்கள். இனிசசெலலுகவென்று (சாபவிமோசன மொழியுரைத்து) நீக்கினன் எ - று. (உ௫)

நற்று யகல வுரைத்தவன் மீட்டுநற் பூசையிடை
வற்றுத வனபி னிருப்ப வுறுதி மதித்தருள்கூர்ந்
தற்றாகட கற்ற வமல விநாயக னங்கருள்
பற்றார் கணத்தர் விமானங்கைக் கொண்டவ னுற்றுழியே.

(இ - ள்) பெற்ற தாயானவளைச் செல்லும்படி கூறி, அவ்வல்லாளன் மீளவும் நல்ல கணேசபூசையிற் குறையாத அன்புடனிருக்க, அவனுடைய உறுதியை யோசித்துக் கிருபைமிகுந்து, அற்றார்களுக்குற்ற நிமலராகிய விநாயகக்கடவுள் அப்பொழுது திருவருள்புரிய, கணநாதர்கள் விமானத்தைக் கையிற்கொண்டு அவ்வல்லாளனிருந்த விடத்தை யடைந்தார்கள். எ - று. (உசு)

வேறு

விண்ணிழி கின்ற விமான மடுத்துக்
கண்ணெதிர் நின்று கதிர்த்தலு நோக்கி
யண்ணல ருட்கடி யேனொரு பொருளோவென்
றெண்ணி யிறைஞ்சி யெழுந்துகும் பிட்டான்.

(இ - ள்) ஆகாயத்தினின்று மிறங்குகின்ற விமானத்தை நெருங்கி அது கண்ணுக்கெதிரேநின்று பிரகாசித்தலுங்கண்டு, விநாயகக்கடவுளுடைய திருவருளுக்கு அடியேன் ஒரு பொருளோவென்று கருதி நமஸ்கரித்து எழுந்திருந்து (இருகரங்களாலும்) கும்பிட்டனன். எ - று (உஎ)

இந்து மிலைந்தவ ரேவிவி மானந்
தந்தன மன்பத ழீஇயிவர் கென்று
வந்தவர் கூறவல் லாளனி வர்ந்தா
னந்தர துந்துபி யார்த்தன வன்றே.

(இ - ள்.) சந்திரனை (சடைமிசை) யணிந்த கணேசப்பெருமான் கடவுளை யிட்டருள் விமானத்தைக் கொண்டுவந்தோம் அன்பனே! அதனைத் தழுவி யேறுக வென்று, (விமானத்துடன்) வந்தவர்கள் சொல்ல, வல்லாளன் (அத்தெய்வ விமானத்தில்) ஏறினன். (அப்பொழுது) தேவ துந்துபிகள் முழங்கின எ - று. (உஅ)

திங்களி ருங்குடை சென்னிநி ழற்றப்
மங்கையர் சாமரை வாங்கியி ரட்டப்
பொங்கொளி யாலவட் டம்புடை நண்ண
வெங்கணும் வெள்ளையெ ழுந்துத யங்க.

(இ - ள்) பெரிய சந்திரவட்டக்குடையானது சிரமிசை நிழல் செய்யவும், தெய்வமாதர்கள் சாமரைகளை வளைத்துவீசவும், மிக்கவொளியையுடைய ஆலவட்டங்கள் பக்கலிலவரவும், எவ்விடத்திலும் வெண்ணிறமவாய்ந்த வெற்றிச்சங்கங்கள் ஓங்கியொலிக்கவும் எ - று. (உகூ)

வானவர் பூமழை வாரியி றைப்பத்
தேனலர் கோதையர் சோர்ந்தெதி ராடப்
வேனவிர் வீரர்வி ராயபபுடை நிறபக
கானமெ ழுப்பினர் கந்திரு வத்தோர்.

(இ - ள்) தேவர்கள் மலர் மழையைவாரிச் சொரியவும், தேனசொரியும் (பூக்கள்பொருந்திய) கூந்தலையுடைய மாதர்கள் கூட்டமாகி எதிரே நிருத்தஞ்செய்யவும், வேலையும வாளையுமேந்திய வீரர்கள் தம்மிற்கலந்து பக்கலில் நிற்கவும், கந்திருவர்கள் கானவோசையை யெழுப்பினார்கள். எ - று. (௩௰)

வரிசைக ளின்னண்ம வந்தவர் செய்யப
பரிசனர் சூழ்ந்திரு பாலுநெருங்க
விரசிய மெனமைமிகி மானமோ டேகிப
புரிசெய்க ணேசபு ரத்தில் மாந்தான.

(இ-ள்) வந்தவர்கள் இவ்வகையாக முறைமைசெய்யவும், பரிசனங்கள் புடைசூழ்ந்து இருபக்கலிலு நெருங்கவும், மெனமைமிக்க விமானத்துடன சென்று, ஆசையைச் செய்கின்ற கணேசபபெருமானுடைய நகரத்திற் பொருந்தினன் [வல்லாளன்] எ-று. (ருக)

இந்திரன மண்ணை ரினபமவெ றுத்தாங்
கிந்திர னிபமெ லைத்துமவெ றுக்கு
மந்தமில் போகம ருந்திவ் ருந்தா
தெந்தைதபி ருங்கழ லெய்தியொன் ருனன.

(இ-ள்) இந்திரனவன உலகினருடைய சுகத்தைத் வெறுத்தாற்போல இந்திரபோக முழுவதையும் (அறபமென்று) வெறுக்கத்தக்க எல்லையில்லாத போகத்தை நுகர்ந்து, துன்பமடையாமல், எந்தையாகிய கணேசப்பெருமானுடைய திருவடியில் ஒன்று சேர்ந்தனன் எ-று.

போகமருந்தி வருந்துதலாவது சுக முற்றவாங்குச் செருக்கு முதலியவற்றால் துன்புவிளையுமாதலின். (ருஉ)

வேறு

அதிசயம பலவு நோக்கி யந்நக ரத்தோர் யாரும
விதுவணி சடில்த்த தெந்தை விநாயகர் தமக்குக் கோயில
முதிரழ கெழிப்ப வாக்கி முறையுளி பூசை யாற்றிக
கதிவளர் விழாவு மற்றுங் கடைப்பிடித் தியற்றி னோர்.

(இ-ள்) அந்நகர வாசிகளெல்லாரும பல அதிசயங்களையும் பார்த்து, சந்திரனையணிந்த சடையையுடைய எந்தையாகிய விநாயகக்குரிசிலுக்குத் திருக்கோயிலை மிக்க அழகு விளங்கச்செய்து (ஆகம) முறைப்படி பூசையைச்செய்து, ஆசை வளருந் திருவிழாவு மற்றுள்ளனவும உறுதியாகக்கொண்டு செய்தார்கள் எ-று (ருங)

மேதகு வரங்கள் சான்ற விநாயக சதுர்த்தி தோறு
மூதுலக கனைத்து மெய்தி முறைமுறை பூசை யாற்றிக
காதலிற் பணியுஞ் செய்து கருதிய வரங்கண் முற்றிப
போதவங் கருளர் நின்ருன புகர்முகக் களிற்றுப் பெம்மான.

(இ-ள்) மேன்மைதங்கிய வரங்கள்மிக்க விநாயக சதுர்த்திகளிலெல்லாம், பழமையாகிய உலகினர் யாவரும் (அங்கு) அடைந்து முறைமுறையாகப் பூசைசெய்து ஆசையுடன் பணிவிடைகளையுஞ்செய்து, புள்ளிகள் வாய்ந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் விரும்பியவரங்களை முடியப் பெற்றுவர, அவ்விடத்திலே திருவருள் புரிகின்றனர் எ-று. (ருச)

வேதனை முழுது நீக்கி விறைந்தவல் லாளற் கன்றே
கோதறு முத்தி யீந்த குஞ்சர முகவ ஞாக்கு

மாதவா முதலோர் போற்றி வல்லாள கணேச னென்ன
வோதினா நாமந் தனையுரைத்தவர்க் கிடும்பை யின்றே.

(இ - ள்) (தன்னை) ஆச்சிரயித்த வல்லாளனுக்கு (உற்ற) வேதனை முழுவதையு மொழித்த அப்பொழுதே குற்றமற்ற முதன்மையைக்கொடுத்த யானைமுக விநாயகக்கடவுளுக்கு, பெருந்தவசிகள் முதலானவர்கள் துதிசெய்து வல்லாள கணேசரென்று பெயரிட்டார்கள் அத்திருநாமத்தைக் கூறினவர்களுக்குத் துன்ப மென்பது (சிறிதும்) இல்லை எ - று (கூடு)

பெருமபிணி கொண்ட நாய்கன் பெரிட ருழந்தே யந்த
வருமபவ மறவல் லாள னன்றுரைத் திட்ட வாறே
விரும்பிய மனைதா யாக வெறுத்தகு மகனு மாக
வருமபவத் துற்றுத் தக்க னெனுமபெயர் வழங்கப் பட்டான்

(இ - ள்) பெருநோயைக் கொண்ட வணிகனாகிய கலியாணன் பெருந்துன்ப மனுபவித்தே அந்த அரிய பிறவியொழிய, அக்காலத்தில் வல்லாளன் சாபமிட்ட வகையே விருமபிய மனைவி தாயாகவும், தான் வெறுக்கத்தக்க மகனாகவும், வரும பிறவியிற் பொருந்தத் தக்கனெனனும பெயர் வழங்கப்பட்டனன் எ - று (கூசு)

அருந்தவந் தான மாதி யபபவத் தியற்ற லானுந்
திருந்துமெய்ஞ் ஞானம பிள்ளை கணேசனுற் சோத லானும
வருந்துநோய மறைமோன காற்றுன மாயந்து வளர்மே ரனப
பொருந்தவிற் கணேசர் காட்சி பொருக்கெனக் கொடுத்திட்டாரே.

(இ - ள்.) அரிய தவந்தான முதலியவற்றை அப்பிறவியிற் செய்தலானும், திருத்தமாகிய உண்மை ஞானத்தையும புத்திரப்பேற்றையுங் கணநாதப்பெருமானால அடைதலானும, வருந்திய பிணியானது முக்கலமுனிவர (தேக) காற்றினலொழிந்தது. வளர்கின்ற மிக்க ஊனபானது பொருந்துதலின்றுற கணேசப்பெருமான விரைவாகத் தரிசனந் தா கருளினா. எ - று (கூஎ)

அவர்பெருங் கருணைப பேற்று லத்தகுந் தக்க னென்பான்
றவநிறை முனிவன் பாதஞ் சார்ந்துபல் பவமுந் தீர்க்கு
சிவமலி மனுவும் பெற்றுன றெவ்வடு வேலோ யன்று
னவனிகா வலனுய வாழ்ந்த வடைவுமீங் குரைத்துங் கேண்மோ

(இ - ள்) அக் கணேசப்பெருமானுடைய சிறந்த கிருபாபலனால், அந்தத் தகுதியுடைய தக்கனென்பவன், நிறைந்த தவத்தையுடைய (முக்கல) முனிவர் திருவடியையடைந்து பலபிறவியையு மொழிக்கும மங்கலமிக்க (ஏகாட்சர) மந்திரத்தையும பெற்றனன் பகைஞரைக் கொல்லும வேற்படை யேந்திய வீமராசனே ! அத்தக்கனென்பவன் பூமியைக் காக்கும அரசனுய வாழ்ந்த வகையையும இப்பொழுது சொல்லுகின்றேன் கேட்பாயாக (என்று விசுவாமித்திர முனிவர் கூறுகின்றார் ) எ - று (கூஅ)

வல்லாளனமுத்தியடைந்தபடலமுற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஈசஏ

# தக்கனரசாட்சிபெற்றபடலம்.

மிக்கருள் வழங்கு மந்திரங் கொடுத்த மேதகு முக்கல முனியைப்
பொக்கமி லன்பாற் பூசனை புரிந்து புறவிடை கொண்டுதா யோடு
தக்கனங் ககன்று தக்கவர் வாழ்த்தத் தருக்குவுண் டினனிய நகர்பாற்
றொக்கவப் புறவத் தெவ்வகை வளனுந் துவன்றுமோர் சூழலை யடுத்தான்.

(இ - ள்) பேரருள் தரும் திருமந்திரத்தை யுபதேசித்த மேன்மைபொருந்திய முக்கலமுனிவரைப் பொய்மையில்லாத அன்புடன் பூசைசெய்து புறத்தேவிடைகொண்டு, தன் தாயாகிய கமலையுடன் தக்கனுனவன் அவ்விடம்விட்டுச் சென்று, தகுந்தவர்கள் வாழ்த்தக் கவுண்டிய நகரத்தின் பக்கலிற்சேர்ந்த அப்புறவத்தில் எவ்வகைப்பட்ட வளங்களும் நெருங்கிய ஓரிடத்தை யடுத்தனன். எ - று.

புறவம் - ஈண்டுக்குறிஞ்சி நிலம்

தக்கன் தன் மனத்தால் முக்கலமுனிவரைப் பிரியாதவனென்பார் "புறவிடைகொண்டு" என்றார். (க)

அளிந்ததீங் கனியின் றேறலவார்ந்தொழுகி யசும்புமச் சூழலி னிடையே, தெளிந்தநீர்த் தடத்துச் செழுமணிக் கரையிற் றிப்பியமாய்ப் புராதனமாய்க், குளிர்ந்தவான் றிங்கண் மிலைந்தருள் கணேசர் கோயிலொன் றிருப்பநேர் கண்டு, மூளிந்ததீ வினையான் மகிழ்வொடு மதனைமுற்றியாங் கிருந்தனன் கணித்தால

(இ - ள்) கனிந்த மதுரமான பழங்களின் தேனனது வழிந்தொழுகி (கால்) வழுக்குகின்ற அவ்விடத்தின் மத்தியில், தெளிந்த நீரையுடைய தடாகத்தின் செழுமை தங்கிய அழகிய கரையிலே, திவ்வியமாகவும் பழமையாகவும் குளிர்ச்சிபொருந்திய சிறந்த சந்திரனைச் (சிரமிசை) யணிந்தருளிய கணேசப்பெருமானுடைய திருக்கோயிலொன்றிருக்க நேரேகண்டு, விலக்கிய தீவினையையுடைய தக்கன் ஆசையுடன் அத்திருக்கோயிலைச் சரிவர முடித்து அவ்விடத்திருந்து (அம்மந்திர) ஸ்மரித்தனன். எ-று.

திப்பியம் - தெய்வீகம் (உ)

பன்னிரண் டாண்டு திருந்தனுட் டானம் பண்ணியே காக்கர மனுவைத்
தன்னிக ரில்லான் றாளிணை நினைந்து தவ்வுறக் கணித்தனன் பின்பு
மன்னியங் கிருந்த விநாயகர் தம்மை மகிழ்ந்திரு பதொரு திவசந்
துன்னுபல் பொருளுஞ் சோர்வறக் கொண்டு தூயபூ சனைபுரிந் திருந்தான்.

(இ - ள்) பன்னிரண்டு வருடங்கள் திருத்தமாகிய அநுட்டானத்தை முடித்து (முக்கலமுனிவருபதேசித்த) ஏகாக்ஷர மந்திரத்தைத் தனக்கொப்பற்ற விநாயகக்கடவுளைத் தியானித்துத் தகுதியுடன் ஜபித்தனன் அதன்பின்னர் அங்குநிலைபெற்றிருந்த விநாயகக்கடவுளை ஆசையுடன் இருபத்தொரு தினங்கள்வரையில், நெருங்கிய பல பொருள்களையும் மிகுதியாகக் கொண்டுவந்து புனிதமான பூசை செய்துகொண்டிருந்தனன். எ - று.

சோர்வற - குறைவற; இதனை மிகுதியாக வென்றும். (௩)

இருபதினை மேலா மொருதினத் தியாம மிறந்திடு வைகறைப் பொழுதி, னொருகரத் திருகோட் டொழுகுமும் மதத்தி னொளிர்ந்தசிந் தூர மதத் தகத்தின, வருமொரு வேழ மரதன மாலை வயங்குதன் கழுத்திலிட்டெடுத்துப, பொருவரு பிடர்மேற் கொண்டொரு நகரிற் போதரக் கனவு கண் டனனே.

(இ - ள்.) இருபத்தோராந் தினத்தின் யாமங்கழிந்த விடியற்காலத்தில், ஒரு கரத்தையும், இருகொம்பினையும், ஒழுகுகின்ற மும்மதத்தினையும், பிரகாசிக்கின்ற சிந்தூரமெழுதிய மத்தகத்தினையுங் கொண்டுவரும் ஓர் யானையானது இரத்தினமாலையைப் பிரகாசிக்கின்ற தன் கழுத்தி லணிந்து தன்னையெடுத்து ஒப்பற்ற பிடரியின் மேற்கொண்டு ஓர் நகரத்திற்குச் செல்லச் சொப்பனங்கண்டனன் எ - று.

யாமம் வைகறையென்பன சிறுபொழுதாறனுளொவ்வொன்று. அவை மாலை யாமம் வைகறை விடியல் நண்பகல் எற்பாடு எனப்படும். (௩)

விடிந்தபின் னெழுந்து நாட்கடன் முடித்து விருப்பினோ டிகமலையை வணங்கி, முடிந்தவென் கனவைக் கேளென மொழிந்தான் முகமலர்ந் தனனையுங் கேளாக், கடிந்தன நந்தங் கலியையின் னேமண் காவலனொரு வை யென்று, நொடிந்தன ளிவ்வா றளவளா யிவாக ளேறுற்றனர் முன்பு போ லிருப்ப.

(இ - ள்) பொழுதுபுலர்ந்த பின்னர், நீத்திரைநீங்கி நித்திய கருமமுடித்து அன்புடன் கமலையாகிய தாயைப்பணிந்து, நிகழ்ந்த என் சொப்பனத்தைக் கேட்பாயாகவென்று (தக்கன்) கூறினன். கமலையும் முகமலர்ச்சியுற்றுக் கேட்டு நம்முடைய தரித்திரத்தை யொழித்தோம் இப்பொழுதே அரசனுவாயென்று நொடிந்தனள். இவ்வகையாக (மகனுந் தாயுமாகிய) தக்கனுங் கமலையும் அளவளாவி முன்போலக் கணேசமூர்த்தி திருமந்திரத்தைத் தியானித்துக்கொண்டிருக்க எ - று.

நொடிந்தனள் - கைநொடி கொட்டினளென்றேனும், கொங்கையிற் பால் சுரந்தனளென்றேனும் பொருள்கொள்க.

கேளா-செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். ஆகுவை இதில் கு - சாரியை (௫)

வேறு

கற்றார்புனை புகழ்மலகிய கவுண்டினனிய நகரிற்
செற்றார்திறை யிடுசந்திர சேனன்றனு நீங்கி
யுற்றானகதி யுற்றாரொடு முரிமைத்திரு பனையாள
பொற்றாரினள் சலபைப்பெயர் பூண்டாளவ ளித்தாள்.

(இ - ள்) கல்விவல்லவர்களால் அலங்கரிக்கப்பட்ட புகழ்மிகுந்த கவுண்டினனிய நகரத்திலே, சத்துருக்களுங் கப்பஞ்செலுத்துஞ் சந்திரசேனராசன் உடல் விட்டு நற்கதியடைந்தனன் அவன் சுற்றத்தாருடன் உரிமையுடைய சிறந்த மனைவியும் பொன்மாலை யணிந்தவளுமாகிய சுலபையென்னும் பெயருடையவள் (பின்வருமாறு) துன்புற்றனள் எ - று.

செற்றார் திறையிடுமென்றது அவன்தாற்றல் விளக்கியதாம். (௬)

என்னுருயி ரனையாயொளி ரிருகண்மணி யனையாய்
மன்னுபுவி தாங்கும்பொறை மாற்றிச்சுர ருலகம்
பொன்னார்திணி தோளவெஃகிய புக்காயெனை நீத்தா
யன்னைவிது தகுமோவிது தகுமோவமிழ் தனையாய

(இ - ள்.) என் அரிய உயிர்போன்றவனே! பிரகாசிக்கின்ற இருகண்களி லுள்ள கருமணிபோன்றவனே! அரசனே! உலகினைச் சுமக்குஞ் சுமையை யகற்றித் தேவலோகத்தை அழகுபொருந்திய தோளிற்சுமக்கக்கருதி (அங்கே) சென்றனையோ? என்னைப் பிரிந்தாய்! என் தாய்போல்பவனே! தேவாமிர்தம் போன்றவனே! இது தகுமோ? இதுதகுமோ? எ - று

வெஃகியவென்பது செய்யியவென்னும் வாய்பாட்டி றந்தகால வினையெச்சமாகலின் விரும்பியெனப் பொருள்படும். (எ)

கொழுகொம்பறு கொடிபோன்மிகு குளிர்நீரறு கயல்போ
லிழுதங்கறு சுடர்போலொளி யெல்லோயறு நாள்போன்
முழுதுந்துயர் பெருகுங்கடன் முழுகும்படி யெனைநீங்
தொழுகுங்குழ லரமாதரை யுற்றாயிது தகுமோ

(இ - ள்) கொழுகொம்பற்ற கொடிபோலவும், மிக்க குளிர்ச்சிவாய்ந்த தண்ணீரற்ற சேற்றுக்கெண்டைபோலவும், நெய்யற்ற தீபம்போலவும், பிரகாசிக்கின்ற சூரியனற்ற பகற்பொழுதுபோலவும், முழுவதுந் துன்பம்பெருகுங் கடலில் அமிழும்படி யென்னைவிலக்கித் தேனொழுகுங் கூந்தலையுடைய தேவமாதர்களை யடைந்தனை. இது தகுமோ? எ - று

கொழுகொம்பு-கொடிகள் படருதற்கு ஆதாரமாக நடப்பட்டதோர் கொம்பு.

வேள்வித்தழ லெதிரேமணம் மெய்யேயிது காறும்
வாழ்வித்தனை யிப்போதுநல் வழிபாட்டினுள் யாது
தாழ்வித்தன னடியேனது தகவுண்டெனி லுரையாய்
சூழ்வித்தக வெம்பாவிடர் சூழ்வித்தனை தகுமோ.

(இ - ள்) ஓமாக்கினியின் முன்னே என்னை மணஞ்செய்தது முதல் உண்மையாகவே யென்னை யிதுவரையில் (குறைவின்றிக்காத்து) வாழச்செய்தனை. இப்பொழுது அடியேன்செய்யும் பணிவிடைகளில் யாது குறைபாடுசெய்தேன்? அப்படி யுள்ளதாயின் (வாய்விண்டு) கூறுவாய். நிறைந்தஞான சொரூபியே! எனக்குப் பல துன்பங்கள் சூழவிடுத்தனையே! இது உனக்குத் தகுமோ? எ - று.

தாழ்வித்தனென் இதில் என் விகுதி தன்மையொருமையை யுணர்த்தியது

அந்நாளுறு மன்போடலர் மன்றோவக லுற்ற
இந்நாளது போலேயய லெங்குற்றிலை நின்று
யென்மேன்றுயர் வேனென்னுட லின்பாற்றர வருடா
யொன்னாரிடை யுறுபாவனை யுற்றாயுரு காமே.

(இ - ள்) அந்தத்திருமணஞ்செய்த காலத்திற் பொருந்திய அன்போடு கூடிய மனத்தோ விலகியது இதுவரையில் அதுபோலவே பிறவிடத்திலே சென்றதுமில்லை யாக நின்றனை. என்னென்று துன்புறுவேன்? என் தேகமானது இன்ப மடையும்படி

(எனைக் காதத்தற) பரிசியாய (என விடயத்தில் மன) முருகாமல், பகைஞரிடம் பொருந்திய பாவனையை யுற்றுய எ - று.

வருடாய் என்றதில் வருடல தடவல். அருள்தாவெனப் பிரிக்கின ஒன்று ரென உயிர்முதலாகக் கொணடு வகரவுடம்படுமெய்கூட்டி, வொன்றுரெனப்படிகக.

ஆவாவினி யெனசெய்குது மநதோவென விவ்வா
றோவாதுரை மொழிவாள்விழி யுறைசிநதிட வுருகித்
தீவாய்விழு தளிரபோலொளி தீரததனு வேருயக்
காவாதுள மானம்படு கணவனமிசை விழுவாள.

(இ - ள.) ஆ! ஆ! இனியாது செய்வோம? ஐயோ! எனறிவ்வகையாக விடாமலழுது, கண்களினினறும் நீரததுளிசிநத மனமுருகி, தீயில்விழுநத தளிரபோலப் பிரகாசமொழிய உடல வேறுபட்டுக காககமுடியாமல் மனதில் மானமுணடாகிக் கணவன (இறநதவுடல) மேலவிழுவாள எ - று.

உறை-நீரததுளி. (கக)

முகமெற்றுவ டலெபெற்றுவண முருகாரகர மலராற
றகவெற்றுவள கனிவாயிரு தனமுஙகுழை வெய்த
மிகவெற்றுவள் வயிறெற்றுவண் மினனைப்பொதி முகிலி
னுகுமைகருழல பொதியததளி ருருவநதுவ ளுற்றுள.

(இ - ள) முகததினை மோதிககொளவாள; தலையிலடிததுக்கொளவாள, வாசம் பொருந்திய கைகளாகிய மலாகளால் தகுதியாக அறைந்துகொள்வாள், (கொவவைக) கனிபோனறவாயும, இருதனஙகளுங குழமபுமபடி மிகுதியும அடிததுககொள்வாள், வயிறறைப் பிசைநதுகொளவாள. மினனலைககொணட மேகததினைப் போலவிழுங் கரிய கூநதலானது பொதியுந் தளிரபோனற உருநை துவணடனள எ - று. (கஉ)

இவ்வாறவன் மனையாளொடு மினைவோாகளு மினைய
வொவவாதவ ரலலாலவய மொபபாருல கிலலா
வவ்வாண்மையி னரசனபடி யகனுற்றன னெனனுத்
தெவ்வேலமைச சாகளுநதுயா தேககிதெரு மநதாா.

(இ - ள) இவ்வகையாக அவன மனைவியுடன (உறவினா முதலிய) துன்ப மடைபவாகளுந துனபமடைய, சமானமலலாதவாகளல்லாமல் வெறறியிற சமான மானவாகள உலகததிலில்லாத அவவகைய ஆண்டன்மையுடைய சநதிரசேனராசன் உலகினை நீஙகினுனென்று, பகைஞர்களைக கொலலும வேறபடையேந்திய மநதிரிகளுந் துனபமிக்கு வருந்தினாகள எ - று.

அவ்வரசனுககு ஒதத பலமுடையாா ஒருவருமிலலை யாதலாலும, யாவரும் அவனுககுக குறைநத பலமுடையராதலாலும், "ஒவ்வாதவ ரலலாலவய மொபபாருல கிலலா அவவாணமையி னரசன" எனறுா. (கஈ)

வேறு.

கலஙகவிழ்ந்தத நாயகன்போற் கையறறு மிகத்தளாநது
புலமபுநரா யெதிரநோககிப புரோகிதனமற றிதுசொனனுன
புலமபுவதெல் லாநுமக்குப புணாசுசுததைக குமிததனமேற
புலநதவனுக குறுசுகததை யுனனவீா புலமபொழிமின்.

(இ - ள்.) கப்பலைக்கவிழ்த்த வைசியனைப்போலச் செயலற்று மிகவுந் தளர்ச்சியுற்றுப் புலம்புகின்றவர்களைப் புரோகிதன் நேரே பார்த்து இதனைச் சொல்லுகின்றான் (நீங்கள்) புலம்புவதெல்லாம் உங்களுக்குள்ள சுகத்தைக்குறித்தல்லவா? (அஃதிருக்கட்டும்) இறந்தவனுக்குப் பொருந்திய சுகத்தை (உண்டுசெய்ய) நினைத்தீர்களல்லீர். (இனிப்) புலம்புதலை விடுவீர்களாக எ - று.

புலம்புநர் - இதில் நகரம் நிகழ்கால முணர்த்தியது

புலம்பு - முதனிலைத் தொழிற்பெயர் (௧௪)

காவலனுக் கினிச்செய்யுங் காரியத்தைப் புரிமின்கள்
பூவுலகிற் பிறந்தவருட் பொன்றாதா ருளரேயோ
வாவியிறந் தவருடனே யாவியிறந் தவர்யாரே
மேவியவா னுளும்பின்னை விண்ணவரும் வீடுநரே.

(இ - ள்) அரசனுக்கு இனிச்செய்யவேண்டிய (ஈமக்) கடனைச்செய்யுங்கள் பூலோகத்திலே பிறந்தவர்களில் இறவாதவர்களிருக்கிறார்களோ? உயிரொழிந்தவருடனே உயிரொழிந்தவர்கள் யாவரோ? பொருந்திய ஆயுள்கால மொழியின் தேவர்களும் இறப்பவர்களேயாவர்! எ - று. (௧௫)

செய்தக்க காரியத்தைச் செய்துதனு விறந்தவரை
யுய்தக்க நற்கதியி னுறுத்துநரே யவர்க்காத்தர்
பொய்தக்க பொருட்கிரங்கிப் புலம்புநர்க ளெஞ்ஞான்று
மெய்தக்க பொருளறியார் வீணரென விளம்புதலும்.

(இ - ள்) செய்யத்தக்க கருமங்களைச் செய்து, உடலொழிந்தவரை யுச்சீவிக்கச் செய்யத்தக்க நல்லபதவியிற் செலுத்துபவர்களே (இறந்தவர்களுக்கு) ஆப்தர்கள். பொய்மையாகிய (உடலென்னும்) பொருளுக்கிரங்கி அழுதுகொண்டிருப்பவர்கள் எந்தக்காலத்திலும் உண்மையாகிய பொருளை யறியாதவர்கள்; அவர்கள் வீணர்களென்று சொல்லவும் எ - று (௧௬)

சூழுமனோ ரஞ்சிதனே சுமந்துவென வன்றவன்பால்
வாழமைச்ச ரிருவருண் மன்னவனோ சுமந்துவெனும்
பாழியமைச் சனிறைக்குப் பாலனிலா மையினு
லூழினுறு காரியங்க ளுஞற்றினா னுலகேத்த.

(இ - ள்) ஆலோசிக்கும் மனோரஞ்சிதனும் சுமந்துவுமென்று அப்பொழுதவனிடத்திருந்து வாழ்ந்த இருவர் மந்திரிகளுள்ளும், அரசனையொத்த சுமந்துவென்னும் பெருமைதங்கிய மந்திரியே, அரசனுக்குப் புத்திரனில்லையாகலின் பழைமைப்படி செய்கருமங்களை உலகினர் துதிக்கும்படி செய்துமுடித்தனன் எ - று

மன்னவனோ சுமந்துவென்றதால் அச்சுமந்து வென்பான் அரசகுலத்தவனென்றும், கீர்த்தியில் மன்னனை நிகர்த்தவனென்றுங் கொள்க (௧௭)

சுலபைநீர் படிந்தாடித் துணைவேம்பி னிலைதின்று
குலவுமனை புடைபுகுந்தாள் கோதிறருப் பணைமாறிப்
பலருமவ ரிடம்புகுந்தார் பதின்மூன்று நாளளவு
மிலத்கிரி யைகள்பலவு மியற்றிமுடிந் தனபின்பு.

(இ - ள்) (அரசன் மனைவியாகிய) சுலபையென்பவள் நீரின்மூழ்கி ஸ்நானஞ் செய்து, பூங்கொத்தினையுடைய வேப்பிலையைத் தின்று (வள்) நெருங்கிய மனைக் குள்ளே சென்றனள். குற்றமில்லாத தருப்பணஞ்செய்து பலரும் அவரவருடைய இடங்களை யடைந்தார்கள். பதின்மூன்று தினங்கள்வரையில் விளங்குகின்ற பலகிரி யைகளுஞ் செய்துமுடிந்தன எ - று.

வேம்பினிலை, தின்னல்-சுகத்தைவெறுத்தற் கைம்பெண்ணின் றுக்கக்குறிகளு ளொன்று (கஅ)

அமைச்சர்புரோ கிதர்கணித்த ரந்தணர்க ளூர்கிழார்
தமைச்செறிவித் தயர்சுலபை சாற்றுவா ரினிநீவிர்
சுமைசயிலப் புவிதாங்குந் தோளானைத் தந்தூந் திடுமினக்
ணமைசெறுநர் நலியாத வாறென்று நவிற்றினளால்

(இ - ள்) மந்திரிகள் புரோகிதர்கள் சோதிடர்கள் வேதியர்கள் நாகரீகர் கள் முதலியவர்களைக் கூட்டி, உயர்வாகிய நடையையுடைய சுலபை யென்பவள் சொல்லுவாள் இனி நம்மைச் சத்துருக்கள் துன்புசெய்யா வகையாக, சுமையாகிய மலையையுடைய பூமியைச் சுமக்குந் தோளையுடைய அரசனைத் தேர்ந்தெடுங்கள் என்று கூறினள் எ - று (கசு)

தொக்கவர்க ளனைவோருஞ் சூழ்ந்திருக்கு மமையத்தின்
முக்கலர்வந் துரைசெய்வார் முழங்குமத மால்களிற்றை
யிக்கணமே யலங்கரித்திட் டிலகுமரந் தனத்திழைத்த
செக்கமல மலர்மாலை திண்கரத்திற் கொளக்கொடுத்து.

(இ - ள்) அவர்கள் யாவருநெருங்கிச் சூழ்ந்திருக்குஞ் சமயத்திலே, முக்கல முனிவர் அங்கெழுந்தருளிச் சொல்லுகின்றார் முழங்குகின்ற மதத்தையுடைய பெரிய (பட்டத்து) யானையை இந்த விநாடியிலேயே அழகுசெய்து, பிரகாசிக்கின்ற இரத்தினத்தாலிழைத்த செவ்விய தாமரை மலர்மாலையை வலிய கரத்திற்கொள்ளும் படி கொடுத்து எ - று. (உ௦)

தளைவிடுத்து விடுமின்கள் சார்ந்தவனை யதுவெடுத்துத்
திளைமகிழ்வின் வருமந்தச் செம்மலையே மரபினொடு
வளைகடன்மண் ணுலகிற்கு மன்னவனாக் குகவென்று
களைகண்மொழிந் தனர்போந்தா ரெல்லோருங் களித்தனரால்.

(இ - ள்) தளையவிழ்த்து விட்டுவிடுங்கள்; அது எவனை யெடுத்தெடுத்து மிக்க மகிழ்வுடன் வருமோ அந்தப் பெருமையுடையவனையே, வளைந்த கடல் சூழ்ந்த பூலோகத்தைக் காக்கும் அரசனாக முறைப்படி கொள்கவென்று ஆதரவாகக் கூறினர். ஆங்கு வந்தவர்கள் யாவரும் (அதனைக்கேட்டு) மகிழ்ந்தார்கள் எ - று

தளை - கட்டுதல். (உக)

ககனமெனும் பெயருடையக் களிற்றரசை யலங்கரித்துத்
திகலயிலேற் றனகணவ னினிதுமரு மத்தணிந்த
புகரிலர சினுக்குரிய பொன்மலர்த்தா மத்தொடையல்
மகிழ்வதன் கைகொடுத்தார் மன்னனைக்கொள் கென்றாலை.

(இ - ள்) சுலபையெனனும பட்டமகிஷி, நசனமெனனும பெயரையுடைய அரச யானையை அலஙகாரஞ்செயவிதது அரசனைககொணடு வருகவெனறு, கூரமை வாயநத வேலாயுத மேநதிய தன கணவனனை சநதிரசேனராசன இனிதாக மார்பகத்துப பூண்ட குற்றமிலலாத அரசாட்சிககுரிய பொனனாலாகிய தாமரைமலர் மாலையைக களிபபுறுமபடி அதன கையிறகொடுத்தனள. எ - று

அரசயானையென்றதனிலக்கணத்தை,

"காலோர் நானகு நசனிககையுங கோசமும
வாலு மபபோ டேழு மாநிலந தோயப
பாலுஞ சஙகுஞ சாலமபோ லுகிரது
காலினு ஞானற வொருதனிக கையினும
வாலினும வாயினு மருபபினுஞ சோறல
வலலது மதினமூன றுமுழஞசுற றுடைத்தாய
ஏழு முழமுயர நொன்பதுமுழ நீணடது
தீயுமிழ சிறுகண்ணுஞ செபபுகரு முடைத்தாய
முனபுபாநது பினபணிநத தாயின
அவவியல யானையை யரசுவா வென்ப"—என்பதனுனறிக (உஉ)

இநதநக ரினிதாளு மியல்புடைய னைமாறுஞ
சிந்தைதனக் கிசைந்ததொரு செமமலைககொண் டுறுகவெனத்
தநதமொழி யுட்கொணடு தறுகணமத மாலவேழஞ
சுநதரவெற பொனறெழுநது துனைவதுபோ னடநததே.

(இ - ள்) இநத நகரததை யினிதாக அரசுபுரியும இயலபுடையவனும், மனததிறகிசைநதவனுமாகிய ஒரு அரசனைக கொணடுவருவாயாகவென்று கூறிய சொல்லை மனததிறகொண்டு, அஞசாமையையுடைய மதமபொருநதிய பெரிய யானையானது, அழகிய மலையொனறு எழுநது விரைநது நடககாறபோல நடநதது. எ - று

துனைதல - விரைதல. நடநதது அனறு - நடநததன்று. இது "தொட்டனைதது, கறறனைதது" எனபனபோலத தொகுததல. (உ௩)

அனறுமல ரோனவிடுதத வாழியினபின முனிவராக
வொனறுதவம புரிதான முரிமைகொளச சென்றதுபோ
னனறமைசரா முதலானோர் நடககுமதவேழமபின
றுனறினாசென றனாதமககுத தோனறலைககொள வானவிழைநதே

(இ - ள்) அககாலத்திற பிரமதேவன் செலுத்திய (தருப்பைச) சக்கரத்தின் பினனே முனிசிரேஷடர்கள பொருநதிய தவஞசெயயததக்க இடத்தை உரிமையாககொள்ளும்படி சென்றதைபபோல, நலல மநதிரிகள முதலாயினோர் நடநது செலலும மதயானையினபினனே தமககு அரசனைககொள்ளும்படி விருபபுறறுச சென்றார்கள். எ - று

"அனறு மலரோன விடுதத * * * சென்றது" என்றது—பூர்வம முனிவர் பலரும ஒனறுசேர்நது பிரமதேவனை யடைநது, சுவாமீ! அடியேஙகள் தவமபுரிதறகுத் தகுதியான இடமெதுவென வினவ, கமலயோனி கருணைகூர்நது ஓர் தருப்பையைச் சககராகாரமாக வளைதது அதனை யுருட்டி நீஙகள இதனபின சென்று இது

பொருந்துமிடமே உத்தமமானவிடமென றுணர்கவெனக் கூறியனுப்ப அவர்களும் அவ்வாறே யதனைப் பின்றொடர்ந்து அது தங்கியவிடத்தில தவஞ்செய்து பலன்களை யடைந்தார்கள். இதில நேமி விழுந்தவிடம நைமிசவனமெனறாயது என்பது சரிதம்.

இச்செய்யுளில் மலரோன் விடுத்த வாழி ககனமென்னுங் களிறென்றும, அதனைத்தொடர்ந்த முனிவர்கள யானைபின சென்ற மந்திரி முதலானோரென்றும், தவம் புரி தானம் பெறுங்கருத்து அரசனைப் பெறுங்கருத்தென்றும் உவமிக்கப்பட்டன

கொள்வான—வான் எதிர்காலவினையெச்ச விகுதி (உ.ச)

கற்புடைய மடமாதா கணவனையே யலலாது
பொற்புடையா ரிரந்துறினும புலலாத வாறேபோற
பறபலருந் தொழினீங்கிப பரிவினொடு மெதிர்போதச
சற்பமெனச் சீறியவா தமைமவிலக்கித் தயாமேவழும

(இ - ள்) கறபினையுடைய இளமபெணகள தமமுடைய நாயகரையலலாமல, அழகுடையவாகள யாசித்து வேணடினாலும அவாகளைத தழுவாதவகைபோல, பல பேருந தததஙகாரியஙகளை விடுத்து ஆசையோடு (காம மனனவனுககக்ருதி) எதிா செலலவும, உயர்வாகிய குணமுடைய ககனமெனனும யானையானது பாமபுபோலச சீறி அவாகளை விலக்கிறது. எ - று

மடமாதா - அறியாமைக்குணமுடைய பெணகளெனினுமமையும மட மை - மகளிர்குண நானகனுளொன று அனை அசசம மடம நாணம பயிாபபு எனப படும. சாபபம - எதுகைக்நோக்கிச சறபமென நினறது

"கற்புடைய * * * புலலாதவாறு' என்றதை, தாயுமானசுவாமிகள்.

"கற்புறு சிநதை மாதா கணவனையனறி வேறோ

இறபுறத தவரை நாடாா * * * " எனபதனானுணாக (உரு)

வே று.

வரைசெய் மணித்தோள் மனனவனை வலமேல் தாருவிப புணா தருமிப
புரைசெய வயவெங களிறெனறு பொஙகு மகிழ்ச்சி தலைசிறபபத
திரைசெய கடலபோற திரணடெவருந தேமபெய புனலாற றுகளவிததது
விரைசெய மலாததோ ரணமாதி வீதி தோறு மலஙகரித்தாா.

(இ - ள) மேனமையைச செய்யும் இககனமெனனும யானையானது மலை போனற அழகிய தோளையுடைய அரசனை விரைவில தேடிப் பிடிக்குமெனறு பெரு மகிழ்ச்சி யதிகரிகக, அலையொலிசெயயுங கடலபோல யாவருநதிரணடு, மதுரமாகிய நீா பெயதலாற் புழுதியை யடககி, வாசனைசெயயும மலாததோரண முதலியவறறால தெருககளிலெலலாம அலஙகாரஞ செயதாாகள. எ - று

தோரணமாதி எனறதில, ஆதியெனறதால பூபபநதா முதலியனவுங் கொளக

உருவிற சிறநத பொலஙகோயி லோஙகு மணிவாய் தலினீஙகித
தெருவி னடநது நகாகடநது சொனற வேழம வனமபுகுநது
பொருவி றவத்து முககலனாா பொருநதாச சிரமங கணிததாக
மருவி யிருநத தககனுககு மணிமா லிகையைத தரித்ததே.

(இ - ள) அழகின மேமபாடுற்ற பொறகோயிலின [அரசமாளிகையின்] உயர்நத அழகிய வாயிலினினறும புறப்பட்டு வீதிவழியே நடநது சென்ற அரச யானை யானது காட்டிற பிரவேசிதது, ஒப்பிலலாத தவததையுடைய முககலமுனிவா எழுந் தருளிய ஆசசிரமததிறகுச் சமீபமாக அமாநதிருநத தககனெனபவனுககுப பொற் றுமரைமாலையைச சூட்டியது. எ - று

கோயில் - இராசககிருகம ஆசசிரமசகு - மாடககுளகுறறுபோல அததுச சாரியையினறி யுருபேறறது இது ஆசசிரமததிறகு எனபது (உஎ)

மூவா பெருமா னெனையாணட முககட பெருமா னரியாதி
தேவா பெருமா னொருகோடடுச செலவப பெருமா னடியாாகட
கியாவை யரிய விருநதாங்கே யிருநது தகக னரசுரிமை
மேவு மெனினவேல கரதகேநதும வீம மெலும விளமபுதுஙகேள.

(இ - ள) தககனெனபவன இருநதவிடததிலேயே யிருநது அரசுரிமையை யடைநதானெனறால, திரிமூாததிநாயகனும, எனனை யாளாககொணட திரிநேத திரஙகளையுடைய தலைவனும, திருமாலமுதலிய தேவாகளுககிறைவனும, ஒறறைக கொமபினையுடைய செலவ நாயகனுமாகிய விநாயககடவுளுடைய அடியவாகளுககு எவை கிடைததறகரியவை ? (ஒனறுமிலலை !) வேலாயுததைக கையிறறுஙகிய வீம ராசனே ! இனனுஞ்சொலலுவேன கேட்பாயாக. எ - று (உஅ)

வே று.

பஞச துநதுபி முழுங்கின பணணவா பசுநதேன
விஞசு பொனமலா பொழிநதனா வெழுமபின னடுததோர்
நெஞசின மலகிய பரிவெலா நீஙகியோா கையராய
மஞச னுககணி யாதிகள வழஙகினா மரபால

(இ - ள) பஞசதுநதுபிகள முழஙகின. தேவாகள் பசிய தேனசிநதும பொனமலாமாரி சொரிநதாாகள (ககனமெனனும அரச) யானையின பினனே சென்ற வாகள மனதில்நிறைநத துககமெலலாமொழிநது சநதோஷ சிததமுடையவாகளாய, (சிறுவனுகிய) தககராசனுககு ஆபரண முதலியவறறை (அரசுரிமைககேறற) முறைப படி கொடுததாாகள எ - று

துநதுபி - ஓாவகை வாததியம. இது தும் என்றும துப் எனறும ஒலிபப தாதலினிப்பெயாததெனபா (உகூ)

வாச மெனமலா வத்திர மணியணிந தனபி
னாசி யநதண ரறைநதன ரொருபுடை யமாநதாா
கூச மைசசாக ளாதியோா குரைகழல வணஙகித
தேசின மனனவ னேவலாற றிருததக விருநதாா.

(இ - ள) வாசனைபொருந்திய மிருதுவாகிய மலாமாலைகளும, ஆடைகளும, ஆபரணங்களுமணிநது, வேதியாகள் ஆசையோடு ஆசிவசனஙகளகூறி ஒருபககலிற் பொருநதினாாகள மனம பயப்படும மநதிரிகள முதலானவாகள ஒலிககினற வீரக கழலணிந்த அவன பாததததைபபணிநது குற்றமிலலாத அரசன கட்டளைப்படி திருதத மாக விருநதாாகள. எ று. (கூ0)

தக்க னக்கணந் தந்திமா முகனடி தாழ்ந்து
தொக்க வந்தணர்க் காடக மாதிக டூவி
மிக்க வன்னையை வியத்தகு சிவிகையி லேற்றிக்
கைக்க ளிற்றின்மே லிவர்ந்தனன் காலைவெங் கதிர்போல்.

(இ - ள்) தக்கன் அந்தக்கணத்திலேயே சிறந்த யானைமுகமுடைய விநாயகக்கடவுளுடைய திருவடியைப்பணிந்து, கூட்டமாகிய வேதியருக்குப் பொன்முதலியவற்றை (பூரியாக) க்கொடுத்து, (அன்பு) மிகுந்த தாயாகிய கமலையைச் சிறந்த பல்லக்கிலேற்றச்செய்து, காலைப்பொழுதிலுதிக்கும் பாலசூரியன்போலத் துதிக்கையையுடைய அவ்யானையின்மேரி லேறினன் எ - று

ஆடகம் - நால்வகைப்பொன்னிலொன்று அவை —ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநத மெனப்படும். (௫௧)

கவன வாம்பரி யமைச்சர்க ளிவர்ந்தனர் கடவக்
குவளை வாள்விழி மாதரார் குழுவெதிர் நடிப்ப
உவவு வாரிதி முழக்கென வொலிமுர சார்ப்ப
அவனி காவல னனவ னடுகளி றுகைத்தான்.

(இ - ள்) மந்திரிகள் தாவிச்செல்லும் நடையையுடைய குதிரைகளிலேறிச் செலுத்தவும், நீலோற்பலமலர்போலும் ஒளிவாய்ந்த விழிகளையுடைய நடனமாதர்கள் கூட்டமானது எதிரே நடனஞ்செய்யவும், உவாக்கால சமுத்திரகோஷம்போலச் சத்திக்கின்ற பேரிகைகளொலிக்கவும், பூலோகராசனாகிய தக்கனென்பவன் (பகைஞரைக்) கொல்லும் யானையிலிவர்ந்தனன் எ - று.

உவாவென்னுஞ்சொல் "குறியதன் கீழாக் குறுகலு மதனோ - டுகர மேற்றலு மியல்புமா நாகின்" என்னுஞ் சூத்திரத்தால் உவவு என்றாயது உவா பூரணை அமாவாசியை யென்னு மிரண்டுமாமாயினும் கடன் முழக்கு பூரணையிலேயே மிகுதி யென்பது வழக்கு (௫௨)

மலையின் மேலெழு மதியென வார்மத யானைத்
தலையின் மேலெழு வெண்குடை நீழலிற் றங்கு
முலைவி லாவரந் தொருவனூர் புகுந்துலாப் போந்து
கலைவ லாரொடுங் கதிர்மணிக் கோயிலுட் புகுந்தான்

(இ - ள்) மலையின்மேலுதித்த பூரணசந்திரன்போல, ஒழுகுகின்ற மதத்தையுடைய யானையின் சிரமிசை யெழுந்த வெண்கொற்றக் குடைநீழலிற் பொருந்திய கெடுதலில்லாத வரத்தையுடைய ஒப்பற்றவனாகிய தக்கனென்பவன் (கவுண்டின்ணிய) நகரினுட் பிரவேசித்து, (திருவீதி) உலாவந்து நூல்வல்ல பண்டிதர்களுடன் அழகிய மாளிகையினுட் பிரவேசித்தனன் எ - று

உலாவென்றனிலக்கணத்தை,

இலக்கணவிளக்கப்பாட்டியல்

குழமக னைக்கலி வெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்க வுரைத்தாங்
கிழைபுனை நல்லா ருவாமணி மறுகின்
மற்றவன் பவனி வரவெழ் பருவ

முற்றமா ஞாகொழுப் போந்த துலாவாம்
ஐந்து முதலே ழாண்டும் பேதை
எட்டு முதலொன் காண்டும் பெதும்பை
ஆறிரண் டொன்றே யாகு மங்கை
பதினொன் றாதிபத் தொன்பா னாறு
மெதிர்தரு மடந்தைமே லாறு மரிவை
ஆறுதலை யிட்ட விருபதின் மேலோ
ராறுந் தெரிவையெண் ணைந்துமே லிளம்பெண்ணென்
றோருமுடருவத் தோர்க்குரைத் தனரே (௯௩)

போத்தாணியிற் பிறழெழுயிற் றரியணை பொலிய
வாரத் தாழ்வட மகனுரந் துயல்வர வமர்ந்து
வாரத் தானுறு மந்திரத் தலைவரை நோக்கி
யீரத் தீஞ்சொலி னிசைத்தன னிரும்புகழ்த் தக்கன்.

(இ-ள்) பெரும் புகழையுடைய தக்கன் பெரிய அத்தாணிமண்டபத்தில், விளங்கும் தந்தங்களையுடைய சிங்காசனமானது விளங்க, முத்தாலாகிய தாழ்வடமானது இடம்பரந்த மார்பிலசையவீற்றிருந்து, உரிமையால் வந்த மந்திரத்தலைவர்களைப்பார்த்து, குளிர்ச்சிவாய்ந்த மதுரமாகிய சொல்லின்றற சொல்லலாயினன் எ-று.

அத்தாணி - கொலுவிருக்கை மண்டபம்

வாரத்தாழ்வடமென்றதை வார அ தாழ்வடமென்றாவது, வ - உடம்படுமெய்யென நீக்கி, ஆரம் தாழ்வடமென்றாவது சொல்வகைசெய்க. ஆரம்+தாழ்வடம்- தழாத்தொடராகிய மூன்றாம்வேற்றுமைப்புணர்ச்சி (௯௪)

என்னை யாளுடை முக்கண் முனிவனங் கிருந்தா
னன்ன மாதவன் றனைப்பல வரிசையி னழைத்தென்
முன்னரே விடுமின்களென் றுரைத்தனன் முடிசாய்த்
துன்னு சூழ்ச்சிய ரன்னதே யுஞற்றினார் கடிதின்.

(இ-ள்) என்னை யாளாகவுடைய முக்கண்முனிவர் அங்கேயிருக்கின்றனர், அந்தப் பெருந்தவமுடையவரைப் பலவகை மரியாதைகளுடனழைத்துவந்து என்முன்னே விடுங்களென்று தக்கன் கூறினன். சிரமசைத்து யோசிக்குந் தன்மையுடைய மந்திரிகள் அவ்வகையே விரைந்து செய்தார்கள் எ-று (௯௫)

மண்ணி ருந்தவம் வடிவெடுத் தனையமா தவனும்
விண்ணு ரிஞ்சிய கூவிரத் தேர்மிசை மேவிப்
பண்ண மைத்தெழு பாடலோ டாடல்கள் பயில
நண்ணி னன்பெருங் கோயிலி னகர்களி சிறப்ப

(இ-ள்) உலகினர்செய்த பெருந்தவமே உருவமெடுத்ததை யொத்த பெருந்தவசியாகிய முக்கலமுனிவரும், ஆகாயமளாவிய பொகுட்டினையுடைய இரதமிசையாரோகணித்து, பண்ணிசைபொருந்த வெழுகின்ற கீதமும் நிருத்தமும் நிகழும்படி அரசனுடைய மாளிகையில், அந் நகரவாசிகள் களிப்பெய்தும்படி யடைந்தனர். எ-று.

கூவிரம் - தேர்க்கொடிஞ்சி. இஃதோருறுப்பு

மண் - நகர்—இடவாகுபெயர்கள் (௯௬)

விலகி விலனுமிழ் பூணினான் விரைந்தெழுந் தெதிர்போந்
தலகி லன்பொடு மறவனை யாதனத் திருத்திப்
பலவி ரும்பொருள் கொண்டுபூ சனையுறப் பயிற்றி
யிலகு பூணடுகில் கனியெதி ரிட்டடி பணிந்தான்.

(இ - ள்) விட்டுவிட்டுப் பிரகாசிக்கின்ற ஆபரணமணிந்த தக்கராசன் துண்ணென்று (சிங்காசனத்திலிருந்து) எழுந்து எதிர்சென்று, குற்றமில்லாத அன்புடனே அம்முக்கலமுனிவனை ஆதனத்திலிருக்கச்செய்து, பலபெரிய பொருள்களைக்கொண்டு பொருந்தப் பூசைசெய்து, பிரகாசிக்கின்ற ஆபரணங்களும் ஆடைகளும் பழவர்க்கங்களும் எதிரே வைத்துத் திருவடியிற் பணிந்தனன் எ - று.

அறவன் - தருமசொரூபி (கூஎ)

முடிகொள் மன்னவர் புடையெலா மொய்ப்பமுன் வைகி
யடிக ளேநின தருளினா லரசினைப் பெற்றேன்
கடவு ளர்தொழுங் கணபதி யெனக்குநீ யல்லாற்
படியின் வேறிலை பாணியென் சிரத்துவை யென்றான்.

(இ - ள்) கிரீடமணிந்த அரசர்கள் பக்கங்களிலெல்லாம் நெருங்க, அவர்கட்கு முன்னிருந்து, சுவாமிகளே! தேவரீருடைய திருவருளால் இராச்சிய பாரத்தை யடைந்தேன். தேவர்களும் பணியுங் கணேசப்பெருமான் அடியேனுக்குத் தேவரீரேயல்லாமல் உலகத்தில் வேறில்லை (ஆதலின்) தேவரீருடைய கரத்தை யென் சிரமிசை யமர்த்துகவென்றனன் எ - று.

பாணியைச் சிரமிசை வைத்தல் ஆசீர்வாதவகையி லொன்று. (கூஅ)

கனிவி னின்னணங் கூறிய காவலன் சிரத்தின்
முனிவ னங்கையை வைத்தருண் முகிழ்த்துமே தறிவோய்
துனிவு றும்பகை யுனக்கிலை பொருளெலாந் துவன்றி
யினிதின் வாழ்தியென் றிசைத்தறத் தியல்பையு மிசைத்தான்.

(இ - ள்) மனக்கனிவுடன் இவ்வகையாகக் கூறிய அரசனாகிய தக்கன் சிரமேல், முக்கலமுனிவர் தம் துள்ளங்கையை வைத்துக் கிருபையரும்பி, பேரறிவாளனே! துன்புசெய்யும் பகைவர் உனக்கிலர் எல்லாப் பாக்கியமுமுண்டாகும் இன்பமாக உயிர்வாழ்க்கடவையென்று தருமநீதியையு மெடுத்துக் கூறினார் எ - று.

அங்கை - உள்ளங்கை அகம் கையெனனும் இருசொற்களுங்கூடிய வழி "அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்" என்னுஞ் சூத்திரவழி புணர்ந்தது.

கன்ன லஞ்செழுங் காட்டுறு தண்ணடை யாதி
முன்னர் முக்கல முனிவனுக் களித்துமே தறிவின்
மன்னு மந்தணர் பெரியவர் மற்றையர் தமக்குந்
துன்னி ரும்பொரு ணிலமிவை சொரிந்தனன் மழைபோல்.

(இ - ள்) அழகிய கருப்பங்காடு அகலாத மருதநிலத்தூர் முதலியவற்றை முதலிலே முக்கலமுனிவருக்குக் கொடுத்து, பேரறிவுடன் நிரம்பிய வேதியர் பெரியோர் வேறுள்ளோர் முதலானவர்களுக்கும் நெருங்கிய பெரும்பொருள் நிலம் இவை போல்வனவற்றை மேகம்போல (தானமாய்)ச் சொரிந்தனன். எ - று.

பொருள் நிலமிசை சொரிந்தானென்றது சொர்ணதான பூதானங்கள் செய்தனனென்பதாம். தண்ணடை - மருதநிலத்தூர். (ச0)

வேதனிந்திரன் விண்டுவே முதலிய விண்ணோர்
மாதர் மென்கள மங்கிலி யத்தொடு வயங்கச்
சாத னஞ்சொடு தயங்கிய கண்டனார் கோயி
லாதி சைவர்க்கு மளித்தனன் பூசையா திகளே

(இ - ள்) பிரமன் இந்திரன் திருமால்முதலிய தேவமாதர்களுடைய மெல்லிய கழுத்துக்கள் திருமங்கிலியங்களுடன் விளங்க, கொல்லத்தக்க விஷத்துடன் விளங்கிய ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானாரது திருக்கோயிலிலர்ச்சிக்கும் ஆதிசைவ வேதியருக்கும் பூசை முதலியவற்றைச் செய்தனன் எ - று.

திருமால்முதலியோர் ஒருங்குகூடிப் பாற்கடலை மதித்தகாலத்தில் அதிற் றோன்றிய கொடுவிடம் யாவரையுங் கொல்ல யத்தனித்தபொழுது, தேவர் வேண்டுகோளின்படி சிவபெருமான் அதனைப் பானஞ்செய்து அவர்கள் மீண்டும் இறுமாப்படையாவண்ணம் தமது கண்டத்தில் அறிகுறியாக என்றும் பொருந்த அமர்த்தினரென்பது சரிதம்.

"வேதனிந்திரன் விண்டுவேமுதலிய விண்ணோர் மாதர்மென்கள மங்கிலி யத்தொடு வயங்கச் சாதனஞ்சொடுதயங்கிய கண்டனார்"—என்றதை, **கந்தபுராணம்** "செற்றுல முயிரனைத்து முண்டிடவே நிமிர்ந்தெழுஞ் சிந்தை மேற்கொள் - பற்றுலங் கதுநுகர்ந்து நான்முகனை முதலோர்தம் பாவை மார்கள் - பொற்றாலி தனை யளித்தோன்'—எனவருவதனா னுணர்க. (சக)

சேனை காவலர் திருந்திய வமைச்சர்க ளிவர்க்கு
யானை வாம்பரி யிருநில மாதிக ளிசைத்துத்
தேனை மாரியி னிதழியான் றிருப்பணி பலவு
மூனை யேந்திய வேலினா னுஞற்றிடப் பணித்தான்.

(இ - ள்) சேனைத்தலைவர்கள் திருத்தமுற்ற மந்திரிகள் முதலிய இவர்களுக்கு யானைகள் தாவிச்செல்லுங் குதிரைகள் பெரிய பூமிகள் முதலியவற்றைக் கொடுத்து, தேனை மழைபோலச் சொரியுங் கொன்றைமாலையணிந்த சிவபெருமானுடைய பல வகைத் திருப்பணிகளையும், ஊனைந்தாங்கிய வேலையுடைய தக்கராசன் செய்யும்படி கட்டளையிட்டனன் எ - று.

ஊனையேந்திய வேல் என்றது சத்துருக்களை யெக்காலமுஞ் சங்கரிப்பவ னென்னுங் குறிப்புணரயாற் கூறியது. (சஉ)

பொளிந்து திண்சிலை பொற்புறு கோயிலொன் றியற்றி
யளிந்த வன்பினுற் கணேசனை யாங்குற விருத்தித்
தெளிந்த முக்கணன் செப்பிய விதிப்படி தீமை
விளிந்து வெந்திட நித்தலும் பூசனை விளைத்தான்

(இ - ள்) கருங்கற்களைப் பொளிந்து அழகிய கோயிலொன்று கட்டுவித்து, மிக்க ஆசையாற் கணேசப்பெருமானை அதில் எழுந்தருளப் பிரதிட்டைசெய்து, தெளிவமைந்த முக்கண்முனிவர் உபதேசித்த விதிமுறையே (தன்) பாவங்கள் குறைந்து நீங்க நாடோறும் பூசைசெய்து வந்தான் எ - று. (சங)

பெருந்து பெற்றதா யாகிய சுலபைதன் பதமு
மருந்த காதலெய் கமலைதன் பதமும்வைக லுந்தாழ்ந்
துருரி லாவகை யொருகுடை நீழலி னுலகை
மருந்த நீதியி னளித்தன னமரர்கா வலனைப்போல

(இ - ள்) பெருமறைபெற்ற தாயாகிய சுலபை யென்பாளுடைய பாதங்களையும், நீங்காத ஆசையைச் செய்யும் (பெற்ற தாயாகிய) கமலையென்பாளுடைய பாதங்களையும் நாடோறும் நமஸ்கரித்து, சத்துருக்களில்லாத வகையாக ஒருகுடையின் நிழலிலே உலகமானது நீங்காத நீதியுடன் தேவராசனாகிய இந்திரனைப்போல (உலகினை) அரசு செய்து வந்தனன் எ - று

சுலபையென்பாள் காலஞ்சென்ற அரசன் மனைவி. (௪௪)

தோய நீடிய வாவிகள் சூழ்கரு நாட
தேய மாண்டொழு வல்லவன் சிறுமைநோ யிரிந்து
மேய சீர்த்தியின் விதர்ப்பநா டாள்வது வினவிப்
பாய சீர்ப்பரி சனத்தொடும் படர்ந்துவந் தடுத்தான்

(இ - ள்) நீரானது மிகுந்துள்ள தடாகங்கள் புடைசூழ்ந்த கருநட தேசத்தை யரசுசெய்து வாழ்கின்ற வல்லவராசன் தன் மகனாகிய தக்கன் நோயொழிந்து பொருந்திய சிறப்புடன் விதர்ப்பநாட்டை யரசாள்வதைக் கேள்வியுற்று, பரந்த சிறப்பையுடைய பரிசனங்களோடும் விரைந்துவந்து சேர்ந்தனன் எ - று. (௪௫)

வார மாயவ ரவர்களு மளவளாய் வாழ்நாள்
வீர சேனனென் றியற்பெயர் மேவுமன் னவற்குப்
பேர வாவிய புகர்முகக் களிற்றுறும் பெருமான்
கார வாவிய விரவுறு கனவிலீ துரைக்கும்

(இ - ள்) நீதியோடு அவர்கள் யாவரும் ஒன்றுகூடி வாழுநாளில், வீரசேனனென்று இயற்பெயர் பொருந்திய அரசனுக்குப் பெருமையை விரும்பிய புள்ளிவாய்ந்த யானைமுகமுடைய விநாயகக்குரிசில், கருமைபொருந்திய இரவிலுண்டான சொப்பனத்தில் இதனைச் சொல்லுவார். எ - று. (௪௬)

பெண்மை முற்றிய நின்மகள் பெருகிய தவத்தா
லண்மை முற்றிய தக்கனை மணந்திடப் படுவ
டிண்மை முற்றிய மன்னவ தெளிகென செப்ப
வுண்மை முற்றிய வவனுமவ் வாறுத வினனால்.

(இ - ள்) பெண்ணலங்கனிந்த உன் புத்திரியானவள் தான் செய்த பெருந்தவத்தினால் வளமிகுந்த தக்கனென்னு மரசனால் மணஞ்செய்யப்படுவாள் வலிமை முதிர்ந்த வீரசேனராசனே! தெளிவாயாகவென்று திருவாய்மலர்ந்தருள, சத்தியமிகுந்த அவ்வரசனும் அவ்வண்ணமே (தன் குமாரத்தியைத் தக்கனுக்கு) மணஞ்செய்து கொடுத்தனன். எ - று. (௪௭)

வேறு

பேம வடிவேற் றக்க னுக்குப் பிறந்த பானு வென்றனக்குத்
தோமில் கடக னவற்குக் கபால னவற்குக் கேதாரனே

யாமவ விளைநகரு வடிததிரதத ளையகா ஞனிசது திரசேனன
வீம வவறகு நீபிறநதாய விளஙகுங கணேசா திருவருளால.

(இ - ள) விளஙகுகினற கணேசனுடைய திருவருளினால, அசசமுடைய வேற படையேநதிய தககனுககுப (புதலவன) பிரசாபதியெனபவன அப பிரசாபதியுக் குக குறறமிலலாத கடடாரதன அககடடாரதனுககுச சுபாலன அசசுபாலனுககுக கெதாரகன அககெதாரகராசனுககு வபுததிரதகன அவவபுததிரதகனுககுப புததிரன சிததிரசேனனென. வீமராசனே! அசசிததிரசேனனுககு நீ (மகனாகப) பிறந தாய. எ - று (சஅ)

வடிவேற றககன முதலாக மனமுறு நுநதை யீறுகக
கடியா தனபி னனேவோருங கணேசா மலாததாள பூசிததா
ரொடியா விழைவி னினிநீயு முருததுப பூசை யுனகருதது
முடியா நிறகு மெனவிளமபி முனிவ னிதுவும புரிநதிடடான

(இ - ள) அரசனே! வடிதத வேறபடையேநதிய தககன முதலாக உன தந தையாகிய சிததிரசேனனீறாக யாவரும நீஙகாத அனபுடன கணேசபபெருமானு டைய திருவடிததாமரையைப பூசிததாாகள. இனி நீயும நீஙகாத அனபுடன (கணேச மூாததியைப) பூசைசெயக. உன கருதது நிறைவேறுமெனறு விசுவாமிததிர முனி வா கூறி இதனையுஞ செயயலாயினா எ - று (சகூ)

தககனரசாடசிபபடலம முறறிறறு.

ஆகந் திருவிருத்தம் - கஙகச

---

# வீமனுபதேசம்பெற்றபடலம்.

விசுவா மிததிரன வீமனை நோககினன
திசைசயா னுரைசெயவா னெரிநதிலவ கெஃகினுய
மசசமா லொடுமே மலரயன காணகிலா
வசசனுண மலரடிக கனபுசெய மரபுகேள

(இ - ள) விசுவாமிததிர முனிவா வீமராசனைப பாாதது மொணடு சிறுப் பததுடன சொலலுகினறாா காநதிவிடடுப பிரகாசிககும வேலேநதியவனே, மசசா வதாரஞசெயத திருமாலுடன தாமரைமலாயில இருககும பிரமனும காணமுடியாத தநதையாகிய கணேசபபெருமானுடைய மலாப்போனற திருவடிககுப பகதிசெய்யு முறைமையைக கேடபாயாக எ - று

அசசன - தநதை (இது திசைசசொல) எனனை "செநதமிழ் நிலஞ்சேர் பனனிரு நிலததினு - மொனபதிற றிரணடினிற றமிழொழி நிலததிலும - தஙகருத தினவே திசைசசொல் லெனப" எனறது சூததிரம (க)

எமபிரான கருணைகூ ரேகவக கரமறுப
பமபுயா வஙகளைப பாறறுவ தெனவளிய
இமபமா நலகுவ தீதுறு மெழிநிலை
வமபுறீ ராடுபு வருததவிங கெனறனன

(இ - ள்) எமது கணேசபெருமானது கிருபைமிகும ஏகாடசர மநதிரமா னதுமிக்க பாவஙகளை யோட்டவலலது, நினைதத பலனை இவவுலகிலேயே கொடுகக வலலது அதனை யுனககுக கொடுபபோம எறிகினற அலையையுடைய வாசநதஙகிய நீரினமூழ்கி இப்பொழுது வருகவெனறு கூறினா எ - று

ஆடுபு - ஆடி இதுசெயபு எனனும வாயபாடடிறநத காலவினை யெசசம

நாமவேன மனனவ ஞனஞெசெய தணமிஞன
காமவே ளெரியெழக கணடவன சேவடிக
கேமமா ரன்புசெய யிருடியே காககர
மோமமா திகளபுரிந தொண்செவி யோதினன

(இ - ள) அசசநதரும வேலேநதிய வீமராசன (அவவாறே) நீரினமூழகி வநதனன மனமதனைச சாமபராக விழிதத சிவபெருமானுடைய செவவிய திருவடி களுககுமிகக அனபினைசசெயயும விசுவாமிததிரமுனிவா ஓமமுதலியவறறைசசெயது ஏகாக்ஷர மநதிரததை (வீமராசனுடைய) ஒளளிய செவியிலுபதேசிததனா எ - று

நானம் - ஸநானமெனனும ஆரியததிரிபு. காமவேள - இருபெயரொட்டுப பணபுததொகை. வேளெனறது முருகனுககும மதனனுககுமுரிய பொதுப்பெய ராதலின் காமனாகிய வேளென முனனையது சிறபபும் பினனையது பொதுவுமாக வநதது.

எணணிடு முறைமையு மியமபிநும பதிபுகுந
தணணலந தககனமுன ஞககிய வாலைய
நணணிவை குபுகின நனமனுக கணியென
வுண்ணெகிழ் கருணையி னோதினன முனிவனே

(இ - ள) (அதனைக) கணிககுமுறைமையையுங கூறி, உம்முடைய நகரத தையடைநது, பெருமைவாயநத அழகிய தககராசன முறசாலததிற செயத கோயிலை யடைந்து வசிதது, நாடோறும (இநத) நலலமநதிரததைக கணககககடவாயெனறு மனமுருகிய கிருபையுடன விசுவாமிததிரமுனிவா கூறினா எ - று

வைகுபு - வைகி—செயபு எனனும வாய்பாடடிறநத காலவினை யெசசம (ச)

வீமனும விசுவா மிததிரன விடைகொடு
காமரு பூணமுலைக காதலி யுடனவன
வாமறி மானபயில வனஙகடந தெயதினன
றாமரை யோடைசூழ தனபதி யெலலையினை.

(இ - ள.) வீமராசனும விசுவாமிததிரமுனிவாபால விடை பெறறுககொ ணடு, அழகிய ஆபரணமணிநத மனைவியோடு, தாவிசசெலலும மறி மான முதலியவை சஞசரிககும வனததைத தாணடிககொணடு, தாமரைத தடாகஙகள புடைசூழ்நத தன நகரததி னெலலையி லடைநதான எ - று.

காமரு - காமம மருவெனபதனறிரிபு மறையென்றது மானில ஒருவகை.

மநதிரத தலைவாகள ளரவுகேட டெதிாகொடு
தநதிமால வேழமுந தமனியச சிவிகையு
முநதுற வுயததனா முடிபடி நீடடினா
தநதததாய காவலனா தனையாவ்பா லாயினா.

(இ - ள்) மந்திரத்தலைவர்கள் (அரசனும் மனைவியும்) வருகையைக் கேட்டு (களித்து) எதிர்சென்று பெரிய யானையையும் பொன்னாலாகிய சிவிகையையும் முற்பட்ச் செலுத்தி (தமமுடைய) முடியை அவர்களடியிற் சூட்டிப்பணிந்தார்கள். தந்தை தாயரைக்கண்ட இளஞ்சிறுவர்களைப்போலக் களிகொண்டவர்களானார்கள். எ - று (௬)

இருவரு மூர்தியூர்ந் தியமுதல் வரிசையோ

டுருகெழு நகரினு ளோங்குதங் கோயிலை

மருவிவண் பொருள்பல மறையவர்க் குதவினா

ரருளினற் பலரொடு மளவளாய் வைகினார்.

(இ - ள்) (வீமராசனுமவன் மனைவியுமாகிய) இருவரும் யானையும் பல்லக்குமிவர்ந்து, வாத்தியமுதலிய சிறப்புகளுடனே அழகுமிக்க நகரத்திலே உயர்ந்த தமது மாளிகையை யடைந்து வளமமைந்த பலபொருள்களை வேதியருக்குக் கொடுத்து, அன்புடன் பலரோடும் அளவளாவி வாழ்ந்திருந்தார்கள் எ - று (எ)

பண்டுபோ லமைச்சரைப் பாரபுரி யப்பணித்

தொண்டிறற் றக்கன்மு னுஞற்றிய வாலயம்

விண்டவாக் கேற்றன மேவியே காக்கரந்

துண்டவெண் கோட்டனைச் சூழ்ந்துளத் தெண்ணினான்.

(இ - ள்) முன்போலவே மந்திரிகளை இராசசியபாரஞ்செய்யக் கட்டளையிட்டு, ஒளிரிய வலிவாய்ந்த தக்கன் முற்காலத்திற்செய்த திருக்கோயிலில், சிறந்த தவசிகளுக்கு ஆணசிங்கமபோன்ற வீமராசன் பொருந்தி, ஏகாட்சர மந்திரத்தைத் துண்டமாகிய வெள்ளிய கொம்பினையுடைய விநாயகக்கடவுளைத் தியானித்து மனத்திற் கணித்தனன். எ - று. (அ)

வேறு

விநாயகர் தமையும் பூசை விதியுளி யியற்றி யெல்லாம்

விநாயக ருருவ மென்றே மெய்யுறக் கண்டோ வாமல்

விநாயகர் மனுவை யெண்ணி வீமனோற் றிருக்கு நாளில்

விநாயகர் கருணை கூர்ந்து விழியெதிர் தோன்றி நின்றார்.

(இ - ள்) விநாயகக்கடவுளையும் விதிப்படி பூசைசெய்து, யாவும் விநாயகர் வடிவமேயென்று உண்மைபொருந்தக்கண்டு, விநாயகப்பெருமான திருமந்திரத்தை நீங்காமற் கணித்து வீமன் நோற்றுக்கொண்டிருக்குங் காலத்தில், விநாயகக்குரிசில் கிருபைமிக்கு அவன் கண்ணுக்கெதிரே பிரசன்னமாயினார் எ - று (௯)

வணங்கலார் கணங்க ளெய்யும் வெய்யபடை வீமன் சூழ்ந்து

கணங்களுக் கதிப னான கணேசநின் பாதத் தார்வ

மிணங்குதல் வேண்டு நல்ல வெச்சமொன் றெய்தல் வேண்டு

முணங்குத லில்லா முத்தி யுதவுதல் வேண்டு மென்றான்.

(இ - ள்) சத்துருக்களுக்குத் தீமையைச்செய்யும் வெற்றிதங்கிய ஆயுதமேந்திய வீமராசன் (விநாயகக்கடவுளைப்) பணிந்து, கணங்களுக்கரசனான கணேசப்பெருமானே! தேவரீருடைய பாதத்தில் ஆசைபொருந்தல்வேண்டும் நல்ல புத்திரப்பேறு ஒன்று உண்டாதல்வேண்டும் கெடுதலில்லாத முத்தியை யனுக்கிரகித்தல் வேண்டுமென்று விண்ணப்பித்தான் எ - று

கணம்+ஈசன் - கணேசன். இது வடமொழிக் குணசந்தி. (௧௦)

பூரண ரவனை நோக்கிப் பொருவின்மைப் பாதத் தன்பும்
மேரணி கனக மேனி யெச்சமு நினக்குத் தந்தாஞ்
சீரணி முத்தி பின்னர்ச் சேர்த்துது மில்லிற் செல்கென்
றாரண முரைத்த வாயா லறைந்தனர் மறைந்து போந்தார்.

(இ - ள்) பரிபூரணராகிய விநாயகக்கடவுள் அவ்வீமராசனைப் பார்த்து, ஒப்பில்லாத நம்முடைய திருவடியில் அன்பும், அழகுமிக்க பொன்மேனியுடைய புத்திர பாக்கியமும் உனக்குத் திருவருள் செய்தோம் (உன்னைச்) சிறப்புடைய முத்தியிற் சேர்ப்போம். வீட்டிற்குச் செல்கவென்று வேதங்களை யருளிச்செய்த திருவாயாற் பின்னே உரைத்தருளி அந்தர்த்தானமாயினர். எ - று.

அறைந்தனர் - முற்றெச்சம். (கக)

விற்றழும் பிலங்கு மங்கை வீமனில் லகத்திற் சென்று
செற்றலர் புரமுன் றட்ட தேவனைக் கணேச ரோடு
மற்றமில் பூசை யாற்றி யந்தணர்க் காடை யாதி
முற்றுறக் கொடுத்து வந்தான் முகிற்குழாம் விளர்ப்ப நாணி.

(இ - ள்) விற்றழும்பானது விளங்குகின்ற வீமராசன் தன் மாளிகையிற் போய், பகைஞர்களது திரிபுரங்களை யெரித்த சிவபெருமானைக் கணேசப்பெருமானுடன் குற்றமில்லாத பூசைசெய்து, வேதியருக்கு ஆடைமுதலியவற்றை மேகசாலமும் நாணமுற்று (உடல்) விளர்க்கும்படி ஆசையடங்கக் கொடுத்து வந்தனன். எ - று.

விளர்த்தல் - வெண்ணிறமாதல் பசையறுதலென்றபடி. (கஉ)

வேறு.

யாரு நேரரி யானரு ளெய்தலாற்
சாரு காசினி தன்வயி னேமமே
யோரு மோருருக் கொண்டுதித் தாலெனப்
பாரு மேத்தவோர் பாலன்வந் தானரோ.

(இ - ள்) (தனக்கு) யாவருஞ் சமானங்கூற அரியவனாகிய வீமராசன் (விநாயகக்கடவுளுடைய) திருவருளை யடைதலால், சாருகாசினியென்னும் அவன் மனைவியிடத்தில், பொருந்திய பொன்னே யோருருவுகொண் டுதித்தாற்போல உலக முழுதுந் துதிசெய்யும்படி ஓர் பாலகன் பிறந்தனன். எ - று. (கங)

திருக்கி லாதவன் செய்வன செய்துபின்
றருக்கி லாரணர் தம்மைமேவி ஞயாமோய
ருருக்கு மாங்கதத் தொளிர்தரு மைந்தனுக்
குருக்கு மாங்கத னென்று ரைத்தானரோ.

(இ - ள்) வஞ்சகமில்லாத வீமராசன் செய்யத்தக்க கருமங்களைச்செய்து, பின்னர்க் குற்றமில்லாத வேதியர்களைவினவி, பொன்போலும் பிரகாசிக்கின்ற தேகத்தையுடைய மகனுக்கு உருக்குமாங்கதனென்று பெயரிட்டனன். எ - று.

உருக்குமம் - பொன். உருக்குமம்+அங்கதன்=உருக்குமாங்கதன். (கச)

பிள்ளை மை யபரு வமபெயா காலையிற
கள்ள வைமபொறி யாறறுங கபிலாபாற
றெள்ளு மைமநதனை சோர விடுததன
னள்ளி லைப்படை யங்கையின வீமனே

(இ - ள) கூரமைவாயநத சகடவெடிவான வேறபடையை அழகிய கையிற் ருங்கிய வீமராசன களளததனமையுடைய ஐமபொறிகளையுங கோபிகருங் கபில முனிவரிடததில, தனதெளிநத (அறிவையுடைய உருககுமாஙகத னெனனும) மக னைப பிளளைமைபபருவ மகலுஙகாலததிலே மசருமபடி விடுததனன எ - று. (கரு)

புகலு மாதவன பொனனடிப பததியாற
சகல விததையுந தாஙகியப புததிர
னகலி லாத வுவபபரு டநதைபா
லகலி ருமபுவி யாடசியுந தாஙகினன.

(இ - ள) மேறசொல்லிய பெருநதவமுடைய அககபிலமுனிவனது பொற் பாததததில வைதத பததியினுலே, எலலா விததைகளையு முணாநது, அபபுதலவன கெடுதலிலலாத களிபபைததருந தநதையினிடததிருநது பரநதபெரிய உலக பாரத தையும பரிததனன எ - று (கசு)

வீமன பினபு விநாயகன மநதிர
மேம மலக வியமபின னனைனுபு
காம னனனவக காளைபி தாவினுஞ
சேம வனபு செலுததினன றேவனபால.

(இ - ள) வீமராசன பிறகு விநாயக மநதிரததை (தன புதலவனுகிய உருக்கு மாங்கதனுககு) நனமை மிகுமபடி உபதேசிததனன மனமதனையொதத இளம பருவமுடைய அவவுருககுமாஙகதன தன றநதையைக காட்டிலும விநாயககடவு ளிடததிற சேமநதரும அனபை (மிகுதியாக)ச செலுததினன எ - று. (கஎ)

இனன வாறிவ னேரமப னனபுசெய
தொனன லாரை யுருடடித திசைதொறுந
தனன தாணைச சகட முருடடினன
பொனனும வாணியும பூவுங களிககவே.

(இ - ள) இவவுருககுமாஙகதன இநதவகையாக விநாயககடவுள பகதி யைச்செயது, சததுருககளைத துவமசஞசெயது, திருமகளும கலைமகளும பூமிதேவி யுங களிபபெயதுமபடி திசைகளிலெலலாம [எஙகும] தன ஆககினை சககரததைச செலுததினன எ - று (கஅ)

வீமனுபதேசமபெறறபடலம முறறிறறு.

ஆகந் திருவிருந்தம் - கசுஙஉ

# உருக்குமாங்கதன்சாபம்பெற்றபடலம்.

அருக்கன வேறுமண ணிருநதென வயிரொளி யாதனத தினிமேலறி
யுருககு மாங்தத னுலகுயிரக குளததிரு ளுறுவகை முறைசெயதங
கிருககு நாளையின மிருகஙகள வனததிடை யீணடிவண பயிராதி
முருககு கினறன வெனசில ரடுததெதிா முடிபணிந துரைசெயதாா.

(இ - ள்.) (ஆகாயத்திலிருககுஞ சூரியனனறி) வேறே சூரியன் பூமியி லிருந்தாறபோல, உருககுமாஙகத ராசன ஒளிவிளஙகுஞ சிஙகாசனததிலேறி உலகி லுள்ள உயிாகளுககு மனதில அஞஞான விருளுணடாகாவகையாக அரசுசெலுததி வாழுஙகாலததில, மிருகஙகள வனததில நெருஙகி வளமமைநத பயிா முதலியவறறை யழிககினறனவெனறு, சிலா வநது அரசனுககெதிரே சிரமவணங்கிச செபபினா எ-று.

ஏடடை தீாமனத துருககுமாங கதனவ ரியமபிய மொழிகேளா
வேடடை யாடுது மெனவெழுந திருநதனன வெயயபோாப படைநதானை
கேட்டு மேவின வலைஞாக ளீணடினா கிளாபாி சனததோடுங
காடடை மேயினன காியாி குயவாி கரடியா திகளகொனறுன.

(இ - ள) தளர்வொழிந்த மனதையுடைய உருக்குமாஙகத ராசன அவர்கள் சொல்லிய வாாததையைககேடடு, (அபபடியாயின) வேட்டையாடுவோ மெனறெழுந் திருநதான கொடுமபோா புரியும ஆயுதமேநதிய சேனைகள (அதனைக)கேட்டு வந தன. வலைஞாகள நெருஙகினாாகள். விளஙகுகினற பாிசனஙகளுடன (அரசன) காட் டையடைநதான யானை சிஙகம புலி கரடி முதலியவறறைக கொனறனன. எ - று.

ஆடுதும - உளப்பாட்டுத தனமைப பனமை வினைமுற்று (உ)

கைவ ளாநதிடும வேடடையிற கதிதகெழுங் கருததொடுங கலைசெநநா
யெயவ ளாநதிடு மிடமபல துாஇததுாஇ யெதிாபடு மானகொனறு
மொயவ ளாநதிடு முழையருந தணபபுற முனனுவான றளாவெயதி
மெய்வ ளாநதிடு கவியெனு மாதவன மேவுகா னகஞசோநதான.

(இ - ள) அதிகாிககினற வேட்டையாடுதலில உணடாகிய எணணததுடன கலைமானகளையுஞ செநநாயகளையும அவை பொருநதிவாழும பலவிடஙகளில தேடித தேடி எதிரே வரும மானகளைக கொனறு, வலிமைமிகக அருகுளளோரும சோாவ டைய உருககுமாஙகதனகளைபபுறறு, உணமைமிகக கவியெனறும பெருநதவமுடைய முனிவன வாசஞசெயயும வனததை யடைநதனன. எ - று. (௩)

விழியெ திாபபடு மாசசிர மநதனை மிகுநதெழு நீாவேடகை
யழிவு செயதலி னடுததருந தவனபுன லாடுலான செலவாஙகே
கழிம கிழசசியிற றனியிருந திடடவக கவிமுனி மனையாளைப
பழியை யஞசுவா னன்னைநீா தருகெனப பணிவொடு மிரநதானால.

(இ - ள.) மிகுதியாகததோனறிய தாகவிடாய துனபுசெய்தலின, (உருக்கு மாஙகதன தன) கணணெதிாதோனறிய ஆசசிரமததைச சமீபிதது, அருநதவமுடைய அம்முனிவன் நீராடச செலலுதலால, அவவிடததிற் பெருஙகளிபபுடன் ஒனறியாக

விருந்த அந்தக் கவிமுனி மனைவியை, பழிக்குப் பயந்த உருக்குமாங்கத ராசன், தாயே! நீர் தருகவென்று அடக்கத்துடன் யாசித்தான. எ - று (௪)

புருந்த மன்னவன் றிருவுரு வெழிலினைப் பொள்ளென வெதிர்நோக்கி
முருந்தை யென்பவண முரிசிலைக் காமவேண மொய்கணை நிறைபோழ
விருந்த நீர்நகை யான்மிக வாடிய மெலிவையு முணராதே
நெருந்த னுள்ளமுங் காதலுந் தோன்றமு னின்றிது மொழிகுற்றாள்.

(இ - ள்.) (அவ்வாறு நீர் வேட்கையால்) வந்த உருக்குமாங்கத ராசனுடைய சிறந்த தேக வழகை முருந்தை யென்பவள் உடனே நேரிற்கண்டு, வளைந்த (கருப்பு) வில்லையுடைய மதனனுடைய நெருங்கிய பாணங்கள் (தன்) காயினையுடைக்க, அதி கரித்த தாகவிடாயால வருந்திய களையையும் அறியாமல, இளகிய தன மனமும் ஆசையும் வெளிப்பட (அவ்வுருக்குமாங்கதனுக்கு) முன்னேநின்று இவ்வார்த்தைகளை சொல்லுகின்றாள் எ - று. (௫)

வேறு

காவல நின்னைப் போலுங் காமரு வடிவி னானைத்
தேவர்கள் குழாத்தி னுள்ளுஞ் சிறியனேன் கண்ட தில்லை
மேவின விலக்க ணங்கள் முழுதுநின் மெய்யி லென்றாற்
பாவையா யாவ ரேநின் படிவங்கண் டுளாஞ் சோரார்.

(இ - ள) அரசனே! உன்னைப்போலும் அழகுவாய்ந்த தேகமுடையவனைத் தேவர் தொகுதியிலேயும் அடியாள கண்டது கிடையாது. பொருந்திய (சாமுத்திரிக) விலக்கணங்கள யாவும உன தேகத்தில (உள்ளன) என்றால், உன் வடிவத்தைப் பார்த்து எந்த மாதர்கள்தாம மனமயங்காதவர்கள? (யாவரு மயங்குவர்) எ - று (௬)

போரிகை முழக்க றாத பெருங்கடை வாய்த்த மன்னா
சாரிகை மொழியி னல்லார் தங்களுக் கிளமை மைந்தர்
காரிகை கண்டா லன்றோ கலவியிற் பிணைப்பி னல்லால்
வேரிகை செய்தா லன்ன மிகுமயக் கொழிவ தின்றே.

(இ - ள்) முரசவாத்தியத்தின் ஓசை யகலாத பெரிய தலைவாயிலையுடைய அரசனே! நாகணவாய்ப் புள்ளின்மொழியைப்போன்ற மொழியையுடைய மாதர்களுக்கு, இளம புருடர்களுடைய அழகைப் பார்த்தால அவர்களுடன புணர்ச்சியிற் கூடினாலன்றி, கட்குடித்தாற்போன்ற மிக்க மயக்கமானது ஒழியமாட்டாது. எ - று.

சாரிகை - நாகணவாய்ப்புள். (௭)

வதையவல விடமுன் கான்ற வாருதி மீட்டு முய்யச்
சுதையமிழ் துமிழ்ந்த தேபோற் றோன்றனின் வனப்பிற் றோன்றித்
துதைதரு காமத் தீயுன் றோளிலென் முலைகள் பாய்ந்து
புதைதரு கலப்பி னல்லாற் போக்கிலை யென்று கூறி.

(இ - ள்) இறக்கும்படி கொடிய ஆலத்தை முதலிற்கொடுத்த சமுத்திரமானது மறுபடியும் (அவர்களை) உச்சீவிக்க, வெள்ளிய அமிர்தத்தைச் சிந்தியதுபோல், அரசனே! உன்னுடைய அழகினின்று தோன்றி யென்னை நெருக்கிய காமத்தீயானது உன் புயத்தில் என் முலைகள் பாய்ந்து புதையும்படி (நாமிருவருங்) கலந்தாலல்லாமற் போவதில்லையென்று சொல்லி. எ - று. (௮)

கலைநல நெகிழ்ந்து சோரக் கருங்குழல் குலைந்து சாய
முலைவளர் முத்த நீற முன்கையிற் றொடிமண் வீழ
வலைவிழி பருகு மாபோ லவனிரு வனப்பின் மூழ்க
விலையினி யுய்தி யென்னு மியல்பொடு முகுந்தை நின்றாள்.

(இ - ள்.) ஆடையானது தனஇலத்தினின்று அவிழ்ந்துசோரவும், கரிய அளக பாரமானது சீர்குலைந்து சாயவும், முலைகளிலணிந்த ஒளிவளரும் முத்துகள் பொடிபடவும், முன்கையிலணிந்த வளையல்கள் பூமிமேல் விழவும், அலைகின்ற கண் உண்ணுவது போல அவனுடைய தேகப்பொலிவில் மூழ்கவும், இனி பிழைக்கும் வழியில்லை யென்னும் இயல்புடன் முகுந்தையென்பவள் நின்றனள் எ - று.

ஆடைசோர்தலும், கூந்தலவிழ்தலும், வளைகழறலு முதலியன காமக்குறி. முலைவளர் முத்தநீறவென்றது காமாக்கினியிற் சுடப்பட்டுச் சாம்பராயினவெனக் (௯)

திருமகள் பெண்மை நோக்கித் தெருமர வனப்பிற் சான்ற
வுருவினள் காமச் செவ்வி யூறநெறி வலிந்து தானே
மருவுதன் முயன்ற போது மன்னவன் கலங்கா னாகி
முருகுகொப் பளிக்குங் கோதை முகுந்தையை நோக்கிச் சொல்வான்.

(இ - ள்) திருமகளே (அவளது) பெண்மையைக் கண்டு மயங்கும்படி அழகின்மேம்பட்ட முகுந்தையென்பவள் காமவிருப்பமேலிட்டெழுதலால், தானே (உருக்குமாங்கதனைக்) கலக்கயத்தனித்தபொழுது, அவன் (சிறிதும் மனங்) கலக்க முறாதவனாகி, தேனொழுகும் மலர் மாலையணிந்த முகுந்தை யென்பவளைப் பார்த்துச் சொல்லலாயினன் எ - று. (௧௦)

அந்தணர் குலத்து ணோற்கு மருந்தவன் பாவை நீயும்
வெந்திறல் வேந்தன் யானம் மேதினி முறையிற் காப்பேன்
சுந்தரி யதுவே யன்றிச் சுமுகர்தா ளிறைஞ்சு மன்பன்
சிந்தைவே றணங்க ளோபாற் செறுமந்துஞ் செல்லா தன்றே

(இ - ள்) நீ வேதியர்குலத்திலே, (யாவரும்) நோற்றற்கரிய தவத்தையுடைய முனிவன் வசத்துள்ளவள் யானோ வெவ்விய வலிமைவாய்ந்த அரசன் யான் நிலைபெற்ற பூமியை முறைப்படி காப்பவன் சுந்தரமுடையவளே! அமட்டே யல்லாது, அழகியமுகத்தையுடைய கணேசப்பெருமானது திருவடியை வணங்கும் அன்புடையவன், (ஆகையால்) என் மனமானது பிறமங்கையரிடத்தில் மயக்குற்றுச் செல்லமாட்டாது எ - று

நீ வேதியர்குலத்திலுதித்தவளாதலாலும், யான் அரசகுலத்திலுதித்தவனாதலாலும், உனக்கும் எனக்குமுள்ள உயர்வுதாழ்வுகளிது வெனக்காட்டி, அரசரிலும் யான்முறைப்படி அரசுசெலுத்துவோனாதலாலும் விநாயகக்கடவுளுக்கன்பனாதலாலும் என் மனமானது பிறமாதரை விரும்பாதென்றார் (௧௧)

அரைக்கணத் தளவை யின்பா மவரவா துணையிற் கூடின்
விரைக்குழன் முகுந்தாய் வேறு துணையொடு மேவப் பெற்றாற்
றரைக்கணுற் றதுவு மின்று மச்சமே சாரு நீரா
லுரைக்கடங் காத வள்ள லுறுதுய ரொழிவின் றாமே.

(இ - ள்) மணம்வாய்நத கூந்தலையுடைய முகுந்தை யென்பாளே! அவரவர் தமது துணைவருடன கலநதால (இககாமசுகமானது) அளவிறநதிக காலம்விளங்கும் (அறப)சுகமாகும வேறு துணைவருடன பொருநதபபுணரின இப்பூமியில் அவ் (அளாககண) வினபமுமிலலையாய (அதனறல) அச்சமேயுளதாகுமாதலால், சொல்லுக கடஙகாத தலைவன் பெறுநதுபைமொழிவிலலாததாகும் எ - று.

வேறு துணையொடு மேவபபெறறு லசசமே சாருமெனறதை,

திருக்குறள்

"பகைபாவ மசசம பழியென நானகு
மிகவாவா மிலலிறபபான கண"—எனறும,

நாலடியார்.

"அறமபுகழ கேணமை பெருமையிந் நானகும
பிறனறார நசசுவாாச சேரா—பிறனறார
நசசுவாாச சேரும பகைபழி பாவமென
றசசததோ டிநநாற பொருள"—எனறும வருவனவறறாலுணர்க (௧௨)

வேறு.

அனறு காணகுது நரகெனி லனனைகேள பிழைதத
வினறு தீமொழி யெஙகணு நிமிருமே திலாமு
னனறு சேர்பெரு மிதமுமுன றுயகன றனககும
பொனறு மாதலிற போறறுநின மனததினி லெனறான்.

(இ - ள்) தாயே! கேட்பாயாக நரகததை அக்காலததிற காணபோமென்று சொனனால, நாம பிழைபடுதலாகிய தீமொழி இப்பொழுதே யெலலாவிடததிலும் படரும பகைஞாமுனனே நனமைபொருநதிய பெருமிதமும உன் கணவருக்கும் அழியும ஆனபடியால உன்மனதைப போறறககடவாயெனறு (உருககுமாங்கதன) கூறினன் எ - று (௧௩)

கறபுனை திலாிதோண மனனன கலஙகுதல் சிறிது மினறிக
கறபுளா யுளதத ளுஙகி கடிநதுளாத திடுத லோடுங
கறபினை நீங்கி நினற கவிமனை யிதுகே ளெனறு
கறபக மனையான முனகைக் கதுமெனப் பறறிச சொல்வாள.

(இ - ள்) மலைபோலும அழகியவலியதோளையுடைய உருககுமாஙகதராசன சிறிதும மனஙகலஙகுதலிலலாதவனாய,(முகுநதையெனபவளுககு) கறபினறன்மையை யெடுததுக்கூறுஞ சிநதையுடையவனாய, (அவள கருததைத) தடுத்துசசொல்லவும, கறபுததனமை யொழிநதுநின்ற கவிமுனிவன மனைவியாகிய முகுநதை கறபகத தருவையொதத உருக்குமாஙகதனுடைய முனகையை விளாவாகப பிடிததுககொணடு இதனைக கேடகவெனறு சொலவாளாயினள எ - று (௧௪)

முளளாாக கமலத தனாணன முதலுக மிரணடன மாடடுந
துளளுடன விழியி னுாககுச சுதநதிரம வைததா னறறால
வள்ளமேல பிறனிற புடட மாதரை யானுந தாமே
நள்ளுற நினைநது கூடி னவையுமின றழிவு மினறே.

(இ - ள்) முடப்பொருந்திய அடியையுடைய தாமரைமலரில் வசிக்கும் பிரம தேவன் முதல யுகங்களிரண்டிலும், குதிக்கின்ற சேற்கெண்டைபோலும் விழிகளை யுடைய மங்கையர்களுக்குச் சுதந்திரத்தை யுண்டுசெய்தனனாதலின், வள்ளற்றன்மை யுடைய அரசனே! யானும் பிறன்றிறப்பட்டமாதாகும் நாம் சிநேகமுண்டாகக் கருதி என்னைக்கலந்தாற் குற்றமுமில்லை கெடுதியுமில்லை எ - று.

தனகொள்கையை யவன்பாற்பெற விரும்பினவளாதலின் வள்ளலென விளித்தனளெனக் என்னை? "வரையாது கொடுப்போன் வள்ளலெனப" என்றது சூத்திரமாதலின். (கரு)

மைந்தர்கள் வலிதிற் பற்றின் மறுமையு மின்று மாறா
வெந்துயர் நரகு முண்டு வேந்தயான் விழைந்த தன்றாற
சிந்தையிற் கவலை வேண்டா சேர்ந்திடிற் றவங்கள் கல்வி
யுந்திரும புகழுக் ளாதி யொழியுமென் றெண்ணிற் கேளாய

(இ - ள்) ஆடவர்கள் வலிமையாகப் பிடித்துக்கொண்டால் மறுமைப்பயனும் முண்டாகாது ஒழியாத வெவ்விய துயர்விளையும், நரகமுமுண்டாகும் அரசனே! யான்விரும்பினேனாதலால் மனதிற் கவலைகொள்ள வேண்டாம் (என்னைக்) கலந்தால், தவங்களுங் கல்வியும் பெரிய கீர்த்தியும் முதலியன வொழியுமென்று நினைப் பாயாயின், இன்னுங்கேட்பாயாக எ - று. (கசு)

சோதரர் தொழிந்த போதுந் தெவ்வடு மனனு நினைப்
பாதனி னீறு செய்வே னன்றெனிற் படிவம் வேறா
யாதரு தேய நீங்கி யரியகா னடுத்துக் கொடப
வூதருஞ் சாபஞ் செய்வே னுணர்மதி யென்று பின்னா

(இ - ள்) பகைஞரைக்கொல்லும் பார்த்திபனே! (என்னைக்) கலவாதொழிந்த காலத்திலும் உன்னைப் பூமியிலே சாம்பராக்குவேன் அல்லாவிடின் உருவம் வேறு இப்பொருந்திய தேயத்தையொழிந்து அரியவனத்திலலையும்படி துன்பந்தருஞ் சாபங் கொடுப்பேன் அறிவாயாகவென்று பின்னும் எ - று.

ஊர் தரு - திரியத்தக்க. மதி - அசை. (கஎ)

வெள்ளமு மணையி னிற்கும் வெங்கழ லரவ மாதி
பொள்ளெனத் தடையி னிற்கும் புலனிலார்க் கெழுந்த காமம்
பள்ளமென் மடையில் வெள்ளம் பாயவே போலு மந்தக்
கள்ளியக் காளை யார்பங் கனுமெனத் தழுவி னாளே.

(இ - ள்) (பெருக்கெடுத்து வந்த) வெள்ளமும் அணைக்கு அடங்கிநிற்கும் வெவ்விய அக்கினியும் பாம்புமுதலியன தடையால் விரைந்து (கட்டுப்பட்டு) நிற்கும் (ஆனால்) அறிவில்லாதவர்களுக்கு உண்டான காமமானது பள்ளமென்று சொல்லும் மடையிலே வெள்ளமானது பாய்ந்துசெல்வதே போலும் (ஆதலின்) அந்த வஞ்சகி யாகிய முகுந்தையென்பவள் அக் காளைப்பருவமுடைய உருக்குமாங்கதமன்னனை யார் பைவிரைந்து ஆலிங்கனஞ் செய்தனள் எ - று. (கஅ)

கொல்லிய வொருவேய லந்து கொயயெனத் தழுவ லோடு
மெல்லியா ரெஞ்ஞர் போல் வேந்தனங் கரர மெய்தி

நல்லிழை மாது செய்தி நன்றுநன் றென்ன நக்குற்
றொல்லெனத் திணிந்த தோளா லுகைத்துமன் னிலத்தில் வீழ்த்தான்.

(இ - ள்) ஒரு பேயானது கொல்லும்படி வந்து விரைந்து தழுவவும், (அச்சப்பட்டு) மங்கையர் மனம்போல உருக்குமாங்கதன் (மனதில்) அச்சமடைந்து, நல்ல பணிகளை யணிந்த இம்மங்கையின் செயல் நன்றாயிருந்தது நன்றாயிருந்ததென்று நகைசெய்து, விரைவாகத் தனது வலிய தோளாலுதைத்து மட்டையின்மேல், (அவளை) விழச்செய்தனன் எ - று.

கொல்லிய - செய்யியவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (க௯)

கால்பொரு கொழுங்கொம் பற்ற காமரு கொடிபோல் வீழ்ந்த
வேல்பொரு விழியி னாட்கு வெற்றிவேற் குமரன் கூறும்
சால்பொரு வியனின் செய்தி சற்றுமுன் னறிந்தே னாயிற்
பால்பொரு மொழியா யிங்குப் பட்டாத்தேன் படாதேனே.

(இ - ள்) கால்களொத்த கொழுகொம்பற்ற அழகிய பூங்கொடிபோல விழுந்த வேற்படைபோலுங் கண்களையுடைய முகுந்தைக்கு வெற்றிபொருந்திய வேலேந்திய உருக்குமாங்கதன் சொல்கின்றனன் மேம்பாடற்ற உன் செயலைச் சிறிது முன்னரே தெரிந்திருப்பேனாகில், பால்போலும் மதுரமான சொல்லையுடையாளே! இங்கு வரமாட்டேன், வரமாட்டேன் எ - று. (உ0)

மாதவ முனிவ னில்லின் மாதரா ளென்று நின்பால்
சீதள நறுநீர் வேண்டிச் சேர்ந்திடு மெனக்கிஞ் ஞான்று
பாதக நிறைய தாழும் பரிசினை விளைத்தாய் வாளான்
மோதுவ லஞ்சி னேனுன் முனிவனை யென்று மீண்டான்.

(இ - ள்) பெருந்தவமுடைய முனிவனாச்சிரமத்திலிருக்கும் முனிபத்தினி யென்று உன்னிடத்திலே குளிர்ந்த நல்ல சலத்தை விரும்பி (தாகவிடாயால்) இங்குற்ற வெனக்கு, இப்பொழுது பாவமிக்க தாழ்வான தன்மையைத் தந்தனை. (உன்னை யென்) வாளால் வெட்டுவேன் ஆயினும், முனிவனுக்குப் பயந்தேனென்று (அவ்விடம் விட்டுத்) திரும்பினான் எ - று. (உக)

மீண்டவன் றன்னை நோக்கி வெய்தென முகுந்தை சீறித்
தீண்டுதற் கரிய தாமென் றிருத்தகு கற்புஞ் சிந்த
வீண்டுபே ரழகிற் போந்தா யின்பமுங் கொடுத்தா யில்லை
மாண்டநின் னுடலிற் குட்ட மருவுக வல்லை யென்றாள்.

(இ - ள்) முகுந்தை, (அவ்வாறு) சென்ற உருக்குமாங்கதனை விரைவாகக் கோபித்து, தொடுதற்கரியதாகிய என் சிறந்த கற்புநிலையுங் கெடும்படி நெருங்கிய பேரழகுடன் வந்தனை எனக்குச் சுகமுங் கொடுத்தாயில்லை. (ஆதலின்) மாட்சிமைப் பட்ட உன்றுடலிற் குட்டநோய் விரைவிலுண்டாகுகவென்று சபித்தனள் எ - று.

வேட்டது பெறாது சால வெதும்பினா ளாத லாலே
கோட்டமின் றகித நீவு கூறுதல் செய்யா ளன்றி
யோட்டமை யொருக் குடைய மாநி னுண்முகம் பாரே னென்று
நீட்டிய [illegible] வாளா வென்றனன் றிரும்பிப் பாரான்.

(இ - ள்.) இச்சித்ததை யடையாமல் மிகத் துன்புற்றனள். ஆனபடியால், தளர்ச்சியில்லாமல், சாபந்தீர்வு சொல்லமாட்டாள். அல்லாமலும் மனவுறுதியில்லாத அமமுருகந்தையின் பிரகாசிக்கின்ற முகத்தைப் பார்க்கமாட்டேனென்று, மிக்க புகழையுடைய உருக்குமாங்கதன் திரும்பிப்பாராமல் வாளா சென்றனன் எ - று

வாளா - சும்மா. (உ௩)

பெண்ணிருங் கொலையே போலப் பெண்ணிடு சாபந் தானு
மண்ணிடைக் கொடிது போலு மாதவ ளிடுசா பத்தால்
வெண்ணிறக் குட்ட மெய்யில் விரவிய வரச னேங்கிக்
கண்ணிய கருத்துண் மாழ்கிக் கணேசனை நினைந்துச் சொல்வான்.

(இ - ள்) பூமியிலே பெரிய பெண் கொலையையேபோலப் பெண்பாலார் கொடுத்த சாபமும் கொடிதுபோலும் பெருந்தவமுடைய அமமுருகந்தை யிட்ட சாபத்தாலே அவன் தேகத்தில் வெண்குட்ட வியாதி பொருந்தியது அதனை உருக்குமாங்கதன் கண்டு எண்ணங்கொண்டு மனதில் வருந்திக் கணேசப்பெருமானைத் தியானித்துச் சொல்கின்றான். எ - று (உ௪)

அறிந்துநின் றொழும்பிற் சற்று மடியனேன் பிழைத்த தில்லை
சிறந்தவன் புடையார் மாட்டுன் றிருவரு ளோவ தில்லை
சிறந்தநின் னருளுண் டாயிற் றீதெனை யடாவ தில்லை
யறிந்திடாப் பிழையுண் டாயி னதுபொறுத் தருளல் வேண்டும்.

(இ - ள்) தேவரீருடைய பணிவிடையில் அடியேன் சிறிதும் அறிந்து தவறினதில்லை மேம்பட்ட அன்புடைய பத்தர்களிடத்திலே தேவரீருடைய திருவருள் நீங்குவதில்லை. சிறப்பமைந்த தேவரீருடைய திருவருள் விலாசம் உண்டாயிருக்குமாயின் தீமையென்பது அடியேனைத் துன்புசெய்வதில்லை அறியாமற்செய்த குற்றமுண்டாயிருப்பின் அதனை மனம்பொறுத்தருளல்வேண்டும், எ - று. (உ௫)

சிட்டரைக் காப்பா யென்றுந் துட்டரைத் தெறுப்பா யென்று
முட்டறு வேத மெல்லா மொழிவது மெய்யே யாயிற்
பெட்டவம் முருந்தை மாழ்கப் பிரிந்தது தருமமாக
விட்டவள் சாபத் தாலே யெனக்குநோ யடைப்ப தாமே.

(இ - ள்) சிஷ்டரைக் காப்பவனென்றும், துஷ்டரை யழிப்பவனென்றும், இடையூறில்லாத வேதங்களெல்லாம் முறையிடுவது உண்மையேயாயின், அமமுருகந்தை யென்பவள் துன்புறும்படி (யான்) பிரிந்து சென்றது தருமமாயிருக்க, (அவள்) கொடுத்த சாபத்தினாலே எனக்கு நோயுண்டாவது தருமமா? எ - று (உ௬)

தூயவிஞ் சையரு நாணுஞ் சுடரொளி வனப்பு நீங்கித்
தாயரு மிகழக் குட்டஞ் சார்ந்தவெ னுடலை யிந்தக்
காயழற் கடத்தின் மாய்ப்ப தல்லது கைக்கொண் டேற்ற
பேயர சாட்சி செய்யேன் புனிதனே யென்று நைந்தான்.

(இ - ள்) பரிசுத்தமான விநாயகக்கடவுளே! புனிதமான வித்தியாதரர் கரும நாணத்தக்க சூரியகாந்திபோன்ற (என்) அழகொழிந்து, (பெற்ற) தாயமாரும் இகழும்படி குட்டநோய் பொருந்திய என் தேகத்தை இந்தக் கொதிக்கின்ற தீயமான

னத்திலேயே யொழிப்பதல்லது, உடன்கொண்டு ஊரிற்சென்று ஆக்கசெய்யமாட்டேன் என்று வருந்தினன் எ - று (உஎ)

காவல னிவ்வா றெண்ணிக் காட்டிடைச் செல்லா னங்கோர்
பாவிய வாலங் கண்டு படாந்தத னிழலை யுற்றான்
மேவிய வேட்டைக் கானின் வேந்தனைத் தேடிக் காணா
தோவிய சிந்தை யோடு முடன்வந் தார்நகர்க்குச் சென்றார்

(இ - ள்) உருக்குமாங்கதராசன் இவ்வகையாகக் கருதி, வனத்தின்வழியே செல்பவனாகி, அங்கே ஓர்படாந்த ஆலமரத்தைக்கண்டு பரவியுள்ள அதன் நிழலிலே தங்கினன்; பொருந்திய வேட்டைக்கானிலே உடன்வந்த (மந்திரி முதலான) வர்கள் அரசனாகிய உருக்குமாங்கதனைத் தேடிக்காணாமல், வருந்திய மனத்துடன் தம் நகரத்திற்குச் சென்றார்கள் எ - று

படாந்த + அதன் = படாந்ததன். அகரம் தொகுத்தல் (உஅ)

உருக்குமாங்கதன் சாபம்பெற்றது முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் - கசச

---

# நாரதர் உருக்குமாங்கதனுக்குச் சாபத்தீர்வுகூறியபடலம்.

குட்ட வேந்தனை நோக்கிய கோதினால்
வட்ட வானில் வழுக்கி விழுந்தெனச்
சுட்டு பேரொளி யாதவ னூர்ந்தேர்
பட்ட தன்று பனிக்கடல் வேலையின்.

(இ - ள்) குட்டநோய்பொருந்திய உருக்குமாங்கதராசனைக்கண்ட குற்றத்தினால், (எல்லாவற்றையும்) சுடுகின்ற பேரொளியுடைய சூரியன் தேரானது, வட்டமாகிய ஆகாயத்தினின்று வழுக்கிவிழுந்தாற்போல, குளிர்ந்த மேற்கடலிலே விழுந்தது [சூரியன் அத்தமாயினன்] எ - று (க)

நாட்டி னுள்ளவர் காணுறு மன்னவன்
ஒட்டு வேற்படை மன்னவ னென்றொரு
கோட்டு மாமுகன் கூட்டிய மாயையி
னீட்ட மென்ன விருள்பரந் திட்டதே

(இ - ள்.) நாட்டிலுள்ளவர்கள் (அவன் தேகம்பொலிவிழந்து குட்டநோயுற்றதைக்) கண்டால், (சத்துருக்களை) அழிக்கும் வேலாயுதமேந்திய உருக்குமாங்கதன் நாணமடைவானென்று, ஒற்றைக்கொம்பையுடைய விநாயகக்கடவுள் உண்டுசெய்த மாயையின் பெருக்கினைப்போல இருள்பரவியது. எ - று. (உ)

இரவ லாளரி டர்த்திமி ராவலைக்
கரவு செய்யுமிக் காலைய யினான்றுநாய

விரவு வாமென விழ்பசி தாகமும
பரவு சோகமும பற்றவிருந்தனன.

(இ - ள) யாசகர்களிடத்தில (தமமை) இராதவிதமாக வஞ்சிக்கும இக்காளைபபருவமுடைய உருக்குமாங்கதனை இபபொழுது நாம சேருவோமென்று, மிகக பசியுந தாகமுஞ சோகமும பற்ற (வருந்தி) இருந்தனன எ - று.

இரவலர்க்கு விசேடமாகத் தானங்கொடுத்தவனாதலின அவ்வுருக்குமாங் கதனைப பகைத்துள்ள பசி தாக சோகங்கள இதுவே சமயமென்று பற்றினவென்றா

உண்டி யின்றி யுறங்குக லின்றிமுன
கொண்ட டாத்துயா கொண்டு மன்னவன்
மண்டு மின்னலை மாற்றவந் தானெனத
தெண்டி ரைக்கடற் செங்கதிர் பூத்ததே.

(இ - ள) ஆகாரமில்லாமல நித்திரையற்று, முன (ஒருகாலத்தும) பெறாத துன்பத்தைக கொண்டிருக்கும உருக்குமாங்கதனுடைய நெருங்கிய துன்பத்தையொழிகக வந்தவனென்று சொல்லுமபடி, தெளிய அலையையுடைய கடலிலே, செவவிய கிரணங்களையுடைய சூரியனுதித்தனன எ - று

கதிர் என்றதற்கேற்பப பூத்ததென அஃறிணை யொருமைமுடிபு கொடுத்துக கூறினரெனக. (ச)

காலை முற்றுங் கடன்முடித் துள்ளமென
ஞாலை யத்தி னருட்கண நாதனை
மாலை யணிபின மகிழ்த்து வழிபடும
வேலை விண்ணிடை நாரதன மேயினன

(இ - ள) (உருக்குமாங்கதமன்னன) காலைப்பொழுதிற செயயும நித்திய கடனை முடித்து, மனமாகிய திருக்கோயிலில, கிருபாமூர்த்தியாகிய கணேசப்பெருமானை அனபாகிய மாலையாற பிணித்து வழிபாடு செயயுங்காலத்தில, ஆகாயவீதியில நாரதமுனிவர் பொருந்தினர எ - று (ரு)

அருக்கன வேறகன வானியங குற்றெனப
பொருக்கெனச்செலுந தேவிர் முனிவனை
யுருக்கு மாங்கத னெய்யென நோக்கினு
னுருக்க மோடுமங கோலிடு வானரோ.

(இ - ள) வேறோர் சூரியன பரந்த ஆகாயத்திற சஞ்சரிப்பதுபோல விரைந்து செல்கின்ற தெய்வீகமுடைய நாரதமுனிவரை உருக்குமாங்கதராசன விரைந்து தரிசித்து மனவுருக்கத்துடன ஓலமிடுவானாயினன எ - று

நோக்கினுன - முற்றெச்சம. (சு)

வேறு

அடிகளே யோல மோல மமரர்கண முனிவா வோலம
வடியிணை யமுதந தேக்கு மகதியாழ்த் தலைவ வோல
நெடியவன் முதலோர் துன்ப நீக்குவா யோலம மோலம
படியிசை யடியேன றுன்பும பாற்றுவா யோலமோலம.

னது தன்னைத் துன்புசெய்ய, (என்னை வேண்டினள்) என்னிடத்தில் (அவ்வகை) பற்றில்லாமையைப் பார்த்து, கொல்லத்தக்க இந்நோயை (அடைகவென)ச் சபித்து அடையச்செய்தனள். எ - று (௧௧)

பயில்பதி யினிச்செல்பப் பற்று வைத்திலே
னுயிரினை விடுபமே யுளந்து ணிந்துளேன்
செயிரறு தவம்பல் காலஞ் செய்தெனை
யயாவுறத் தந்தவாக் காகத் தாங்கினேன்.

(இ - ள்) யான்வசிக்கும் பதிக்கு இனிப்போகப் பற்றுவைத்தேனல்லேன் உயிரை விடுவதாகவே மனந்துணிந்திருக்கின்றேன். (ஆனால்) குற்றமற்ற தவத்தை அநேககாலஞ்செய்து வெறுப்புற என்னைப்பெற்ற தாய்தந்தையார்களுக்காக (இன்னும் உடலைத்) தாங்கி யிருக்கின்றேன். எ - று (௧௨)

வழிமது வெனவிசை வடிக்கும் வீணையோய்
செழிமலர்ச் சேவடி சேர்த்தி நாடொறும்
வழிபடு கணபதி யருளின் வண்மையால்
விழியெதிர் காணுமா விசும்பிற் றோற்றினை

(இ - ள்) வழிகின்ற தேனைப்போல இசையைவடிக்கும் மகதிவீணையை யேந்திய நாரதமுனிவரே! செழித்தமலர்களைச் செவ்வியதிருவடியிற் சோத்தித் தினந் தோறும் நான்வழிபடுகின்ற கணேசப்பெருமானுடைய திருவருள் வளத்தினால் என் கண்ணெதிரே காணும்படி ஆகாயத்திலே தேவரீர் காணப்பட்டீர் எ - று (௧௩)

நாரத முனிவநின் னளினச் சேவடி
சாரநான் பெறுதலிற் றன்றுங் குட்டநோய்
தீரவே பெற்றுளேன் செம்மல் வீமனிவ்
வாரமே மலட்டினை மாற்றும் வாரமே.

(இ - ள்) நாரதமுனிவரே! தேவரீருடைய தாமரைமலர்போன்ற செவ்விய பாதங்களை அடியேன் சாரப்பெறுதலால், துன்புசெய்யுங் குட்டநோயைத் தீரவே பெற்றேன் செம்மலே! (என்பிதாவாகிய) வீமராசன் தன் மலட்டுத்தன்மையை மாற்றிய வாரமும் இவ்வாரமேயாம். எ - று (௧௪)

இன்னன பலவுமங் கியம்பி யெம்பிரான்
வினையிது தீருமா விளம்பு கென்றனன்
முன்னவள் வேண்டுமுன் முகத்தை நோக்குபு
தன்னிகர் நாரதன் சாற்ற னேயினன்

(இ - ள்) இவ்வகைய வார்த்தைகள் பலவற்றையும் அப்பொழுது கூறி, எம்பெருமானே! குட்டநோயாகிய இவ்வினை தீரும் வழியைக்கூறியருள்கவென்றனள் தன்னைத்தானே நிகராகிய நாரதமுனிவர் போர்வளர்கின்ற முருக்கம்பூவைப்போலும் அழகுவாய்ந்த உருக்குமாங்கதனை நோக்கிச் சொல்லத்தொடங்கினர். எ - று

திருமா இ:தில ஆ என்பது ஆறு என்பதன் தொகுத்தல்.

வேள்ளைநலத்த முன்னவள்ரென்னும் அன்மொழியால் முருக்கென்னும்.

வேறு

குதம்பையான் றொருத்திற் றுயல்வருங் காதிற் கொற்றவ நின்குடை நிழலி
னிதம்பெறு வித்ரப தேயமென் றோங்கு மிந்தநாட் டினுறு நான் வருங்காற்
கதம்பமா நகரி னதிசய மொன்று கண்டன னஃதியா தெனனின்
மதம்பொழி களிநல் யானைமா முகவன் மந்திர முள்ளதந் நகரின்.

(இ - ள்) காதிலணிந்த குதம்பையானது தொங்கிய பிடரியின்மேலே அசைகின்ற உருக்குமாங்கதனே ! உன்குடை நிழலிலே நன்மைபெற்றுவிளங்கும் வித்ரப தேயமென்று உயர்ந்த இந்தநாட்டிலே இன்று நான் வரும்பொழுது, சிறந்த கதம்ப நகரத்திலே ஓரதிசயத்தைப் பார்த்தேன். அஃதியாதெனின், பொழிகின்ற நல்லமதச் செருக்கையுடைய சிறந்தயானைமுக விநாயகக்கடவுள் திருக்கோயில்ஒன்று அந்நகரத்தி லுள்ளது. எ - று. (௧௬)

மந்திர மதனு ளமர்ந்தருள் சிந்தா மணியெனும் பெயர்விநா யகனை
முந்துற வணங்கி யவரவர் வேட்ட முனிவிலா வரம்பெறு கின்றார் [தத்
கொந்தொளிக் கோயின் முன்புறக் கணேச குண்டமென் றொருபெருந் தீ
மந்தரத் தவரும் வியத்தகு பெருமை யணிந்திருக் கின்றதாங் கதனில்.

(இ - ள்) அக்கதம்பநகரத்திலே, திருக்கோயிலினுள்ளே யெழுந்தருளியுள்ள சிந்தாமணியென்னும் பெயரையுடைய விநாயகக்கடவுளை முற்படப்பணிந்து, அவரவர்விரும்பிய அழிவில்லாத வரங்களைப் பெறுகின்றார்கள். தொகுதியாகிய ஒளியையுடைய அத்திருக்கோயிலின் முன்னே பொருந்தக் கணேசகுண்டமென்னும் பெயர்கொண்டு ஒருபெரிய தீர்த்தமானது தேவர்களும் அதிசயிக்கத்தக்க மேம்பாடுற்றிருக்கின்றது எ - று

கொத்து - கொந்து , இதுமெலித்தல் (௧௭)

அடங்கருங் குட்ட நோயினன் முதிய னல்லல்சேர் சூத்திர னொருவ
னிடங்கர்க ளுலவுந் தீம்புனற் றீர்த்த யாத்திரைக் கேகுவா னடுத்து
மடங்கரு மகிழ்வி னாடின னெழுந்தான் வல்வினை யொடும்பிணி தீர
விடங்கமெய் யினனாய் விநாயக னுருவு மேவினன் விண்ணுமேக் கறவே.

(இ - ள்) அடக்குதற்கரிய [அதிகரித்த] குட்டநோயுடையவனும், விருத்தனும், துன்பமைந்த சூத்திரனுமாகிய வொருவன், முதலைகளுலவுகின்ற மதுரமாகிய நீரையுடைய தீர்த்த யாத்திரைக்குச் செல்லச்சென்று, எல்லையில்லாத களிப்புடன் (அக்கணேசகுண்டத்தில்) மூழ்கியெழுந்தனன். கொடியவினையோடுங் குட்டநோயொழிய விடங்கதேகமுடையவனாய், தேவர்களும் அங்கலாய்க்கும்படி விநாயகர் திருவுருவை யடைந்தனன். எ - று

இடங்கர் - முதலை எகுவான் - வினையெச்சம்; இதில் வான் வினையெச்ச விகுதி. விடங்கம் - உளியிடப்படாதது எனவே திவ்வியமெனக. (௧௮)

உமாபதி யுயிர்த்த முன்னவ னருளா லொலிபுகழ்க் கணங்கண் முன்னுறுத்து
விமானமேற் கொண்டு விநாயக னுலக மேவின னனையவ னதனு
லிமாசல மனைய தோளினுய நீயு மெய்த்திருந் தாடியே யமரர்
தமாதுற் றசைகளுந் தருமமா திகளுஞ் சமைமதித் தனைக்குமிப் பெருநோய்.

(இ - ள்.) உமாதேவி நாயகராகிய சிவபெருமானது மூத்தபிள்ளையாராகிய விநாயகக்கடவுள் திருவருளால், ஒலிக்கின்ற கீர்த்தியையுடைய சிவகணங்களை முன்னே செலுத்திய விமானத்திலேறிவந்து விநாயகக்கடவுளுலகை யடைந்தான் அச்சூத்திரனாதலின், இமாசலத்தை யொத்த தோளையுடைய உருக்குமாங்கதராசனே! நீயும் அங்கடைந்து அதில் மூழ்கி எரம்பமூர்த்தியின் பூசையுந் தருமமுதலியனவுஞ் செய்க இப்பெருவியாதி (அக்கடவுளருளால்) விலகும்.

மதி - முன்னிலை யசையிடைச்சொல். (௧௯)

முரிதிரை சுருட்டும் விரிகடற் பாப்பின் மொய்த்துறு மருந்தெலாஞ் செயிர்த்துக்
கரிபரி யிரத மாதிக டானங் காதலித் தியல்புளி செயினுந்
தரியலார்க் கிடிபோ லுற்றவேற் கரத்தாய் தாங்குநின் சாபநோய் கம்பப்
புரிவளர் சிந்தா மணிவிநா யகரா லல்லது போன்றுறா தென்றான்.

(இ - ள்.) பகைஞர்க்கு இடியேறுபோன்ற வேலாயுதத்தைக் கையிலேந்திய உருக்குமாங்கதராசனே! முரிகின்ற அலைகள் சுருட்டும் பரந்த கடல்சூழ்ந்த பூமியில் நெருங்கியுள்ள அவிழ்தங்களையெல்லாம் புசித்தாலும், யானை குதிரை தேர்முதலிய தானங்களை ஆசையோடு விதிப்படிசெய்தாலும், ஏற்றுள்ள உன்சாபநோயானது கம்பநகரத்திலெழுந்தருளியுள்ள சிந்தாமணி விநாயகராலல்லாமல் ஒழியாது என்று (நாரத முனிவர்) கூறினர். (௨௰)

நாரதர் உருக்குமாங்கதனுக்குச் சாபந்தீர்வுகூறியபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௪௬௩

---

# இந்திரன்சாபம்பெற்றபடலம்.

---

மாடகமு றுக்கியிசை பாடுமுனி நீடுபிணி மாற்றுமுறைமை
நாடியுறை செய்கவுமெ கிழ்ந்துகழ னைவலவ யந்துபணியாக்
கூடியநல் லன்பினிது கூறுவனு ருத்தவக தம்பநகரிற்
பீடுறவி ருந்தபெரு மானையெவர் பூசனைசெய் பேணினர்களே.

(இ - ள்.) தந்திரிகளை முறுக்கி இசைபாடுகின்ற நாரதமுனிவனை, குட்டவியாதியை யொழிக்கத்தக்க முறைமையை யோசித்துக் கூறவும், வீரக்கழலணிந்த உருக்குமாங்கதன் மனமகிழ்ந்து அன்புடன் பணிந்து, ஆசையோடினிதாகச் சொல்கின்றனன் அருந்தவமுடைய முனிவரே! கம்பநகரத்திலே பெருமை பொருந்த எழுந்தருளியிருக்கும் விநாயகக்கடவுளை (இதன் முன்னே) எவர்தாம் பூசனைசெய்தனர்? எ - று.

மாடகம் - தந்திரி. முறுக்காணி. (௧)

விற்றமழை பெய்யசுடர் வீசுவளி யென்றிவைக டக்குதவுசெம்
மாற்றுமுனி மேதைபுவி மன்னுயிர்க ளுய்யவரு மாதவநினைக்
கேற்றிடுகை மாற்றமொழி யென்புரிவ தென்னவுள மிரங்கி யருள்கூர்
சீறியநன் மேனியவி ரிந்திடம கிழ்ந்துமுனி செப்ப லுறுவான்.

(இ - ள்.) பெய்கின்ற (மிக்க) மழையும், காய்கின்ற சுடரும், வீசுகின்ற காற்றுமென்றுசொல்லப்படுகின்ற இவைகட்குச் செய்யுங்கைம்மாறு ஒன்றுளதோ?

(இல்லை, அதுபோல) உலகிலுள்ள நிலைபெற்ற வுயிர்களை உச்சீவிக்கும்படி வந்த நாரத முனிவரே! தேவரீருக்கு எதிராக அடியேன் செய்யத்தக்க பிரதியுபகாரம் யாதிருக்கின்றது? மனமிரங்கி யருளவேண்டும் கோபஞ்செய்யலாகாதென்று யாசிக்க, நாரதமுனிவர் மகிழ்ந்து சொல்லலாயினர் எ - று. (௨)

முந்தையொரு காலமுடி வானவர்க ளிறைஞ்சமுகி லூர்தி சுதன்மைமா
மந்தமணி யாதனமி ருந்தரசு செய்தொளிர்த லைமகற்கு மளவி
சந்திலுறு பெண்ணையெதிர் வந்தடிப ணிந்துதொழு தாதன மளித்
தெந்தவுல குந்திரியு மெந்தையுள தேலதிச யம்புகலென

(இ - ள்) முன்னொருகாலத்தில், மேகவாகனனாகிய இந்திரன் சுதன்மை மண்டபத்திலே, அழகிய இரத்தின சிங்காதனத்திலிருந்து தேவர்கள் வணங்க அரசு செய்து கீர்த்தி நிறைந்திருக்கையில், அவ்விடத்திலுற்ற என்னை எதிர்கொண்டு அடியிற் பணிந்து நமஸ்கரித்து ஆதனமொன்று கொடுத்து (அதிலிருக்கச்செய்து) எல்லாவுலகங்களிலுஞ் சஞ்சரிக்கும் எந்தையே! அதிசயமுள்ளதாயிற் கூறுகவென வினவ எ - று.

சுதன்மை - இந்திரன் கொலுவிருக்கை மண்டபத்தின் பெயர் (௩)

இந்திரனை நோக்கியிது கூறுதலி னேந்துகனி லங்குகுலிச
வெந்திறலி னுயவளரு மேதினியி லெந்தனமை யோதி னிமிடை
யந்தணர்க ளாற்றரிய மாதவமி யற்றியருள் சேர்கவு தமன்
மந்திரவ முறகடவுள் முன்னவதுவை செய்தமட மாதகலிகை

(இ - ள்.) இந்திரனை நோக்கி இதனைச்சொல்ல விசைந்தேன் பிரகாசிக்கின்ற வச்சிராயுதத்தாலாகிய வெவ்விய வலியுடையவனே! வளர்கின்ற பூலோகத்தையடைந்தேன். அப்பூலோகத்திலே வேதியர்கள் செய்தற்கரிய பெருந்தவஞ்செய்து திருவருளடைந்த கவுதமமுனிவன் மந்திராக்கினி முன்னதாகத் திருமணஞ்செய்த இளமங்கையாகிய அகலிகையென்பவள் (ஒருத்தியுள்ளாள்) எ - று. (௪)

அன்னவட னக்கழகி னுலகி னொப்பவர்கள் யாவருமிலை
பொன்னுடையி னுமருமா துகலை மாதுசசி பொற்பினிரதி
நன்னருந் துயைதிதி நாடியதி லோத்தமைந லங்கொளதிதி
பின்னவரும் வெந்திடுத லன்றியவண் முன்னெதிர்வ ராகவிலரே

(இ - ள்) அவளுக்கு அழகிற் சமானமானவர்கள் உலகத்திலே யொருவருமிலர் பீதாம்பரமணிந்த திருமாலின் மார்பகத்துள்ள திருமகள் - சரசுவதி - இந்திராணி - அழகிற்சிறந்த இரதி - நல்ல (அத்திரிபாரியையாகிய) அநுசூயை - திதி - திலோத்தமை - நன்மைகொண்ட அதிதி இப்படிப்பட்டவர்களும் முதுகுகாட்டுதலன்றி (அழகில்) அவளுக்குமுன்னே எதிர்ப்போரிலர் எ - று.

திதி - காசிபன் மனைவியர் பதின்மூவரிலொருத்தி இவள் மக்கள் தைத்தியர். திலோத்தமை - தேவதாசிகளிலொருத்தி அதிதி - காசிபன் மனைவியரில் தேவரைப்பெற்றவள்

பொன்னுடை - பொன் வஸ்திரம் இது பீதாம்பரமென்பது வெந் - முதுகு

இரும்பிரசு தங்கக மெனனுமதின் மூன்றுமொரி மூளமுறுவ
லரும்பியபி ரானிசரா மல்லலுமதி கதலழி யாவென மனமும

விருமபியது கண்டவுட னென்னிலவை டன்னைவிர வாத நகரம
பெருமபுலவ ராறபுகழுவ தனறெனமொ ழிநதுபெயா குறறெ ருவினென.

(இ - ள்) இருமபு வெள்ளி பொனனென்னு மூமமதில்களும் பறறியெரி யுமபடி புன்னகைசெய்த சிவபிரானுடைய திருவடியையனறி, (பொருளாக) மதிபப தறியாத என்னுடைய மனமும (அவ்வகலிகையைக்) கண்டவுடனே இச்சித்ததென ருல, அவளையுடைத்தாயிராத நகரமானது பெரிய புலவாகளாற புகழசதககதனறு எனககூறி, அவவிடம விட்டுச சென்றேன எ - று.

இருமபிரசதங்கனகம என்பதை இரும்பு இரஜதம கநகமெனறு பதயபிரித துக்கொளக (௬)

வே று

சுநதர வகலிகை தொகுமிசை நுவல
விநதிர னிணாவிடு மெரிபடு மெழுகின
சிநதையு ளுருகினன செறிதுய ரகலக
கநதென மருவினன கவுதம னுருவம.

(இ - ள) அழகினையுடைய அகலிகையின் மிகுநத சிறப்பைசசொலல, இந திரனனவனை கொழுநதுவிடடெரியுமஅககினியிறபடடமெழுகுபோலததனமனமுருகி, மிககதுனபமானது விலகுமபடி விரைநது கவுதமமுனிவா வடிவேறறனன. எ - று.

கநது - வேகம (எ)

பொயகழி கவுதமா பூமபுன லாட
வைகறை நீஙகினா மறறது போழ்தின
மெயகழி மனமொடு மேவிய மகவா
னெயகனி கூநதனமு னினறிது மொழிவான

(இ - ள) பொய்மமொழியகனற [சததிய சீலராகிய] கவுதமமுனிவா அழ கிய நீரிலமூழக, விடியறகாலததது (ஆசிரமததினினறு) சென்றனா அந்தக்காலததில மெயமமையொழிநத மனதுடனபொருநதிய இந்திரன நெயப்பசைமிகக அளகததை யுடைய அகலிகைமுனனேநினறு இதனைச சொலவான எ - று

மகவான - இநதிரன இது நூறு அசுவமேதஞ் செய்தவனெனனும் பொரு ளில வநதது மகம=யாகம (அ)

சுடாவிடு மிளநகைத துவரிதழ்க கனிவாயக
குடநிகா வனமுலைக கொடிபுரை யிடையின
மடவரல கலவியின மருவுதற் கமளி
யிடுகடி தெனவவ ளெதிரிது மொழிவாள.

(இ - ள.) ஒளிவீசும சிறிய தநத பநதியும, பவளம்போனற உதடும, ஆ தொண்டைககனிபோனறவாயும, குடமபோனற (பூரிதத) அழகியமுலையும், (பூங) கொடிபோன்ற இடையுமுடைய பெணணே ' உடனபொருநதுதறகு விரைவிற படுக கையிடுகவெனக்கூற, (அகலிகை தன கணவரான கவுதமரென்று கருதி) அதறகுப் பதிலாக இதனைச் சொலகின்றனள. எ - று.

மடவரல - மடமைககுணம் வருதலையுடையாள. (௯)

வேறு

ஒருநாளு மொழுகாத வொழுக்கமுந் தவமென்னே யொழுகப் புக்காய்
முருகாரு மலர்ப்பொய்கைப் புனலாடிச் சந்திசெப் முறையி னாற்றிப்
பெருகார்வத் தொடுங்கடவுட் பூசைபுரி காலத்துப் பிழையே சாலத்
தருகாமப் பொருள்விழைதற் கேதுநுமக் கென்னென்னச் சாற்றி னாள்.

(இ - ள்) அரியதவத்தையுடைய முனிவரே! ஒருகாலத்தும் நடவாத நடக்கையை நடக்கப்புகுந்தீர். அது யாது காரணம்? வாசம்பொருந்திய மலரையுடைய தடாகத்திலே நீராடிச் சந்தியாவந்தன முதலியவற்றை வழக்கப்படி செய்து, மிக்க ஆசையோடு சிவபூசையைச் செய்யுங்காலத்திலே மிக்ககுற்றத்தையே கொடுக்கத்தக்க காமப்பொருளை விரும்புதற்கு உமக்குக் காரணம் யாது? என்று கூறினள் எ - று. ()

பட்டிமையிற் கவுதமனா வடிவெடுத்துப் படர்ந்தபெரும் பாவி செய்கை
கட்டழகி யறியாது தன்கணவ னெனவிதனைக் கரைந்த வெல்லைச்
சட்டமக வான்மொழிவா னறையலாய் நீராடச் சார்ந்தே னாங்கு
வட்டமுலை யொருமாது துகிலின்றி நீராடும் வனப்புக் கண்டேன்.

(இ - ள்) வஞ்சகமாகக் கவுதமமுனிவர் வடிவேற்றுவந்த மகாபாவியாகிய இந்திரன் செய்கையைப் பேரழகுடைய அகலிகை யறியாதவளாகித் தன் கணவரென்று இவ்வாறு சொல்லியகாலத்தில், விரைந்து இந்திரன் சொல்லுவான்: பெண்ணே! நீராடச்சென்ற நான் அங்கே வட்டமாகிய முலைகளையுடைய ஓர்மங்கை சேலையின்றி நீரிலமூழ்கும் அழகைக்கண்டேன். எ - று (கக)

உள்ளமழிந் தெழுந்தபெருங் காமத்தா லுஞற்றலுறுங் கருமந் தன்னி
லெள்ளளவு மனஞ்செல்ல வில்லையினி யுயிர்வாழ்வு மெய்தா தாகுங்
கள்ளொழுகு மலர்க்கோதாய் கலவிதரல் வேண்டுமது கடிந்தா யாகிற்
பொள்ளெனநின் னுயிர்மாழ்கச் சபிப்பனென் றுன்கேட்ட பூவை யன்னாள்.

(இ - ள்) மனமழிந்து தோன்றிய பெருங்காமத்தினால், செய்தக்க கருமத்தில், சிறிதும் மனஞ்செல்லவில்லை. இனி உயிர்பிழைத்தலும் அடையாததாகும். தேன்சிந்தும் மலர்களையணிந்த கூந்தலையுடையாளே! புணர்ச்சிகொடுக்க வேண்டும். அதனை விலக்குவாயாகில் விரைவாக உன்னுயிர்இறக்கச் சபிப்பேனென்றான் அதனைக் கேட்ட திருமகள்போன்ற அகலிகை எ - று (கஉ)

கைப்பிடித்துக் கனலவளர்ந்த காதலமிகுங் கணவர்மனங் களிக்குமாகக்
மெப்படியோ வப்படியே யிசைந்திடுதல் மேலைமுயர்க்கா மியல்பையெண்ணி
யப்படியே யாகவென விசைந்தமளி தனையடுத்தா ளமரர் கோமான [ன.
மைப்படி நின்விழிகண்டையாலுயர்ந்தமென் றுடனுவந்து மருங்கு சார்ந்தா

(இ - ள்) கையைப்பற்றி அக்கினிவலஞ்செய்த ஆசைமிக்க காதலருடைய மனமானது களிப்படையும் வகை எப்படியோ அப்படியே யிணங்கியிருத்தல் மாதர்களுக்கு இயல்பாதலைக்கருதி, அவ்வாறே யாகுகவென்று இணங்கி, சயனத்தைச் சமீபித்தனள். தேவராசனாகிய இந்திரன் மைபடிந்துள்ள உன் கடைக்கண்ணினாலே உயிர்பிழைத்தேனென்று சந்தோஷித்து உடனே அவளருகிற் சேர்ந்தனன் எ - று.

வேறு

செம்பொன் மணிகட் டிலினிருந்து சிறுபுன் முறுவல் முகத்தரும்பப்
பம்பு மணிமே கலைகதிப்பப் பவளக் கனிவா யிதழ்துடிப்ப
வம்பு கிழியத் திதலைமுலை வளர்ந்து விம்ம விடைநுடங்கக்
கொம்பின் மருங்கு நின்றாளைக் குடங்கை பற்றி யிருத்தினன்.

(இ - ள்.) செம்பொன்னாலாகிய கட்டிலில் (இந்திரன்) இனிதாகவிருந்து, சிறிய புன்னகையானது முகத்திலரும்ப, பூரித்த இரத்தினங்களாலாகிய மேகலாபரணமானது ஒலிக்கவும், செம்பவளம்போன்ற வாயிதழ்கள் துடிக்கவும், கச்சுகிழிபடவும், தேமல்படர்ந்த முலைகள் பூரித்து இறுமாப்படையவும், இடைதுவளவும், பூங்கொம்புபோலப் பக்கலினின்ற அகலிகையை உள்ளங்கையைப்பற்றி (சயனத்தில்) இருக்கச்செய்தனன். எ - று.

மேகலை - இஃதோரணி, முன்விளக்கப்பட்டது. வம்பு - முலைக்கச்சு; இஃதிக்காலத்து இரவிக்கையென வழங்கும். திதலை - தேமல். பவளக்கனிவாயிதழென்றதை பவளவாயென்றுங் கனியிதழென்றுங் கூட்டிப் பொருள்கொள்ளினுமமையும்; கனிவாய பவளவிதழெனினும், பவளக்கனிபோன்ற வாயினிதழெனினுமொக்கும். (௧௪)

அங்கைத் தலத்தால் முலைவருடி யாடை நெகிழ்த்துப் புறம்போக்கிப்
பொங்கு நிதம்பத் தடம்வருடிப் புகலுங் கரலீ லையும்புரிந்து
தொங்க லொடுமேவார் குழல்சோரச் சுடர்வா ணுதலு நனிநீவித்
திங்கண் முகத்தின் முத்தாடித் திகழ்தா டனமும் பலசெய்தான்.

(இ - ள்) அழகிய கைத்தலத்தினாலே முலையைப்பிடித்து, அவள் கலையையவிழ்த்துப் புறத்தேவீழ்த்தி, பொங்கிய கடிதடத்தைவருடி, (காமநூலிற்) கூறிய கரிகரலீலையுஞ்செய்து, மலர்மாலையுடன் நெடிய அளகபாரஞ் சோரும்படி, ஒளிவிளங்கும் ஒள்ளிய நெற்றியையும் நன்றாகத்தடவி, (பூரண) சந்திரன்போன்ற முகத்தில் முத்தமிட்டு விளங்குகின்ற பலதாடனங்களையுஞ் செய்தனன். எ - று.

நிதம்பம் - பெண்குறி. கரலீலை - கையாற் செய்வதோர்லீலை; இது கரிகரமெனப்படும்; யானைத்துதிக்கைபோலும் விரலை மடக்கிச்செய்தலின். தாடனம்பல என்றதால், சங்கோசம் - பக்கத்தம் - பிரசுரிதகம் - மூஷ்டி - கீலம் - கத்திரிகை - சந்தங்கிசம் - வித்தையென்னு மெட்டையுங்கொள்க. (௧௫)

கோலத் துடையாற் றுடைநெரிக்கிக் கூன்கை பொருந்த முற்சாய்த்துச்
சாலக் கனிவா யிதழ்பருகித் தந்தக் குறியு மாங்குறுத்தி
நீலத் தடங்கண் முதலமுத நிலவுமிடங்கள் பலசுவைத்துச்
சீலக் குறிமூ டிகமாதி பலவுந் திகழச் செறித்திட்டான்.

(இ - ள்) அழகிய துடையினாலே துடையை நெருக்கி, வளைந்தகையைப் பிடரியிற் பொருந்தச்சாய்த்து, கொவ்வைக்கனிபோன்ற வாயிதழை மிகுதியாகச் சுவைத்து, அதின்மேல் தந்தக்குறியையும் அமர்த்தி, நீல நிறம்பொருந்திய விசாலமான கண்முதலிய அமுதம் நிறைந்த தானங்கள் பலவற்றையுஞ் சுவைத்து, நலமூடிக முதலிய பலகுறிகளையும் நிறைத்துவிட்டனன் எ - று.

தந்தக்குறி - பல்லாற்செய்வதோர்குறி. மூஷிகமாதி யென்றதால் மூஷிகம் - அதுசசுநகம் - பிரவாளமணி - பிந்து - மணிபிந்துமாலை - கோலசாயித்தமென்னு மா

றுங்கொள்க. அவை முறையே உதட்டிற் சிவப்புறப்பதித்தல் - கபோலத்தும் அதரத்தும் வடுவின்றிப்பதித்தல் - கபோலத்திற் பல்லு மிதழும் படாது பதித்தல் - அதரத்திற் பல்லைத்தாக்கப் பதித்தல் - கைம்மூலம் நெற்றி மார்பு துடைகளி லழுந்தப்பதித்தல் - தனங்களி லொழுங்காகப்பதித்தல் என்பர் காமநூலுடையார். அமுதநிலவு மிடங்கள் - பெருவிரல் புறந்தாள் பரடு முழந்தாள் குய்யம் நாபி முதலியனவாம். அவ்வவ் விடங்கட்குரிய அகத்தொழில் புறத்தொழின் முதலியவற்றை இன்பநூலுட் கண்டு தெளிக. (கசு)

கொங்கை ஞெமுங்க விருகரத்தாற் குவவு மணித்தோ ளுறவிறுக்கிச்
சங்கு நெரியச் சிலம்பொலிப்பத் தடங்கண் சிவப்ப விதழ்விளர்ப்பத்
திங்க ணுதலின் வியர்வரும்பத் திகழ்புட் குரல்கண் மிடற்றொலிப்ப
மங்கை யவளுங் கற்பகஞ்சூழ் வல்லிக் கொடிபோன் முயங்கினாள்.

(இ - ள்) முலைகளழுந்தும்படி இருகரங்களாற் குவிவாகிய அழகிய தோள்களைப் பொருந்தவிறுக்கிக்கொண்டு, வளையல்கள் நெரியவும், பாதச்சிலம்புகளொலிக்கவும், பரந்தவிழிகள் சிவக்கவும், அதரம் வெளுக்கவும், சந்திரனைப்போன்ற நெற்றியில் (குறு)வியர் வரும்பவும், விளங்குகின்ற (எண்வகைப்) புட்குரல்கள் கண்டத்திலொலி செய்யவும், அவ்வகலிகையுங் கற்பகத்தருவைச்சூழ்ந்த காமவல்லிக் கொடிபோலக் கலந்தனள் எ - று.

தடங்கண் சிவப்பவிதழ் விளர்ப்பவென்றது, ஜயங்கொண்டான் பரணி "வாயிற் சிவப்பை விழிவாங்க மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத் - தோயுங் குடுமி விடியளவுந் தொங்குங் கபாடந் திறமினோ" என்றபடி, மங்கையர்க்குக் காமவின்பம் விளையுங்கால் கண்சிவத்தலும் வாய்வெளுத்தலுங்குறியாமெனக.

புட்குரல் எண்வகை—அவை மயில் - புறா - அன்னம் - காடை - வண்டு - குயில் - கோழி - செம்போத்து என்பன. இவ்வொலி புணர்ச்சியில் இன்பம் விளைவுழி அம்மங்கையின் கண்டத்து நிகழுமென்பர்.

கற்பகஞ்சூழ் வல்லிக்கொடியென்றது, கற்பகவிருக்ஷத்திற் படர்வது ஓர்கொடி காமவல்லியென்றிருத்தலின், அகலிகை கொடியாகவும் இந்திரன் கற்பகமாகவும் உவமித்தனர். இதனை, "கற்பக மருங்கிற் பூத்த காமருவல்லி" யென்னும் பரஞ்சோதி முனிவர் வாக்கானுணர்க. (கஎ)

கந்து நிலையே பன்னகமே காத லரும்புங் குக்குடமே
பிந்தும் வெருகே யிவையாதி பிறங்கு கரண முறவியற்றிச்
சிந்தை கனிய வுடல்கனியச் செறியு முயிர்கள் கலந்தொன்றாய்
முந்தை யறியாப் பெரும்போக முழுகிக் கருத்து முற்றினனே.

(இ - ள்) (ஐவகைக் கரணங்களுடன்) கந்துகநிலையும், சர்ப்பமும், ஆசைமிகுங் கோழியும், பிறபடுகின்ற பூனையும் இவைமுதலியவற்றின் விளங்குகின்ற கரணங்களும் பொருந்தச்செய்து, மனமுருகவும் உடலுருகவும் நெருங்கிய இரண்டுயிர்களு மொன்றாய்க்கலந்து முன்னே கண்டறியாத பெருஞ்சுகத்திலே யமிழ்ந்து மனக்கருத்தை முடித்தனன் (இந்திரன்) எ - று.

சரணங்கள் ஐவகையின. அவை உத்தானிதம் திரியக்கு ஸ்திதம் ஆசிதகம் ஆனமிதம் எனப்படும். அவற்றுள், உத்தானிதம் - மல்லாத்தல், திரியக்கு - குறுக்கு அல்லது ஒருக்கணித்தல், ஸ்திதம் - உட்கார்த்தல், ஆசிதகம் - நிற்றல், ஆனமிதம் - குனித்

லென்பர். அன்றியும், குதிரை பாம்பு கோழி பூனை முதலியவற்றின் பலபேதப்பட்ட கரணங்களைப் பசுகரணமென்பர்.

பிந்தும் வெருகென்றது புணர்ச்சிகாலத்திற் பின்னேநிற்கும் ஆண் பூனையென்றவாறு, பெண்பூனையின் குறியிலோர் மறுவிருந்து அதனைப் புணர்ச்சிகாலத்து வருந்தச்செய்தலின் புணர்ச்சிக்கு அத்துயராற்றுந் தாமதிக்கும் பூனையென்றவாறு கொள்க. மேற்போந்த ஐந்து செய்யுட்களின் கருத்தை விளக்க அசங்கிதமாதலின் குறிப்பானுணர்த்தினம். இவற்றின் விரிவெல்லாம் காமநூற்கடலுட் காண்க (கஅ)

கடலிற் பிறவாச் சுவையமிழ்தே கரும்பிற் பிறவாக் கொழும்பாகே
மடன்மென் மலரிற் பிறவாத வாசங் கமழுஞ் செழுந்தேனே
யுடல மிரண்டே யலதெனக்கு முனக்கு முயிரொன் றேயன்றே [தான்.
யடாமெய்த் தவத்தா லுனைப்பெற்றேற் காவ தினியென் னெனப்புகழ்ந்

(இ - ள்) பாற்கடலிற் பிறவாத சுவையையுடைய அமிர்தமே! கரும்பிர சத்திற் பிறவாத செழியகற்கண்டே! இதழ்களையுடைய மெல்லியமலரிற் பிறவாத மணம்வீசுஞ் செழியதேனே! எனக்கும் உனக்கும் உடலிரண்டேயல்லாமல் உயிரொன்றேயல்லவா? நெருங்கிய உண்மைத்தவத்தினாலே உன்னையடைந்த வெனக்கு இனியாகவேண்டுவது யாதிருக்கின்றது? (ஒன்றுமின்று) என்று புகழ்ந்தனன் (இந்திரன்.) எ - று (கக)

நன்னர் முறுவல் வறிதரும்பப் நயனஞ் சிறிதே முகிழ்ப்பப்
மன்னு மமளி மிசையின்ப வசமாய்க் கிடந்த மடமாது
மின்னி னுடங்கி யிடைதளர மெல்ல வெழுந்து துகிலுடுத்திட
டன்ன மலர்நீத் தெனக்கட்டி லகன்றங் கிதனைத் துணிந்துரைத்தாள்.

(இ - ள்) நல்ல புன்னகையானது மிகக்கரும்பவும், விழிகள் சிறிது கூப்பவும், பொருந்திய பஞ்சணையின்மேலே இன்பமயமாகிக்கிடந்த இளம்பருவமுடைய அகலிகை, மின்னல்போலும் இடையானது ஒசிந்துதளர மிருதுவாகவெழுந்து சேலையையணிந்துகொண்டு அன்னமானது தாமரைத்தவிசினின்று நீங்கியதுபோலக்கட்டிலினின்று மிறங்கி இதனைத் தீரத்தோடு சொல்லினள் எ - று

புன்னகையரும்பலும், கண்கள் சிறுத்தலும், தன்னைமறத்தலும் புணர்ச்சி நிகழ்வழியுள குறிகளாமாதலின் "நன்னர்முறுவல வறிதரும்பப் நயனஞ்சிறிதே முகிழ்ப்ப, மன்னுமமளி மிசையின்ப வசமாய்க்கிடந்தமடமாது" என்றார் (உ0)

வடிவே முனிவன் போன்றதலன் வடிவிற் கமழு மியல்மணமுங்
கடியா வின்பக் கலைத்தொழிலுங் கருதின் வேறே யிவன்கள்வ
முடிவா சவனே யெனத்துணிந்து முனிபோ லடுத்தோய் நீயாரே
கொடிவாய் திறவா விடிற்சபிப்பே னென்றாள் புருவ நுதலேற.

(இ - ள்) உருவமோ கவுதம முனிவனைப்போன்றுள்ளது. இவன்தேகத்திலே வீசும் இயற்கைமணமும், நீக்கப்படாத காமநூற்றொழில்களும் எண்ணுகையில இவன் வேறேயாவன். (ஆதலின்) வஞ்சகமுடைய முடியணிந்த இந்திரனேயென்று தீர்மானித்து, (எனக்கணவராகிய) கவுதமமுனிவரைப்போல வந்தவனே! நீ யாவனோ? ஒருவிநாடியில் வாய்திறந்து (உண்மை) உரையாவிட்டாற் சபிப்பேனென்று, புருவங்கள் நெற்றியிலேறும்படி (கோபங்கொண்டு)கூறினள் எ - று.

இன்பககலைத தொழிலெனறது புறததொழில பறகுறி நகக்குறி சும்பளம் தாடனமுதலியனவற்றை. (௨௧)

மாது வினவிக கேடடலினுன மறறும பெறலா மினபமெனத
தீது விளைவ தறியாதே திகழுதன னுருவ மெதிரேதோறறிப
போது செருகு நறுஙகூநதற புணாபூண முலையா யானறுறகக
மீது பொலமபூந தவிசிருககும வேநத னெனவின னதுமபுகலவான.

(இ - ள) அகலிகையானவள (இவ்வாறு) வினவிககேட்டபடியால, இனனும (இவளிடததிற்) காமசுகததைதயடையலாமென்று கருதி, (தனககு)த துனபம வருதலை யுணராமல விளஙகுந தன வடிவததை யெதிரேகாட்டி, மலாகளையணிநத நலல கூந தலையும, ஆபரணமணிநத முலையையுமுடைய அகலிகையே! நான தேவலோகததிலே அழகிய (கற்பக) மலர்பபீடததிலிருககும இநதிரனெனறு (இன்னும) இவற்றையுஞ சொலகினறான எ - று (௨௨)

அனனப பெடையே நினதெழிலகேட டயிரா ணியைநற பொனனுலகுந
துனனுங கலைமா தினைசசெலவச சுடாபபூண மாதை யிருமலரு
மனனும வெறுதது நினைததாஙக மதியாநினற மறுமியானு
நனனா மனததா மரையிருததி நயநதாட செயய நினையடுததேன.

(இ - ள) அனனபபேடுபோலபவளே! (நானும பிரம விஷ்ணுககளும) உன னழகைக கேளவிபபடடு இநதிராணியையும, நலல பொன்னுலகததையும, அழகு மிகக கலைமகளையும ஒளிதஙகிய ஆபரணமணிநத திருமகளையும, (அவாகள பொருந் திய) இருமலாகளையும மிகவுமவெறுதது, உனனைப பெறக கருதியிருநதோம. யானும் நலல இதயதாமரையி லிருககசசெய்து விருமபி யாட்செய்யுமபடி உனனை யடுத தேன. எ - று. (௨௩)

இனறு பொருத மதவீர னினனும பகழி விடுநதோறும
பொனறுஞ் சியதண களபமுலைப பூவாய நினது விழிககருணை
மனற வழஙகி யெனைததாஙகு மனமு முயிரு மொனறுன
பினறை வேறு நினைவதெலாம பிழையே யனறோ வெனவிரநதான்.

(இ - ள) இபபொழுது போாசெயத வீரனுகிய மன்மதன இனனுந தன (மலாப்)பாணங்களைச செலுத்துந்தோறும், பொனனுலாகிய ஆபரணமணிந்த களபச் சாநது பூசிய அகலிகையே! உனனுடைய கிருபாநோககததை மிகுதியாகக கொடுதது என்னைககாககு மனமும உயிரும ஒனறுனபிறகு வேறுவகையாகக கருதுவனவெல லாங குறறமேயலலவோவெனறு யாசிததான எ - று. (௨௪)

பதியி னடுத்த கொடுமபாவி பகரக கேடட மாதழனறு
மதியிற களஙக மெனவெனறு மாறுக களஙக மெனகுலததுப
பொதிவித தெனது கறபினையும பொதிாததாய முனிவன றிருவுளளங
கொதிவித தெனையுங கெடுததாயநீ கோவே யெனனு மமையததில.

(இ - ள) தன கணவனைபபோலவநத கொடுமபாவியாகிய இநதிரன (இவ் வாறு) சொலலககேடட அகலிகை கோபிதது, சநதிரனிடததிலுளள களங்கததைப போல எககாலததும மகலாத களங்கததை எனகுலததிற்சேரசசெயது, எனசறபு

நிலையையுங் கெடுத்தாய்! முனிவருடைய திருவுள்ளத்தைக் கோபமூட்டி என்னையுங் கெடுத்தாய். நீ தேவராசனோ? என்றுகூறுஞ் சமயத்திலே எ - று.

நீகோவே என்றதில் ஏகாரம் வீறுப்பொருள். இவ்விழுக்கினையுடையோன அரசுகுத்தக்கவனல்லனென்னும் குறிப்பாலுண்டாய வினா. (உ௫)

வேறு.

புலரியின் மனையகல் கவுதமனும் பொழிமது மலர்நறும் புனலாடிக்
குலவிய செபமுத லியவாற்றிக் கோதறு விடியலின் மீண்டெய்தி
நிலவிய வாய்தலி னிடைநின்று நேரிழை யவள்புனல் கொணர்கென்று
னிலவித முகலிகை புனலேந்தி யீந்தனள் பண்டுறு மியல்பினறி.

(இ - ள்) வைகறைப்பொழுதில் ஆச்சிரமத்தினின்றகன்ற கவுதமுனிவரும், தேன்சொரியும் மலர்கள்பொருந்திய நல்லதீர்த்தத்தில் மூழ்கி, மிக்கஜபமுதலியவற்றைச்செய்து, குற்றமற்ற விடியற்காலத்தில் மீண்டுமவந்து, விளங்குகின்ற கடைவாயிலில் நின்று, பெண்ணே! (கால்கழுவ) நீர்கொண்டுவருக வென்றனர் இலவங்கனியொத்த அதரத்தையுடைய அகலிகை, பழமையாகவுள்ள இயற்கையினறி நீரைக்கொண்டுவந்து கொடுத்தனள் எ - று.

புலரியென்றது விடியற்காலத்திற்கோர் பரியாயநாமம் பண்டுறுமியல்பாவது நீராடி ஆச்சிரமத்தைச் சுத்திசெய்து முனிவர் வருகையை யெதிர்நோக்கிப் பீடமிடுதல் முதலியன. (உ௬)

கண்டது முனிவரன் மடமானே கலைநிறை முழுமதி முகமவேறு
கொண்டதெ னுதன மிடவில்லை கொமமென வறலகொடு வரவில்லை
மண்டிசை வசனமுந் தரவில்லை மறநுநின் னுடலமுஞ் சுசியிலலை
பண்டைய ளலையுள துரையென்றன பனிமொழி மடவர லிதுசெய்தாள

(இ - ள்) முனிவர் தலைவராகிய கவுதமமுனிவர் அதனைப்பார்த்ததும், இளமான் சாயலையுடையாளே! பதினாறு கலைகளுடன் நிறைந்தபூரண சந்திரனபோன்ற முகம வேறுபட்டது யாதுகாரணம்? பீடமபோடவில்லை விரைந்து (காலகழுவுதற்கு) சலங்கொண்டு வரவில்லை. மிக்க இசையையுடைய வாய்மொழியுங் கொடுக்கவில்லை. அன்றியும் உன்தேகமுஞ் சுசியாகவில்லை நீமுன (இருந்தவகை) இருந்தவளல்லை. உள்ளதைச் சொல்லவென்றனர் குளிர்ந்த சொல்லையுடைய அகலிகை இதனைச் செய்தனள். எ - று.

காலகழுவு நீரைப பாதப்பிரக்ஷாளன ஜலமென்பர். (உ௭)

உள்ளமொ டுடலமு நடுநடுங்க வுயிர்த்துணை நாயகன் கழறூழ்ந்து
வெள்ளுறு நாணினன் முகங்கோட்டி மென்மொழி குழறிட நிலங்கிளையா
வள்ளனின் வடிவுகொண டிமையவர்கோன வந்தென தணிநல மருவுண்டா
னென்ள்ளி வடியன்முனன றிகலலேலெனனவு றுசெயன்முழுதுரைசெய்தாள.

(இ - ள்) மனமும் தேகமும நடுநடுங்கவும், உயிர்த்துணைவராகிய கவுதம முனிவர் பாதங்களைப்பணிந்து, வெள்ளுறு நாணமுடையவளாய் முகத்தைவளைத்துக்கொண்டு மெல்லியசொற்கள் குளறுமபடி பூமியைக்கிளைத்துக்கொண்டு, வள்ளலே! தேவராசனாகிய இந்திரன் (தேவரீருடைய) உருவத்துடன் வந்து என் அழகிய சுகத

தைபபொருநதினன் (இதனை) அடியேன என்னளவும் அறியேனென்று பொருந திய செய்கைகளையெல்லாம (மறையாது) கூறினள எ - று

வெளளுற நாணம—இழிவாலடைநத நாணம் நிலங்கிளைத்தல் - மாதா நாணுற்றவழி தமது காற்பெருவிரலாற பூமியைத தோணடுதல கிளையா - செய்யா வெனனும வாயபாட்டிறநதகாலப் பெயரெசசம (உஅ)

உருகிய மனமொடு மனைநலலா ளுரைசெயு முனமுனி கதமுள
விருபுரு வமுநனி நுதமேலற விணாபடு மெரியென விழிசேப்பக
கருவியு முடலமு மெனவொன றுங கலவிய நமதுள மறியாயா
வெருவுத லறவொரு வனிலினப மேவினை சிலையுரு வாகெனறான.

(இ - ள) மனைவியாகிய அகலிகை கரைநதமனத்துடன (இவ்வாறு) சொல வதறகு முனனரே, கவுதமமுனிவர் கோபமதிகரிகக, இருபுருவங்களும நெறறியின மேலேறவும, கொழுநதுவிடும் அக்கினிபோலக கண்கள செவககவும், கரணங்களுந் தேகமுமபோலக கலந்த எமமுளளத்தை நீ யெப்பொழுதும் அறிந்திலலையா ? அச சபபடுதலினறி யொருவனிடததில இனபமநுபவிததனை. (ஆதலின்) கலலுருவாகுக வெனறு சபிததனா. எ - று

கதம - கோபம. புருவம நெறறியிலேறுதலும, கணகள சிவததலுங கோபக் குறி. கருவி - அநதககரண புறககரணஙகள (உக)

வனமவளா தழலெலன வளைசாபம வருதலு மகலிகை விழிமலகு [றே
புனலொடு கணவனை யெதிாநோககிப புணாபிழை யொருவுதல செயவென
பினமொரு வருமுணா செயுமுனனம பெருமநின செவியுற வறிவிததே[ன்.
னுனதருள் கொடுபிழை யொடுசாபமொழிவகையுரையெனமுனிசொலவா

(இ - ள) காடடில வளாகினற அககினியைபபோல, முனிவரிட்ட சாப மானது வருதலும, அகலிகையானவள கணகளில்மிகக நீருடன தன கணவராகிய அமமுனிவரை நேரே பாாதது, எமபெருமானே ! செயத குற்றத்தை மன்னிததற் பொருட்டனறோ வேறொருவரும (இதைச) சொலவதன் முனனரே தேவரீா செவி யிற்பொருநத வுரைத்தேன ? தேவரீா திருவருளால எனகுறறமுஞ் சாபமுமொழியும வகையுஞ் சொலலியருளவேணடுமெனறிரபப, கவுதமமுனிவா சொலகினறாா எ-று.

வேறு

இககு வாகுவின குலததிடை யிராமனென றணங்கே
யககு ராசலங காதகவ னவதரித திடுமத
தககு காவலன் றாளபடும பொழுதுவெஞ சாபத
துககு நீங்கிமுன் போலலனைத் தாயவையென் றொழிததான

(இ - ள) பெணணே ! இக்ஷுவாகு வமிசததில இராமனெனனும பெய ருறறு, அவவிஷ்ணுமூாததி யவதரிபபாா அநதத தகுதியுடைய அரசன பாதம படுகையில, வெவவிய சாபததுனபமொழிநது முனபோல வெணணெககலயபை யெனறு கூறிவிடுததனா கவுதமமுனிவா எ - று

கராசலம=கரம+அசலம - கையையுடைய மலை , யானை.

கராசலங்காததது—பூாவம திரிகூடபாவதசசாரலில ஓா யானைவேநது அநே கம பிடியானைகளுடன ஓா மலாபபொயகையில நீாவிளையாடல செயகையில ஓா

முதலையதன்காலைப்பற்றியீர்க்க, யானை தன்னாற்கூடியவளவு முயற்சிசெய்தும தபபித்துக்கொள்ள முடியாமல், இறுதியில் விஷ்ணுவை * ஆதிமூலமே எனத்தியானிக்க, அவர் கருடவாகன மிவர்ந்துசென்று சக்கரத்தால் முதலையைச சஙகரிதது யானையை உயிர்காத்தனரென்பது சரிதம். [இவ்யானையு முதலையுஞ் சாபவுருவங்கள ] இதனை,

பாகவதபுராணம் - கஜேந்திர அத்தியாயம்.

"வேதநூ லொருங்கு ணர்ந்து விரியுமெய் யறிஞருள்ளப
போதுசே ரசோதி பொன்னிற் பொலியொளிபோல வெங்குந்
தீதுறூ தருளின் யாரகுந் தெரிவுறா துறைநது நின்ற
ஆதிகா ரணன்வந் தின்னே யளிககவென் றழைததனரே.

கூபபிடு குரல்கேட் டோடிக கொழுமணிச் சுடிகை நெறறிப
பாப்பணை யகற்றி வெய்ய படாசிறைக் கலுழ னூர்ந்து
தீபபொழிந திலஙகு கூாவாய்த திகிரிகைத தாஙகி யாவுங
காப்பவன் பிறைவெண் கோட்டுக களிற்றுமுன னெயதுற றுல"-எனவும,

"எறிசுடா விரிக்குநேமி யெறிந்தன னெறிதலோடும்
பிறைபுரை யெயிற்றுப பேழ்வாய பிளந்துவெவ விடஙகா தருசி
அறைதரு சாபந தன்னு லடைந்தவவ் வுருவு நீதது
விறலுடை யூகூ வெனனும் விஞசைய னுயிற் றனறே"—எனவும,

"விழுமிய விசைநூ றோர்நத விஞ்சைய னுய வனனுன
பழமறை முதலி பாதம பழிச்சினன் பதியிற போயான
அழிவறு தவததின் மிகக வகததியன் சாபந தீாநது
மழைமதக் களிறு மாயன வரம்பிலவீ டுறற தமமா"—எனவும வருவனவற்றானுணர்க (௧௧)

அங்கு வன்சிலை யாயின ளகலிகை யநத
நஙகை தனசெயல் கேட்டன ரிருநதுநா ளிலதத
லஙகி முன்கரம பற்றுமா டவாதமைப பிழைகக
மஙகை யர்ககுநன் றுரைததுமென ஞருமவண பயனே

---

* சிலா ஆதிமூலமே யென்ற யானையை அநுககிரகித்தவன சிவனா ? விஷ்ணுவா ? விஷ்ணுவேயாதலின அவனே ஆதிமூலப் பொருளென்று ஆசஙகைசெய்து வைணவதறிற் சிலேறறங் கற்பிககின்றனர் உள்ளபடியே இககஜேநதிரன விஷ்ணு பக்தன் இவன் பூர்வ ஜன்மததில் இந்திரததுயமமனென்னும் பாண்டியன். இவன் பொதியமலைச் சாரலில் ஓர்கால் விஷ்ணுவைத தியானஞ்செய்து கொணடிருககையில் அகஸதியபகவான் ஆஙகெழுநதருள, இந்திரததுய்மமன அம்முனிபுங்கவனைக கண்டெழுந்து மரியாதை செய்யாமையின், அகததியமுனிவர் சினநதுசபிக்க யானைவடிவேற்று அவ்யானையா யிருக்கையிலே ஆதிமூலமெனறு விளிததானுகலின் அவன வழிபடு கடவுளான மாயோனாற் காககபபட்டனனெனபது சமாதானமெனறுணர்க. இதனையும் ஷை புராணம் - ஷை அத்தியாயம்.

"இமிழிருள் கவற்றும் வேலா னெழுநில னிருந்தா னென்னுந
தமிழ்விளை தண்ணஞ் சாரற றடவரை முனிச பிபபக
கமழ்கடாக் கலுழி தூங்குங கருங்கவுள வேழ மாகி
உமிழ்கனற றிகிரி மாய னுலைவிலவீ டுறறா னனறே."—எனபதனானுணர்க.

(இ - ள்) அப்பொழுது அகலிகை வலிய சிலைவடிவாயினள். அந்த அக லிகையின் விருத்தாந்தத்தைக் கேட்டிருந்தும், பூமியிலுள்ளோர் அக்கினி சாட்சியாகக் கையைப்பிடித்த கணவர்களைப் பிழைசெய்யும் மாதர்களுக்கு நன்மைகளை யெடுத்துக் கூறியும் வண்மைதங்கிய அதன்பயன் யாதாகும்? எ - று.

நால் நிலம்—குறிஞ்சி - முல்லை - மருதம் - நெய்தலென்பன (௯௨)

அடம்பு மேவயந்தவாக கனபஞ மருந்தவள மனையை
யிடுமபை மூழ்குமா சபித்தமை யிலவிருந தறிந்த
கடமபெய வாரணன செய்வினை கருத்தினை யாபபக
குடமபை யாபபுறு முலணடெனப புகலிடங் காணன.

(இ - ள்) அடப்பமலரை யணிந்த சிவபெருமானுக்கு அனபராகிய அருந் தவஞ்செய்த கவுதமமுனிவா தம மனைவியாகிய அகலிகையை (இவ்விதமாக)த துன பததில மூழ்குமபடி சபித்ததை வீட்டினுள்ளேயிருந்து தெரிந்த மதநீரைச சொரியும (ஐராவதமெனனும வெள்ளை) யானையையுடைய இநதிரன தானசெயதகுறறம மன தைப்பநதிகக, கூட்டைககட்டும உலணடுபோலப புகலிடம (எங்குங்) காணாதவ னாய எ - று

உலணடு - கோறபுழு அலலது சிலநதியெனக (௯௩)

கடலின மூழ்கினுங குனறிடை யொளிபபினுங காம
முடலவி ராயுயிர சுடுவதே போலுமவன சினமு
மடலை யாகுமே யெனவழி கினறவ னுங்கு
முடலை யாககையின பூஞையாய வெளிககொள முயனறன.

(இ - ள்) சமுத்திரத்திலே முழுகினாலும, மலையிலொளித்துக்கொண்டாலுங காமமானது உடலிற்கலநது உயிரைச சுடுவதையேபோல, (கவுதமமுனிவருடைய) வலிய சாபமானது சாமபர் செயயுமேயெனறு நெஞசழிகினறவனாகி, அபபொழுது முருட்டுத தேகத்தையுடைய பூனையாகி வெளியேசெலல யததனித்தான எ - று

பூஞை - பூனை.

கடலின மூழ்கினுங குனறிடை யொளியினுங காமஞசுடுமென்றதை,

நாலடியார் - பிறர்மனை நயவாமை

‘ஊரு ளெழுநத வுருகெழு செநதீககு
நீருட குளித்து முயலாகு—நீருட
குளிபபினுங காமஞ சுடுமேகுன றேறி
யொளிபபினுங காமஞ சுடும்’’—எனபதனானுணாக. (௯௪)

ஆறறன மாதவ னலமரும விலாளததைப பாாததித
தோறற மானவ னிநதிர னெனததுணிந தியாரநீ
சாறறு போகலை யென்றலுந தனனுருக காட்டி
யேறற மாகிய வுரமெலா மிழநதுநின றனனால.

(இ - ள்.) வலிதங்கிய பெருந்தவமுடைய கவுதமமுனிவர் வருந்துகின்ற பூனை யைப்பார்த்து, இவவடிவாக வருபவன இந்திரனெனறு தீர்மானித்து, நீ யாவன? சொல! போகாதே! எனககூறவும, (இநதிரன்) தன வடிவத்தைக் காணபித்து, உயர்வாகிய வலிமைமுறறும போககி [எளியனாய் அடஙகி] நின்றான எ - று (௯௫)

நின்ற வாசவன் முகத்தினை நெடுந்தவ னோக்கி
யின்று சாம்பர்செய் திடுகுவ னிந்திர னுனை
யொன்று வேட்டுவந் தாய்க்குடன் முழுவதும் யோனி
நன்று மேவுக வெனப்பெருஞ் சாபநாட் டினனால்.

(இ - ள்) பெருந்தவசியாகிய கவுதமமுனிவர், (அவ்வாறு) நின்ற இந்திரன் முகத்தைப்பார்த்து, இப்பொழுதே யுன்னைச் சாம்பராக்குவேன் இந்திரனாயிருக்கின்றாய் (தேவலோகம்பாழாகுமேயென்று விடுத்தேன்) பெண்குறியொன்றை விரும்பி வந்த உனக்குத் தேகமுழுவதும் (பெண்குறிகள்) நன்றாகப்பொருந்துகவென்று பெருஞ்சாபமிட்டனர். எ - று (௯௯)

அளிந்த தீங்கனி வளிபொர வவனிவீழ்ந் தாங்குத்
தெளிந்த மாதவன் செப்பிய சாபமே வுதலும்
விளிந்த வாவியன் விளைவினை நினைதொறு நெஞ்ச
நெளிந்து தாங்குறாத் துயரொடு நீங்கிய வலாரி

(இ - ள்) பழுத்தமதுரமான பழமானது காற்றுவீசுதலால் நிலமிசை விழுந்தாற்போல, தெளிவமைந்த கவுதமமுனிவர் கூறிய சாபமொழிவந்து பொருந்தவும், உயிரொழிந்தவன்போன்று நிகழ்ந்ததை நினைக்குந்தோறும் மனநடுங்கித் தாங்கமுடியாத துன்பத்துடன் அவ்விடம்விட்டுப் பிரிந்த இந்திரன் எ - று

இதுமுதலிரண்டு செய்யுள்களொருதொடர்.

இந்திரனை வலாரி யென்றது,

பூர்வம் வலனென்னுமசுரன் பெருந்தவஞ்செய்து ஒருவராலு மிறவாமையும் ஒருவேளை யுடலொழிய நேரின், தன்தேகம் நவரத்தினங்களாதலையும் வேண்டி வரம்பெற்றுத் தேவர்களைத் துன்புறுத்தி வருகையில், இந்திரன் அவனுடன் போர் புரிந்து வெல்லும் ஆற்றலில்லாது, இவனை வஞ்சகமாய்ச் செயிக்கவேண்டுமென்று கருதி, வலாசுரனே! உன் வல்லமையை மெச்சினேன் நீ வேண்டியவரத்தைக் கேள். கொடுப்பேனென்ன, வலன் இந்திரா! ஈசனளித்த வரமெனக் கிருக்கின்றது. உன்னிடத்திலொன்றும் வரம்பெறவேண்டிலேன் நீ கொடுக்கும் வரமும் நீ பெற்ற வெற்றிபோலவே யிருக்கும். வேண்டாம் நீ யென்னிடம் பெறத்தக்க வரங்க ளிருப்பின் கேட்க தடையின்றிக் கொடுப்பேன் கொடேனாயின், யுத்தபூமியிற் றோற்றோடிய பழியை யடைவேனென்ன, இந்திரன் இதுவே நல்லசமயமென்றுட்கொண்டு, நீ சுத்தவீரனாய்ச் சொல்லிய சொல்லைத் தவறாதவனாயின், யான் கைலயங்கிரிச்சாரலில் யாகஞ்செய்யப் போகின்றேன் அப்பொழுது நீ யாகப்பசுவாகவருகவென, வலன் தான் புகழுடம்புடன் நவரத்தின உடம்பும் பெறுதல்கருதி, அவ்வாறே பசுவாகி வர, இந்திரன் கொன்றனனென்பது சரிதமாகலின், இதனை,

திருவிளையாடற்புராணம் - மாணிக்கம்விற்றபடலம்.

"ஈறிலா னளித்த நல்ல வரமெனக் கிருக்க நின்பால்
வேறியான் பெறுவ துண்டோ வேண்டுவ நினக்கியா தென்பாற்
கூறுதி விழைவி னின்னே கொடுக்கல னாகி னின்போற்
பாறுவீழ் களத்திற் பட்ட பழிப்புகழ் பெறுவ னென்றான்"—எனவும்,

"மாதண்ட வவுணன் மாற்ற மகபதி கேட்டு வந்து
கோதண்ட மேருக் கோட்டிக் கொடும்புரம் பொடித்தான் வெள்ளி

முனைகுகண்டு, அழகுமிகுந்த இந்திராணியின் உயிரைக்காப்பவர் ? எல்லோரும் எளிப் பாடுசெய்யும் இந்திரனுக்கு அச்செயல் தகுந்ததோ ? என்று மயங்கினார்கள். எ - று

குலிசி - இந்திரன் குலிசம் - வச்சிரம். (௫)

இந்திர னெய்திய சாபநோ யெவ்வகை யெவரோர் முயலினுந்
தந்தவர் கருணையி னல்லது தாழ்த்திட லரிதுதம மனையையுங்
கந்தறு கல்லென வாக்கினார் காறறுத லிசைகல ராயினும
வந்தனை முனசெய் திரத்துநாம் வமமென வெனையு மழைத்தனர்

(இ - ள்) இந்திரனடைந்த சாபநோயை எவ்வகையிலாவது எவரெவர் (நீக்க) முயற்சிசெய்தாலும், அதனைக்கொடுத்த கவுதமமுனிவருடைய கிருபையாலல்லாமற் குறைத்தலரிதாகும். தமமனைவியாகிய அகலிகையையும் வலியகல்லாகச்சபித்தனர். அவர் இதனை யொழித்தற்கு இணங்காராகிலும், நாம யாவரும வந்தனைசெய்து வேண்டிக் கொள்வோம் வாருமென்று எம்மையு மழைத்தார்கள் எ - று (௬)

நானுமங் கவரொடு நண்ணினே னவையறு மதிமிகு குரவனுந்
தேனிவர் கற்பக மாலிகைத் தேவாக ளனைவருங் கவுதமர்
கானிவர் மலரடி முறைமுறை கடிமலர் தூவிவ ணங்கினர்
னானொடு மனமு நெகிழ்ந்துக வொலிகெழு துதிபல வுரைசெய்வார்

(இ - ள்) அப்பொழுது, நானும அவர்களுடன் சென்றேன். குற்றமற்ற அறிவுமிகுந்த பிரகஸ்பதி முனிவனும், வண்டுகள் பொருந்திய கற்பகமலர் மாலையணிந்த தேவர்கள் யாவரும் கவுதமமுனிவருடைய மணந்தங்கிய மலர்போன்ற பாதங்களை முறைமுறையாக வாசம்பொருந்திய மலர்களானர்ச்சித்துப் பணிந்து (எதிர்) நின்று, என்பும மனமும நெகிழ்ந்துருகும்படி ஓசைமிக்க பல தோத்திரங்களைப் (பின் வருமாறு) சொல்வார்கள் எ - று (எ)

வேறு

செம்பொன் மால்வரை யிமயமென சிலம் புடைக் கடமு
மம்பு ராசியி னடைகரை மணலுமவா னுடுவும
பம்பு லாமழைத் தாரையும பார்த்தள விடினும
வம்பி லாயநுமப் பெருமையா ரளவிட வல்லார்

(இ - ள்) பெரிய செம்பொன் மலை (ஆகிய மேருமலை) யும், இமயமலையும், அஷ்டகுலபர்வதங்களும் (ஆகிய) இவற்றின் கனத்தையும், சமுத்திரத்தின் அடைகரையி லுள்ள மணலையும், ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்களையும், நெருங்கிய பெரிய மழைத் தாரைகளையும (ஒருவர்) பார்த்து அளவிட்டாலும், அச்சமயமில்லாத தேவரீருடைய நற்குணத்தின் பெருமையை அளவிடவல்லவர் யாவருளர் ? (ஒருவருமிலர்) எ - று

எங்கும வறகட மெய்திய பொழுதினங் காலைத்
தங்க விதைத்திய துச்சிமுன விளைத்தெவர் தமக்கும
பொங்கி ருளுகவை யடிசிலக ளித்தளும் பொழிந்த
செங்கை யாளின பெருமையார் தெரிக்கவல லாரே.

(இ - ள்.) எவ்விடத்திலும் க்ஷாமமெய்திய நாட்களில், சிறுகாலைப்பொழுதிற் பொருந்த விதைத்ததை உச்சிக்காலத்திற்குமுன்னே விளைவித்து (ஆங்குற்ற) முனிவர

ளெல்லாருக்கும் அதிகரித்த பெருஞ்சுவையுடைய உணவுகளை நாடோறும் (மேகம் போலச்) சொரிந்த செவ்விய கைகளையுடைய கவுதமமுனிவரே! தேவரீருடைய பெருமையை யாவர்தாஞ் சொல்லவல்லவர்கள்? எ - று. (௯)

வேலை யுண்டனன் குறுமுனி யுலகமும் வேறே
கால விசுவா மித்திரன் சமைத்தனன் சினையா
கோல விந்திரன் றேசிய கொலைபழுத் தொழுகுஞ்
சீல வச்சிரத் தோடுகைத் தம்பனஞ் செய்தார்

(இ - ள்) அகத்தியமுனிவர் சமுத்திரத்தை ஆசமனஞ்செய்தனர்; விசுவாமித்திரமுனிவர் வேறே யுலகத்தையும் விருத்தியாகப்படைத்தனர்; சிவனமுனிவர் அழகிய இந்திரன் றன்மேலோச்சிய கொலைத்தொழிலின் மிக்கு விளங்குஞ் சிறந்த வச்சிராயுதத்துடன் கையையுந் தம்பனஞ்செய்தனர் எ - று.

இந்திரனுக்குத்தோற்ற விருத்திராசுரன் கடலிலொளிக்க, அவனைக்கொல்ல வேண்டிய இந்திரன் வேண்டிக்கொண்டதற்கிரங்கிய அகத்தியமுனிவர் கடலைப்பருகி அவனை வெளிப்படக் காட்டினராதலின் "வேலை யுண்டனன் குறுமுனி" என்றார் ஆசிரியர்.

திருவிளையாடற்புராணம்

'கைதவன் கரந்து வைகுங் கடலைவெற் படக்குறுங் கையிற்
பெய்துமுந் தலைவைத் தாக்கிப் பருகினன் பிறைசேர் வேணி
யையன்றன் றருளைப் பெற்றோன் கதிசய மிவன்கொன் மூன்று
வையமுந் தொழிலுஞ் செய்ய வல்லவ ரிவரே யன்றோ"—என்பதனாலுணர்க.

"உலகமும் வேறே கால விசுவாமித்திரன் சமைத்தனன்" என்றது—வசிட்டரிடம் மாறுபட்ட காதிபுத்திரரான விசுவாமித்திரமுனிவர் தம்மைச் சரணடைந்த திரிசங்கு என்னும் மன்னனுக்குத் தமது தவவலியால் நூதன சுவர்க்கம் படைத்த பொழுது, அதைச்சூழ மற்றும் பல உலகங்களையும் படைத்தனரென்பது. இது பல நூல்களிலும் பிரசித்தம்.

சையாதி யரசன் மகள் மலர்கொய்து விளையாடி வனத்திற்சென் றுலாவுகையில், ஆங்குப் புற்றினுள் மறைந்து தவமியற்றி நின்ற சிவனமுனிவரை யறியாது துன்புவிளைக்க, அதனை யறிந்த சையாதி அம்முனிவரைப் பிரார்த்தித்துத் தன் மகள் செய்த குற்றத்தை மன்னிக்கச்செய்து, தன் குமாரத்தியை அம்முனிவர்க்கு மணம் புணர்த்தினன். சிவனமுனிவர் அம்மங்கையுடன் வாழ்கையில், அவளைக் காமுற்று வந்த அசுவினிதேவர்களால் இளமைப்பருவமுற்று, தன் மனைவியின் கற்பு விசேடத்தையுமறிந்து, அதற்குப் பிரதியுதவியாக அவ்வசுவினிதேவர்க்கு யாகத்தில் அவிப்பாகமளிக்க, அதனைப்பொறாத இந்திரன் போர்க்கோலங்கொண்டேவிய வச்சிராயுதத்தைத் தம்பிக்கச்செய்தனர் என்பது சரிதமாதலின் "கோல விந்திரன் றேசிய கொலைபழுத் தொழுகுஞ் - சீல வச்சிரத் தோடுகைத் தம்பனஞ் செய்தார்" என்றார். இதனை இந்நூலாசிரியரியற்றிய

பூவாளூர்ப்புராணம்

"பாழி நற்றவ வல்ல வன்பகா பாக மன்றநி றுத்தலு
மூழி யங்கியெ னக்கி ளர்ந்துரு மேறு யர்த்தவன் வேள்வியைப்
பூழி செய்திவ ணவி யுண்டபின் போவ தன்றிவி டேனெனச்
சூழி வெண்களி றுந்தி வச்சிரஞ் சுற்றி யோச்சின னாதரோ

கண்டிடா நவ நதுதி யாசிக மாந்த ரரிசன றகலன
மண்டு வெளவியின முனவரி ருநதிய மாறற லாககுரு மேறஞன்
மிணடி மேலவிழும வசசி ரதஇனே செயது நோசகின னபபடை
அணட ரினறது கறபி ஞாவிழுக கஞசு காமுகா செஞசென ''—எனவருஞ
செயயுடகளாறுணாக (௪0)

வால கிலலியா வாரிவை வேறுற வருகதா
சோல முததகம வாகையா விருநதவ மிகுதகக
சீல மலகுநந தெரிசனம பரிசனம வசன
ஞால வைபபிடை பாவஙக ளலிவன வனறே

(இ - ள) பொருநதிய உததமரே! வாலகிலலிய முனிவாகள இநதிரனே வேறுகச சிருடடிசெய்தாாகள ஆகையால, பெருநதவஙகளே மிகுதியாகவுடைய நலலொழுககமிக்க தேவரீருடைய தெரிசனமும பரிசனமும வசனமு முதலியவறறால உலகததிலே பாவஙகள் அழிவனவலலவா? எ - று

வாலகிலலியாகள ஒருகாலததில இநதிரனே வேறுகச செயதாாகளெனபது புராண சரிததிரம. தரிசனம பரிசனம வசனமெனபவறறுள தரிசனம - பாாததல, பரிசனம - தொடுதல, வசனம - சொல்லல "ஆமை மீன பறவைபோல" எனறு பிறரும மீன முடடையைபபாாததும, பறவை முடடையை அடைகாததும, ஆமை வசனிததுங காககுமெனபது இவாறைபபோல ஞானி கணணுற பாாததும கையாற பரிசிததும வாயால ஆசீாவதிததுந தனனே யடைநதவனேக கிருதாாததஞ்செய்வ னெனபது (௧௧)

பராநத மககுப காரமே செயவது பயினறீா
சரண டைநதவா தமைமிகத தாஙகுவீ ரெனறு
புரவ லனபொருட டெமைசா ணடைநதன மபுகவே
யொருவ ரிலலெனு வுவபபுறு மினசொல விநதாா

(இ - ள) நலலவாககுதவிசெயவதையே பழகினயவரே! அடைககலம புககவாகளே மிகவும ஆதரிபபவரே! எமமரசனுகிய இநதிரனுககாகத தேவரீரைச சரணமடைநதோம அடைககலம புகுதறகு வேறெருவருமிலலரெனறு, (கவுதமமுனிவா) களிப்புறததககக இனிய சொறகளால யாசிததார்கள எ - று (௧௨)

இரநத வானவா முகததினே நோககினே றிருடி
பரநத ஞானநேத திரஙகளாற பாாததிடப படுவீா
சுரநத வாடடமோ டெதிருறப போநதனிா சுராகாள
கரநதி டாதுமக காவன கழைமினக ளெனறான

(இ - ள) கவுதமமுனிவர் (அவவாறு) யாசிதத தேவர்கள முகததைப பாாததுககொணடு, விசாலித்த ஞானவிழிகளாற் பாாககபபடுவீாகள! தேவாகளே! மிகக மனவருததததுடன எனனெதிரிற பொருநத வநதீாகள ஒளிககாமல உஙகளுககு (எனனுல) ஆகவேணடுவனவறறைச் சொலலுஙகளெனருா எ - று (௧௩)

உறுவ ரன்றிரு வாாத்தைகேட டுமபரார பலரு
முறுகு வெநதுயா முழுவது முருககினு மெனனு

(இ - ள்) கொடியவனை ஒருவன்பேரிற் பலர் இரக்கம் வைப்பார்களாயின் அவன் புனிதனாவான். (அதுபோல) நீங்கள் கூடிக் கருணைசெய்வதால், பரவிய பாதகத்தையுடைய வச்சிராயுதமேந்திய இந்திரனும் புனிதனாயினன். ஆனபடியால் அவனுக்கருள் செய்வோமென்று கவுதமமுனிவர் கூறினார் எ - று (௧௮)

தமனி யப்பெயராற் குரவனைத் தனித்துற வழைப்பா
அமல முதற்றொழி னடைவுற மூவரா யமர்ந்த
விமல மல்கிய விநாயகன் சடக்கர நினக்குச்
சமல வலவினை விடைகொளச் சாற்றுதுந் தனித்து

(இ - ள்) பொன்னென்னும் பெயரையுடைய (தேவ) குருவைத் தனித்து வரவழைத்து, புனிதமான (சிருட்டி முதலிய) முதற்றொழில்கள் நடைபெறும்படி (பிரமன் முதலிய) திரிமூர்த்திகளாகப் பொருந்திய புனிதத்தன்மை மிக்க விநாயகக்கடவுளுடைய சடக்கர மந்திரத்தை, உனக்கு மலசமூகமாகிய வலிய வினையானது விடைபெற்றுக்கொள்ளும்படி தனித்துச் சொல்லுவோம் எ - று (௧௯)

அடுத்தி ருமைய னாதிபா னனக்கிருந் தீக்கை
முடித்து மைந்தியம் முதிரமனு முற்றிய சாப
மிடித்தி யோனியெ லாம்விழி யெனச்செயும் பவமும்
பொடித்தி டும்பதங் கருமென வருளொடும் புகன்று.

(இ - ள்) மின்னலையுடைய பெரிய மேகத்தை வாகனமாகக்கொண்ட இந்திரனுக்குப் பெரிய தீக்கை முடித்து, இப்பழமையாகிய மந்திரத்தை உபதேசஞ்செய்த அது மிக்க சாபத்தை யொழித்து (அவனுடலிற் பொருந்திய) பெண்குறிகளையெல்லாம் விழிகளாக மாறச்செய்யும் பிறவியையு மொழிக்கும், திருவடியைக் கொடுக்குமென்று, கிருபையுடன் (அதனை) உபதேசித்து எ - று. (௨௦)

சிவமெ லாந்தருஞ் சடக்கரந் தீக்கையோ டுதவி
யவமெ லாந்தெறு மனுவடிக்கு முறைமையு மறைந்தான்
பவமெ லாந்தெறக் கேட்டவன் பண்ணவ ரோடுந்
தவமெ லாநிறை முனிவனைத் தாழ்ந்தனன் போந்தான்

(இ - ள்) மங்கலங்களை யெல்லாங் கொடுக்குஞ் சடக்கர மந்திரத்தைத் தீக்கை விதியுடன் உபதேசித்து, துன்பங்களெல்லாவற்றையு மொழிக்கத்தக்க அதுடைய முறையையுங் கூறினார் பாவங்களெல்லாமொழிய (அதனைக்) கேட்டபிரகற்பதி முனிவன் தேவர்களோடும், எல்லாத்தவங்களு நிறைந்த கவுதமமுனிவரைத் தாழ்ந்து (விடைகொண்டு) சென்றனன் எ - று (௨௧)

வேட்டு ளார்க்கெலாம் வரமருள் விண்ணவர் கோமா
னீட்டு தீவினை யிலையெல வெனவரு முயன்று
வாட்டு வாரெனின் மணமிசை வைகலும் பாவ
மீட்டு வாரக்கு நீங்குமோ வெழுமையு மிருபா.

(இ - ள்.) உருக்குமாங்கதராசனே! விரும்பியவர்களுக்கெல்லாம் (அவர்கள் விரும்பிய) வரங்களைக்கொடுக்குந் தேவேந்திரன் தேடிக்கொண்ட பாவத்தை, தேவர்க

னெல்லோரும் முயற்சிசெய்து அழிப்பார்களென்றும், பூமியிலுள்ளோரும் பாலரு சமர்ப்பிப்பவர்களுக்கு ஏழு பிறவிகளிலும் அப்பாவமகலுமா? (அகலாது) எ - று.

கடவுளர் குருவுக்குத் தீவுதமருபதேசித்தபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௱௨௬

---

# இந்திரனுபதேசம்பெற்றபடலம்.

---

கவுதம னருள்பெறுங் கடவு ளார்களுஞ்
சவலையின் மதிமிகுத் தமனி யப்பெய
ரவனுமென் மொழிப்படி யடுத்து மேருவைத்
தவழ்திரை மாமடுச் சார்ந்து கூவுவார்

(இ - ள்) கவுதமமுனிவர் கிருபையை யடைந்த தேவர்களும், மயக்கமில்லாத அறிவுமிக்க பொன்னின் பெயர்வாய்ந்த பிரகற்பதிமுனிவனும் என்சொற்படி மேருமலையை யடுத்து, தவழ்கின்ற அலைகளையுடைய மகாமடுவைச்சார்ந்து (பின்வருமாறு) கூப்பிடுவார்கள் எ - று. (௧)

ஓஒச தக்கிருது வேயும்பர் வேந்தனே
யோஒ வயிராணி யினுயிர்க்குத் தோழனே
யோஒ தயித்தியர் குலமொறுக்கும் வீரனே
யோஒ மகவான் வெளியுறுதல் வேண்டுமே

(இ - ள்) ஓஒ சதக்கிருதுவே! தேவர்களுக்கரசனே! ஓஒ இந்திராணியின் இனிய உயிர்த்தோழனே? ஓஒ தயித்தியர்குலத்தைச் சங்கரிக்கும் வீரத்தன்மையுடையவனே! ஓஒ மகவானே! (நீ) வெளியேவருதல் (எங்களுக்கு) வேண்டியது எ-று.

சதக்கிருது - நூறு அசுவமேதஞ்செய்தவன், சதம் - நூறு, கிருது - யாகம். மகவான் என்பதில் மகம் - யாகம். (௨)

செச்சென்ச் சபித்துனை விடுத்த மாதவன்
பொச்சமில் கழன்மலர் போற்றி நின்னுளத்
தச்சம தறுமவ னருளொ டெய்தினந்
நச்சிய நாரதர் தாமு நண்ணினார்

(இ - ள்) கோபித்து உன்னைச்சாபமிட்டனுப்பிய பெருந்தவசியாகிய கவுதமமுனிவருடைய பொய்மையில்லாத திருவடித்தாமரையைத் துதித்து, உன்மனத்திலுள்ள பயமொழியும்படி அவரருள்பெற்றடைந்தோம். (யாவரும்) விரும்பிய நாரதமுனிவரும் வந்திருக்கின்றனர் எ - று. (௩)

அவரவர் புரிபிழை யகத்தி ராவகைத்
தவவெளி யுரைத்திடு றறந்த மேதையோர்
கவலையு முடன்றகக் கழுவு வாரலை
துவவுவ துரைத்திடா தொரிப்பின் மன்னனே.

(இ - ள்) அவரவர் செய்த குற்றங்களை மனத்திலிராவண்ணமாக அறியும்படி வெளியிட்டுச் சொன்னால், தகுதியாகிய ஞானமுடையவர்கள் (குற்றந்தனைத் தீயனெறி அதற்கேலான) துன்பத்தையும் உடனே விலகும்படி யொழிப்பார்கள் அரசனே! அதனைச் சொல்லாது மறைத்துவைத்தால் அதிகமாகும் எ - று (௪)

புரிநரம் புளர்ந்திசை பொழியும் வீணையின்
விரிபுகழ் நாரத முனிவர் மேருவிற்
பெரியவ ரிவர்முனம் பேசி நின்பிழை
பிரிவது செயலினிப் பேணத் தக்கதே

(இ - ள்) முறுக்கமைந்த நரம்புகளைத் தடவி இசை (மழை)யைப் பெய்யும் வீணை(யாகிய மேகத்தினை) உடைய பரந்த கீர்த்தியினையுடைய நாரதமுனிவர் மேருவைக்காட்டிலும் பெரியவர் (ஆதலின்) இவர்முன்னே உன்னுடைய குற்றத்தைச் சொல்லி அதனை யொழித்தல்செய்வது இனிச்செய்யத்தக்கது எ - று (௫)

உருத்திரன் மன்றலி னுமைதன் சீரடிப்
பருத்த பெருவிர லுவந்து நான்முக
னுருத்தெழு பாவமு நாணு மோம்பினான்
னுருத்திரன் றிருவரு ளுதவப் பெற்றரோ

(இ - ள்) சிவபிரானுடைய திருமண மகோற்சவத்தில், உமாதேவியின் சீர் பொருந்திய திருவடியிலுள்ள அழகுவாய்ந்த பெருவிரலை நான்கு முகங்களையுடைய பிரமதேவன் விரும்பிச் சிவகடாட்சமருளப்பெற்று, சினந்தெழுந்த பாவத்தையும் நாணத்தையுங் காத்தனன். எ - று (௬)

ஆதலா னீயுமின் றகத்தி னீங்கிடப்
போதுவா யீங்கெனப் புலவர் கூறலுஞ்
சீதநீர்த் தாமரைச் செறிமுட் டாளினின்
றேதமோ டிந்திர னிம்மென் றெய்தினான்

(இ - ள்) ஆனபடியால், நீயும் இப்பொழுது பாவத்தினின்றும் விலகும்படி இங்கேவருவாயாகவென்று தேவர்கள் சொல்லவும், குளிர்ச்சிபொருந்திய நீரிலுள்ள தாமரையின் முட்கள்நெருங்கிய தாளினின்று தன் குற்றத்துடனே இந்திரன் விரைந்துவந்தனன் எ - று (௭)

விண்குடி வாழ்நர்கள் வேந்தன் முந்துறப்
பெண்குறி நோக்குதல் பிழையென் றேசிலர்
கண்களைப் புதைத்தனர் கவிழ்த்திட் டார்சில
ரொண்கர நாசியி னுறுவித் தார்சிலர்.

(இ - ள்) விண்ணுலகிற் குடியிருக்குந் தேவர்கள் தமதரசனாகிய இந்திரன் (தமக்கு) நேரில்வரக் (கண்டு, அவனுடலிலுள்ள) பெண்குறிகளைக்காண்பது குற்றமென்று சிலர் கண்களைமூடிக்கொண்டனர் சிலர் தலைகுனிந்துகொண்டனர் சிலர் ஒள்ளியகையை மூக்கின்மேலே வைத்துக்கொண்டனர் எ - று

இந்திரன் தன்னுடலிற் பெண்குறிகளடைந்துள்ளமை கண்ட தேவர்கள் செயலை இச்செய்யுளாற் கூறினர். (௮)

வளரிப்புரு செயப்பிழை வைத்த மந்திரத்
தூலாவுமெண் கழிவிற வானைத்த மந்திரம்
கலாநிதி கண்டெனக் காந்த மெய்பொருந்
குலாவிய விதிமுறை கொண்டு வந்தனன்.

(இ-ள்) இந்திரனுந் தான் செய்த குற்றத்தை (மிகுதியாக) கூறி, யந்திரத்தாலுலாவுகின்ற எல்லாவுயிர்களும் போற்றும் அறிவுடைய பிரகஸ்பதிமுனிவன் சொல்லிய மந்திரத்தை, சந்திரனைக் கண்டபோது ஆம்பல்மலர்போல (மகிழ்ந்து)ச் சொல்லிய விதிமுறையாகப் பெற்றுக்கொண்டனன் எ-று.

கலாநிதி - கலைகளுக்கிருப்பிடம், சந்திரன்.   (கூ)

திருந்துமந் திரஞ்செவி புகுத லும்முன
வருந்திய சாபமுன் மருவி னுமெனப்
பொருந்திய பயன்றரப் புரையி னீங்கிநின்
றுருத்தகு மியோனிக ளொளிர்கண் ணாயின.

(இ-ள்) திருத்தமாகிய சடக்ஷரமந்திரமானது தன் செவியிற் புகுதலும் தன்னைத் துன்புசெய்த சாபமானது முன்னே (கவுதமர்கூறிய உடனே) நீங்கினாற்போல, கூடிய பிரயோசனமுடையதாகி விரைவில் குற்றத்தினின்று விலகி, உருவமைந்த பெண்குறிகளெல்லாம் பிரகாசிக்கின்ற கண்களாக மாறப்பெற்றன எ-று.

கவுதமரிட்ட சாபம் உடனே தொடர்ந்தாற்போல, பிரகஸ்பதியினிடம் சடக்ஷரோபதேசம் பெற்றவுடனே அக்குறிகளெல்லாம் கண்களாயினவென்பது கருத்து.

அந்தவ ரென்மொழி மயிலைக்கொள் வேலனே
இந்திய வாசிகள் செப்ப விண்ணவர்
சொரிந்தனர் மலர்களுந் துந்துமி முழங்கின
வரமடையர் நிரைநிரை யாகி யாடினர்.

(மு-ள்) கூர்மைபொருந்திய வேற்படைதாங்கிய முருகக்குமாரகதராசனே! என்னுடன் அரியதவஞ்செய்த முனிவர்கள் (பலர்) திருத்தமாகிய ஆசிமொழிகள் கூற, தேவர்கள் மலர்மாரி பெய்தனர் தேவதுந்துமி முழங்கின தேவதாசிகள் வரிசை வரிசையாகி நடனஞ்செய்தார்கள் எ-று.   (கக)

கின்னரர் பாடினர் கிளர்ந்த மாகதர்
இன்னிசை புகழ்ந்தன ரிறைஞ்சி யேனையோர்
நின்னையில் லாதுயர் நிலவில் லாவிர
வன்னையில் லாமக வாயி னேமென்றார்.

(இ-ள்) கின்னரர்கள் பாடினார்கள் சொல்லிய மாகதர்கள் இனிய கீர்த்தியைப் புகழ்ந்தார்கள் பிறர் இந்திரனைப் பணிந்து, ஐயனே! உன்னையில்லாமல், சந்திர வொளியில்லாத இரவும், தாயில்லாத குழந்தையுமானோமென்று சொன்னார்கள் எ-று.

மாகதர் - அரசனுக்கு வைசியமாதுக்கும் பிறந்து பிரபுவின் கீர்த்தியைப் பாடுவோர்.

அவ்விய மகன்றிருந் தவர்க டங்களை
யொவ்வொரு முனிவரை யுபசரித் தும்பரா
ரெவ்வகைப் பெருமையு மியைந்து வீறெனத்
தெவ்வடு வச்சிரஞ் செப்பித் தாழ்ந்தனன்.

(இ - ள்.) பொறுமையொழிந்த மனத்தையுடைய முனிவர்களை நோக்கி, நீவிரொருமுனிவரும், கெடுதலில்லாத தேவர்களுடைய எவ்வகைய புகழையும் பொருந்தியுள்ளீர்களென்று, பகைவரைக்கொல்லும் வச்சிராயுதமேந்திய இந்திரன் (உட்சாரமானதை) கூறிப்பணிந்தனன். எ - று (௧௩)

தேவரை நோக்கியே செப்ப லுற்றனன்
றேவறு கவுதமன் சாபந் தீர்வகை
யாவது புரிந்தனி ரதனை யிந்திலேன்
மேவுகைம் மாறுமக் கில்லை விண்ணினும்

(இ - ள்.) தேவர்களை நோக்கிச்சொல்லினனென்ன: கெடுதலற்ற கவுதமமுனிவனிட்ட சாபமொழியுமவகையாக யாதுசெய்தீர்கள்? அதனையறிகிலேன். உங்களுக்கு (இவ்விடத்திலேயேயன்றி) தேவருலகத்திலும் பொருந்திய பிரதியுதவி (செய்வதற்கொன்று) கிடையாது. எ - று (௧௪)

பண்டைய முகவிழி பாயி ருட்பட
முண்டக நாளத்தின் முழுகி னேற்கொளி
மண்டிய வாயிர மலர்க்க ணல்கினீர்
கொண்டனன் னலமெலாங் குளிர்ந்த வானுளீர்.

(இ - ள்) முகத்திலிருந்த பழமையாகிய விழிகள் மிகவும் இருளபட, தாமரைத்தண்டிலே ஒளித்துக்கொண்ட எனக்குப் பிரகாசம்பொருந்திய (தாமரை) மலர்போன்ற ஆயிரங்கண்களைக் கொடுத்தீர்கள். குளிர்ச்சிபொருந்திய வானுலகிலுள்ளவர்களே! (உங்களால்) நன்மை முழுவதையுங்கைக்கொண்டேன். எ - று (௧௫)

இன்னுமே ரம்பனின் னருள்பெற் றின்புற
நன்னர்மா தவங்கணற் றலத்தி னாற்றிய
பின்னர்வா னுலகினைப் பேணு வேனலான்
முன்னர்நான் பேணுதன் முன்னி லேனரோ

(இ - ள்) இன்னும், விநாயகக்கடவுளுடைய இனிய திருவருளைப்பெற்று இன்பமடையும்படி நல்ல சிறந்ததவங்களைப் புண்ணிய தலத்திலே செய்தபிறகு, தேவலோகத்தை யரசுசெய்வேனல்லாமல், (அதற்கு) முன்னே நான் அரசுசெய்வதைக் கருதினேனல்லேன். எ - று (௧௬)

நீவிர்க ளனைவரு நெடிய வானிடை
மேயினர் வதிமினோ விளைத்த கற்பக
மாயிரும் பொருள்சில வந்து நல்குகென
றாயிரம் விழியினா னவரைப் போக்கினான்

(இ - ள்) நீங்களெல்லோரும் பெரிய தேவலோகத்திற் பொருந்தி வாசஞ்செய்யுங்கள் (உங்களிற்) சிலர் மணமமைந்த கற்பகத்தருகொடுத்த சிறந்த பெருமை வாய்ந்த பொருள்களைக் கொண்டுவந்து கொடுங்களென்று, ஆயிரங்கண்களையுடைய இந்திரன் கூறி, அவர்களைச் செல்லவிடுத்தனன். எ - று. (௧௭)

இந்திரனுபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – ௩௫௪௧.

# இந்திரன்பூசித்தபடலம்.

இதமாபுரியுந தேவாகளு மிருடியரு நீஙகியபின
கதமபவனத திடையேகிக காவலபுரி விணணவாகோ
னதமபலவுந தீபலவு மொனருறறு போனவையின
சிதமபுகெது மொருதீாததந திகழ்தரககண டதையடுததான.

(இ - ள) (அமரருலகைக)காவலபுரியுந தேவராசனுகிய இநதிரன, நனமை யைசசெயயுந தேவாகளும இருடியர்களும(தனனைவிட்டு)நீஙகிசசென்றபிறகு, கநதப வனததிற சென்று, நதிகளபலவுந தீககள பலவும ஒன்றுசோந்தாற்போல, குறறக தினெருகுதியை யொழிககும ஒருதீர்த்தம் விளஙகுவதைப் பாாதது, அதனைசசமீபித தனன எ - று

சிதமபுதல - குணமினமை (க)

அத்தடததி லமராதரு மாகாய கஙகையுருமோாத
துததமனத் தடககரையி னெளிாபளிககா லயநிருமித்
ததததனையைங் கைக்களிறறை யாகமததின வழிநிறுவி
யெததகைய பொருளகளினு மினிதுறபபூ சைகளாறறி

(இ - ள) புனிதனன இநதிரன அந்தத தடாகததிலே, தேவாகள் கொணடு வந்த ஆகாயகஙகையையுஙகூட்டி, அத்தீாததக கரையிலே பிாகாசிககினற பளிஙகுக கலலால திருவாலயநியமிதது, (யாவாககுந்) தநதையும ஐநதுகரங்களையுடைய யானை முககடவுளுமாகிய விநாயகபபெருமானை ஆகமமுறையாகப பிரதிட்டைசெய் , எவ் வகைப்பட்ட பொருள்களாலும இனிதாகப பூசைகளசெயது. எ - று.

இதுமுத லிரண்டு பாடல்கள குளகம் (உ)

வாயிலினிந தியமவழுங்கா வகையடககி நாசிநுனி
காயொளிககட கடைநிறுவிக கவினறருமா தனமவைகி
யாயிரமாண் டாறெழுததை யனுட்டிபபி னெடுஙகணிததான
மாயிருமா மறையறியா மதககைமுக னடிநினைநதே

(இ - ள்) சிறந்தபெரிய மகாவேதஙகளறியாத மதஞ்சொரியும யானைமுக முடைய விநாயகக்கடவுள திருவடியைச் சிநதிதது, வாயிலின வழியே இநதியஙகளைப புறஞ்செல்லா தடககி, நாசிமுனையிலே பிரகாசிககினற ஒளியையுடைய கட்கடையை நிறுததி, அழகுசெயயும ஆதனததிற் பொருந்தி ஆயிரவருடகாலஞ சடசகசரமநதிரத தை அநுட்டிபபுக கிரமமாகக கணிததனன எ - று. (ந)

நித்தலும்பூ சனையியற்றி நிராகாரத தொடுவைகிப
பததியினுற றியாணித்துப பயனறருமந திரஙகணிததுச
சுததவுளத தினனுகிச சுரராசன் றவமபுரிய
வததிமுகன பேரருளகூாந தவனெதிரதோன றினன்மாதோ.

(இ - ள) தேவராசனுகிய இந்திரன நாடோறும் (இவ்வகையாகப்) பூசை செயது, ஆகாரமிலலாமலிருநது பததியுடன தியானஞ்செயது, பயன்தரததக்க மநதி

ரத்தைச்சுணித்து, புனிதமான மனமுடையவனுகித் தவஞ்செய்ய, யானைமுகத்தை யுடைய விநாயகக்கடவுள் பேரருள் மிகுந்து அவ்விந்திரனுக் கெதிரே தரிசனந் தருளினர் எ - று. (௫)

தவளமதி புரைநிறமுந் தசதிசைபோர்த் தொளிர்தேசுங்
கவளமக கரிமுகமுங் கதிர்மணிமா லிகைவிளக்குந்
துவளுமொரு புழைக்கரமுந் தோளுங்கு மணிக்கண்டைத்
திவள்சதங்கை நூபுரப்பொற் சேவடியு மனைநானும்.

(இ - ள்) வெள்ளியசந்திரனையொத்த நிறமும், பத்துத்திசைகளைய மூடிப் பிரகாசிக்கும் ஒளியும், கவளங்கொள்ளும் மதயானையின் முகமும், பிரகாசிக்கின்ற முத்துமாலையை விளக்குக் துவள்கின்ற ஒப்பற்றதுதிக்கையும், நான்குதோள்களும், இரத்தினக்கண்டையும் பிரகாசிக்கின்ற சதங்கைமாலையும் பாதசரமுமணிந்த அழகிய திருவடியும், (பொன்) அனைநானும் எ - று

கவளம - யானைகொள்ளுமுணவு அல்லது வாய்கொண்டவுணவு

இதுமுத லிரண்டு பாடல்கள் ஒருதொடர் (௬)

அங்கதமும் வளைமார்பி னணிதருமுப் புரிநூலும்
பொங்கொளிர்ந்த திலவடமும் பொலிந்தவர் கனகதொடையுஞ்
செங்கதிரி னிருளசீக்குங் குண்டலமுந் திகழ்முடியுந்
தங்குருவி னெதிர்நின்ற தலைவனைவா சவன்கண்டான

(இ - ள்) அங்கதமும், மலைபோன்ற மார்பிலணிந்த உபவீதமும், ஒளிமிக்க முத்துமாலையும், அழகிய இரத்தினமாலையும் செவ்விய கிரணங்களையுடையசூரியனைப் போல இருளையகற்றுங் குண்டலங்களும், பிரகாசிக்கின்ற கிரீடமும் (கொண்டு) தமது குருவாகிய பிரகற்பதிமுனிவனைப் போல எதிரேநின்ற விநாயகக்கடவுளை இந்திரன் தரிசித்தனன். எ - று

அங்கதம - தோளணி (௭)

மிகப்பெருங் கருத்தனபும வெருவுதனு முடனேறனறக்
கொக்கிருகை சிரமேறக் குணிணைவா தனக்கெழுந்து
தக்கமுறை யால்வணங்கித் தண்டமிட் டெதிரடித்துப்
பொக்கமற வலமவந்து புகழெடுத்துப் பாடினன

(இ - ள்) மேம்பட்ட பெருங்கருத்தும ஆசையும் அச்சமும உடனே உண் டாக, இருகரங்களுஞ் சேர்ந்து, சிரமிசையேறத்துணுக்குற்று ஆசனத்தினின்றெழுந்து, தக்கமுறைப்படி பணிந்து (சாஷ்டாங்க) தண்டஞ்செய்து, எதிரே (ஆனந்தமேலீட் டால) நடனஞ்செய்து, குற்றமகலப் பிரதக்ஷிணஞ்செய்து (அவ்விநாயகருடைய) கீர்த் தியை யெடுத்துப் (பினவருமாறு) பாடினன எ - று. (௮)

வேறு

அறிவாய் விளங்கு மொளியாகி யெங்கு மசைவற்று நின்ற நிறைவாய்க
குறியாதி யின்ப முதலீறிலாத குறைவற்ற வின்ப மயமாய்ச
செறிவான நீரி னிழல்போல நின்ற திறலோயை யானும வளைவேன
வெறுஞான மான திருமேனி கொண்டென விழிகாண முன்னா வரலால்.

(இ - ள்) அறிவாகி விளங்குஞ் சோதிரூபியாய், எவ்விடத்திலுஞ் செறிந்து நின்ற பூரணமாய், குறி முதலிய இன்பமுதலை முடிவில்லாத குறைவற்ற இன்ப மயமாகி, நெருங்கிய சீவன்முத்தரைப்போல ஒப்பற்ற வல்லமையுடைய சேவகனே, சுத்தஞான மான திருமேனியோடு என்கண்கள் காணும்படி முன்பு வெளிப்பட்டருளியதனால், அடியேனும் பிரதக்கணஞ் செய்தேன் எ - று (௮)

இருண்மூழ்கு கண்ணின் மலமேவ லகத்தி னிகழ்வின்றி நின்ற வுயிர்கட்
குருவாதி மூன்று முன்முயக்க வற்றி னுளதாம் விகார வகையா
லிருவேறு கன்ம மிசைவித் தருத்து மிறையோனை யானு மொழிவேன்
மருண்மாயை நீக்கு திருமேனி கொண்டென் விழிகாண முன்னை யாலோ

(இ - ள்) (அஞ்ஞானமாகிய) இருளின்மூழ்கிய கண்களின் மலமேவலகத்தி னிகழ்ச்சியில்லாமல் நின்ற உயிர்களுக்கு உருவமுதலிய மூன்றையுமுன்னளித்து அவற்றி னுளதாகிய விகாரவகையால், வேறாகிய இருவகைக் கன்மங்களையுமிசைவித்துப் புசிப்பிக்கின்ற தலைவராகிய கணேசப்பெருமானை மயக்கம் பொருந்திய மாயையை யொழித்த திருமேனியோடு என் கண்கள் காணும்படி முன்னே வெளிப்பட்டருளியதனால், அடியேனும் (இவ்வகையினரென்று அநேக) கூறுவேன் எ - று (௯)

வாதங் கடந்து பலமாயை கன்ம வகையுங் கடந்து வைரப்
பேதங் கடந்து பொருளொன்று மின்றி யெழுகின்ற மயக்க முயிரின்
போதங் கடந்து துரியங் கடந்த பொருளாயை யானு முணர்வேன்
வேதங் கடந்த திருமேனி கொண்டென் விழிகாண முன்னை வாலோ

(இ - ள்) வாதஞ்செய்தலைக் கடந்து, பலவகைப்பட்ட மாயாகன்மவகைகளையுங் கடந்து, அவைசெய்கின்ற துன்பங்களையுங் கடந்து, ஒருபொருளுமில்லாமல் தோன்றுகின்ற மயக்கம்பொருந்திய உயிரின் தற்போதமுங்கடந்து, துரியதத்துவமுங் கடந்த பொருளாயுள்ள தேவரீரை, வேதங்கடந்தசிதப்பட்ட திருமேனியைக்கொண்டு என்கண்கள் காணும்படி என்முன்னே யெழுந்தருளியதனால், அடியேனும் (இவ் வகையினரென்று) அறிவேன் எ - று (௰)

வெங்கட் களிற்றின் மகவான் றுதிக்க விழிநீ ருகுத்து ளுருகச்
சிங்கஞ் செலுத்தி யெதிர்வந்து நின்ற திகழ்முக்கண் வேழ முகவ
னிங்குற்று நீசெய் செபமாதி யான மிதயங் களித்த னமியேம்
பொங்குற்ற காதல் வரம்வேட்ட தின்று புகலென்ன வோது மவனே.

(இ - ள்) கோபக்கண்களையுடைய (ஐராவதமென்னும்) யானையை வாகன மாகக்கொண்ட இந்திரன் (இவ்வாறு) தோத்திரஞ்செய்து, கண்ணீர்சிந்தி மனமுருக, சிங்கவாகனமூர்ந்து அவனெதிரே யெழுந்தருளியிருந்த விளக்கம் பொருந்திய திரி நேத்திரங்களையுடைய விநாயகக்கடவுள் நீ யிங்கேவந்து செய்த செபத்திற்குஞ் சிறந்த தியானத்திற்கும் மனங்களித்தோம் இனி அதிகரித்த காதலையுடைய நீ விரும்பிய வரத்தை யிப்பொழுது கூறுகவென, அவ்விந்திரன் கூறுவான் எ - று (௧௧)

யோகத்தி னானு முணரப் படாமை யுயர்ஞான யோக நிலையோ
ராகத்தி னென்று படுகின்ற பாத பதுமங் கெடாது புரியும்
யாகத்தி னான பயனுந் துறக்க மெளியேற் களித்தி யதுவும்
போகத்தின் மக்கள் விடாரின்றி யின்று புகழோடு மாளும் வகையில்.

(இ - ள்) யோகத்தினாலும் அறியப்படாமல் உயர்ந்த ஞானயோக நிலையிலுள்ளவர்கள் பாகத்தினாலே ஒன்றுபடுகின்ற பாததாமரை, நீங்காது செய்யும் யாகத்தினாலான பயனாகிய சுவர்க்கலோகத்தை அடியேனுக்குக் கொடுக்கவேண்டும். அதுவும் போகத்தின மிகும்படி துன்பமில்லாமலிருந்து, கீர்த்தியுடன் அரசுசெய்யும் வகையோடு (அநுக்கிரகிக்கவேண்டும்.) எ - று. (கஉ)

முன்னை யெனக்கு மறையோனு மிந்த மொழியா றெழுத்து மனுவைத்
தன்னு தரத்தி னுரைசெய்து நீயித் தனிமந் திரத்தை யொழியின்
மன்னுது விண்ணி னரசாட்சி யென்று வழிவற புறத்து மதனைப்
பின்னை மறந்து பிழையிற் படர்ந்து பெரிதான துன்ப மணிநேன்.

(இ - ள்.) சொல்லுகின்ற இந்தச் சடக்கரமந்திரத்தைப் பிரமதேவனும் முன்னேயெனக்குத் தன்னுசையாலுபதேசித்து, நீ இந்த ஒப்பற்ற மந்திரத்தை விடுத்தால் தேவலோக வரசாட்சி உனக்குப்பொருந்தாதென்று வறபுறுத்திக் கூறியதைப் பிற்காலத்திலே மறந்து, குற்றத்திற்சென்று பெரிதான துன்பமடைந்தேன எ - று.

பொன்னே னுரைபபு விடாமுற றகன்று புகழாயி ரங்க ளுடையே
னின்னா றெழுத்தை யுரைசெய்து பூசை நெடிதாற்றி வந்த பரிசா
லுன்னுத தாகி யுரையாத தாகி யுறலிற படாத பொருணீ
முன்னாகி நின்ற வருளா லெனக்கு முடியாமை யாவ துளதோ.

(இ - ள்.) (எனகுருவாகிய) வியாழபகவான உபதேசிகக, துன்பமுழுவதுமகன்று, புகழததக்க ஆயிரங்கண்களையடைந்த அடியேன தேவரீருடைய சடக்கரமந்திரத்தைக கணித்துப் பூசையை மிகுதியாகச்செய்துவந்த தன்மையால், நினைக்கப்படாததாகியும் சொல்லப்படாததாகியும் பரிசிக்கப்படாததாகியுமுள்ள பொருளாகிய தேவரீர் என்முன்னாகி யெழுந்தருளிய திருவருளால், எனக்கு முடியாதது யாதொன்றிருக்கின்றது ' எ - று (கச)

கேடா மெனைக்கு முறுகா ரணங்கள கிழவோய பதத்தி னிறையன
பாடாமை யாகு மதனு லெனக்கு னடிவாரி சத்தி னுழுவல
விடாமை வேண்டு மதுவன்றி யுள்ள விழைவுபகரு மிகுன வடிவுக
கோடாத சிந்தா மணியென்னு நாம முறலவேணடு மூரகரு முறுக.

(இ - ள.) துன்பமாகிய வெல்லாவற்றிற்கும் பொருந்திய காரணங்கள், யாவுமுடைய தேவரீரது திருவடியில் நிறைந்த அன்பைச் செலுத்தாமையாகும் ஆனதால் அடியேனுக்குத் தேவரீருடைய திருவடித்தாமரையிற பகதி அழியாமல (கொடுத்தருள) வேணடும அதுவல்லாமல், மனதில் விரும்பியவற்றைக் கொடுக்கும் இவ்விடத்திலுள்ள தேவரீர் திருவுருவத்திற்குச சிந்தாமணிவிநாயகரென்னுந் திருநாமமுணடாக வேண்டும். அப்பெயரே [சிந்தாமணிநகரமென்று] இந்நகரத்திற்கு முணடாகுக. எ-று.

தீர்த்த தனக்கு மிப்பேர் சிறக்க திகழூர்க் கதனறி யெவரு
மோர்க்கும் கதமப நகரென்ற பேரு முறுகிறக வூரில் வதிவோ
ராக்குந் தடத்தி னாடலாடு வோருன னடியிற் கிறைஞ்ச னுறுவோர்
பாரக்கட் சிறந்த பயனன்கு மாக பகவானெ னப்ப காதனும.

(இ - ள்.) இத்தீர்த்தத்திற்கும் (சிந்தாமணி தீர்த்தமென்று) இட்டபெயர் சிறந்திருக்க. அதுவல்லாமல் நகரத்திற்கு எவரும் விரும்பத்தக்க கதம்ப -

கவட்டுக் கானிறக் கதழுந்தமான்
கவட்டுத் தாரிது நீ இயந்து
சவட்டி யுய்க்கிது சார்ந்தென
குவட்டுத் தோளவ கூறென்றார்.

(இ - ள்) கொம்புகளையுடைய வனத்தில் விரைந்தோடிய மானின் சுவட்டு வழியே (தொடர்ந்து) தேடி, அதனை வேட்டையாடிய வுனக்கு இத்தீமைவிளைந்தது யாதுகாரணம்? மலையையொத்த தோளையுடைய உருசகுமாங்கத ராசனே! கூறுக வென்றார்கள் எ - று.

கவடு - மரக்கொம்பு; சுவடு - காலடி; குவடு - மலை. (௨)

வெற்றி வீமன் விறன்மக
னுற்ற துற்றவா சோதினு
னற்ற மில்பொரு ளாங்குறப்
பற்றி யேகினன் பான்மையால்.

(இ - ள்) வெற்றிவாய்ந்த வீமராசனுடைய வலிதங்கியமகனாகிய உருசகுமாங்கதராசன் நடந்த விருத்தாந்தத்தைத் தன்னிடம் வந்தவர்களுக்குக்கூறினன் குற்றமில்லாத உண்மைப்பொருள் ஆங்கடைதலால், அதனைத் தகுதியோடு கடைப்பிடித்துச் சென்றனன் எ - று. (௩)

பொதும்பு சூழ்ந்துபு கைந்தெரி
வெதும்பு வெங்கட்ட விண்டுதேன்
றதும்பு பூம்பொழில் சார்ந்தவக்
கதம்ப மாநகர் கண்டனன்.

(இ - ள்.) பொதும்புசூழ்ந்து புகைந்து தீயானது சுடுகின்ற கொடிய காட்டைக்கடந்து தேனொழுகும் மலர்ச்சோலை சேர்ந்த அந்தச் சிறந்த கதம்பநகரத்தைத் தரிசித்தனன் (உருசகுமாங்கதன்) எ - று.

பொதும்பு - மரப்பொந்து. (௪)

சீர்க்கர் போற்றுஞ்சிந் தாமணித்
தேர்க்க ணேகதெரி சித்துநோய்
தீர்க்கல் செய்யுஞ்சிந் தாமணித்
தீர்த்த நீர்படிந் தாடினான்.

(இ - ள்) புனிதமானவர்கள் துதிசெய்யுஞ் சிந்தாமணிவிநாயகரைத் தரிசித்து, (எல்லா) நோயையுமொழித்தருள்செய்யுஞ் சிந்தாமணி தீர்த்தநீரிலே மூழ்கி ஸ்நானஞ்செய்தனன் (உருசகுமாங்கதராசன்) எ - று. (௫)

கருக்கி வெண்ணிறங் காட்டிமெய்
முருக்கு நோய்கெட முன்பெய
ரிருக்க நலமெலுழி லெய்தினு
னுருசகு மாங்கத வத்தமன.

(இ - ள) கருக்கசெய்த வெண்ணிறத்தைக் காட்டி உடலைத்துன்பு செய்யுந் தொழுநோய் கெடவும், [உருக்குமாங்கதனென்னும்] பழையபெயர் (நிலைபெற்று) இருக்கவும், உருக்குமாங்கதனாகிய உத்தமன் நல்ல அழகை யடைந்தனன் எ - று. (சு)

செயிர றுக்குஞ்சிந் தாமணிப
பெயரவி நாயகர் பெயகழ
கயர்வி லாதமெய் யன்புறு
மயரில் பூசைவ யக்கினன.

(இ - ள) குற்றத்தை யொழிக்குஞ் சிந்தாமணியென்னும் பெயரையுடைய விநாயகக்கடவுளுடைய வீரக்கழலணிந்த பாதங்களில், மயக்கமில்லாத பூசையைச் செய்தனன் சோர்வில்லாத உண்மையன்பினையுடைய வீமராசனே! எ - று. (எ)

அந்த ணாளர்க்க ருமபொருள
சிந்தி னானது செவ்வியின
வந்து ளார்கள்வி மானமேர
டுந்த ழிறகண கோர்சில

(இ - ள) வேதியர்களுக்கு அருமபொருள்களை (தானமாரியாக)ச் சொரிந்தனன் அந்தக்காலத்தில மிக்க அழகினையுடைய கணநாதர்கள் சிலர் விமானத்துடன் (அவ்விடம்) வந்தார்கள் எ - று. (அ)

வேறு

அந்தநிலை நின்ற வேந்தற கருங்கண்ணத் தலைவர் சொலவார்
சிந்தலைக் கணேச குண்டத் திருமபுனல் தோய்ந்து முக்கண
வித்தகக களிற்றின பூசை விளக்கினை யாத லாலே
உத்தம வுனது மேனமை யொருவர்க்கு முரைக்கொ ணாதே.

(இ - ள) அரிய கணநாதர்கள் அவ்விடத்திலிருந்த உருக்குமாங்கதராசனுக்குச் சொல்கின்றார்கள் உத்தமனே! இவ்விடத்தில, கணேசதீர்த்தத்திலே மிக்க நீரினமுழ்கி, திரிநேத்திரங்களையுடைய ஞானசொருபியாகிய சிந்தாமணிவிநாயகக கடவுளுடைய பூசையைச்செய்தனையாதலின, உன்னுடைய சிறப்பை எடுத்துச் சொல்ல ஒருவருக்கு முடியாது எ - று (கூ)

கொங்கவிர மாலைத தெய்வக கோலமார் விமானமேறி
யைங்கர னுலக மெமமோ டடைமதி யென்றார் கேட்டுச்
சிங்கவல லேறறி னொன்னா செருக்கள முழக்குந் திணடோட்
பைங்கழ லரற்று நோன்றாட பார்த்திபன பணிந்து சொல்வான.

(இ - ள) மகரந்தத்தோடு விகசித்த (கற்பக) மாலையணிந்த அழகுபொருந்திய விமானத்தி லாரோகணஞ்செய்து எங்களுடனே ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமானுலகத்தை யடைகவென்றனர். வலிய ஆண்சிங்கத்தைப் போலப் பகைஞர்களது போர்க்களத்தைக் கலக்குகின்ற வலியதோளையும பசியவீரக்கழலொலிக்கும் பெருமைதங்கிய தாளையுமுடைய உருக்குமாங்கதமன்னன அதனைக்கேட்டு (அக்கணநாதர்களை) பணிந்து சொல்கின்றான். எ - று.

மதி - அசைச்சொல் "மியாயிகமோமதி யத்தையித்தை - வாழியமாளவீ யாழமுன்னிலையசை" என்றது சூத்திரம் (௧௦)

வேறு

சின்மயசிற் குணவகண்டா காரசச்சி தானந்தன் சேர்ந்தோர் தம்மைத்
தன்மயமாக் கிடுமுதல்வன் காரணநீ தனவன் றலைமை சான்ற
நன்மைதரு மருளெங்கே நானெங்கே நான்புரிந்த தவங்க ளெங்கே
யென்மனமெங் கேயென்றன் பிறப்பெங்கே யென்னுடைய பத்தியெங்கே.

(இ - ள்) சின்மயனும், சிற்குணனும், அகண்டாகாரனும், உண்மையறிவானந்தரூபியும், தன்னையடைந்தவர்களைத் தன்மயமாகச் செய்யும் முதற்கடவுளும், காரணநீதனுமாகிய அக்கணேசப்பெருமானுடைய முதன்மை மிக்க நன்மைபொருந்திய திருவருளெங்கே அடியேனெங்கே அடியேன்செய்த தவங்களெங்கே அடியேன் மனமெங்கே அடியேன் பிறவியெங்கே அடியேன் பக்தியெங்கே எ - று.

சின்மயம் சிற்குணமென்பவற்றில், சித்=ஞானம் அகண்டம்=கண்டமில்லாதது ஆகாரம் - தேகம் சச்சிதானந்தம் - சத்து+சித்து+ஆனந்தம் கணேசப்பெருமானுடைய உயர்வைக்குறிக்க "அவன் றலைமைசான்ற நன்மைதருமருளெங்கே" என்றும், தானும் தன்றவம் மனம் பிறப்பு பத்திமுதலியவற்றின் றாழ்வுகுறிக்க 'நானெங்கே * * என்னுடைய பத்தியெங்கே" என்றுங்கூறினார் (௧௧)

பண்டுபுரி தவந்தானு மித்தடத்தி னீராடும் பலத்தி னானு
மண்டர்தொழும் பெருங்கணத்திர் நுங்கடரி சனமடியேற்காயிற் றெனவே
மண்டுபெருந் தவமாற்றிச் சாருகா சினியோடு மருவி யீம [னென்றான்.
றொண்டனை யீன் றனர்தன்னைவே றிலையவரை யொழித்தெவ்வா றுறுவே

(இ - ள்) பூர்வத்திற்செய்த தவத்தினாலும், இக்கணேச தீர்த்தத்தில் மூழ்கிய பலத்தினாலும் உங்களுடைய தரிசனமெனக்குக் கிடைத்தது. தேவர்களும் வணங்கத்தக்க பெருந்தவமுடையவர்களே! (என்தாயாகிய) சாருகாசினியுடன் வீமராசன் பொருந்தி நெருங்கிய பெருந்தவஞ்செய்து என்னைப்பூமியில் (மகனாகப்) பெற்றனர். (அவர்கட்குத்துணை) வேறொருவருமிலர் அவர்களை யெவ்வாறு விலக்கிவிட்டுவருவே னென்று (உருக்குமாங்கதன்) கூறினன். எ - று (௧௨)

அறங்கிளரும் பெருங்கணத்தோ ரதுகேட்டுத் திருவுள்ளத் தலர்ச்சிகாட்டிக்
கறங்குதிரைப் பெருங்கடல்சூழ் கண்ணகன்ஞாலம் புரக்குருக்காவலோய்கே
ணிறங்கிளர்பன் மலரணிந்த விந்தீர்த்தத் தவர்தம்மை நினைந்து தோய்ந்து
பிறங்குதருப் பணம்புரியி னவருமுடன் வருவரெனப் பேசினாரால்.

(இ - ள்) தருமம் விளங்கும் பெருமைவாய்ந்த கணத்தலைவர்கள் அதனைச் செவியேற்றுத் தமது மனத்துள்ள மகிழ்வினை வெளிப்படுத்தி, மறிகின்ற அலைகளையுடைய பெரியகடல்சூழ்ந்த இடமகன்ற உலகத்தைக்காக்கும் உருக்குமாங்கத மன்னனே! கேட்பாயாக நிறம் விளங்கும் பலமலர்களையுடைய இந்ததீர்த்தத்திலே அவர்களைக்கருதி ஸ்நானஞ்செய்து, விளங்குகின்ற தருப்பணஞ்செய்தால் அவர்களும் உன்னுடனே வருவார்களென்று சொன்னார்கள். எ - று.

கறங்குதல் - சுழலல். (௧௩)

கணங்களுரைத் ததைக்கேட்டுருக் காவலனு முடிந்தபசுந் தருப்பைவைத்திட்
டிணங்குதருப் பையுமானாய் தருப்பைமக னாயுமிருக் கின்றாய் வேதத்
னணங்கறப் படைத்திட்டப் பட்டாயாரைக் குறித்துன்னை யாட்டி னாலும்
பிணங்கறுநன் பயனவர்க்குக் கொடுக்கின்றா யெனப்பேசிப் பெருநீ ராட்டி.

(இ - ள்) கணத்தலைவர்கள் கூறியதைக்கேட்டு, உருக்குமாங்கதனும், முடியிட்ட பசியதருப்பையை வைத்து, பொருந்திய தருப்பையுமாயினை, தருப்பைமகனாயு மிருக்கின்றனை, பிரமதேவனால் துன்பமொழியப் படைத்திடப்பட்டனை எவனா நினைத்து உன்னை நீராட்டினாலும் அவர்கட்குக் குற்றமாற நலம்பலவுங் கொடுக்கின்றனை யென்றுகூறி, மிக்க நீராலபிடேகித்து எ - று.

"தருப்பையு மானாய தருப்பை மகனாயு மிருக்கின்றாய்"—என்றது நீயே மூர்த்தியும் மூர்த்திமானுமாயுள்ளனை யென்றற்போலும். (கச)

தந்தைதாய் முதலோரைக் குறித்துநறும் புனற்றீர்த்தந் தானு மாடிச்
சிந்தையுறு மகிழ்வோடு கணேசரை யருள்செய்த திவ்ய நல்யா
ழந்தனு ளனைவியந்து தீர்த்தத்தை மிகப்போற்றி யமல முற்றுன
வந்துளார் தாமுமதி லுடனாடித் தெய்வவுரு மருவி னாரால்.

(இ - ள்) உருக்குமாங்கதனும் தந்தைதாய் முதலானவர்களைக் கருதி நல்ல கணேசதீர்த்தத்திலே மூழ்கி மனத்தினின்றொழியாத களிப்புடன் கணாயிலேமி, தனக்கு அநுக்கிரகித்த கடவுளின் நல்ல மகதியாழையேந்திய நாரதமுனிவரைத் தியானித்து, கணேசதீர்த்தத்தைத் துதிசெய்து புனிதமாயினன்; உடன் வந்துள்ள சேனை காவலர் முதலியவர்களும் அத்தீர்த்தத்தில் (அவ்வுருக்குமாங்கதனுடன்) உடன்மூழ்கித் தெய்வவடிவத்தை யடைந்தார்கள் எ - று. (கரு)

மறுவனுமங் கினிதிருந்த கணேசர் திருவடிப்பூசை வியற்றித் தேசு
முறுதுவிமா னத்தடுத்த சேனையொடு மொருங்கேறி முறைகொண் டன்ன
னுறுதியொடு கவுண்டினிய நகர்சார்ந்து தானபல னுயர்ந்தோ ராதி[த்தார்.
பெறுமுறையிற் கொளக்கொடுத்தான் சேனைகளு மவரவர்க்கு விரும்பியீந்

(இ - ள்) கிரீடமணிந்த உருக்குமாங்கத மன்னன் மீண்டும் அவ்விடத்தில் இனிதாக விருந்த சித்திவிநாயகப்பெருமானுடைய திருவடியிற் பூசையைச்செய்து, தன்னையடுத்த சேனையுடனே, ஒளிவீசும் தெய்வவிமானத்தில் ஒன்றாகஏறி, உறுதியோடு கவுண்டினிய நகரத்தையடைந்து, பெரியோர் முதலானவர்களுக்குத் தானபலனைப் பெறுமுறையோடு பெறுமட்டுங் கொடுத்தனன்; சேனைகாவலர்களும் (தங்கடங்கட்குரிய) அவரவர்களுக்கு விரும்பிக்கொடுத்தார்கள் எ - று. (கசு)

எம்பெருமான் றிருவருளால் வெவ்வேறு விமானங்க ளெய்த வந்தப்
பம்புநக ராசரும் வீமனமுத லோரெவரும் பணிந்தங் கெய்தி
யும்பர்தொழு வுருக்குமாங் கதனோடுங் கணேசர்திரு வுலகஞ்சேர்ந்தார்
நம்பியசீர் வியாதமுனி யறிவாயென் றலரிருந்தோ னவிற்றி னானால்.

(இ - ள்) எமது பெருமானாகிய விநாயகக்கடவுளுடைய திருவருளால் வெவ்வேறாகிய விமானங்கள் வந்தடைய, அந்த வளநெருங்கிய கவுண்டினியநகரத்தை யரசுசெய்யும் வீமராசன் முதலானவர்களெல்லோரும் வணங்கி அங்கடைந்து, தேவா

கள பணியுமபடி உருக்குமாங்கதனுடன் கணேசப்பெருமானுடைய சிறந்த உலகத்தை யடைந்தாாகள். மிகக கீாத்தியையுடைய வியாசமுனிவனே ! அறிவாயாகவென்று, தாமனா மலரிலிருநத பிரமதேவன் உனாததருளினன. எ - று. (௧௭)

அருந்தவதது விசுவா மிததிரனே வீமனுற லாதி யாகத்
திருந்துமக னுடமுததி சோாந்திடுத லீறுகத திகழா நினற
பொருநதுபல சரிதமுஙகேட் டனேசோமகாநதவினிப புகலக் கேளாய் [ன்.
பெருநதவத்துககிருசசமதனுபாசனேயென றுனாசெயவான்பிருகுமேலோ

(இ - ள) அரியதவத்தையுடைய விசுவாமிததிர முனிவனே வீமராசன் அடுதததுமுதலாகத திருநதிய தன மகனுகிய உருக்குமாஙகதராசனுடன (அவன) முததியடைநததீறாக விளஙகுகின்ற பொருநதிய பல சரிதஙகளேயுங கேடடனே,சோமகாநதராசனே! இனிப் பெருந்தவததையுடைய கிருச்சமதனுபாசிதத வகையையுஞசொல்லக் கேட்பாயாக வெனறு, மேலோனுகிய பிருகுமுனிவன சொலவானுயினன எ - று.

சோமகாநதன பிருகுமுனிவயை யடுதத படலமுதல யாவும பிருகுமுனிவரா லேயே சொலலபபட்டனவெனறும, பிறசரிதஙகள இடையிடையே அவவவராலே சொலலபபட்டனவெனறுஙகொளக. (௧அ)

உருக்குமாங்கதன முத்திபடைநதபடலம முறறிறறு.

ஆகத் திருவிருந்தம் - ௩௫௭௭

# கிருச்சமதருபதேசம்பெற்றபடலம்.

மருகஙகொண் மாமலரி னுனேமுக நோககி மடமை
முருகக மேதகுவி யாதமுனி முனன வனமுன
முருககு மாஙகதனே ழிநதபினமு குநதை யுறுநோய்ப
பெருகக மெஙஙனமொ ழிநததது பேசு கவென.

(இ - ள) வாசமபொருநதியதாமனாமலரிலெழுநதருளியபிரமதேவனுடைய திருமுகததைபபாாதது, அறியாமையை யொழிதது மேமபடட வியாதமுனிவனுகிய பெரியோன,முனனே உருககுமாஙகதன (இணஙகாது)சென்ற பிறகு, முகுநதையென பவள் பொருநதிய காமநோயபபெருகக மெவவாறகனறது ? சொலவாயாகவெனக கேட்க எ - று

முகுநதையுறநோயப பெருககமெனறது உருக்குமாஙகதன சாபம்பெறற படலததிற் கூறபபட்டுளது. ஆஙகுக கணடுகொளக. (௧)

முள்ள ரைக்கமல நாணமலரி னனமொ ழிகுவான
றள்ளு மெலலிடைமு குநதையவள சாப மரசன
கொளள வுய்த்தபினு மமமாகுடி கொணடெ ழுமெழு
கொள்ளை ரிககதுவி யாஙகுளமெ கிழ்ந்து ருகினுள.

(இ - ள.) முட்பொருந்திய அடியையுடைய புதிய தாமனா மலரிலெழுந தருளிய பிரமதேவன கூறுகினுன் தள்ளாடிய மெல்லிய இடையையுடைய முகுநதை

யானவன் உருககுமாங்கதமனனவன சாபத்தைககொள்ளுமபடி கொடுததபினனரும, மயககமானது குடிகொணடு விளஙக, மெழுகானது ஒளிபொருந்திய அகசினியிற பட்டாறபோல மனஙகசிநது வருநதினள். எ - று.

அரை - அடி. நாணமலா - அனறலாநத மலா, புதியமலரெனக. தள்ளு மெல்லிடை யெனறது—"உபயதனமசையிலொடியுமிடை" எனறும, "ாகசாற்றுக் காற்ருவிடை" என்றும, 'மருஙகோரிலககணம [நனனூல]' எனறும கூறியுள்ளன போலச சுமையிறககாது துவளுமிடையெனபதாம (உ)

வணடி னாககுமலா நநதனவ னததுலவுவா
டணடி னாசகுளிாத டாகமுறு வாளபி ணைபுறங
கொணடி னாககுவினா மானகலைகள் கணடு குழைவாள்
பணடி னாககுமவரி வேயஙகுழலப ரபப வழிவாள.

(இ - ள) வணடுகளொலி[illegible]கும மலாகள பொருநதிய நநதனவனததிலுலாவு வாள தடபமாகிய அலைகளையுடைய குளிாநத தடாகததை யடைவாள. தமது பிணை யையுடனகொண்டு இரைககாக விரைநதுசெலலும் மானகலைகளை க கணடு உருகுவாள. பணணொலி யெழுபபும அழகிய வேயஙகுழலொலியெழுபப மனமழ்வாள எ - று.

வேய - மூஙகில. வேயஙகுழல - புலலாஙகுழல (௩)

மநத மாருதம ருஙகசைய வனனி விரவி
வநத தெனகொலவவரி யேயெனம ருணடு முனிவா
ளநதி லானமணித ழுஙகவடு கால லொலியோ
சிநது கினறதுயி ரெனறுதெரு மநது கவலவாள.

(இ - ள) இளஙதெனறற்காறறானது பககததிலுலாவ, காறறே! அக்கினி யோடு கலநதுவநத தெனனசாரணமெனறு மயஙகிக்கோபிபபாள அவ்விடததில, பசு வின (கழுததிலுள்ள) மணியொலிகக, கொலலுகினற இயமனனுசையோ உயிாறி கினறதென்று சுழனறு துனபுறுவாள எ - று.

அநதில் எனறதை "அநதிலாஙகசைநிலை இடபபொருளாகும" எனறதால அசைநிலையெனக கொளளினுமாம. அவவிடததிலெனறும. (ச)

சிறுமை யாளாகள் பிறாககுவினை தீஙகு பெருமை
யுறுநா செயகலரொ லிககடனம ணிககு ழலென
முறுகு வெநதுயர மூடடுவது னககு முறையோ
குறுமு னிககுரிசில குனறுளனெ னககு ழறுவாள்.

(இ - ள) கீழ்மக்கள பிறாககுணடாககுந தீமையைய பெருமையாளாகள செ ய்யமாட்டாாகள ஒலிககினற கடலும அழகிய குழலுமபோலக கடுமையாகிய வெவவிய துனபததை யெழுப்புவது உனக்கு நியாயமோ? குறுமுனிவராகிய அகததியப்பெரு மான் பொதியமலையிலிருககினறனரெனறு வாயகுழறிக கூறுவாள. எ - று (ரு)

வட்டி கைப்பலகை மீதிலவன் மாணு ருவெலா
மொட்டி யொட்டினளவ ரிநதுறுக ரததி னணையு
மொடடி ளஙகிரமு லைததுணைமு யஙகும் வதனந
தொட்டு முததமிடு மாலையென வேது வளுறும.

(இ-ள்.) சித்திரப்பலகையின்மேலே அவ்வுருக்குமாங்கதனுடைய மாட்சிமைப்பட்ட வடிவமுழுவதையும் மிகவுமொட்டி யெழுதி, பொருந்திய கையினால் தழுவுவாள். கோங்கரும்புபோன்ற ஒளிவீசும் இரண்டு இளமுலைகளாலு முயங்குவாள். முகத்தைத்தொட்டுமுத்தமிடுவாள். மலர்மாலையைப்போலத் துவளுவாள். எ-று. (௬)

நெட்டு யிர்ப்பெறியு நோதளிர்து வண்டு கருகப்
பட்ட பட்டவிட மெங்குமுயர் கொப்புள் பரவக்
கட்டு கண்புனலக விழ்க்குமுரு வெம்மை வெருவி
விட்ட கன்றதென மேகலையொ துங்க விழுமால்.

(இ-ள்.) பெருமூச்சுவிடுவாள் தளிர்கள் துவண்டு கருகும்படி அவைபட்ட விடங்களிலெல்லாம் பெரிய கொப்புளங்கள் பரவவும், இருகண்களினின்றும் நீரைச் சொரிவாள். உருவத்தின் வெப்பத்திற்குப் பயந்து விட்டுச் சென்றதுபோல மேகலாபரணமானது ஒதுங்கும்படி விழுவாள் எ-று.

நோதளிரென்பதற்கு அழகிய தளிரென்றுவது, அவள் மேனியையொத்த தளிரென்றுவது பொருள்கூறுக (௭)

உற்று ழந்தவவ னனிலுமு ரைக்க வரிதாய
முற்றும் வெந்துயரின் மூழ்கிநில மீது முடிசாய்த்
தற்ற முற்றவச மாயினள னைத்து மறியாப்
பொற்ற விந்திரனயி ளைந்துமயல் பூண்டு வருவான்.

(இ-ள்) (ஆடவனுடன்) பொருந்திவருந்தியவர்களுக்கட்டிலும் சொல்லமுடியாத துயராய முழுதும் பெருந்துன்பத்தில் மூழ்கி, பூமியின்மேல் சிரசைச் சாய்த்து பரவசமானாள் அவற்றையெல்லாமுணர்ந்து மனமகிழ்ந்த சிறுமலைபோன்ற இந்திரன் (அவளை) விரும்பிக் காமமயக்கமுற்று (உருவமாறி) வருவானாயினன் எ-று (௮)

வேறு

கழலபடுத்த திறங்கிய கமல பாதமுங்
கழலொலி செயுங்கணைக் காலு நெஞ்செலாங்
கழலவேள் சரங்களிற் கதுவி மாதரா
கழலிளங் காயபொரக் கவின்செய் கச்சுமே.

(இ-ள்) வீரக்கழலைத்துக்கட்டிய தாமரைபோன்றபாதமும், வீரசண்டாமணியானது ஓசையிடுகின்ற கணைக்காலும், மனமுழுதும் கழலும்படி மன்மதபாணங்களாற் சுடப்பட்டுள்ள முகுந்தையின் காலிலணிந்த இளங்காயபோல அழகு செய்யுங் கச்சும். எ-று

இதுமுதல் மூன்றுசெய்யுள்களால் இந்திரன் முகுந்தைபால் வந்தவகையை வருணிக்கின்றனர். (௯)

விரற்றலைப் புட்டிலும் விளங்கு செங்கையி
னரற்றெறாழ் நாணடு சிலையு மார்பத
மிளைத்துமென் மலர்த்தொடை யிசைந்த மார்பமு
கிளைத்தடங் கணைப்புதை நிலவு தோள்களும்.

(இ - ள்) விரலினுனியில் புட்டிலும், விளங்குகின்ற சிவந்தகையிலே ஒலிக்கின்ற வலிமையுடைய நாண்பூட்டிய விலலும், வண்டுகளொலித்து மெல்லிய மலர் மாலை பொருந்திய மார்பும், வரிசையாகிய பரந்த அம்புகள் புதைந்து விளங்கும் தோள்களும் எ - று. (௰)

பொற்புரி யாற்புறஞ் சூழ்ந்த குஞ்சியும்
பொற்பமை யுருக்குமாங் கதன்மெய்ப் புலவிய
பொற்பெலாந் தழீஇக்கொடு புலம்பிச் சேர்ந்தவப்
பொற்பினன் மருங்குறப் பொருக்கென் றெய்தினான்.

(இ - ள்) பொற்புரியினாலே புறத்திற்கட்டிய குடுமியும் அழகு செய்யும்படி உருமாங்கதராசன் தேகத்திற்பொருந்திய அழகு முழுவதையுந் தழுவிக்கொண்டு புலம்பிச் சேர்ந்துள்ள அவ்வழகியாகிய முருந்தையின் சமீபத்திற் பொருந்தவிரைந்து சேர்ந்தனன் எ - று.

குஞ்சி - ஆண்மக்கள் தலைமயிர் பெண் தலைமயிரைக் குழலென்றும் அளகமென்றுஞ் சொல்லுவர் (௧௧)

மருக்குழன் மாதரா ளுத்தமப் போந்தவள்
வுருக்குமாங் கதனுயி ரன்று வாளெனப்
பொருக்கென வெழுந்தனள் புக்க வஞ்சனுந்
தருக்கறு நயமொழி தழுவிக் கூறுவான்.

(இ - ள்) மணந்தங்கிய கூந்தலையுடைய முருந்தையென்பவள் (தன்கருத்தைத்) தடுத்துச் சென்ற அவளுருக்குமாங்கத மன்னனும் திரும்பி (தனபாலவுருவங்கொண்டு) வந்தடைந்தனனென்று, விரைந்து எழுந்தனள் (உருக்குமாங்கதனைப்போல வேடங்கொண்டு)வந்த வஞ்சகனாகிய இந்திரனும் அகங்காரமற்ற நயவார்த்தைகளோடு தழுவிச்சொல்கின்றான். எ - று. (௧௨)

ஏந்திள வனமுலை யிரண்டும் பாயத்தண்
சாந்தகங் கிழிதரத் தழுவிக் கைகளான்
மோந்தனன் புட்குரன் முழக்கங் கேட்டனன்
மாந்தினன் றிதழ்நறு மருவிப் புல்லினான்.

(இ - ள்) அணைந்த இளமைவாய்ந்த அழகிய முலைகளிரண்டும் பாய்ந்து குளிர்ந்த சாந்தப்பூச்சானது கிழிடும்படி தழுவிக்கொண்டு கைகளாலே மோந்தனன், (எண்வகைப்) புட்குரல்களின் (ஒலியைக்கண்டத்திலே) முழங்கக்கேட்டனன் இதழூறலாகிய தேனைப்பருகினன், அவளைத் தழுவிக்கூடினன் எ - று.

புட்குரலெட்டுமுன் விளக்கப்பட்டன (௧௩)

வாட்டடங் கண்ணியு மறிந்தன் றூறநற்
கோட்டிவாங் குவிமுலை கோட்டு மண்கொள
மூட்டிய காதலின் முயங்கிச் செய்யவா
யூட்டமும் பருகினா னுவப்புற் றுள்ளரோ.

(இ - ள்.) வாட்படைபோலும் பரந்த கண்களையுடைய முருந்தையும் மீண்டும் அவன்மார்பிலே வட்டமாகிய இளமைதங்கிய குவிந்தமுலையானது கோட்டுமண்

கொள்ளும்படி அதிகரிக்கச்செய்த ஆசையுடன் முயக்குற்று, சிவந்தவாயிதழையும் பருகினள். சந்தோஷமுற்றனள். எ - று.

யானையானது மதமுற்றகாலத்தில் நிலத்தைக் கொம்பாற்குத்தி மண்ணைக் கொள்வதுபோல, முலையாகிய யானையும் அவன் மார்பிற் குத்திக் கோட்டுமண் கொள்ள வென்றோர் (௧௪)

தொடக்கின னிந்திர னென்று கூர்த்தவேண்
முடக்கிய தடக்கையின் முனைகொ ளம்பெலா
மடக்கின னிமிர்த்தகை வரிவிற் றாழ்த்தின
னடக்கினன் முகுந்தையோ டமர்ந்த போரினை.

(இ - ள்) இந்திரன் முயங்கினனென்று, அரசங்கொடுத்த மன்மதன் முடக்கிய பரந்த கையிலுள்ள கூர்மைவாய்ந்த அம்புகளையெல்லா மடக்கினன். தூக்கிய கையிற்றாங்கிய வரிக்கட்டமைந்த வில்லைத் தாழ்த்தினன் முகுந்தையோடு செய்த காமப்போரை யடக்கினன் எ - று

இச்செயலுள்ள முகுந்தை காமமயக்கொழிந்தாளென்றபடி. (௧௫)

தருந்தனிக் கலவியாற் றழைத்த நெஞ்சொடு
முகுந்தைதன் முனிப்பணி முடிப்பச் சென்றனள்
புரந்தகை தவவுருப் போக்கிப் போந்தனன்
வருந்தழல் வயிரவே லுத்தன் விண்ணமே.

(இ - ள்.) தகுதியாகிய ஒப்பற்ற புணர்ச்சியையர்க்கத்தால் நிரம்பிய மனத்துடன் முகுந்தையானவள் தன் கணவன் பணிவிடையைச் செய்யச்சென்றனள். பிரகாசிக்கின்ற தீயைச்சொரியும் வச்சிரவேலைத்தாங்கிய ஆங்குற்ற தேவராசனாகிய இந்திரன் தான்வந்த வஞ்சகவடிவத்தை யொழித்துத் தேவலோகத்தை யடைந்தனன். எ-று (௧௬)

மற்றிழை முகுந்தைதன் மோட்டி னிந்திரற்
குற்றநாட் கருத்தரித் தையிரண் டெனச்
சொற்றகு மதியிடைத் தோன்ற லீன்றனள்
பற்றிய கருங்கடல் பரிதி கான்றென.

(இ - ள்) முற்றிய ஆபரணமணிந்த முகுந்தையென்பவள் தன்வயிற்றில் இந்திரனுக்கு அந்தினத்திலே கருப்பமடைந்து, பத்தாவதென்று சொல்லத்தக்க மாதத்தில், கருமைபொருந்திய சமுத்திரமானது சூரியனைப்பெற்றதுபோல ஓர் புதல்வனைப் பெற்றனள் எ - று

ஐயிரண்டெனச்சொற்றகுமதி - பத்தாமாதம் (௧௭)

அண்டமு நடுக்குற வார்த்து வந்துவீழ்ந்
தொண்டரை கிடந்தொளிர் கின்ற மைந்தனைக்
கொண்டனா னவனுக்கங் குறித்த தோர்கிலா
மண்டிய பெருந்தவன் மகிழ்ந்தெ டுத்தனன்.

(இ - ள்.) அண்டமும் நடுங்கும்படி ஆர்ப்பரித்து வந்து வீழ்ந்து ஒள்ளிய பூமியிற் கிடந்து பிரகாசிக்கின்ற புத்திரனை, மேகவாகனனாகிய இந்திரனுக்கு உதித்ததை யுணராத மிக்க பெருந்தவமுடைய கவிமுனிவன் களிப்புற்றெடுத்தனன். எ - று.

கவியெனப் பட்டவக் கருணை மாதவன்
சவிமணி மைந்தற்குச் சாத காதிக
ளவிசொரிந் தமரருக் கன்பு செய்திரும்
புவியவர் புகழ்தரப் போற்றிச் செய்தனன்.

(இ-ள்) கவிமுனிவனென்று சொல்லப்பட்ட அக்கிருபைவாய்ந்த பெருந் தவமுடையவன் சிறந்தமைந்த மாணிக்கம் போன்ற புதல்வனுக்கு, தேவர்களுக்கு அவி சொரிந்து அன்புசெய்து, பெரிய பூலோகத்தார் புகழும்படி சாதகாதி கருமங்கள் மேம்படச்செய்தனன் எ-று.

அவி - தேவருணவு (௧௯)

வேறு.

குருச்சந் திரனை வென்றமுகக் கோல முகுந்தை தனிமைந்த
னுருச்சந் தவரி சனவிழுதும் பிறவுந் திமிரந் தொண் புனலாட்டித்
தருச்சந் தொடுகா ரகிலபுகை தந்துந் தனபா லூட்டப் பனிருநாள்
கிருச்ச மதனென் றொருநாமங் கிளந்தான் மகற்குக் கிளர்தவத்தோன்.

(இ-ள்) நிரம்பிய (பூரண) சந்திரனை வென்றிகொண்ட முகத்தையுடைய அழகிய முகுந்தையென்பவள் ஒப்பற்ற புத்திரனுடைய சந்தனமும் அரிசனமும் விழுதுகளும் பொடித்துக் கலந்த ஒள்ளிய நீரால் முழுக்காட்டி, தேவதாரு சந்தனக் கட்டை காரகிற்கட்டை முதலியவற்றின் பொடியால் புகையிட்டு, முலைப்பாலூட்டி வளர்க்க, விளங்குகின்ற தவத்தையுடைய கவிமுனிவன் பன்னிரண்டாந் தினத்தில் கிருச்சமதனென்னும் ஒருபெயரைக் கூறி நாமகரணஞ்செய்தனன். எ-று. (௨௦)

கருப்ப நிலைக்கா றாமாண்டிற் கரிசின் முறையா லுபநயனம்
விருப்பி னியற்றி மறையாதி விளங்கத் தெரித்தான் கவியென்பான்
கிருச்ச மதனு மொருமுறையிற் கேட்டு முழுதுந் தெரிந்துணர்ந்து
வெருவச் செய்ப வத்தின் வேரறுக்கும் வெற்றிப் படைபோ லாயினான்

(இ-ள்) கவிமுனிவன் கிருச்சமதனை ஜனித்ததற்கு ஆறும் வருடத்தில், குற்றமற்ற முறைப்படி உபநயனத்தை ஆசையோடுசெய்து, வேதமுதலியவற்றை விளங்கும்படி யுணர்த்தினன் கிருச்சமதனும் ஒரேதரங்கேட்டு (ஐயந் திரிபு அறியாமையொழிய) முற்றும் ஆராய்ந்தறிந்து அச்சத்தைச் செய்யும் பிறவியின் வேரையறுக்கும்ஜயப் படைபோலாயினன். எ-று. (௨௧)

ஒழுக்க முதலா கியநெறியி னிறழா தொழுகக் கவிமகிழ்ந்து
வழுக்கி லாத கணநாதா வாவென மனுவை யுபதேசித்
தழுக்கி லாதா யிம்மனுவை யனுட்டிப் போடுங் கணிவிழைவு
முழுக்க வருள்வர் கணேசரென மொழிந்தா னவனு மதுபெற்றான்.

(இ-ள்) ஒழுக்கமுதலாகிய வழியிற் பிறழாது நடக்க, கவிமுனிவன் களிப்புற்று, குற்றமில்லாத "கணநாதவா" என்னும் மந்திரத்தை யுபதேசித்து, களங்கமில்லாதவனே! இம்மந்திரத்தை அனுட்டிப்புக் கிரமத்துடன் கணிக்கக்கடவை. (அதனால்) கணேசப்பெருமான் உன்விருப்பம் முற்றுப்பெற அநுக்கிரகிப்பாரென்று கூறினன். கிருச்சமதனும் அம்மந்திரத்தைப்பெற்றனன் எ-று. (௨௨)

நாளு நியதிக் கடன்முடித்து நாம வினைக டொந்தென்னை
யாளு மைங்கைக் கணேசர்திரு வடித்தா மரைக ளுளத்திருத்தி
மூளு மன்பி லவர்மனுவை முறையி னனுட்டிப் பொடுங்கணித்துறக்
கேளும் பிறக்கென் றிடவுலகங் கேண்மை கொள்ள விளங்குநாள்.

(இ - ள்.) நாடோறும் நித்தியகருமத்தை முடித்து, அச்சத்தைத்தரும் வினைகளையொழித்து என்னை யனுக்கிரகிக்கும் ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமான் திருவடித்தாமரைகளை மனதிலிருக்கச்செய்து அதிகரித்த ஆசையுடன் அவருடைய திருமந்திரத்தை முறைப்படி அநுட்டிப்புடன் கணித்து, உறவினரும் பின்னென்று சொல்ல உலகமுழுவதும் நட்புக்கொள்ளும்படி விளங்குங் காலத்தில். எ - று.

துள்ளிக் கயல்வா னிடைத்தாவத் துடுமென் றிறங்கி யிளநாகு
வள்ளை குதட்டுந் தடமுடுத்த மகதநாட்டிற் கோனெவர்க்குந்
தள்ளை யனையான் பெருங்கொடையான் தான சூர னெனும்பெயரான்
றுன்பை யகன்ற வுள்ளகத்துத் தொடுத்த தருமசிந் தனையான்.

(இ - ள்) சேற்கெண்டைகள் துள்ளி ஆகாயத்திலே தாவவும், இளங்கன்றுகள் விரைந்திறங்கி வள்ளைக்கொடியைக் குதட்டுகின்ற தடஞ்சூழ்ந்த மகதநாட்டரசன் எல்லோருக்குந் தாயைப்போன்றவன், மிக்க ஈகைத்தன்மையுடையவன், தானசூரனென்னும் பெயருடையவன், துன்பமகன்ற மனத்திலே பொருந்திய தருமசிந்தனையை யுடையவன். எ - று. (௨௪)

அன்ன மருட்டு நடைக்கற்பி னன்ற மனைவி யம்பிகையும்
பொன்னை வெள்ளி தனைமருட்டும் புந்தியமைந்த வமைச்சர்களுந்
தன்ன துடலு முயிருமெனத் தக்க பரபால் வழியொழுக
வின்ன லறச்செங் கோலோச்சி யிருந்து மகிழுங் காலத்தில்.

(இ - ள்) அன்னத்தை மயங்கச்செய்யும் நடையையும் கற்பின் மேம்பாட்டையுமுடைய மனைவியாகிய அம்பிகையென்பவளும், பொன்னையும் வெள்ளியையும் மயக்கிய புத்தியமைந்த மந்திரிகளும், தன்னுடைய உடலும் உயிருமென்று சொல்லத்தக்க முறைப்படி நீதிவழியேயொழுகவும் துன்பமகலவும் செங்கோல் செலுத்திக்கொண்டு களிப்புற்றிருக்குங்காலத்தில். எ - று. (௨௫)

பெற்ற குரவன் றனைக்குறித்த பிதிர்க்கூட்டு நாளெய்த
முற்ற வுணர்ந்த வசிட்டனையு முழுத்த தவத்தத் திரிதனையு
மற்று முயர்ந்த முனிவரையும் வருவித் தானற் றவரோடுங்
கற்று மிகுந்த கிருச்சமதன் மலைந்து கலைப்போ ராற்றினன்.

(இ - ள்) பெற்றதந்தை நிமித்தமாகப் பிதிராக்கு உண்பிக்குந்தினம் [சிராத்தநாள்] வரவும், முழுவதுமுணர்ந்த வசிட்டமுனிவனையும் முழுமையாகிய தவத்தையுடைய அத்திரிமுனிவனையும், அவரல்லாத உயர்ந்த பிறமுனிவர்களையும் வருவித்தனன். அவர்களுடன் (நூல்களை) கற்றுமேம்பாடுற்ற கிருச்சமதமுனிவன் அளவளாவிச் சாத்திரப்போர் செய்தனன். எ - று. (௨௬)

வாதி னேற்ற வத்திரியவ் வாதின் வெல்ல மாட்டாது
சாத லனைய கொடுங்கோபத் தழல்கொப் புளிக்க வெதிர்நோக்கிப்

(இ-ள்.) அதிகரித்த கோபமடங்காமல் விரைவோடுசென்று, தன்னைப்பெற்ற தாயை (நோக்கி) முகுந்தாய்! மிக்ககாமமுடையவளே! என்முன்னே ஒருக எனக்குத் தந்தையாவன்? நடந்ததை உள்ளபடியே கூறுவாயாகவென்றனன். முகுந்தை (அதனைக்கேட்டு) மனந்தளர்ந்து நடுநடுங்கி நடந்த விருத்தாந்தத்தையே (உண்மையாகச்) சொல்லினள். எ - று.

தூர்த்தை - காமமேலீட்டாற் பலரையும் புணர்பவள். (௫௧)

வேறு.

மிருக வேட்டையின் மேவிய ருக்குமாங் கதனீர்
பருக வந்தனன் படியிலா வழகுகண் டவனுக்
குருகி யுன்றனை யுயிர்த்தனே னுண்கணாட் கார்வம்
பெருகி னிரதையா றொழுகநூல் பேசிய முறையால்.

(இ-ள்) மிருகவேட்டைக்காகவந்த உருக்குமாங்கதராசன் (இவ்வாசிரமத்திற்கு) நீர் பருகும்படி வந்தனன் (அவனுடைய) ஒப்பில்லாத தேகப்பொலிவைப்பார்த்து மனமுருகி, மையூட்டிய கண்ணையுடைய மாதர்களுக்கு ஆசையதிகரித்தால் மனஞ்சென்றவழி நடக்க நீதிநூற்களிற் சொல்லியமுறைப்படி, (அவனைக்கூடி) உன்னைப் பெற்றேன் எ - று. (௫௨)

விருப்பின் மைந்தனை யுள்ளவா றீதென விளம்ப
நெருப்பின் மேலொரு நெருப்பினை நெடிதுபெய் தாங்குப்
பொருப்பு நேர்தவன் புகைந்துபுள் ளினநுக ராத
வருப்ப மாவனந் திலந்தையா குகவெனச் சபித்தான்.

(இ-ள்) ஆசையையுடைய மகனே! உள்ளவகை இதுவென்று (முகுந்தை) கூறவும், நெருப்பின்மேலே வேறொரு நெருப்பைமிகுதியாகப் பெய்தாற்போல, மலைபோன்ற (பெருந்) தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் கோபித்து, பறவைக்கூட்டங்களுண்ணாத துன்பமமைந்த வனத்தில் இலந்தையாகுகவென்று சாபமிட்டனன். எ - று. (௫௩)

ஒடுங்கி நின்றதா யொருமக னுரைத்தமை கேட்டு
நெடுங்கு ணத்தவ டாயென நினைந்திலை யென்னை
நடுங்கச் செய்தனை யாதலி னீயுமுண் ணொடுங்கக்
கொடுங்கு ணச்சிறு கூடுக நினக்கெனச் சபித்தாள்.

(இ-ள்) அடங்கிநின்ற முகுந்தையென்னுந் தாயானவள் ஒப்பற்ற தன் மைந்தன்கூறிய சாபமொழியைக்கேட்டு, மிக்க நற்குணமுடையவனே! என்னைத் தாயென்று கருதினாயில்லை நடுக்கமடையச் செய்தனை யானபடியால், நீயும் உள்ள நடுங்கும்படி, உனக்குக் கொடுமையாகிய குணத்தையுடைய சிறுமைத்தன்மை வருகவென்று பிரதிசாபந் தந்தனள் எ - று. (௫௪)

கலந்தை வங்கொளி முலையவள் கடுஞ்சா பத்தா
லிலந்தை வந்தெழு வனத்திடை யிலந்தையா யிருந்தாள்
வலந்தை வந்ததோண் மன்னவன் மகன்மையைக் குறித்து
நலந்தை வந்தமா தவனுள நாணியங் கிருந்தான்.

(இ - ள்.) ஆபரணமணியைப்பெற்றுப் பிரகாசிக்கின்ற குசங்களையுடைய முகுந்தை யென்பவள் தன்னையணுகிய சாபத்தால், இலந்தைகள் முளைத்தவனத்திலே இலந்தைமரமாயிருந்தனள்; வெற்றிபொருந்திய தோள்கள் பொருந்திய உருக்குமாங்கதனுடைய புதல்வனுண்மையைக் கருதி, நன்மைபொருந்திய பெருந்தவத்தைச்செய்த கிருச்சமதமுனிவன் மனத்தில் வெட்கங்கொண்டு அவ்விடத்திலிருந்தனன். எ - று. (௧௫)

அழிந்த மானத்தின் வாழ்தலி னாக்கையை யொறுத்துக்
கழிந்து போதலே நன்றெனக் கருதிடு மளவில்
வழிந்த மாமத முகத்தவ னருளினா லவர்கட்
பொழிந்த தேனெனப் புரந்தரன் மகனெனக் கேட்டான்.

(இ - ள்.) அழிந்த மானத்தோடு வாழ்வதைக்காட்டிலும் உடலைவெறுத்து இறந்துபோவதே உத்தமமென நினைக்குங்காலையில், மதமொழுகும் யானைமுகத்தை யுடைய விநாயகக்கடவுளுடைய திருவருளால், தேவர்களுக்குச் சொரிந்த தேன்மாரி போல, இந்திரன் மகனென்று சொல்லக்கேட்டனன் எ - று. (௧௬)

சிறிது சிந்தையைத் தேற்றின னமைதி செய்த
வுறுவ ராதியோ ரனைவரு முற்றடி வணங்க
மறுவி னல்வரம் பெறுகுது மெனமதித் தந்தக்
குறுவ னத்தினை விடுத்தொரு கொடுவன மடுத்தான்.

(இ - ள்.) மனத்தைச் சிறிது தேறச்செய்து அமைதித்த முனிவர் முதலானவர்களெல்லாரும் பொருந்திய பாதங்களைப் பணியும்படி, குற்றமில்லாத நல்லவரத்தை யடைவோமென்று யோசித்து, அந்தச் சிறுவனத்தைவிட்டு வேறொரு பெரிய வனத்தை யடைந்தனன் (கிருச்சமதமுனிவன்) எ - று.

கொடுவனமென்றதால் புலி சிங்க முதலிய துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கும் பெருவனமெனக்கொள்க.

தேற்றினன் - முற்றெச்சம். (௧௭)

இதுமு குந்தையின் சரிதமென் றிசைப்புறுங் கவிழ்ந்த
பதும மென்மலர்ச் சேக்கையான் பகர்ந்தனன் செய்ய
மதும லர்த்திரு மார்பினி னகற்றிமண் போந்து
முதுத வம்புரி வியாதனு முனிவரன் மகிழ.

(இ - ள்.) இதுவே முகுந்தையென்பாளுடைய சரித்திரமென்று, செவ்விய தேனொழுகும் தாமரைமலரில் வசிக்கும் திருமகளை மார்பினின்று விலக்கிப் பூமியில் வந்து முதிர்ந்த தவத்தைச்செய்த வியாதனென்னும் பெயரையுடைய முனிசிரேட்டர் மகிழும்படி, இதழ்கள் கட்டவிழ்ந்த மெல்லிய தாமரைமலர்ச் சேக்கையையுடைய பிரமதேவன் கூறினன் எ - று. (௧௮)

எந்தை யைங்கரற் கினியமந் திரவுப தேசந்
தந்தை தந்திட முகுந்தைதன் மகன்பெற்ற துணைத்தா
மந்த மெய்த்தவன் வரம்பெற லறிகென விருக்கு
சுந்த ரம்பெறு சோமகாந் தனுக்குரை தொகுப்பான்.

(இ - ள்.) எந்தையாகிய ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமா
னுக்கு இனிதாகிய மந்திரோபதேசத்தை முகுந்தைமகனாகிய கிருச்சமதமுனிவனை
தந்தையாகிய கவிமுனிவனாற் செய்யப்பெற்ற வகையைக் கூறினோம் அந்த உண
மைத்தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் வரம்பெற்றதையும் அறிவாயாகவென்று
பிருகுமுனிவர் அழகுபெற்று விளங்குஞ் சோமகாந்தராசனுக்கு உரைசெய்வார் எ-று.

கிருச்சமதருபதேசம்பெற்றபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௩௩௩

---

## கிருச்சமதர் வரம்பெறுபடலம்.

உலகங்க ளனைத்துந் தொடக்குமுன் முண்டாக் கியவெம் பெருமா
னிறைநூல், பலவுந் தெளிகின் றகிருச் சமதன் படருற் றவனுற் றவரத்
தினையு, மிலகும் படிசொல் லுகவென் றுதவ மெழிலா ருமலியா தனவின்
னெழும், மலர்மேல் லணையான் மகிழ்கூர்ந் தவன்முன் வரம்பெற் றதுமோ
துவலித் தனனே

(இ - ள்.) உலகங்களெல்லாவற்றையும் தொடக்கமுன்னாற் படைத்த எம
பெருமானருளிய தலைமையான பலநூல்களையுந் தெளிகின்ற கிருச்சமதமுனிவன
(தவமான)சென்று, அவன்பெற்ற வரத்தையும் விளங்கும்படி சொல்லவேண்டுமென்று,
தவத்தின் அழகுவிளங்கும் வியாசமுனிவர் வினாவவும், அம்மெல்லிய தாமரைமலரணை
யையுடைய சதுர்முகன் களிமிகுந்து, அவன் வரம்பெற்றதையுஞ் சொல்லத்தொடங்கி
னன் எ - று. (௧)

பழிமல் லியகா னமொழிந் தபின்மே லடுகா னமடுத் தகிருச் சமதன்,
வழிதண் மதுமல் லிகைமுல் லையிளம் பயிலைக் கொடிமா தவிபந் தரிடம்,
பொழிலும் புதுமா மலரோ டைகளும் பொங்கும் புனலார் வியுமேவள
விமறை, மொழியும் படிசெய் யுமுனிக் கணமும் முடிவா னவர்வாழ்க் கையு
நோக்கினனே.

(இ - ள்) பழிமிகுந்த வனத்தைவிடுத்து, சமீபத்திலே பொருந்திய (பெரு)
வனத்தை யடுத்த கிருச்சமதமுனிவன், குளிர்ந்த தேன்சொரியும் மல்லிகையும் முல்லை
யும் இளமைதங்கிய இருவாட்சிக்கொடியும், குருக்கத்திப் பந்தரிட்டபொழிலும், அல
ர்ந்த பெரிய மலரோடைகளும், பொங்குகின்ற நீரையுடைய தடாகங்களும், யாகங்
களை வேதங்கூறிய வகையாகச்செய்யும் முனிவர்கூட்டங்களும், கிரீடமணிந்த தேவர்
களுடைய இருக்கையுங் கண்டனன். எ - று. (௨)

அங்குற் றமர்மா தவர்தம் மையடுத் தவர்தா டொழுவாங் கவர்நல்
வாழ்வேற, நிறைகுற நிருவென் னமகிழ்ந் தினை மெழிலார் புவியின் வலமா
னையதங், தங்கும் பெருமெல் விரலான் றியொரு தந்தப் பெருமா னுருவங்
கருதி, முங்கும் பொறியைத் துமடக் கிமனு மொழிகின் றனன்முற் றுத
வத் திசெறிடும்.

(இ - ள்) அவ்விடத்திற் பொருந்தியமர்ந்த பெருந்தவசிகளை யடுத்து அவர்கள் பாதங்களிற் பணிய, அப்பொழுது அவர்கள் நல்வரவாகக்கொண்டு இவ்விடத்திற் பொருந்தியிருக்கவென்று கூறக்களித்து, நாடோறும வலப்பாதத்திற்பொருந்தியமெல்லிய பெருவிரலைப்பூமியிலூன்றி, ஏகதந்தராகிய கணேசபெருமானுடைய திருவுருவத்தை மனதில் தியானித்து, துன்புசெய்யும ஐம்பொறிகளையுமடக்கி முதிர்ந்த தவத்துடன மந்திரத்தைக் கணிக்கின்றனன எ - று. (ங)

ஓரா யிரதே வாகளாண டுதமக கொருகால விழிவிட டவணிங் கனை
மை, யீரா யிரமேமா டுமையா யிரமாண டெங்குந் தவவங் கியெழுந் துகட
க், தாரா முலைவா னரமங் கையருந் தனிவா னவருந் தருவோ ரெவரு,
நீரா குளிர்கங் கைநெடும பொழிலு நிலவத் தவமா றியிருந் தனனில.

(இ - ள்) ஆயிரந்தேவவருடங்களுக் கொருமுறை கண்ணிமைத்து, அத்திருச்சமதமுனிவன் இவ்வகையாகப் பதினையாயிர வருடங்கள் எவ்விடத்திலுந் தவாக்கினியானது எழுந்து, மாலைபொருந்திய குசங்களையுடைய தேவலோகத்துள்ள அரம்பாஸ்திரீகளும ஒப்பற்ற தேவர்களும அசுரர்களும யாவரும நீர்பொருந்திய குளிர்ச்சிவாய்ந்த கங்கையும, பெரிய (கற்பகச)சோலையும விளங்கச் சுடும்படி, தவஞ்செய்து கொண்டிருக்கையில. எ - று

விழிவிடுதலென்பது கண்ணைவிட்டு இமை விலக்கல (ச)

மனவாக் குறுகா யமுமெட் டரிய வளர்பே ரொளியாயப் பரிபூ
ரணமா, யினமா மலர்தூ வியிறைஞ் சியென தியானென் னுமகந் தையவி
ரித் தெனதூ, தனதே யெனுமெய யடியா ரவரே தாமா கியிருந் தவிநா
யகனார், நனவே யவனுக் குவரம் புரியந் தருபே ரருளா லெதிர்நண் ணினா
ரே.

(இ - ள்) மனமும வாக்கும பொருந்தியகாயமும மெட்டுதற்கரிய வளர்கின்ற பேரொளிப் பிழம்பாய, எங்கும நிறைவாய, கூட்டமாகிய சிறந்த மலர்களா னருச்சித்துப் பணிந்து, எனது யானென்னும அகந்தையையொழித்து, (பரிபூரணவியாபகத்தால) என்னுடையதுந் தன்னுடையதே யென்றும உண்மையடியவர்களே தாமாகி விளங்கும விநாயகப்பெருமான, அத்திருச்சமதமுனிவனுக்கு நனவிலேயே வரமளித்தருள, களிக்கத்தக்க பேரருளோடு எதிரே பொருந்தினா எ - று (ரு)

காலைக் கதிர்கோ டியுதித் தனைய கதிர்செய் திருமே னியுமவா ரிச
மென், மாலைக் குனபப் பாரமா புமவிரை மலிகுங் குமமா திமட்டித்
துமிகு, சீலப் பனிநீ ரினைத் தநறுந் தேமாப் பியதோ ளொருபத்
துமிரு, பாலுற் றொளிசித் தியுமபுத் தியுமவெண் பாலொத் திடுசிங் கநல
வா கனமும.

(இ - ள்) காலையிலுதயஞ்செய்யுஞ் சூரியர்கள் ஒருகோடியருதயமானாற் போல ஒளிவீசுந் திருமேனியும, தாமரையாகிய மெல்லிய மலர்மாலைக்கு அழகுபொருந்திய திருமார்பும், வாசமிக்க குங்குமப்பூமுதலியன சோதது மிக்கபுனிதமாகிய பனிநீரிலரைத்த வாசந்தங்கிய தேய்வைபூசிய ஒருபது திருத்தோள்களும, இருபக்கங்களிலும் பொருந்திய பிரகாசிக்கின்ற சித்திதேவியாரும புத்திதேவியாரும், வெள்ளியபாலினை நிகர்த்த நல்ல சிங்கவாகனமும எ - று. (சு)

பொங்கு முழுவற புணரிப் புணையானை
செங்கை குவித்துத் திருநுதவித் துகூறுவான.

(இ - ள்) சிங்கத்தினை முதுகிலே மேம்பட்ட (சித்திபுத்திகளென்னும்) தேவிமாருடன் அவ்விடத்திலெழுந்தருளிய மலரகிதராகிய விநாயகக்கடவுளுடையதிருவருளின் றிறத்தைக்கேட்டு, அதிகரிக்கின்ற விடாதுதொடர்ந்த அன்புக்கடலுக்குத் தெப்பமான கிருசசமதன் செவ்வியகைகளைக்கூப்பித் திருத்தமாக இதனைச் சொல்வானாயினான். எ - று.

உழுவல் - விடாதுதொடர்தல் உழுவலன்பு என்பன வாதியிற்காண்க.
கேளா - செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். (௪௭)

காண்டல் கருத ஒணாயிவற்குற காணுமையக்
காண்டல் கருத ஒணாயானுங் கண்டேறகு
வேண்டும் பொருளினை முண்டே விமலா நீ
வேண்டுகே னுமமருளைத் தள்ளாது வேண்டுகேன்.

(இ - ள்) தரிசித்தல் சிந்தித்தல் கூறுதலென்றும் இவற்றுற் றரிசிக்கமுடியாத தேவரீரைத் தரிசித்தலாலும் சிந்தித்தலாலும் துதித்தலாலும் தரிசித்த அடியேனுக்கு விரும்பும் பொருள் பின்னுமொன்றுளதோ? நின்மல சொரூபியே! தேவரீரை வேண்டுகேன் தேவரீர் திருவருளைத் தள்ளாமல் வேண்டுகேன் எ - று.

வேண்டுகேன் இதில் கு சாரியை வேண்டுவேனென்பது பொருள். (௪௮)

எண்பந்து நானகு நூறுயிரமா மியல்பிறப்பிற
பண்புற்ற மானிடமாம் பவமரிது மானிடத்து
மெண்பெற்ற நாலவருணத் தியைந்திடல் தரிதவற்று
ணண்புற்ற வந்தணராய நண்ணுவது மரிதாமால்.

(இ - ள்) எண்பத்துநான்கு லட்சமாக விடலகின்ற பிறவியில் அழகுபொருந்திய மானுடமாகிய பிறவி (கிடைப்பது) அரிது மானுடப்பிறவியிலும், எண்ணுதல் பெற்ற (பிராமணுதி உத்தம) நாற்குலத்திற் பொருந்துத லரிது. அவற்றுள்ளும் யாவரும் நண்புகொண்ட வேதியராகப் பிறப்பதும் அரிதாகும் எ - று.

என்பத்துநான்கு நூறுயிரம் பிறப்பு என்றமைந்,

"ஊர்வ பதினொன்று மொன்பது மானுடம்
நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்து—சீரிய
பந்தமாந் தேவர் பதினொ கயன்படைத்த
அந்தமிலசீத தாவரநா லைந்து"—என்பதனுைறிக.

என்பெற்ற நாலவருணமென்றது,அநுலோம பிரதிலோம அந்தராள விராத்தியரென்று மித்திறத்சோரை விலக்கி உயர்குடியாகிய பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திர வருணங்களை யுணர்த்தியதெனக். (௪௯)

அந்தணருள் ளறிவுடைய ராதலரி தறிவருளுள்
சிந்தைமகி ழனுட்டானஞ் செய்குநரா குவதரிது
சிந்தைமகி ழனுட்டானஞ் செய்பவருட் டிரிவிதமாம
பந்தமறச் சிவஞானப் பேறுடையா ரரியாகளே.

(இ-ள்) வேதியர்களினும் அறிவுடையவராதல் அருமை. அறிவுடையவர்களினும் மனமகிழ்த்தக்க அநுட்டானஞ்செய்பவராதலருமை. மனமகிழ்த்தக்க அநுட்டானஞ்செய்பவருள்ளும் மூவகைத்தாகிய பந்தங்களறப்படி சிவஞானப் பற்றுடையவர்கள் அரியவர்கள் எ-று. (௧௮)

அத்தகைய சிவஞான மடிகாட்கு வழிபாடாம்
பத்தியினா லன்றியவைப் பயிலவொளி தவத்தான
மெத்திறத்து முயற்சியினு மெய்துவதில் லாமையினால்
வித்தகநின் மலர்ப்பதத்தில் வீடாத வன்பருள்க.

(இ-ள்) அவ்வகைப்பட்ட சிவஞானத்தைத் தேவரீர் திருவடியிற் பொருந்தும் பத்தியினாலன்றி, செபங்கள் யாகம் - தவம் - தானம் எவ்வகைமுயற்சி முதலியவற்றாலும் அடையத்தக்கதல்லாததனால், ஞானசொரூபியே! தேவரீருடைய தாமரைமலர்போன்ற திருவடியில் அழியாத அன்பினை அடியேனுக்கு அருள்புரியவேண்டும். எ-று.

திருவடிப்பத்தியினாலேயே சிவஞானம் வருமன்றி யாகமுதலிய பலமுயற்சியானும் அஃதெய்தாதென்பார் "சிவஞானம் * * * எத்திறத்து முயற்சியினு மெய்துவதில்லாமையினால்" என்றார். (௧௯)

எம்பெருமா னித்தலத்தி லெழுந்தருளி யெந்நாளு
மும்பர்முத லனைவோர்க்கு முவப்பவரம் வழங்கிடுக
நம்பியபுட் பகவனமும் புட்பகமா நகருமென
விம்பரினிவ் வனத்தனுக்கு மிந்நகர்க்கும் பெயருறுக.

(இ-ள்) எம்பெருமானே! தேவரீர் எக்காலமும் இவ்விடத்திலெழுந்தருளியிருந்து தேவர்முதலிய வெல்லோருக்குங் களிப்பெய்த (வேண்டிய) வரங்களை (வேண்டியவகையே) கொடுத்தருள் புரிக. மேன்மைதங்கிய புட்பகவனமும் சிறந்த புட்பக நகருமென்று இவ்வுலகத்தில் இவ்வனத்திற்கும் இந்நகரத்திற்கும் (இதுமுதல்) பெயருண்டாகுக எ-று. (௨௧)

தேவர்முனி வரரசுரர் சித்தர்கள்சாத் தியர்முதலா
யாவர்களு மென்வழியி னென்றாணை கடவாமை
மேவுவதும் வேண்டுமென விழைந்திரப்பப் பொன்ஞாழற்
பூவலங்கன் மணிமார்பிற் புனைபுண்ணிய னிதுபுகலும்.

(இ-ள்) தேவர்கள் முனிவர்கள் அசுரர்கள் சித்தர்கள் சாத்தியர்கள்முதலிய எவர்களும், என்வழியில் என்கட்டளையைக் கடவாமற்பொருந்துவதும் வேண்டுமென்று விரும்பி யாசிக்க, பொற்கொன்றைமலர்மாலையாகவணிந்த அழகிய மார்பையுடைய புண்ணிய சொரூபியாகிய கணேசப்பெருமான் இவ்விதஞ்சொல்கின்றனர் எ-று.

ஞாழல் - குங்குமமலர்க்குங் கொன்றை மலர்க்கும் பெயராயிருப்பினும் பொன்ஞாழலென்றதனால், பொற்கொன்றையென்றும் இது சரக்கொன்றை (௨0)

இக்கிரேதா யுகத்தி னிந்நகரம் புட்பகமா
மிக்கதிரே தாயுகத்தில் விளங்குமணி பூரகமாந்
தொக்கதுவா பரயுகத்திற் றுரிசகற்றும் பாணகமாம்
பக்கவெழிற் கலியுகத்திற் பத்திரக மாகுமால்.

(இ - ள்.) இந்தக் கிரேதாயுகத்தில் இந்த நகரமானது புட்பகநகரமாம். மேம்பட்ட திரேதாயுகத்தில் விளங்குகின்ற மணிபூரகநகரமாம். நெருங்கிய துவாபரயுகத்தில் குற்றமொழிக்கும் பானகநகரமாம். குறைந்த அழகுடைய கலியுகத்தில் பத்திரகநகரமாம். எ - று. (உக)

நற்றவநீ விழைந்தவெலா நல்கினமுன் பாற்சிறுவ
னற்றமிலா மிகுவலியோ டாறொருவா ளியினன்றி
மற்றையரா லழியாத வரத்தினனாய் நமதடியன்
புற்றவனா யொருவனுறு மோங்குநம திருவருளால்.

(இ - ள்.) நல்லதவத்தையுடைய கிருச்சமதமுனிவனே! நீ விரும்பியவற்றை யெல்லாங் கொடுத்தோம். உன்னிடத்திலே ஒரு சிறுவன் அற்றமில்லாதபெருவலியுடன், சிவபெருமானுடைய ஏகபாணத்தாலல்லாமற் பிறரால் இறவாத வரமுடையனாய், நம்முடைய திருவடிப் பத்தியுடையனாய், நமது மிக்க இனிய திருவருளாற் பெற்றவனாய்ப் பிறப்பான். எ - று.

அற்றம் - துன்பம் - அற்றமிலாவலி யென்பதற்கு மிக்க வலியென்க. (உஉ)

வேறு

பெருந்திறன் மகனை மைந்தப் பெயரினு நினக்குக் கீர்த்தி
திருந்துமூ வுலகத் துண்டாந் திருத்தகு முனிவ நம்மைப்
பொருந்துகா ரியங்க டம்மின் முந்துற நினைந்து பூசி
வருந்துத லின்றி வேட்ட வரமெலாம் பெறுவை மாதோ.

(இ - ள்.) மிக்க வலியமைந்த அந்தப்பெயரினாலும் உன்மகனைக் காட்டிலும் உனக்குக் கீர்த்தியானது திருத்தமுற்ற திரிலோகங்களிலு முண்டாகும். சிறப்பமைந்த கிருச்சமதமுனிவனே! பொருந்திய காரியங்களிலெல்லாம் நம்மை முதலிலே தியானித்துப் பூசைபுரிக. வருந்தமில்லாமல் விரும்பியவைகளையெல்லாம்பெறுவாய் எ-று.

காரியாரம்பத்திலேயே கணபதி பூசைசெய்வோர் நிர்விக்கினமாக அதனை முடித்துப் பலனுறுவாராகலின் "நம்மைப் பொருந்து காரியங்கடம்மின் முந்துற நினைந்துபூசி - வருந்துதலின்றி வேட்டவரமெலாம் பெறுவை" என்றார் (உ௩)

நினைந்தெமைப் பூசை யாவர் நிகழ்த்தினு மவர்கட் பொல்லா
வினைத்தொடர் பனைத்து நீங்கி விழுத்தகு நினைந்த நன்மை
யனைத்தையு மெளிதின் வல்லே யடைகுவ ரெமைத்தொழாரே
லனைத்துள விடரும் பொல்லா வினைகளு மெய்து வாரே.

(இ - ள்) சிறந்த தவத்தையுடையவனே! எம்மை எவர்கள் கருதிப் பூசை செய்தாலும், அவர்கள் தங்கட்குரிய பொல்லாவினைத் தொடர்ச்சிமுழுவதையுமொழிந்து நினைந்த நன்மைமுழுவதையும் இலேசாகவே விரைவிலடைவார்கள். எம்மைப் பணியார்களாகில், உள்ளனவாகிய வெல்லாத துன்பங்களையும் பொல்லாத வினைகளையும் அடைவார்கள். எ - று.

வல்லே - விரைவுகுறிக்கும் இடைச்சொல் (உ௪)

அருமறை யானுங் காணா வமலனா வரங்க ணல்கி
யிருவினை மலங்கண் மூன்று மிரித்தவ ருளக்கோயின்

மருவுவான் மறைந்து போந்தார் வரம்பெறு முனிவ ரங்கோர்
குருமணிக் கோயி லொன்று குயிற்றியக் கோயி லுள்ளார்.

(இ - ள்) அரியவேதங்களும் அளவிட்டுக் காணமுடியாத நின்மலராகிய கணேசப்பெருமான் (இவ்வகையாக) வரங்களைக் கொடுத்து, இருவினையையும் மும்மலங்களையும் ஒழித்த பரம பக்தர்களுடைய இதயாலயத்தை யடையும்படி அந்தர்த்தானமாயினார். வரங்களைப் பெற்ற திருச்சமதமுனிவன் அங்கே ஒப்பற்ற சிறந்த மணிகளாற் செய்த திருக்கோயிலொன்று செய்வித்து, அத்திருக்கோயிலினுள்ளோர் எ - று (௨௫)

வேறு

சரதமிகு பத்தியினிற் சார்ந்தவருள் ளகவரங்கிற்
பரதமிகப் புரிவானைப் பரானந்த பூரணனை
வரதகண பதியென்று வைத்தெடுத்துத் தீர்த்தமுந்தொட்டு
விரதமொடப் புனலாட்டி மெய்த்தப்பூ சித்திருந்தான்.

(இ - ள்) உண்மைமிக்க பக்தியுடன் பொருந்தியவர்களுடைய மனமாகிய சபையிலே, நடனத்தைப் பிரியமாகச் செய்பவனும் பரானந்த பூரணனுமாகிய கணேசப் பெருமானை வரதகணபதியென்று பிரதிஷ்டை செய்து, (அங்கே) ஒரு தீர்த்தமுமெடுத்து விரதத்துடன் அபிஷேகித்து மெய்யாகிய பூசைசெய்திருந்தனன் எ - று (௨௬)

வேறு

கணேசர் மேனியி லாட்டுமக் காமரு தீர்த்தம்
கணேச தீர்த்தமென் றொருபெயர் கலந்தது நகரும்
கணேசர் பேரரு ளாற்றலந் திருந்தநா ளதனாற்
கணேச மாநக ரெனும்பெயர் கதுவிய தம்மா.

(இ - ள்) கணேசப்பெருமானுடைய திருமேனியிலாட்டிய அந்த அழகிய தீர்த்தமானது கணேச தீர்த்தமென்று ஒருபெயரைப் பெற்றது; அந்த நகரமும் கணேசப்பெருமானுடைய பேரருளோடு கூடியிருந்த காரணத்தினால், சிறந்த கணேசநகரமென்னும் பெயரை யடைந்தது எ - று.

அம்மா - வியப்பிடைச்சொல். (௨௭)

சித்தி யாவையும் யாவர்க்குஞ் செறித்திடுந் திறத்தாற்
சித்தி மாநக ரென்னவுஞ் சிறந்ததந் நகரும்
சித்தர் மாதவர் தேவர்கண் முதலியோர் தம்முட்
சித்தி மேவின ரளவிலர் சிறந்தவந் நகரில்.

(இ - ள்) எல்லாச் சித்திகளையும் எல்லோருக்கும் பிரியமாகக் கொடுக்கும் ஆற்றலால், அந்நகரமானது சிறந்த சித்திநகரமென்றுஞ் சிறப்புற்றது; சித்தர்கள் பெருந் தவசிகள் தேவர்கள் முதலானவர்களில் அந்நகரத்திலே (தமது இஷ்ட) சித்திகளை யடைந்தவர்கள் எண்ணிறந்தவர்கள் எ - று (௨௮)

கவியு மித்தருள் காமரு திருச்சமதன் முன்ன
புவியி லத்தகப் புகழ்முகக் களிற்றிறை யருளா

லவிர்வ ரம்பெற லிதுபட ராணவ வலியிற்
றவிர்வி யாதனென் றுரைத்தனன் சதுமுகப் பிரமன்.

(இ - ள்.) கவிமுனிவர் பெற்றருளிய அழகிய கிருச்சமதமுனிவனே முன்னே உலகமானது களிப்பெய்தத்தக்க, புள்ளிகளை வாய்ந்த யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் திருவருளால், பிரகாசிக்கின்ற வரம்பெற்ற வகையினாலாகும் படர்ந்த ஆணவமலவலிமையினின்று நீங்கிய வியாதமுனிவனே! என்று நான்குமுகங்களையுடைய பிரமதேவன் கூறினன். எ - று. (உகூ)

சோம காந்தனே தூதத கவிமகன் பெற்ற
சேம வானவர மிந்தனை யினியவன சிறுவன
வாம மாரொரு மருப்பினன் மந்திரங் கணித்த
தேம மாதர வறிதியென றியம்புவன பிருகு.

(இ - ள்) சோமகாந்த ராசனே! தகக புனிதமான கவிமுனிவர் மகனான கிருச்சமதமுனிவன் பெற்ற சேமமாகிய சிறந்த வரத்தைத் யுணர்ந்தனை இனி அவன் மகனாகிய பெலி அழகுபொருந்திய தந்தமாகிய கணேசப்பெருமானுடைய திருமந்திரத்தைக் கணித்தவகையை அழகுபொருந்த உணரக்கடவையென்று பிருகு முனிவர் சொல்லத்தொடங்கினர். எ - று. (௩0)

கிருச்சமதா வரம்பெறுபடலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௩௪௪

# திரிபுரன் வரம்பெறுபடலம்.

கருவி முகிலக ணிரைநிரையாயக் கவிழ்தத நெடிய தடஞ்சிலம்பி
னருவி யெனமும் மதம்பொழியு மானை முகவ னருள்வாதத்தாற்
பொருவி லமரா முனிவரெலாம் போந்து வணங்கிப் பணிபுரிய
மருவு மகிமை விசசிறையாய் வதிந்தா னனைய கிருசசமதன்.

(இ - ள்) (உலகுக்கு) காரணபூதமான மேகங்கள் வரிசைவரிசையாக (நீரை)க் கவிழ்த்த நீண்ட விசாலமான மலையில், அருவியைப்போல மும்மதங்களைச் சிந்தும் யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் அருள்புரிந்த வரத்தினலே, அத்தகைய கிருச்சமதமுனிவனை ஒப்பில்லாத தேவர்களும்முனிவர்களும் யாவரும் வந்து பணிந்து ஏவல செய்ய, அவ்விபொருந்திய யாகத்சிறந்த தலைவனாய் வசித்தனன் எ - று. (௧)

மடங்க லுகைக்கும் களிறுமுக வரதன பாத மலர்த்துணையின
முடங்கு மறுகாற் கருப்பினங்கண் முரலும் பனிமென் மலராதி
குடங்கை கொடுபூ சித்தவனமெய்க் கோல மனுவுங் கணித்துள்ள
மடங்கத் தவஞ்செய் பவனொருநா ளமாந்தா னரிய யோகத்தில

(இ - ள்.) சிங்கத்தை வாகனமாகச்செலுத்தும் யானைமுகத்தையுடையசிரேட்டமான விநாயகக்கடவுளுடைய உபயபாததாமரைகளில், முடங்கிய ஆறுகாலையுடைய வண்டு கூட்டங்கள் ஒலிக்குங் குளிர்ந்த மெல்லிய மலர்கள் முதலியவற்றைக் குடம்

போன்ற கயிற்றைக்கொண்டு பூசைசெய்து, அவ்வெம்பெருமானுடைய உண்மையாகிய அழகிய மந்திரத்தையுங் கணித்து, மனமடங்கத் தவஞ்செய்கின்ற கிருச்சமதமுனிவன், ஒருநாள் அரிய யோகத்திலமர்ந்தனன் எ - று. (௨)

நெடிது யோக முழந்தனன் பிணிகரி றவத்துக் கிருச்சமதன்
கொடிது விழித்துப் பார்த்தனன் கொடிய பார்வை தனினின்றும்
படியும் விசும்பும் பாதலமும் பறம்பு நடுங்கக் கடைநாளி
னிடியும் வணங்க மிகவார்த்திட் டெழுந்தான் வலியி னொருமைந்தன்.

(இ - ள்) ஒப்பில்லாத தவத்தையுடைய கிருச்சமதமுனிவன் நெடிதுயோக மிருந்து, கொடுமையோடு கண்விழித்துப் பார்த்தனன். அந்தக்கொடிய பார்வையி னின்றும், பூமியும் ஆகாயமும் பாதலமும் மலையும் நடுக்கமெய்தவும், ஊழிக்காலத்தின் இடியும் கீழ்ப்படவும், மிகவும் ஆரவாரித்து வலிமையோடு ஒரு புத்திரனெழுந் தனன் எ - று.

யோகமுழத்தல் - யோகிருத்தல். (௩)

செய்ய நிறமும் பொழுதுந் திவளு முடியுங் குண்டலமும்
பெய்யுந் திணிதோ ளங்கதமும் பிறங்கு மணிநூண் முதற்பலவும்
வெய்ய கதிரி னொளியழுங்க விளங்கு மொளியு முடையானைப்
பொய்யி றவத்துக் கிருச்சமதன் பொற்ப நோக்கி நடுங்கினன்.

(இ - ள்) செவ்விய நிறமும், மிக்க அழகும், துவளுகின்ற முடியும், குண்டலமும், வலிய தோள்களிற் பூட்டிய அங்கதமும், விளங்குகின்ற அணிநூண் முதலிய பலவும், சூரியவொளியு மழுங்கும்படி விளங்கும் பேரொளியுமுடைய அவனை உண்மையாகிய தவத்தையுடைய கிருச்சமதன் அழகுறப்பார்த்து அச்சமெய்தினன் எ-று.

அங்கதம் - தோளணி. வெய்யகதிர் - சுடுகின்ற கிரணங்களையுடையவன்; சூரியன். பொய்யில் - பொய்மையில்லாத, உண்மையாகிய என்றும். (௪)

யாவ னிவனென் றலமந்த பிறைவ னருளா லருண்மைந்த
னாவ னெனப்பின் றெளிந்துமுனி யார்நீ யெனப் பலிசொல்வான்
மேவு தவத்தோ யறியாமை வியப்பிற் றெனினின் விழிபார்த்த
வோவில் பார்வை யிடையுதித்தே னுனக்கு மைந்த னேனப்பா.

(இ - ள்) கிருச்சமதமுனிவன் இவன் யாவனென்று துன்பமடைந்து, பின்னர், இறைவராகிய விநாயகப்பெருமான் திருவருளால் வரந்தருளுகின்ற புதல்வனாவனென்று தெளிவுற்று, நீ யாவன்! என வினவ, பலிசொல்லினன். பொருந்திய தவத்தை யுடைய எந்தையே! என்னையறியாமை ஆச்சரியமுடையதே. உன்கண்ணுற்றுப்பார்த்த கெடுதலில்லாத பார்வையினிடத்திற் பிறந்தேன் உனக்கு மகனேன் எ - று. (௫)

அன்னை நீயே பிதாநீயே யனைத்து நீயே யென்னைச்சிலநாண்
மன்னை வளர்ப்பன் யானும்மை வைய மொருங்கு தாட்படுப்பேன்
பின்ன ரதிதி யெனவிளைய யென்று பேசப் பெருமுனிவன்
றன்னு ளடங்கி யதுமறைத்துத் தனைப்பற் கிதனைச் சாற்றுவான்.

(இ - ள்) தாயு நீயே, தந்தையுநீயே, யாவுநீயே, என்னைச் சிலதினங்கள் பொருந்த வளர்த்தால் யான் மூவகை யுலகத்தையும் ஒருசேர என்காற்கீழ்ப் படுக்குவேன்.

என்வலிமையைப் பின்னறியக்கடவாய் எனக்கூற, பெரிய கிருச்சமதமுனிவன் தன் மனம் நடுங்கியதை மறைத்து மகனாகிய பலிக்கு இதனைச் சொல்லுவான். எ - று.

உள் - மனம் இஃதிடவாகுபெயர் (௬)

ஆதி யந்த நடுவின்றி யகண்டா கார மாயொன்றாஞ்
சோதி யான விநாயகநாதந் தொன்மை மனுநான் னொன்றுண்டு
நீதி யாகக் கணித்துவரு நிகரி லதனை யுரைசெய்வேன்
றீதி லாது கணியுனக்குச் சித்தி யனைத்தும் வருமென்று.

(இ - ள்) முதலும் இடையுங் கடையுமில்லாமல், அகண்டாகாரமாய் ஒன்றாகிய சோதிசொரூபரான விநாயகப்பெருமானுடைய பழைமையான மந்திரம் நான் எக்காலமும் நீதியோடு கணித்துவருகின்ற ஒப்பில்லாதது அதனை உனக்குங் கூறுவேன் குற்றமில்லாமற் கணிப்பாயாக உனக்கு எல்லாச்சித்திகளும் வருமென்று எ - று.

தந்தை தானே மகனாகிச் சாரு மென்னு முறையானு
மெந்தை பெருமா னருள்செய்த வியல்பி னானுங் கிருச்சமதன்
மைந்தன் றனக்குக் கணநாதுவா வென்னு மனுவை யுபதேசித்த
தந்தண் மறைநூல் விதியானே யனுட்டிப் பனைத்துமுங் கனமொழிந்தான்.

(இ - ள்) தந்தையே மைந்தனாகி வருவானென்னும் முறைமையாலும், எந்தையாகிய கணேசப்பெருமான் அநுக்கிரகித்த வியல்பினாலும், கிருச்சமத முனிவன் தன் மகனாகிய பலியென்பவனுக்கு "கணநாதுவா" என்னுமந்திரத்தை யுபதேசஞ்செய்து அழகிய வேதநூல் விதிப்படி (அதனுடைய) அனுட்டிப்பு முதலிய வெவற்றையுங்கூறி விடுத்தனன் எ - று.

கணநாதுவா வென்னுமந்திரம் ஆதியிற் கவிமுனிவரால் தனக்கு உபதேசிக்கப்பட்டிருந்தது அதனையே கிருச்சமதமுனிவன் மைந்தனுக்குணர்த்தனன் (அ)

நீற்று மேனிக் கிருச்சமதன் னெடிய மலர்த்தாள் பணிந்தேத்தி
யாற்றல் சான்ற பலியென்பா னுங்கோர் பாங்கர் தந்தையைப்போற்
போற்றி யொருதா ளிலத்தூன்றிப் பொறிக ளடக்கி யுணவாதி
பாற்றித் தவஞ்செய் தனன்வருடம் பதினா யிரத்தோ டிறப்பாதி

(இ - ள்) வலிமைமிகுந்த பலியென்பவன், அவ்விடத்தோர் பக்கலில், திருவெண்ணீறணியணிந்த உடலையுடைய கிருச்சமதமுனிவனுடைய நெடியமலர்போன்ற திருவடியைப்பணிந்து துதிசெய்து தன[illegible]வைப்போல, துதித்து ஒருபாதத்தை நிலத்திலூன்றி ஐம்பொறிகளையடக்கி ஆகாரமுதலியவற்றை விலக்கிப் பதினாயிர வருடகாலந் தவஞ்செய்தனன் எ - று.

நீற்றுமேனி யென்பதற்குத் திருநீறணிந்த திருமேனியெனினுமாம். ()

கொடிய தவத்தி னெழுந்தகனற் கொழுந்து பரந்து மிகச்சுடலு
நெடிய விசும்பி னமரரெலா நெடிது நடுங்கி முறையிட்டார்
படியில் கருணை விநாயகனா ரிந்து பலனுக் கருள்கொடுப்ப
விடியற் கதிரா யிரகோடி விரவி யெனமுன் னேருனரா. .

(இ - ள்) தீக்கொழுந்தானது (அவன்செய்யுங்) கொடிய தவத்தினின்றெழுந்து (எங்கும்) பரவி மிகவுஞ் சுடுதலும், பெரிய ஆகாயத்திலுள்ள தேவர்கள் யாவரும

மிகவும் மனநடுங்கி முறையிட்டார்கள். எல்லையில்லாத கிருபாமூர்த்தியாகிய விநாயகக் கடவுள் மனமிரங்கித் தவப்பலனுக் கருள்புரியும்படி, விடியற்காலைத் தோன்றும் ஆயி ரங்கோடி சூரியரொன்றுகூடி வந்தாற்போல (பலியின்முன்னே) காட்சிதந்தருளி னர். எ - று (௧௦)

அழல்கொப் புளிக்குங் கதிர்ப்பரிதி யமரன் விழியு மொளிமழுங்கக்
கழல்கொப் புளிக்கும் பேரரவக் காமர் மலர்த்தாள் விநாயகனார்
நிழல்கொப் புளிக்குந் திருமேனி நிகழ்ந்து பரந்த வொளிக்கஞ்சான்
றழல்கொப் புளிக்குங் கொடுந்தவத்துத் தகைசால் பலிக்கண் மலர்த்தினன்.

(இ - ள்) தீயைச்சொரியுங் கிரணங்களையுடைய சூரியர்களின் கண்களும் ஒளிமழுங்கும்படி, வீரக்கழலானது சிந்துகின்ற பேரொலியையுடைய அழகிய தாமரை மலர்போன்ற பாதங்களையுடைய விநாயகக்கடவுள், நிழலைவீசுந் திருமேனியினின்று விளங்கிப்பரவிய ஒளிப்பிழம்புக்கு அஞ்சாமல், தீயைச் சிந்துங்கொடுந் தவத்தைச் செய்த தகுதிசான்ற கிருச்சமதமுனிவன் கண்மலர்ந்து திறந்து பார்த்தனன் எ - று.

பரிதியமரன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை

அஞ்சான் - எதிர்மறைக் குறிப்புவினையெச்சம் (௧௧)

திணிச்சித் திரத்தோ ளொருநான்குஞ் செந்தா மரையுங் கழுமுளனும்
கணிச்சிப் படையு மோதகமுங் கணேசப் புருவ முழுவதுமாரத்
தணிச்சித் திரம்போ னின்றபலி யற்ற மரம்போ லெதிர்வீழ்ந்து
பணிச்சித் திரநா கத்தொடையற் பரமா வருளென் றுரைசெய்வான்.

(இ - ள்) வலிமைவாய்ந்த அழகிய ஒப்பற்ற நான்கு திருத்தோள்களும், செந் தாமரைமலரும், கழுமுளனும், மழுப்படையும், மோதகமும், கணேசப்பெருமானு டைய திருவுருவமுழுவதுந் தரிசித்து, அழகிய சித்திரப்பதுமைபோல (அசைவற்று) நின்ற பலியென்பவன், அடியற்ற மரம்போலத் திருமுன்னே பணிந்து மாலாபரணமாக அழகிய நாகத்தை யணிந்த பரமனே! அருள்புரிகவென்று எ - று.

கழுமுள்—சூலாயுதம் மோதகம்=உருண்டை பரமன்=சிரேட்டன் (௧௨)

இமைக்கு மளவிற் பேரண்ட மெண்ணுந் துருவச் சிறுநெறிப்பாற்
குமைக்கும் பெருமா னடியேன்பாற் கோப மின்றிப் பெருங்கருணை
யமைக்க வேண்டு மறனன்றி யடியேன் பிழைத்தே னாயினுங்
கமைக்க வேண்டு மெனவிரந்தான் கணேசர் கருணை கூர்ந்தருள்வார்.

(இ - ள்) கண்ணிமைக்குமுன்னே பெரிய அண்டங்களையெல்லாம் உருவத் தின்சிறிய நெறியினால் அழிக்கின்ற ஐங்கரக்குரிசிலே! அடியேனிடத்திற் கோப மில்லாமல் மிக்க கிருபைசெய்தருளல்வேண்டும் அறனல்லாமல், அடியேன் தவறு றேனாலுந் தேவரீர் பொறுத்தருளல் வேண்டுமென்று யாசித்தான் கணேசப் பெருமான் கிருபைமிகுந்து திருவாய்மலர்ந்தருளுவார் எ - று.

கமைத்தல் - க்ஷமித்தலென்னும் வடமொழிச்சிதைவு (௧௩)

தண்டா மரைக்க ணமரிருவர் தம்மாற் றழற்க ணுருத்திரனாற்
பண்டா ரணத்தா ளளந்தறியப் படாத வொருநாம் பேரன்பு

கொண்டேர்த் திடனீ புரிந்தவக் கோணைக் கயிற்று லிறுகுறக்கட்
டுண்டேங் கடுத்தாம் வரங்கேளென் றுரைப்பப் பலியும் வரங்கொள்வான்.

(இ - ள்) தண்ணிய தாமரைமலர்போன்ற கண்களும், தண்ணியதாமரை மலரிருக்கையும் பொருந்திய (திருமால் பிரமனென்னும்) இருவராலும், தீ விழியை யுடைய உருத்திரனாலும், பழமையாகிய வேதத்தினாலும் அளவிட்டுணரப்படாத வொப்பற்ற நாம், பெரிய அன்பைக்கொண்டேராகக், நீ செய்த தவமாகிய வலியகயிற்றால் இறுகுறக்கட்டுண்டு ஈங்குவந்தனம் வரங்கேட்கவென்றுகூற, பலியும் வரங்கொள்வானாயினன் எ - று.

தண்டாமரைக்கண்ணரிருவரென்றதை, "தண் தாமரையாகிய கண் அமர் விண்டு" என்றும், "தண் தாமரைக்கண் அமரும் பிரமன்" என்றும் சொல்வகை செய்க. இரண்டாவதில், கண் - ஏழனுருபு. (௧௪)

மருள்கால் வினைகள் காலசீத்து வளர்மெய்ஞ் ஞானப் பேரொளியே
யருள்கா ணின்றன் திருமேனி யலங்கு மொளியி னிரேணுவினு
லிருள்கால் சீத்து வையகத்தி லிலகா நின்றார் மழையாதிப்
பொருள்கால் பரிதி மதியங்கி யென்பப் பேர்பூண்ட புலவர்களே.

(இ - ள்) மயக்கத்தைச் செய்யும் வினைகளை யடியோடுகளைந்து வளர்கின்ற உண்மைஞான மயமாகிய பேரொளியே! தேவரீருடைய திருமேனி அருள்வடிவே யாம். விளங்குகின்ற அவ்வொளியின் அணுவொன்றால், மழைமுதலிய பொருள் களும் வாயுவும் சூரியனும் சந்திரனும் அக்கினியுமென்ப பேர்கொண்ட தேவர்கள் இருளையடியோடொழித்துப் பூமியில் விளங்குகின்றார்கள் எ - று.

மழையாதிப் பொருள்கால் என்றதற்கு மழைமுதலிய பொருள்களைத்தரும் எனப் பொருளுரைப்பினுமமையும் (௧௫)

வரையாப் பெருமைப் புகழோயிவ் வையமுழுது மற்றனது
விரையாக் கலியா னடக்கின்ற தன்றோ வேதசாத்திரமு
முரையா நின்ற வுலகனைத்து முன்றன் சொரூப மெனவந்த
வரையா நின்றன் தெரிசனமே யனைத்து வரமு மடியேற்கே.

(இ - ள்) அளவிடப்படாத பெருமையுங் கீர்த்தியுமுடைய கடவுளே! இவ் வுலகமுழுவதுந் தேவரீரது கட்டளையால் நடக்கின்றதல்லவா? வேதசாஸ்திரங்களும் சொல்லுகின்ற வெல்லாவுலகங்களும் தேவரீரது சொரூபமென வந்த எல்லையாம். தேவரீருடைய தெரிசனமே அடியேனுக்கு எல்லாவரங்களுமாம் எ - று (௧௬)

மூவா முதல்வன் றிருக்காட்சி முகிழ்த்த கருணை யாலடியேன்
றாவாப் பெருமைப் பேறுடையே னெந்தை யவனும் பேறுடையா
னோவாத் தவமும் பயன்பட்ட தொன்று மறியாச் சிறியேனிங்
காவா நின்சீ ரியாதறிந்திட் டறைகே னறைய மாட்டேனே.

(இ - ள்) அழியாத முதல்வராகிய தேவரீருடைய திருக்காட்சியாகிய அருட்பிய கிருபையால் அடியேன் கெடாத பெரும்பாக்கியமுடையனாயினேன். என் பிதாவாகிய கிருச்சமதமுனிவனும் பாக்கியமுடையவனாயினன், (என்னுடைய) கெடாத தவமும் பிரயோசனப்பட்டது. யாதுமுணராத சிறியேன் இப்பொழுது

பெயருந் திரிபுரமென்பதேயாம் அரும்பிய கீர்த்தியையுடைய உனக்கு உலகமுழுவதுஞ் சொல்லும் பெயருந் திரிபுரனென்பதேயாம் மன்மதனை யெரியும்படி விழித்தருளிய சிவபெருமானுடைய ஒப்பற்ற கணையாலல்லாமல் அவை (வேறொருவராலும் எவ்வகையிலும்) அழியமாட்டா எ - று

திரிபுரன் - மூன்று நகரங்களையுடையவன்.

கரும்பன் - கருப்புவில்லை யேந்தியவன், மன்மதன். (உக)

நினைத்த விடத்திற் றிரிபுரமு நினைக்கு மூன்னஞ் செலும்வண்டு
கனைத்து மதுவுண் டெதிரொடுங்குங் கடுக்கைச் சடையா னொருகணையா
லனைத்து மழிக்கு மஞ்ஞான்றே யழியா முத்தி யுறுவையென
வெனைத்து மருளி யேரம்ப னிமமென் றுங்கு மறைந்தனனால்.

(இ - ள்) கருதுமுன்னரே நீ கருதியவிடத்திற்குத் திரிபுரங்களுஞ் செல்லும். வண்டுகளொலித்துத் தேனைப்பருகிக்குமடங்குகின்ற கொன்றைமாலையணிந்த சிவபெருமான் ஒப்பற்ற கணையால் அவையெல்லாவற்றையுமழிக்கும் அப்பொழுதே அழியாத மோட்சத்தை யடைவையென்று எல்லாவற்றையும் அருளிச்செய்து விநாயகக்கடவுள் விரைந்து அந்தர்த்தானமாயினர். எ - று

தேவர்களணிந்த மலர்மாலைகள் வாடாமையும், அவற்றில் வண்டுகள் மொய்யாமையுமாகிய இயற்கையுடையனவாகவும், "வண்டுகனைத்து மதுவுண்டெதிரொடுங்குங் கடுக்கை" என்றது உலகிலுள்ள கொன்றைமலர்க்கடுத்த இயற்கையை யுணர்த்திய விசேஷணமெனக் (உஉ)

பமர மிடங்குங் கடமத்தப் பனைக்கைம் முகவ னருள்வரங்கேட்
டமரர் நடுங்கிப் பெருங்கவலை யாழி படிந்தார் திரிபுரனும்
விமல தவத்துக் கிருச்சமதன் விரைத்தா ளிறைஞ்சிப் பேறுரைத்துச்
சமரிற் கிளருங் கருத்தினொடு தங்கி னுனப்ப பவனத்தில்.

(இ - ள்) வண்டுகள் மொய்க்குங் கன்னமதத்தையும் பனையைப்போன்ற துதிக்கையையுமுடைய யானைமுகக்கடவுள் அருள்புரிந்த வரத்தைத் தேவர்கள் கேட்டுப் பயந்து பெரிய துன்பக்கடலில் மூழ்கினார்கள். திரிபுரனும் புனிதமான தவத்தையுடைய கிருச்சமதமுனிவனுடைய வாசந்தங்கிய (தாமரைபோன்ற) திருவடியைப் பணிந்து (தான்பெற்ற) பேற்றைக்கூறி, போரில் விளங்கும் எண்ணத்துடன் புட்பகயனத்திலே பொருந்தினன். எ - று

ஆழி - ஆழமுடையது, வட்டமாயுள்ளது, கடல். (உங)

புள்ளுறு றறியா விதழ்ப்பரந்து பொருட்டு வாய்ந்த தெய்வமணக்
கள்ளுற றியத்தா மரைக்கடவுள் கணேசர் கமலத் தாண்மலர்த்தே
னள்ளூ றுளத்து வியாதனென மறவோய பலியே திரிபுரனுந்
தெள்ளூ றியமெய் வரம்பெற்ற செய்தி யிதுவா மெனப்பகன்றான்.

(இ - ள்) பறவைகளின் துன்பமறியாத இதழ்களப்பரந்து, பொருட்டமைந்த தெய்வமணம்பொருந்திய தேனைசிந்திய தாமரைமலரிலெழுந்தருளிய பிரமதேவன், கணேசப்பெருமானுடைய பாததாமரையின் தேனனைத்து ஊறறெடுக்கும் உள்ளத்தையுடைய வியாதமுனிவனே! பலியெனபவனே திரிபுரனுகத் தெளிவமைந்த உண்மையாகிய வரத்தைப்பெற்ற செய்தி இஃதாகுமெனக்கூறினன் எ - று. (உச)

அன்று பலிமா தவமாறறி யமல னருள்சோ புட்பகததை
யினறு புவியோா வஙகாள மெனப ரவனகொள் வரமுறைபப
நன்று தெரிநதா யினிசசோம காநத வவனகோ னடததியது
மனற வறிவா யெனககிளப்பான மறுவில பிருகு மாதவனே.

(இ - ள) சோமகாநதராசனே! அககாலததிலே, பலியெனபவன் பெருந்தவஞசெயது கணேசப்பெருமானுடைய திருவருளையடைநத புடபகனைததையே, இககாலததில உலகினா வஙகாளமெனக கூறுகிறடா. அவனபெறற வரததை (யான்) சொலல நனகுணாநதனை. இனி அததிரிபுரன அரசுபுரிநததையும பொருநத வுணா வாயெனறு பெருநதவசியாகிய பிருகுமுனிவா சொலவாராயினா எ - று (உரு)

திரிபுரன வரமபெறுபடலம முறறிறறு.

ஆகந் திருவிந்தம் - ககூாக

---

# திரிபுரனரசாட்சிப்படலம்.

அரியுகைத தருளு நால்வா யைஙகையா றனைய தானக
கரிமுகன் கருணை பெற றுக களிததபி னுறறல சானற
திரிபுரன யாது செயதான செபபென வியாதன கேடபப
பெரியதுண டிகைசே ரஙகைப பிரமனமே லுரைககப புககான

(இ - ள) வல்லமைமிகக திரிபுரன, சிஙகவாகனததைச செலுததியருளும் தொஙகிய வாயையும ஐந்துகரஙகளையும ஆறுபோனற மதபபெருககையுமுடைய யானைமுக விநாயககடவுள கிருபையைபபெறறு மகிழநதபிறகு யாதுபுரிநதனன? சொலலவேணடுமென வியாதமுனிவன வினவ, பெரிய கமணடலமபொருநதிய அழகிய கையையுடைய பிரமதேவன சொலலததொடஙகினன எ - று (க)

கணடவா வியககு மநதக கணேசமா புரததி லனறுன்
கணடகச சிலையாற கோயில கணடலங கரிததுக கணுற்
கணடதெய வணண மநத வணணமே கணேச மூாததி
கணடகச சிலையாற செயது காதலாற பதிட்டை செயதான.

(இ - ள.) கணடவாகள களிககததகக அநதச் சிறநத கணேசபுரததிலே, அந்தப பெலியெனபவன, வயிரககறகளால திருககோயிலமைதது அழகுசெயது, தான கணுற்றறிசிதத தெயவணணமோ அவணணமே கணேசபபெருமானை வயிரக கலலாறசெயது ஆசையோடு அவ்வாலயததிற பிரதிட்டைசெயதனன எ - று

கண்டகம - வயிரம. (உ)

நிததலும் பூசை யாற்றிச சிலபக னீஙகிப பினனாப்
பைததவா ருதிசூழ் மணணிற பாாததியா தமமோ டேறறுப்
பததியி னிறைஞசி னுாககுப பணிகொடுத திறைஞசா தாரைச்
செறறுவேற றுருவி னேடும் விணகொளச செலுததி னுனே.

(இ - ள்.) நாடோறும் பூசைசெய்த சிலதினங்கள் கழிந்தபிறகு, பசியகடல் சூழ்ந்த பூமியில் அரசர்களோ டெதிரொத்த பக்தியோடு டணிந்தவர்களுக்குப் பணி கொடுத்து, பணியாதவர்களைக்கொன்று வேற்றுவடிவுடன ஆகாயத்தை (இடமாகக்) கொள்ளும்படி அனுபவித்தன எ - று. (௯)

இடங்கொள்பா தலத்தி னேகி யெரிமணிச் சூட்டுப் பேழ்வாய்
விடங்கொள்வா லெயிற்றி னோர்கள் விடங்களி லவாக ளாகி
மடங்கவன் போரில் வென்று மணிமுதலான செல்வ
மடங்கலுங் கவர்ந்து கைக்கொண் டவனியின் மீண்டு போந்தான்.

(இ - ள்) இடங்கொண்ட பாதலத்திற்சென்று, பிரகாசிக்கின்ற மாணிக்கம் பொருந்திய உச்சிக்கொண்டையையும், பிளவுபட்ட வாயையும், விஷத்தையும், வெள்ளிய பல்லையுமுடையவர்கள், விஷமில்லாதவர்களாகி மடங்கும்படி வலிய போரிலேவென்று, இரத்தினமுதலிய செல்வங்கண முழுவதையும் கிரகித்து உடன் கொண்டு பூமியில் திரும்பவும் வந்தனன் எ - று (௪)

திக்கினும் பாதலத்துஞ் சிறந்தவா னிலத்துஞ் சாலத்
தொக்கதா னவர்க ளெல்லாந் துன்னினா வணங்கிப் போற்ற
மிக்கருட் பார்வை நல்கி வேண்டிய சிறப்புஞ் செய்து
தக்கதன் பதாதி யாக்கிக் கொண்டனன் றறுகண் வீரன்

(இ - ள்) திசைகளிலும், பாதலத்திலும், சிறந்த ஆகாயத்திலும் மிகுதியாகக் கூடிய அசுரர்கள் யாவரும் ஒன்றுகூடி வணங்கித் துதிசெய்ய, மிக்க கிருபாநோக்கஞ் செய்து, வேண்டிய சிறப்புகளைத்தந்து, தகுதியாகிய தன் சேனையாகச்செய்து கொண்டனன் அஞ்சாமைத் தன்மையுடைய அத்திரிபுரன் எ - று

பதாதி - காலாட்சேனை தறுகண் - அஞ்சாமை. (௫)

விசிமுரசியம்பப் பேரொலியும் விசிகமு மழுவுந் தண்டு
மசியுமற் றெவையு மேந்தி யவுணர்க ணெருங்க வில்லா
நிசியெனப் பருங்கு மொய்ப்பப் ஞேரெலைப் புவியின் நீங்கிப்
பசியபொன் னகரிற் கற்பப் பனிமலர்ச் சோலை புக்கான்.

(இ - ள்) இழுத்துக்கட்டிய பேரிகை யொலிசெய்யவும், வேலாயுதமும், அம்பும், மழுவும், தண்டமும், வாளும், மற்றெல்லா ஆயுதங்களுந் தாங்கி, அசுரர்கள் அமாவாசைத் திரவுபோலப் பக்கலில் நெருங்கிவரவும், வினைவாகப் பூமியினின்று சென்று, பசிய பொன்னகரத்திலே குளிர்ந்த கற்பகமலர்ச்சோலையிற் புகுந்த னன். எ - று

திங்களில்லா நிசி - சந்திரன் இல்லாத இரவு இஃதிருளை விசேடிக்கக் கூறியது. அமாவாசியையெனக் ஞெரேல - விரைவுகுறிப்பதோ ரிடைச்சொல. பொன்னகர் - தேவநகரம் (௬)

மைந்துறு வீர ராங்கு வைகிய சிலதி னோடு
நந்தன வனத்தைச் சாட நவையறு தேவ தூதர்
சித்திரற் கோடிச் சொன்னு ரெய்திய வவுணர் கோனு
மூந்தினன் றாதா தம்மை யவருமபோ யுரைக்க லுற்றார்.

(இ - ள்) வலிமைபொருந்திய வீரர்கள் அங்கேயிருந்த சிலதரோடு நந்தனவனத்தை யலைப்ப, குற்றமற்ற தேவதூதர்கள் இந்திரனுக்கு விரைந்துசென்று (விடயத்தை) கூறினார்கள். ஆங்கடைந்த அவுணர் தலைவனான திரிபுரனும் தூதுவர்களைச் செலுத்தினன். அத்தூதுவருஞ்சென்று (இந்திரனுக்குச்) சொல்லலானார்கள். எ - று.

மைந்து - வலிமை சிலதர் - ஏவலாளர். (௭)

எரியுமிழ் குலிச வேற்கை யிந்திர வெங்கள் கோமான்
திரிபுர னிங்குப் போந்தான் றெரிசனஞ் செய்ய வம்மோ
புரிவொடும் வாரா யாகிற் பொன்னுல காட்சி நீக்கிப்
பரிவுறத் தரும லோகம் புகுத்துவான் படர்ந்து நின்றான்.

(இ - ள்) தீயைச் சொரியும் வச்சிரவேலையேந்திய இந்திரனே! எங்கள் தலைவனான திரிபுரன் இங்கேவந்துள்ளான். அவனைத் தெரிசனஞ்செய்ய வருவாயாக. ஆசையோடு (அங்ஙனம்) வாராதிருப்பையாயின், (உன்னுடைய) பொன்னுலக ராசரீகத்தை யொழித்து, துன்பமடையும்படி இயமதருமலோகத்திற் புகுத்தும்படி வந்திருக்கின்றான். எ - று (௮)

அல்லதூஉ மடுபோ ராற்று மாற்றலுண் டாயின் வல்லே
வல்லபல் படையி னோடும் வருகவென் றுரைத்தா னியாது
சொல்லுவ தென்றார் கேட்டுத் தொடிக்கரந் தூணிற் றாக்கி
நல்லதென் றிலங்க நக்கு நாமவேற் குலிச வேந்தன்.

(இ - ள்) அன்றியும், (எம்மிறைவனோடு) கொல்லுகின்ற போர்புரியும் வல்லமையுண்டாயிருக்குமாயின், விரைவில் வலியமைந்த பலபடைகளோடும் (போர்க்கோலமாய்) வருகவென்று கூறினன் (ஆதலின்) நீ சொல்லுவதியாதெனக் கேட்டனர். அச்சத்தைச்செய்யுங் குலிசவேலேந்திய இந்திரன்கேட்டு, தொடியணிந்த கையைத் தூணிலடித்து நல்லது! என்றுவிளங்கச் சிரித்து எ - று. (௯)

கடிமலர்க் கமலம் பூத்த காடெனக் கண்கள் சேப்ப
முடிவது தேரா னாகி முற்றுபோர்க் கடுத்தே னென்னா
விடியிடித் தென்னச் சொல்லா வியம்பிமற் றவரைப் போக்கிக்
கொடிநகர் முரசிற் சாற்றிக் கொழும்படை யெழுக வென்றான்.

(இ - ள்) வாசந்தங்கிய தாமரைமலர்விகசித்தகாடுபோலக் கண்கள் சிவக்க, முடிவது (இன்னதென்று) உணராதவனாகி, முடிவாகிய போருக்குவந்தேனென்று, இடியிடித்தாற்போலக் கொடுஞ்சொல்லாற்கூறி, அத்தூதுவரை யனுப்பிவிட்டு, துவசங்கட்டிய நகரத்தில் முரசறைவித்து, செழியபடையெழுக வெனக்கூறினன் எ - று.

போர்க்கடுப்பேனெனக் கூறவேண்டியிருப்ப, அடுத்தேனென்றது துணிவு பற்றிவந்த காலவழுவமைதி (௧௦)

விடுத்திடுந் தூதர் மீண்டு விண்ணவர் கோமான் போர்க்கிங்
கடுத்ததேல் கருதி நின்று களையவென் றிறைஞ்சிச் சொன்னார்
தொடுத்தபூங் கழற்கால் வீரன் றுணைப்படு மெரியி னெய்யை
மடுத்தென வெகுளி பொங்க வரவினை நோக்கி நின்றான்.

(இ-ள்.) விடுத்த தூதுவர்கள் திரும்பிவந்து, தேவர்கள் தலைவனாகிய இந்திரன் இப்பொழுது போருக்குவருதலை நினைத்திருக்கின்றானென்று பணிந்துசொன்னார்கள். அழகிய வீரக்கழலணிந்த காலையுடைய வீரனாகிய திரிபுரன் கிளைக்கின்ற நெருப்பில் நெய்யைப் பெய்தாற்போலக் கோபமதிகரிக்க. (இந்திரன்போருக்கு) வருகையை எதிர்பார்த்திருந்தனன். எ-று.

துணர்-பூங்கொத்து, துணர்படுமெரி யென்றதற்குக் கிளைத்த நெருப்பெனக.

படையொடு படைக ளனைத்தும் பாங்குற மணிப்பொற் கோயிற்
கடைகழன் றமரர் கோமான் களிற்றரசி வர்ந்து கொற்றக்
குடைகொடி மிடைய வார்ந்த குருமயிற் கவரி துள்ள
வுடைகட லோதை யென்ன வொலிமுர சியம்பச் சென்றான்.

(இ-ள்.) நால்வகைச் சேனையும் ஆயுதங்களோடும் பக்கத்திற் பொருந்த, அழகிய பொன்னாலாகிய அரண்மனை வாயிலின் கடையைவிட்டு, யானைவேந்தாகிய ஐராவதத்திலாரோகணித்து, வெற்றிக்குடைகள் கொடிகள் நெருங்கவும், பொருந்திய நிறமமைந்த மயிற்பீலியுஞ் சாமரையுந் துள்ளவும், உடைபட்ட கடலொலிபோல ஒலிக்கின்ற பேரிகைமுழங்கவும், தேவராசனாகிய இந்திரன் (போர்க்கோலமாகிச்) சென்றனன். எ-று. (௬௨)

கரணங்க ளுயிர்க்கு வாய்ந்த காட்சிபிற் றனக்கு வாய்ந்த
வாரணங்கள் விசித்த வாகை யமரர்கண் மருங்கு சூழ
விரணங்கொ ளயில வெள்வே லிந்திர னெய்த லோடுந்
திரணங்கண் டனைய னாகித் திரிபுர னமரி னேற்றான்.

(இ-ள்.) உயிர்க்குக் கரணங்கள் துணையாகப் பொருந்தியகாட்சிபோல, தனக்குப்பொருந்திய காவல்களைக்கட்டிய உடலையுடைய சேனைகள் பக்கலிற்சூழ, இரணத்தைக்கொள்கின்ற ஒள்ளியவயிர வேலேந்திய இந்திரன்(போருக்கு) வரவும், திரிபுரன் திரணத்தைக் கண்டாற்போன்றவனாகிப் போர்செய்யுங் கருத்தில் எதிர்த்தனன். எ-று.

"கரணங்க * * * இந்திரன் எய்தலோடும்" என்றது உயிர்க்கு அந்தக்கரண புறக்கரணங்கள் துணையானவாறு, இந்திரன் தன் பரிவாரங்களாகிய தேவர்கள் புடைசூழ்ந்து துணைவரவுமென்பதாம். (௬௩)

புண்ணிய மோடு பாவம் பொருதென வவுணர் சேனை
விண்ணவ ரோடு போ ராற்றி மிடல்சிறி தொழிய நோக்கிப்
புண்ணிடை வேலிட் டன்ன பொருமெழு மனத்த னாகித்
திண்ணிய வாமா வூர்ந்து திரிபுர னூழில் செய்தான்.

(இ-ள்.) புண்ணியத்துடன் பாவமானது போர்செய்தாற்போல அவுணர் சேனையானது தேவர்களோடு (எதிர்த்துப்) போர்செய்து, சிறிது வலிமையொழியத் திரிபுரன் பார்த்து, புண்ணில் வேற்படையைச் செருகினாற்போல, பொருமெழுந்த மனமுடையவனாகி, வலியதாகிய குதிரையை வாகனமாகக்கொண்டு (தேவர்சேனையை) கொல்வானாயினன். எ-று.

நூழில் என்பதற்கு நூழிலாட்டெனக்கொண்டு, தன்மெய்புதைந்த படையைப்பறித்து மாற்றாரை யெறிந்ததெனக் கூறினுமாம். (௬௪)

அற்றன படையோ டங்கை யறுந்தன தாரோ டாகம்
மிற்றன கழலோ டொண்டா ளிறந்தன முடியோ டுச்சி
செற்றின குடரோ டூரல் சிந்தின வலியோ டேகம்
முற்றிய வமரர் சேனை முரிந்தன வவுணன் றாக்க.

(இ - ள்) அவுணனாகிய திரிபுரன் தாக்குதலால், ஆயுதங்களோடு அழகிய கைகளற்றன. மாலையோடு மார்புகள் அறுந்தன. வீரகண்டா மணியோடு ஒள்ளிய கால்கள் இறுபட்டன கிரீடத்துடன் சிரங்கள் அழிந்தன குடலுடன் நரல்கள் விழுந்தன வலிமையுடன் விடாமுயற்சிகள் சிந்தின. தேவசேனைகள் (இவ்வகையாக) முடிவுற்றன. (தப்பினவை) முரிந்தோடின எ - று. (கரு)

மந்தரங் கலக்கப் பட்ட வாருதி யனைய சேனை
யிந்திர னோக்கி நோனா னெரியெழ விழித்துச் சீறிக்
கந்தடு களிநல் யானை காலெனக் கடுக வுந்தி
வெந்திற லவுண னோடு வெய்யபோர் விளைத்தா னன்றே.

(இ - ள்) மந்தரகிரியால் கலக்கப்பட்ட பாற்கடலைப்போன்ற (தேவர்) சேனையை இந்திரன்கண்டு மனம்பொறாதவனாகி, (கண்களில்) தீசொரியக் கோபித்து, கட்டுத்தறியைக் கோபிக்கின்ற நல்லமதச் செருக்குடைய ஐராவதமென்னும் பட்டத்து யானையைக் காற்றுப்போல விரைந்துசெலுத்தி, வெவ்விய வலியுடைய திரிபுரனுடன் கொடும்போர் புரிந்தனன் எ - று. (கசு)

தொடுத்தபல் வாளி விட்டான் றோமரங் குந்த நேமி
விடுத்திடும் பாச மோச்சும் வெய்யவா ணுசலந் தண்டந்
தடுத்தனன் மந்தி ரங்க டமையுநேர் விடுத்துக் கவ்வி
யுடுத்திரள் சிந்த வார்த்திட் டுந்தினன் பரியைத் தீயோன்

(இ - ள்) பலபாணங்களைத் தொடுத்தனன் இருப்புலக்கை ஈட்டி சக்கரம் இவற்றைவிட்டனன் பாசத்தை வீசினன் கொடியவாள் முசலம் தண்டம் இவற்றைச் செலுத்துவான் கொடியோனாகிய திரிபுரன் நட்சத்திரத்தொகுதி சிந்தும்படி ஆர்ப்பரித்து, இந்திரனேவிய அஸ்திரங்களைத் தடுத்து அஸ்திரங்களையு நேரேவிடுத்துச் சாய்த்து, குதிரையைத் தூண்டினன் எ - று (கஎ)

பாய்பரி தனது முன்கால் பணைக்கைமால் யானை நெற்றித்
தோய்தர நாட்டி லோடுந் துணைவனை யவுணர் கோமான்
காய்கதிர் வாளா லோச்சிக் கடவுளர் கோமான் செங்கை
வாய்தரு வயிர வேலு மானமு நிலத்தில் வீழ்த்தான்.

(இ - ள்) பாய்ந்துசெல்லுங் குதிரையானது தன்னுடைய முன்காலை, பனைபோன்ற துதிக்கையுடைய பெரிய ஐராவதத்தின் நெற்றியிற் படும்படி வைத்தவுடனே, அவுணர்தலைவனான திரிபுரன் காய்கின்ற கிரணத்தையுடைய வாட்படையால் வெட்டி, தேவராசனாகிய இந்திரனுடைய செங்கையிலுள்ள வச்சிரவேலையும் மானத்தையும் நிலத்தில் வீழ்த்தினன். எ - று (கஅ)

கந்துகங் கடுக மீட்டக் கந்துக னெளிந்து தாழ
வுந்திநீ ணிலத்தில் வீழ்ந்த வுருப்பவிர் குலிசங் கைக்கொண்

டந்தின்மேல் வந்த வேழ மத்தகந் தடிந்து வீரஞ்
சிந்தினன் றீயோன் வல்லே தேவர்கோ னிலத்திற் பாய்ந்தான்.

(இ - ள்.) கொடியோனாகிய திரிபுரன் குதிரையை விரைந்து திருப்பி அக் குதிரையை நெளிந்து தாழச்செலுத்தி, நெடியபூமியில் விழுந்த அழகுற்று விளங்குகின்ற வச்சிரத்தைக் கையிற்கொண்டு, அவ்விடத்தில் மேலுற்றுவந்த ஐராவதமென்னும் யானையின் மத்தகத்தை வெட்டி வீரத்தை யழித்தனன். உடனே தேவர்கள் தலைவனான இந்திரன் பூமியிற் குதித்தனன் எ - று.

குலிசம் - வச்சிராயுதம் (௧௯)

உழுந்துகண் ணடியின் மேலா லுருளுமு னெழுந்து தாவிக்
கொழுந்துகொள் வீரத் தோடுங் குதிரைமே லிருந்தான் றனைச்
செழுந்தனிக் கடகக் கையாற் சென்னியிற் புடைத்தா னேறா
விழுந்துவந் தனைசெய் நோனான் வேந்தனமூர்ச சித்தான் றீயோன்.

(இ - ள்) தேவர்கள் பணிந்து வணக்கஞ்செய்யுஞ் சிறந்த பாதங்களையுடைய தேவேந்திரன், உழுந்தானது கண்ணடியினபேரிலே உருளுதற்கும் முற்பட எழுந்து பாய்ந்துசென்று, மிகுந்தவெற்றியோடும் புரவியின்பேரிலிருந்த திரிபுரனை, செழியவொப்பற்ற கடகமணிந்த கையினாலே தலையிலடித்தனன் கொடியோனாகிய திரிபுரன் மூர்ச்சித்தனன் எ - று

புடைத்தல் - மோதுதல்.

உழுந்துகண்ணடியின மேலாலுருளுமுன னென்றது நிகழ்ச்சியின விரைவினை விளக்கக்கூறியதாம். (௨௦)

மூர்ச்சைவிட் டொழிந்த பின்னா முடிகெழு மமரர் வேந்தன்
றூர்ச்சிறை மார்பத் தோடித் தாக்கின னவுணு மூர்ச்சித்
தோர்ச்சியுற் றுணியென் னோடு மொண்படை யொழிந்து மல்லுப்
போர்ச்செயல் விளைக்க வென்றான் பொருகென வவுணன் சொல்வான்.

(இ - ள்.) (திரிபுரன்) மூர்ச்சைதெளிந்தெழுந்தபிறகு, விளங்குகின்ற கிரீடமணிந்த தேவேந்திரனுடைய மாலையணிந்த மார்பிற்பாய்ந்து மோதினன் அவ்விந்திரனு மூர்ச்சையடைந்து அதுதெளிந்து யோசித்து நீ யென்னோடும் ஆயுதப்போரை யொழித்து மற்போர்புரிக வென்றனன் அவுணனாகிய திரிபுரன் (அதற்குவிடையாக) விரைந்து கூறுகின்றான். எ - று. (௨௧)

பதங்கமோ வடவைத் தீயைப் படாசிறைக் காலிற் சிந்துங்
கதங்கடா மெனக்கு நீமன் கருத்தினு ளழிந்தா யனுசே
விதங்கெடா திருக்க வேண்டி னிருநிலத் திருக்கை யீந்தேன்
மதங்கொளா தரங்குச் சென்று வாழ்க்கநின் கிளையோ டென்றான்.

(இ - ள்) வடவாமுகாக்கினியை ஒருபதங்கமோ தன்னுடைய வீசுகின்ற சிறகின் காற்றினாலழிக்கும். கோபத்தைச் சிந்தும் எனக்கு நீ மிகவும் மனதில் வருந்தினும் அஞ்சவேண்டாம். நன்மையழியாதிருக்க வேண்டுமோயின், பெரியபூமியில் (உனக்கு) வாழ்க்கையைக் கொடுத்தேன். கெர்வப்படாமல் அங்கேபோய் உன் உறவினரோடு வாழக்கடவையென்று கூறினன். எ - று.

பதங்கம் - விட்டில்; விளக்கவிக்கும் ஓர் சிறுபூச்சி

வடவைத்தீ - பெண்குதிரை முகம்போல வடிவுள்ள பெருநெருப்பு. இது கடலானது எல்லைகடவாதிருக்க இறைவனால் அங்கு நியமிக்கப்பட்டது. (உஉ)

கூறுதா னவனை வானிற் கொற்றவ னோக்கிப் புன்னை
வேறுபோ தகமழைத்தல் பற்றி மெலிந்துநின் னுருகக் கொண்டிவ்
வாறுநீ யுரைத்தா யுன்றன் வடிவெலா மீந்து சுற்றும்
பாறுணா வளிப்பே னென்று பகர்ந்துதோள் புடைத்தார்த் திட்டான்.

(இ - ள்) அவ்வாறு சொல்லிய திரிபுரனைத் தேவேந்திரன் பார்த்து, உன்னை வேறுகைப்பட்டபோருக்கு அழைத்ததுபற்றி (என்னை)த் தளர்ந்தவுருக்கொண்டு இவ்வண்ணமாகச் சொல்லினை. உன்தேக முழுவதையுமரிந்து, சுற்றிலும் பருந்துகளுண்ணும்படி (இரையாகக்) கொடுப்பேனென்று கூறி, புயத்தைத்தட்டி ஆரவாரித்தனன் எ - று. (உங)

செருவினிற் கிளருந் திண்டோட் டிரிபுரன் மல்லு நேர்ந்து
குருதிகொப் புளிப்பத் தானுங் கோவமர் கோனைத் தாக்கி
பொருதழிந் தானைப் பற்றிப் பொருக்கெனக் கரத்தாற் றாக்கி
யிருவிசும் பிடைவட் டித்து விட்டன னிமைக்கு முன்னர்.

(இ-ள்) போரிற் பொருங் வலியதோளையுடைய திரிபுரன் மற்போர்செய்ய விணங்கித் தானும் உதிரங்கொப்புளிக்கும்படி தேவேந்திரனையடித்துப் போர்செய்கையில், அவன்காலைப்பிடித்து இமைப்பொழுதின் முன்னரே விரைந்துகையினாலெடுத்து, பெரிய ஆகாயத்திற் சுழற்றிவிடுத்தனன் எ - று

கோவமர்கோவென்றது தேவலோகத் தலைவன், இந்திரன்
செருவினிற்கிளருந் திண்டோள் - போரென்றாற் பூரிக்குந்தோள். (உச)

அந்தர நிவந்த சோலை யலர்பசுங் கோட்டி றாலகண்
மந்திக ளுகளுந் தோறுங் கிழிந்துவார் மதுநீர் பாய்ந்து
செந்தினை விளைக்குஞ் சாரற் சிலம்புசூ ழிமையப் பாங்க
ரிந்திரன் வீழ்ந்து மூர்ச்சித் திறந்தவன் போற்கி டந்தான்.

(இ - ள்) ஆகாயமளாவிய சோலையிலே பரந்த பசிய கொம்புகளிலுள்ள தேன்கூடுகளை குரங்குகள் புரளுந்தோறுங் கிழிபட்டு, ஒழுகுகின்ற தேனொழுக்கானது பாய்ந்து செவ்விய தினைப்பயிரை விளைக்கும் சாரலையுடைய மலைகள்சூழ்ந்த இமயமலையின் பக்கலில், இந்திரன்விழுந்து மூர்ச்சையுற்றுச் செத்தவன்போலக் கிடந்தனன் எ - று

இறால் - தேன்கூடு (உரு)

தெம்முனை சாய்க்குந் தன்கோன் றிரிபுரற் குடைதல் கேட்டுப்
பொம்மலென் குழல்கள் சோரப் புலோமசை நிலத்தில் வீழா
வம்மவோ வம்ம வோவென் றழுதுய ருழந்து தேவர்
தம்மொடு மிரியல் போனா டமணிய வுலக நீத்து.

(இ - ள்) பகைவரைப் போரில் வெல்லுந் தன்கணவனாகிய இந்திரன் திரிபுரனுக்குத் தோல்வியுற்றதைக் கேள்விப்பட்டு, பூரித்தமெல்லிய கூந்தலினின்று தேன்

சொரிய இந்திராணி பூமியின்மேல்விழுந்து, அம்மவோ! அம்மவோ! என்று புலம்பித் துன்புற்று, தேவர்களோடும் பொன்னுலகத்தை விடுத்து (அவன்வீழ்ந்த விடத்துக்கு) ஓடிப்போயினள். எ - று (௨௬)

நிலைப்பொழி யமர ரெல்லா நேரிழை சசியுந் தன்னோடு
மிலைப்புடன் களைதறுப் போகி யிந்திரன் கிடப்பக் கண்டு
தலைப்படு மெழுத்தோ வென்று தளர்வுதீர்த் தவனோ டந்த
மலைப்புழை முழைகள் டோறும் வைகினா கரந்து மாதோ.

(இ - ள்.) இருக்கையைவிடுத்த தேவர்கள் யாவரும், இந்திராணி தேவியோடுஞ்சென்று, இந்திரன் இளைப்புடன் களைத்துக்கிடக்கக் கண்டு, தலையிலெழுதிய வெழுத்தோவென்று, அவன் மனத்தளர்ச்சியை யொழித்து, அவ்விந்திரனுடன் அந்த இமயமலையின் புழைகளாகிய குகைகளிலெல்லாம் ஒளிந்து வாழ்ந்தார்கள். எ - று. ()

செங்கள நீங்கி யந்தத் திரிபுர னொன்கு கோட்டு
வெங்கயத் திவாந்து வெற்றி முரசொடு * வரைகள் விம்மப்
பொங்கெழின் மாட மேடை பொருந்துபொன் னகரம் புகுந்து வேந்தன்
றங்கிய கோயில் சார்ந்து தவிசினில் வீற்றிருந் தானன்றே.

(இ - ள்) அந்தத் திரிபுரன் போர்க்களத்தையொழிந்து, வெவ்விய நான்கு கொம்புகளையுடைய ஐராவதத்தின்மேலேறிக்கொண்டு வெற்றிமுரசும (வெற்றிச) சங்கமும் ஒலிக்க, மிக்க அழகையுடைய மாடங்களும் மேடைகளும் பொருந்திய பொன்னகரத்திற் பிரவேசித்து, இந்திரனவசிக்கும் கோயிலையடைந்து, சிங்காசனத்தில் வீற்றிருந்தனன். எ - று. (௨௮)

திரம்பிய களிய னாகி நீடுவான் குடிக ளெல்லாம்
பரம்புதன் னாணை கொள்ளப் பயிலுமா முரசிற் சாற்றி
யரம்பையா நடனஞ் செய்ய வமைந்துநங்கின் னரர்கள் வீணை
நரம்புளர்ந் திசைகேட்க நலத்தக வரசு செய்தான்.

(இ - ள்) திரம்பிய களிப்புடையவனாகி, தொன்மைவாய்ந்த சிறந்தகுடிகள் யாவரும் பரவிய தனகட்டளைக்குட்பட்டு வாழும்படி பேரிகையறைந்து, அரம்பா ஸ்திரீகள் நடனஞ்செய்யவும், கின்னரர்கள் வீணையின் நரம்புகளைத் தடவி இசைப் பாட்டுகளை யெழுப்பவுங் கட்டளையிட்டு, நன்மையாக அரசுபுரிந்தனன். எ - று.

களியன் - களிப்புடையவன். (௨௯)

சிலபகல் கழிந்த பின்னாத் திசைமுக னுலகஞ் சார்ந்தா
னலரவன் வருவ தெண்ணி யாழியா னுலகம் புக்கான்
மலரவன் றனைக் கொண்டு மாலுமவை குந்த நீங்கிப்
புலவர்கள் கரந்து வைகும் பொன்னிம யத்தைச் சார்ந்தான்.

(இ - ள்.) சிலதினங்கள் சென்றபிறகு, (திரிபுரன்) பிரமனுடைய சத்திய லோகத்தை யடைந்தனன். பிரமதேவன் (அவன்) வருவதை யோசித்து, சக்கராயுத

---

* முரசொடுவரைகள் விம்மவென்றும் பாடம். வரைகள் - மலைகள் தம்மைச் சிறகரிந்த இந்திரனின்மையின் தாம் சுகப்பட்டனவென மலைகள் பூரித்தனவென் பதாம்.

மேந்திய விண்டுமூர்த்தியின் வைகுந்தலோகத்திற் சென்றனன். அந்தத் திருமாலும் பிரமதேவனை யுடன்கொண்டு வைகுந்தத்தைவிட்டு, தேவர்கள் மறைந்துவசிக்கும் பொன்மயமான இமயமலையை யடைந்தனன். எ - று. (ரு0)

சார்ந்தவன் பிரம னிலலாச சத்திய வுலகை நோக்கி
யார்ந்ததன் னாணை யங்கு மமைத்துவை குந்தத் தெய்தி
யூர்ந்திடு மணையி னானு மொழிந்தமை யுணாந்திட் டாங்கு
கூர்ந்ததன் னாணை வைத்துக குவலயத் திறங்கினானே.

(இ - ள்) (அவ்வாறு) சேர்ந்த திரிபுரன் பிரமதேவனில்லாத சத்தியலோகத்தைப் பார்த்து, பொருந்திய தன் ஆக்கினையை அங்கே (நடக்கும்படி) நிறுத்தி, வைகுந்த நகரமடைந்து, திருமாலுஞ் சென்றமையை யறிந்துகொண்டு, அவ்விடத்தும் கூர்மையான தன் ஆக்கினையை நிலைநிறுத்திவிட்டு பூமிக்குவந்தனன. எ - று.

ஊர்ந்திடுமணையினான் - நகர்ந்துசெல்லும் பாம்பைச் சயனமாகவுடையவன்; திருமால் (ருக)

வரமபல கொடுத்த வைங்கை வள்ளலைப் பூசை யாற்றிப்
பரமபர வரமுன் றந்த பாழியம புரிசை மூன்று
முரமபெற வினறு நாயேற குதவுக வென்று நின்றான
புரமபல வளத்தி னோடும பூத்தன விசும்பி னம்மா

(இ - ள.) பலவரங்களை யருளிய ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகப் பெருமானைப் பூசைசெய்து, பரத்துக்குமபரமானவனே! முனனே (எனக்கு) வரமாகக்கொடுத்த பெரிய அழகிய மும்மதில்களையும் வலிமையோடு இப்பொழுது அடியேனுக்கு அருளபுரிகவென்று நின்றனன (திரிபுரன) அப்பொழுது ஆகாயத்திற் பலவளங்களோடும் முப்புரங்கள் தோனறின எ - று. (ருஉ)

வேறு

கறபகப பொதும்பருங காம தேனுவும்
பொறபமா நிதிகளும பொருவி லாதபல
லறபுதப பொருளகளு மளவில செலவமும
முறபவித தனவுறு புரஙகண மூனறுமே.

(இ - ள்) கற்பகச்சோலையும், காமதேனுவும, அழகுபொருந்திய (சங்கநிதி) பதுமநிதிமுதலிய) நிதிகளும், ஒப்பில்லாத பல அறபுதபபொருளகளும, எல்லையில்லாத செல்வமும, பொருந்திய முப்புரங்களிலும உற்பவித்தன. எ - று.

நிதி - எடுக்குந்தோறுங குறைபடாதது (ருரு)

இந்திர னுலகமு மெணைத்து மாக்கிய
வந்தண னுலகமு மாழி யேந்திய
சுந்தர னுலகமுந துணையு றுவெனின்
பிநதொரு புரங்கா பேசற் பாலதோ.

(இ - ள்) இந்திரலோகத்தையும்பிறலோகங்களையும் படைத்தபிரமனுடைய சத்தியலோகமும், சக்கராயுதமேந்திய அழகுவாய்ந்த திருமாலினுடைய வைகுந்த

லோகமும் (முப்புரங்கட்குச்) சமானமாகாவெனின் வேறொரு நகரமானது ஒப்பாகச் சொல்லுந் தன்மையையுடையதோ? எ - று.

அந்தணன் - பிரமன். அழகிய தன்மையையுடையோன். (௩௪)

தடையற வெங்கணுஞ் சாரவல்லவா
யுடையவன் முத்தியை யுறும்ப போகலா
லிடையழி வின்மையி னெயில்க ணூன்றுமுன்
னடைதரு சூக்கும வாக்கை போன்றவே.

(இ - ள்) எல்லாவிடங்களிலுந் தடையின்றிச் செல்லவல்லமையுடையனாகிய திரிபுரன் முத்தியையடையும் அக்காலத்திலல்லாமல், இடையிலே அழிவில்லாமையால், மும்மதில்களும் முன்னேயடைந்த சூக்கும தேகத்தை யொத்தன எ - று.

வாய் - வழி. வல்லவாயென்றதால் வல்லமையென்றும். (௩௫)

கரும்பொனின் வெண்பொனிற் காமர் செம்பொனிற்
றரும்பெரு முப்புர முயிர்த்த மக்கெலாம்
விரும்பிய போகங்கள் விளைத்து நல்கித
மரும்புதல் செய்யுமூன் றுக்கை யும்பொரூஉம்

(இ - ள்) கரும்பொன்னினாலும், வெண்பொன்னினாலும், அழகிய செம்பொன்னினாலுஞ் செய்துள்ள பெரிய திரிபுரங்களும், உயிர்கட்கெல்லாம் இச்சித்த போகங்களை யுண்டுசெய்து, நல்ல இதத்தையும் உண்டாக்குகின்ற மூவகைத் தேகத்தையும் ஒத்திருக்கும் எ - று.

கரும்பொன் வெண்பொன் செம்பொன் என்பன முறையே இரும்பு வெள்ளி பொன் என்பனவாம். மூன்றுக்கைகள் - தூலதேகம் சூக்குமதேகம் காரணதேகமென்பன. (௩௬)

திண்டிற லுடையவன் றிரிபுரப்பெயர்
கொண்டவன் றிரிபுரங் குலவி நின்றமை
கண்டனன் கரையறு களிப்பி னீடினன்
னண்டர்கள் பிரான்றிரு வருள்வ ழுத்தினன்

(இ - ள்) மிக்க வல்லபமுடையவனாகிய திரிபுரனென்னும் பெயருடையவன் திரிபுரங்கள் சமைந்து நின்றமையைக் கண்டனன், எல்லையற்ற ஆசையதிகரித்தனன். தேவர்களுக்குத் தலைவராகிய கணேசப்பெருமானுடைய திருவருளைப் பணிந்தனன். எ - று. (௩௭)

தனையர்கண் மூவரைத் தன்ம னத்தினா
னினையுமுன் றோற்றின னவர்க்கு நீடிய
வனையமுப் புரமுமூன் றுக வைகிய
வனைபுக ழுலகமும் வழங்கி னானரோ.

(இ - ள்) மூன்று புத்திரர்களைத் தன் மனத்தினாலே நினைக்குமுன்னே படைத்தனன். அவர்களுக்குப் பெரிய அந்தத் திரிபுரங்களையும் மூன்றாகவிருந்த புகழ்பொருந்திய உலகத்தையுங் கொடுத்தனன். எ - று.

மூன்றுக வைகிய வுலகமென்றது சுவர்க்க மத்திய பாதலமென்னுந் திரிலோகங்களை. (௩௮)

செய்பவர்கள் மனத்தில் விரும்பிய எல்லாப்பொருள்களையும் (விரும்பியவகையே) கொடுத்து, அவர்கள் செல்லவிரும்பிய விடத்திற்குச் சென்று (இவ்வகையாக) இருந்து, நீங்காத பகைஞர்களைக் குலத்தோடும் அழியும்படி யழித்து, ஆகாயத்திலிருக்குந் தேவர்களஞ்சும்படி யிருந்தன. எ - று. (௬௫)

நீடுமிரு வரைச்சண்டன் பிரசண்ட னெனுமைந்தரின் வேறுவே றாகக்
கோட்டமில்சண் டனைப்பிரம வுலகத்து மாதவனுறை வைகுந்தத் தனி
வீட்டுபுகழ்ப் பிரசண்டன் றனையுமவர் போலிருப்ப வேவிப் பின்னர்
மோட்டிளமென் முலைமனைமா துடன்கூடி யொருமகனை முகிழ்த்தானன்றே.

(இ - ள்) சண்டன் பிரசண்டனென்று நீடும் வேறிருவரை மைந்தராகப் படைத்து, கோணுதலில்லாத (வலியுடைய) சண்டனைப் பிரமலோகத்திலும், தேடிய பிரதாபத்தையுடைய பிரசண்டனை விஷ்ணுமூர்த்தி வசிக்கும் வைகுந்தலோகத்திலும், அவர்களைப் போனிருக்கக் கட்டளையிட்டு, பிறகு, பூரித்த இளமைதங்கிய மெல்லிய முலையையுடைய மனைவியுடன் சேர்ந்து ஓர் புதல்வனைப் பெற்றனன். எ - று.

பிரசண்டன்றனையு மென்பதிலுள்ள உம்மையைப் பிரித்து வைகுந்தத்தனி லென்பதனோடு கூட்டிக்கொள்க. (௬௬)

திரிபுரனிவ் வாறுலக முழுவதுந் தாட் படுத்தமிகு செல்வ மல்கி
வரிமதர்த்தக்கண் மடமாதர் பெரும்போகக் கடன்மூழ்கி யறங்கள் பேணி
விரிபுகழெண் டிசைபோர்ப்ப விநாயகர்பூ சனையோடு விமலை பாக
ற்குரிமைகொளுஞ் சிவலிங்க பூசனையும் புரிந்துபல காலம்வாழ்ந்தான்.

(இ - ள்) திரிபுரன் இவ்வகையாக உலகமுழுவதையுந் தன்னடிப்படுத்தி, மிக்க செல்வமதிகரிக்க, அரிபரந்து மதர்த்த கண்களையுடைய இளமை வாய்ந்த மங்கையர்களது மிக்க போகசாகரத்தின் மூழ்கி, தருமங்கள் (எல்லாவற்றையுங்) காத்து, பரந்த கீர்த்தியானது எட்டுத்திசைகளையு மறைக்கும்படி விநாயகக்கடவுள் பூசையுடன், விமலையாகிய உமாதேவியாரைப் பாகமாகவுடைய சிவபெருமானுக்கு உரிமையாகக் கொள்ளத்தக்க சிவலிங்கபூசையையுஞ் செய்துகொண்டு, எல்லையில்லாத (நெடுங்) காலம் வாழ்ந்திருந்தனன் எ - று. (௬௭)

தேக்குபுகழ்த் திரிபுரன்முன் னரசாட்சி புரிந்ததிது தெளிநீயென் [ம
றாக்கமிகு வியாதமுனிக் குரைத்தனனான் முகனதனை யுனக்குச் சொன்னேன்
வீக்கியபூங் கழற்சோம காந்தவினி விண்ணோர்கள் விமலற் போற்றிப்
பாக்கியஞ்சேர் வரம்பெற்ற தறிகவெனப் பிருகுமுனி பகர லுற்றான்.

(இ - ள்) தேக்கிய கீர்த்தியையுடைய திரிபுரன் முற்காலத்தில் அரசாட்சி செய்தவகை இதுவாகும் நீ யறிகவென்று மனஞ்சோராமை மிகுந்த வியாதமுனிவருக்கு, நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவன் கூறினன் அதனை யுனக்குக் கூறினேம் (காலிற்) கட்டிய அழகிய வீரக்கழலையுடைய சோமகாந்தராசனே! இனி, தேவர்கள் கணேசப்பெருமானைத் துதிசெய்து பாக்கியம்பொருந்திய வரத்தையடைந்த வகையையும் அறிவாயாகவென்று பிருகுமுனிவர் சொல்லத்தொடங்கினர் எ - று.

திரிபுரனரசாட்சிப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௬௭௭

# தேவர்கள் வரம்பெறுபடலம்.

இமய மாலவரைக் கந்தரத் தெய்திய
வமரர் யாதுசெய் தாரருள் வாயென
திமில மாமறை செய்தவி யாதனுக்
குமிழு மார்வத் தியம்புவ னான்முகன்.

(இ - ள்) பெரிய இமயமலை குகையி லடைந்த தேவர்கள் யாது செய்தனர்? அருள்வாயாகவென்று வினவ, திமிலமாகிய வேதங்களை யருளிச்செய்த வியாதமுனி வருக்கு, பிரமதேவன் அருப்பிய ஆசையோடு சொல்வானாயினன். எ - று

திமிலம் - பேரொலி. (க)

புகலி டம்பிறி தின்றிப் பொருப்பினு
ளகனு டைந்தழி வெய்து மமரர்முன்
மகதி யாழ்முரன் மாதவ னண்ணினான்
முகம லர்ந்தவர் தாழ்ந்து மொழிகுவார்.

(இ - ள்) புகலிடம் வேறில்லாமல், இமயமலையில் மனங்கசிந்து துன்புறும் வானவர்களுக்கு முன்னே, மகதிவீணையை வாசிக்கும் பெருந்தவசியாகிய நாரதமுனி வர் வந்தனர். (அவரைக்கண்ட) அத்தேவர்கள் முகமலர்ச்சிகொண்டு பணிந்து சொல் பவர்களானார்கள். எ - று

புகல் - அடைக்கலம் அகன் - அகம் என்பதன் போலி (உ)

வெய்ய முப்புரன் வெற்றியி ருந்தனன்
வைய மூன்றுந் தனாணை யகத்தினு
ளைய னேயவ னாலலை யுண்டியா
நைபு நெஞ்சொடு நாளுமி னைந்துளேம்.

(இ - ள்) ஐயனே! கொடிய திரிபுரன் வெற்றியில் மிருந்திருக்கின்றனன். மூவுலகங்களிலுந் தன்னாணையைச் செலுத்தினன் யாங்கள் அத்திரிபுரனால் அலை யுண்டு வருந்திய மனத்துடன் நாடோறுந்துன்புறுகின்றோம் எ - று. (௩)

யாவ னாலவ ரமெய்தின னன்னவன்
யாவ னாலிறும் யாங்களி னிச்செயல்
யாவ தோதுக வென்றனர் நாரதன்
யாவ துந்தெரிந் தேயினி தோதுவான்.

(இ - ள்) அந்தத்திரிபுரன் யாரால் (அத்தகைய) வரமடைந்தனன்? (அவன்) யாரால் அழிவுறுவான்? யாங்கள் இனிச்செய்யத்தக்கது யாது? (அவற்றை யெல்லாம் தெளிவாக வெங்கட்குக்) கூறுகவென்று கேட்டனர். நாரதமுனிவர் எல்லாவற்றையும் (ஞானநோக்கால்) அறிந்து இனிதாகச் சொல்கின்றனர் எ - று. (௪)

மோக்குங் கையுடை முன்னவன் பூசையா
லாக்கங் கொண்டன னுற்றவ டியானையு

மூங்க மிக்கவன ஞானையோ ரமபிறை
ருங்க வல்லவன சஙகர னேயரோ.

(இ - ள) (தேவர்களே! அத்திரிபுரன) தொங்குகின்ற கையையுடைய மூன்னோனாகிய விநாயகக்கடவுளுடைய ஆசசனைபபலனால வலலமையுடன் எல்லாவற்றை யுந் தேடிக்கொண்டனன செய்தொழிலில மனச்சோர்வின்மையை மிகுதியாகவுடைய அததிரிபுரனை ஒரேகணையால அழிக்கவல்லவர சஙகரபகவானேயாவர எ - று.

மோக்கும் - முகந்துகொளளும, இநனைதமதொஙகுமென்றும (ரு)

அந்த வீச னவனெனாடு முப்புரந்
சிந்து தறகுந திருநகர மைநதுடை
மைநதன ருடசியும வேண்டுமெ நநகளிற
றெநதை யைசசர ணையதுக நீயிரே.

(இ - ள) அநதச சிவபெருமான திரிபுரனுடன முப்புரஙகளை யழிததற்கும ஐந்து திருக்கரஙகளையுடைய மூததபிளளையாருடைய யோசனையும வேணடும (ஆன படியால) நீஙகளும மறறோபொழியும யானைமுகககடவுளை (அதுகருதி)ச சரணமடையுங கள எ று. (சு)

சேடடைத தேவாதந தேவாபி ராளகழ
லோடடை நெருநகடை யோமுறல யாநதோ
வேடடை யெயதியி ரஙகலிா மநதிரங
கேடடு நனகுகி ளாநதனுட டிககவே

(இ - ள) சேட்டை தஙகிய தேவாகட்கெலலாந தேவநாயகனாகியகணேசப் பெருமானுடைய திருவடியை ஒட்டையாகிய மனதையுடைய நாமடைதல யாஙஙன மென்று தளாசசியுறறு வருநதாதிாகள (கணேசபபெருமானை மகிழ்விககும) மந்திரத தைக கேட்டுணாநது நனறாக உசசரிதது அநுட்டிககக்கடவீாகள எ - று

சேடடை - குணககேடு ஒடடை நெஞசு - நிலையிலலாதமனம எட்டை - தளாசசி (எ)

வாச நீாபடிந தாடி வருகெனப்
பேசி னனபெருந தேவாகள் யாவரும்
வீசு தெண்டிரை மெனபுன லாடினா
பூசி வெணபொடி போநதுவ ணஙகினர்.

(இ - ள) மணமமைநத நீரில மூழ்கிவரககடவீர்களெனறு கூறினர். (அத னைக்கேட்ட) பெருமைபொருநதிய தேவாகளெலலோரும, எறிகின்ற தெளளிய அலையையுடைய மெல்லிய நீரில மூழ்கினவாகளாய, வெளளிய திருநீறறைப் பூசிக் கொண்டு (நாரதமுனிவர்பால) வநது பணிநதாாகள எ - று. (அ)

வணஙகு தேவாககு மாதவ னாரத
னிணஙக வோரெழுத் தாலியை மநதிர
மணங்கு தீாதர வனுசெவி யோதினன்
குணஙகொண் டனனவா கூறவிட டேகினன.

(இ - ள்.) (அவ்வாறு) பணிந்த தேவர்களுக்குப்பொருந்த, பெருந்தவசியாகிய நாரதமுனிவன் ஏகாட்சரத்தாலாகிய மந்திரத்தை, துன்பமொழிய அவர்கள்செவியிற் பொருந்தக்கூறினன் (அதன் அநுட்டிப்புக்) கிரமத்துடன் அவர்கள் அதைச் சபிக்கச் செய்து (இச்சையின்படி) சென்றனன். எ - று. (கூ)

ஒற்றைத் தாளினி னாற்பாக ளன்பினால்
வெற்றி யானை முகத்து விநாயகன்
பொற்ற சேவடி புந்திவைத் தூதத்தவ
முற்று மாமனு வோதினா பல்பகல்.

(இ - ள்) தேவர்கள ஆசையோடு ஒற்றைத்தாளிலே நின்று, வெற்றிபொருந்திய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளுடைய அழகிய சிவந்த திருவடியில மனதைச்செலுத்திப் பலகாலந்தவஞ்செய்து சிறந்த மந்திரத்தைக் கணித்தார்கள். எ - று.

ஒன்று + தாள் = ஒற்றைத்தாள். (௧0)

அன்பி னார்க்கவா தம்மினு மன்பினன்
னென்ப ணிக்கு மிரங்கும் பராபரன்
வன்பு நெஞ்சுடை யார்க்கொரு வைகலு
முன்பு றாதவன் முன்புநின் றானரோ.

(இ - ள்) அன்புடையவர்களுக்குத் தம்மைக்காட்டிலும் அன்புடையவரும், என்னுடைய பணிவிடைக்கும் (திருவுள்ளம்) இரங்கும் பராபரனும், கடின சித்தமுடையவர்களுக்கு ஒருநாளும் காட்சியளிக்காதவருமாகிய கணேசப்பெருமான் (அத்தேவர்களுக்குக்) காட்சிதந்தருளினார் எ - று

என்பணிக்குமென்றது பந்திமுநிசுசியில்லாத என்னுடையவென்று குறித்தது டன், பணிக்கும் என்றதிலுள்ள உம்மை இழிவு சிறப்புக்குறிப்பதாம் (௧௧)

வேறு

பொன்முடியு மதனருகே பொழிகிரண விளமதியும
பன்மணிசெய் குண்டலமும் பணைத்தோளி னங்கதமு
மின்மலியுந் திருமேனி விளங்கொளியு மைந்நாணும்
வன்மருப்பி னிடைசுற்றும் வாரொத்திரள் புழைக்கரமும்.

(இ - ள்) பொன்னாலாகிய கிரீடமும், அக்கிரீடத்தருகே கிரணங்களைச் சிந்தும் பாலசந்திரனும், பலரத்தினங்களால் இழைத்த குண்டலமும், பூரித்ததோள்களில் வாகுவலயமும், மின்னலைத் தோற்கச்செய்யுந் திருமேனியின் விளங்குகின்ற பிரகாசமும், அரைநாணும், வலிய தந்தத்தினிடையே சுற்றிலும் படிந்து திரண்ட துதிக்கையும். எ - று.

துதிக்கை இருதந்தங்கட்கிடையிலுள்ள உறுப்பாகலானும், அஃது திரண்டிருப்பதொன்றாகலானும், 'வன்மருப்பினிடை * * * திரள் புழைக் கரமும்" என்றார்.

பாசத்தை மிகப்பயிக்கும் பாசமுந்து ணியுமழுவும
வாசத்தி னறுங்கமல மலருமணி நாறகரமுந்
தேசத்தி னில்லாத திருவழகுந் திகழ்வெய்த
நேசத்தி னெதிர்நின்ற நிமலனையா வருங்கண்டார்.

(இ - ள்.) பாசபந்தத்தை அடியோடு பறிக்கும் பாசக்கயிறும், தோட்டியும், மழுப்படையும், வாசத்துடனே கூடிய நல்ல தாமரைமலரும், அழகிய திருக்கரங்களும், உலகத்திலில்லாத சிறந்த பொலிவும் விளங்கும்படி அன்போடு எதிரே வந்த புனிதராகிய கணேசப்பெருமானை எல்லோரும் தரிசித்தார்கள் எ - று. (௧௩)

பருதியெதிர் வரமலர்ந்த பங்கயமம்போன் முகமலர்ந்து
வெருவுகளிப் டன்புளத்தில் விரவமர ராகள்வலமே
திருவடியி னெதிர்வீழ்ந்து சென்னியிரு கரமேற
வருவிழித்து ணைகாட்ட வன்றேறப பழிச்சுவார்.

(இ - ள்) சூரியன் எதிரே தோன்றலால் விகசித்த தாமரைமலர்போல முகமலர்ச்சிகொண்டு, அச்சத்துடனே ஆசையும் மனத்திலுண்டாகத் தேவர்கள் வலமாக, (கணேசப்பெருமானுடைய) திருவடியிலே நேராகப் பணிந்து, சிரமிசை யிருகரங்களும் ஏறவும், இருகண்களில் (ஆனந்த) அருவி தோன்றவும், பக்தியதிகரிக்கவும் (பின் வருமாறு) துதிக்கலானார்கள் எ - று. (௧௪)

வேறு.

தத்துவா தீத போற்றி தத்துவப் பொருளே போற்றி
தத்துவ முதலே போற்றி தத்துவ சொரூப போற்றி
தத்துவத் தியன்ற தாதது விதங்களு மானாய் போற்றி
தத்துவ வறிவுக் கெட்டாத் தயங்குபே ரறிவே போற்றி

(இ - ள்) தத்துவாதீதனே! போற்றி தத்துவப்பொருளாயுள்ளவனே! போற்றி தத்துவங்கட்கு ஆதியே! போற்றி தத்துவங்களின் சொரூபியே! போற்றி. தத்துவத்தியன்ற அத்துவிதங்களும் ஆனவனே! போற்றி தத்துவவுணர்ச்சிக்கு எட்டாது விளங்கும் பேரறிவானவனே! போற்றி எ - று

திருமூலர் திருமந்திரம்.

"அறிவு சிவமிரண் டெனப ரறிவிலார்
அறிவு சிவமாவ தாரு மறிகிலார்
அறிவு சிவமாவ தாரு மறிந்தபின்
அறிவே சிவமா யமர்ந்திருப் பானே"—என்றபடி, இறைவன் அறிவுமயமாயிருத்தல் கருதி "பேரறிவே" என விளிக்கலாயிற்றெனக. (௧௫)

உடலினுக் குயிரே போல வுயிர்க்குயி ரானாய் போற்றி
யுடலுயிர்க் கறிவு நல்கி யுடலினைக் கழிப்பாய் போற்றி
யுடலுயி ரெனப்பி னீங்கா வொற்றுமைப் பொருளே போற்றி
யுடலுறை யுயிர்க்கு மெட்டா வொளிபெருஞ் சோதி போற்றி.

(இ - ள்) தேகத்திற்குச் சீவனையேபோல உயிர்களுக்குயிரானவனே! போற்றி. உடலிலுள்ள உயிர்கட்கு அறிவைக்கொடுத்து சரீர வாஞ்சையைக் கழிப்பவனே! போற்றி. உடலும் உயிரும்போலப் பின்னாநீங்காத ஒற்றுமைப்பொருளா யுள்ளவனே! போற்றி உடலுறைகின்ற உயிர்கட்கும் அதீதப்பட்ட பிரகாசிக்கின்ற பெருஞ்சோதி சொரூபனே! போற்றி. எ - று. (௧௬)

விரவுதத் துவத்தி னீங்கி மேலென நின்ற வாமி
வரமுற வுருவு கொண்டு வந்தருள் குரவ போற்றி
பரவுமைந் தொழிலை நீக்கி யுயிர்களைப் பரிப்பாய் போற்றி
துரியத்தி னுயிரை வாங்குஞ் சுடாப்பெருங் கடலே போற்றி

(இ - ள்) கலந்த தத்துவங்களினின்றும் மேம்பட்டு(த் தத்துவாதீதராய்) நின்று, விருப்புற்று வரங்களைப் பெறும்படி திருவுருவங்கொண்டு வந்தருளிய ஆசாரியனே! போற்றி. துதிசெய்யத்தக்க (சிருட்டி முதலிய) ஐந்தொழில்களையு மகற்றி உயிர்களைக் கட்டளையிடுபவனே! போற்றி. துரியத்தினுயிரை வாங்குஞ் சுடாயமான பெருங்கடலே! போற்றி. எ - று. (க௭)

பத்தர்கள் வழங்கா நின்ற பலவுங்கைக் கொள்வாய் போற்றி
புத்திகள் போகத் தார்க்குப் புணர்த்தருள் போகி போற்றி
முத்தியை யோகத் தார்க்கு முடித்தருள் யோகி போற்றி
யெத்தொழி லவர்க்கு மந்தப் பயனரு ளிறைவ போற்றி

(இ - ள்) அடியவர்கள் கொடுக்கும் பலபொருள்களையு மங்கைக்கொள்பவனே! போற்றி. போகத்தை விரும்பினவர்களுக்குப் புத்திகளைக் கூட்டியருளும் போகியே! போற்றி. யோகிகளுக்கு முத்தியைக்கொடுத்தருளும் யோகருபியே! போற்றி. எத்தொழிலுடையவர்களுக்கும் (அத்தொழிற்குரிய) அப்பயனை யளித்தருளுந்தலைவனே! போற்றி. எ - று. (க௮)

வேண்டிய வடியார்க் கெல்லாம் விக்கினங் கெடுப்பாய் போற்றி
வேண்டிவந் தனைசெய் யார்க்கு விக்கினங் கொடுப்பாய் போற்றி
வேண்டுவார் வேண்டிற் றெல்லாம் விளைத்தருள் விமல போற்றி
மாண்டதுட் டர்களைக் கொன்று மறமிகு மள்ள போற்றி.

(இ - ள்) (திருவடியைப்) பணியும் அடியவர்களுக்கெல்லாம் இடையூறுகளைத் தவிர்ப்பவனே! போற்றி. விரும்பி வந்தனைசெய்யாதவர்களுக்கு இடையூறுகளைக் கொடுப்பவனே! போற்றி. அடியவர்கள் வேண்டிய பொருள்களையெல்லாம் உண்டு செய்தருளும் மலரகிதனே! போற்றி. மாட்சிமைபட்ட கொடியோர்களைக் கொல்லும் பாவத்தொழில் மிக்க மள்ளனே! போற்றி. எ - று. (க௯)

வழுத்திய துதிகள் கேட்டு வள்ளலார் சுரரை நோக்கி
விழுத்தகு வரங்கள் யாவை விளம்புக தருது மென்றான்
பழுத்தவன் புடையா ராய பண்ணவர் பணிந்து சொல்வார்
தொழுதகையேந் துயர மெல்லாந் தோன்றல்கா ணாத தன்றே.

(இ - ள்) (அவ்வாறு) தோத்திரஞ்செய்த துதிகளை வள்ளலாராகிய கணேசப் பெருமானார் கேட்டுத் தேவர்களை நோக்கி, (நீங்கள் விரும்பிய) மேன்மையாகிய வரங்கள் யாவை? சொல்லக்கடவீர்கள் (அவற்றைக்) கொடுப்போமெனக் கூறினார்; பழுத்த அன்புடையவர்களாகிய தேவர்கள் (விநாயகப்பெருமானை) வணங்கிச் சொல்லினார்கள்: 'அடியேங்கள் துன்பமுழுவதும் தேவரீரறியாததல்லவே' எ - று. (௨௦)

செம்மலின் வரத்தான் மாறாத் தீங்கெமக் கிழைத்து வைய
மும்மையுந் தன்னைக் கொண்டு முடிவிலா வாற்றல் சான்ற

கொம்மைமுப் புரத்தி னானைக் கொடியனெனக் கொன்று பின்னர்
விம்மனோ யெமக்குத் தீர்க்க வேண்டுமென் றிரந்து நின்றார்.

(இ - ள்) சுவாமீ! தேவரீரருளிய வரத்தினால் ஒழியாத துன்பத்தை யெங்கட்கு விளைத்து, மூவுலகங்களையுந் தன் சுவாதீனஞ்செய்து கொண்டு, எல்லையில்லாத வல்லபமிகுந்த வலிய திரிபுரனை விரைவிற்கொன்று, (அதன்) பிறகு அடியேங்கட்குற்ற துன்பநோயைப்போக்கியருள வேண்டுமென்று (தேவர்கள்) பிரார்த்தித்து நின்றார்கள் எ - று. (உக)

அஞ்சிய தேவர் நுங்க ளல்லலோ டழிவி லாற்றல்
விஞ்சுமுப் புரத்தி னானை விளித்திடுஞ் சூழ்ச்சி செய்து
மஞ்சணி மிடற்றி னானை வைவினாத் தடைமி னென்று
செஞ்சொலி னியம்பி யைங்கைச் செம்மலா ரிதுவுஞ் சொல்வார்.

(இ - ள்) அஞ்சமடைந்த தேவர்களே! உங்கள் துன்பத்துடன், அழிவில்லாத வல்லபமிக்க திரிபுரனையும் அழிவுசெய்யும் ஆலோசனையைச் செய்து, அழகிய நீலகண்டத்தையுடைய சிவபெருமானை அங்குவிரைவிற் சேருங்களென்று, ஐந்து திருக்கரங்களையுடைய கணேசப்பெருமான் செவ்விய சொற்களாற்கூறி (மேலே) இதனையுஞ் சொல்கின்றார் எ - று. (உஉ)

அந்தரத் தமரர் நீயி ரறைந்தநந் தோத்தி ரத்தை மும்மைச்
சந்தியி னியம்பு வார்க்குச் சகலமுங் கிடைக்கு நீருஞ்
சிந்தையின் விழைந்த வெல்லா மெய்துமென் றருளி வல்லை
வெந்திற லவுணர் கோமான் மேவுவங் காளஞ் சார்வார்.

(இ - ள்) ஆகாயத்தில் வசிக்குந் தேவர்களாகிய நீங்கள் கூறிய தோத்திரத்தை மூன்று சந்தியாகாலங்களிலுஞ் சொல்பவர்களுக்கெல்லா மிடையூறுகளுமகலும். மனதில் விரும்பிய யாவுங் கைகூடுமென்றருள்செய்து வெவ்விய வலியமைந்த அவுணர் தலைவனாகிய திரிபுரன் வாசஞ்செய்யும் வங்காளநகரத்தை விரைவாகச் சார்ந்தனர் எ - று. (உங)

இருபிறப் பாளர் தம்மு ளிலகொரு திலக மென்னத்
திருவுரு வுடைய ராகித் தேவியு மருங்கு நண்ண
வருமறை முனிவர் சூழ வடுத்துவங் காள மென்னுந்
திருநகர் வீதி யூடு சென்றவன் கோயில் புக்கார்.

(இ - ள்) வேதியர்களுக்குள்ளே விளங்குகின்ற ஒரு திலகம்போல, சிறந்த திருமேனியுடையவராகி, தேவியாரும் பக்கலில் வரவும், அரியவேதமுணர்ந்த முனிவர்கள் புடைசூழவும் வந்து வங்காளமென்று சொல்லுஞ் சிறந்த நகரத்தினூடே சென்று, அத்திரிபுரன் மாளிகையை யடுத்தனர். எ - று (உச)

அரியணை பொலிய வைகி யரசுவீற் றிருக்கு மாண்மைத்
திரிபுர னோங்கி யன்பு திளைத்தெழ வெதிரே சென்று
தரியலர் பலைத்த தேயத் தழும்பிய தாளி னானை
யுரிமையின் வணங்கிப் போதந் தொளிர்தவி சிருத்திச் சொல்வான்.

(இ - ள்) சிங்காசனத்தில் அழகுறவிருந்து கொலுக்கொண்டுள்ள ஆண் தன்மையுடைய திரிபுரன்கண்டு, அன்பானது அதிகரித்தெழுதலால் எதிர்கொண்டுசென்

முத்தலைச் சூலத் தண்ணல் முறையுளி வழிபா டாற்ற
நித்தலும் பூசை கொண்டு நின்மலக் கணேசர் வைகு
மத்தகு மூர்த்தி தன்னை யளித்திடல் வேண்டு மென்றங்
குத்தம மறையோன் சொல்ல வுவந்தவ னுரைக்க லுற்றான்.

(இ - ள்) முத்தலைவாய்ந்த சூலப்படை தாங்கிய சிவபெருமான் முறைப்படி வழிபாடுசெய்ய நாடோறும் பூசையைக்கொண்டு நின்மலராகிய கணேசப்பெருமான் எழுந்தருளியுள்ள அந்தத் தகுதியாகிய மூர்த்தியைக் கொடுக்கவேண்டும் என்று உத்தமவேதியர் கூற, அத்திரிபுரன் களித்துச் சொல்லினான். எ - று. (௩0)

அங்கநான் மறைகள் தேர்ந்த வந்தணீ வந்த மூர்த்தி
ஈங்கரன் பால தென்று தளரலை யதனை யந்தச்
சங்கரன் விண்டு வாதி சகலவிண் ணவர்க ளோடு
மிங்குநின் முன்ன ருய்ப்பே னென்வலி யறிக வென்றான்.

(இ - ள்) ஆறு அங்கங்களோடும், நான்குவேதங்களுந் தேர்ந்தவேதியரே! (நீர் சொல்லும் சிந்தாமணியென்னும்) அந்தமூர்த்தி சிவபெருமானிடத்துள்ளதென்று மனந்தளராதே. அம்மூர்த்தியை அந்தச் சிவபிரானை திருமால்முதலிய எல்லாத்தேவர்களோடும் இவ்விடத்தில் உன்முன்னே வருவிப்பேன் என் வல்லமையை யறியக்கடவாயென்று எ - று

வேதாங்கம்—மந்திரம் - வியாகரணம் - நிகண்டு - சந்தோபிசிதம் - நிருத்தம் - சோதிடமென்பன (௩௧)

தண்ணடை பந்துந் தூசுந் தமனியக் குழையு மென்று
மண்ணுதல் புரியாத் தேசு வளமணி பலவு நல்கி
யண்ணலே சிலநா ளுள்ளே யழைப்பித்துத் தருது மிங்கே
நண்ணிவாழ்ந் திருக்க வென்று நயந்துகை குவித்து நின்றான்.

(இ - ள்) பந்துந் தண்ணடைகளும், ஆடையும், பொற்குழையும், எக்காலத்துங் கெடாத ஒளிவாய்ந்த பலரத்தினங்களுங்கொடுத்து, பெருமையுடையவரே! (அதனைச்) சிலதினங்களில் வருவித்துக்கொடுப்போம். இவ்விடத்திற் பொருந்தி வசித்திருக்கவேண்டுமென்று கூறிக் கைகூப்பினான் எ - று.

தண்ணடை - வயல் (௩௨)

முப்புரன் மொழியக் கேட்டு முகமலர்ந் தந்த ணாள
னிப்புரந் தன்கருப் பாங்க ரிலங்கிய வனத்து வாழ்து
மொப்பிலா மூர்த்தி தன்னை யொய்யெனத் தருக வென்று
செப்பினு னாசிர வாதஞ் செய்தன னெழுந்து போந்தான்.

(இ - ள்) திரிபுரன் (அந்தணனது) சொல்லைக்கேட்டு, வேதியர் முகமலர்ச்சியுற்று, இந்நகரத்தின் பக்கத்திற் பிரகாசிக்கின்ற வனத்திலிருக்கின்றேம். சமானமில்லாத அந்த சிந்தாமணிமூர்த்தியை சீக்கிரங்கொடுப்பாயாக வென்றுசொல்லி, ஆசீர்வாதஞ்செய்து புறப்பட்டுப்போயினார் எ - று (௩௩)

அழகிய சேனைத்தலைவரும், மிக்கவலிமையையுடைய பலசேனைகளும் வந்து ஆகாயமளாவிய திருக்கோயிலின் வாயிலிற் பொருந்தினார்கள் எ - று (௧௦)

பூண்ட வாம்பரித் தேரினைப் பூவணைக் கிழவன்
றூண்டி யுய்த்தன னென்றலு முரிபிரா னுயிப்ப
மூண்ட காதலின் முன்னவன் முருந்தின முறுவ
னீண்ட வார்குழ லுமையொடு மேறிடவென வெழுந்தான்.

(இ - ள்) தாவிச்செல்லுங் குதிரைகள் பூண்ட தேரை, தாமரைமலர்ப்பீடத்திலுள்ள பிரமதேவன் செலுத்தினனென்று சொல்லவும், முதற்கடவுளாகிய சிவபெருமான், மயிலிறகின் அடிபோன்ற வெண்மைவாய்ந்த தந்தபந்தியையும் மிகநீண்ட கூந்தலையுமுடைய உமாதேவியாரோடும் தேவர்களுடைய துன்பத்தைக்கெடுக்க அதிகரித்த ஆசையுடன் விரைவாக வெழுந்தனர். எ - று (௧௧)

அணிபெற்ற பாதுகை யடியிணை யிணைதொடக்கிப்
பணிபெற்ற பூணாரந் துயல்வரப் பலகடை கடந்து
மணிபெற்ற கோபுர வாயதன் முன்வந்து வானளக்கு
மணிபெற்ற தேரினை யிவர்ந்தனன் வரலொலித்தன சங்கம்.

(இ - ள்) அழகிய பொன்னாலாகிய பாதுகையைப் பாததாமரைகளிரண்டிலுந் தொடுத்து, சர்ப்பமாகிய அழகிய ஆபரணமானது திருமார்பிலசையப் பலகடைமேல் நடந்து, நவமணிகளிழைத்த பொன்னாலாகிய திருக்கோபுரவாயிலின் முன்னேவந்து, ஆகாயமளாவிய அழகியபொற்றேரை யாரோகணித்தனர்; சங்கங்கள் முழங்கின எ-று (௧௨)

வெற்றி வானவர் முழுவது மிலங்குதேர்க் குருவா
யுற்ற மாட்சிமைக் கேற்புற வொளிக்கலை முழுது
முற்று நாண்மதி முடித்தது போன்மென முடிமேற்
கற்றை யிரங்கதிர் காலுற்றுக் கவித்தனன் கவிகை.

(இ - ள்) வெற்றி பொருந்திய தேவர்களியாவரும் பிரகாசிக்கின்ற தேரினுருவமாகப் பொருந்திய மாட்சிமைக்கு ஏற்புறும்படி, ஒளிசெய்கின்ற கலைகள் முழுவதும் [பதினாறும்] முதிர்ந்துள்ள உவாசந்திரனை முடித்ததுபோலுமென்று சொல்லும்படி, முடியின்மேலே வெள்ளியகுடையானது கவித்துக்கொண்டு குளிர்ந்த கற்றையாகிய கிரணங்களைக் கக்கியது எ - று

கலைமுழுதும் முற்றும் நாண் மதி - எல்லாக்கலைகளோடும் நிறைந்துள்ள பூரணசந்திரன் (௧௩)

மான மானினபின் னேகிடந் தலைந்தநா மின்று
மான வானெதிர் மருவுதல் பெற்றன மேமென
ஞான வோகையா லெழுந்தெழுந் தாடுவ போன்ற
கான வார்குழன் மாதரா ரிரட்டுவெண் கவரி.

(இ - ள்) வாசந்தங்கிய நெடிய கூந்தலையுடைய மாதர்கள் இரட்டுகின்ற வெள்ளிய சாமரைகள் மானத்தையுடைய மானின் பின்னே யிருந்து அலைந்த நாம் இப்போது ஆகாயத்தை நோக்கி எதிரேபொருந்துதல் பெற்றோமென்று உண்டாகிய களிப்பினால் எழுந்தெழுந்து கூத்தாடியதுபோன்றன. எ - று. (௧௪)

அழுந்து பட்டவே ழூழியி னகன்றதன் கருணை
கொழுந்து பட்டிக லவுணன்பாற் கூடலு மாமென
றெழுந்து பட்டபுன் சினவெரி யீட்டுவார் போலச்
செழுந்து பட்டசார் தாறழிகள் சிலரெடுத் தசைத்தார்.

(இ - ள்.) ஆழ்ந்தடங்கிய சத்தசமுத்திரங்களைக் காட்டிலும் அதிகரித்த தமது கிருபையானது மிகுந்து, வலிதங்கிய திரிபுரனிடத்திற் கூடுதலுமுண்டாமென்று, சிறிது சிறிதாக எழத்தக்க கொடிய கோபமாகிய அக்கினியை யெழுப்புபவர்களைப் போல, செழுமைபொருந்திய விசிறிகளைச் சிலரெடுத்து அசைத்தார்கள் எ - று.

முளைத்தெழுந் தத்தே பொன்றுளிர் மொய்மணித் தேரின்
வளைத்த வாரிதிரை யாகிய வாருதி நின்றுந்
திளைத்தெழுந் திடு திரைகளே யாமெனச் சிலரால்
விளைத்த வெள்ளொளி வெள்ளைகள் வீசிடப் படுவ.

(இ - ள்) முளைத்துத் தோன்றியதையே யொத்துப் பிரகாசிக்கின்ற, நெருங்கிய நவமணிமயமான தேரிற்கட்டிய நெடிய திரைச்சீலையாகிய கடலினின்றும் மேற்பட்டெழுந்த அலைகளேயா மென்று சொல்லும்படி, வெள்ளொளிதங்கிய வெண்பாவாடைகள் சிலகணங்களால் வீசிடப்பட்டன எ - று.

வெண்படாம் வீசுதல் ஓர் உபசாரமாம். (௬௬)

மிண்டு முப்புர நீறிட விமலனே வுதலாற்
பண்டை நம்பத நாமினிப் படாகுது மெனவுட்
கொண்ட வோகையின் வாளராக் குலங்க ளாடுவ போ
லண்டர் போற்றநின் றசைவன வாலவட் டங்கள்.

(இ - ள்) மதத்தாற் பிழைபட்ட முப்புரங்களை நீறுபடுத்தச் சிவபெருமான் எழுந்தருளுவதால், பழைமையாகிய நம்முடைய பதவியை [நாகலோகத்தை] யடைவோமென்று மனதிற்கொண்ட ஆசையுடன், ஒளியநாககூட்டங்கள் கூத்தாடுவன போல, தேவர்கள் துதிசெய்யும்படி ஆலவட்டங்கள் அசைந்தன எ - று.

மிண்டு - மதத்தாற் பிழைபடுதல் (௬௭)

உடைய நாயக னொருகணை யாலழித் திடுமு
னடைய லாரெயி லகத்தெழி னோக்குது மென்றாத்
தொடைவி ராந்தணிக் கொடிமிசைச் சுரர்கொடி போற்ற
விடைவி ராவிநின் றசைந்தது விண்ணிடை விளங்க.

(இ - ள்) (நம்மை அடிமையாக) உடைய சிவபெருமான் ஒரே கணையினால் அழித்துவிடுமுன்னமே, பகைவருடைய மும்மதில்களினுள்ளுள்ள அழகினைக் காண்போமென்று, மலர்மாலைகட்டிய ஒப்பற்ற கொடிகளின் மேலே, தேவர்களுடைய துவசங்கள் போற்றும்படி இடபமானது நின்று ஆகாயத்தில் விளங்க அசைந்தது. எ - று.

படக மாகுளி சல்லரி பணைகிணை கல்ல
வடமு ழாக்குடப் பறைகர டிகைமணி முரசந்

துடித டாரிதண் ணுமைகுளிர் துநதுமி தகைகை
கடிசெய் மொநதைதொண் டகமிடக் கைதரு ணிசசம்.

(இ - ள்.) படகம் - ஆகுளி - சலலரி - பணை - கிணை - கலலவடம் - முழவு - குடப்பறை - கரடிகை - அழகிய முரசம் - துடி - தடாரி - தண்ணுமை - குளிரநத ஓசையையுடைய துநதுமி - தகைகை - காவலைச்செய்யும மொநதை - தொண்டகம் - இடைக்கை - தருணிச்சம. எ - று. (கக)

பமபை தூரியம் பாணடிலகைப படலிகை பணிலந
துமபு திரநரம புடையயாழ் துளைபடு கருவி
கமபி யாதெழு வஙகியங காகளம பீலி
யிமப ராரபல வியஙகளு மியமபின கணஙகள்.

(இ - ள) பமபை - தூரியம - பாணடில - சிறு படலிகை - பணிலம - முடியற்ற நரமபுடைய வீணை - துளைக்கருவிகள - அடஙகாதெழும ஒலியையுடைய வஙகியம் - காகளம் - பீலி - இவைனும இவவுலகிற பொருநதியபலவாததியஙகளையுஞ் சிவகணஙகள் முழக்கின. எ - று (உ0)

கழுகக டைபபடை முசுணடி சககரமபிண்டி பால
மெழுநகு யஙகதை முசலஙகப பணமிலை ஞாஙகா
மழுககள் வசசிரங கேடகம வாள்சிலை யமபு
கொழுக்க லபபை வேதினங கவண் குளிரி நீள் சலாகை.

(இ - ள) கழுககடை - முசுணடி - சககரம - பிணடி - பாலம-எழுக்குயம் - கதை - முசலம - கபபணம - அசசவடிவான வேல - மழுககள - வசசிரம - கேடகம - வாள் - வில - அமபு - கொழு - கலபபை - வேதினம - கவணை-குளிரி - நெடிய சலாகை. எ - று. (உக)

பாச மஙகுச முசலஞ்சூ லமபல குநதம
பூசன மலகிய சுரிகையா யுதமபுளள மிட்டி
வீச தணடமென றுரைததிடு வெயயபல படையும
பேச ருநதிறற பூதாகள பிடிததன ராரததார.

(இ - ள) பாசம - அஙகுசம - முசலம - சூலம-பலமுடைய குநதம-போாத்தொழின்மிக்க சுரிகை யாயுதம - புளளம - ாட்டி - வீசததகக தணடாயுதம என்று சொலலபபட்ட கொடிய பலஆயுதஙகளையும சொலலுதறகரிய வலலபமுடைய பூதகணத தலைவாகள பிடிதது ஆரவாரிததாாகள எ - று
பிடித்தனா - முற்றெசசம். (உஉ)

வேறு.

இலகிய வெழுபத தெணணூ யிரமெனுங் கோடி வெள்ள
வலிகெழு பூதா சூழ வாாசிலை யிலகக னெனனு
மொலிகெழு வீர னையஙகை யொருவனு லருளபெற் றுங்குப்
பலபடை தமகது முனனே படாநதனன கொடிஞசித் தேர்மேல.

(இ - ள) விளஙகிய எழுபததெணணூயிரஙகோடி வெளளமென்னுந் தொகையையுடைய வலிமைமிகக பூதகணஙகள புடைசூழ்நதுவர,நெடியவில்லேநதியஇலக்கனென்னுங் கீாததிமிகுநத வீரனொருவன, ஐநது திருக்கரங்களையுடைய ஒப்பற்ற

கணேசப்பெருமானால் அருளபுரியப்பட்டு, பலசேனைகளுக்கும் முற்பட்டு, கொடிஞ்சியுடைய தேரிலேறிக்கொண்டு சென்றனன் எ - று.

கொடிஞ்சி - தேருறுப்புகளிலொன்று.

இலக்கன - கணபதியின மூத்தமகன். இளையவன் இலாபனெனப்படுவன். ()

ஏதமி லாத வெண்ணா யிரமெனுங் கோடி வெள்ளப்
பூதர்கண் மருங்கு சூழப் பொறித்தழ லுமிழ்மா லிருங்
கோதைவண் சிலைக்கை வீர பத்திரன் கோபமூள
மாதிர நடுங்க வாமான் மணிப்பொலன் றேரிற் சென்றான்.

(இ - ள்) குற்றமில்லாத எண்ணாயிரங்கோடி வெள்ளத்தொகையாகிய பூதகணங்கள் பக்கலிற் சூழும்படி அங்கினிப்பொறிகளைக் கக்கும் மாலைசூடிய வளமமைந்த வில்லேந்திய கையையுடைய வீரபத்திரக்குரிசில், கோபமிகரிக்கவும், திசைகள் நடுங்கவும், காற்றுப்பசுவைப் பூட்டிய அழகிய மணிகள்பதித்த (வேரோ) தேரின்மேலேறிச் சென்றனர் எ - று (௨௪)

கூரயி லேந்தி நாலா யிரமெனுங் கோடி வெள்ளச்
சாரதர் மருங்கு சூழச் சண்முகப் பெருமா னீலப்
பாரச லத்தின் மீது பருதிவந் தெழுந்தா லென்னப்
போரணி சிறகர்ப் பீலிப் பொறிமயி லூர்ந்து சென்றான்.

(இ - ள) கூர்மைபொருந்திய வேலாயுதமேந்தி, நாலாயிரங்கோடி வெள்ளத்தொகையாகிய பூதர்கள் புடைசூழ, சுப்பிரமணியக் கடவுள், நீலமாகிய பரப்பையுடைய மலையின் மேலே சூரியன் வந்து தோன்றினாற்போல, போர்த்தொழிலையுடைய அழகிய சிறகையும், பிளவுபட்டவாலையும், புள்ளிகளையுமுடைய மயில் வாகனமூர்ந்து சென்றனர் எ - று

சண்முகன - அறுமுகக்கடவுள், முருகன (௨௫)

வேறு

சிறந்த தேசின்முப் பத்துமுக் கோடிதே வர்களும்
விறந்த வேனைவா னவர்கள்விஞ் சையர்முதற் பலரும்
புறந்தொ டர்ந்தெழப் பூரணன் அருள்கொடிந் திரனும்
மறந்த ழைத்தநாற் கோட்டுவா ரணங்கடாய் நடந்தான்.

(இ - ள) மேம்பட்ட கீர்த்தியையுடைய முப்பத்துமூன்றுகோடி தேவர்களும். வலியமைந்த பிறதேவர்கள் வித்தியாதரர் முதலானோர் பலரும் பக்கலிற்றொடர்ந்து வரும்படி, விநாயகப்பெருமானுடைய திருவருள்பெற்ற இந்திரனும் கொலைத்தொழில்மிக்க நாற்கொம்பினையுடைய (ஐராவதமென்னும் வெள்ளை) யானையின் மேலேறிச் சென்றனன். எ - று (௨௬)

கண்ட னந்திமா காளன்குண் டோதரன் கொற்றங்
கொண்ட முண்டிகோ கன்னனே கசகன்னன் முதலா
மண்டு வீரர்கள் மலிபெரும் பூதர்க ளோடு
மண்டர் நாயக னணிமணித் தோப்புறஞ் சூழ்ந்தார்.

(இ - ள்.) கண்டன் - நந்தி - மகாகாளன் - குண்டோதரன் - வெற்றிபொருந்திய முண்டி - கோகன்னன் - கசகன்னன் முதலாகிய நெருங்கிய (பூத)வீரர்கள்) (வலி)

மிக்க பெரிய பூதசைநியத்துடன், தேவநாயகனாகிய சிவபெருமானுடைய அழகிய நவரத்தினமயமான இரதத்தினபக்கலில (கூட்டமாக) மொய்த்தார்கள். எ - று. (உஎ)

உமைம ணாளரோ ளருளினா லுற றநான கடவ
விமைய வோங்கல்பல வரையொடு மெழுந்துசெல் வதுபோற
சமைவி ராவுபல் தேரிடைத் துணைந்துசென் றன்று
வமையு மாமறைப் புரவிபூட் டியவவி ரணித்தேர்

(இ - ள்) உமாதேவி தலைவராகிய சிவபெருமானுடைய கிருபையால், நான செலுத்த, இமயமலையானது பலமலைகளோடும எழுந்துசெல்வதுபோல சிறந்த வேதப்புரவிகட்டிய பிரகாசிக்கின்ற அழகிய தேரானது சமைபொருந்திய பலதேர்களின நடுவே விரைந்துசென்றது எ - று.

நான என்றது கூறும்பிரமன தனனை. (உஅ)

புண்ணி யன்பொலந் தேர்மணிக் காலொடு புனிதந
நண்ணி ருங்குறட் பூதர்க ணலந்தருங் காலு
மன்னு புண்ணியத் தாலனு வடிவமா யவனி
விண்ண மேறுவ தொத்தது விரைந்தெழு பூழி.

(இ - ள்.) விரைந்தெழுகின்ற புழுதியானது, புண்ணியசொரூபியாகிய சிவபெருமானுடைய பொற்றேரின அழகிய காலும, புனிதம்பொருந்திய பெரிய பூதகணத் தலைவர்களது நலந்தங்கிய காலும்பொருந்திய புண்ணியவசத்தால, பூமியானது அணுவடிவமாகி ஆகாயத்திற்கு ஏறிச்செல்வதையொத்திருந்தது. எ - று. (உக)

தேவ ராவருந் திரண்டொரு தேரென நம்பால
மேவி னார்வ ரிடங்களு மேவலு மாமென
றோவி லாவிழை வாலவிரைந் தெழுந்தது மொக்கும
பாவு பாருரு வாகிய பரந்தெழு தூளி.

(இ - ள) தேவர்களெல்லாருஞ் சேர்ந்து ஒரு தேர்வடிவாக நம்மிடத்திற்கு வந்தார்கள். (ஆதலின) அவர்கள் வசிக்கும இடங்களை நாம அடைதலுமாகுமென்று, பரந்தபூமியானது கெடுதலில்லாத விருப்பத்துடன பரவியெழுந்த புழுதிமயமாகி விரைந்து மேலே கிளம்பியதையு மொத்திருக்கும எ - று (௩௰)

குடையும பிச்சமும பேணமடா சடையெனக் குலவ
மிடையும வாள்கதிர் வெவிலைவ மீனங்க ளாக
வடையுங் கேடக மாமைக ளாகவார்த் தியவாப்
புடைப சேனைக ளொலிகட லெழுமொத் தனவே.

(இ - ள்) குடைகளும மயிற்பீலிகளும், நுரையையும் பாசடையையும்போன்று விளங்க, நெருங்கியவாளும ஒளிசிய கிரணத்தையுடைய வேலுமாகிய இவை மீனகளாகவும, பொருந்திய கேடகங்கள ஆமைகளாகவுங்கொண்டு, ஆர்ச்சியமுழக்கமுடைய சேனைகள ஒலிக்கின்ற கடல்களேழையு மொத்திருந்தன. எ - று. (௩௧)

சேனை யம்பெருங் கடலிடைத் திரைத்தெழு திரைபோன்
மான மலிகிய பதாகைகள் வயினவயி னசைந்த

மேனி வந்தெழு தூளிநீ ரூகக்கெழு மேக
மான விண்ணவர் சொரிமல ரவைமழை போன்ற.

(இ - ள்.) சேனையாகிய அழகிய பெரிய கடலினடுவே மறிந்தெழுகின்ற அலைகள்போல, மாட்சிமைமிக்க துவசங்கள் இடங்கடோறு மசைந்தன. மேலே யுயர்ந்தெழுகின்ற தூளியாகிய நீரைமொண்டுகொண்டெழுகின்ற மேகத்தைப்போல, தேவர்கள் சொரிகின்ற மலர்கள் மழைபோன்றன. எ - று. (௩௨)

மேக்கு யர்த்திய விழுக்கொடி கூம்பதன் மீது
தாங்கு வலவிடை சார்ந்தமீ காமனாப் புறத்தி
னூக்க மிக்கெழு தேர்களோர் தொள்ளமாத் திகழ
மாக்க லம்பொர வெள்ளமே றோடிய தம்மா.

(இ - ள்) மேலேயுயர்த்திய பெரிய கொடிக்கூம்பினமேலே தங்கிய வலியமைந்த இடபமானது பொருந்திய மாலுமியாகவும், பக்கங்களில், மனஞ்சோராமையோடு மேம்பட்டெழுகின்ற தேர்கள் நகர்கின்ற தெப்பமுதலியவைகளாகவும் விளங்க, சிவபெருமான் ஆரோகணித்த தேரானது பெரிய மரக்கலத்தைப்போல (சேனையாகிய கடலினிடையே) ஓடியது. எ - று. (௩௩)

மனமும் பின்னிட வயப்பரி வீரர்கண் மணித்தே
ரினமும் பின்னிட வெம்பிரா னிரதஞ்சென் றடுப்பக்
கனமும் பின்னிடுங் கனைகுரற் றிரிபுர னறிந்து
சனமும் பின்னிடத் தனிநெடுந் தேர்மிசை யிவர்ந்தான்.

(இ - ள்.) மனவேகமும் பிற்படும்படி, வெற்றிபொருந்திய குதிரைச்சேவகர்களுடைய அழகிய தேர்த்தொகுதிகளும் பின்னிடும்படி, எமது சிவபெருமானுடைய தேரானது (விரைந்து) சென்றுசேர, மேகமும் பின்னிடத்தக்க வெடிபடு குரலையுடைய திரிபுரன் தெரிந்துகொண்டு, தன் சைனியமும் பின்னிடும்படி ஒன்றியாகப் பெரிய தேரின்மேலேறினன். எ - று. (௩௪)

வேறு வேறுசென் றமரினை விளைமினக் கென்று
வீறு சேர்தரு மைந்தர்க்கும் விளங்குமுப் புரர்க்குங்
கூறி யேறுதன் கொடிஞ்சியந் தேரினைக் குழக
னேறு தேரினுக் கெதிருற விடுத்தன னிமைப்பில்.

(இ - ள்) வலிதங்கிய புதல்வர்க்கும் விளங்குகின்ற திரிபுரவாசிகளுக்கும் வெவ்வேறுசென்று போர்புரியுங்களென்று கூறிவிடுத்து, (திரிபுரன்) தன்னுடைய கொடிஞ்சியுடைய தேரை (இமைப்பொழுதில்) சிவபெருமான் ஏறிய தேருக்கெதிரே பொருந்தச் செலுத்தினன். எ - று. (௩௫)

அண்டம் யாவையு மரைக்கணத் தவித்திடு மாண்மை
கொண்ட தானவக் குழாம்படை குடங்கைகொண் டார்ப்பக்
கண்டை யாதிகண் முழங்கவெண் கவிகையார் திகழு
மண்ட மண்டினன் வரவினை வள்ளலார் பார்த்தார்

(இ - ள்) அண்டங்களையெல்லாம் அரைவிநாடியில் அழிக்கும் ஆண்மையமைந்த அசுரர்கூட்டமானது ஆயுதங்களைக் குடம்போன்ற கையிற்கொண்டு ஆர்ப

பரிக்க, வீரக்கழல் முதலியன வொலிசெய்யவும், குடைமுதலியன நெருங்கவும் (திரி புரன்) வருவதைச் சிவபெருமான் கண்டனர். எ - று. (௯௬)

> நிணத்தின் மூழ்குவே லேந்துதம் வீரர்க ணெடுந்தோள்
> மணத்தல் செய்தக்க நுதியை மாற்றுதற் பொருட்டோர்
> கணத்தி னீற்றுறும் படைக்கரந் திருந்துங்கண் ணுதலார்
> குணத்தின் மேம்படுந் திரிபுர னொடும்போர் குறித்தார்.

(இ - ள்) (எதிர்த்த பகைவர்களுடைய) நிணத்திலே குளிக்கும் வேற்படை யேந்திய தமது வீரர்களுடைய நெடிய தோளிற்பொருந்திய தினவைமாற்றுதல் காரணமாக, ஓர் விநாடியிலே சாம்பராக்கத்தக்க ஆயுதம் தமது திருக்கரத்திலிருந்தும், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானை, போர்புரியும் குணத்தினமேம்பட்ட திரிபுர னுடன் போர்செய்யக் கருதினர் எ - று. (௯௭)

> வார மாகிய கணேசனை மதித்தம தேசர்
> பார மேருவிற் பங்கயச் செங்கையிற் பிடித்தார்
> வீர மூர்முப் புரனுமத் தேவனைத் தொழுது
> கோர மாகிய கொடுமரங் குடங்கையி லெடுத்தான்.

(இ - ள்) தேவதேவராகிய சிவபிரானார் தமக்குரிமையாகிய கணேசப்பெரு மானைத் தியானஞ்செய்து, பாரமுள்ள மேருமலையாகிய வில்லைத் தாமரைமலர் போலுஞ் சிவந்த திருக்கரத்திற்றாங்கினர். வீரவானான திரிபுரனும் அக்கணேசப் பெருமானைப் பணிந்து, பயங்கரமாகிய தனவில்லை அங்கையிலெடுத்தனன். எ - று

> விரைந்து கைந்தவெண் டும்பைசூ டினரிரு வோருங்
> குரைந்து நிந்தவார் சிலைப்படு நாணொலி கொளுத்த
> வரைந்து ளங்கின வேழுமவ் வாருதி யேழுந்
> தரைபி ளந்தன கிழிந்துசாய்ந் தனவண்ட முகடு.

(இ - ள்) வாசநெருங்கிய வெள்ளிய தும்பைமாலையை இருவருஞ் சூடிக் கொண்டு, ஒலிபொருந்திய நெடிய வில்லினிடத்திற் பொருந்த நாணொலியெழுப்ப [குணத்தொனிசெய்ய] மலைகள் குலுங்கின கடல்களேழுங் கலங்கின பூமிபிளவுற்றது அண்டத்துச்சி பொடிபட்டுச் சாய்ந்தன எ - று (௯௮)

> தருக்கள் வீழ்ந்தன வீழ்ந்தன தடஞ்சிறைப் பறவை
> கருக்க ரைந்தன வுதிர்ந்தன ககனவா னுடுக்க
> ளிருக்கு மெண்டிசை யிருவகை நாகமு மிளைந்த
> முருக்கு வண்சிலை பூட்டுநாண் முழங்கிய வொலியால்.

(இ - ள்) வண்மைதங்கிய விற்களை வளையும்படி பூட்டிய நாணினது முழங்கிய ஓசையால், மரங்கள் விழுந்தன. பரந்த சிறகையுடைய பறவைகள் விழுந் தன கர்ப்பங்கள் கரைபட்டன ஆகாயத்திலுள்ள பெரிய நட்சத்திரங்கள் (அதிர்ந்து) நிலமிசை உதிர்ந்தன. எட்டுத் திசைகளிலிருக்கும் இருவகை நாகங்களுந் துன் புற்றன எ - று.

இருவகைநாகம்—பாம்பு - யானை. அஷ்டகஜங்கள் - ஐராவதம் - புண்ட ரீகம் - வாமனம் - குமுதம் - அஞ்சனம் - புஷ்பதந்தம்-சார்வபூமம்-சுப்பிரதீபம் என்

பண. இவை கிழக்குமுதல் வடகிழக்கீறாக முறையே நிற்கும் அஷ்டநாகங்கள் - வாசுகி - அநந்தனன் - தக்கன் - சங்கபாலன் - குளிகன் - பதுமன்-மகாபதுமன்-கார்க்கோடகன் என்பன. இவையும் முறையே கிழக்குமுதலாக எண்டிசைகளிற் பூமியைத்தாங்காநிற்குமென்பர். (௪௰)

பின்கொ டுத்தவா தூணியிற் பெய்தபால் கணையு
முன்கொ டுத்திட முடங்கிய தொருகை மற் றொருகை
முன்கொ டுத்தவில் பின்கொடுக் கிடமுன்னே நிமிர்ந்த
வென்கொ டுத்துமாற் றரியபோ ரிருவரு மியற்றார்.

(இ - ள்) பின்பக்கலிலுள்ள கொடிய அம்பறாத்தூணியிற் பெய்யப்பட்ட பாண அத்திரங்களையும் முன்னே கொடுக்கும்படி முடங்கியதாகிய ஒருகையும், முன்பக்கலிலுள்ள வில்லைப் பின்னே கொடுக்கும்படி முன்னே நிமிர்ந்தியதாகிய மற்றொருகையுமாக, எதனாலும் நீக்க அரியபோரை இருவருஞ் செய்தார்கள். எ - று (௪௧)

முருக னேவொடு கெதிர்த்தனன் முதிர்பிர சண்டன்
பொருவி னந்தியோ டமர்த்தனன் பொருதிறற் சண்டன்
செருவ லாரியோ டேற்றனன் றிரிபுர னமைச்சன்
வருசயந்தனோ டெதிர்த்தனன் மதனெனு மைந்தன்.

(இ - ள்) வலிமிக்க பிரசண்டன் முருகக்கடவுளுடன் வந்தெதிர்த்தனன். போர்செய்யத்தக்க வல்லமையுடைய சண்டன் ஒப்பில்லாத நந்தியோடுபோர்செய்தனன். திரிபுரனுடைய மந்திரி போர்செய்யத்தக்க வலாரியாகிய இந்திரனோடெதிர்த்தனன். மதனென்னும் பெயரையுடைய (அத்திரிபுரன்) மகன் சயந்தனோடெதிர்த்தனன். எ - று

சயந்தன் - இந்திரன் மகன்

மதன் - திரிபுரன் மகன் (௪௨)

ஆல மேயென வழன்றுபோ னினருநிலைப் புராந்த
கால கூடனும் பட்டகத் தனைக் கலந்தமர் புரிந்தான்
சீல வீரபத் திரனொடு மிருப்பெயிற் செலுத்திக்
கோல வச்சிர தமிட்டிரன் குறிப்பினொடுமே போர்.

(இ - ள்) காலகூடனென்பவன் ஆலாலம்போலவே கொதித்துப் போன மதிலைச் செலுத்தி, புட்பதந்தனை யெதிர்த்துப் போர்செய்தனன். அழகிய வச்சிர தமிட்டிரனென்பவன் இரும்புமதிலைச்செலுத்தி, நேர்ந்தகிய வீரபத்திரரோடு பெரும் போர் செய்தனன். எ - று

புஷ்பதந்தர் - இவர் விநோதமாகச் சிலமுனிவருடன் நாத்திகம்பேசின பாவத்தைப் பரிகரிக்கும்படி தமது பற்களைக் களைந்து மலராகப் பாவித்துச் சிவார்ச்சனைசெய்ய, அவர் பத்திக்கிரங்கிய பரமபதி அவர்க்குக் காட்சிதந்து புஷ்பதந்தரென் நாமமும், இழந்த பற்களை மீண்டும் பெறுகையும் அநுக்கிரகித்தனரென்பது புராண சரிதம். (௪௩)

மள்ளர் போற்றிட வீமகாயப்பெயர் மன்னன்
வெள்ளி மாமதி லூர்ந்துபோய் விநாயகர் மைந்தன்

றன்னு ருமிற விலகுகனைச் சாரத்தன னவன்பா
லுள்ள வீரருட் புருசுண்டி யுருத்துமே லடர்ந்தான.

(இ-ள்.) போர்வீரர்கள் துதிசெய்யும்படி வீமகாயனாகிய பெயரையுடையவன் பெரிய வெள்ளிமலையைச் செலுத்திக்கொண்டு சென்று விநாயகக்கடவுள் குமாரனாகிய நீக்கப்படாத வல்லபமுடைய இலக்கனை யடைந்தனன். அவனிடத்துள்ள வீரர்களிலே புருசுண்டி யென்பவன் கோபித்துப் போருக்கு மேற்கொண்டான். எ-று.

கண்டனாதியாங் கணத்த லைப்படைத் தலைவர்
மிண்டு தானவன் விறற்படைத் தலைவரோ டெதிர்த்தார்
மண்டு பூதர்கண் மற்றவன் வயவர்க ளோடு
தண்ட மாதிகொள் தண்டமா திகளொடு சமர்த்தார்.

(இ-ள்.) கண்டனமுதலாகிய சிவபெருமானுடைய சேனைத்தலைவர்கள், மதத்தாற் பிறழும் திரிபுரனுடைய வலிய சேனைத்தலைவரோ டெதிர்த்தார்கள். நெருங்கிய பூதவீரர்கள் அவனுடைய போர்வீரர்களோடு தண்டமுதலியவற்றைத் தாங்கினவர்களுக்கு தண்டமுதலியவற்றைத் தாங்கினவர்களாக [சமானஸ்தர்களாக]ப் போர் செய்தார்கள். எ-று. (௪௫)

வேறு.

வாளோச்சுவர் கணையுந்துவர் வடிவேல்பல வெறிவா
ராளொட்டற வேழத்திர ளடுவார்பரி தெறுவார்
தாளொட்டற விரதத்தொகை தடிவாரெதிர் தானை
கேளொட்டற வெறிவார்வினை கிளர் பூதர்க டலைவர்

(இ-ள்.) வலிமை விளங்கும் பூதத்தலைவர்கள் வாளால் வெட்டுவார்கள். அத்திரங்களைச் செலுத்துவார்கள். கூர்மையாகிய பலவேலாயுதங்களைச் செலுத்துவார்கள். யானைத்தொகுதிகளை ஆளுடன் அறும்படி கொல்வார்கள். குதிரைகளைக் கால்களறும்படி யழிப்பார்கள். இரதக்கூட்டங்களை வெட்டுவார்கள். சத்துருசேனை கூட்டத்தோடழிய வீசுவார்கள். எ-று. (௪௬)

பார்ப்பார்விழி வெகுளித்தழல் படுவாரிமை நீயத்
தீர்ப்பார்பல ருயிரைப்பல தேர்ப்பாகரை யடுவா
ரார்ப்பார்கொடி முடிவார்சிலை யறவாளிக டொடுத்
தூர்ப்பார்நெடு மொழிவெஞ்சினஞ் சொல்வார்தயித் தியரே

(இ-ள்) அசுரர்கள் (தேவகணங்கள் செய்யும்போரைப்) பார்ப்பார்கள்; கண்ணிமை தீயும்படி கோபாக்கினியைக் கக்கிப் பலருயிரை யழிப்பார்கள்; பலதேர்ப்பாகரைக் கொல்வார்கள், ஆரவாரிப்பார்கள், கொடியும் கிரீடமும் நெடியவில்லும் அறும்படி அம்புகளைச் செலுத்தி எங்கும் நிறைப்பார்கள், வெஞ்சினமாகிய நெடிய மொழிகளைச் சொல்வார்கள். எ-று

வெஞ்சினம் - கோபாவேசத்தோடு கூறுதல். (௪௭)

தாளற்றன ரரையற்றனர் சடரங்குடர் சொரிய
நாளற்றன ருரமற்றனர் நகையற்றனர் மதுகைத்

(இ - ள்) தாரகாசுரன் - சிறந்தசிங்கமுகன் - ஒப்பற்ற சூரபன்மனாகிய வீரர்கள் மூவரும் மற்றுமோர் வடிவங்கொண்டாற்போன்றவனாகிய பயங்கரமான தோற்றமுடைய பிரசண்டனென்பவன் குமாரக்கடவுள் பக்கலில், உரிமையாகிய படைமுழுவது மழியும்படி போர்செய்தான் எ - று. (௫௨)

கண்டு கந்தவேள் கறுமெனக் கலாபமா மயிலை
மண்ட லங்கொளத் தூண்டிவார் சிலைக்கணை கடைநாட்
கொண்டல் போற்சொரிந் தக்கணத் தளகையிற் கொடியோன்
மண்டு சேனையை யழித்தவ னெதிர்சென் றடுத்தான்

(இ - ள்) முருகப்பெருமான் கண்டு தோகையையுடைய பெரிய மயில்வாகனத்தை மண்டலவடிவாக வளைத்துச்செலுத்தி நெடியவில்லில் அம்புகளை ஊழிக்கால மேகம்போலப் பெய்து அவ்விராணுவத்திற் கொடியோனாகிய பிரசண்டனுடைய சேனையை யழித்து அவனுக்கு நேரேசென்றனர் எ - று. (௫௩)

நேர்ந்து மெய்ப்பிர சண்டனா ரிகணையைத் தாக்கி
யார்ந்த வில்லினைத் தேரினை யழங்குபல் படையை
யீர்ந்து வானவர் படைகளு மிறுத்தனன் செய்யுங்
கூர்ந்த மாயையோ டவனையுங் கணையினாற் கொன்றான்.

(இ - ள்) போர்புரியும் பிரசண்டனுடைய அம்புகளை நிலமிசை விழச்செய்து, பொருந்திய வில்லையும், தேரையும், செலுத்திய பல ஆயுதங்களையும் வெட்டி, சேனைத் திரங்களையு மழித்து, அவன் புரிகின்ற மிக்க மாயையுடன் அவனையும் அம்பினாலே கொன்றனர் எ - று. (௫௪)

சண்ட மாருத மெனப்பொருஞ் சண்டன்சே னைகளைத்
துண்ட துண்டங்க ளாக்கியோர் கடிகையி னந்தி
கொண்ட கொண்டபல் போரையுங் குமைத்துமுக் கணையா
லண்ட ரார்த்திடச் சண்டனா ருயிரையு மழித்தான்.

(இ - ள்) பெருங்காற்றுப்போலப் போர்செய்யுஞ் சண்டனுடைய சேனைகளை, நந்தியானவர் ஓர் விநாடியில், துண்டதுண்டங்களாகச்செய்து, அவன்செய்த பலவகைப் போர்களையு மழித்து, மூன்று பாணங்களால் அமரர்கள் ஆர்ப்பரிக்கச் சண்டனுடைய அரிய உயிரையு மழித்தனர் எ - று.

சண்டம் = வேகம். (௫௫)

புட்ப தந்தனும் பறக்கும்பொன் மதிலினார் தும்பைக்
கட்பு ரந்தொடைக் காலகூ டனார்படை விலக்கி
விட்பு லந்தடந் தேர்திரித் தமர்த்துப்
புட்ப தந்தனைங் கணையினா லவனுடல் பொடித்தான்.

(இ - ள்) பறவை பறந்தாற்போலப் பறந்துசெல்லும் பொன்மதிலேறிய அழகிய தும்பையாகிய தேன்சொரியும் பசிய மலர்மாலையையணிந்த காலகூடனுடைய சேனைகளையகற்றி, ஆகாயத்திலே தன்னுடைய விசாலமான தேரைத் திரியச்செலுத்திப் போர்செய்து அவனுடலைப் புட்பதந்தன் ஐந்து அத்திரங்களாற் பொடிசெய்து கொன்றனன் எ - று. (௫௬)

வெள்ளி யிஞ்சியோ டெரித்திடும் வீமகா யனையோன்
தெள்ளி லப்பல போர்செய லியற்றிமெய் யிரத்தந்
துள்ளி வீழ்ந்துறா ப்புருசண் டிநாற் கணையா
லள்ளி யுண்டன னத்தகு மவுணனா ருயிரை

(இ-ள்) வெள்ளிமதிலோடெரித்த வீமகாயனை யடுத்து, இகழ்வில்லாத பலவகைப் போரைச்செய்து, உடலினின்று உதிரமானது குதித்தோடி யொழுகும்படி, புருசண்டியென்பவன் நான்கு கணைகளால் அந்தத் தகுதியாகிய அசுரனுடைய அரிய வுயிரையள்ளிப் பருகினன். எ-று (௫௭)

இருப்பு நொச்சியோ டெரிந்தகைச் சிரத்தமிட் டிரனைப்
பொருப்பு நேர்பொலந் தேரொடு பொருந்துநாற் கணையாற்
செருப்பினி மேலென வவுணர்க் கெருமச் செகுத்தான்
விருப்பின் வேள்வியி லமரரா ருயிருண்ட வீரன்.

(இ-ள்) (தக்கனுடைய) யாகத்தில் ஆசையோடு தேவர்களுயிரைக்கொன்ற வீரபத்திரக்கடவுள், இருப்புமதிலோ டெரிந்த வச்சிரதமிட்டிரனைப் போரை, மலையையொத்த தேருடன் போர்செய்து, நான்கு பாணங்களால் பின்னே போரேதென்று சொல்லும்படி, அவுணர் அச்சமடையக் கொன்றனன். எ-று (௫௮)

வச்சி ரத்தினா லிந்திர னவுணன்மந் திரியைக்
கைச்சி ரத்தையோ டளவில்போர் கண்டுபுள் ளெருவை
நச்சி ரத்தநீ ரொழுகிட நகைமணி முடிசே
ரச்சி ரத்தினை யரிந்தன னணிந்தனன் வாகை.

(இ-ள்) இந்திரனைவென்ற திரிபுரனுடைய மந்திரியைவச்சிராயுதத்தைக்கொண்டு, கைச்சிரத்தையுடன் அளவில்லாத போர்செய்து, பறவைகளும் கழுகுகளும் விரும்பத்தக்க உதிரநீரொழுகும்படி, பிரகாசிக்கின்ற மணிகள் பதித்த கிரீடமணிந்த அவனுடைய சிரசையரிந்தனன், வெற்றிமாலையணிந்தனன். எ-று (௫௯)

சயந்தன் முப்புரன் றனயனோ டெதிர்ந்தவன் சமர்த்து
வயந்த யங்கிடக் கைப்படை போக்கிமெய் வடிவேல்
புயந்து மேல்வரும் பொருநர்கள் சிரங்களும் புரட்டி
வியந்து விண்ணவர் போற்றிட வவனுயிர் விளித்தான்.

(இ-ள்) சயந்தன் திரிபுரன்மகனோ டெதிர்த்து அவனது போர்வல்லமை விளங்கும்படி கையிலுள்ள ஆயுதங்களைச்செலுத்தி, அவனுடலையும், கூர்மையாகிய வேலையும், கோபித்து மேலேவருகின்ற போர்த்தொழிலாளர்கள் சிரங்களையும் புரட்டி, தேவர்கள் களித்துத் துதிசெய்யும்படி அவனுயிரை யழித்தனன். எ-று (௬௦)

சிலைவ ளைத்தமர் புரிதரு திரிபுர னோடு
மலைவ ளைத்தவர் வன்சம ராடிமற் றவன்கைக்
கொலைவ ளைத்தவன் கொடுமரந் துமித்துடன் குழுமு
மலைவ ளைத்தவா ருதிபொருஉஞ் சேனையு மழித்தார்.

(இ-ள்) வில்லைவளைத்துப் போர்செய்யுந் திரிபுரனுடன், மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரானார் வன்மைதங்கிய போர்செய்து, அவன் கையிலுள்ள

கொலைத்தொழிலைப் பெருக்கிய வலியவில்லைத் துண்டித்து, அவனுடன் கூடியிருக்கும் அலைகள்பொருந்திய சமுத்திரத்தையொத்த சேனையையு மழித்தனர் எ - று.

வாருதி - நீர் உதித்தற்கிடம். (கூச)

வேறு கார்முக மாங்கினன் வெடிபட வார்த்து
நூறு வாளிக ளூறுநூ றாயிர கோடிபபி
னேறு மேறுமா லாக்கிய விறைவனார் கடவுந்
கூறு தேர்மிசைத் தூண்டினன் கொடியபா தகனே.

(இ - ள்) கொடியபாதகனாகிய திரிபுரன் வேறு வில்லையெடுத்து வெடிபடும்படி யாரவாரித்து, பொடிபடுத்தத்தக்க நூறுநூறாயிரங் கணைகளை விநாடியிலே, ஏறத்தக்க இடபமுந் திருமாலேயாகக்கொண்ட சிவபெருமானார் செலுத்தும் (மேற்) சொல்லிய (பூமியாகிய) தேரின்மேலே செலுத்தினன் எ - று (கூஉ)

விடுத்த பத்திர மிமைக்குமுன் விலக்கிவெங் கணைக
டொடுத்து நன்முடி கவசந்தூணிக டொடர்மா னேற
ரடுத்த சேமத்தே ரனைத்தையு மறுத்தன னமலன
படுத்த வேனிலி னொதியென நின்றனன் பதகன்.

(இ - ள்.) திரிபுரன் செலுத்திய அஸ்திரங்களை, புனிதராகிய சிவபெருமானார் இமைகொட்டு முன்னமே விலக்கி, கொடிய பாணங்களைப் பிரயோகித்து, நல்ல கிரீடம் - கவசம் - அம்பறாத்தூணிகள் - தொடர்ந்துசெல்லுங் குதிரைபூட்டிய தேர்கள் - அடுத்துநின்ற சேமத்தேர்கள் முதலிய வெல்லாவற்றையுந் துணித்தனர் (அதனாலே அவன்) மிக்கவேனிற்காலத்து ஒதியமரம்போல நின்றனன். எ - று.

சேமத்தேர் - உதவித்தேர்.

வேனிலினொதியென்றது வேனிற்காலத்து ஒதியமரம் இலைமுதலியன உதிர்ந்து மரமாக நிற்றலின (கூகூ)

முன்னர் நாணிய முப்புரன் முகத்தினை நோக்கி
யென்னை யாளுடை யானினு மெச்சமர் வல்லை
யன்ன தாற்றுதி யகன்றுவா வென்றருள் புரியு
முன்னர் மைந்தர்க ளனைவரு முடிந்தவா கேட்டான்.

(இ - ள்) என்னை யடிமையாகவுடைய சிவபெருமான், தம்முன்னே நாணமுற்றுநின்ற திரிபுரன் முகத்தைப்பார்த்து, இன்னுஞ்செய்யத்தக்க எவ்வகைப்போரில் நீ வல்லவன்? அதனை அப்பாற்சென்று யோசித்து விரைவில்வந்து செய்யக்கடவை யென்று திருவாய்மலர்ந்தருளுமுன்னர், தன் புதல்வர்கள் யாவரும் இறந்தமையைக் கேள்வியுற்றனன் (திரிபுரன்) எ - று. (கூச)

வார்த்த தாலெழு மலைத்தை மாற்றினன் மாறு
வீரத் தாலெழு முளத்தினால் விழுமத்தின் மூன்றா
சாரத் தாணிணைந் தானவை சார்ந்தன வைற்றிற
கோரத் தாளொரு மூவராயக் குறுகினின் றெதிர்த்தான்.

(இ - ள்) (புதல்வரிடத்துண்டாகிய) அன்பினாலெழுந்த துன்பத்தை யொழித்தனன். நீங்காத வீரத்தன்மையோடெழுகின்ற மனத்தினால், சிறந்த மும்மதிலகளை

யும் வரங்கருதினன். அவை (அங்ஙனமே) வந்தன. அம்மதில்களிற் பயங்கரமாகிய வடிவோடு தானே மூவராகி நின்று எதிரிட்டனன் எ - று. (௬௫)

திண்ணி தாகிய செருப்புரிந் தெயில்களைச் செலுத்தி
விண்ணிற் பாய்குவன வேலையிற் பாய்குவன மிசையன்
மண்ணிற் பாய்குவன பாதலம் பாய்குவன மாற்றார்
கண்ணிற் பாய்குவன கருத்தினுட் பாய்ந்தன திறலோன்.

(இ - ள்) எல்லோர் மனங்களிலும் பாய்ந்த கொடிய வலியையுடைய திரிபுரன் வலிதாகிய போரைச்செய்து மும்மதில்களைச் செலுத்தி ஆகாயத்திற் பாய்வன; கடலிற்பாய்வன, திசைகளிலும் பூமியிலும் பாய்வன, பாதலத்திற் பாய்வன, சத்துருக்கள்பேரிற் பாய்வன எ - று. (௬௬)

உலக நான்கினைத் தலைப்பெயும் பதத்துமுள் ளுடைந்த
வளவி லண்டமு நடுங்கின நடுங்கின ரமரர்
வலன் விருந்தன மாதிரத் திரண்டுநா கமுமவ்வான்
குலவு மிஞ்சியோ டவுணனன் னைப்போர்தொடுத் தளவில்.

(இ - ள்) நெருங்கிய மும்மதில்களுடன் திரிபுரன் வலியபோரைத் தொடங்கியபொழுது, பதினான்குலகங்களும் உள்ளுடைந்தன கணக்கிலாத அண்டங்களும் நடுங்கின. தேவர்கள் நடுங்கினர் திசைகளிலுள்ள (அஷ்டகஜங்கள் அஷ்டநாகங்கள் என்னும்) இருவகை நாகங்களும் வருந்தின எ - று.

நான்கினைத் தலைப்பெயும் பதத்துளென்றது பதினான்கெனக் கொள்க. (௬௭)

எம்பி ரானுமவ் வண்டேர் வலமிடமுற வியக்கி
யும்பர் மாதிர முதலவை யூற்றுழி யுற்றுக்
கம்ப மாகவன் னுண்புரி மாயையுங் கடந்து
பம்பு போரினிற் பன்னெடுங் காலம்பா ணித்தான்.

(இ - ள்) எமது சிவபெருமானும் வண்மைதங்கிய தேரை வலசாரி இடசாரியாகச் செலுத்தி, ஆகாயந் திசைமுதலிய அனைத்தென்ற இடங்களிற்சென்று, கம்பமாகும்படி அத்திரிபுரன்செய்த மாயையையுங் கடந்து, பல நெடுங்காலம் மிக்க போர்செய்தனர் எ - று.

பாணித்தல் - பொழுதுநீட்டித்தல். போரினிற்காலம் பாணித்தான் என்றது போர்த்தொழிலாற் காலம்போக்கினன் என்பதாம். (௬௮)

இரந்து தாழ்ந்தவர்க் கிமைக்குமுன் றம்மையு மீயுங்
கரந்தை சூடிய கடவுளார் கழல்பணிந் தவுணன்
வரந்தா ராயென வாங்கலுஞ் செய்யுமென் றஞ்சி
யரந்தை வானவ ரமலர்தாள் பணிந்தெழுந் தறைவார்.

(இ - ள்) யாசித்துப் பணிந்தவர்கட்கு இமைப்பொழுதின் முன்னரே, தம்மையுங் கொடுக்கத்தக்க கரந்தைமாலை சூடிய சிவபெருமானது திருவடிகளைப் பணிந்து திரிபுரன் வரத்தை (எனக்குக்) கொடுப்பாயென்று வாங்குதலுமாகுமென்று, துன்புற்ற தேவர்கள் பயந்து, மலரகிதராகிய பரமேசுரரது மலர்போன்ற பாதங்களைப் பணிந்து நின்று சொல்வார்கள் எ - று. (௬௯)

நொடிக்கு முன்னுல கனைத்தையு நுண்பொடி யாக்கு
முடிக்கு நீயிரும் புரனொடு மூண்டுபல் காலம்
வடிக்கும் வாட்படை யாற்சமர் புரிவது வெழுச்சி
பிடிக்கு மோர்விளை யாட்டலாற் பேசின்வே றின்றே.

(இ - ள்) நொடிப்பொழுதிற்கு முன்னே எல்லா வுலகங்களையும் நுண்ணிய பொடியாகச் செய்யுந் தேவரீர் திரிபுரனுடன் எதிர்த்து, கூர்மையாகிய சிறந்த ஆயுதங்களாற் பலகாலம் போர்புரிகின்ற திருவுள்ளமானது, கருதத்தக்கதோர் திருவிளையாட்டல்லாமல், சொல்லுமிடத்தில் வேறில்லை எ - று. (௭௦)

எம்பி ரான்விளை யாட்டினை யாவரே யறிவார்
வெம்பி லாதபோ ரவுணனே மாதவ முடையா
னும்பர் தாதையின் சிரமதன் மடனிவ ருலைய
வெம்பு நின்னெதி ரின்றுபல் போர்விளைத் தலினால்.

(இ - ள்) எம்பெருமானுடைய திருவிளையாட்டை யாவர்தாமறியவல்லவர்? உம்பர்கட்குப் பிதாவான பிரமன்சிரமும் மன்மதனும் இயமனும் அழியும்படி கோபித்த தேவரீர்க்கெதிரே நின்று பலவிதமாகப் போர்புரிந்த தன்மையால் அன்பில்லாத போர் செய்யுந்திரிபுரனே பெருந்தவமுடையவனாயினன். எ - று (௭௧)

யாங்க ணீபுரி போரினை நோக்கலு மாற்றேந்
தேங்கொள் கொன்றையாய் சிறுவரை யவுணனைச் செகுத்து
வீங்கு வாகையை மிலைத்தரு ளாயென விரந்தார்
பாங்கு நின்றவ டானுமப் படிசெய்க வென்றாள்.

(இ - ள்) தேவரீர் செய்யும்போரை அடியேங்கள் பார்க்கவுஞ் சகியோம். தேனொழுகுங் கொன்றைமாலையணிந்தவரே! திரிபுரனையும் அவன் புதல்வனையுங்கொன்று பூரித்த வெற்றிமாலையை யணிந்தருள்வேண்டுமென்று (தேவர்கள்) யாசித்தார்கள். பக்கலில் நின்ற உமாதேவியாரும் அங்ஙனமே செய்கவெனக் கூறினார் எ - று.

வாதி னொவ்வொரு காளிபோற் போரினால் வலிய
கோதை வார்சிலை முப்புரன் கொற்றநீ காணப்
போத வாரமர் புரிந்தன மினிப்புரம் பொடிப்பா
மாது காணடி யென்றுரைத் தனா ருததிவிட மயின்றோன்.

(இ - ள்) பாற்கடலிற் றோன்றிய விடமருந்தியசிவபிரான் (நிருத்த) வாதிலே ஒப்பற்ற காளியைப்போல, போரினாலே வல்லவனாகிய மாலைகட்டியநெடிய வில்லேந்திய திரிபுரன் வல்லமையை, நீ காணும்படி பொருந்திய பெரும்போரைச் செய்தோம் இனித் திரிபுரத்தைச் சாம்பர் செய்வோம். பெண்ணே! பார்ப்பாயாகவென்று (உமாதேவியாரைப் பார்த்துக்) கூறி எ - று. (௭௨)

மாய னாதியோர் மனத்தையு மளவையுங் கடந்த
தூய னாகிய கணேசமந் திரத்தினைச் சொல்லிக்
காயு முத்தலைச் சூலத்தை விடுத்தனன் கண்ணோர்
மேய முப்புரம் பலியொடும் வெந்ததைக் கண்டார்.

(இ - ள்) திருமால் முதலானவர்கள் மனத்தையும் அளவையுங் கடந்த புனிதராகிய கணேசப்பெருமானுடைய மந்திரத்தைச் சபித்து, எரிகின்ற முத்தலை

வேலாகிய சூலாயுதத்தைச் செலுத்தினமையைக் காணுதலானாகி, பொருந்திய திரிபுரமானது பலியுடன் வெந்தமையைக் கண்டார்கள். எ - று.

பலியென்றது திரிபுரனுக்குரிய முதற்பெயர். (௭௪)

ஆற்றல் சான்றவ ராயினுந் தம்மினு மேலான்
மாற்ற லாளரோ டெதிர்ந்துமுய் வாரகொ லோவமரர்
தோற்ற வாண்மையன் புரத்தொடு சூலியன் சினத்தா
னீற்றப் பட்டன னென்னிடி னிலவுவை யகத்தே.

(இ - ள்) தேவர்கள் தோல்வியடைந்த ஆண்மைதன்னையுடையவனாகிய திரிபுரன் தன் முப்புரங்களோடுஞ் சிவபிரானுடைய கோபத்தால் நீறுசெய்யப்பட்டானென்றால், விளங்குகின்ற இவ்வுலகத்தில், வல்லமைமிக்கவர்களாயினும், தம்மைக் காட்டிலும் மேலானவல்லமையுடையவர்களோடு பகைத்தும் பிழைப்பார்களோ? (பிழையார்கள்) எ - று. (௭௫)

கணங்க ளார்த்தன கவித்தன விடைக்கொடி தேர்மேன்
மணங்கொள் கற்பக மலர்மழை சொரிந்தனர் வானோர்
துணங்கை யாடின பேயினந் தொகுகளம் பாடி
யணங்கு தீர்ந்தன ரரிமுத லானவ ரெவரும்.

(இ - ள்) கணங்கள் ஆரவாரித்தன. இடபக்கொடி கவித்தது. தேவர்கள் (சிவபெருமானேறிய) தேரின்மேல் மணம்பொருந்திய கற்பகமலர்மழையைச் சொரிந்தார்கள். பேய்த்தொகுதிகள் துணங்கையாடின. திருமால் முதலியவர்கள் யாவரும் நெருங்கிய போர்க்களத்தைப் பாடித் துன்பொழிந்தார்கள் எ - று.

துணங்கை - இருகையு முடக்கிப் பழுப்புடை யொத்தியாடுமோர் கூத்து. இதனை, "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத் - துடக்கிய நடையது துணங்கை யாகும்"—என்னுஞ் சூத்திரத்தாலறிக.

களம்பாடுதல் பரணியெனப்படும். (௭௬)

எரித்த சூலமீண் டெய்துமுன் முப்புர னிறைவன்
வரித்த பூங்கழற் பதத்திடை வந்தொடுங் கினனால்
விரித்த திக்குடை விமலனுக் கன்றுதொட் டெவருந்
தரித்து ளார்திரி புராரியென் றுயர்தவத் தனிப்பேர்.

(இ - ள்) (திரிபுரனுடன் முப்புரத்தைச்) சுட்டெரித்த சூலமானது திரும்பிச் (சிவபிரானிடம்) சேருமுன்னே, இறைவருடைய அழகிய வீரக்கழல் கட்டிய திருவடியிலே திரிபுரன் வந்தொடுக்கமாயினன். விரிந்த திக்காடையுடைய சிவபெருமானுக்கு அன்றுமுதல் எல்லாருந் திரிபுராரியென்று உயர்வாகிய சிறந்த ஒப்பற்ற திருநாமத்தைத் தரித்தார்கள் எ - று. (௭௭)

யோகி யாயிருந் தியோகமுத் தியையினி துதவிப்
போகி யாய்ப்பல போகமும் புரிந்தருள் புனிதன்
வேகன் போர்புரிந் தழிவியா னென்னிலெவர் போரின்
யூக மாதிக ளழிந்துபோ ருஞற்றுவார் முறையின்.

(இ - ள்.) யோகியாயிருந்து யோகமுத்தியை இனிதாகக் கொடுத்து, போகியாயிருந்து பலபோகங்களையுங் கொடுத்தருள்கின்ற புனிதராகிய சிவபிரான் போர் செய்து அறியாமற்போனால், போரிலே யூகமுதலியவற்றை எவர்தாமறிந்து முறைப்படி போர்புரிவார்கள்? எ - று. (எஅ)

விழுந்து சோர்ந்தவன் பூதர்மேல் விழிக்கடை வழங்கி
யெழுந்து வந்தவர் வணங்கிட வெம்பிரா னீண்டு
கொழுந்து விட்டெழு வெண்கதிர்க் கயிலையைக் குறுகித்
தொழுந்தொ றுங்கட வுளர்க்கருள் சுரந்துவீற் றிருந்தார்.

(இ - ள்.) (போரில்) விழுந்து சோர்வுற்ற வலிய பூதவீரர்கண்மேலே கடைக்கண்ணோக்கஞ்செய்து, அவர்கள் யாவரும் எழுந்துவந்து வணங்க, எமது சிவபெருமானார் திருமபி, கொழுந்துவிட்டெழுகின்ற வெள்ளிய கிரணங்களையுடைய கயிலையங்கிரியை யடைந்து, தம்மைப் பணியுந்தோறுந் தேவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்து கொண்டெழுந்தருளி யிருந்தனர் எ - று. (எகூ)

எரியி டத்துநின் றுநடம் பயிலெம்பிரான் றனக்குத்
திரிபு ரத்தவ னவிந்தவந் நாட்டிரு விழாவும்
பரிவு ரப்புரிந் தரிமுதற் பண்ணவர் பலருந்
துரிய தத்தம திருக்கையுற் றுவாழ்ந் தனரால்.

(இ - ள்.) தீயினிடத்து நின்று ஆனந்தத் திருநடனஞ் செய்தருளும் எம்பெருமானுக்கு, திரிபுரனழிந்த அத்தினத்தில் திருவிழாவும் அன்புடன்செய்து, விண்டு முதலிய தேவர்கள் பலரும் பொருந்திய தங்கடங்கள் பெரியபதவிகளையடைந்து வாழ்ந்திருந்தார்கள் எ - று. (அ0)

கனனி மாமதிப் பூரணை கார்முப் புரத்தோன்
மனனு யாருயிர் மாய்ந்துவா னவர்மிகு பயனைத்
துன்னலாலதைப் பாகுளி யென்று சொல்கின்றா
ரன்ன நாளையில் விழாச்செய்வா ரருமபயன் பெறுவார்.

(இ - ள்.) புரட்டாசிமாசத்துப் பூரணைத்தினம் அழகிய திரிபுரனுடைய அரிய வுயிரொழிந்து தேவர்கள் பெருமபயனை யடைதலால், அத்தினத்தைப் பாகுளி யென்று சொல்கின்றார்கள் அந்தத்தினத்திலே (சிவபிரானுக்குத்) திருவிழா செய்பவர்கள் அரிய பயனையடைவார்கள். எ - று. (அக)

அந்த நாளையிற் றத்தம தாற்றலுக் கேற்ப
வெந்தை யார்தமக் கருச்சனை யாதிக ளியற்றிக்
கந்த மார்ந்தநெய் தயிலமொன் றாற்கதிர் விளக்கிட்
டுந்து மன்பினாற் போற்றுவார்க் குறாததீ வினையே.

(இ - ள்.) அந்தநாளில் தங்கடங்கள் சக்திக்கேற்ப, சிவபெருமானுக்கு அருச்சனை முதலியவற்றைச்செய்து, வாசம்பொருந்திய நெய் தயிலமிவற்றில் ஒன்றினால், பிரகாசிக்கின்ற தீபம்வைத்து, தம்மைச்செலுத்தும் அன்பினால் துதிசெய்பவர்களுக்குத் தீவினையானது சம்பந்தப்படாது எ - று. (அஉ)

அனைய கன்னிமா மதிவரு பூரணை யதனிற்
கனையுமவ் வார்கடற் கருவிட மயின்றவன் பூசை

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

அரசகுலசேகர புலவசிகாரத்தினம்

ஆகிய

# அதிவீரராமபாண்டியர்

அருளிச்செய்த

# கூர்மபுராண மூலமும்

| பூருவகாண்டம். | முதலாஞ்சங்கிகை. | விளம்பி௵<br>புரட்டாசி௴. |
|---|---|---|

சைவப்பிரசாரணரும், தமிழ்ப்பண்டிதரும்

ஆகிய,

யாழ்ப்பாணம்

## நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள்

இயற்றிய உரையும்.

இவை

சென்னை

பிரம்பூர்க் குயப்பேட்டை

வித்தியா ரத்நாகரம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டன.

1898.

# உரைப்பிரகடனம்.

அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்த வஸ்துவாய், சர்வ[illegible]த்தத்துவ சர்வாநுக்கிரக மூர்த்தியாய் விளங்காநின்ற [illegible]பெருமானே அதிபரமாப்தபதி யென்று ஆன்மாக்களாகிய நாமெல்லாம் அறிந்து வழிபட்டுய்யுமாறு மெய்ஞ்ஞான சாதன திவ்வியாமிர்தங்களைப் பொழியுஞ் சத்துவகுண சிவபுராணம் பத்தனுள்ளும் அதிசிறப்புடைத்தாய், பாற்கடல் கடைந்த காலத்திலே, கூர்மவுருவெடுத்து அமுதமளித்த பதுமநாபக் [illegible]வுளால் அமரர் முனிவர்களுக்கு உபதேசிக்கப்பட்டதாய், இருகண்டங்களையும், கஎ-அ[illegible]ங்களையும், சு000 கிரந்தங்களையுங் கொண்டு சகல வேதாகம சாரங்களையெல்லாம் உள்ளடக்கியதாய் விளங்கும் பெருமை வாய்ந்தது ஸ்ரீ கூர்ம மகாபுராணமேயாம். இதனை ஆரியதிராவிட பாஷாவிற்பன புலவ சிகாரத்தினம் ஆகிய அதிவீரராமபாண்டிய அரசரேறு சொன்னயம் பொருணயங்களோடு அணிநயங்களுந் துலங்கச் செந்தமிழிற் செய்யுள் ரூபமாகப் பெயர்த்தளித்தனர். அதன் பூர்வகாண்டத்திலே, புராணலக்கணம், பரசிவதத்துவம், வருணாச்சிரம தருமம், பிரகிருதி யுற்பவம், பிரமகாலவளவை, சுவேதவராககற்பம், தமோகுணசிருட்டி, பார்வதிதேவி திருவவதாரம், திருமணம், அரசபாரம்பரியம், அந்தகாசுர வாணாசுர சாரூபப்பேறு, சிவலிங்கப் பிரதிட்டை, புலத்தியன்மரபு, இராமகிருஷ்ண லீலாவிபூதி, இராவணவம்சம், சத்திநாம சகஸ்திர மந்திரம், யுகதர்மம், காசிமான்மியம், மனுமரபு, நவக்கிரக மண்டலவளவு, அட்டமூர்த்தி யியல்பு, உலகநிலைமை, வானவர்வாழ்க்கை யாதியவும்; உத்தரகாண்டத்திலே, மாகேசுரபிரபாவம், கிரியை, பாசுபத-சாங்கிய - அட்டாங்கயோகங்கள், சிவஞானமகிமை, சிவசத்தியின்செயல், ஆசமனவிதி, சிராத்தநியமம், நித்தியகர்மவிதி, பொதுவிதி, யாகம், துலாபுருடாதி தானபலம், பாரமேஸ்வரரூபம், விபூதிமகிமை, தத்துவதரிசனம், அசௌசநிர்ணயம், ஆச்சிரமலக்கணம், மகாபாதக பிராயச்சித்தம், சிவபூசாபலம், சலந்தரவதம், திரிபுரதகனம், உபமன்னியர்பேறு, தீர்த்தமகிமை, பிரளயசம்பவம் ஆதியவுமாகிய உலகர்க்கு இன்றியமையா விசேட ஞானங்களையெல்லாம் தெளிவாக எடுத்துக்கூறும் இப்புராணப் பொருளைச் செந்தமிழ்பயின்ற புலவர் தெரிந்து பயனுறுதல்போல, ஏனைய அன்பர்களும் இலகுவிற் றெரிந்து பயனடைவாரென்றெண்ணி, அதன் ஒவ்வோர் செய்யுட்களின் பதங்கட்கும் பிரதிபதங்கள் தோன்ற உரையும், வேண்டும் இடங்களில் இலக்கணக் குறிப்புகளும், ஆசிரிய வசனங்களும், விசேடங்களும் பொருந்த இயற்றிய பதவுரையை, வாங்குவோர்க்கும் எமக்கும் சுலபநிமித்தம் ரூயல் ஆறுபாரங்கொண்ட சங்கியையாக உயர்ந்த கடிதத்தில் பதிப்பித்து, நாளதுமீ முதலாக பிரதிமாதந்தோறும் முதலாந்தேதியில் வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கின்றேம்.

இந்நூல் சுமார் உரு - சங்கியையிற் பூர்த்தியாகுமென் றுத்தேசிக்கின்றேம். சங்கியையொன்றனை விலை அணா ச-ஆகவும், முற்பணஞ் செலுத்துவோர்க்கு வருடமொன்றுக்கு ரூபா. உ—அ—0 ஆகவும் சந்தா ஏற்படுத்தப்பட்டது. வெளியூரார் நியமிக்கப்பட்ட சந்தாவோடு தபாற்செலவு அணா ஆறும் முற்பணமாக அனுப்புவாராயின், பார்சிட்டோடு சங்கியைகளுங் கிரமமாக அனுப்பப்படும். ஒரேமுறையிற் பத்துப்பிரதி எடுப்பவர்க்கு ஒரு சங்கியை அதிகமாகக் கொடுக்கப்படும். சங்கியை பெறவிரும்பும் அன்பர்கள் இடையில் விடுவரேல் தமக்கும் எமக்கும் நஷ்டமாம் என்பதை ஆரம்பத்திலேயே யோசித்துக் கையொப்பக்காரராகும்படி வேண்டுகின்றேம். வேண்டுவோர் எமக்குந் தெரிவித்துப் பெற்றுக்கொள்க. இஃது இடையூறின்றி யினிதுமுற்றச் சிவபெருமான திருவருளை வேண்டுவோமாக.

இங்ஙனம்,

**நா - கதிரைவேற்பிள்ளை.**
21-படைவெட்டம்மன்கோவில்வீதி
சூளை பட்டாளம்போஸ்ட், சென்னை.

1898ஆம் வருடம்
அக்டோபர்மீ 1உ.

பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| உ. | கஎ. | பிரயோகவிவாக. | பிரயோகவிவேக. |
| எ. | உகூ. | களித். | களித்த. |
| ,, | ௩0. | கலங். | கலங்கி |
| உஉ. | உகூ. | அரிசந்தானம். | அரிசந்தனம். |



# கூர்மபுராணம்

## மூலமும் உரையும்.

வேதாகம உபநிடத சித்தாந்த சாரங்களையெல்லாம் உள்ளடக்கி, உலகத்தின் றோற்றமொடுக்கம், மனுவந்தரம், முனிவராற்றல், அரசபாரம்பரியம், அவர்கள்சரிதம் என்னும் புராணவிலக்கண மைந்தும் வாய்ந்து, வடமொழிக் கடற்கண் விளங்கும் கூர்மபுராணப் பொருளைத் தண்டமிழ்த் தென்மொழியார்க்கு நன்கறிவுறுக்கப் பொருட்டொடர்நிலைச் செய்யுளென்னும் பெருங்காப்பியத்திற் பெயர்த்து யாப்பானடுக்க ஆசிரியன், எடுத்துக்கொண்ட விஃது ஆதிதைவிகம், ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம் என்னுமிவையிற் றானவருமிடையூறியாவுந்தீர்ந்து இனிது முடிதற்பொருட்டும், முடிந்தது நின்று நிலவுதற்பொருட்டும் எனக்குணமமைந்த விறைவற் காத்தலை வேண்டியதாம்.

### காப்பு.

வெண்ணிலாக் கற்றை கான்று விளங்குமோர் பிறைக்கோ டின்றி
யெண்ணிலோர் பாகங் கூந்தற் பிடியென விருந்த வாற்றும்
பெண்ணொரு பாகம் வைத்த பிஞ்ஞக னுருவு காட்டு
மண்ணலங் களிநல் யானை யடிமலர் சென்னி வைப்பாம்.

(இதன்பொருள்)

எண் இல் ஓர்பாகம்-ஒன்றாலும் அளவுபடுத்தற்கரிய திருமேனியி னொருபகுதி, வெண்ணிலாக் கற்றை கான்று விளங்கும் வெள்ளிய சந்திரிகைத் தொகுதியைப் பொழிந்து பிரகாசிக்கின்ற, பிறைஓர்கோடு இன்றி-பிறைச்சந்திரனைப்போன்ற ஒப்பற்ற கொம்பொன்றனையில்லாமல், கூந்தல் பிடிஎன இருந்த ஆற்றல்-பிடாக்க ணுரோமங்கள் செறிதலையுடைய பிடியானைபோல விளங்கிய தன்மையானும், ஓர்பாகம்-மற்றை யொருபகுதி, கோடு இருந்த ஆற்றல்-களிற்றி யானைபோலக் கொம்பொன்றனை யுடைத்தாந் தன்மையானும், பெண் ஒருபாகம் வைத்த பிஞ்ஞகன் உருவு காட்டும்-உமாதேவியாரைத் திருவுருவி னோர்கூறாகக் கொண்ட சிவபிரானது திருவடிவத்தை யிந்தன்மைத்தென்று காட்டியருளாநிற்கும், அண்ணல் அம் களி நல்யானை-பெருமைத்தன்மையும் அழகும் மதக்களிப்புமுள்ள நல்லயானையாகிய விநாயகக்கடவுளது, அடிமலர் சென்னி வைப்பாம் - திருவடிகளாகிய செந்தாமரை மலர்களைச் சிரமீது யாம் சூடுவோம் என்க

கருமந்தொடங்குவோர் யாவராயினும் முதலில் விக்கினகர்த்தா வாகிய வி வுளையே காப்பாக வைக்கவேண்டு மென்றும், வைக்கின் அஃது முட்டின்றி அன்றேலாகாதென்றும் வரம்பெற்ற தலைமையராகலின் இவனும் விநாய டினுன் எனக. உதாரணமு வருமாறு:—

# கூர்மபுராணம்.

## பார்க்கவபுராணம்-திருவவதாரப்படலம்

முராரி யாதிய தேவர்கண் முதனூறு முழுதுல கினிலுள்ளோர்
விராவி யாதொரு காரிய மாயினும் விளங்குறச் செயவென்றே
பராவி யுன்னருச் சனைசெய்வோர் மனத்துறு பானமைதந் தருளுமன்னன
பிராது செய்பவா காரிய மூறுசெய் திடுதியென் றிவைசொல்வான

சத்தி யொருகூறாகவும், சிவம் ஒருகூறாகவு மமைந்துள்ள அர்த்தநாரீசுர வடிவம் போல, ஒருபாகம் கொம்பின்றிப் பிடியுருவாகவும், மற்றொருபாகம் கொம்பிருந்து களிற்றுருவாகவும் காட்டும் வடிவமைந்த யானையாகிய விநாயகக் கடவுளது திருவடிப்போதுகளை யாம் சிரமேற் றரிப்பாம் என்பது கருத்து.

வெண்ணிலா-என்பது இனமின்மையின் விசேடிக்கப்படாதாயினும் செய்யுட்கு அணியாய் நிற்றலால் வழீஇ யமைதன் மரபாம் என்னை? "இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை-வழக்காறல்ல செய்யுளுள்ளே" என்றார் **தொல்காப்பியனாராகலின்**. இதுபோல்வருவனவற்றை யினமின்றிச் செய்யுளில் வருஉங் கருமதாரயன் என்பார் **பிரயோக விவேகநூலாரும்**. பிறைஎன்பது கலைநிரம்பா மதியாகவும், கற்றை கான்று என்றது வளர்ந்துறுந் துணிபினையெனக் இன்றி-உகர மிகரமாகத் திரிந்த வினையெச்சக் குறிப்பு எண்ணின் என்பபாடங்கொண்டு, ரினையுங்கால் என வினையெச்சப் பொருட்டாகவும், வலம் இடமாகிய எண்ணத்தில் என ஐந்தனுருபேற்ற பெயர்ப்பொருட்டாகவும் உரைப்பாருமுளர். இறைவன்திருவுரு பசுபாசஞானங்களா னறிவருந் தகைத்தாகலானும், ஓர்பாகம் எனவே "எடுத்தமொழியினஞ் செப்பலுமுரித்தே," என்னுந் **தொல்காப்பிய**விதிப்படி இனமாகிய மற்றையபாகமுங் குறிப்பா னுணரப்படு மிருத்தலானு மவைசிறப்பன்றும் "பிடியென் பெண்பெயர் யானைமேற்றே" என்பது விதியாகலின் பிடி-என்பதற்கு யானையென்றும் என எனனு முவம உருபிடைச்சொல் எண்ணுப் பண்புணர்த்தும் பொருட்டாய், இருந்த வென்பதன் முதனிலை வினைகொண்டது.

"பெண்பாலெல்லாம் பெண்ணெனற்குரிய," என்றபடி பெண் என்னுஞ்சொல் இருதிணைப் பெண்மைக்கும் பொதுவாயினும், அடைகொடுத்துரைக்கி னஃறிணைப் பொருளாமென்றும், வாளாகூறின் உயர்திணைப் பொருளாமென்றும் நச்சினார்க்கினியருரைத்தமையானும், "பெண்ணும்பிணவும் மக்கட்குரிய" என்று **தொல்காப்பியனாரும்** பினவிதந்தோதுப வாகலானும், அஃதுயர்திணைப் பெண்மை மேற்றாய்க் கட்புலனாயதோர் அமைதித் தன்மைப் பொருட்டாகாமே டென்பாலாய தன்மைப் பொருட்டாயப் பராசத்தியாகிய உமையம்மையாரை யுணர்த்திநின்றது பிடுருகன்-நிலைக்கோலத்தை யுடையவன் யானை-ஆகுபெயர். யாம் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது

முக்குணத்தாலாய மூவர்களுள் முதலிருவர்க்குஞ் சத்துவராசதங்களை ஒரோவழியுபசரித்து, இறுதியினிற்கும் எமபிரானுய உருத்திரர்க்குத் தாமதகுணத்தைச் சார்த்தினும் அவர்செயலியாவும் கருவிகொண்டறுத்துக் காயப்புண்ணாற்றுந் தருமவைத்தியன் றன்மைபோலவும், புதல்வர் தருசொல்லைப் போற்றுவிட்டது வளர்ந்திலடித்துறுக்கிப் பந்தமுமிடுந் தந்தைதாயர் தண்டம்போலவும், அழுக்கெடுக்கும் வண்ணானவெள் ளாவியிலேவைத்துக் கல்லின் மழுக்கும் வன்மைபோலவும் புறத்துக் காணப்படினும், அகத்தவையெல்லாம் ஆன்மாக்கட்குக் கன்மத்தையூட்டி மலமுங்கழீஇ யந்தமிலின்பத் தழிவில்வீட்டை யளிப்பான்செய்யும் பெருங்கருணைத் திறனுப் பிறங்கலான், வெண்ணிற விளக்கம் வாய்ந்த சத்துவகுண ரூபசுதந்தரன் சங்கரனேயென்றும், அவனியல்பினையும், அடையுமுபாயங்களையும் உண்மையிற்கூறுஞ் சிவபுராணங்களே சத்துவகுண புராணமாம் என்றும், இப்புராணமும் அவற்றொன்றாயச் சத்துவகுணத்ததாமென்று முணர்த்துவான் "வெண்மை"

உள் புகுந்து=பனி பொருந்திய மலையின் உச்சியினுள்ளே பிரவேசித்து,உலகம் முழுவதும் தாய் என பூத்த = உலகமெல்லாவற்றையுந் தாயினைப்போலப் பெற்ற, தனிசுடர் அதனை முன்னுதலும் = ஒப்பற்ற சிவபரஞ் சுடரைத் தியானித்தலும், மேய பேரொளி ஆய்= பொருந்திய பெரியசோதி வடிவமாய், அரு உருவாகும் மெய் பொருள் — அருவுருவுடைத் தாய் விளங்கும் உண்மைப் பொருளாகிய தட்டரசிவம், உருவினை எய்தியது = சகளரூபத் துடன் பிரசன்னமாயிற்று.

இந்திரத்துய்ம்மனுகிய மறையவன் மானசோத்தர மலையினுட் புகுந்து பரம சிவனைத் தியானித்தலும், அவர் சோதிவடிவாய்த் தோன்றினர் எனட் தாம் மெய்ப் பொருள் எனனுஞ் சொல சிவனை என்னும் உயர்திணைப் பொருளை யுணர்த்திநின்றேனும் அது அஃறிணைவாசகமாதலின், அதற்கேற்ப எய்தியது என அஃறிணைமுடிபு பெற்று நின்றது இதனைத் தொல்காப்பியம் சொல்லதிகாரம் "காலமுலகம், என்னுஞ் சூத் திரத்தால் அமைக்க (௪௫)

எய்திய வொளியிற் றோன்றிய வுருவை யிருகணும் களிப்புற நோக்கிக்
கையிணை முகிழ்ப்ப வுளங்கனிந் துருகக் களிப்பொடு மெய்ம்மயிர் பொடிப்ப
வையன தடியிற பணிதலு மெழுகென மண்பினிற் றழுவமா மறையோனை
மெய்யினின் றநந்த கோடிசூ ரியரின் விரிகதிர் பிழம்பெழுந் ததுவே

(இ-ள்) எய்திய ஒளியில் தோன்றிய உருவை=அங்ஙனந் தோன்றிய சோதிவடி வாகிய பரசிவத்தை, இரு கணும் களி பு உற நோக்கி=இரண்டு கண்களாலும் ஆனந் தம் பொங்கத் தரிசித்து, இணை கை முகிழ்ப்ப உள்ளம் கனிந்து உருக= இரண்டு கைகளும் அஞ்சலிப்பவும் மனம் இளகி யுருகாநிற்கவும், களிப்பொடு மெய் மயிர் பொடிப்ப=உவகை மிகுதலால உடலினகணுள்ள வுரோமங்கள் சிலிர்ப்பவும், ஐயன அது அடியில் பணித லும்=அப்பரசிவத்தினது திருப்பாதங்களில் (வீழ்ந்து) வணங்குதலும், எழுக என்று அன் பின் தழுவ=(அனபனே) எழுந்திருப்பாயாக என்று அனபின் மிகுதியினால் அவனுடலந் தைத் தழுவுதலும், மறையோன மெய்யில் நின்று=பிராமணனது சரீரத்தினின்றும், அநந்த கோடி சூரியரின்=அளவிலலாத கோடிசூரியர்கள் ஒருங்கு சேர்ந்தாற்போல, விரி கதிர் பிழம்பு எழுந்தது=பரந்து தோன்றுஞ் சோதிப் பிழம்பானது தோன்றிற்று

கண்ணும்-உள்ளம்-எழுக என்பன விகாரப்பட்டு நின்றன கை முகிழ்த்தலாவது கையினை பொன்றோ டொன்று பதாகைபோல விரல் நீணடிருக்க மார்பினிடத்துப் பொருந்த வைத்தல் இதனை அஞ்சலிகை என்ட "அஞ்சலி யென்ப தறிவுறக் கிளப்பின்— னெஞ்சு வினழி யிருகையு மதாகையாய - வந்தகம டொருந்து மாட்சித் தென்றனர் - ரந்த மில காட்சி யறிந்திசி னோரே ,, என்றார் நாடகநூலாரும். (௪௬)

எழுந்தநற் சோதி யிரணிய கருப்ப னுறையுளா யாவரும யாவுந்
தொழுந்தகு முத்தா புகும்வழி யாகுஞ் சுடரவன் மண்டலந் தடைந்து
செழுங்கனற் பிழம்பா முககணெம பெருமான் திருவருள் பெற்றுவே றின்றி
யழுங்கலில் சிவமாந் தன்னுருத் தானு யமாந்துய ரினபமுற் றதுவே.

(இ-ள்) எழுந்த நல் சோதி=அவ்வாறு தோன்றிய ஒளிப் பிழம்பானது, இரணிய கருப்பன் உறையுள் ஆய்=இரணிய கருப்பன் என்னுஞ் சிவசூரியன் எழுந்தருளி யிருக்குந் தானமாகி,யாவரும் யாவும் தொழும் தகு முத்தர் புகும் வழி ஆகும்=யாவராலும் எவைக ளாலும் வணங்கத்தகுந்த சீவன் முத்தர்கள் போகின்ற வழியாகியும் இருக்கின்ற, சுட

ரவன் மண்டலத்து அடைந்து = சூரியமண்டலத்திற் பிரவேசித்து, செழு கனல் பிழம்பு ஆம் முக்கண் எம்பெருமான் திரு அருள் பெற்று=கொழுமையாகிய அக்கினிப் பிழம்பா யுள்ள திரிநேத்திரங்களை யுடைய எமது தலைவராகிய சிவபெருமானது திருவருளே உருவாகி, வேறு இன்றி = இரண்டற்று, அழுக்கல் இல் சிவம் ஆம் தன் உரு = கெடுதலில்லாத அநாதி சிவரூபமாகிய தன்வடிவே, தான் ஆய் அமர்ந்து=தன்வடிவாகச் சிவத்தோடு அத்துவிதமாய் விளங்கி, உயா இன்பம் உற்றது=மேலாய அந்தமிலின்பத்தையடைந்தது.

இந்திரத்துய்ம்மனுகிய சீவன் முத்தனது மெய்யில் நின்றும் எழுந்த சோதிப் பிழம்பானது சூரியமண்டலத்திற் புகுந்து, சிவனது திருவருளுருவாய் விளங்கி, அதனோடும் அத்துவிதப்பட்டு இன்பமுற்றது என்பதாம்.

இரணிய கருப்பன் என்றது ஈண்டுச் சிவசூரியனை யெனக் டர்க்கன் என்று காயத்திரியிற் காணப்படும் இரணிய கருப்பன = இச்சாஞானக் கிரியைகளை யுடையவன். சிவபெருமானுக்கு இத்திருநாம முன்மை "உறை விராட் டிரணிய கருப்ப னுற்றுற ..குறைவிலா விச்சுவ னென்றுங் கூறுவார். ,, என்ற வாயுசங்கிதைச் செய்யுளால் அறிக. அண்ட ஆதித்தன், பிண்ட ஆதித்தன், மன ஆதித்தன், ஞான ஆதித்தன், சிவ ஆதித்தன் என ஆதித்தனை ஐவகைப்படுத்தித் தெய்வப்புலமைத் திருமூல நாயனூர் திருவாய் மலர்ந்தருளியபடி, இவன் உடலினின்று மெழுந்த சோதியை ஞானுதித்தன் எனவும், சூடரவன மண்டலத்தை அண்ட ஆதித்தன் எனவும், அங்குத் தோன்றி யுள்ளதைச் சிவ ஆதித்தன் எனவுங் கொள்ளினு மமையும். சிவசூரிய பகவானுனவர் மேற்குநோக்கி வெண்ணிறமாய் விளங்குஞ் சத்தியோ சாதமுகமும், வடக்கு நோக்கிய செந்நிற வாமதேவ முகமும், கிழக்கிற பொன்போன்ற தற்புருடமுகமும், தெற்கில கருநிற அகோரமுகமும ஆகிய நான்கு முகங்களும், எட்டு புயங்களும், பன்னிருகண்ணும, சடாமுடியும், சிவப்பு வஸ்திரதாரணமும உடையராய், நானான்கு முகங்களை யுடைய பாற்கரனும பானுவும ஆதித்தனும் முறையே வலப்பக்கம் பிறபக்கம இடப்பக்கங்களிலும, வித்தாரை, சுதாரை, போதினி, ஆப்பியாயினி, தித்தை, சூக்குமை, சேயை, விபூதி, விமலை, அமோகை, வித்துதை, சருவதோமுகி, பத்திரை என்னுஞ் சத்திகள் நாற்பாலினும விளங்க, தைவிகமதியாகிய தேவியுடனே வீற்றிருப்பர் எனக.

சிவசூரிய மூர்த்தியின பக்கத்திற் பிரமதேவர் இருத்தலானும், சிவசாலோகாதி முத்தியடைவோர் அவர்வழியே போகவேண்டு மாகலானும் இரணிய கருப்பன் என றதற்குப் பிரமதேவர் எனப் பொருள் கொள்ளினு மொன்று அது சிறப்பன்றென்க. யோகிகள் சகல கிலேசங்களும் விடுபட்டுப் போகும் காலத்தில தேவயானமாய் இருப்பவன் சூரியன் ஆகலானும், அவர்கள் போகுமவழி, முறையே அக்கினி, பகல, பூர்வபக்ஷம, உத்தராயனம் வருடம, காற்று, சூரியன், சந்திரன, மின்னல, வருணன, இந்திரன், பிரமன் என்பவர்களின எல்லை யாகலானும், இவ்விந்திரத் துய்மமனுஞ் சோதிப்பிழம்பாய் எழுந்து சூரியமண்டலம் புகுந்து அருள்பெறீஇ முத்தியுற்ருன் என்க. ஆன்மா அநாதி சிவரூபம என்பதனை "அனுதி சிவரூப மாகிய வான்மாத்-தனுதி மலத்தாற் றடைப்பட்டு நின்றது—தனுதி மலமுந் தடையற்ற போதே-யனுதி சிவரூப மாகியவாறே,, என்னுந் திருமந்திரத் திருச்செய்யுளாற் காண்க. (௭௭)

இன்னணங் குழக்கைத மதிதவழ் குடுமி யிறைவனை யேத்துந ரல்லான்
மன்னுதற் கரிதா முத்திவீ டதனின் மருவுதற் கரிதென வழங்க
வன்னவற் குரைத்த காதையை யெமக்கு விரித்துரை யெனவரு மறையோர்க்
கொன்னகாகிறைவனகேட்டலுமுலகம் பொதிந்தசேவடியினேன்புகல்வான்.

(இ-ள்.) இன்னணம்= இங்ஙனம் கூறப்பட்ட விதமே, குழகனை மதி தவழ் குடுமி இறைவனை= இளம்பிறைச் சந்திரன் பயிலுகின்ற சடாமுடியை யுடைய சிவபெருமானை, ஏத்துநர் அல்லால் = துதித்து வழிபடுகின்றவர்களே யல்லாமல், மன்னுதற்கு உரித்து ஆம் முத்திவீடு அதனில் = நிலைபெறுதற்கு உரித்தாயுள்ள சிவசாயுச்சிய முத்தியின்கண், மருவுதற்கு அரிது=(மற்றையோர்) அடைந்திருத்தல் இல்லையே யாகும், என வழங்க= என்றிவ்வாறு (கூர்மமாய்நின்ற) திருமால கூற, அரு மறையோன = அரிய வேதங்களை யறிந்த நாரதமுனிவரும், பொன நகர்க்கு இறைவன்=சுவர்க்க லோக அதிபனாகிய இந்திரனும், அன்னவன் கு உரைத்த காதையை=அவ்விந்திரத்துய்மமனுயிருந்த அந்தணனுக்குச் சொல்லியருளிய புராணசரிதத்தை, எமக்கு விரித்து உரை என கேட்டலும் = எங்களுக்கும் விரிவு படுத்திக் கூறியருள்வீராக என்று பிரார்த்தித்தலும, உலகம பொதிந்த சே அடியினோன் புகல்வான் = மூவுலகங்களையும் அடக்கிய செவ்விய பாதங்களையுடைய திருமால் சொல்வாராயினர்.

இங்ஙனமே இக்கூர்மபுராணத்தைக் கேட்டுணர்ந்து சிவபிரானது திருவடிப பூசனையைச் செய்து முத்தியடைந்த இந்திரத துய்மமனைப போல்வார்க்கு அல்லாமல, மற்றையோர்க்கு முத்தி கிடைத்தல அருமையாம் என்று கூற, நாரதரும் இந்திரனும் மற்றையோர்களும அப்புராண சரித்திரத்தை விரிவாகக் கூறும்படி கேட்டலும், கூர்மமாய் நின்ற திருமால் உரைக்கத் தொடங்கினார் என்பதாம. இன்ன வண்ணம் என்பது இன்னணம என மருஉ மொழியாயிற்று எமக்கும்—என்றதனகண் இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது முத்திவீடு-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. விடுதல என்றுபொருள். வீடு—முதனிலைதிரிந்த தொழிலாகுபெயர் (சஅ)

என்றருந் நயத்துச் சூதமா முனிநன் முனிவராக கினிதினி னிசைத்தான
மன்றவிக் காதை கேட்டுளோர் பயின்றோர் மற்றதி னோரெழுத் துணர்ந்தோ
ரொன்றிய செலவத் தமர்ந்துகிண் கிணிக்காற் சிறுவரை யினிதினி னுயிர்த்துக்
கொன்றைதேன றுளிகக மன்றுணின றுடுங் கூத்தன தடிநிழ லுறைவார்.

(இ ள்.) என்று=என்றிவவாறு, மா சூதமுனி=பெருமையையுடைய சூதமுனிவர், நல் முனிவராக்கு இனிதின் இசைததான=நன்மையையாகிய நைமிசாரணியத திருந்த முனி சிரேட்டர்களுக்குத தெளிவாகச் சொன்னார், மன்ற இ காதை கேட்டு உள்ளோர்=உறுதியாக இக்கூர்மபுராணத்தைக் கேட்டவர்களும், பயின்றோர் = பாராயணஞ் செய்பவர்களும், இதின் ஓர் எழுத்து உணர்ந்தோர் = இதன் கணுள்ள ஓர் எழுத்தின் பொருளை அறிந்தவர்களும், ஒன்றிய செல்வத்து அமர்ந்து=(இம்மையில்) தகுதியாகிய செல்வமுடையராய் இருந்து, நயம் பட கிண்கிணி கால சிறுவரை உயிர்த்து = நன்மை யுண்டாகும்படி கிண்கிணி யென்னும் ஆபரணத்தை யணிந்த காலகளையுடைய சற்புத்திரர்களைப் பெற்று (வாழ்ந்து மறுமையில்) கொன்றை தேன துளிப்ப=கொன்றைப் பூமாலையினின்றுந் தேன றுளி சிந்தாநிற்க, மன்று உள் நின்று ஆடும் கூத்தன அது=சபைகளின் இடங்கடோறும் நின்று திருநடனஞ் செயதருளுகின்ற, சிவபெருமானது, அடிநிழல் உறைவார் = திருவடி நீழலின்கண் கூடியிருப்பார் என்க

கூர்மரூபமாய் நின்ற திருமால் இந்திரன் முதலிய தேவர்களுக்கும், நாரதர் முதலிய முனிவர்களுக்கும இவ்வாறு கூறினர் என்று சூதமுனிவர் சொல்லினர். அவ்வாறே இப்புராணத்தைக் கேட்பவர்களும், பாராயணம் பண்ணுவோரும் இதனில் ஓர் அக்ஷரத்தை யறிந்தவர்களும் ஆகிய இவர்கள், இம்மையிற் செல்வத்தோடு குறைவின்றி

வாழ்ந்து சிறந்தபேறாய புத்திரப்பேற்றையும் அடைந்து மாறுமையிற் சிவகதிசேர்வர் எனபதாம்.

மன்ற என்னுஞ் சொல் நிச்சயப் பொருளை யுணர்த்துவதாம். அதனை "மன்ற வென் கிளவி தேற்றஞ் செய்யும், என்னும் இலக்கண விளக்கச் சூத்திரத்தால் அறிக. எழுத் துணர்வார் முத்தியடைவார் எனபதனை "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான்—மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு—மொழிததிறததின, முட்டறுந்த நல்லோன் முத னூற் பொருளுணர்ந்து—கட்டறுத்து வீடு பெறும்,, என்றதனுல்விளங்கும். புத்திரப்பேறு இம்மையிற் சிறந்தது என்று "பெறுமவற்றுள் யாமறிவ திலலை யறிவறிந்த-மககட் பேறல்ல பிற,, எனவும், "உந்து நீக்கட லுடுத்தபார முழுவதுமொருங்கே-வந்து தாமொழு மரசியல் வளனெலாம் பெறினும்—மிகுதி ராதியர் பெருபாதத் திருககை பெற்றிடினும்—மைந்த ரின் றியே வாழ்வது வாழ்வுமற் றன்றே,, எனவும் பெரியோர் கூறினர். செலவம எனவே அது கொண்டு நடத்தப்படும் அறமும, அதன பண்பாயுள்ள அன்பு பொறுமைகளும், அதனுல் அறுபவிககப்படும இன்பமும, அவற்றின பயனுயுள்ள புகழ, மதிப்பு என்னும் எழு வகைப பெறறியுங்கொளக. சிவபெருமான திருநடனஞ் செய்யுஞ் சபைகளாவன - திருவாலங்காட்டில இரத்தினசபையும், சிதம்பரத்திற் கனகசபையும், மதுரையில வெள்ளிச் சபையும், திருநெல்வேலியில் தாமிரசபையும், திருக்குற்றாலத்திற சித்திரசபையும் ஆகிய ஐந்துமாம். (சகூ)

இரதிரத்துய்மமன முத்தியடைகந அத்தியாயம்.

முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௯௬.

இரண்டாவது

# வருணச்சிரம தன்மமுரைத்த அத்தியாயம்.

அஃதாவது உயிர்கட்கு இன்றியமையா உறுதிப்பொருள், நான்கனுள் மேலாய வீட்டினபத்திற்குக் காரணமாய அறத்தை நிறுத்த முறையானே கூறுவான்றொடங்கி, அவவறம் பலவகைப்பட்டு கிற்றலின இல்லறம் துறவறம் என இருவகைப்படுத்தி, அவற்றுள் நாலவகைப்பட்ட வருணத்தினதும ஆச்சிரமத்தினதும் தருமங்களைக் கூறும் பாகமாம். கருமதை—கனமதை, கருமம்—கனமம எனறுறபோல, தருமம என்றது தன்மம் எனப் பட்டது. அத்தருமம் ஒழுககம வழக்கு தணடமென மூவகைப்படுதலின், ஈண்டுக் கூறப படுவது ஒழுக்கமும, அதினின்றும் தவறினுக்குரிய தண்டமும் என்க. அத்தியாயம் எனினும், படலம்-சருக்கம்-இலம்பகம்-பரிச்சேதம எனினும ஒககும.

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்**

பொன்னகாக கிறைவ ஞதி யமரரும் புலவர் களைந்துந்
தன்னுழை யடைகரும் வீணை முனிவனுந் தாழ்ந்து கேட்ப
மின்னகு நேமி சங்கம வெங்கதை சிலைவா ளேந்தி
மன்னிய கூர்ம ரூப மாலமுறை மகிழ்ந்து சொலவான.

(இ-ள்) பொன் நகர்க்கு இறைவன் ஆதி அமரரும் = பொன்மயமாகிய சுவர்க்க லோகத்திற்கு அரசனான இந்திரன் முதலாய தேவர்களும், ஐந்து புலன்களும் தன் உழை அடக்கும் வீணை முனிவனும் = பஞ்சேந்திரியங்களையுந் தன்வசப் படுத்துகின்ற யாழினையுடைய நாரதமுனிவரும், தாழ்ந்து கேட்ப = வணங்கி நின்று கேட்க, மின் தரு நேமி சங்கம் = ஒளியைக் காலுகின்ற சக்கரம் சங்கு, வெம் கதை சிலை வாள் ஏந்தி = கொடுந் தொழிலையுடைய தண்டம் வில் வாள் என்னும் பஞ்சாயுதங்களையும் தாங்கி, மன்னிய கூர்ம ரூப மால் = வீற்றிருந்த கூர்ம ரூபமாகிய திருமாலானவர், முகம் மலர்ந்து சொல்வான் = முகமலர்ச்சியுடன் சொல்லத் தொடங்கினர்

நாரதரது மகதியென்னும் வீணையானது, தன்னிசையைக் கேட்டோர் உணவு பரிசம் கந்தமுதலிய மற்றொன்றனையும் நாடாதும், அதனையே யன்றி வேறொன்றையுங் கேட்காதும் தன்வசமுற இனிமை கொடுத்து நிற்றலானும், விசுவாவசு வென்னுங் கந்தருவனது பிருகதியென்னும் வீணையினும், தும்புருவினது கலாவதியென்னும் வீணையினும், சரசுவதியினது கச்சபி யென்னும் வீணையினுஞ் சிறந்து விளங்கலானும் "புலனைந்துந் தன்னுழை யடக்கும்வீணை,, என்று சிறப்பித்ததாம். (க)

நித்திய மாகி யொன்றாய் நிமலமா யெங்கு மாகித்
தத்துவங் கடந்து நின்ற மகேச்சுரன் றன்னு ணீங்காச்
சித்துரு வாகி யான்முற் றோன்றினேன் சிறந்த வென்பே
ருய்த்தினி துணரி னாரா யணனென வுரைப்பர் மேலோர்.

(இ-ள்) இனிது உய்த்து உணரின் = (அன்பர்களே) நன்றாக யோசித் தறியுமிடத்து, யான் முன் = நான் முன்னர்க்காலத்தே, நித்தியம் ஆகி = அழிவில்லாத தாகியும், ஒன்று ஆய் = ஏகமாகியும், நிமலம் ஆய் = இயல்பாகவே பாசங்களி னின்றும் நீங்கியதாயும், எங்கும் ஆகி = எவ்விடத்தும் வியாபியாகியும், தத்துவம் கடந்து நின்ற மகேச்சுரன் தன்னுள் = தத்துவங்களையுங் கடந்து விளங்காநின்ற மகேசுர மூர்த்தியினிடத் திருந்து, நீங்காத சித்து உரு ஆகி தோற்றினேன் = பிரிதலில்லாத அறிவுருவமாக உற்பவித்தேன், சிறந்த என் பேர் = சிறப்பினையுடைய எனக்கு நாமம் யாதெனில், மேலோர் நாராயணன் என உரைப்பர் = பெரியோர்கள் நாராயணன் என்று சொல்வார்கள்.

சதாசிவ தத்துவத்திற் கிரியை யேறி ஞானங் குறைந்து இச்சாசத்தி ரூபியாயிருக்கின் அதனை மாகேசுர தத்துவம் என்ப. அது ஈசுரதத்துவம், அதிகாரதத்துவம், சகளதத்துவம், பிரவிர்த்தி தத்துவம் எனவும் பெயர்பெறும். இம்மகேசுர மூர்த்தியின் இடப்பக்கத்தில் நின்று விட்டுணுமூர்த்தி தோன்றினர் எனப் பின்னாக் கூறப்பட்டுள்ளது. நாராயணன்—நார = நீர், அயன = இடம் எனவே, சலத்தினை யிடமாகக் கொண்டவன் எனப் பொருள். "நாரத்தி லமர்ந்த வாறறு நாரணன்,, எனப் பின்னர்க் கூறுமாற் றானும் விளங்கும் தன — சாரியை. (உ)

பாய்திரை சுருட்டுந் தெண்ணீர்ப் பனிக்கடன் முகட்டிற் செங்க
ணாயிரஞ் சூட்ட ராவி னறிதுயி லமர்ந்து பின்னாக்
காய்கதிர் தோன்று மேல்வைக கண்மதர் நீந்தி யாங்கு
மீயுய ருலக மூன்றும் படைத்திட விழைவுற் றேனால்.

(இ-ள்.) பாய் திரை சுருட்டும் தெள் நீர் = பரந்த அலைகளை மடக்குகின்ற தெளிந்த நீரினை யுடைய, பனி கடல் முகட்டின்=குளிர்ந்த பாற் கடலின் மீது, செம் கண் ஆயிரம் சூட்டு அராவின் = சிவந்த கண்களையும் ஆயிரந் தலையையு முடைய ஆதிசேடனாகிய சயனத்தின்மேல், அறி துயில் அமர்ந்து=யோகநித்திரை செய்து, பின்னர்=பின்பு, காய் கதிர் தோன்றும் எல்லை=எறிக்கின்ற கிரணங்களை யுடைய சூரியன் உதிக்கின்ற அவ்வளவினைக்கொண்ட காலத்திலே, கண் மதர் நீந்தி = கண்மயக்கந் தெளிந்து, ஆங்கு = அப்பொழுது, மீ உயர் மூன்று உலகமும் படைத்திட விழைவு உற்றேன்=மேலாக உயர்ந்த திரிலோகங்களையுஞ் சிருட்டிக்குமாறு விருப்பங் கொண்டேன்

அறிதுயிலாவது தம்மையும் மற்றைய பொருள்களையும் அறிந்துகொண்டு தூங்குவதாம். அதனைத் தூங்காமற் றூங்குவது எனபர் ஆன்றோர்கள். "தூங்காமற் றூங்கிச் சுகம் பெறுவ தெக்காலம். ,, என்றார் தாயுமான சுவாமிகளும். நாராயணமூர்த்தி அறிதுயில் செய்யுங் காலமாவது—மானுட வருடம் முப்பது சென்றால் தேவர்களுக்கு ஒரு மாதமாகும். இப்படித் தேவவருடம பத்துச் சென்றாற் சத்தவிருடிகளுக்கு ஒருவருடமாகும். அங்ஙனம் முனிவர் வருடம் பத்துக் கொண்டது துருவனுக்கு ஒருவருடம ஆகும இங்ஙனம பன்னீராயிரந் தேவவருடங் கொண்டது ஓர் சதுர யுகமாம். இச்சதுர யுகம் எழுபத்தொன்று முடிந்தால் ஒருமனு வந்தரமாம். இம்மனுவந்தரம் பதினான்கு கழிந்தாற் பிரமதேவருக்கு ஒருபகலாகும். இங்ஙனம் நூறுவருடங்கழிந்தாற் பிரமாவுக்கு ஆயுள்முடியும். பிரமதேவரது பகலொன்றிலே சுவாயம்புமுதல் பௌதியன் ஈறாகவுள்ள பதினான்கு மநுக்களும், அரி முதற் சுசியீறாவுள்ள பதினான்கு இந்திரர்களும் அரசாண்டு இறப்பார்கள். ஒரு மாதத்துள் நானூற்றிருபது இநதிரா மரிப்பா ஒருவருடத்துள் ஐயாயிரத்து நாற்பது இந்திரர் இறப்பாாகள். ஒரு பிரமதேவரது ஆயுளுள் ஐநதிலக்கத்து நாற்பதினாயிரம் இந்திரர் இறபபா. இங்ஙனமுள்ள பிரமதேவாகளு ஆயுள் முடிநது இறப்பாராயின நாராயணமூர்த்திக்கு ஒரு பகல் கழியும். இவவாறுள்ள பகல கழிநதவுடன் விஷ்ணு ஆயிரங்கைகள், ஆயிரங் கால்கள், ஆயிரமுடியோடு அறிதுயில செய்தருளுவா எனபதாம். சூரியன் உதிக்குங்கால மாவது விடியமுன் ஐந்து நாழிகை யளவினதாய காலம். இதனைப பிராமீ முகூர்த்தம் என்றுங் கூறுப. (௩)

ஆயிடை யெனது நெஞ்சத் தருளொடு மகிழ்ச்சி பூப்ப
மாயிரு ஞாலம போர்த்து மல்கிருட் பிழமபு சீக்கும
பாயொளிப் பரிதி கோடி யெழுநதெனப் பசுந்தேன் பில்குஞ்
சேயிதழ்க கமலப போதிற் செலவனமுன தோனறக கண்டேன்

(இ-ள்.) ஆ இடை=அவ்வெல்லையிலே, எனது நெஞ்சத்து அருள் ஓடு மகிழ்ச்சி பூப்ப = என்னுள்ளத்திற் கருணையும் சநதோஷமும விளையுமபடி, மா இரு ஞாலம் போர்த்து மல்கு=சிறந்த பெரிய உலகத்தை மூடி நிறைந்த,இருள் பிழம்பு சீக்கும்=இருட் கூட்டத்தை நீக்குகினற, பாய ஒளி கோடி பரிதி=பரநத ஒளியை யுடைய கோடி சூரியர்கள், எழுந்தது என = உதயஞ் செய்தாறபோல, பசு தேன் பில்கும் சே இதழ் கமலம் போதில்=பசுமையாகிய தேனைப பொழிகின்ற சிவந்த இதழ்களையுடைய (எமது உந்தியாகிய) தாமரைப் பூவில், முன் செல்வுன் தோன்ற கண்டேன்=முதலில் பிரமன் உதிக்கக் கண்டேன்.

ஆயிடை என்றது "வடவேங்கடந் தென்குமரி-யாயிடைத்தமிழ்,, என்று தொல்காப்பியப்பாயிரஞ் சொற்றாற் போல நின்றது. அ என்னும் முதல் நீண்டு எழுத்ததிகாரப்

புறனடையால் யகர வுடம்படுமெய் பெற்று முடிந்தது. சிருட்டிக்க நினைத்த அளவிலே எனக்கு அருளும் உவகையும் உண்டாகும்படி, என் நாபிகமலத்துக் கோடிசூரியர் உதயஞ்செய்தாற் போலப் பிரமனா முதலில் உதித்தான் என்பதாம். (௪)

அவ்வழி குழவித் திங்க ளடுசிலை வடிவேற் செங்கேழ்க்
கொவ்வையங் கனிவெண் முத்தங் குலவுமோர் கமலம் பூத்துத்
தெய்வமென் கொம்பி ரண்டு செவ்விள நீருந் தாங்கிப்
பௌவவா ரிதியிற் பொன்னம பங்கயத் துதித்த தன்றே.

(இ-ள்) அ வழி=அதன் பின்பு, பௌவம் வாரிதியில் = குமிழிகளையுடைய அந்தக் கடலில், பொன் அம பங்கயத்து=பொன்போன்ற அழகிய (எனது நாபிக) கமலத்தினின்றும், மென தெய்வக கொம்பு=மிருதுவாகிய தெய்வத் தன்மையினை யுடைய ஒரு பூங்கொம்பானது, குழவி திங்கள் = பிறைச் சந்திரனும், அடு சிலை = கொலைத் தொழிலைச் செய்கின்ற விற்களும், வடி வேல=கூர்மையாகிய வேற்படைகளும், செம் கேழ் அம் கொவ்வை கனி=சிவந்த நிறமுள்ள அழகாகிய கோவைப் பழமும், வெள் முத்தம்=வெள்ளிய முத்துக்களும் (ஆகிய இவைகள்) குலவும் ஓர் கமலம் பூத்து = விளங்குகின்ற ஓர் தாமரைப்பூ மலரப்பெற்று, இரண்டு செம இளநீரும் தாங்கி=இரண்டு செவ்விளநீர்க் குரும்பைகளையுஞ் சுமந்துகொண்டு, உதித்தது=தோன்றியது.

அன்று ஏ அசைகள். பாற்கடலி னிடத்துள்ள எனது நாபிக் கமலத்தினின்றும் ஒரு பூங் கொம்பானது பிறைச்சந்திரன், வில், வேலாயுதங்கள், கோவைப்பழம், முத்துக்கள் ஆகிய இவைகளைக் கொண்டுள்ள ஓர் தாமரைப்பூ மலரப் பெற்று, செவ்விளநீர்க் குரும்பைகள் இரண்டனையுஞ் சுமந்து தோன்றிற்று என்பதாம். இவை உருவகமாகும். ஒரு பூங் கொம்பு என்றது இலக்குமி தேவி யெனவும், பிறைச்சந்திரன் என்றது நெற்றி எனவும், வில் என்றது இருபுருவம் எனவும், வேலாயுதங்கள் எ-து, இருகண்கள் எனவும், கோவைப் பழம் என்பது, உதடு எனவும், முத்துக்கள் என்றது பற்கள் எனவும், கமலம் என்றது, முகம் எனவுங் கொள்க. முகம் இவ்வுறுப்புக்களைக் கொண்டிருத்தலால் "குலவுமோர் கமலம் பூத்து,, என்றதாம். செவ்விளநீர் என்றது தனங்களையாம். அதுபோலச் செந்நிற முடைத்தாய்த் திரண்டு அமுதத்தை உள்ளிற் கொண்டிருந்தலால் என்க. இது இலக்குமி தேவியின் அங்கம் பலவற்றையும் உருவகப் படுத்தினமையால் **அநேகாங்கவுருவக வலங்காரமும்,**அவளை மறைத்துக் கூறின்மையால் **உருவகவுயர்வு நவிற்சியணியு**மாம். (௫)

மங்கலை யாகி யாவு மயக்குறு பொருளா யென்றுந்
தங்குமா மாயை யாகித் தனிப்பிர கிருதி யாகுஞ்
செங்கய னெடுங்கட் செவ்வாய்த் திருவினைக் கண்டு வேதன்
பொங்கிய வுவகை யோடு மெமக்கிவை புகல லுற்றான்.

(இ-ள்.) மங்கலை ஆகி=மங்கல ரூபமுடையவளாய், யாவும் மயக்கு உறு பொருள் ஆய்=எல்லாவற்றையுந் தன்னிடத்து மயக்கஞ்செய்யும் பொருளாகியும், என்றும் தங்கும் மா மாயை ஆகி=எவ்விடத்தும் இருக்கின்ற பெரிய மாயாசத்தி யாகியும், தனி பிரகிருதி ஆகும்=ஒப்பற்ற பிரகிருதி மாயையும் ஆகிய, செம் கயல் நெடுகண் செம் வாய்=செவ்விய கயல் மீன்போன்ற கண்களையுஞ் சிவந்த வாயினையுமுடைய, திருவினை வேதன் கண்டு= இலக்குமி தேவியைப் பிரமன் பார்த்து, பொங்கிய உவகை ஓடும்=நிறைந்த சந்தோஷத்

துடனே, எமக்கு இவை புகலல் உற்றான் = எமக்கு இவ்வார்த்தையைச் சொல்லுவானாயினன். மங்கலை=சுகரூப முடையவள். பிரகிருதி=பகுதி.

பிரமன் இலக்குமி தேவியைக் கண்டு, எம்முடன் சில வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினான் என்றதாம். எமக்கு என்றது தனித் தன்மைப்பன்மை. (௬)

யான்படைப் பவைக ளெல்லா மலிதல்கா ரணமா வென்றும்
வான்படு பூதம யாவு மருளுறு பந்த மெய்தத்
தேன்றெளித் தமிர்தினோடுங் குலவிய கனிவாய்த் திருசொற்
கான்படு நறுமென கூந்தற் கமலையைப் பணித்தி யென்றான்.

(இ-ள்.) யான் படைப்பவைகள் எல்லாம்=(எனது தந்தையே) என்னாற் படைக்கப்படுகின்ற சராசர தோற்றங்கள் யாவும், மலிதல் காரணம் ஆ=பெருகுதல் காரணமாகவும், என்றும் வான் படு பூதம் யாவும் = எக்காலத்தும் ஆகாயமும் அதனிற் பொருந்திய நாற்பூதங்களும, மருள் உறு பந்தம் எய்த = ஒன்றோ டொன்று கலக்கப் பெறுதல் காரணமாகவும் (மாயையினைச் செய்யுமாறு) தேன் தெளித்து அமிர்தின் ஓடும் குலவிய=தேனைத் துளித்து அமுதத்தோடும் விளங்குகின்ற, கனி வாய் திரு சொல்=கோவைப் பழத்தினை நிகர்த்த வாயினையுந் தித்திப்பாகிய சொற்களையும, கான் படு நறு மென் கூந்தல்=வாசனை பொருந்திய நல்ல மிருதுவாகிய அளகத்தினையும உடைய, கமலையை பணித்தி என்றான்= இவ்விலக்குமி தேவிகருக் கட்டளையிடவேணடும் என்று பிரார்த்தித்தான.

வான் படு பூதம் என்றதற்கு ஆகாயமும, அதினின்றுந் தோற்றுகின்ற ஒவ்வோர் பூதங்களும் என்று கொள்வார் சிலர். அவர் ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்புவும், அப்புவினின்று பிருதிவியுந் தோன்றுமென்னும் மதமுடையராம். கமலை = தாமரையில் வசிப்பவள், தாமரையிற் பிறந்தவள். கமலை ஐ-உருபு மயக்கம். (௭)

என்றலுங் கமல வீட்டி னிளங்கொடி வதன நோக்கி
நின்றபல் லுயிர்கள் யாவுஞ் சகத்தினி னீங்கா வாகி
வன்றிறற் குயவ னானும வினைகலத் திகிரி போலச்
சென்றியல் கருமத் தாமபிற் றிரிதரப் புரிதி யன்றே.

(இ-ள்.) என்றலும்=என்று பிரமன் வேண்டுதலும், கமலம் வீட்டில் இளம் கொடி வதனம் நோக்கி=(யான) தாமரை மலராகிய வீட்டினகணுள்ள இளமை வாய்ந்த பூங்கொடி போன்ற இலக்குமி தேவியின் முகத்தைப் பார்த்து, நின்ற பல் உயிர்கள் யாவும= தோன்றி நிற்கின்ற பலவகைப் பட்ட ஆன்மாக்க ளெலலாம், சகத்தினில நீங்கா ஆகி=உலகத்தினின்றும் பிரிந்து ஒழியா தனவாய், வன் திறல் குயவன்=மிகுந்த வலிமையை யுடைய குயவனானவன், நாளும கலம் வினை திகிரி போல=நாடோறும் பாத்திரங்களை வினைதற்குக் கருவியாய தண்டசக்கரமபோல, சென்று இயல் கருமம் தாம்பின் = கழிந்து கழிந்து உண்டாகின்ற கன்மம் எனகின்ற கயிற்றாற் (கட்டி) திரிதர புரிதி=திரிந்து உழலுமபடி செய்யக்கடவாய். அன்று ஏ — அசைகள்.

பல் உயிர்களாவன—நால்வகைத் தோற்றமும், எழுவகைப் பிறப்பும் எண்பத்து நான்கி லக்கம் யோனிபேதங்களையு முடைய உயிர்களாம் சகத்தினில் நீங்காமை யாவது மீட்டும் மீட்டும் உடம்போடு காணப்பட்டு வருதல். அவை திகிரிபோற் சுழலுதலாவது

நரகம் சுவர்க்கம் பூதலம் என்னும் மூன்றிடத்துஞ் சென்று சென்றுறுதல். இவற்றிற்குக் கன்மமே காரணமாகலின் அதனைத் தாய்பு என்றதாம். (அ)

தத்தம வருணத் தோது மொழுகினிற் சார்ந்து நாளுஞ்
சித்தமா செறிந்து பொயயிற் றீர்ந்துநான மறையுந் தோய்து
மைத்திரு மிடற்றுப புத்தேண மலரடி போற்றி னோபா
லுய்த்திடேன மாயை யென்ன வந்நெறி யொழுகல செயதாள்.

(இ-ள்.) தம் தம வருணத்து=தங்கள தங்களது வருணங்களிலும, ஓதும் ஒழுக்கினில்=சொல்லப்பட்ட ஒழுக்கங்களிலும், நாளும சார்ந்து=தினந்தோறும் நினறொழுகி, சித்தம் மாசு எறிந்து=மனத்தினக ணிகழுங் குற்றங்களை யெல்லாங் கடிந்து, பொய்யில தீர்ந்து=பொய்மைப பயன்றரு டவைகளை யெல்லாம் விடுத்து, நால் மறையும் தோய்து=நான்கு வேதங்களையுங் கசடறத தெளிந்து, மை திரு மிடறு புத்தேள் = மேகம்போன்ற அழகிய காளகண்டத்தை யுடைய சிவபெருமானது,மலர் அடி போற்றினோ பால்=தாமரை மலர்போலுந் திருப்பாதங்களைத் துதித்து வழிபடுவோ ரிடத்து மாத்திரம, மாயைஉய்த்திடேல் என்ன=தினது மாயாபாசத்தைச செலுத்தா திருப்பாயாக எனறு கூற, அ நெறி ஒழுகல செய்தாள=(அவளும்) அம்மொழிப்படியே செய்து வந்தாள்.

தத்தம—தம் தம என்பன "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொ டவும்—வனமைக கினமாத் திரிபவு மாகும", எனறதனுல, வல்லெழுத்துக்கு இனமாகத் திரிந்து, வலித்தல் விகாரம் பெற்று முடிந்தன. அ—ஆறும் வேற்றுமையுருபு. ஒளி சிறிதுமீங்கிய விடத்தும் இருள் வந்து மூடுதல போல ஒழுக்கஞ் சிலகணம இல்லாவிடினும மாயை வாதிக்கும் ஆகலின் நாடோறும் ஒழுக்கத்தில நிறகவேண்டும் எனபது பெற "ஒழுகினிற சார்ந்து நாளும்" என்றதாம் சார்ந்து, எறிந்து, தீர்ந்து, தோய்து எனனும வினையெச்சங்கள போற்றினோர் என்னும வினையாலணையும் பெயரின் முதனிலை கொண்டுமுடிந்தன. (கூ)

ஆங்கதன் பினம ரீசி யங்கிராப் பிருகு தக்க
னோங்குமத் திரிவ சிட்டன் புலத்தியன புலக னுற்ற
தீங்கெறி கிருது வெனனு மொனபது திறததி னோரைப்
பாங்கினில் வேதன் யோக மாயையிற் படைத்தல செய்தான்.

(இ ள்) அதன் பின=அதன் பின்னர், வேதன்=பிரமனானவன், மரீசி அங்கிரா = மரீசி அங்கிரா, பிருகு தக்கன்=பிருகு தக்கன, ஓங்கும் அத்திரி வசிட்டன் புலத்தியன் புலகன்=உயர்வுள்ள அத்திரி வசிட்டன புலத்தியன புலகன, உற்ற தீங்கு எறி கிருது எனனும்=பொருந்திய தீமைகளை யொழித்த கிருது என்றுஞ் சொலல நின்ற, ஒனபது திறத்தினோரை = ஒன்பது வகைப்பட்ட முனிவர்களை, பாங்கினில யோகம் மாயையில படைத்தல செய்தான்=தகுதியாகத் தனது யோகமாயையினுற சிருட்டித்தான.

இவவொன்பது முனிவர்களையுந் பிரமன் யோகவலியினால் தன் மனத்தினின்றுஞ் சிருட்டித்தனன. அதனுல் இவர் மானச புத்திரர் என்று சொல்லப்படுவர். இவர்கள் பிரமனைப்போலப் படைக்குந் தொழிலுள்ளாராகலின் நவபிரம ரென்றுங் கூறப்படுவர். தக்கனுக்குச் சிறுவிதி எனறும் பெயர். ஆங்கு—உரையசை யிடைச்சொல். (௧௦)

வேதியர் முகத்தில் வேந்தர் விறல்கெழு துணைத்தோள் வெற்பிற்
றீதறு வணிகர் செம்பொற் குறங்கினிற் சதுர்த்தர் செய்ய

பாதபங் கயத்தி லீன்றோன பதுமன்முன படைத்த மூவ
ரோதிய மகங்கள யாவு மாற்றுதற் குரிய ராவார்.

(இ-ள்) பதுமன்=தாமரை மலர் ஆசனனாகிய பிரமன், முகத்தில் வேதியர்=தனது முகத்திலிருந்து பிராமணர்களையும், வெற்பு விறல் கெழு துணை தோளின்=மலையைப் போன்ற வலிமை பொருந்திய இரு புயங்களினின்றும், வேந்தர்=அரசர்களையும், செம்பொன குறங்கினில்=சிவந்த பொன்போன்ற தனது தொடைகளினின்றும், தீது அறு வணிகர்=குற்றமற்ற வைசியரையும், செய்ய பங்கயம் பாதத்தில் = சிவந்த தாமரைமலர் போன்ற பாதங்களினின்றும், சதுர்த்தர் = நான்காம் வருணத்தராகிய சூத்திரரையும், ஈன்றோன்=சிருட்டித்தனன் (அவருள்) முன் படைத்த மூவர்=முதலிற் சிருட்டித்த மூவர்களும், ஓதிய மகங்கள் யாவும் ஆற்றுதற்கு உரியர் ஆவார்=சொல்லப்பட்ட யாகங்கள் எல்லாவற்றையுஞ் செய்தற்கு அருகராவா

பிரமதேவர் தமது முகத்தினின்றும் பிராமணரையும், தோளினின்றும் க்ஷத்திரியரையும், தொடையினின்றும் வைசியரையும், பாதங்களினின்றுஞ் சூத்திரரையுஞ் சிருட்டித்தனர். அவருள் முன் மூவரே யாகங்களைச் செய்தற்குஉரியராவர் இவர் முறையே நான்கு வருணத்தார் எனப்படுவர். "ஓதியமகங்கள்" என்றதனால சோதிடடோமம்-அங்கிட்டோமம்-உத்தியம்-சோடசீ-வாசபேயம் - அத்திராத்திரம - சோமயாகம - சாதுர்மாசியம் - பௌத்திரமேதம-சௌத்திராமணி-புண்டரீகம் - ஆங்கிசயன் - இராசசூயம் - அச்சுவமேதம் - விச்சுவதித்து-பிரயமேதம்-பிரணவமேதம்-டசுபந்தம எனனும பதினெண்யாகங்களும், தேவயாகம்-பிரமயாகம - பூதயாகம் - மானுடயாகம் - பிதிர்யாகம் எனனும் ஐவகை யாகங்களும், ருதுசங்கமனம்-கருப்பாதானம - பும்சவனம் - சீமந்தம - விட்டுணு டலி - சாதகர்மம்-உத்தாபனம்-நாமகரணம்-அன்னப்பிராசனம்-உபநயனம் உபக்கிரமணம - கான்டமோசனம்-சமாவர்த்தனம்-விவாகம முதலிய கிரியைகளுந் தகுதியாகக் கொள்ளப்படும். இவருள் பிராமணன் சர்மா எனவும், க்ஷத்திரியன் வாமா எனவும், வைசியன் குப்தன் எனவும், சூத்திரன் தாசன எனவும் அழைககப்படுவர். பலாபால் விகுதி புணர்த்தியுரைத்தமையால் அவ்வவ் வருணத்து ஆடவாகளோடும அவர் மணஞ்செய்தற் குரிய மகளிருந் தோன்றினர் எனக கொள்க அதனை "மதுமடை யுடைககுஞ் செந்தா மரைமலர்ப பீட மேலோன-விதுமுகந் தினின்முன் றோற்ற விளங்கு வாசனையான் முன்னோர் - கதுமென மடவாரோடு முதித்தனர் கவின்செய் தோளின்-வதுவைசெய மடவாரோடு மன்னவ ருதித்தா ரனறே ஊருவி னுயகா மாத ருடனுதித தனராற் பின்னோர்-சாருமா மடவாரோடு தாளிடை யுதித்தார்" எனனுஞ் சூதசங்கிதைச் செய்யுட்களா னுணர்க. (கக)

வேதமோர் நானகு மாதி யந்தமவே றிலவாய் முன்ன
ரோதிய வாக்க தாகு முரைத்தவிம மறையிற் சார்ந்த
வேதமி னூல்கள் யாவும் விழுமிய விவற்றிற் றீர்ந்த
தீதுநூ லவற்றி னிணமேற்றோர் செய்விய ரல்ல ரனறே.

(இ-ள்) ஓர் நானகு வேதமும்=ஒப்பற்ற நான்கு வேதங்களும், ஆதி அந்தம் வேறு இல்ல ஆய்=ஓர்காலத்துத் தோனறுதலும் அழிதலும் ஆகிய வேறுபாடுகள் இல்லாதனவாய், முன்னர் ஓதிய வாக்கது ஆகும்=அநாதியே சிவபரம்பொருளாற் றிருவாய் மலர்ந்தருளபபட்ட பிரபல வாக்கியங்களே யாகும், உரைத்த இ மறையின் சார்ந்த = சொல்லப்பட்ட இவ்வேதங்களைச் சார்ந்தவைகளா யுள்ள, ஏதம் இல் நூல்கள் யாவும் = குற்றமில்லாத நூல்கள் எல்லாம், விழுமிய=சிறந்தனவே யாகும், இவற்றின் தீர்ந்த நூல் தீது=

இவைகளி னின்றும் வேறுபட்ட நூல்கள் தியனவே யாகும், அவற்றில் நின்றோர் = அவ் வேறுபட்ட நூலின்வழியே யொழுகுவோர், செவ்வியா அல்லர்=நன்மையினை யுடையர் அல்லர். அன்று—ஏ அசைகள்

வேதங்கள் அநாதியே சிவபெருமானால் திருவாய் மலர்ந்தருளப் பட்டன அவைகளைச் சார்ந்த நூல்களெல்லாஞ் சிறந்தன வாகும். சாராத நூலினவழி நிற்பவர் தீயராவர் என்பதாம். சிலவிடத்து விசேட சுருதி ஆகமம் எனறுகூறப் பட்டது.

வேதங்கள் அநாதியே யுள்ளன என்பது தோன்றப் பிரகதாரணி யோபநிடதம் "இருக்காதி வேதங்கள் பிரமத்தினது சுவாசமாம்." என்று கூறிற்று. ஆயினும் அவை பஞ்சப் பிரம மந்திர சரீரியாய் உள்ள சதாசிவமூர்த்தியால் பிரதம மகாசிருட்டி யாரம்பத்திலே தற்புருடம் முதலிய நான்கு முகங்களினின்றுந் தோற்றுவிக்கப் படும். உண்மைப் பொருளைக் கேட்டற்குக் கருவியாதலாற் சுருதி யெனவும், ஆதிகுருவினின்றுந் தொடங்கிப் பரம்பரியமாகப் பயிலப் படுதலினாலுங் கற்கப் படுதலாலும் ஆமினாயம் எனவும், முதலும் முடிவு மில்லாமையாற் சுயம்பு, ஆதிநூல், எழுதாக் கேள்வி எனவும் பெயர் பெறும். பிரளயங்க டோறுஞ் சிருட்டித் தொழிற் குரியராய் வரும் ஒவ்வோர் பிரமர்களாலும் உதாத்தம் அநுதாத்தம், சுவரிதம் என்னுஞ் சுரங்கள் பொருந்த அத்தியயனஞ் செய்து வெளிப்படுத்தப் படுதலின் பிரமனாலும் அருளப் பட்டனவெனச் சிலபுராணங்கள் பேசாநிற்கும் வேதங்கள் அநாதியில் நான்கு பாகங்களோடுங் கூடியதோர் வேதமாயிருந்து பின்னர்த் துவாபரயுகத்திற் றோன்றிய வியாச முனிவரால் இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என நான்காகப் பகுக்கப்பட்டு, முதலாம் வேதத்தைப் பைலமுனிவர்க் குபதேசிக்க, அவர்வழியால் இந்திரப் பிரமிதி, பாஷ்களர், போதியர், அக்கினிமாடகர் முதலினோர்க்கு உபதேசிக்கப் பட்டமையால் இருபத்தொரு சாகைகளாகவும், இரண்டாம் வேதத்தை வைசம்பாயன முனிவர்க்கு உபதேசிக்க, அவர்வழியாக யாஞ்ஞவற்கியர், வாசனேயர் முதலாயினோர்க்கு உபதேசிக்கப்பட்ட முறைமையினால் நூற்றொன்பது சாகைகளாகவும், மூன்றாம் வேதத்தைச் சைமினி முனிவர்க்கு உபதேசிக்க, அவர் வழியாகச் சுமந்து, சுத்துவா, சுகர்மா, இரணியநாபர், பவுஷ்பிஞ்சி, லோகாக்ஷி, கௌமுதி, லாங்கலி முனிவர் முதலாயினோர்க்குப் பலவகைப்பட மொழியப்பட்டமையால் ஆயிரஞ் சாகைகளாகவும், நான்காம் வேதத்தினைச் சுமந்து முனிவர்க்கு உபதேசிக்க, அவர் வழியாகக் கபந்தர், தேவதரிசர், பத்தியர், மேதன், பிரமபலி, சவுல்காயனி, பிப்பலாதன், சாபாலி, குமுதாதி, சௌனகர் முதலாயினோர்க்கு உபதேசிக்கப் பட்டமையால் ஐம்பது சாகைகளாகவும் பிரிக்கப் பட்டுப் பற்பல வாயின

வேதங்களைச் சார்ந்த நூல்களாவன—இருக்கு வேதத்திற்கு உரிய ஐதரேயம் முதற் சௌபாக்கியம் ஈறாகவுள்ள பத்து உபநிடதங்களும், யசுர் வேதத்திற்கு உரிய கடவல்லி முதல் முத்திகம் ஈறாக வுள்ள ஐம்பத்தோ ருபநிடதங்களும், சாம வேதத்திற்கு உரிய கேனம் முதற் சாபாலம் ஈறாகவுள்ள பதினாறு உபநிடதங்களும், அதர்வண வேதத்திற்கு உரிய பிரச்சினம் முதல் காருடம் ஈறாகவுள்ள முப்பத்தோ ருபநிடதங்களும் ஆகிய நூற்றெட்டு உபநிடதங்களும், சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந்தோவிசிதி எனனும் ஆறு வேதாங்கங்களும், ஆயுள்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அருத்தவேதம் என்னும் நான்கு உபவேதங்களும், காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கினேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோக்தம், பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்னும் இருபத் தெட்டுச் சிவாகமங்களும், விசுவான்மகம் முதலு

காரசிங்கம் இறுதியாகவுள்ள இருநூற்று நாற்பத்தேழு உபாகமங்களும், மநுஸ்மிருதி முதல் ஹாரீதஸ் மிருதி யீறாக வுள்ள பதினெண் மிருதிகளும், சொல்லப்பட்ட பிரமபுராணம் முதற் பிரமாண்டம் ஈறுவுள்ள பதினெண் மகாபுராணங்களும், சனற்குமாரம் முதற் பார்க்கவம் இறுதியாக வுள்ள பதினெட்டு உபபுராணங்களும்,பிரமமீமாஞ்சை, நியாயம் என்பவைகளுமாம். சாராத நூல்களாவன—சௌத்திராந்தகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிகன், ஆசீவகன், நிகண்டவாதி, தார்க்கீகன் முதலிய சமயிகளது பிடகம், மதனசாத்திரம் முதலிய நூல்களேயாம். (கஉ)

தோற்றுழி யுயிர்கள் யாவு மறிவினறித் தோற்றுந் தத்த
மாற்றுநல் லொழுக்கந் தன்னு லறிவுறு மவைக்கு நாளு
மேற்றதோர் காலந் தனனில் விருப்பொடு வெறுப்பாங் கெய்திப்
போற்றுறு தரும நீக்கித் தீவினை புகுது மன்றே.

(இ-ள்) உயிர்கள் யாவும் தோற்றுழி=ஆன்மாக்கள் எல்லாந் தோன்றுங் காலத்தில், அறிவு இன்றி தோற்றும் = நல்லறிவு இல்லாமல் தோன்றுவனவாகும், ஆற்றும் தம் தம் நல் ஒழுக்கத்தால்=செய்யபபடுகினற தமது தமது தருமச் செய்கைகளினாலே, அவைக்கு நாளும் அறிவு உறும்=அவ்வுயிர்களுககு நாடோறும் நல்லறிவு வளராநிற்கும், ஏற்றது ஓர் காலத்தில்=இயைந்த தாகிய ஒருகாலத்தில, விருபபு ஒடு வெறுப்பு எய்தி=அவாவினையும் வெறுப்பையும அடைநது, போறறு உறு தருமம் நீக்கி = (எவர்களாலும்) கொண்டாடப் படுகின்ற நல்லொழுககத்தை விடுதது, தீ வினை புகுதும் = பாவச் செய்கைகளிற் பிரவேசிககும். தன் இரண்டும், அனறு ஏ எனபவும் அசைகள்.

உயிர்கள் பிறவி யெடுக்குங்கால் சந்திரனை விட்டு ஆகாயத்திற் சேர்ந்து,வாயுவோடும் பரந்து, புகை நிறத்தனவாய் மேக ரூபத்தோடு கலந்து, மழைத் தண்ணீராகக் கீழே விழுந்து,வித்து வேர் கொடிகளிற் பொருந்தியாவது,சலத்திற் சேர்ந்தாவது,தந்தையாய் விதிக்கப்பட்டு இருப்பவனது உடற்குள்ளே ஆகார வழியாய்ச் சென்று,இரத்தமாய் விந்துவின கண் இருமாதந் தங்கிப போககாலத்தில மாதா வுதரததின் கருவிற் சென்று தங்கி,கருப்பாசயப்பை யுறுத்துதல், சலமபூரித்தல, உதராககினி சுடுதல், பிராணவாயு முரித்துத் தள்ளுதல், யோனித் துவாரத்தால நெருக்குண்ணுதல் ஆகிய பலவகைப் பெருநதுன்பங்களால மொத்துண்டு வாடி, அதனுல் அறிவுகெட்டுப பிறத்தலின "தோறறுழி யுயிரகள் யாவுமறிவின்றித் தோற்றும,, எனறதாம் பிறந்து தத்தமக்குரிய வருணச்சிரம தருமங்களை வழுவறநடத்தலால் ஏனை யுயிர்களின கண்ணும இறைவ னிடத்தும அன்பு தோன்றும்; அது தோனறவே அருளும்,அவ்வருள் வந்தவழித் தவமாடசியும்,அஃதுற்ற விடத்துச் சிவஞானமும் எய்தப்பெற்றுச் சிவகதி சேரும் ஆகலின "தத்த மாற்று நல்லொழுககந் தன்னுலறிவுறும்,,என்றும், இருவினைகளும் அவறறிறகியைய முக்குணங்களும் மாறி மாறித் தோன்றலின் தீவினையினும் புகும் என்பான் "அவைக்குநாளும...தீவினை புகுது மன்றே,, எனவுங் கூறியதாம். அது "தருமமே போற்றிடி னன்பு சார்ந்திடு — மருளெனுங் குழவியு மணையு மாங்கவை — வருவழித் தவமெனு மாட்சி யெய்து மேற்—றெருளுறு மவ்வுயிர் சிவனைச் சேருமால்,, எனக் கந்தபுராணத்தும், நல்வினை திறம்பித் தீயவாய்த் தீய நல்லவாய் வருபவு முளவே-வல்வினை மெலிய வினைகளாய் மெலிய வலியவாய் வருபவு முளவே-நல்வினை செயும்போ ததன்பயன் போலத் தீயவு நணுகவு முளவே - புல்வினை செயும்போ ததன்பயன் போல நல்லவும் புணர்தலு முளவே. ,, எனத் தணிகைப் புராணத்தும் கூறியருளிய வாற்றான் அறியப்படும். (கந)

உரைத்திடு மணிமா வாதி சித்திக ளுறுத லாற்று
ணிரைத்தநற் பொருள்கள் வாளா புகுந்திடா நெறியிற் றீர்ந்து
வருத்துதா மதத்தி னாய சித்திவந் தெய்து மீதும்
பொருத்துகா லங்க டம்மிற் பொன்றிடு மென்ப மாதோ.

(இ—ள்) உரைத்திடும் அணிமா ஆதி சித்திகள்=(அமானுஷ்யாதிவிஷயமெனப் பகுத்தமக்கள் யாவரும்) நூல்களிற் கூறப்படுகின்ற அணிமா முதலிய எண்வகைச் சித்திகளும், உறுதல் ஆற்றல்=பொருந்தப் பெறுந் தன்மையினால், நிரைத்த நல் பொருள்கள் = வரிசையாகிய நல்ல பொருள்கள் யாவும், வாளா புகுந்திடும் நெறியின் தீர்ந்து = வருத்தமில்லாது வரப் பெறுகின்ற யோக மார்க்கத்தினின்றும் விலகி (வேறு மார்க்கத்தி னிற்றலால்) வருத்து தாமதத்தின் ஆய சித்தி வந்து எய்தும்=துயருறுத்துகின்ற தாமத குணத்தனவாய பிற சித்திகள் வந்து கைகூடப் பெறுவர், ஈதும்=இத்தாமத குண சித்திகளால் வரும் பொருள் யாவும், பொருத்து காலங்கள் தம்மில் பொன்றிடும் என்ப=வருகின்ற காலங்களிலே அழிந்துவிடும் என்று சொல்வர் பெரியோர் புகுந்திடா—ஆ, சாரியை

அணிமா ஆதி சித்திகளாவன—அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டுமாம் இவற்றுள் அணுக்கள் தோறும் மிகவும் நுண்ணிய அணுருவமாகச் சென்றிருத்தல் அணிமா பிருதிவி தத்துவ முதற் சிவ தத்துவ மீறாக வுள்ள தத்துவங்கடோறும் உள்ளும் புறமும் அகலாது வியாபித்திருத்தல் மகிமா. மேரு பாரம்போல இருக்கும் யோகியை எடுத்தால், பரமாணுப்போல எடுத்தற்கு மிகவும் இலகுவா யிருத்தல் இலகிமா பரம அணுப்போல இருக்கும் யோகியைக் கையாற் றூக்கின் மகாமேரு மலையைப்போல எடுத்தற்குக் கனமா யிருத்தல் கரிமா. பாதலத்தில் இருந்தோன் பிரமலோகத்திற்குச் செல்லுதலும், அங்கிருந்தோன் பாதலத்திற்குப் போதலும் பிராத்தியாம். பரகாயத்திற் பிரவேசித்தலும், விண்ணுலகிற் சஞ்சரித்தலும், விரும்பிய போக்கியப் பொருள்களை எய்தப் பெறுதலும், சூரியன் போலத் தன்சரீர விளக்கத்தாற் கண்களுக்கு எப்பொருள்களையுங் காணச் செய்தலும் பிராகாமியமாம். உருத்திரமூர்த்தியைப்போல முத்தொழிலையுஞ் செய்து சூரியன் முதலிய கிரகங்களும் மற்றவைகளுந் தன் பணிகேட்டு நடக்க விளங்குதல் ஈசத்துவம் அவுணர், பறவை, மிருகம், பூதம், மனிதர், திக்குப்பாலகர் முதலாயினோரைத் தன்வசமாகக் கொண்டு ஆளுகை வசித்துவமாம் இவை யட்டாங்க யோகத்தை யியற்றினோர்க்கே சித்திக்கும் அவர்கள் இவைகளை விரும்பாராயினும் அவரது தேகச் சாயல்போல இவைகள் அடைந்து அவரது பெருமைகளை விளக்கும் என்க. சத்துவகுண சித்தி இராசதகுண சித்திகளும் உளவாம் அவற்றை வைணவ புராணத்திற் காண்க

தாமதகுண சித்திகளாவன—ஆகருடணம், அதிரிசியம், அஞ்சனம், வசியம், இரசவாதம், வயத்தம்பம், தம்பனம், மோகனம் என்னும் எட்டுமாம் தூரத்திலிருக்கும் பொருளைச் சமீபத்தில் வருவிப்பது ஆகருடணம். காணப்படும் பொருள்களைக் காணுமற் செய்விப்பது அதிரிசியம் காணப்படாமல் இருக்கும் பொருள்களை நேரே காணும்படி காட்டுவிப்பது அஞ்சனம் பகைவரையும் உறவராக்கிக் கொள்வது வசியம். செம்பு, பித்தளை முதலிய தாழ்ந்த லோகங்களை மாற்றுயர்ந்த லோகமாகச் செய்வது இரசவாதம். பாலியரை விருத்தர்கள் ஆகவும், விருத்தர்களைப் பாலியர்கள் ஆகவுஞ் செய்வது வயத்தம்பம். கட்டுப் படாதவற்றையுங் கட்டுக்குள் அகப்படுத்துவது தம்பனமாம் தன்னை யாவரும் மோகிக்கச் செய்வது மோகனமாம். இவற்றை "அகர மாதிமூன் றாகிய வாகருடணமே-புகரி லாவதி ரிச்சிய மஞ்சனம் பொருவில்-வகர மாதிமூன் றாகிய வசியமே வாதமிகலி லா வயத் தம்பமென் றினனவை செய்தும்." எனவருஞ் செய்யுட்களான் அறிக. ()

உடுப்பு முகத்த கூர்ங்கொழுவி னுழுதற் செயலா னுளரு
மடுத்து முயன்ற வாணிகத்தா லடைவர் பயன்மற் றவர்புரிவான்
றொடுத்த கருமத் தொடர்பனைத்துந் தொகுத்தான் வேதன் சுவாயம்பு
விடுத்தற் கரிய கருமங்க ளனைதது முறையின் விளம்பினனே.

(இ-ள்.) உடுப்பு முகத்த கூர் கொழுவின்=உடும்பினைப் போன்ற முகத்தினை யுடைய கூர்மையாகிய கொழுவேற்றிய கலப்பை கொண்டு, உழும் நல் செயலால் = நிலத்தைக் கிளைக்கின்ற உத்தம மான உழவுத தொழிலினாலும், நாள் நாளும் அடுத்து முயன்ற வாணிகத்தால் = நாடோறும் இடைவிடாது செய்கின்ற வியாபாரத் தொழிலினாலும், பயன் அடைவர்=சிலர் பிரயோசனத்தை யடைவார்கள், மற்றவர் புரிவான் தொடுத்த கருமம் தொடர்பு அனைத்தும்=அங்ஙனமா வுள்ள அவா செய்யத்தொடங்குங் கரும சம்பந்தங் கள் எல்லாவற்றையும், வேதன தொகுததான்=பிரமதேவர் தொகைபடக் கூறினர், விடுத்தற்கு அரிய கருமங்கள் அனைத்தும் = நீக்குதற்கு முடியாத கிரியைகள் முழுவதனையும், சுவாயம்பு முறையின் விரிதது விளம்பினான்=சுவாயம்பு என்னும் மநுவரசன கிரமமாக விரிவுபடுத்தி யுரைத்தான்.

உடும்பு உடுப்பு என வலித்தல விகாரம். கொழுவேற்றுதறகு இடனுயுள்ள கலப்பையினைக் கொழு என்றது ஆகுபெயர். உழவுத்தொழிலே யுத்தமமான தொழில என்பது "சுழன்றுமேர்ப் பினன துலக மதனா—லுழநது முழவே தலை ,, எனத் திருக்குறளினும், அலகிலா மறைவிளங்கு மநதணரா குதிவிளஙகும் - பலகலையாந தொகைவிளங்கும் பாவலர்தம் பாவிளங்கு-மலா குலாந திருவிளங்கு மழைவிளங்கு மனுவிளங்கு-முலகெலாமொளி விளங்கு முழவருழு முழவாலே,, என ஏரெழுபதினும் உரைத்தமையாற் பெறப்படும். பிரமதேவர் தொகுத்துரைத்த நூலிற்குக் கருமபாகை யெனறு பெயர் சுவாயமபு மநு விரித்து உரைத்ததற்கு மநுநூல் என்று பெயர் நாள் நாளும எனற அடுக்குப் பன்மைப் பொருளில் வந்தது. மற்று-பிறிது பொருள்பட நினறது. (கரு)

மனுவாண் டுரைத்த கருமத்தின் வழியே பிருகு முதலான
முனிவோர் யாருந் தெளிவுறமுன் மொழிந்தா ரன்னோர் மொழிந்தநெறி
யினிதி னோத லோதுவித்த லியல்பின் வேட்டல் வேட்பித்தல்
புனிதர்க் கித லுமேற்றன் மறையோா புரியுந் தொழிலன்றே.

(இ-ள்.) ஆண்டு மநு உரைத்த கருமத்தின் வழியே=அக்காலத்திற் சுவாயம்பு மநு சொல்லிய தருமசாத்திரத்திறகு வழிநூலாக, பிருகு முதல் ஆன முனிவோர் யாரும்= பிருகு முதலாகிய முனிவர்கள் பலரும், முன் = முற்காலத்தில், தெருள் உறமொழிந்தார்=தெளிவு பொருந்த நூலகளைச் சொன்னார்கள், அன்னோர் மொழிந்தபடி=அம்முனிவர் செய்த சாத்திரஙகளிற சொலலிய விதிப்படி, மறையோர் புரியும தொழில=பிராமண வருணத்தவர் செய்யுந் தொழில்களாவன, இனிதின் ஓதல் ஓதுவித்தல் = தவறில்லாமல் வேதங்களை ஓதலும ஓதுவித்தலும், இயலபின வேட்டல் வேட்பித்தல் = முறைப்படி யாகஞ் செய்தலும் யாகஞ் செய்வித்தலும,புனிதர்க்கு ஈதல்=சற்பாத்திரர்களுக்குத்தானங் கொடுத்தலும், தாம் ஏற்றல்=நற்பொருள்களைத் தானமாகத் தாம் வாங்குதலும்ஆகும்.

அன்று—ஏ அசைகள். மநுதரும நூற்படி பிருகு முதலிய முனிவராற் செய்யப்பட்ட நூல்கள் ஸ்மிருதிகளாம். அவைகளிற் கூறியபடி பிராமண வருணத்தார்கு ஓதல் முதலாய அறுவகைத் தொழிலு முரிய. இவை யொவ்வொன்றும் மும்மூன்றாய்ப் பதினெட்டாகும். இருக்கு யசுர் சாமம் என்னு மூன்றும், திராவிடத்து இறையனாரும் அகத்திய

னும் மார்க்கண்டேயனும் வான்மீகனும் கௌதமனும் தொல்காப்பியனும் போல்வார் செய்தவுமாகிய தலையாய நூல்களும்,அதர்வணமும் ஆறங்கமும் தருமநூலும் இடைச்சங்கத்தார் செய்தவுமாகிய இடையாய நூல்களும்,புராண இதிகாசங்களும் கடைச்சங்கத்தார் செய்தவுமான கடையாய நூல்களும் ஆகிய முப்பகுதியினால், ஓதலும் ஓதுவித்தலும் அறுவகைப்பட்டன யாகஞ் செய்தலாவது ஐகதீயாயினும் முத்தீயாயினும் உலகியற் றீயாயினும் ஒன்று கொண்டு அவி முதலியவற்றை மந்திர விதியாற் கொடுத்துச் செய்யுங் கிரியை. வேட்பித்தலாவது மாணுக்கற்கு அவன் செய்த யாகங்களாற் பெறும்பயனைத் தர வல்லமையுடைமை. இவை ஆறு டகுதிய வாதல் போதாயனீயம் முதலியவற்று ணுணர்க. ஈதலாவது வேள்வி யாசானும்,அதற்குத் துணையாயினும,ஆண்டு வருதோரும இன்புறுமாறு கொடுத்தலின் மூவகைத்தாம் ஏற்றலாவது கொளளத்தகும் பொருளையறிந்து கொள்ளுதல், உலகினை யளிப்பினும் உணவினை யளிப்பினும ஒப்ப நிகழும் உள்ளம பற்றியும், தாஞ்செய்வித்த யாகம் பற்றியும், கொடுக்கின்றாள உவகை பற்றியும், கொள்பொருளின ஏற்றிழிவு பற்றியும் மூவகைத்தாதல் காண்க அத்தியயனஞ் செயதல் செய்வித்தல வேட்டல் வேட்பித்தலான வரும் பொருள்களே யனறி, தாயமினறி இறந்தவரது பொருளைக் கொள்ளுதலும்,அரசு கொள்ளுதலும், துரோணுசாரியனைப் போல்வார் படைக்கலங் காட்டிக் கொள்ளுதலும் உரிய வென்ப இவற்றை''அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்,, என்ற புறத்திணையியற் சூத்திரத்திற் காண்க ''அவற்றுள், ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன.,, என்ற அகத்திணையியற் சூத்திரப்படி, தூது முரிய தெனக அந்தணன றூதுசென்றமை ''விருந்தின்மன்னர்,, என்ற அகநானூற்றுச் செய்யுளாற் பெறபடும். (கரு)

ஓதல் புரவி மகமுதல வேள்வி யாற்ற லமருடற்ற
லீத லரசா தொழிலியல்பிற் கொடுத்த லோதன மகமியற்றல்
றீதி லுழவு வாணிகமா னளித்தல் வணிகா செயலிடுதல
கோதி லேவல செயல்பாக வெச்சம பினனோர்க கெனக்குறித்தார்.

(இ ள்) அரசர் தொழில = சத்திரியரது தொழில்களாவன, ஓதல் = வேதமுதலிய நூல்களை யோதுதலும், புரவி மகம முதல வேள்வி ஆற்றல = அசுவமேத யாக முதலிய வேள்விகளைச் செய்தலும், அமர் உடற்றல=எதிர்த்தவருடன யுத்தஞ் செய்தலும், ஈதல்= கொடுத்தலுமாம், வணிகர் செயல = வைசியரது தொழில்களாவன, இயல்பின் கொடுத்தல்=விதிப்படி தானஞ் செய்தலும், ஓதல = (வேதாதி நூல்களை) ஓதுதலும், மகம் இயற்றல்=யாகஞ் செய்தலும், தீது இல உழவு=கொடுமை யிலலாத உழவு செய்தலும், வாணிகம் ஆன் அளித்தல்=வியாபாரஞ் செயதலும் பசுக காத்தலுமாம், பினனோர்க்கு= சூத்திரர்களுக்கு (உரிய தொழிலகளாவன) இடுதல = தானஞ் செயதலும, கோது இல் ஏவல் செயல்=குற்ற மிலலாத ஏவலைச செய்தலும,எச்சம் பாகம என குறித்தார=யாகாதிகளுக்குத் தாஞ்செய்தற்குரிய பாகங்களைச் செயது கொடுத்தலும எனறு (முனிவர்) விதித்தனர்.

அந்தணர்க் குரியவாக விதிக்கப்பட்ட வேள்விகளைச் செய்யாது தாங்கவேள்வி இராசசூயம் முதலிய யாகங்களைச் செய்தலே விதியாம் எனபான ''புரவி மகமுதல வேள்வி யாற்றல்,, என்று கூறினன் ''ஐவகை மரபின் அரசர் பக்கமும்,, என்று ஆசிரியர் தொல்காப்பியனர் கூறியாங்கு ஓதல, வேட்டல், ஈதல், காத்தல்,தண்டஞ் செய்தல் என்னும் ஐவகைத் தொழில்களுங் கொள்ளபபடும். அரசர் தானங் கொடுத்த லாவது முற் கூறிய பதினெண்வகைத் தானம் பண்ணுதலே யன்றி, கலிங்கத்தைக் கழுத்து யாத்துக் குளம்பினுங் கொம்பினும் பொன் அணிந்து விளங்கும் பசுக்களும், கமுகு முதலியசோலை சூழ்ந்த மனையும், கன்னியரும் பிறவுங் கொடுத்தலும், பரசுராமன் ஒப்பப் பூமி கொடுத்

தலும் போல்வனவாம். காக்கப் படும் உயிர்க்குத் துன்பஞ் செய்யும் மக்களே யாயினும், விலங்குகளே யாயினும், பகைத் திறத்தை யாயினும், அறஞ் செய்யா அரசனா யாயினும் ஒறுத்து விதிவழி செய்ய வேண்டு மென்பான் "அமருடற்றல்,, எனப் பொது வாகக் கூறினன். களவு செய்தோர் இருக்கையிற் பொருள் கொள்ளுதலும், இறைப் பொருள் கொள்ளலும், அரசரிடத்துத் திறைப்பொருள் ஏற்றலும், தருமம் பொருளாகப் பகைவர் நாடு கொள்ளுதலும், சுற்றத்தாரும் அந்தணரும் இல்லாவழிப் பிறன்றாயங் கொள்ளலும் ஆகிய இவை போன்றனவு முளவாகலின கோடற் றொழிலு முரிய வென்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியரும். "இரு மூன்று மரபி னேனோ பக்கமும்,, என்று விதந்த வாற்றானே வைசியர்க்கு ஓதல், வேட்டல், ஈதல, உழவு, நிரையோம்பல் வாணிகம் ஆகிய அறு வகைத் தொழில்களும்,சூத்திரர்க்கு வேதம ஒழிந்த மற்றநூல்களை ஓதலும, ஈதலும்,உழவும், பசுக்காத்தலும், வாணிகமும், வழிபாடும் ஆகிய அறுவகைத் தொழில்களும் உரிய வென்க. இனி வேளாளர்க்கு ஏவலைக் கூறுது பெண் கொள்ளுதல் பற்றி வேட்டல உள தென்று வேட்டலைக கூட்டி ஆறெனபாரு முளர் ஏவல் உரியதாயினும் அதுவும் அரசராற் சிறப்பெய்தாத வேளாளர்க்கே யுரித்தெனக ஏவல்—ஆகுபெயா (௧௭)

இனைய வாறு தொழிலமைத்தாங் கியலாச் சிரம நிறுவினு
ரனைய யாவை யெனிற்பிரம சரிய மமைந்த வில்வாழ்க்கை
புனைபொற் சடைவள் ளுகிர்குறையா வானப் பிரத்தம் புலன்வாட்டி
மனமுற் றடக்கி யெவற்றினையு மறுக்குஞ் சந்நி யாசமனறே.

(இ ள்) இனைய ஆறு தொழில அமைத்தாங்கு=இந்த விதமாக நால்வகை வருணத்தாருக்குந் தொழிலை விதித்தாறபோல, இயல் ஆச்சிரமம் நிறுவினர் = ஒழுகவேண்டிய ஆச்சிரம ஒழுககஙகளையும நிலைபெறச் செயதனா, அனைய யாவை எனில்=அவை யெவை யென்னில், பிரமசரியம்=பிரமசரியமும, அமைந்த இல வாழககை=பொருந்திய கிருகத்தமும், புனை பொன சடை வள் உகிர் குறையா = தரிதத பொனபோன்ற சடையினையுங் கூர்மை யாகிய நகத்தையும் பிளனப் படுத்தாது (வைத்திருககும) வானப பிரத்தம் = வானப் பிரத்தமும், புலன வாட்டி மனம முறறு அடக்கி=பஞ்சேந்திரியங்களையும் ஒடுக்கி மனச்செயல்கள் முழுவதனையும ஒருமைப்படுத்தி, எவறறினையும அறுக்கும சந்நியாசம்= எப்பொருட் பற்றுககளையும் ஒழித்துவிடுகின்ற சந்நியாச ஆச்சிரமமும ஆம்

நால்வகை வருணஙகளையும் அவற்றிற் குரிய தொழிலகளையும் நிலைநிறுத்தினற போல நால்வகை யாச்சிரமஙகளையும விதித்தனா. அவை பிரமசரியம் கிருகத்தம வானபபிரத்தம சந்நியாசம் என்பனவாம இயல ஆச்சிரமம - வினைத்தொகை. கிருகத்தம் இலலறம் எனவும், சந்நியாசம் துறவறம் எனவும படும்.ஆங்கு எனபது "கயநா டியானையின முகனமர்ந் தாங்கு,, என்றாற் போல வநத வினையுவம உருபிடைச்சொல், அது "அனன வாங்க மான விறப்ப—வெனன வுறழத் தகைய நோக்கொடு—கணணிய வெட்டும வினைபபா லுவமம். ,, என்ற தொல்காப்பிய உவமவியற்சூத்திரத்தா ற பெறபபடும. (௧அ)

இல்வாழ் வுற்றோர் தருமமழற் கரும மதிதி பூசையெச்சங்
கொல்லேற் றணண லடிபணிதல கொடுத்தல் வானப் பிரத்தர்செய
றொல்லா ரணங்கள் பயிறலழற் கரும மூல மடகுதுய்த்த
னல்லோ ரெதிரிற் பகுத்தருந்த னரையே றுயாததோ னடிபோற்றல்.

(இ-ள்.) இல் வாழ்வு உற்றோர் தருமம்=கிருகத் தாச்சிரமத்தவரது ஒழுக்கமாவது, அழல் கருமம்=அக்கினி காரியஞ் செய்தலும்,அதிதி பூசை=விருந்தினரை உபசரித்தலும்

எச்சம்=யாகஞ் செய்தலும், கொல் ஏறு அண்ணல் அடி பணிதல்=கொல்லுந் தொழிலைக் கொண்ட இடபவாகனத்தை யுடைய சிவபெருமானது திருவடிப் பூசனை செய்தலும், கொடுத்தல் = தானஞ் செய்தலுமாம், வானப்பிரத்தர் செயல்=வானப்பிரத்தரது ஒழுக்கமாவது, தொல் ஆரணங்கள் பயிறல் = பழமையாகிய வேதங்களை யத்தியயனஞ் செய்தலும், அழல் கருமம்=அக்கினிகாரியஞ் செய்தலும், மூலம் அடகு துய்த்தல் = கிழங்கு இலைக்கறி முதலியன புசித்தலும், நல்லோர் எதிரின் பகுத்து அருந்தல்=சற்பாத்திரர்கள் வந்தால் அவர்களுக்குப் பங்கு செய்து கொடுத்துத் தாமும் உண்ணுதலும், நரை ஏறு உயர்த்தோன் அடி போற்றல் = வெள்ளிய இடபத்தைக் கொடியாகத் தூக்கிய சிவபெருமானது திருவடிகளைத் துதித்து வழிபடுதலுமாம்.

இல்வாழ்வார்க் குரிய அழற்கருமம் ஆவது, சூரியன் உச்சியில் வருங்காலத்துச் செய்யப்படுங் கிரியை. புதிய செந்நெலவரின் பூரணைகட்டோறுஞ் செய்தல் வேண்டும். அன்றியும் மார்கழி தை மாசி மாதங்களிலே அபரபக்கத்தில் அட்டகசிராத்தஞ் செய்தலுமாம் இவ்வக்கினிகாரியம் சவுத்தம் என்றும், சமார்த்தம் என்றும் இருவகைப்படும். வானப்பிரத்தர்க்கு அக்கினி காரியமாவது பஞ்ச மகாயஞ்ஞங்களைச் செய்தலாம். அதிதி=திதியில்லாதவன், எனவே நிலைத்தலில்லாதவன் அவன் ஓரிடத்தில் ஒருநாள் இருந்தானாயின் அதிதியெனப் படுவான் என்க. இவ்வாச்சிரமத்தார்க்குரிய விசேடதருமங்களைப் பின்வரும் இல்லறம், இல்லறபேதம் உரைத்த அத்தியாயங்களிலும், வானப்பிரத்த முரைத்த அத்தியாயத்தின் கண்ணுங் காண்க. கொல் ஏறு என்றது திருமால் நந்தியாகவும், நரை ஏறு என்றது தரும நந்தியாகவுங் கொள்க. (௧௬)

முற்றத் துறக்கு முதுக்குறைந்தோர் தருமமைய மேற்றுண்டல
பற்றற விருந்து தவமாற்றன் மௌனம் பராபாவனைபுரிதன்
மற்றைப் பிரம சரியத்தோர் தருமம் வளர்தீத் தொழில்சந்தி
யற்ற நோக்கிச் செயல்பலியேற் றுண்டல் குரவ னடிபணிதல்.

(இ-ள்) முற்ற துறக்கும் முதுக்கு உறைந்தோர் தருமம்=பற்றுக்கள் எல்லாவற்றையும் விடுக்கின்ற பேரறிவுடையராகிய சந்நியாச ஆச்சிரமத்தாரது அறமாவது, ஐயம் ஏற்று உண்டல்=பிச்சை யெடுத்து உண்ணுதலும், பற்று அற்று இருந்து தவம் ஆற்றல் = இருவகைப் பற்றுக்களும் இல்லாமலிருந்து தவத்தைச் செய்தலும், மௌனம் = மோனநிலையெய்தலும், பராபாவனை புரிதல்=பிரமநிட்டை கூடுதலும் ஆகும், மற்றை பிரமசரியத்தோர் தருமம் = ஏனைப் பிரமசரிய ஆச்சிரமத்தாரின் தருமமாவது, வளர் தீ தொழில்=பெருக்கத்தைத் தருகின்ற அக்கினி காரியஞ் செய்தலும், அற்றம் நோக்கி சந்தி செயல்=விதித்த காலங்களை யாராய்ந்து சந்தியாவந்தனஞ் செய்தலும், பலி ஏற்று உண்டல்=பிச்சை யெடுத்து உண்ணுதலும், குரவன் அடி பணிதல்=ஆசாரியனது பாதங்களை வணங்கி வழிபடுதலுமாம்.

முதுக்கு=பேரறிவு, உறைந்தோர்=இருக்கப் பெற்றவர். அதனை "மூதுணர் வுடைமை தன்னான் முதுக்குறை வினன்", எனப் பின்னர்க் கூறுமாற்றா னறிக. பேரறிவாவது மெய்ஞ்ஞானம். சந்நியாச ஆச்சிரமத்தார் ஏழுவீட்டிற் சென்று பசுக்கறக்கு நேரநின்றேற்று, எட்டுக் கவளமுள்ள அன்னம் புசித்தல் வேண்டும். இவர்களுள் அந்தணர் பிச்சையேற்குங்கால் பிச்சாந் தேகி யென்றும், அரசராயின் பிச்சாம்பவதி தேகி யென்றும், வணிகர் வேளாளர்களாயின் பிச்சாந் தேகி பவதி யென்றுங் கூறி யேற்றல் வேண்டும். அது "அந்தணர் பவதி பிச்சாந் தேகியென் றறைந்து மன்றற் – பைந்தொடை யரசர் பிச்சாம் பவதிநற் றேகி யென்று–மெந்திர வணிகர் பிச்சாந் தேகிநற் பவதி யென்று • நந்துவி லை

மேறற ஞுன்றமை வழக்க மாமால் ,, எனக் கருமமுரைத்த வத்தியாயத்திற் கூறப் பட்டது சய்=செவ்வே, தியா=தியானிக்கின்ற, வந்தனம்=வழிபாடு. இருவகைப் பற்று-அகங்கார மமகாரங்கள். இவ்விருவகை யாச்சிரமத்தவரின் விசேடதருமங்களைப் பின் வரும சந்நியாசமுரைத்த வத்தியாயத்தினும், பிரமசரிய முரைத்த வத்தியாயத்தினுங் கண்டு கொள்க. (௨௦)

நீத்த பருவ மோரைந்து நீக்கித் தனது மனைக்கிழத்தி
பூத்து நீரா டியநாட்டொட் டுரைத்த நாளிற் புணர்கிற்போன்
வாய்த்த வில்வாழ் பவனெனினும் வானப் பிரத்த னறந்துறந்தோ
னேத்தும் பிரம சாரியினும் பிரம சாரி யெனபரால்.

(இ-ள்.) நீத்த ஓர் ஐந்து பருவமும நீக்கி = (புணர்ச்சிக்கு) விலக்கப்பட்ட ஐந்து பருவ காலங்களையும் ஒழித்து, தனது மனைக்கிழத்தி = தனது மனைவியானவள், பூத்து நீராடிய நாள் தொடடு=மாதருது வந்து முழுகிய தினந் தொடங்கி,உரைத்த நாளில் புணர்கிற்போன்=விதிக்கப்பட்ட தினங்களிற் கூடுவோன, வாய்த்த இல்வாழ்பவன் எனினும்= பொருந்திய கிருகத்த னென்றாலும் (அவன்) வானப்பிரத்தன் அற துறந்தோன்=வானப் பிரத்தனினுஞ் சந்நியாசியினும், ஏத்தும் பிரம சாரியினும = புகழப்படுகின்ற பிரமசாரியினும் பிரமசாரி என்பர் = (மேலான) பிரமசாரி யென்று கூறுவார்கள்.

புணர்ச்சிக்கு விதிக்கப்பட்ட தினங்களிலே தன்மனையாளோடு கூடுவோன் இல்வாழ்வானெனினும், வானப்பிரத்தன் சந்நியாசி பிரமசாரி யென்னு மூவர்களினின்றும் மேலாய பிரமசாரி யெனபபடுவான். புணர்ச்சிக்கு விலக்கப்பட்ட ஐந்து பருவமாவது-நட்சத்திரங்களுள் மூலம்,மகம், திருவாதிரை,திருவோணம, சென்மத்திரயம் என்னும் ஐந்தும், திதிகளுள் அட்டமி, ஏகாதசி, சதுர்த்தசி, அமாவாசி, பௌர்ணிமை என்னும் ஐந்துமாம இவையன்றி சஷ்டி, திரயோதசி, வியதிபாத யோகம், மாசப்பிறப்பு, விரததினம்,சிராத்ததினம், சந்தியா காலங்கள், அர்த்த ராத்திரி, பகற் காலம், என்பவைகளும், வீட்டுக்கு விலக்கானவள் முதலாநாட் சண்டாளிக்கும், இரண்டாநாட் பிரமகொலை செய்தவளுக்கும்,மூன்றுநாள் வண்ணாத்திக்கும ஒப்பாளாதலின அந்நாட்களும விலக்கப்பட்டன. இக்காலங்களில ஒருவன் புணர்வானாயின் அவன பாவம் வறுமை நோய் அற்பாயுள் என்பவற்றை யடைதலன்றி, கருச்சிதைத்த பாவத்தையும் அடைவான் அவன் செய்யுஞ் சந்தியா வந்தனம் பூசை முதலிய சற்கருமங்களும் பலனைக் கொடுக்காவாம். இறப்பினும் நரகத்திற் சேர்வன் பிள்ளை பிறக்கினுங் க்ஷயரோக முதலிய நோய்களை யடைந்து வருந்தும் வீட்டுக்கு விலக்கான நாலாநாள் முதற் பன்னிரண்டு நாள்வரைக்கும் உள்ள காலமே விதிக்கப்பட்ட காலமாம் அவற்றுள்ளும முற்கூறிய காலங்களை நீக்கிச் சேரக்கடவன். அதனை, "பூத்த காலைப் புனையிழை மனைவியை நீரா டியபின் னீரா று நாளுங் கருவயிற் றுறூஉங் கால மாதலிற்-பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன் ,, என நாற்கவிராசநம்பியகப்பொருளினும், "தீண்டாநாள் முந்நாளு நோக்கார்நீ ராடியபின - னீரா று நாளு மிகவற்க வென்பதே-பேரறி வாளர் துணிபு ,, என ஆசாரக்கோவையினுங் கூறுமாற்றா னறிக். அவ்வாறு சேர்வானாயின் சரீரசுகம், செல்வம், சற்புத்திரப்பேறு, தருமவிருத்தி முதலிய புண்ணியங்களை யடைவான. பிறக்கும் பிள்ளையும் பலமும்,அழகும், அறிவும, நோயின்மையும், தீர்க்காயுளு முடைத்தாகப் பிறக்கும் என்க இல்-ஆறறவிடைநிலை. (௨௧)

அருப்பு முலையார் பூப்பெய்தி நீராட் டயரு நாண்முதலாத்
தெரித்த நாட்க ளீராறிற் றிங்க டோறு மகிழ்சிறப்பக்
கருப்ப மின்றி னுறுமளவுங் கலவா னுயிற் கருவழித்தோ
னுருப்ப நரக மிவற்காகு மென்ன மறைக ளோதுமால்.

(இ-ள்.) அருப்பு முலையார் பூப்பு எய்தி=பூவரும்பினை யொத்த தனங்களையுடைய மனைவியர்கள் மாதருது வாகி, நீர் ஆட்டு ஆரும் நாள் முதலா = நீரிலே முழுகுதல் செய்த (நாலா) நாள் முதலாக, தெரித்த நாள்கள் ஈர் ஆறின் = விதித்துச் சொல்லிய பன்னிரு தினங்களி னுள்ளும், இனிதின் கருப்பம் உறும் அளவும் = நன்மை யுடன் கருப்பந் தரிக்கும் வரையும், திங்கள் தோறும் மகிழ் சிறப்பு கலவான் ஆயின் = மாதந்தோறும் உவகை பொங்கப் புணராது விடுவனேல், கரு அழித்தோன் = கருவினைச் சிதைத்த பாவத்தை யடைவான், இவன் கு=இவனுக்கு, உருப்பம் நரகம் ஆகும் என்னா = வெப்பமுள்ள நரகத்துன்பம் வருமென்று, மறைகள் ஓதும்=வேதங்கள் கூறுகின்றன.

அரும்பு - அருப்பு என வலித்தல் விகாரம். கலவானாயின் என ஆண்பாலகத்தை ஒருமையாற்கூறி, அருப்பு முலையார் எனப் பெண் வருக்கத்தைப் பன்மையாற் கூறியது ஒருவற்கே இல்லக் கிழத்தியோடு காமக் கிழத்தியரும் உளராகலின் என்க. இல்வாழ்வான் என்பான் சற்புத்திரப் பேற்றினிமித்தம் மாதத்தில் ஒருநாளே புணர வேண்டு மென்று ஆகமங் கூறலின், பன்னிரு தினங்களுள் என்றுரைக்காது, பன்னிரு தினங்களினுள் எனப் பிரிவுபட வுரைத்தாம். அங்ஙனம் புணராதுவிடின் செய்யவேண்டிய தருமங்களைச் செய்தற்குரிய சற்புத்திரனைப் பெறுதற்கு இடமில்லாமை யாகிய பாவஞ் சித்தித்தலால் நரகத்தை யடைவர் என்றதாம். புணரக் கூடாத அகாலத்திற் புணர்ச்சவன லவணம் என்னும் நரகத்தையும், கருவை யழித்தோன் உரோதம் என்னும் நரகத்தையும் அடைவன் என்று மூன்றாம் புராணத்திற் கூறப்பட்டது. ருதுவான நாலாநாள் முதல் இரட்டித்த தினங்களிற் சேர்தலால் ஆண்பிள்ளையும், ஒற்றித்த நாட்களிற் சேர்தலாற் பெண்பிள்ளையும் பிறக்குமென்ப. அதனை "விதித்த நாட்களினுந் தம்மனை யல்து பிறர்மனம் விழைந்திடலாகா-மதுக்குழன் மகளிர் பூத்த நாளகழியின் மற்றவீ ராறு நாட்களினு-முதித்திடும் புதல்வ னிரட்டையா நாளி னொற்றைநா ளிவைகளின் மணப்பிற புதுத்தளி ரழகு கவற்றுமா மேனிப் புதல்வியை யினிதினிற் பெறுவார்," என்று காசிகாண்டத்திற் கூறியதனும் அறிக. (உஉ)

நெற்றித் தனிக்கண் வானவனை வழுத்த லவுபா சனநெறியின்
முற்றத் தமர்ந்த விருந்தினருக் கருத்தல் வேத முறையுணர்தல்
சொற்ற நெறியிற் றென்புலத்தோர் துய்ப்ப வினிதி னுணவளித்தல்
கற்றோ ரெவரு மில்வாழ்வோர் கடனென் றுலகிற் கழறுவரால்.

(இ-ள்) தனி நெற்றி கண் வானவனை வழுத்தல் = ஒப்பற்ற நெற்றிக் கண்ணினை யுடைய சிவபெருமானைத் துதித்தலும், அவுபாசனம் நெறியின்=ஔபாசன வழியாக, முற்றத்து அமர்ந்த விருந்தினருக்கு அருத்தல்=தமது வீட்டு முற்றத்தினகண் வந்திருந்த விருந்தாளருக்கு உணவூட்டுதலும், வேதம் முறை உணர்தல் = வேதங்களிற் சொல்லப்பட்ட விதிவிலக்குகளை யறிதலும், சொற்ற நெறியின் = அவற்றிற் சொல்லப்பட்ட முறையே, தென் புலத்தோர் துய்ப்ப இனிதின் உணவு அளித்தல்=பிதிரர் அருந்துமாறு அன்போடு சிராத்தஞ் செய்தலும் (ஆகிய இவை) இல வாழ்வார் கடன் என்று = கிருகஸ்தாச்சிரமத்தவரது தொழிலென்று, கற்றோர் எவரும் இனிதின் கழறுவார் = கற்க வேண்டிய நூல்களைக் கற்றவர் யாவருந் தெளிவாகக் கூறுவார்.

ஔபாசனம் என்பது அவுபாசனம் எனப் போலியாய் நின்றது. அஃதாவது விவாக காலத்திலே ஓமகுண்டத்தி னின்றும் எடுத்த அக்கினியை யவியாது வளர்த்து வருதற்குப் பிராமண வருணத்தவராற் செய்யப்படும் ஓர்கிரியை. குறித்து வந்தோரும், குறியாது வந்தோருமென விருந்தினர் இருவகைப் படுவர். இல்=மனை. அது ஆகுபெயராய் மனைவியை

அன்று ஏ - ஆசைகள் பிரமதேவர் விட்டுணுவைத் துதிக்க, அவர் சுவேத வராக மாய்ச்சென்று பூமியைத் தமது மருப்பொன்றி னேந்தி வந்தனர். திருமால் உரலோடு கட்டப்பட்டு மருதஞ் சாய்த்ததையும் பின்வரும் கண்ணனவதரித்த அத்தியாயத்தில் எசஅ-ம், எரு-ம் செய்யுட்களா னறிக. சில புராணங்களிற் பிரமதேவரே சுவேத வராக வுருவெடுத்துப் பூமியை நிறுத்தினர் எனக் கூறப்பட்டிருக்கின்றது. பேருமலையுங் காறு சிலம்பின பருக்கைக் கல்லளவா நிற்ப, அத்துணை யுயர்ந்து பருத்த வராக வுருக்கொண்டார் ஆகலின் கொம்பி னேரா நுனியிற் றுகள் போலக் கொடு வந்தனர் என்பான் "மண்ணுலக முழுவதுமோர் கூன்பிறைக்கோட்டு நுனியேந்தி வந்தான்" எனக் கூறினன். (ரு)

சுறவமெறி கடல்வலய முழுவதுமோர் நுண்டுகளிற் றுலங்கு கோட்டி
னுறைவதனைத் தனிநோக்கிச் சனலோக முதலுலகத் துறைவோர் யாருங்
கறையடிய புகர்முகத்துக் கடகளிற்றி னிடர்தவிர்த்த காயா மேனி
மறைமுதலே முதலேயென் றுளங்கனிய விழிபனிப்ப வாழ்த்தல் செய்தார்.

(இ-ள்) சுறவம் எறி கடல் வலயம் முழுவதும் = மகர மீன்களை வீசுகின்ற சமுத்திரத்தாற் சூழப்பட்ட வட்டமாகிய நிலவுலக முழுவதும், ஓர் நுண் துகளின் துலங்கு கோட்டின் உறைவதனை = ஒரு நுட்பமாகிய அணுவைப்போல விளங்காநின்ற கொம்பினிடத்து இருத்தலை, சனலோகம் முதல் உலகத்து உறைவோர் யாரும் = சனலோக முதலிய உலகங்களில் இருக்கின்றவர்கள் யாவரும், தனி நோக்கி = பராமுக மின்றிப் பார்த்து, கறை அடிய = உரல் போன்ற அடிகளையும், புகர் முகத்த = புள்ளி பொருந்திய முகத்தையும் உடைய, கடம் களிற்றின் இடர் தவிர்த்த = மதம் பொருந்திய கயேந்திரன் என்னும் யானையினது துன்பத்தை நீக்கிக் காத்த, காயா மேனி மறை முதலே முதலே = காயாம்பூவை யொத்த திருமேனியை யுடைய வேத முதல்வரே முதல்வரே, என்று - என்றுகூறி, உளம் கனிய விழி பனிப்ப = மனம் நெகிழவும் கண்கள் (ஆனந்த) பாட்பஞ் சொரியவும், வாழ்த்தல் செய்தார் = துதித்தார்கள்.

இந்நில வுலக மானது சுவேத வராகத்தின் கொம்பின் நுனியிலே ஓர் அணுப் போல இருந்ததைக் கண்டு சனலோக முதலிய லோகங்களி லுள்ளார் யாருந் துதித்தார் என்பதாம்.

பிரளயமானது பூலோகம், கணலோகம், குய்யகலோகம், வாயுலோகம், மேக மண்டலம், சூரியன்-சந்திரன்-நட்சத்திரம்-புதன் - வெள்ளி-செவ்வாய் - வியாழம் - சனி யென்னு மிவர்களின் லோகங்களையும், புவர்லோக சுவர்லோகங்களையுங் கடந்து மேனிற்றலின் "சனலோக முதலுலகத் துறைவோர்" எனக் கூறினர். சனலோக முதலிய லோக மாவன —சனலோகம், தவலோகம், சத்தியலோக முதலியனவாம். கயேந்திரன் என்னும் யானையின் இடர் தீர்த்ததமை யாவது —திரிகூட மலைக்கணுள்ள வாவியின்கண் தேவல முனிவர் ஸ்நானஞ் செய்யும் போது மனைவியரோடு ஜலக்கிரீடை செய்திருந்த ஊகூ வென்னுங் கந்தருவன் விளையாட்டாக நீருண் மூழ்கிச் சென்று அவர்காலைப் பற்றி யிழுக்க, அவர் பெருஞ் சினமுற்று "இத்தொழில் செய்யும் முதலையாகக் கிடக்கக் கடவாய்" என சாபங் கொடுத்து நிவாரணமுஞ் சொல்லி யகல, அவ னங்ஙனே கிடந்தனன். இஃது நிற்க, உலகந் தனிப்புரக்கும் இந்திரத்துய்மம னென்னுஞ் சந்திர குலத்தரசன் உலக வெறுப்புற்றுக் காட்டிற் சென்று, குலபருவதத்தினை யடுத்துத் தவஞ் செய்திருக்க, அங்கு அகத்திய முனிவர் வரக்கண்டும் எழுந்து உபசரித்திலன். அதனால் அறிவர் பெருமாற்கு முனிவு தோன்றி, அரசனே! அகங்கரித்திருந்தமை யடுக்கா வாகலின், அக்குணமுடைய யானையாகத் திரிகக் கடவையெனச் சபித்துச் சென்றனர். அவனும் யானையாகிக் கயேந்திரன் என்னும் பெயரோடு காடெங்கணுந் திரிந்து, சாபநிவாரண சமயம் வந்ததனால், அவ்வாவிக் கரையை

பூரண னாகிப் பூமே லுறைந்திடும் புனித னாகி
யாரண முடிவாய் நின்ற வமலனே போற்றி போற்றி

(இ-ள்) நாரணன் ஆகி = நாரணன் என்னுந் திருநாமத்தை யுடையவனாகி, ஒன்றாய் = ஏகனாகியும், அனைத்துலகுக்கு எல்லாங் காரணன் ஆகி = எவ்வெவையுள்ள உலக மெல்லாவற்றிற்குங் காரணனாகியும், அந்த காரணங் கடந்து நின்ற பூரணன் ஆகி = அந்தக் காரணத்தையுங் கடந்து விளங்கி நிற்கும் வியாபகனாகியும், பூமேல் உறைந்திடும் புனிதன் ஆகி = தாமரைப் பூவின் மேலிருக்கின்ற பிரமதேவனாகியும், ஆரண முடிவு ஆய் நின்ற = வேதத்தின் முடிந்த பொருளாயுமுள்ள, அமலனே போற்றி போற்றி = (உருத்திர சத்தி விளங்கலால்) உருத்திரனாகியு மிருக்கின்ற கடவுளே யபயம் அபயம் (ரு)

என்றுயர் முனிவ ரேத்த வின்னருள் சுரந்துத் தேன்சோர்
மன்றலந் துளவோ னேந்தும் புவியைமுன் போல வைத்துப்
பன்றியி னுருவ நீத்தான் பங்கய னெரிவாய்ப் பெய்து
குன்றெலாம் படைத்து மீட்டும் படைப்பவை குணித்தா னன்றே

(இ-ள்) உயர் முனிவர் என்று ஏத்த = உயர்ந்த முனிவர் முதலாயினோர் என்றிவ்வாறு துதிக்க, இன் அருள் சுரந்து = இனிய திருவருள் சுரந்து, தேன் சோர் மன்றல் அம் துளவோன் = தேனொழுகுகின்ற வாசனையையுடைய அழகிய துழாய் மாலையை யணிந்த திருமால் (சுவேதவராகர்) ஏந்தும் புவியை முன் போல வைத்து = தாங்கி வந்த பூமியை முன்னைப் போல நிறுத்தி, பன்றியின் உருவம் நீத்தான் = சுவேத வராக வுருவத்தை விடுத்து நின்றார், பங்கயன் = பிரமதேவன், எரி வாய்ப் பெய்து குன்று எல்லாம் படைத்து = அக்கினி வாய்ப்பட்ட மலைகளெல்லாவற்றையுஞ் சிருட்டித்து, மீட்டும் படைப்பவை குணித்தான் = பின்னருஞ் சிருட்டிக்க வேண்டுவனவற்றை (மனத்தில்) கருதினன், அன்றே = என்று (சூதமுனிவர்) கூறினர் என்க.

சுவேதவராக கற்பமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - கஙச



ஏழாவது

## பலவகைச் சிருட்டியுரைத்த அத்தியாயம்.



இஃதாவது பலவகைப்பட்ட படைப்புப் பொருள்களைக் கூறிய பாகமாம். அப் படைப்பு ஆதி சிருட்டி, பூதசர்க்க சிருட்டி, இந்திரிய சிருட்டி, தாவர சிருட்டி, விலங்கு சிருட்டி, தேவ சிருட்டி, மானுட சிருட்டி, பூத சிருட்டி, முனிவசிருட்டி யென ஒன்பது வகைப்படும். அவற்றையும் அவை வழியாய் வந்த பொருள்களையும் இஃதுணர்த்து மெனக்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

அங்கவை யெனக்கோ மென்ன வளிமதக் கலுழி யாறு
தாங்குநாற் கோட்டு வெள்ளைச் சூழிமால் யானைப் பாகன்
றிங்களிற் பிழிந்தா லன்ன திவவியாழ் முனிவன் கேட்ப
வாங்குவில் விழுங்கு திண்டோண் மணிநிற வண்ணன் சொல்வான்.

இலி=இல்லாதது அது எச்சப் பொருள்பட நின்றது. அளப்பு-அறப்பு என வலித்தல். தம் முச்சலிப்பு ஐந்தும் தோன்றச் சொல்லுந்ததற்கு "வாயிலிருந்து பட்ட நறபொருளே" எடுத்துக் காட்டினமையின் இஃது எடுத்துக்காட்டுவமை யணியாம். (௩)

சங்கிவை படைப்பிற் கேது வல்லெனக் குறுக்கா நோக்க
வீங்குபல் விலங்கு தோன்ற வெறுத்துமே லாக நோக்க
வோங்கிய விண்ணோ ரியாரு முதித்தன ரேது வன்றென
றாங்கவன் கீழா நோக்க மானுட ருதித்தா ரன்றே

(இ-ள்) ஆங்கு இவை=இப்பொழுது தோன்றிய இவைகள், படைப்புக்கு ஏது அல என=சிருட்டித் தொழிலுக்குக் காரணமானவை யல்லவென்று, குறுக்கா நோக்க=குறுக்காகப் பார்க்க, வீங்கு பல் விலங்கு தோன்ற=பெருத்த மிருகங்கள் பிறக்க, வெறுத்து=அவற்றையும் வெறுத்து, மேலாக நோக்க = மேலாகப் பார்க்க, ஓங்கிய விண்ணோர் யாரும்=உயர்ந்த தேவர்கள் யாவரும், உதித்தனர்=தோன்றினார்கள், ஆங்கு அவன்=அப்பொழுது பிரமதேவன், ஏது அன்று என்று = (இதுவும்) காரணமானதல்லவென்று, கீழா நோக்க = அதோமுகமாகப் பார்க்க, மானுடர் உதித்தார் = மனிதர் பிறந்தார்கள். அன்று-ஏ அசைகள். (௪)

சத்துவ குணத்த ராகித் தணப்பிலா னந்த மேவிச்
சித்தமா செறிந்து மெய்யிற் றிகழொளி யுடையர் தேவர்
மொய்த்ததா மதத்தி னோடு மிராசத குணத்தின் மூழ்கி
மெய்த்தகு மொழியி னோடு மேவுவர் மனுட ராமே

(இ-ள்) தேவர்=தேவர்களானவர், சத்துவ குணத்தர் ஆகி=சாத்துவிக குணத்தை யுடையவர்களாய், தணப்பு இல் ஆனந்தம் மேவி = நீங்குதலில்லாத இன்பத்தைப் பொருந்தி, சித்தம் மாசு எறிந்து = மனத்தின்கணிகழும் குற்றங்களை யெல்லாம் நீக்கி, மெய்யின் திகழ் ஒளி உடையர் = தேகத்தில் விளங்குகின்ற பிரகாசத்தை யுடையவரே யாவர், மனுடர் = மனுடராவார், மொய்த்த தாமதத்தினோடு இராசத குணத்தின் மூழ்கி = நெருங்கிய தாமத குணத்திலும் மற்றைய இராசத குணங்களிலும் அழுந்தி, மெய் தகு மொழியினோடு மேவுவர்=உண்மையாகிய தகுந்த சொற்களுடனே பொருந்தி யிருப்பார்கள்.

மெய்யில் ஒளியுடைமையால் தேவர் எனப்படுவர். தேவர்=பிரகாச முடையவர். திவ்=பிரகாசம். மனிதர் தாமதத்திலும் இராசதத்திலும் மூழ்குவர் எனவே, சத்துவகுணமுஞ் சிறிது பொருந்துவார்கள் எனபது பெறப்படும். (௫)

பின்னுமோர் சிருட்டிக் காகப் பிழிதுகா றறுகால் பாடும்
பொன்னவிர் கமலத் தோடுப் புங்கவ னெண்ணு மெல்லை
கன்னவி றிரடோட் செங்கட் கழிபுலால் கமழும் வெண்பற்
றுன்னிய குறுந்தாட் பூதம் பேயொடுந் தோன்றிற் றன்றே.

(இ-ள்) அறு கால் = ஆறு கால்களையுடைய வண்டுகள், பிழி துகாந்து பாடும்= தேனை யுண்டு ஒலிக்கின்ற, பொன் அவிர் தோடு கமலம் புங்கவன் எண்ணும் எல்லை= பொன் போல விளங்குகின்ற இதழ்களை யுடைய தாமரை மலரின் மேலிருக்கும் பிரமதேவன், பின்னும் ஓர் சிருட்டிக்கு ஆக எண்ணும் எல்லை = பின்னரும் ஒரு சிருட்டி

யைப் செய்தற்காக நினைக்கும் பொழுதில், கல் நவில் திரள் தோள் = மலையைப் போன்ற திரண்ட தோள்களையும், செம் கண் = சிவந்த கண்களையும், கழி புலால் கமழும் வெண் பல் = மிகுந்த புலால் நாற்றம் மணக்கின்ற வெளுத்த பற்களையும், துன்னிய குறு தாள் = நெருங்கிய குறிய கால்களையுமுடைய, பூதம் = பூதகணமானது, பேய் ஒடு தோன்றிற்று = பேயுடனே தோன்றியது.

உம்-அசைநிலை. அறுகால் சினையாகு பெயராய் வண்டினை யுணர்த்திற்று. குறுந்தாள் என்பது, குறுத்தாள் என வலிந்து நின்றது. "குறுந்தாட் பூதஞ் சுமந்த அறக்கதிர் ஆழியெம் அண்ணலைத் தொழுநோ" என்றார் பிறரும். கழி என்னும் உரிச்சொல் முன் சிறவாதுள்ள தொன்று சிறந்ததாகிய மிகுதிப் பொருட்டில் வந்தது. அதனை "கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்" என்ற **தொல்காப்பியச்** சூத்திரத்தானறிக. பூதம் = பிரகாசிப்பது. கல்நவில் என்பதற்கு, கல்லை (உவமையாகச்) சொல்லப்படும் எனினுமாம். (௬)

ஆதி சிருட்டி மகானென்ன வறைவ ரிரண்டாஞ் சிருட்டிமிகப்
போதுந் தன்மாத் திரையாகும் பூத சிருட்டி யதிற்றோன்று
மோதியிடுமூன் றாஞ்சிருட்டி வைகாரிகமா மதினுதிக்கு
மேதமறுமிந் திரியசிருட்டி யிவற்றின் றோற்றம் பிராகிருதம்.

(இ-ள்) ஆதி சிருட்டி மகான் என்ன அறைவர் = முதலாஞ் சிருட்டி மகதத்துவ சிருட்டியென்று (பெரியோர்கள்) கூறுவார், இரண்டாம் சிருட்டி மிக போதும் தன்மாத்திரை ஆகும் = இரண்டாஞ் சிருட்டி மிகவும் பொருந்த தன்மாத்திரைச் சிருட்டியாகும், அதில் பூத சிருட்டி தோன்றும் = அதனின்றும் பூதசிருட்டி பிறக்கும், ஓதி இடும் மூன்றாம் சிருட்டி = சொல்லப்பட்ட மூன்றாஞ் சிருட்டியாவது, வைகாரிகம் அதின் உதிக்கும் ஏதம் அறும் இந்திரிய சிருட்டி = வைகாரிகாகங்காரத்தினின்றுந் தோன்றுகின்ற குற்றமில்லாத இந்திரிய சிருட்டியாகும், இவற்றின் தோற்றம் பிராகிருதம் = இவ்வாறாய சிருட்டிகள் பிராகிருதமெனப்படும்.

முதலாஞ் சிருட்டி மகதத்துவ சிருட்டியாகும் இரண்டாஞ் சிருட்டி தன்மாத்திரைச் சிருட்டியாம் மூன்றாஞ் சிருட்டி இந்திரிய சிருட்டியாகும் இம்மூன்றும் பிராகிருதம் எனப்படும்.

மற்று - அசைநிலை. இம்மூவகைச் சிருட்டியும் பிரமனது சங்கற்பமில்லாமற் றோன்றினமையாற் பிராகிருதம் எனப்பட்டன. ஒன்பதுவகைச் சிருட்டிகளும் பிராகிருதம், வைகிருதம், கௌமாரம் என மூவகைப் படுதலின், அவற்றுட் பிராகிருதம் இவையெனப் பிரித்துணர்த்தியதாம். பிராகிருதம் = பிரகிருதி சம்பந்த முள்ளது. கூறப்பட்ட மூவகைச் சிருட்டியும் பிரகிருதி சம்பந்த முள்ளனவாகவும், பிரம சிருட்டியின்பாற் படுத்தியது என்னெனில், ஒருவன் நித்திரை செய்யுங்கால், இச்சையில்லாமற் றோன்றிய உச்சுவாச நிச்சுவாசங்களுக்கும், ஒலி வியாபாரை முதலியவற்றிற்கும், அவனையே கருத்தாவாகக் கூறுதல் போல, இவையும் பிரமாக்கு முன் றோன்றியவாயினும் அவனது கரும விசேடத்தாற் றோன்றுவவாகலின் பிரம சிருட்டியாகப் பேசப்பட்டன. (௭)

நான்காந் தோற்றந் தாவரமா நாலா வதுமுக் கியமெனப
வானசா திகளே முதலிலைய கருசாந் தோற்ற மெனவறைவா
வானோர் தேவர் சிருட்டியினை யாறாஞ் சிருட்டி யெனவகுப்பர்
ஏனோர் மனுடர் சிருட்டியினை யேழாஞ் சிருட்டி யெனவுரைப்ப

(இ-ள்) நான்கு ஆம் தோற்றம் தாவரம் ஆய = நான்காஞ் சிருட்டி தாவர சிருட்டி யாகும், நாலாவது முக்கியம் என்ப = அந்த நாலாவது சிருட்டியை முக்கிய சிருட்டியென்று கூறுவார்கள், ஆன் சாதிகளே முதல விலங்கு = பசுவினங்களையே முதலாகவுடைய மிருக சிருட்டிகளை, அஞ்சு ஆம் தோற்றம் என அறைவர் = ஐந்தாவது சிருட்டியென்று (பெரியோர்) கூறுவர், வான் சேர் தேவர் சிருட்டியினை = ஆகாய பதவியிற் சஞ்சரிக்கின்ற தேவ சிருட்டியை, ஆறு ஆம் சிருட்டி என வகுப்பர் = ஆறாவது சிருட்டியென்று பிரிவுபடுத்திச் சொல்வார்கள், ஊன் சேர் மனுட சிருட்டியினை = தசை பொருந்தப் பெற்ற மனுட சிருட்டியினை, ஏழு ஆம் சிருட்டி என உரைப்பர் = ஏழாவது சிருட்டியென்று கூறுவார்கள்.

தாமத குணமயமாயுள்ள தமம் முதலிய ஐவகைப் பேதங்களையும் பிரமதேவர் கொண்டமையால் விருக்ஷம், புதல், கொடி, புல்லு, புல் என ஐவகைப்பட்ட தாவர சிருட்டிகள் தோன்றினவென்றும், அவைகள் கிரகித்தல், மேய்தல், செழித்தல், கருக்கல் முதலிய வினைகட்கேற்ப ஓரறிவுடையன வாகலின் தாமசத்திற் றாமத குணமயமென்றும், பிரமன் அவற்றை நோக்கி, இவை முன்னர்த் தோன்றியதுபோலன்றென்று சொன்னமையால் முக்கிய சிருட்டியென்ப் பெயர்பெற்றனவென்றும் கொள்க. சிவலோகத்திலே சிவசந்நிதியில் விளங்கும் இடபதேவரின் பக்கங்களிலிருக்கும் நந்தை முதலிய ஐவகைப் பசுக்களையுஞ் சிவபெருமான் திருவுயிர்க்காகப் பூமியில் தோன்றுமாறு ஏவப் பிறந்தமையாலும், பஞ்சகௌவிய பலத்தாலும், உறுப்புக்களில் தேவர்கள் வசிப்பதனாலும், திருநீறாக்குதற்குக் காரணமாய்ச் சாணமளித்தலாலும், பூசிப்பார்க்குப் பலத்தை யடைவித்தலாலும் மிருகங்களுட் பசுக்கள் சிறந்தனவென்பான் "ஆன் சாதிகளே முதல விலங்கு" என விசேடித்துக் கூறினர். விலங்குகள் இரட்டைக் குளம்புள்ளவை யொன்பதும், ஒற்றைக் குளம்புள்ளன ஆறும், ஐந்து நகங்களுள்ளன பதின்மூன்றுமாக இருபத்தெட்டு வகைப்படும் என்ப. (அ)

எட்டாஞ் சிருட்டி பிறையெயிற்றுப் பூத சிருட்டி யெனவறைவர்
முட்டாட் செழுந்தண் பாசடைய முருகு விரிக்குங் கருந்தோட்ட
மட்டார் கமலப் பொகுட்டுறைவோன் மைந்தர் சிருட்டி யைம்புலனு
மொட்டார் கடந்தோ ரொன்பானாஞ் சிருட்டி யென்ப ரஃதுரைப்பாம்.

(இ-ள்) எட்டு ஆம் சிருட்டி = எட்டாவது சிருட்டி, பிறை எயிற்று பூத சிருட்டி என அறைவர் = பிறைபோன்ற பற்களையுடைய பூதசிருட்டியென்று கூறுவார்கள், ஒன்பான் ஆம் சிருட்டி = ஒன்பதாஞ் சிருட்டி, முள் தாள் செழு தண் பசு அடைய = முட்கள் பொருந்திய தாளையுஞ் செழுமையாகிய குளிர்ந்த பசிய இலைகளையும், முருகு விரிக்கும் கரு தோட்ட = வாசனையை வீசுகின்ற பெருமையாகிய இதழ்களையுமுடைய, மட்டு ஆர் கமலம் பொகுட்டு உறைவோன் மைந்தர் = தேன் நிறைந்த தாமரைப்பூம் பொகுட்டினகண் எழுந்தருளியிருக்கின்ற பிரமனது புத்திரர்களாகிய, ஐம்புலனும் ஆம் ஒட்டார் கடந்தோர் சிருட்டி = பஞ்சபுலன்களாகிய பகைவர்களை வெற்றிகொண்ட முனிவர்களது சிருட்டியாம், என்பர் = என்று சொல்வார்கள், அஃது உரைப்பாம் = அதனை (விரித்துக்) கூறுவாம்.

தாவரசிருட்டி, மிருகசிருட்டி, தேவசிருட்டி, மனுடசிருட்டி, பூதசிருட்டி யென்னும் இவ்வைவகைச் சிருட்டியும் வைகிருத சிருட்டி யெனப்படும். பிரமபுத்திரர்களாகிய முனிவர் சிருட்டி கௌமார சிருட்டி யெனப்படும். ஒட்டார் = பற்றில்லாதவர், சேராதவர், பகைவர். ஒட்டார்க் கடந்தோர் என்பது "இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்" என்ற விதிப்படி யியல்பாக நின்றது. பசு அடை பாசடையெனப் புணர்ந்தது. (கூ)

சனகனருள்கூர் சனந்தனனற் சனற்குமாரன் சனாதனனெசீர்
புனையு மிரிபு முதலாய முனிவர் தோன்றப் பூமேலோன்
றுணைவி லவரைப் படைத்திரென வுரைப்ப வுளந் துகடீர்ந்த
முனிவர் விசனை புரியேமென் றீசன் பாத முன்னினரால்.

(இ-ள்) அருள் கூர் சனகன் சனந்தனன் = கிருபை மிகுந்த சனகர் சனந்தனர், நல் சனற்குமாரன் சனாதனன் = நல்ல சனற்குமாரர் சனாதனர், சீர் புனையும் இரிபு = சிறப்பினைக் கொண்ட இரிபு என்றும், முதல் ஆய முனிவர் தோன்ற = முதன்மையை யுடைய முனிவர்கள் பிறக்க, பூமேலோன் = தாமரைப் பூவிலெழுந்தருளிருக்கும் பிரமதேவன், அவரை துணைவில படைத்திர் என உரைப்ப = அவர்களை (நோக்கி நீவிர் உயிர்களை) விரைவாகச் சிருட்டிப்பீராக வென்று கூற, உளம் துகள் தீர்ந்த முனிவர் = மனத்தினகண் அழுக்காகிய குற்றங்களினின்றும் நீங்கிய அம்முனிவர்கள், விசனை புரியேம் என்று = (யாம்) மாயத் தொழிலாய (சிருட்டித் தொழிலை) செய்யேம் என்று, ஈசன் பாதம் முன்னினர் = சிவபெருமானது திருவடிகளையே (மெய்ப் பொருளாக) மதித்தனர்.

பிரமன் ஐந்து முனிவர்களைச் சிருட்டித்ததையும், அது கௌமார சிருட்டி எனப்படுவதையும் "பின்னே தவிற்றம் காயக்கிட்டப் பெற்றார் குமார சிருட்டியினை - யின்னே யுரை பார் முகைவிரிந்த வெழிற்றாமரைப் பதியின் வாழ்பனைறையோன் - முன்னுடை சனகன் சனந்தனனொன் முதிய வறியார் சநாதனனோடு - மன்ற வுறைந்து மருவு சனற்குமாரனை சிறுவை மகிழ்ந்தளித்தான்" என்றும் வாயுசங்கிதைச் செய்யுளா லுணர்க. (க0)

மைந்த ரறிவின் மிகுத்தா லீசன் பாத மனத்திருத்திச்
சிந்தை தெளிவுற் றேகுதலுந் தெய்வக் கமலப் பொகுட்டுறைவோ
னந்தில் மாயை தனின்மயங்க வலகில் புவன முண்டுமிழும்
பைந்தா மரைக்கட் டிருநெடுமால் பரிவின் மாயை தீர்த்தனனால்

(இ-ள்) மைந்தர் = புத்திரர்களாகிய அம்முனிவர்கள், அறிவின் மிகுத்தால் = ஞானத்தின் பெருமையினால், ஈசன் பாதம் மனத்து இருத்தி = சிவபெருமானது திருவடிகளை மனத்தின்கண் இருத்தி, சிந்தை தெளிவுற்று ஏகுதலும் = மனமயக்கம் நீங்கி (உண்மைப் பொருளைத்) தெரிந்து செல்லுதலும், தெய்வக் கமலப் பொகுட்டு உறைவோன் = தெய்வத்தன்மை பொருந்திய தாமரைப் பொகுட்டாசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவன், அந்தம் இல் மாயை தனின் மயங்க = ஒழிதற்கரிய புத்திர சோகத்தினால் மயங்க, அலகு இல் புவனம் உண்டு உமிழும் = அளவில்லாத புவனங்களை விழுங்கி வெளிப்படுத்திய, பைந் தாமரைக் கண் நெடு திருமால் = பசிய தாமரைக் கண்ணையுடைய நீண்ட (வடிவுடைய) திருமாலானவர், பரிவின் = அன்புடன் (தோன்றி) மாயை தீர்த்தனன் = அந்த மாயையினை நீக்கினர். ஆல் அசைநிலை. அந்தம் என்பது கடைக்குறைந்து நின்றது.

பிரமதேவர், தமது புத்திரர்களாகிய சனகர் முதலாயினோர் சிருட்டி செய்ய மாட்டேமென்று மறுத்துச் சிவஞான முற்றவராய் அகலுதலும், புத்திரசோகங் கொண்டு வருந்த, திருமால் கருணையுடன் றோன்றி அதனை நீக்கினர் என்பதாம்.

சனகர் முதலிய முனிவர்கள் சிருட்டித்தொழிலை மறுத்துச் சிவபெருமான் திருச்சந்நிதியை யடைந்து, வேதப்பொருளை யுபதேசித்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, அவர் தக்ஷிணாமூர்த்தியா யுபதேசிக்கக் கேட்டறிந்து, பன்னுடனடங்கிடாதும் ஞானம் வாய்க்கப் பெற்றபின்னரும் அவரது சந்நிதானத்திலென்று வணங்கித் துதித்து,

இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத் திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு மலைப்ப விந்நா
ளருட்பெருங் கடலே யெய்த்தே மடைந்தில துணர்வி யாங்கண்
மருட்பெருங் கடலி னீங்கும் வண்ணமொன் றருடி யென்றார்

என்றிவ்வாறு வேண்டுதலும், பரமநாதன் சிவாகம சாரமாயுள்ள சிவஞான போதத்தைக் குறிப்பினாற் காட்டி யருள, சிற்றுஞ் சிவமாகி யொடுங்கல் பெற்றார் என்று கந்தபுராணத் திற் கூறப்பட்டது உலக மளந்த நெடியவனுதலின் "நெடுமால்" என்றான் அந்நில என்பதை யொரு சொன் னீர்மையாக்கி "அந்நி லாங்க வசைநிலைக் கிளவியென் - றாயிரண் டாகு மியற்கைத் தென்ப" என்ற தொல்காப்பிய விதிப்படி யசைநிலையாகக் கோடலு மொன்று மைந்தா=வலிமை, அழகு, இளமை யிவற்றை யுடையவர் (கக)

மாயை யகல நான்முகத்தோன் வரம்பில் காலந் தவம்புரிந்து
மேய சிருட்டி யுணர்ந்திலனால் வெகுளி தோன்றிக் கண்கலுழ
வாய மலரோன் முரிபுருவ நாப்ப ணுலக மனைத்தினையுந்
தாயி னீன்ற மதிக்கண்ணிச் சடையோ னினிதி னுதித்தனனால்.

(இ-ள்) நான்முகத்தோன் = நான்கு முகங்களை யுடைய பிரமனானவன், மாயை அகல=மாயை யானது நீங்க, வரம்பு இல் காலம் தவம் புரிந்தும்=அளவில்லாத காலம் தவத்தைச் செய்தும், மேய சிருட்டி உணர்ந்திலன் = தனக்குரிய சிருட்டித் தொழிலை யறிந்தானில்லன், ஆல=அதனால், வெகுளி தோன்றி = கோபமுண்டாகி, கண் கலுழ= கண் (கலக்கமுற்று) அழ, ஆய மலரோன் முரி புருவம் நாப்பண்=அந்தப் பிரமதேவனது முரிப்பினை யுடைய புருவ மத்தியி னின்றும், உலகம் அனைத்தினையும் தாயின் ஈன்ற = உலக மெல்லாவற்றையுந் தாயைப் போலப் பெற்ற, கண்ணி மதி சடையோன் = இளம் பிறைச் சந்திரனைத் தரித்த சடாமுடியையுடைய உருத்திரமூர்த்தி யானவர், இனிதின் உதித்தனன்=நன்மையோடுந் தோன்றினர்

பிரமதேவர் எந்தை யாகிய சிவபெருமானை மறந்து படைத்தற் றொழிலைத் தொடங்க அது முற்றுமை கண்டு, பெருமா னருளின்றி யாகா தென்று நோற்று தவஞ்செய்தனர் அங்ஙனுங் கைகூடப் பெறாது கண்டு ஏக்க முற்று அழ, அதனாற் கண்களினின்றும் நீர் விழவிழ வவை யெல்லாம் பேயும் பூதமுமாய்த் தோன்றின வென்றொரு சரிதமு முளது பிரமாணம் வருமாறு —

**கந்தபுராணம் — உருத்திரர் கேள்விப் படலம்** கழியுடல் புயமேற் கொண்ட கண்ணுதற் றுறந் தன்னி - மிழைதைய ரென்ன வேங்கி யின்னனுழப் பயினாந்து வலமேல்—யழுதனன் மகவென செயவா னன்னதோர் வேலை கண்ணீர் - விழவிழ வலகை யாகி மிக வெழுந் திலேரடிற் றனவே (கஉ)

தோற்றுங் கடவு டுணைமலரோன் சூழ்வந் திறைஞ்சு மெழுநோக்குங்
கூற்றி னுயிருண் டியாமுற்றி கொழிக்கும் பொன்னங் குரைகழற்றாள்
போற்றும் பணிக்குஞ் செம்மாக்கும் பொருவின் மறைகள் பாடிநற்
றூற்று நறிய மலர்தூவு முள்ளந் திருத்து முவக்குமால்.

(இ-ள்) மலரோன்=பிரமதேவன், துணை = அப்பொழுது, தோற்றுங் கடவுள்= வெளிப்பட்ட உருத்திர மூர்த்தியை, சூழ்வந்து இறைஞ்சும்=வலஞ்செய்து வணங்குவான், எழும்=எழுந்திருப்பான், நோக்கும் = (கண்களாற் பலமுறை) பார்த்திடுவான்

கூற்றின் உயிர் உண்டு=யமனுயிரைக் குடித்து, உயர் முத்தி கொழிக்கும்=மேலாய முத்தியை யளிக்கின்ற, அம் பொன் குரை கழல் தாள் போற்றும் = அழகிய பொன்னாலாய ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளைத் துதிப்பான், பனிக்கும் = (கண்களினின்றும் ஆனந்த பாஷ்பம்) சொரிவான், செம்மாக்கும் = இறுமாப்புக் கொள்வான், பொருவில் மறைகள் பாடி=ஒப்பற்ற வேதங்களாற் றுதித்து, நறவு ஊற்றும் நறிய மலர் தூவும்= தேனைப் பொழிகின்ற வாசனையை யுடைய புட்பங்களைச் சொரிவான், உள்ளத்து இருத்தும்=மனத்தினகணிறுத்தித் தியானிப்பான், உவக்கும்=களி கொள்ளுவான்

இறைஞ்சும், எழும், நோக்கும், போற்றும், பனிக்கும், செம்மாக்கும், தூவும், இருத்தும், உவக்கும் என்பன செய்யு மென்னும் வாய்பாட்டு நிகழ்காலத் தெரிநிலை வினைமுற்றுக்களாம் அவை பலரோன் என்னும் எழுவாய்க்குப் பயனிலைப்பாய வந்தன மற்றைய சமயிகள் கூறும் முத்திகள் போலாது அழிவிலாத பேரின்ப முத்தியை யளிப்பது இறைவன் கழலடி யென்பான் "உயர் முத்தி கொழிக்கும் பொன்னங் குரை கழற்றாள்" என்றான் மற்றைய முத்திகளாவன —

உலோகாயதன் முழுகுதல், புசித்தல், பூசுதல், புணர்தல் முதலியவற்றோடு பதினாற்றைக் குமரனாகி, அழகு வாய்ந்த மகளிரோடு இன்பந் துய்த்தலே முத்தியென் றுரைத்தனன் அதனை "மங்கை மாரிடத் தின்பமே யின்பமற் றவரோ - டிங்கு வாழ்வுறும் வாழ்க்கையே யியல்புறும் வாழ்க்கை-யங்க வர்ப்பெறு செல்வமே செல்வமாங் கவர்தங் - கொங்கை புல்லுறு மிறைமையே கொடியதோர் வறுமை பற்றி லாதவனை முதிர்முக மடந்தையர் புணர்ப்பைச்-சிறிய வின்பமென் றுரைசெய்வ ரன்னது பிறப்பை - யறிவ ரேயெனி னுங்கதே பேரின்ப மாகு-மிறைவ நீயது கேட்டியென மொழிகுவ னென்றான்" என்னும் **கந்தபுராணச்** செய்யுள்களா லுணர்க உருவமுதலிய பஞ்சகந்தங்களும் அறக்கெடுகையே முத்தி யென்று புத்தர்களுட் பிரதீப நிருவாண வாதி பேசாநிற்பன் அநந்த ஞானம், அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்த சுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷ்யம், சகல சமயிகளுக்கு பாவம் என்னும் அட்டகுண முடைமையே முத்தி யென்று அருகன் அறையா நிற்பன் பூருவமீமாஞ்சிகன் சுவர்க்கமே யஃதென்பன் தார்க்கிகன் ஞான முதலிய செயற்கைக் குணங்கள் கெட்டு, இயற்கைக் குணமாகிய அஞ்ஞான குண முற்றுப் பாடாணம் போலவதே முத்தி என்பன் சாங்கியன் பிரகிருதி புருட விவேகம் ஆகிய விவேகமே யதுவென் றுறைவன் பிராணனே யான்மா வென்கின்ற கவுளகனும், கன்மமே கடவுளெனக் கூறும் மீமாஞ்சியனும், சோமசித்தாந்திர விந்துகங்களும், சூரியாக்கினி சாமிய வாதிகளுந் தத்தமக்குக் கருமமான பஞ்சபூத புவனப் பேற்றினையே முத்தி யென்பர் சப்தாத்தன் தன்மாத்திரைப் புவனப் பிராப்தியே அது வென்பன் இந்திரியான்மவாதி யிந்திரிய புவனப் பேற்றினையும், மனோவாதி மனோபுவனப் பிராப்தியினையும், அகங்காரான்ம வாதியாகிய வைசேடிகன் பதார்த்தங்களின் பொதுவியல்பு சிறப்பியல்புகளைப் பற்றிய ஞானத்தினைக் காணுதல் நசிக்கு மென்றும், நசிப்பட்ட மனத்தோடு சம்பந்தப்பட்டதன்றோ என்றும் ஞானமில்லாமற் கல்லைப்போலக் கிடப்பதே முத்தி யென்றுங் கூறுவன் காலேசுரவாதி காலதத்துவப் பிராப்தியையும், நையாயிகன் புத்தி புவனப் பிராப்தியினையும், பரிணாம வேதாந்தி பிரகிருதி புவனப் பேற்றினையும் முத்தி யெனக் கூறாநிற்பர் சத்தப் பிரமவாதி சடசித்துக்களாயத் தோன்றும் எல்லாப் பொருள்களும் சத்தத்தி னுடைய விகாரமாகலான், அவையெல்லாஞ் சத்தரூப மென்றறிவதே முத்தி யென்பன். கிரீடாப் பிரமவாதி நானே பிரம மென்றும், நான் ஒருப்படித்தா யிராமல் நானாவித விகாரப்பொருளோடுங் கூடி விளையாடுகின்றே னென்று மறிவதே முத்தியென்பன் யோக உபாய முபதேசிக்கும் பாஞ்சராத்திரனும், சந்நியாச உபாய முபதேசிக்கும் விசாந்த வாதியும் ஞானம் வாதிகளாகலால் புருட புவனப் பிராப்தியே முத்தி யென்பர் பாஞ்சராத்திரிகள் இருபத்தைந்தாந் தத்துவமா யுள்ள வாசுதேவன் பரம்பொருளென்றும், அவன் வழிவாய்ப்

விழியிற் புகழத் திரிசிறந்த விவசா யத்தி னுயர்தருமனை
பழிதீர்ந் துயர்ந்த சங்கற்பந் தன்னிற் பரவு சங்கற்பனை.

(இ-ள்) ஒழுகு கொடி மூக்கினில் தக்கனை=நேர்மையாகிய கொடிபோன்ற நாசியினின்றும் தக்கரும், உளத்தில் மரீசி=மனத்தினின்று மரீசியும், உயர் சென்னி=மேலாகிய சிரத்தினின்றும், வழு இல் சிறப்பின் அங்கிரா = குற்ற மில்லாத சிறப்பினை யுடைய அங்கிராவும், துவக்கில் பிருகு=தோலினின்றும் பிருகுவும், மறித்து ஏயும் விழியில் புகழ் அத்திரி = பிறழ்ந்திருக்கின்ற கண்களினின்றும் துதிக்கப் படுகின்ற அத்திரியும், சிறந்த விவசாயத்தில் உயர் தருமனை=சிறப்புப்பொருந்திய கையினின்றும் உயர்வுடைய தருமரும், பழிதீர்ந்து உயர்ந்த சங்கற்பத்தில் = குற்ற மின்றி யுயர்ந்து விளங்கும் மனச்சங்கற்பத்தினின்றும், பரவு சங்கற்பனை=புகழப் படுகின்ற சங்கற்பன் என்பவரும்.

இது முதலிரு செய்யுள் குளகம். ஒழுகல் என்பது நேர்மைப் பொருள் படுதலை "வார்தல் போகல் ஒழுகல் மூன்றும் - நேர்பு நெடுமையுஞ் செய்யும் பொருள" என்ற தொல்காப்பிய விதியா லறிக. மறித்து-விலித்தல். விவசாயம் அருமெய்யா. சங்கற்பம்= நியமம், விருப்பம். இவர்கள் மானச புத்திரர்களென்று கூறப்பட்டிருக்கின்றது. (கஎ)

மருவு முதானன் றனிற்சிறந்த மறைதேர் தெய்வப் புலத்தியனல்
லுருவ முகத்தி லருட்புலக னபானன் றன்னி லுயர்கிரது
பெருகு சமானன் றனில்வசிட்டன் பிறந்து முனிவ ருருவாகித்
தரும வொழுக்க மெவற்றினையுந் தவறா துலகி னிறுவினார்.

(இ-ள்) மருவும் உதானனில் = பொருந்திய உதான வாயுவினின்றும், சிறந்த மறைதேர் தெய்வப் புலத்தியனை = சிறப்பினை யுடைய வேதங்களை யாராய்ந்த தெய்வத் தன்மை வாய்ந்த புலத்தியரும், நல் உருவம் முகத்தில் அருள் புலகனை = நல்ல வடிவத்தை யுடைய முகத்தினின்றுங் காருணிய முள்ள புலகரும், அபானனில் உயர் கிரது = அபான வாயுவினின்றும் உயர்வாய கிரது வென்பவரும், பெருகு சமானனில் வசிட்டனை = வளர்கின்ற சமான வாயுவினின்றும் வசிட்டரும், பிறந்து=தோன்றி, முனிவர் உரு ஆகி=முனிவர் வடிவுங் கொண்டு, தருமம் ஒழுக்கம் எவற்றினையும்=அறவொழுக்கங்க ளனைத்தையும், தவறாது உலகில் நிறுவினார்=வழுவாவண்ணம் உலகத்திலே நிலைக்கச் செய்தனர்.

உதானன் என்னும் வாயுவானது உதராக்கினியை யெழுப்பி யுண்டவைகளை நாடிகளிற் செலுத்தி, சரீரத்தை வளர்த்து நாபியினின்றும் பிறப்பதாம் கண்டத்தானத்தி னிற்கு மென்பர் ஆசிரியர் **அடியார்க்குநல்லார்**. அபானனுவது குதத்தையுங் குய்யத்தை யும் பற்றி நின்று மலமூத்திராதிகளைக் கழித்து பிறப்பதாம் உச்சத் தலத்தில் நிற்குமென்பர் **பிங்கலந்தையார்**. சமானனுவது அறுவகைச் சுவையையும் அன்னத்தையும் பிரித்து எழுவகைத்தாதுவின் கண்ணுங் கலப்பித்துக் கந்த ரசக் குழியிற் சந்திடைநிற்பது "புடை நின்றானன மலம்போக்கும் - தடையின்றி, யுண்டனநீ ராக்கு முதானன் சமானனெங்குங்-கொண்டெறியு மாதிரத்தக் கூறு" என **இசைநுணுக்க** முடைய **சிகண்டியாசிரியர்** செப்பலானு மறிக. தருமம் ஒழுக்கம் என்பன இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ()

தேவ ரசுரர் தென்புலத்தோர் மனுட ரிவரைச் சிருட்டிப்பான்
பூவி லயனே ருருவெடுப்பப் பொருந்தவ் வுருவந் தமோகுணமாய்
மேவ வதனி னிடைப்புறத்தி லசுரர் தோன்ற விடுத்தவுடல்
லோவிலாக் கங்கு லாகுமதி லுயிர்க ளனைத்து முறங்குமால்.

நின்ற இராசதத்தின் உருவம் எடுப்ப = சொல்லப்பட்ட இராசத குணமிக்கமாகிய வடிவத்தைக்கொள்ள, மக்கள் உதித்தார் = மனுடர்கள் தோன்றினார், ஆண்டு அ உடல் விடுப்ப = அப்பொழுதே அந்தச் சரீரத்தையும் நீக்க (அது) அனையாம் கதிர் வெள் நிலவு ஆயது = குளிர்ந்த அழகிய பிரகாசமுள்ள வெள்ளிய சந்திரிகையாயிற்று, புலரி சந்தியும் அதுவே = பிராதக்கால சந்தியும் அதுவே யாகும்.

"பிறாக்க போனர்" என்பது பொதுவாகக் கூறப்படினும், உடலின் பாரிசங்களினின்றும் தோன்றினார் என உயர்த்துணர்க. இது உயர்ந்துணர வைப்பென்றும் முத்தி பிதிராக்களை கௌவிய வர்கனர், அனலர், சோமபர், யமர், அரியமனர், அக்கினிவாக்கர், பொக்கிஷர், ஆசியபர், சோமபர் என்ப பதின்மர் விதக்கப்பட்டவர்களாம். சந்தி = ஒருமிப்பது பகற்காலமும் இராக்காலமும் சந்திக்குங் காலமாய் அது சாயங்கால சந்தி, பிராதக்காலசந்தியென விருவகைத்து. பிதிரர் சாயங்கால சந்தியினும், மனிதர் பிராதக்கால சந்தியினும் தோன்றலுமுடையவராவர். "மக்கடாமே யாறறி வுயிரே - பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்ற **தொல்காப்பிய** விதிப்படி, மக்களெனப்படுவார் ஐம்பொறியுணர்வேயன்றி மனனென்னுமோர் அறிவும் உடையராய், முப்பத்திரண்டு அவயவத்தான் அளவிறப்பட்ட அறிவொடு புணர்ந்த ஆடூஉ மகடூஉக்களும், அக்கிளைப் பிறப்புக்களுமாம். (உக)

பின்னர்த் தாமதம் இராசதமும் பிரியா வுருவ மெடுத்திடலு
மன்னு மரக்கர் கந்தருவ ரியக்க ரரவம் வளர் பூதந்
துன்னி யுதித்த வுயர் பறவை மறிமா பக்கத்திற் றோன்றினவாற்
பொன்னோனே கமலத் தவன் முகத்திற் கொதிக்குஞ் சரபந் தோன்றியதால்.

(இ-ள்) பின்னர் = (அதன்) பின்பு, தாமதமும் இராசதமும் பிரியா உருவம் எடுத்திடலும் = தாமத குணமும் இராசத குணமும் ஒன்று சேர்ந்த வடிவத்தைக் கொள்ளுதலும், மன்னும் அரக்கர் = நிலைபெற்ற இராக்கதர்களும், கந்தருவர் = கந்தருவர்களும், இயக்கர் = யக்ஷர்களும், அரவம் = சர்ப்பங்களும், வளர் பூதம் துன்னி உதித்த = நீண்ட பூதங்களும் நெருங்கித் தோன்றின, உயர் பறவை மறி = மேற்செல்லும் பறவைகளும் ஆடுகளும், மார்பு ஆகத்தில் தோன்றின — மார்பு முதலிய அங்கங்களினின்றும் பிறந்தன, கமலத்து அவன் முகத்தில் = பிரமதேவனது முகத்தினின்றும், கொதிக்கும் சரபம் தோன்றியது = கோபித்தெழும்புகின்ற சரபப் பட்சியானது வீறுடன் வெளிப்பட்டது. ஆல் இரண்டும் அசைநிலைகள். பறவை = பறத்தலையுடையது.

பிரமன் பின்னரும் படைக்க நினைத்து தாமதராசத குணவுருவெடுத்துச் சிருட்டிக்க வுன்னும்போது, அவனிடத்தினின்று பசி தோன்றியது. அதனால் வேகமான கோபந் தோன்ற, அவனிடத்தினின்றும் விகாரரூபமுள்ளவராய் பயங்கரம் விளக்கு மொருவகைக் கணத்தார் தோன்றினார். அவர்களுட் சிலர் பசியைப் பொறுக்காது, பிரமன்மேற் பாய்ந்தார்கள். அப்போது சிலர் இரக்ஷியுங்கள் என்று சொன்னமையால் இராக்ஷசர் என்றும், சிலர் உண்ணுவோமென்று சொன்னமையால் யக்ஷர்களென்றும் பெயர் பெற்றனர். பிரமன் இவர்களைப் பார்த்து மனத்தில் வெறுப்புற்றுச் சிந்தித்துக் கொண்டிருக்க, அவனது தலைமயிர்கள் ஈனமாய்க் கழன்று வீழ்ந்து மீளவுந் தலையின்மேல் ஏறின. அங்ஙனம் நகர்ந்து ஏறினமையால் சர்ப்பங்களென்னவும், ஈனமானமையால் அகிகள் என்றும் பெயர் பெற்றன. அவன் மறுபடி கோபாவேசங் கொண்டு படைத்தற்கு நினைக்க, கபில நிறமுள்ள பூதங்கள் அநேகந் தோன்றின. அதன்பின் அவனது அங்கங்களினின்றும் ஒருவகைக் கணங்கள் பிறந்தனர். அவர்கள் யாழ்ப்பாடிக் கொண்டிருந்தமையால் கந்தருவர் எனப் பெயர் பெற்றனர். பறவைகள் பக்கங்களினின்றும் பிறந்தமையால் பக்ஷிகள் எனப்பட்டன. மறியென்று கூறினும், செம்மறியாடு, துருவாடு, வெள்ளாடு, பள்ளையாடு, வரையாடு என

னும் பேதங்களுங் கொள்க. சரபமாவது பாணையையுள்ளும் பெருமைக்குரிகினும் பாராக்க அதிவலி கொண்டு, இரு தலையும் இரு சிறகும், எட்டுக் காலும், நீண்ட வாலும், கடுஞ்சினமும், பேரார்ப்பும் பொருந்திச் சிங்கத்தினையு மெடுத்து மேற்செல்லுவதாகிய ஓர் பறவை. அதற்கு "கனன்று விரண்டு திருவடியு நகங்களின் வாலு முகமிரண்டுங்-கொண்டு சிறகு முருத் திரமுங் கொண்டெட்டே ராபபும்" என்வருங் **காஞ்சிப்புராணச்** செய்யுளா னறிக. (௨௭)

இருகா ளிடத்துங் களிறுபுலி யெண்கு மரையொட் டகமிவுளி
திருகு பொரிகோட் டிரலைபன்றி செறியு முழவு மானினொடு
மருவு விலங்கின் கணமுதித்த மயிர்க்கா றோறுங் கனிப்பொறையா
வுருவப் பைந்தாட் கொடியனைத்தும் வேறு வேறா யுதித்தனவே.

(இ-ள்) இரு தாள் இடத்தும் = இரு பாதங்களி லிருந்தும், களிறு புலி எண்கு மரை ஒட்டகம் இவுளி = யானைகள் புலிகள் கரடிகள் மரைகள் ஒட்டகங்கள் குதிரைகளும், திருகு பொரி கோடு இரலை=முறுகிய பொருக்குள்ள கொம்பினை யுடைய மான்களும், பன்றி=பன்றிகளும், செறியும் உழவும்=நெருங்கிய உழுதற்றொழிலையுடைய எருதுகளும், ஆனின் ஒடு=பசுக்கூட்டங்களோடு, மருவு விலங்கின் கணம் உதித்த= பொருந்தியுள்ள (மற்றைய) மிருகசாதிகளுந் தோன்றின, மயிர் கால் தோறும்=உரோமத் துவாரங்களி னிடங்க டோறும், கனி பொறையா=பழங்களாய பாரங்களை யுடையனவாய், உருவம் பைந் தாள் கொடி அனைத்தும்=அழகும் பசுமையு மொழுங்கு முள்ள கொடி முதலிய தாவர வகைகள் யாவும், வேறு வேறாய் உதித்தன=வேறு வேறாகத் தோன்றின.

பொரியாவது தகட்டு வடிவாய் வெடித்துக் கிளம்பி நிற்பதாம். உழவு - காரியத்தைக் காரணமாக உபசரித்தது. கொடிகள் என்றமையால் ஓடதிகளும், தானிய வகைகளுங் கொள்ளப்படும். தானிய வகையாவன —நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை யென்னும் பதினாறு வகைக் கூலங்களுமாம். இங்கே கூலம் பதினெண்வகைத் தென்பர் **கூத்த நூலாசிரியர்**, என்னை? "பதினெண் கூலமு முழவர்க்கு மிகுக" என்றாராகலின். தோறும்—இடப்பன்மைப் பொருளில் வந்த இடைச்சொல். (௨௮)

அருமா மறைக ளொருநான்கு மகங்கள் சந்தம் பாவனைத்துந்
திருமா லுந்திக் கடம்பூத்த தேவன் முகநான் கினுமுதித்த
வுரைசெய் பூத மனைத்துமிவ்வா றுதித்து முன்னைப் படைப்பதனின்
மருவுந் தமது தொழிலதனிற் பிறழா தினிதின் வைகினவே.

(இ-ள்) திருமால் உந்தி கடம் பூத்த தேவன் முகம் நான்கினும் = விட்டுணு மூர்த்தியினது நாபிக் கடாகத்தி னின்றும் பிறந்த பிரமனது நான்கு முகங்களி னின்றும், ஒரு நான்கு=நான்காகிய, அரு மா மறைகள் = அரிய சிறந்த வேதங்களும், மகங்கள்—யாகங்களும், சந்தம் பா=சந்தங்களும் பாவின வகைகளும், அனைத்தும் உதித்த = (மற்றைய) யாவுந் தோன்றின, இவ்வாறு உரை செய் பூதம் அனைத்தும் உதித்து=இங்ஙனமே சொல்லப்பட்ட பூதபேதங்க ளெல்லாம் பிறந்து, முன்னை படைப்பு அதனின் மருவும்= முந்திய படைப்புக் காலத்தில் (தாந்தாம்) கொண்டுள்ள, தமது தொழில் அதனின் பிறழாது—தத்தந் தொழில்களி னின்றும் வழுவாமல், இனிதின் வைகின = முறைமையாக விருந்தன.

பிரமனது முகங்களுட் கிழக்கு நோக்கிய முகத்தி னின்றும் இருக்கு வேதமும், அக்கினிட்டோமம் என்னும் யாகமும், காயத்திரி யென்னுஞ் சந்தமும், வெண்பாவும்,

தெற்கு நோக்கிய முகத்தினின்றும் யசுர்வேதமும், உத்தியம் என்னும் யாகமும், திருட்டுபு என்னுஞ் சந்தமும், ஆசிரியப்பாவும், மேற்கு நோக்கிய முகத்தினின்றும் சாமவேதமும், அதிராத்திர யாகமும், சகதிஸ என்னுஞ் சந்தமும், கலிப்பாவும், வடக்கு நோக்கிய முகத்தினின்றும் அதர்வண வேதமும், அப்தோர் யாமம் என்னும் யாகமும், அனுட்டுபு என்னுஞ் சந்தமும், வஞ்சிப்பாவும் ஏனையவுந் தோற்றின வெனக் கொள்க. (௨௪)

பூதப் பகுதி யிருடிகளபோ பொருந்து முடல்சே ரனைத்தினுக்கு
மோதுநாம மிவைவவென்ற குணங்க ளுணர விவையனைத்தும்
வேதாகமங்க ளிடைவகுத்தான் விரைகொப்புளிக்கு நறுந்தோட்டுத்
தாதார் கமலப் பொகுட்டுறையு மொருநான் முகத்துத் தனிமுதலே.

(இ-ள்) விரை கொப்புளிக்கும் நறு தோடு = வாசனையை வெளிப்படுத்துகின்ற நல்ல இதழ்களை யுடைய, தாது ஆர் கமலம் பொகுட்டு உறையும் = மகரந்த நிறைந்த தாமரைப் பூப்பொகுட்டின் கணிருக்கும், தனி ஒரு நால் முகத்து முதலே = ஒப்பற்ற நான்கு முகங்களை யுடைய பிரமதேவனே, பூதப் பகுதி இருடிகள் = பருசு பூதங்கள் அவற்றின் பகுதிகள் முனிவர், போ பொருந்தும் உடல் சேர் அனைத்தினுக்கும் = புகழமைந்த தேகத்தைக் கொண்ட உயிர்கள் முதலிய யாவற்றிற்கும், ஓதும் நாமம் இவை = சொல்லப்படுகின்ற பெயர்க ளிவை யென்றும், நவின்ற குணங்கள் இவை = சொல்லப்பட்ட குணங்க ளிவை யென்றும், அனைத்தும் உணர = அவற்றின் சுபாவங்கள் எவரையும் அறியும்படி, வேத ஆகமங்களின் இடை வகுத்தான் = வேதாகமங்களி னிடத்து விரித்துரைத்தா னென்க.

பகுதி = பூதங்களுக்கு முதலா யுள்ள தன்மாத்திரை முதலியன. ஆகமம் = ஆ- என்பது ஞானமும், க-என்பது மோக்ஷமும், ம - என்பது மலநாசமும் எனப் பொருள் படலால், ஆன்மாக்களுக்குச் சிவஞானத்தை யுதிப்பித்து, மலநாசஞ் செய்வித்து, மோக்ஷத்தைக் கொடுப்பது எனக்கொள்க. அது காமிக முதல் வாதுள மீறாயுள்ள இருபத்தெட்டாம். இவற்றின் வழி நூல் உபாகமங்களும், சார்பு நூல் தத்துவப் பிரகாசிகை, தத்துவ சங்கிரகம், தத்துவத் திரய நிர்ணயம், போக காரிகை, மோக்ஷ காரிகை, நாத காரிகை, பரமோக்ஷ நிராசகாரிகை, இரத்தினத் திரயம் என்பவுமாம். (௨௫)

பலவகைச் சிருட்டி யுரைத்த அத்தியாய முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௨௧௬



எட்டாவது

## தமோகுண சிருட்டி யுரைத்த அத்தியாயம்.



இஃதாவது முக்குணங்களு ளொன்றாய தாமத குணத்தி னின்றுந் தோன்றி யவற்றை யுணர்த்தும் பாகமாம். தமோ குணம் வடநூன் முடிபு.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

என்று கூறுந் திருநெடுமா லிருதாள் வணங்கி யாழ்முனிவன்
குன்றின் சிறக ளறவெறிந்த கூர்வாய வைரப் படைக்கடவு
ளென்னுஞ் சிருட்டி விரிவனைத்து மீட்டு முரைத்தி யெனத்தொழுது
பன்னல் யாமும் பரந்துளவ மாயன் மகிழ்ந்து கூறுவான்.

பாகிய மணம் எனவும் பொருள். ஈறு என்றும் உரிச்சொல் அப்பொருள் படுதலை "கடி யென கிளவி" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. "அங்கலார்" என்பதனை அம் கலார் என்று பிரித்துக் கோடலுமாம். (கூ)

அருளிலக் குமிவெஞ் செருக்கனை யீன்றா டிருதிநன் னியமனை யளித்தாள்
பொருவறு துட்டி மகிழ்ச்சியை யீந்தாள் புட்டிலோ பந்தனைப் பெற்றா
டருபுகழ் மேதை சுபன்றனை யளித்தாள் கிரியைநற் சமனையுத் தமனை
யரிதினிற் பயந்தாள் புந்திநற் போதன் னப்பிர மாதனை யளித்தாள்.

(இ-ள்) அருள் இலக்குமி=கிருபையினை யுடைய இலக்குமிதேவியானவள், வெம் செருக்கனை ஈன்றாள்=கொடிய அகங்காரனைப் பெற்றாள், திருதி நல் நியமனை அளித்தாள்= திருதி யென்பவள் நல்ல நியமன் என்பவனைப் பெற்றாள், பொரு அறு துட்டி மகிழ்ச்சியை ஈந்தாள் = ஒப்பில்லாத துட்டி யென்பவள் சருக்கன் என்பவனைப் பெற்றனள், புட்டி லோபந்தனைப் பெற்றாள் = புட்டி யென்பவள் உலோபன் என்பவனைப் பெற்றாள், புகழ்தரு மேதை சுபன் தனை அளித்தாள்=கீர்த்தியை யளிக்கின்ற மேதை யென்பாள் சுபனைப் பிரசவித்தாள், கிரியை = கிரியை யென்பாள், நல் சமனை அத்தமனை அரிதின் பயந்தாள்= நல்ல சமன் என்பவனையும் அத்தகைய தமன் என்பவனையும் அருமையாகப் பெற்றாள், புந்தி=புத்தி யென்பாள், நல் போதனை அப்பிரமாதனை அளித்தாள்=சிறந்த போதன் என்பவனையும் அப்பிரமாதன் என்பவனையும் பெற்றாள். இன-சாரியை. (கo)

நாணயன் விநயற் பயந்தனள் வபுநல் விவசாயனை யுயிர்த்தாள்
மாணெழிற் சாந்தி கேமனை யீன்றாள் வாசசித்தி சுகன்றனை யளித்தாள்
காணவருங் கீர்த்தி யசன்றனைப் பயந்தாள் முன்னவள் பயந்திடு காமன்
பேணரு மகிழ்ச்சி தடவு மானந்த னிருவரை யுயிர்த்தனன் பின்னே.

(இ-ள்) நாண் — நாண் என்பாள், நயன் விநயன் பயந்தனள் = நயன் விநயன் என்பவரைப் பெற்றாள், வபுவும் நல் விவசாயனை உயிர்த்தாள்=வபு என்பாளும் நல்ல விவசாயனைப் பெற்றாள், மாண் எழில் சாந்தி கேமனை ஈன்றாள் = மாட்சிமையாகிய அழகினை யுடைய சாந்தி யென்பாள் கேமன் என்பவனைப் பெற்றாள், வாசசித்தி சுகன் தனை அளித்தாள் = வேலாய சித்தி இன்பனைப் பெற்றாள், காண அரும் கீர்த்தி=அறிதற்குரிய கீர்த்தி யென்பவள், யசன் தனைப் பயந்தாள் = யசன் என்பவனைப் பெற்றனள், பின்= பின்பு, முன்னவள் பயந்திடு காமன் = முன்னவளான சிரத்தை யென்பவள் பெற்ற காமன் என்பான், பேண் அரு மகிழ்ச்சி=விரும்பத்தகரிய மகிழ்ச்சி, உள் தடவு ஆனந்தன் இருவரை உயிர்த்தனன் = உட்பொருந்திய ஆனந்தனென்று சொல்லப்படா நின்ற இருவரையும் பெற்றனன். வபுசு-எனவும் பாடபேதம். (கக)

கருதரும் பாவன் கொலையினை மணந்து வஞ்சமாய்க் கன்னியைப் பொய்யா
மருமக வினையாங் களித்தனன் பொய்யோன் வஞ்சனை தன்னொடு மணந்து
வெருவரு நிரய னெனுமைந் தரையும் வேதனை மாயையென் றேந்து
மிருமக விரையு மளித்தனன் மாயை புயந்தழீஇ மிருத்துவீன் றனளே.

(இ-ள்) கருத அரு பாவன்=நினைத்தற்கு ஒண்ணாத பாவன் என்னும் புருடன், கொலையினை மணந்து = கொலை யென்னும் பெண்ணைச் சேர்ந்து, வஞ்சம் ஆய கன்னியை = வஞ்சகமாகிய பெண்ணையும், பொய் ஆம் அரு மகவினை ஆங்கு அளித்தனன்= பொய் ஆகிய (நன்மை) இல்லாத புத்திரனையும் அப்பொழுதே பெற்றனன், பொய்யோன் வஞ்

சனை ஒடிய அணைத்து=பொய்யனை என்பான வஞ்சனை யென்னும் பெண்ணேடுஞ் சேர்ந்து,
வெரு வரும் நிரயா என்னும் மைந்தரையும்=பயமுண்டாகும் நரகர் என்னும் புத்திரரை
யும், வேதனை மாயை என்று ஓதும் இரு மகளிரையும்=வேதனை மாயை யென்று கூறப்
படுகின்ற இரு புதல்வியரையும், அளித்தனன் = உண்டாக்கினன், மாயை புயம் தழீ
இருந்து ஈன்றனள் =மாயை யென்பாள் (நிரயர் என்னும் புருடரது) தோள்களைச் சேர்ந்து
இருந்து துக்கங்களைப் பெற்றாள் தழீஇ என்பது தழீ யென விகாரப்பட்டது

நிரயர் என்றது ஈண்டு நரகங்களை யென்க அவையாவன —கோரம், கீழ்க்கோ
ரம், அதிகோரம், அதிகீழ்க்கோரம், தாளதரம், பயாநகம், காளராத்திரி, பயோற்கடம்,
சண்டம், மகாசண்டம், சண்ட கோலாலம், சண்டதரம், சரோருகம், சலசவதி, வீமம்,
வீமவீடணம், கராளம், விகராளம், குலிசம், முககோணம், ஐங்கோணம், தீர்க்கதரம், ரி
வார்த்துளம், எழுநிலம், எட்டுநிலம், மாயை, தீக்கவொளி, இரௌரவம், மகா ரௌரவம்,
தமம், அதிசீதம், அதிவெப்பம், தீக்கணம், அயபோசம், சஞ்சீவம், சடம், விலோமம்,
கடங்கடம், தீவிரவேகம், கராளம், விகராளம், பிரகம்பம், கமலை, விகாரமுகம், கரும
பாசம், பிரமருத்தனம், சூசிமுகம், நேமிகாதகம், பீடனம், சூடபாகம், அதிபாகம்,
கிரகசம், அசிதாருவம் காரம், இரத்தசசீகருழி, சர்வருந்தம், கிரது, நிரயு, உச்சுவாசம்,
நிசுவாசம், தீக்கம், நாதம், சுடப்பிரவாகம், பிரவகனம், கானம், அதிகிரகம், குபீரம்,
நக்கிராக்கியம், கட்டரவம், புழுக்குழி, அமேத்தியம், அப்பிரதிகாரம், உணணீர்த்தானம்,
தாருணம், சங்கடம், விச்சுரம், விகடம், வைதரணி, ஏகபாதம், கணீராமம், பூரணம்,
அசிதாலவனம், மூத்திரகூபம், மலகூபம், தாலவனம், துயரம், கசுமலம், சமலமலம்,
ஆலாகலம், மிதவிருமம், விசோதம், இயமானுகம், திரிபாதம், ஏகபாதம், அவீசி முதலிய
விரிப்படும் இருபத்தெட்டுக் கோடியெண்ணவாம் (கஉ)

சொல்லிய நிரயர் வேதனை தோயத்திட் டசுபரைத் துக்கரைப் பயந்தா
ளல்லலைசெய் மிருத்து நோய்நரை துன்பம் வெருளிபட் டிமையரை யளித்தா
ளொல்லையிற் சுருக்கித் தமோகுண சிருட்டி யுரைத்தன னெனவருள் சுரந்து
மல்லிடு திணிதோள் வாலிமா றுருவ வடிகளைப் பணிந்தவ னுரைத்தான்.

(இ-ள்) சொல்லிய நிரயர் வேதனை தோயத்திட்டு = சொல்லப்பட்ட நிரயர் என்
னும் புருடர்களை வேதனை யென்பாள் புணர்ந்து, அசுபரை துக்கரை பயந்தாள் = அசுபர்
துக்கர் என்பவரைப் பெற்றாள், அல்லல் செய் மிருத்து = துன்பத்தைச் செய்கின்ற மிருத்து
வென்பவள், நோய் நரை துன்பம் வெருளி பட்டிமையரை அளித்தாள் = பிணி நரை
துன்பம் கோட்டமுதலிய கீழோரைப் பெற்றாள், ஒல்லையில் = விரைவாக, தமோகுண
சிருட்டி சுருக்கி உரைத்தனன் என = தமோகுண சிருட்டியைத் தொகுத்துக் கூறினேன்
என்று, அருள் சுரந்து = கிருபை மிகுந்து, மல் இடு திணி தோள் வாலி மாறு உருவ = மற
போர் செய்யும் வலிய புயங்களை யுடைய வாலியின் நெஞ்சினைப் பிளந்து செல்ல, வடி
கணை பணிந்தவன் உரைத்தான் = கூர்மையாகிய அம்பினைச் செலுத்திய திருமால் கூறி
யருளினார் என்க.

மல்யுத்தமாவது சங்கிபாதம், அவதூதம், பிரக்ஷேபணம், முட்டி, கீலகிபாதம்,
வச்சிரநிபாதம், பாதோத்தூதம், பிரமிருட்டம் என எண்வகைக் கரணங்களானுஞ் செய்
யப்படுவது அவற்றுட் சங்கிபாதம் என்பது முதலிற் கரம்பிடித்துப் பொருசாப் போடுவது
அவதூதம் என்பது புறங்கையால் கீழே தள்ளுவது பிரக்ஷேபணம் இழுத்து வீழ்த்து
வது முட்டி என்பது கையினை முட்டியாகப் பிடித்து இடித்தலாம் கீலகிபாதம் முழங்
கையினாலும் மணிக்கட்டுகளானும் இடிப்பது வச்சிரநிபாதம் கைகளின் ஓரங்களாலும்,
மத்திமை அநாமிகை யென்னும் விரல்களி னடுவே அங்குட்ட விரல் வைத்த முட்டியி

றானும் இட்டபது பாதோத்தமமாவது காலினுற் றாக்கி யெறிவது பிரமிருட்டம் என்பது உடம்பு முழுதினும் இறுகப் பிடித்து விழுத்தி யுழக்குவது வாலிமார்பு உருவ வெய்தமையாவது, திருமால் இராமாவதார மெடுத்தகாலத்துச் சூரிய குமாரனான சுக்கிரீவனது அரசையும் தாரத்தையுங் கவர்ந்து துன்பம் விளைத்திருந்த வாலியை வதைத்தற்கு வாளியேவிய சரிதமாம் அதனை "எடுத்துப் பாரிடை யெற்றுவாம் பற்றியென றிளவல்-கடித்தலத்தினுங் கழுத்தினுந் தனனிரு கரங்களை-மடுத்து மீக்கொண்ட வாலிமேற் கோலொன்று வாங்கித் - தொடுத்தது நான்மறைத் தோன்றிறற் றிராகவன் றுரந்தான்." எனனும் இராமாயணச் செய்யுளானும் அறிக (கஅ)

தமோகுண சிருட்டி யுரைத்த அத்தியாய முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் - ௨௩௨



ஒன்பதாவது

# அரியயன் வரம்பெற்ற அத்தியாயம்.



எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

அஃதாவது சிகண்ட ருத்திரமூர்த்தி பிரசன்னமாதலும், திருமாலும் பிரமனும் தத்தம் விருப்பின்படி வரத்தை யடைந்த சரித்திரத்தைக் கூறும் பாகமாம் அரி = சத்துருக்களை யழிப்பவன், அடியவர் பீடைகளைத் தீர்ப்பவன், திருமால் வரம்=மேலாய பேறு.

காலமுங் காலத் தளவையுங் கடந்து கருத்தளந் தறிவரும் பொருளாய்
மூலமா மீசன் மலரய னுதலி னுதித்திடும் புதுமையென் முகுந்தன்
கோலமா ருந்தி மலரயற் பயந்த கொள்கையென் சொல்கெனப் பசும்பொற்
சோலைவா யுறையுங் கடவுள்யாழ் முனிவன் கேட்டலு மாயவன் சொல்வான்.

(இ-ள்) காலமுங் காலத்து அளவையும் கடந்து = கால தத்துவத்தையும் அதன் கூறுபாட்டையுங் கடந்து, கருத்து அளந்து அறிவு அரு பொருள் ஆய = மனத்தினால் அளவை செய்தும் அறிதற் கரிய பொருளாகியும், மூலம் ஆம் ஈசன்=மூலகாரணமாகியும் விளங்காநின்ற உருத்திரேசுரர், மலர் அயன் நுதலின் உதித்திடும் புதுமை என்= தாமரை மலரின்மேல் இருக்கும் பிரமனது நெற்றியி னின்றுந் தோன்றிய அற்புதம் என்னை? முகுந்தன் = திருமால், கோலம் ஆர் உந்தி மலர் அயன் பயந்த கொள்கை என் = அழகு நிறைந்த (தமது) நாபிக் கமலத்தி னின்றும் பிரமனைப் பெற்ற தன்மை யென்னை, சொல்க என = சொல்லி யருள்க வென்று, பசு பொன் சோலை வாய் உறையும் கடவுள்=பசிய பொன் மயமான (கற்பகதருச்) சோலையினிடத்து வீற்றிருக்கின்ற இந்திரனும், யாழ் முனிவன்=யாழாசிரியராகிய நாரதமுனிவரும், கேட்டலும் = கேட்குதலும், மாயவன் சொல்வான்=கூர்மமூர்த்தி கூறுவா ராயினர் என்க (க)

உலகமோர் மூன்று மிடிந்துபா ழாகு மூழியி னிறுதியி னெங்கு
மலைபுரண் டனன வெறிதிரை புரண்டு மறிதரும் வாரியி னுப்ப
ணலர்கதிர்ப் பரிதி யாயிர மெழுந்தாங் கவிர்மணிச் சுட்டரா வணையிற்
கொலைபழுத் தொழுகுநேமியங் தடக்கைக் கொண்டல்கண் டுயின்றனை யனே

(இ-ள்) ஓர் மூன்று உலகமும் இடிந்து பாழ் ஆகும் ஊழி இறுதியின் = ஒப்பற்ற திரிலோகங்களுஞ் சரிந்து அழிவெய்துகின்ற ஊழியாகிய கடைக் காலத்தில், ஓங்கும் மலை புரண்டு அன்ன = உயர்ந்த மலைகள் புரண்டாற்போல, எறி திரை புரண்டு மறிதரும் வாரியில் நாப்பண் = (மணிகளை) வீசும் அலைகளானவை புரண்டு விழுகின்ற பிரளயசலத்தின் மத்தியில், அலர் கதிர் ஆயிரம் பரிதி எழுந்தாங்கு = படர்ந்த கிரணங்களை யுடைய ஆயிரஞ் சூரியர்கள் உதயஞ் செய்தாற்போல, அவிர் மணி சூட்டு அரா அணையின் = பிரகாசிக்கின்ற இரத்தினங்களை வாய்ந்த உச்சிந்தலைகளை யுடைய சேட சயனத்தில், கோலேந்து ஒழுகும் அம் நேமி தடம் கை கொண்டல் = கொலைத்தொழில் முதிர்ந்து விளங்கும் அழகிய சக்கராயுதத்தை யேந்திய நீண்ட கையினை யுடைய நீலமேகமானது, கண் துயின்றது = அறிதுயில் செய்தது.

இன் ஐ-சாரியை ஆன்று-ஏ அசைநிலைகள். கற்பமுடிவில் வந்த பிரளய சலமத்தியில் அனந்த சயனத்தின்மீது திருமால் அறிதுயில் செய்தனர் என்பது கருத்து. கொண்டல் போன்றுள்ளனை கொண்டல் என்றது உவமவாகுபெயர். கொண்டல் = நீர் கொள்ளுதலை யுடையது. ஆங்கு என்பது "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு - பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு" என்றதுபோல உவமப் பொருளில் வந்த இடைச்சொல். (உ)

பாசடைத் துளவத் துயலவரு தடந்தோட் பண்ணவ னுந்தியந் தடத்தி
னோசனை யொருநூ றகன்றுநீண் டோங்கி யொளிதரு மாயிர மிதழ்த்துத்
தேசுறு கதிரோ ராயிர மெறிக்குஞ் சேட்டிளம் பரிதியிற் பொலிந்து
மூசுவண் டரற்ற முருகுகொப் புளிக்கு முள்ளரை முளரிபூத் ததுவே.

(இ-ள்) பசு அடை துளவம் துயலவரு தடம் தோள் பண்ணவன் = பசுமையாகிய இலைகொண்டு முற்றிய துழாய்மாலை யசைகின்ற பெருத்த புயங்களையுடைய திருமாலினது, அம் உந்தி தடத்தின் = அழகிய நாபியென்னுந் தடாகத்தின்கண், ஒரு நூறு ஓசனை அகன்று நீண்டு ஓங்கி = நூறு யோசனையளவு பருத்தும் நீண்டுயர்ந்தும், ஒளி ஆயிரம் இதழ் விரித்து = ஒளிபொருந்திய ஆயிரமிதழ்களை மலர்த்தி, தேசு உறு ஓர் ஆயிரம் கதிர் எறிக்கும் = விளக்கமுடைய ஆயிரங் கிரணங்களைக் கொண்டு பிரகாசிக்கின்ற, சேடு இளம் பரிதியின் பொலிந்து = ஆகாயத்தினகத்துள்ள இளஞ் சூரியனைப் போலக் காணப்பட்டு, மூசு வண்டு அரற்ற = மொய்க்கின்ற வண்டுகள் ஒலித்தல் செய்ய, முருகு கொப்புளிக்கும் முள் அரை முளரி பூத்தது = தேனைப் பிலிற்றுகின்ற முட்கள் பொருந்திய நாளத்தை யுடைய தாமரை மலரானது அலர்ந்தது.

திருமாலினது நாபியாகிய தடாகத்தில் ஆயிரம் யோசனை அகலமும் அவ்வளவு நீளமுங் கொண்டு ஆயிரங் கிரணங்களை யுடைய சூரியனைப் போல விளங்காநின்ற ஆயிர விதழ்த்தாமரை (சகஸ்திரகமலம்) தோன்றியது யோசனை-யகரங்கெட்டு நின்றது. (௩)

தாமரை யுந்தித் தடத்தினிற் பூப்பத் தாமரைக் கண்டுயில் வோனை
நாமகள் கொழுந னணுகிமண் ணளந்த நளினமென் கரத்தினற் றடவித்
தோமறு யோகத் தருந்துயி லெழுப்பித் துளவினோன் மாயையின் மருளா
வேமுறத் தலைவாய்த் துயின்றநீ யாரை யெனநகைத் திறையவன் புகல்வான்.

(இ-ள்) தாமரை = தாமரை மலரானது, உந்தி தடத்தினில் பூப்ப = நாபியாகிய தடாகத்தின்கண் மலர, தாமரை கண் துயில்வோனை = தாமரைக்கண்ணை முகிழ்த்து அறிதுயில் செய்கின்ற நாரணக்கடவுளை, நாமகள் கொழுநன் அணுகி = சரசுவதி நாயகனாகிய பிரமதேவர் அடைந்து, மண் அளந்த நளினம் மென் கரத்தினால் தடவி = பூமியையளந்த

தாமரை மலர்போன்ற (பாதங்களைத் தனது) மிருதுவாகிய கைகளினால் பரிசித்து, நோய் அறு அரு யோகத் துயில் எழுப்பி = குற்றமில்லாத அரிய யோகநித்திரையினின்றும் விழிக்கச் செய்து, துளவினோன் மாயையின் மருளா = (அநந்தத்) திருமாலினது மாயையினால் மயக்கமுண்டு, ஏயம் உற்று அலை வாய் துயின்ற நீ=உன்மத்தம் (பித்தம்) கொண்டு இச்சமுத்திர மத்தியிற் றூங்குகின்ற நீ, யாவனை என=யாவன் என்று வினவ, இறையவன் நகைத்துப் புகல்வான்=நாராணமூர்த்தி புன்சிரிப்புற்றுச் சொல்வாராயினர்.

அயனங் துயின்ற நாரண மூர்த்தியைப் பிரமதேவ னடுத்துத் திருவடியைப் பிடித்து எழுப்பி, பின்னர்த் திருமாலினது மாயையினால் அவரென் றறியாது மயங்கித் தூங்குகின்ற நீ யாவன் என வினவத் திருமால் நகைத்துச் செப்புவா ரென்பதாம். (சு)

உலகனைத் தினையு மள்ளியுண் டகத்தி னொருபுடை கிடத்துநா ரணனியான்
கலைவலா யாரை நீயென வறியான் போலெதிர் வினவலுங் கடவுண்
மலரய னுலக மனைத்தையு மீன்ற தாதையா னென்மறை வடித்தோ
யலகினின் சீர்த்தி யறிவெனோ வென்ன வகட்டிடை புகுந்துலகனைத்துநோக் குதியால்.

(இ-ள்) யான்=நான், உலகு அனைத்தினையும் அள்ளி உண்டு = உலக முழுவதை யும் வாரியுண்டு, அகத்தின் ஒரு புடை கிடத்தும் நாரணன்=உள்ளிடத்திலோர் பக்கத்து வைத்திருக்கின்ற நாரணனாகும், கலை வலாய் = கலைகளில் மிக்க பயிற்சி யுடையவனே, நீ யார் என அறியான் போல எதிர் வினவலும் = நீ யாரென்று அறியாதார்போல எதிராகக் கேட்டதும், கடவுள் மலர் அயன்=தெய்வத் தன்மை பொருந்திய தாமரை மலராசனனாகிய பிரமன், யான் = நான், உலகம் அனைத்தையும் ஈன்ற தாதை என=உலக முழுவதையும் பெற்றெடுத்த பிதாவென்று கூற, மறை வடித்தோய் = வேதங்களைத் தெளிவாக வறிந்த பிரமனே, நின் அலகு இல் சீர்த்தி அறிவெனோ=உனது அளவில்லாத பெருமையை யானோ அறிவேன், என அகடு உள் புகுந்து — என்று வயிற்றினுட் பிரவேசித்து, உலகு அனைத்தும் நோக்குதி=உலக முழுதையும் பார்த்தறிவாய் யாரை-ஐ சாரியை.

நான் உலக முழுவதையும் வயிற்றினுள் ளடக்கி வைத்திருக்கும் நாரணனென்று கூறி, அறியாதவரைப் போலப் பிரமனைப் பார்த்து நீ யாரென்று கேட்டனர் நானே உலகத்தந்தை யென்று பிரமன் கூற, எனது வயிற்றினுள் உலக மிருத்தலைப் பார்த்தறிவா யாக என்று திருமால் கூறினர் என்பதாம். அறிவெனோ-தன்மை யொருமை வினைமுற்று ()

என்னலும் வயிற்றிற் புகுந்தெழு கடலு மேழுபெருந் தீவுமே ழுலகு
மன்னிய புவன மனைத்தையு நோக்கி மனத்திறும் பூதுறுங் காலைத்
துன்னிய வாயி லொன்பது மாயோன் சுருக்கலும் வரும்வழி யுணரான்
பொன்னிதழ்க் கமலநாள மென்றுளையிற் போந்தயன் பொகுட்டிலவந் தனனால்.

(இ-ள்) என்னலும் = என்று (நாரணமூர்த்தி) சொல்லலும், வயிற்றின் புகுந்து= (பிரமனானவன்) வயிற்றினுள்ளே சென்று, எழு கடலும்=ஏழு சமுத்திரங்களையும், எழு பெரு தீவும் = ஏழாகிய பெரிய தீவுகளையும், ஏழு உலகும் = (கீழ்மேலுள்ள) ஏழுலகங் களையும், மன்னிய புவனம் அனைத்தையும் நோக்கி=நிலைத்துள்ள (மற்றைய) அண்டபுவ னங்கள் எல்லாவற்றையும் பார்த்து, மனத்து இறும்பூது உறு காலை=தன்மனத்தில் அதி சயங்கொண்ட பொழுது, மாயோன் = நாரணக் கடவுள், துன்னிய ஒன்பது வாயிலும் சுருக்கலும் = (சரீரத்திற்) பொருந்திய நவத்துவாரங்களையும் ஒடுக்குதலும், வரும் வழி உணரான் = (வெளியே) வருதற்குரிய மார்க்கத்தை யறியாதவனாய், பொன் இதழ் கம லம் நாளம் மென் துளையில் போந்து = பொன் போன்ற இதழ்களை யுடைய (நாபித்)

தாமரை நாளக்கணுள்ள மிருதுவாகிய துளைவழியாக வெளிக்கொண்டு, உயர் பொகுட்டில் வந்தனன்=உயர்வாகிய தாமரைப்பூம் பொகுட்டினகண் வந்திருந்தனன்.

பிரமன் நாரணக்கடவுளின் வயிற்றிற் புகுந்து உலக மெல்லாவற்றையும் பார்த்து ஆச்சரியங் கொள்ளுங் காலத்து, நாரணர் நவத்துவாரங்களையு மொடுக்க, வெளியே வருதற்கு வழி யறியாதவனாகி உந்திக கமலத் துவார வழியே வந்திருந்தனன் என்க. நவத்துவாரங்களாவன.—கண் இரண்டு, மூக்கிரண்டு, செவி இரண்டு, வா யொன்று, குதமொன்று, குறி யொன்று. உணரான-வினைமுற்று எச்சப்பொருளில் வந்தது. (௬)

போதரு நெறிகள் யாவையுஞ் சுருக்கி யென்னைநுன் னகட்டினிற் பொதியா
வேதமில் வென்றி கொண்டிட நினைந்த தியாதுகொ லுலகனைத் தினுக்கும்
தாதையா னென்னை நிகருறுங் கடவு ளெவர்கொனீ சாற்றுதி யெனலு
மாதவன்முறுவல் கோட்டியோர் விளையாட்டயர்ந்தனன் மனக்கொளேலென்றான்.

(இ-ள்) போதரு நெறிகள் யாவையும் சுருக்கி = போதலைச் செய்யும் வழிகளெல்லாவற்றையும் ஒடுக்கி, என்னை நுன் அகட்டின் பொதியா = என்னையு முனது வயிற்றிலடக்கி, ஏதம் இல் வென்றி கொண்டிட நினைந்தது யாது கொல்=குற்றமில்லாத வெற்றியைக் கொள்ளுமாறு எண்ணியது என்னையோ, உலகு அனைத்தினுக்கும் தாதை யான்=உலகமெல்லாவற்றிற்கும் தந்தை யானே யாகும், என்னை நிகர் உறும் கடவுள் எவர் = என்னையொத்திருக்கும் கடவுள் வேறு யாரிருக்கின்றனர், நீ சாற்றுதி எனலும் = நீ சொல்வாயென்று கூறுதலும், மாதவன்=ஸ்ரீதேவி நாயகனாகிய பதுமநாபன், முறுவல் கோட்டி= புன்னகை செய்து, ஓர் விளையாட்டு அயர்ந்தனன்=(பிரமனே) ஒரு விளையாட்டாகச் செய்தேன் (ஆகலால்) மனம் கொள்ளேல் என்றான் = (நீ) மனத்திற் குறையாகக் கொள்ளாதே என்று. இன் கொல் அசைகள்.

இது முதலிரு செய்யுள் குளகம். நீ என்னும் பெயர்ச்சொல் வேற்றுமையுருபேற்குங்கால் நின் உன் நு உம் எனத் திரிதலன்றி, நுன் எனத் திரிதலு முண்மைகண்டும் இங்ஙனம் "பண்ணிய தழல்காய் பாலளாநீர்போற் பாவமுன் பறைந்துபா லணைய புண்ணியம் பின்சென் றறிவினுக் கரிய புகுந்ததோர் யோகினிற் பொலிந்து - நுண்ணிய பெருமை யென்னிலு நம்பர் பெருமை நுண்ணிடை யொடுங்கவீ வருதேன் — கண்ணினுண் மணியிற் கலந்தனை கங்கை கொண்டசோ ளேச்சரத் தானே" எனக் **கருவூர்த் தேவர் திருவிசைப்பா** முதலியவற்றில் அருளப்பட்டதனாலும் அறிக. (எ)

உலகனைத் தினையு மெளிதினி னுயிர்த்தா யுன்னையார் நிகர்வருங் கடவுண்
மலர்செழுங் கமலத் துதித்தலாற் கமல னெனும்பெயர் மருவிஎன் மகவாய்
நிலைபெற வேண்டு மென்மல ரயனு மகிழ்வுட னுங்கவை நேரா
வலகில்சீர்க் கடவு ளாமிரு வருமே யன்றிவே றிலையென வறைந்தான்.

(இ-ள்) உலகு அனைத்தினையும் எளிதின் உயிர்த்தாய் = உலகமெல்லாவற்றையும் இலகுவிற் சிருட்டித்தனை, உன்னை நிகர்வரும் கடவுள் யார்=உன்னை நிகர்த்த தேவர்கள் வேறியாருளர், செழு கமலம் மலர் உதித்தலால்=செழுமை யாகிய தாமரைப்பூவினின்றும் நீவந்தமையால், கமலன் எனும் பெயர் மருவி=கமலன் என்னு நாமத்தைப் பொருந்தப் பெற்று, என் மகவு ஆய் நிலைபெற வேண்டும் என=எனது குமாரனாக நிலைபெற்றிருக்க வேண்டும் என்று கூற, மலர் அயனும்=பிரமனும், ஆங்கு அவை மகிழ்வு உடன் நேரா= அவனுரைத்தவைகளை யெல்லாஞ் சந்தோஷத்துடன் அங்கீகரித்து, அலகு இல் சீர் கடவுள் நாம் இருவருமே அன்றி=அளவில்லாத சிறப்பினையுடைய கடவுளர்களாவார் நாங்கள்

இருவருமே யல்லாமல், வேறு இல்லை என ஆர்த்தான் = வேறு (ஒருவரும்) இல்லை யென்றுசொன்னான். நீகா வரும் - இதில் வாதுவின் வினை சேரா - உடன்பாட்டெச்சம். (அ)

பித்தர்போன் மனத்திற் பிறந்தன வாளா பிதற்றுவ தெவன்கொனான்முகத்
தோய், மத்தமுமறுகும்வளர்பிறைக்கொழுந்தும்பவளவார்சடைமிசைவனைந்த
முத்தவெண் முறுவற் கனிபடு துவர்வாய் முகிழ்முலை யொருமருங் கமைத்துத்
தத்துவங் கடந்த முக்கணெம் பெருமான் றனையுண ராதநீ யென்றான்.

(இ-ள்) நால் முகத்தோய் = நான்கு முகங்களையுடைய பிரமனே, நீ = நீ, மத்தமும் அறுகும் வளர் பிறை கொழுந்தும் = ஊமத்தமும் அறுகும் கலைவளரப் பெறுகின்ற பிறைக் கண்ணியும், பவளம் வார் சடைமிசை வனைந்த = பவளம் போன்ற நீண்ட சடாமுடியின்மீது தரித்தருளிய, முத்தம் வெண் முறுவல் = முத்துக்களைப் போன்ற அழகிய வெண்மையாகிய பற்களையும், கனி படு துவர் வாய் = (கோவைப்) பழத்தையும் வென்ற சிவந்த வாயினையும், முகிழ் முலை = அரும்பிய தனங்களையு முடைய உமா தேவியாரை, ஒரு மருங்கு அமைத்து = ஒருபக்கத்தில் வைத்து, தத்துவம் கடந்த முக்கண் எம் பெருமான் தனை = தத்துவங்களையெல்லாங் கடந்து நின்ற திரிநேத்திரராகிய எங்கள் சிவ பெருமானை, உணராது = முழுமுதற் பொருளென்று அறியாமல், பித்தர் போல = பைத்தியகாரரைப்போல, மனத்தில் பிறந்தன வாளா பிதற்றுவது எவன் கொல் = மனத்திற் றோன்றியவற்றையெல்லாஞ் சும்மா பிதற்றுவது என்னையோ.

முகிழ்முலை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தத்துவங்களாவன — ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும், வித்தியா தத்துவம் ஏழும், சிவ தத்துவம் ஐந்துமாகிய முப்பத்தாறுமாம். இவையே தொண்ணூற்றாறு ஆகவும் விரியும். கொல் ஐயப் பொருளின்கண் வந்தது. (கூ)

எனவுளங் கனன்று நான்முகக் கடவு ளிளங்களி வண்டுபாட் டயரும்
வனைதுழா யலங்கற் கடவுளா நீயு மலர்ப்பொகுட் டுறைதரு மியானும்
நினைவருந் தேவ ரெவரினு மேலாய் நிருபரா நம்மிலுயர்ந்தோர்
கனைகடல் வயிறு கிழியமத் தெறிந்து கடைந்தமு தெடுத்தகார் முகிலே.

(இ-ள்) என = என்று (திருமால்) கூற, நான்முகம் கடவுள் உளம் கனன்று = பிரமதேவன் கோபமுற்று, கனை கடல் வயிறு கிழிய = ஒலிக்கின்ற (பாற்) சமுத்திரத்தினை அகடு கிழியும்படி, மத்து எறிந்து கடைந்து = (மந்தரமலையாகிய) மத்தினைச் சுழற்றிக் கடைந்து, அமுது எடுத்த கார் முகிலே = அமிர்தமெடுத்தளித்த நீலமேகமே, களி இளம் வண்டு பாட்டு அயரும் = (மதுவுண்ணலால்) களிப்புற்ற இளமையாகிய வண்டுகள் பாட்டுக்களைப் பாடாநின்ற, துழாய் அலங்கல் வனை கடவுள் ஆய நீயும் = துழாய் மாலையைப் புனைந்த தெய்வமாகிய நீயும், மலர் பொகுட்டு உறைதரும் யானும் = தாமரைப்பூங் கொட்டையிலிருக்கின்ற நானுமே, நினைவு அரும் தேவர் எவரினும் மேலாய நிருபர் = தியானிக்கப்படுகின்ற தேவர்கள் எல்லாரினும் மேலான கடவுளராய நிருபராகும், நம்மில் உயர்ந்தோர் யார் = எம்மினின்றும் மேலாய கடவுளர் யாவருளர். (கo)

என்றலு முகுந்த னிளநகை கோட்டி நள்ளிரு ளொளியுற விருண்டு
துன்றிய மாயைப் படாம்படுத்துத் திட்டிற் றுரியமாயத் துரியமுங் கடந்து
நின்றபே ரொளியாந் திங்களங் கண்ணி நிமலனை யறிந்திலை போலு
மன்றயா னறிவ னென்றுதற் பரனை மனத்திடை யிருத்துமேல் வையினில்

(இ-ள்) என்றலும் = என்று (பிரமன்) கூறுதலும், முருந்தன இள நகை கோட்டி = திருமால் புன்முறுவல் செய்து, நள் இருள் ஒளி உற இருண்டு துன்றிய = நடுநிசியும் ஒளி யாகி நிறக (அதனினினும்) கருமையுற்று நிறைந்த, மாயை படாம் புதைத்து இடலின் = மாயையாகிய திரை (நினைவினை) மூடி மறைந்ததனால், துரியம் ஆய் = துரியப் பொருளாகியும், துரியமும் கடந்து நின்ற பெரு ஒளி ஆம் = துரிய அவத்தையினையுங் கடந்து விளங்காநின்ற பரஞ்சோதியு மாகிய, அம் திங்கள் கண்ணி நிமலனை அறிந்திலை = அழகிய பிறைக் கொழுந்தை யணிந்த நிருமல சிவத்தை யறிந்தாயல்லை, யான் மன்ற அறிவன் என்று = நான் தெளிவாகத் தெரிந்துள்ளேன் என்று சொல்லி, தற்பரனை மனத்து இடை இருத்தும் எல்லையின் = தற்பரசிவத்தைத் தனது இருதயத்தின்கண் வைத்துத் தியானித்த போதில்.

பிரமதேவன் எம்மிருவரையு மன்றி வேறு உயர்வுடைக் கடவுள் ஒருவரு மில்லரென வுரைக்கத் திருமால் அதனைக் கேட்டுப் புன்சிரிப்புக் கொண்டு பிரமனே! நீ மாயை மறைப்பினால் துரியாதீதப் பரஞ்சோதிப் பொருளை யறிந்திலை யான் நன்குயத் தெரிந்திருக்கின்றே னென்று அந்தப் பரசிவத்தைத் தியானித்தனா என்பதாம் "எல்லையினில்" என்னுஞ் சொல் வருஞ் செய்யுட்களுள்ள "தோன்றியது" என்னுஞ் சொல்லைக் கொண்டு முடிதலாற் குளகமாம் மாயை யானது நள்ளிருளினுங் கரியதாகலின் "நள்ளிருளொளியுறவிருண்டு-துன்றியமாயை" எனவும், இருபொருளி னிடைநின்று மறைந்து நிற்குந் திரைபோல ஆன்மாச் சிவத்தை யறிய வொட்டாது மறைந்து நிற்றலின் "படாம்" எனவும், மறைப்பினால் அவத்தை வயப்பட்ட ஆன்மாவுக்கு அதீதமாய பரம்பொருள் அறியப் படாதாகலின் "நிமலனை யறிந்திலை" எனவுங் கூறப்பட்டது அவத்தை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்துவகைப்படும். இவற்றுள் துரியம் துரியாதீதம் என்னும் இரண்டும் கீழாலவத்தையிற் றுரியம் துரியாதீதம் எனவும், மேலாலவத்தையிற் றுரியம் துரியாதீதம் எனவும், மத்தியாலவத்தையிற் சாக்கிர துரியம் துரியாதீதம் எனவும், பிரேரகாவத்தையிற் றுரியம் துரியாதீதம் எனவும் வருக்கப்படும் அவையாவன சித்தஞ் சீவியாதிருப்பப் பிராணவாயு புருடதத்துவ மிரண்டு மாக்கும் நேருதனையைக் காண்பித்து நாபியிற் சீவியாதிருந்தல் கீழாலவத்தையிற் றுரியமாம் பிராணவாயு சீவியாதிருப்பப் புருடதத்துவ மொன்றும் மேல்வருஞ் சாக்கிரத்திற் சுகமாய நான நித்திரை செய்தேனென்பதனாற் சூசிக்கப்பட்டுத் தமோ மாத்திரத்தை விடயிக்கிறது, இலிங்கத்திற் சீவித்து நிற்றல் கீழாலவத்தையிற் றுரியாதீதமாம் ஆன்மா ஞாதுருத்துவத்துக்குக் காரணமாகிய சத்தி தத்துவ மென்னும் விந்துவுடன் சேர்ந்து நாபியில் மாயையுடன் கலந்து சீவியா நிற்றல் மேலாலவத்தையிற் றுரியம் கலாதி பஞ்ச கஞ்சுக புருடன் ஞாதுருத்துவத்துக்குக் காரணமாகிய சிவதத்துவ மென்னும் நாதத்துடன் சேர்ந்து இலிங்கத்தில் மூலமலத்தொடு சேர்ந்து நிற்றல் மேலாலவத்தையிற் றுரியாதீதம் ஒருபொருளைத் தூரத்திற் கண்டு விசாரித் தறிவோமென்பது மத்தியாலவத்தையிற் சாக்கிர துரியம் அங்ஙனம் கண்டவிடத்து நாம சாதிகளினது மறதி மத்தியாலவத்தையிற் சாக்கிராதீதமாம் சின்மாத்திரமாயத் தன்னைக் காண்டல் பிரேரக அவத்தையிற் றுரியமாம் சிவத்திற் கோப்பாகச் சிவதத்துவாபி வியத்திமானாகத் தன்னைக் காண்பது பிரேரகாவத்தையிற் றுரியாதீதமாம். (௧௧)

சேட்டிளம் பரிதி முதலிய கோளு முடுக்களுந் தொடுத்தவீர்ந் தொடைய
ரோட்டுணை மீது துயல்வரத் திங்கட் கண்ணிசூழ் செஞ்சடை மௌலி
யோட்டற நிவந்த வண்டபித் திகையி னூரிருசவேழ பாதல முருவுந்
தாட்டுணை பொருந்து மறைகளு மறியாத் தனிப்பொருடோன்றிய தன்றே

(இ-ள்) மறைகளும் அறியா தனி பொருள் = வேதங்களினாலுந் தேடியறியப் படாத ஒப்பற்ற பரமபொருளானது, சேடு இளம் பரிதி முதலிய கோளும் = பெருமை

வரைநெடுந் திணிதோள் மழுவலான் செய்ய மலரடி தொழுதெழுந் தேத்தி
விரைச்செழுங் கமலப் பொகுட்டர சிருக்கும் வேதியர்க் கிங்கிவை புகல்வான்.

(இ-ள்) உரைத்தலும்=(பிரமன் இவ்வாறு) கேட்டலும், உயர் வானப் பரிதிக் கதிர் என்ன=உயர்ந்த ஆகாயத்தின் கண்ணுள்ள இளஞ் சூரியனைப்போல, ஒரு மணி கிடந்த நீள் மார்பன்=ஒப்பற்ற கௌஸ்துப ரத்தினம் தங்கப்பெற்ற நீண்ட மார்பினையுடைய நாராயணமூர்த்தி, நிரைத்த பை தலைப் பாம்பு அணை துறந்து=வரிசையான படத்தலைகளையுடைய பாம்புப் பாயலை விடுத்து, நீறு ஒளி இள நிலா எறிக்கும்=திருநீற்றினொளியாகிய இளஞ் சந்திரிகையைக் காலுகின்ற, வரை நெடும் திணி தோள் மழு வலான்=மலைபோன்ற பெருத்த வலிமையாகிய திருப்புயங்களையுடைய மழுவாயுதங் கொண்ட மாதேவனது, செய்ய மலர் அடி தொழுது எழுந்து ஏத்தி=செம்மையாகிய மலர்போன்ற பாதங்களை வணங்கி யெழுந்து துதித்து, விரை செழு கமலம் பொகுட்டு—வாசனையுடைய செழுமையாகிய தாமரைப் பொகுட்டினன்கண், அரசு இருக்கும் வேதியர்க்கு=வீற்றிருக்கின்ற பிரமதேவனுக்கு, இவை புகல்வான்=இவற்றைச் சொல்லுவார். (கச)

உலகமற் றனைத்தும் படைத்தவை யளித்து மொடுக்கியுங் கடையுகந் தோறு
மலகிலா விளையாட் டயர்பவன் யாவன் யாவனிற் பயந்தனன் ஞால
நிலைபெற வமைந்த சத்தியா னவனே நீறுபூத் தொளிர்தழற் பிழம்பின்
மலைவறத் தோன்றுஞ் சங்கரனிவன்றாள் வணங்கெனப் பேருணர் வளித்தான்.

(இ-ள்) உலகம் மற்று அனைத்தும் படைத்து=உலகங்களையும் மற்றைய எல்லாவற்றையுஞ் சிருட்டித்தும், அவை அளித்தும் ஒடுக்கியும்=அவற்றைக் காத்தும் அழித்தும், கடையுகம் தோறும் அலகு இலா விளையாட்டு அயர்பவன் யாவன்=ஊழிக்காலங்கடோறும் அளவில்லாத் திருவிளையாடல்களைச் செய்வோன் எவன், நின் பயந்தவன் யாவன்=உன்னையும் பிறப்பித்தவன் எவன், அவனே=அங்ஙனமுள்ளவனே, நீறு பூத்து ஒளிர் தழல் பிழம்பின்=திருநீற்றால் மூக்கப்பெற்று விளங்கும் அக்கினிப் பிழம்பைப்போல, மலைவு அற தோன்றும் சங்கரனே=மயக்கம் நீங்குமாறு வெளிப்பட்ட இச் சங்கரனேயாம், யானே=நானே, ஞாலம் நிலைபெற அமைந்த சத்தி=(இக்கடவுள்) உயிர்கள் நிலைபெறுமாறு நியமித்த சத்தியாகும் (ஆகலால்) இவன் தாள் வணங்கு என=இக்கடவுளது பாதங்களைப் பணிவாயாக வென்று, பெரு உணர்வு அளித்தான்=பேரறிவு தோன்றச் செய்தனன்.

உலகமெல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிப்பவனும், ஊழிக்காலந்தோறும் அளவிலாத் திருவிளையாடலைச் செய்வோனும், உன்னைப் படைத்தவனும் யாவனோ அவனே யிச் சங்கரனாகும்; நானோ அவனது சத்தியேயாகும்; ஆகலால், இவனது பாதங்களை வணங்கக் கடவாய் என்று மெய்யறிவு தோன்றச் செய்தனர் என்க.

பிழம்பின்-இன் உவமவுருபின்கட் சென்றது. சங்கரன்—சம்—சுகத்தை, கரன்=செய்பவன். ஏகாரம் தேற்றப்பொருட்டு. சிவபெருமானுக்குரிய நால்வகைச் சத்திகளுள் சீற்றச்சத்தி காளியும், அழித்தற்சத்தி துர்க்கையும், இன்பசத்தி உமாதேவியாருமாகலானும், ஆண்சத்தி திருமாலாகலானும், அது சிவபெருமான் தாருகவனத்துப் பலியேற்கச் சென்ற போதும், கடலமுதளித்த காலத்தும் பெண்வடிவு முற்றலானும் உணரப்படுமென்க. இதற்குப் பிரமாணம் கந்தபுராணத்தில் "என்று யாய் னிசைத்தலு மொய்யிரா—னென்று நீயு நமக்கொரு சத்திகா—ணென்று தாருகத் தந்தனர் பாயருற்ச—சென்ற போதினுஞ் சேயிழை யாயினை நால்வகைப்பட நண்ணிய சத்தியுண்-மாலு மாதலின் மற்றது காட்டுவா-னால கண்டத்தனச்சுந் தனசசுறுங்-கோல மெய்திக் குறுகினனவ்விடை" என்றருளப்பட்டதனா னறிக. சிவபெருமான் பிரமதேவரைப் பிறப்பித்தாரென்பதற்கு "முன்னை வேதன முடிந்

தனன் போகலு-முன்னே டேவந் துவம்பொடு கூடினேம் பிரான சிகசப் பிரமனையுந்தியா-
லனனையாகி யளித்தனை யல்லையோ " என்றுகூறப்பட்ட திருவிருத்தங்களாம். (கரு)

மருங்கிற வாக முழுவதுங் கவர்ந்து வருமுலைக் கலைமகண மணாள
னொருங்கறி வெய்தி நரைவிடைப் பாக னொண்மலர்ச் சேவடி நோக்கி
விரும்பியுண னெகிழ விழிபுனல் வார மெய்ம்மயிர் சிலிர்ப்பப்பாகக் குளறித்
திருந்துநான் மறைகள் பாடினி னாடித் தேமலர்த் தூயவணங் கினனால்.

(இ-ள்) மருங்கு இற ஆகம் முழுவதும் கவர்ந்து = இடையானது ஒடியுமாறு மார்பினிட முழுவதையுங் கிரகித்து, வரும் முலை கலைமகள் மணாளன் = வளரா நின்ற தனங்களையுடைய சரசுவதிதேவியின் நாயகனான பிரமன், ஒருங்கு அறிவு எய்தி = ஒருமைப்பட்ட மெய்யுணர்வடைந்து, நரை விடை பாகன் ஒண் மலர் சே அடி நோக்கி = வெள்ளிய இடபவாகனராகிய சிவபெருமானது அழகிய மலர்போன்ற செவ்விய பாதங்களைத் தரிசித்து, உள் விரும்பி நெகிழ = மனம் அன்புற்றிளகவும், விழி புனல் வார = கண்களினின்றும் ஆனந்த பாஷ்பஞ் சொரியவும், மெய் மயிர் சிலிர்ப்ப = சரீரத்தின்கணுள்ள உரோமங்கள் புளகங் கொள்ளவும், நா குளற = நாத் தழுதழுக்கவும், திருந்து நால் மறைகள் பாடி நின்று ஆடி = திருந்தியவாகிய நான்கு வேதங்களையுந் தோத்திரமாகச் சொல்லித் துதித்துங் கூத்தாடியும், தே மலர் தூய வணங்கினன் = தேன் பொருந்திய புட்பங்களைப் பெய்தும் பணிந்தான், ஆல் அசைநிலை.

கலைமகள் = சாத்திரங்கட்கு இறைவி, நாமகள் மணவாளன் என்பது மணாளன் என மருவிற்று. மனம் வேறு விடயங்களிற் செல்லாது இறைவனிடம் விடயமாக் கொண்டு நின்றது குறிக்க "ஒருங்கறிவு" என்றான். எய்தி நோக்கி நெகிழ வார சிலிர்ப்பக் குளறப் பாடி ஆடி தூய் வணங்கினன் என முடிக்க. குளறல் = உரை தடுமாறல். (கசு)

வணங்கிய கடவுட் கமலநான் முகத்தோன் வான்முக நோக்கிவா ளெயிற்ற
வணங்கர வசைத்தோ னெமதுகுற் றேவ லடியரிற் சிறந்தனை யுளத்தி
லிணங்குநல் வரநீ கேட்டியென் றுரைப்ப விருகையிற் பவளவாய் புதைத்துப்
பணிந்தென துள்ளப் பருவர லொழியப் பாலனாய் வருதியென் றிரந்தான்.

(இ-ள்) வாள் எயிறு அணங்கு அரவு அசைத்தோன் = ஒளிபொருந்திய பற்களையுடைய அச்சத்தை விளைக்குஞ் சர்ப்பத்தை யாபரணமாகத் தரித்த சிவபெருமான், வணங்கிய கடவுள் கமலம் நான்முகத்தோன் வான் முகம் நோக்கி = பணிந்த தெய்வீகத் தாமரையின்கணிருக்கும் பிரமனது சிறப்பினையுடைய வதனத்தைப் பார்த்தருளி, நீ = (பிரமனே) நீ, எமது குற்றேவல் அடியரின் சிறந்தனை = நமது அடித்தொண்டைச்செய்கின்ற அன்பரைப் போலச் சிறப்புற்று நின்றாய், உளத்தில் இணங்கும் நல் வரம் கேட்டி என்று உரைப்ப = மனத்திற் கொண்ட நல்ல வரத்தைக் கேட்கக் கடவாய் என்றுகூற, இரு கையின் பவளம் வாய் புதைத்து = இரண்டு கைகளினாலும் பவளம்போலும் வாயை மூடி, பணிந்து = வணங்கி, எனது உள்ளம் பருவரல் ஒழிய = என்மனத்தினிகழும் துன்பங்கணீங்க, பாலன் ஆய் வருதி என்று இரந்தான் = புத்திரனாகி வந்தருள்வாய் என்று குறையிரந்தனன்

ஆங்கது நோக்கெவ் வுலகமும் படைக்குந் தொழிலுமற் றவற்கினி தருளித்
தேங்கமழ் கனனிப் பசுந்துழா யலங்கற் றிருமறு மார்பனை நோக்கி
யீங்குநின் னுளத்தி னணபினுக் குகந்தேம் வேட்டன கேளென நின்று
பூங்கழ லிணையி லனபுநா னுறநம் பொலிந்திட வேண்டுமென் றிரந்தான்

(இ-ள்.) அதுபோது = அந்நேரத்தில், அவன்கு = அப்பிரமனுக்கு, எவ்வுலகும் படைக்கும் தொழிலும் இனிது அருளி = எல்லா வுலகங்களையுஞ் சிருட்டிக்கின்ற கிருத்தியத்தையுஞ் செவ்வனே கிருபை புரிந்து, தேம் கமழ் கனிவி பசுந் துழாய் அலங்கல் = வாசனை மணக்கும் புதிய பசுமையாகிய துழாய் மாலையை யணிந்த, திருமறு மார்பனை நோக்கி = ஸ்ரீவத்சம் என்னும் மறு பொருந்திய மார்பினையுடைய திருமாலைப் பார்த்து, வீங்கு நின் உளத்தின் அன்பினுக்கு உகந்தேம் = பெருமையாகிய உனது உள்ளன்புக்காக மகிழ்ந்தனம், வேட்டன கேள் என = விரும்பியவற்றைக் கேட்குதி யென்று கூற (திருமால்) நினது பூ இணை கழலில் = நினது மலரினை யொத்த உன்னுடைய இருதிருவடிகளிலும், நாள் நாளும் அன்பு பொலிதிட வேண்டும் என்று இரந்தான் = தினந்தினமும் அன்பு அதிகரிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தனன்.

ஆங்கு மற்று - அசை. இறைவன் கழற்கண் அன்பே மற்றெப்பேற்றினுஞ் சிறந்ததாகலின் "பூங்கழலிணையி லன்பு நாடொறும் பொலிந்திட வேண்டுமென் றிரந்தான்" எனக. இங்ஙனமே பார்த்தனென்றும் பசைவேற்றெதிர் பொருது கொண்டு பாசுபதம் பெற்ற வீர மொய்ம்பனும் பிறவிலையே யன்பே வேண்டுமென்று வேறுபடைக்கடவுள் வினவியருள அவனும் "கோல நீடிய நிலப்பெரு வாழ்க்கையுங் குறியேன் - மேலை யிந்திர னரசினைக் கனவிலும் விழைகேன் - மாலயன்பெறு பதங்களும் பொருளென மதியேன் - சால நீடிய நின்பதத் துணையே வேண்டுவ னடியேன்" என்று வேண்டினன். நாள் நாள் என்ற அடுக்குப் பன்மைப் பொருளில் வந்தது. (கஎ)

அளப்பருஞ் சகமாங் காரியம் நீயான் காரண மவிர்மதி நீயான்
றுளக்குறு பரிதி கங்குனீ பகல்யான் சொல்பிர கிருதிநீ யானே
விளக்குறு புருட னறிவுநீ யானே யறிபவன் மாயைநீ விளங்க
வுளக்கணிற் றோன்று மீசனியா னென்ன வுணர்ந்தவர் யாவையு முணர்ந்தார்.

(இ-ள்.) அளப்ப அரு சகம் ஆம் காரியம் நீ = (விஷ்ணுவே) அளவை செய்தற்கு அரிய பிரபஞ்சம் என்னுங் காரியப்பொருள் நீயே யாகும், யான் = நான், காரணம் = அதனது காரணப் பொருளாகும், நீ அவிர் மதி = நீ விளங்காநின்ற சந்திரன், யான் துளக்குறு பரிதி = நான் பிரகாசத்தைச் செய்யுஞ் சூரியன், நீ கங்குல் = நீ இரவு, யான் பகல் = நான் பகல், நீ சொல் பிரகிருதி = நீயே சொல்லப்படும் பிரகிருதி மாயை, யானே விளக்குறு புருடன் = நானே விளக்குதலைக் கொண்ட புருடதத்துவம், நீ அறிவு = நீயே காட்சி, யானே அறிபவன் = நானே காண்பவன், நீ மாயை = நீயே மாயாசத்தி, யான் உளம் கண்ணில் விளங்கத் தோன்றும் ஈசன் = நானே ஞானக் கண்ணிற்குத் தெரியும்படி தோன்றுகின்ற மகேசுரன், என்ன உணர்ந்தவர் = என்று (உண்மை) உணர்ந்து தெரியோர்களே, யாவையும் உணர்ந்தார் = எல்லாவற்றையும் அறிந்தவராவர்.

இதனானே விஷ்ணு முதலிய காரிய காரணங்களாகவும் சத்தி சத்தனாகவும் அபேதப் பொருளின் பாற்பட்டு விளங்குவர் என்பது கூறப்பட்டது. சிவபெருமான் ஊனக் கண்ணால் அறியப்படாது ஞானக் கண்ணொன்றினாலேயே யறியப்படுவர் எனக. அது "ஊனக்கண் பாச முணராப் பதியை - ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி" என்னுஞ் **சைவசமயநெறிச்** செய்யுளாற் கண்டது. தொழில் அறிவு இச்சை யென்னும் மூன்றனோடுங் **கால** முதலிய ஏனைய தத்துவங்களும் விளக்கின் விட்டத்துப் பஞ்ச கஞ்சுகமாய், **பஞ்சக் கிலேசியாய்,** போக்தாவாய் நிற்பது புருடதத்துவமாதலின் "விளக்குறு புருடன்" என்றனர். மாயை என்றது அவிச்சையினை யெனக்கொள்க. (கஅ)

என்றலு மியம்பி யரவணை கொண்டோன் விருவிசும் பணந்துயர் குடுமிப்
பொன்வரை குழைத்துப் புரமொரு மூன்றும் புகைவெழக் குறுநகை கோட்டி

(இ-ள்) திருமறு மார்பன்=ஸ்ரீவத்சம் என்னும் மறுப்பொருந்திய மார்பினையுடைய விட்டுணு மூர்த்தியே, மரகதவல்லி படர் = மரகதக் கொடி படர்கின்ற, மதி சூடும் மாணிக்கம் மலை அகன்றிடலும் = பிறை தவழும் முடியை யுடைய மாணிக்க மலையாகிய சிவபெருமான் மறைந்து போதலும், அயன் இழைத்தவற்றை செப்புதி என = பிரமன் செய்த செய்கைகளைத் திருவாய் மலர்ந்தருளவாய் என்று, பண் நல தொழில் சார் புரி நரம்பு உளரும் = பண்ணல் முதலிய கலைத்தொழில் கொண்டு கட்டப்பட்ட நரம்புகளால் பாடப்படுகின்ற, மகதி யாழ் இசையும் = மகதியென்னும் வீணையை யுடைய இசையாசிரிய ராகிய நாரதமுனிவரும், பொன் நகர்க்கு இறைவனும் கேட்ப = சுவர்க்க லோகத்திற்கு அதிபதியாகிய இந்திரனும் கேட்க, கரை பொரு கடல் வாய் புழுங்க=கரையுடன் பொருகின்ற (மோதுகின்ற) சமுத்திரத்தின் வாயானது வருந்த, மத்து எறிந்த கார் நிற வண்ணன் = (மலையாகிய) மத்தை வீசிக் கடைந்த மேகம் போன்ற நிறவடிவராய கூர்ம மூர்த்தி, ஈது உரைப்பான் = இதனைக் கூறுவாராயினர் என்க

மரகதவல்லி=மரகதக் கொடிபோன்ற உருவுடைய உமாதேவி மலைக் கொடுமுடியிற் பிறை தவழ்தல் போல இறைவனது திருமுடி மீது மிளப் பிறை தவழ்தல் உண்மையாகலின் "மதிக் சூடும்" எனவும், சிவபெருமான் செந்நிறமும், தேவி மரகத நிறமுமுடையராதலால் "மரகதவல்லி படர் மாணிக்கமலை" எனவுங் கூறினர் இங்ஙனமே "பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற் பரந்தநீற் றழகுபச் சுடர்பிற-திவளமா துடனின்முடிய டரமன" எனக் **கடவுண் மகாமுனிவருங்** கூறினார் சிவபெருமான் என்னும் உபமேயப் பொருளை மாணிக்கமலையென மறைத்துக் கிளத்தினமையால் இஃது **உருவகவுயர்வு நவிற்சி யலங்காரம்** பண்ணல் முதலிய கலைத் தொழில்களாவன —பண்ணல், பரிவட்டனை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்னுமெட்டுமாம் அவற்றுள் பண்ணலாவது பாட நினைத்த பண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெயருந் தன்மாத்திரையறிந்து வீக்குதல் பரிவட்டனையாவது அவ்வீக்கின நரம்பை அகவிரலானும் புறவிரலானும் கரணஞ் செய்து தடவிப் பார்த்தல் ஆராய்தலாவது ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிதல் தைவரலாவது அநுசுருதி யேற்றுதல் செலவாவது ஆளத்தியிலே நிரம்பப் பாடுதல் விளையாட்டாவது பாட நினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுதல் கையூழாவது வண்ணத்திற் செய்த பாடலெல்லாம் இன்பமாகப் பாடுதல் குறும்போக்காவது கூடகச் செலவுந் துள்ளற்செலவும் பாடுதல் என்ப. இசை யென்பது அதனை யுடைய முனிவனை யுணர்த்தலின் ஆகுபெயர். இசை யாசிரியர்க்குரிய அமைதியை யுடைமையானும், **பஞ்சபாரதீய** மென்னும் இசைநூலை யியற்றினமையானும் நாரதனை இசை யென்றதாம் இசை யாசிரியர்க்குரிய அமைதியை "யாழுங் குழலுஞ் சீரு மிடறும் - தாழ்குரற் றண்ணுமை யாடலொ டிவற்றி-னிசைந்த பாட லிசையுடன் படுத்து - வரிக்கு மாடற்கு முரிப்பொரு ளியக்கித் - தேசிகத் திருவி னோசை கடைப்பிடித்துந் தேசிகத் திருவி னோசை யெல்லா-மாசின் றுணர்ந்த வறிவின னாகிக்-கவிய தெண்ணங் குறிப்பு மாடற் றொகுதியும் - பகுதிப் பாடலுங் கொளுத்துங் காலை-வசையறு கேள்வி வகுத்தன னுணர்ந்-திசையோன் றானும்" என **அரங்கேற்று காதையில்** அறையப்பட்டதனாற் றெரிக. இது - ஈது என நீண்டது. (க)

## கலிநிலைத்துறை.

இரவி யின்றியும் பகற்செயு மெரிமணி கிடந்த
மரகதச் செழுங் குன்றனை மணிகெழு செஞ்சூட்
டரவ ணைப்புறத் தறிதுயில் புரிதலு முடிந்த
திருமலர்ப் பொகுட் டெழுந்தனன் றிசைமுகக் கடவுள்.

(இ-ள்) இரவி இன்றியும் பகல் செய்யும் = சூரியனை வேண்டாது வழியும் பகலைச் செய்கின்ற, எரி மணி கிடந்த பெரு மரகதக் குன்று அன்ன = ஒளியைக் காலுகின்ற கௌத்துவ ரத்தினந் தங்கி யிருக்குஞ் செழுமையாகிய மரகத மலையை நிகர்ந்த திருமால், மணி கெழு செம் சூட்டு அரவு அணை புயத்து = இரத்தினங்களைப் பொருந்தப்பெற்ற சிவந்த உச்சித் தலைகளை யுடைய சர்ப்ப சயனத்தின் மீது, அறி துயில் புரிதலும் = யோக நித்திரை செய்தலும், திசை முகம் கடவுள்=நான்கு முகப் பிரமதேவன், உந்தி நிருமலர் பொருட்டு உறைந்தனன் = (திருமாலின்) நாபியாகிய அழகிய தாமரைமலர்ப் பொருட்டின் கணிருந்தான்.

பகல் செய்யும் - அன்றுன் என்பன செய்யும் அன்ன என்ற தொகுத்தலாய் நின்றன எரிமணி-வினைத் தொகை திசை முகம் தொகைக் குறிப்புணர்த்துஞ் சொல். (எ)

ஆய காலையிற் றாமரைக் காடலர்ந் தென்னப்
பாய தெண்டிரைக் கண்வளர் பண்ணவன் செவியிற்
றீயுந் தண்ணெனக் கொதித்திமை தீந்தெரி செங்கட்
காயுஞ் சூலவேன் மதுவொடு கைடவ னுதித்தான்

(இ-ள்) ஆய காலையில் = அவ்வாறாய சமயத்தில், தாமரை காடு அலர்ந்து என்ன = தாமரைக் காடானது மலர்களைப் புட்பித்தாற்போல, பாய தெள் திரை கண் வளர் பண்ணவன் செவியின் = பரந்த தெள்ளிய திரைகளையுடைய கடற்கண் அறிதுயில் செய்யா நின்ற திருமாலது காதுகளினின்றும், தீயும் தண் என கொதித்து = காயுந் தண்ணீரைப் போல மனங் கொதிப்புற்று, இமை தீந்து எரி செம் கண் = இமைகளால் அக்கினிப் பொறிகளை யுண்டாக்கி விளங்குஞ் சிவந்த கண்களை யுடைய, காயும் சூலம் வேல் = கொலைத்தொழி லுருத்தருஞ் சூலாயுதம் பிடித்த, மது ஒடு=மது என்பவனோடு, கைடவன் உதித்தான்=கைடவன் என்னும் அசுரன் தோன்றினன்

கடலினடுவண் அறிதுயில் செய்யுங் காலைக் கண்ணனுடைய செவிகளினின்றும் மது என்பவனும் கைடவன் என்பவனுந் தோன்றினர். தண் என்னுங் குண்டப்பெயர் நீர் என்னும் குணியை யுணர்த்திற்று ஒடு-உடனிகழ்ச்சி (அ)

மண்டு செங்கன லடவையை யவிப்பினு மவிப்பா
ரண்டம் யாவையு மொருதடக் கையினி லள்ளி
யுண்டு தேக்கெறிந் துலவினு முலவுவா ரிவர்யார்
கொண்டல் வண்ணவென் றனன்மறை மழலைவாய்க் குழவி.

(இ-ள்.) மறை மழலை வாய் குழவி = வேதங்களாய குதலைச் சொற்களை வசனிக்கின்ற வாயினை யுடைய மகவாகிய பிரமன் (அவர்களைப்பார்த்து) கொண்டல் வண்ண=மேக நிறத்த திருமாலே, மண்டு செம் அடவை கனலை அவிப்பினும் அவிப்பார்=நெருங்கிய சிவந்த ஊழித் தீயை யழிக்க வேண்டுமென்றாலும் அழிப்பார், அண்டம் யாவையும்=அண்டங்களெல்லாவற்றையும், தடம் ஒரு கையினில் அள்ளி = நீண்ட தமது ஒரு கையினால் வாரியெடுத்து, உண்டு தேக்கு எறிந்து உலவினும் உலவுவர் = விழுங்கி யேப்பமிட்டு உலாவ வேண்டுமெனினும் உலாவுவர், இவர் யார் = இங்ஙனமுள்ள வலியவர் யாவர், என்றனன்=என்று அபயமிட்டான்.

குழவி என்னும் இளமைப் பண்புச்சொல் தன் பண்பையுந் தன்னை யுடைய பொருளையும் ஒருங்கு தோற்றுவித்துப் பிரியாது நிற்றலின் உயர்திணைப் பொருளையே யுணர்த்துமென்பர் நச்சினார்க்கினியர். அது உயர்திணை யிருபாற்கும் வருதலை "குழவியு மகவு

நின் றாங்குவது அரிது = உன்னைச் சுமந்திருத்தல் அரிதாயிருக்கின்றது (ஆதலால்) தேன் மலர் விட்டு இறங்குக என்னலும் = தேனைப் பொருந்திய (நாபிகமல) பூவினின்றும் நீங்கிக் கீழிறங்கக் கடவாய் என்று சொல்லுதலும், இழிந்தனன் = அவன் இறங்கி, இனிது கண் வளர்ந்தான் = சுகத்துடன் நித்திரை செய்தனன்.

திருமால் மதுகைடவரைக் கொன்ற பின்பு பிரமனைப் பார்த்து, மைந்தனே! நின்னைத் தாங்கியிருத்தல் எனக்கு வருத்தமாயிருத்தலால் நாபிக் கமலத்தினின்றும் இறங்கென்பப் பணிப்ப, பிரமனும் இறங்கி நித்திரை செய்தான் என்க. (எ)

கள்ள யாவுயிர்க் குஞ்செழுங் கமலமென் பொகுட்டு
வள்ளல் கங்குல்போம் புலரியிற் கண்மதா நீங்கிப்
பள்ள நீர்கவர்ந் துண்டதொல் லுலகெலாம் படைப்பா
னுள்ள முன்புபோற் சனகனை முதலினோ ருதித்தார்.

(இ-ள்) கள் அயாவுயிர்க்கும் = தேனைச் சொரிகின்ற, செழு கமலம் மென் பொகுட்டு வள்ளல் = செழிய தாமரைப்பூப் பொகுட்டினின்றும் வந்த பிரமன், கங்குல் போம் புலரியில் = இரவு நீங்கிய புலரிக் காலத்தில், கண் மதா நீங்கி = கண்மயக்கத்தினின்றும் நீங்கி, பள்ளம் நீர் கவர்ந்து உண்ட தொல் உலகு எலாம் = ஆழமாகிய சமுத்திரத்தையுடைய கடலாற் கொள்ளப்பட்டு மறைந்த பழமையாகிய உலகமெல்லாவற்றையும், படைப்பான் உள்ள = சிருட்டிக்க விரும்பித் தியானிக்க, முன்பு போல = முன்னாட்போல, சனகனை முதலினோர் உதித்தார் = சனகனை முதலாகவுடைய முனிவர் தோன்றினர். (அ)

தோற்று மைந்தரோர் நால்வரும் படைக்கெனத் தூய
நாற்றி தழ்க்கம லத்திறை நுவலலு மதனைப்
போற்றி லேமென முன்னைய கற்பத்திற் புகன்ற
வாற்ற ருந்தவ மாற்றின ரரனடி பணிந்தார்.

(இ-ள்) தோற்றும் மைந்தர் ஓர் நால்வரும் = (பிரமனிடத்தினின்றும்) பிறந்த புத்திரராகிய ஒப்பற்ற நான்கு முனிவரும், தூய நாறு இதழ் கமலத்து இறை = சுத்தமாகிய நாறிதழ்களையுடைய தாமரை மலராசனத்தமர்ந்திருக்கும் பிரமன், படைக்க என நுவலலும் = சிருட்டித்தொழிலைச் செய்வீராக வென்று ஆஞ்ஞாபித்தலும், அதனைப் போற்றிலேம் என = அந்தத் தொழிலை விரும்ப மாட்டேம் என்று, முன்னைய கற்பத்தின் புகன்ற = முந்திய கற்பத்திற் சொல்லப்பட்ட, ஆற்று அருந்தவம் ஆற்றினர் = செய்தற்கரிய தவத்தைச் செய்து, அரன் அடி பணிந்தார் = சிவபெருமானது திருவடிக்கீழிருத்தலாய பதமுத்தியிலடங்கினர். படைக்க என்பது, படைக்கெனத் தொகுத்தல் விகாரம். ஆற்றினர் - முற்றெச்சம். (௯)

தந்தை யாய்முகில் வண்ணனை யென்னைமுன் றந்தோன்
மைந்த னாவலென் றுரைத்தனன் வந்தில னெனாஅச்
சிந்தை முக்கணன் சேவடி சேர்தலு மகிழ்வுற்
றெந்தை நான்முக னுதவிடை யினிதுதோன் றினனால்.

(இ-ள்) முன் = முற்காலத்தில், முகில் வண்ணனை என்னை = மேகநிறத்திருமாலையும் என்னையும், தந்தை ஆய தந்தோன் = பிதாவாய் நின்று சிருட்டித்த சிவபெருமான், மைந்தன் ஆவல் என்று உரைத்தனன் = புத்திரனாகத் தோன்றுவேனென்று வரஞ்சொற

றான, வந்திலன் என்று = இன்னும் அந்நாள் வந்தானல்லன் என்று, நான்முகனை நினைந்து = பிரமனது மனமானது, முக்கண்ணனே சேவடி சேர்தலும் = திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானது செவ்விய திருவடிகளைச் சென்றடைதலும், எந்தை = எமக்கெல்லாந் தந்தையாகிய உருத்திரமூர்த்தி, மகிழ்வு உற்று = சந்தோஷங் கொண்டு, நுதல் இடை இனிது தோன்றினன் = (பிரமனுடைய) நெற்றியிடத்தி லின்றும் பெருமையாக வெளிப்பட்டனன்.

விட்டுணுவையும் பிரமதேவரையும் படைத்த வரலாற்றைப் பின்வரும் "மைந்த வுனையு யொளவாப்புறத் தீன்றனன் மாறிய - பைந்துழாய் மாலவனை யொட்டிடப் பாலிற்-றந் தனித்தனன்" என்ற செய்யுளாலறிக சேவடிசேர்த்தலும் - எனவும் பாடம் (கஎ)

தோன்றி யோர்விளை யாட்டயர்ந் தெழுந்தலுந் தூயோற்
கேன்ற வாகுமுற் றுருத்திரன் முதற்பெய ரெட்டும்
பான்ற தானமோ ரெட்டுமோ ரெட்டரி வையருந்
சான்ற மைந்தரோ ரெண்மருஞ் சார்ந்தன ரன்றே

(இ-ள்) தோன்றி = வெளிப்பட்டு, ஓர் விளையாட்டு அயர்ந்து எழுதலும் = ஒரு திருவிளையாடலைச் செய்து எழுதலும், தூயோற்கு = சுத்தராகிய மகேசுரர்க்கு, ஏன்ற ஆகும் உருத்திரன் முதல் எட்டு பெயரும் = இயைந்த வாகிய உருத்திரன் முதலிய எட்டு நாமங்களும், ஆன்ற ஓர் எட்டு தானமும் = அகன்ற எட்டு இடங்களும், ஓர் எட்டு அரிவையரும் = ஒப்பற்ற எட்டு மனைவியரும், சான்ற மைந்தர் ஓர் எண்மரும் = அறிவு மிக்க புத்திரர் எட்டுப்பேரும், சார்ந்தனர் = தோன்றினர் மற்று அன்று ஏ - அசைநிலைகள்

மகேசுரமூர்த்தி ஒரு திருவிளையாடலைச் செய்ததைப் பார்த்து - பிரமனுடைய நெற்றியினின்றும் தோன்றி நல்ல இசையோடழுது ஓடினர் அட்டோது பிரமன் பார்த்து, மெய்யைக் குறித்தாய்! என்ன காரணத்தினால் ரோதனஞ்செய்து திராவணஞ் செய்கின்றாய் என வினவ, அவர் தந்நேயங் கொண்டனைச் சொற்றனர் பிரமன் ஆலோசித்து, குமாரனே! நீ தோன்றி ரோதனஞ்செய்து திராவணஞ்செய்ததனால் உருத்திரன் எனப் பெயர் பெறுவாயாக என்றனன் (ரோதனம் - அழுகை, திராவணம் = ஓடுதல் உருத்திரன் - உருத் = ரோதனம், திரன் = திராவணஞ்செய்தவன் பெயர் இட்டபின்னரும் அவர் முறைமுறை யழுதனர் அவற்றினின்றும் ஏழ்வர் தோன்றினர் அவர்க்கும் பெயர் தானம் (சரீரம்) மனைவியர் எண்டவர் மைந்தர் சிருட்டிக்குக் கொடுத்தனன் என்பர் பற்றி யம்மூர்த்திகளுக்கும் அம்மூர்த்திகளின் முடிபு கொண்டு போதப்பட்டது (கக)

எய்து நாமமென் னெனிற்பவன் சருவனீ சானன்
வைதி கந்தரு பசுபதி வீமனேமா தேவ
னெய்து மிளம்பிறை யணிந்திடு முக்கிர னென்ப
மைதி கழ்ந்தொளிர் கண்டனை வடிவமும் வகுப்பாம்

(இ-ள்) எய்தும் நாமம் என் எனில் = (மற்றைய எழுவருக்கும்) பொருந்திய பெயர்கள் எவை யெனில், பவன் சருவன் ஈசானன் = பவன் சருவன் ஈசானன், வைதிகம் தரு பசுபதி = வேதமார்க்கத்தைப் பரிபாலிக்கும் பசுபதி, வீமன் மாதேவன் = வீமன் மாதேவன், எய்து இளம்பிறை அணிந்திடும் உக்கிரன் என்ப = (தன்னைச் சரணென்று) அடைந்த ஒரு கலைப்பிறையைத் தரித்துக் காத்த உக்கிரன் என்றும் (பெரியோர்) கூறுவர், மை திகழ்ந்து ஒளிர் கண்டனை = கருமை யுற்று விளங்காநின்ற திருக்கண்டத்தினையுடைய உருத்திரமூர்த்தியினது, வடிவமும் வகுப்பாம் = எட்டு வடிவங்களையும் பிரித்துச் சொல்வாம்.

(இ-ள்) மிகு சுவர்ச்சலை = மேலாய சுவர்ச்சலை, உரோணி = உரோகணி, பசு உசை = பசிய உசை, அருள் சுகேசி = கிருபையையுடைய சுகேசி, திகழ் சுவாகை = விளங்காநின்ற சுவாகை, எண் திசை = எண்ணப்படுகின்ற திசை, சிவை தீக்கை ஆய = சிவை தீக்கையென்னு மிவர்களாம், மைந்தர் = (இவரின்) புத்திரர்களாவார், மகிழ் மந்தன் = களிப்பினையுடைய சனி, நல புதன் = நல்ல புதன், கவி = சுக்கிரன், வயங்கு உறு செவ்வாய் = விளங்குதலையுடைய அங்காரகன், குகன் = கந்தன், சுவர்க்கன் = சுவர்க்கன், நீள் மனோசிவன் = பெரிய மனோசிவன், கூறு சந்தானன் = சொல்லப்பட்ட சந்தானன் என்பவராம்

சுவர்ச்சலை யென்பவளுக்குச் சனியும், உரோகணிக்குப் புதனும், உசைக்குச் சுக்கிரனும், சுகேசிக்குச் செவ்வாயும், சுவாகைக்குக் குகனும், திசை யென்பாளுக்குச் சுவர்க்கனும், சிவைக்கு மனோசிவனும், சிவதீக்கைக்குச் சந்தானனும் புத்திரராமென்றறிக ()

முன்ன ரெய்திய சங்கரன் றனைமுக நோக்கி
மன்னு யிர்த்தொகை படைக்கென மலரய னுரைப்பத்
தன்னை யொப்புற முன்புபோற் சங்கரன் சமைப்ப
வின்ன வாறமைத் திடலொழி கெனவய னிசைத்தான்.

(இ-ள்) மலர் அயன் = தாமரை மலர்மேலிருக்கும் பிரமன், முன்னர் எய்திய சங்கரன் முகம் தனை நோக்கி = முதலிற்றோன்றிய ருத்திரக் கடவுளது முகத்தைப் பார்த்து, மன் உயிர்த் தொகை படைக்க என = நிலைபெற்ற ஆன்மவர்க்கங்களை யெல்லாஞ் சிருட்டித்திடுக என்று, உரைப்ப = வேண்ட, சங்கரன் = உருத்திரபகவான், முன்பு போல் = முந்திய கற்பத்திற் படைத்தது போல, தன்னை ஒப்புற சமைக்க = தன்னை நிகர்க்கும்படி (உருத்திர கணங்களைப்) படைக்க, அயன் = பிரமன், இன்ன ஆறு அமைத்திடல் ஒழிக என இசைத்தான் = இந்த விதமாகச் சிருட்டித்தலை விடுக வென்று கூறினன்

உருத்திர மூர்த்தி முந்திய கற்பத்திலே பிரமன் மயங்கிய பொழுது, கருமையுஞ் செம்மையுங் கலந்த வடிவுடைய நீலலோகிதனாய் வந்து படைத்தாராகலின் "முன்புபோல" எனக் கூறப்பட்டது. படைக்க-ஒழிக என்பன ஈறுதொகுத்தல் (௧௫)

இனைய வாறலாற் பிறந்திறந் துழல்பவர் சிருட்டி
நினைக லேமவை நீபடைத் திடுகென நிகழ்த்தி
முனைவ னான்முகன் முதுக்குறை வெய்துணர் வளிப்பப்
பனிம லர்ப்பொருட் டண்ணன்முக் கண்ணனைப் பழிச்சும்

(இ-ள்) இனைய ஆறு அலால் = இவ்விதமல்லாமல், பிறந்து இறந்து உழல்பவர் சிருட்டி நினைகலேம் = பிறந்தும் இறந்துஞ் சுழல்கின்ற உயிர்களின் படைப்பினை (யாம்) உன்னுதலுஞ் செய்யேம், நீ அவை படைத்திடுக என முனைவன் நிகழ்த்தி = நீயே அவற்றைச் சிருட்டிப்பாயாக என்று உருத்திரபதியானவர் கூறி, நான்முகன் முதுக்குறைவு எய்த உணர்வு அளிப்ப = பிரமனுக்குப் பேரறிவடையுமாறு நல்லறிவைக் கொடுத்தருள, பனி மலர் பொருட்டு அண்ணல் = குளிர்ந்த பூப்பொகுட்டி லுள்ள அவன், முக்கண்ணனை பழிச்சும் = திரிநேத்திரராய சிவபெருமானைத் துதிப்பானாயினன். எய்த-தொகுத்தல். ()

கொண்டன் மேனியான் முதலிய கடவுளர் குப்புற்
றண்டம் யாவையு மிடிந்துபாழ் றாகிய வமையந்
திண்டி றற்கவைச் சூலவே றிரித்துல கீன்றாள்
கண்டு வப்பநின் றாடிய கடவுளே போற்றி.

(இ-ள்) கொண்டல் மேனியான் முதலிய கடவுளோர் குழப்புற்று = நீல மேகம் போலும் வடிவுடைய திருமால் முதலிய தேவர்கள் யாவரும் மடிந்து, அண்டம் யாவையும் இடிந்து=அண்டங்கள் எல்லாம் தகர்ந்து, பாழ் ஆகிய அமையம் = வெறு வெளியாய பிராகிருதப் பிரளய காலத்தில், இணை இறல் கவை சூலம் வேல் திரிந்து நின்று = மிக்க வலியினை யுடைய சூலாயுதத்தைச் சுழற்றி நின்று, உலகு ஈன்றாள் கண்டு உவப்ப ஆடிய= உலகங்களைப் பெற்ற உமையம்மையார் தரிசித்து ஆனந்தங் கொள்ளுமாறு திரு நடனஞ் செய்தருளும், கடவுளே போற்றி=கடவுளே வந்தனம்.

போற்றி - துதித்தலென்னும் பொருண்மை யின்றலால், இகர விகுதியொடு புணர்ந்த தொழிற்பெயர். அன்றி வேண்டிக் கோடற் பொருளில் வந்த யகர விகுதி புணர்ந்து கெட்ட முற்றெனக் கொள்ளு மிடத்துத் துதிக்கக் கடவேன் என்று பொருள் படும் அது "வாழிய வென்னுஞ் செயவென் கிளவி - யிறுதி யகரங் கெடுதலு முரித்தே" என்னுந் **தொல்காப்பியச்** சூத்திரத்தில் ஒன்றென முடித்தலான் உய்த்துணரப் படும் ()

மாலை வெள்ளருவி புனற் குறுந்துளி வாரிச்
சோலை நெற்றியிற் றொடுத்தபூந் துகடுதைந் தடுபோர்க்
கோலுந் தென்றலந் தேர்கடாய்க் கொடியபூங் கழைவிற்
காலகு னித்தவற் செற்றவெங் கண்ணுதல் போற்றி

(இ-ள்) மாலை வெள் அருவி புனல் குறு துளி வாரி = ஒழுங்குபட்ட வெளுத்த அருவி நீரின் சிறு துளிகளை முகந்து, சோலை நெற்றியில் தொடுத்த = பூஞ்சோலைகளின் முகங்களிற் பொருந்தி யுள்ள, பூ துகள் துதைந்து = பூவின் கணுள்ள பராகங்களிற் றோய்ந்து, அடு போர் கோலும்=கொல்லுகின்ற போர்த் தொழிலைச் செய்யும், தென்றல் அம் தேர் கடாய் = தென்றற் காற்றாகிய அழகிய தேரைச் செலுத்தி(போய்) கழை வில் கால் குனித்தவன் செற்ற = கரும்பாகிய வில்லை வளைத்த மன்மதனை யழித்த, வெம் கண்ணுதல் போற்றி=வெம்மை நெற்றிக் கண்ணை யுடைய கடவுளே வந்தனம்

மாலை—ஒழுங்கு என்ப பொருள் படுதல் "மாலைவெள் ளருவி தோன்றி மற்றதா தோன்று கின்ற - சோலைசூழ் வரையி னெற்றி" எனச் **சிந்தாமணியார்** கூறியதனாலும் அமையும். மதனையெரித்த வரலாற்றைக் **கந்தபுராணத்திற்** காண்க. (க ௪)

பறந்து விண்ணிடை விண்ணவர் பருவர லுழப்பக்
கறங்கு போற்றிரி முப்புர மொருங்குதீக் கஞல
நிறங்கொள் பொன்னவிர் குடுமிய நெடுவரை குழைத்து
நறுந்து ழாய்முகிற் கணைதொடு நம்பனே போற்றி

(இ-ள்) விண்ணவர் பருவரல் உழப்ப=தேவர்கள் யாவருந் துன்பத்திற் புரளா நிற்ப, விண் இடை பறந்து = ஆகாயத்தி னிடத்துப் பறந்து, கறங்கு போல் திரி = காற்றாடியைப் போலச் சுழன்று திரிந்த, முப்புரம்=மூன்று புரங்களும், ஒருங்கு தீ கஞல= ஒரு சேர அக்கினி பரந்து அழிய, நிறம் கொள் பொன் அவிர் குடுமிய நெடு வரை குழைத்து = ஒளி கொண்ட பொன் போல விளங்குஞ் சிகரங்களை யுடைய நீண்ட மேரு மலையை (வில்லாக) வளைத்து, நறு துழாய் முகில் கணை தொடு - நறிய துழாய் மாலை தரித்த திருமாலாகிய பாணத்தைச் சந்தித்த, நம்பனே போற்றி=கடவுளே வந்தனம் ()

நோற்ற பாலன தாருயிர் நோவுற வணங்கு
கூற்றி னாருயிர் குடித்தபைங் கழலினாய் போற்றி

பவன். உமாதேவியாரால் ஆறுவடிவு மொன்றாகச் சேர்க்கப்பட்டவன் எனவும் பொருள். அது "அந்த மில்லதோர் மூவிரு வடிவு மொன்றாகிக் - கந்த னென்றுபேர் பெற்றனன்" எனவும், "சேயவன் வடிவ மாறுந் திரட்டிநீ யொன்றாச் செய்தாய் - ஆயத னாலே கந்த னென்னு நாமம் பெறுவன்" எனவும் கந்தபுராணத்திற் கூறப்பட்டது. (உச)

கனைகருங் கடனஞ்சமுண் டுமதுயிர் காத்த
முனைவனென் னுள்ளத் துதித்தனன் மூவிரு மெனக்குந்
தனயரிவ் வுருச் சதாசிவ னேனைய வுருவம்
புனைவனே வேண்டுருக் குணங்குறி புலனெனக் கிலையால்

(இ-ள்) கனை கரு கடல் நஞ்சம் உண்டு = ஒலிக்கின்ற கரிய சமுத்திரத்திற் றோன்றிய விடத்தை யுண்டு, உமது உயிர் காத்த முனைவன் = நுங்கள் உயிரை யெல்லா மளித்த உருத்திரன், என் உளத்து உதித்தனன் = என் இருதயத்தி னின்றுந் தோன்றினன், மூவிரும் எனக்கு தனயர் - (ஆதலால்) நீங்கள் மூவரும் எனக்குப் புத்திரராவீர், இ உரு = இந்த மகேசுர வடிவத்தையும், சதாசிவன் = சதாசிவ மூர்த்தத்தினையும், ஏனைய உருவம் புனைவன் = ஏனைய வடிவங்களையும் (யான்) கொண்டிருப்பேன், (ஆயினும்) எனக்கு = எனக்கு, வேண்டு உரு = விரும்பப்பட்ட வடிவங்களும், குணம் குறி புலன் இலை = குணங்குறி புலன்களும் ஆகிய கற்பனைகள் இல்லன வாகும். (உரு)

கள்ளயின் றுவண் டறைதரு தாமரைக் கண்ணன்
முள்ளரைச் செழுந் தாமரை முகட்டில்வீற் றிருப்போ
யுள்ளு வந்தெனை நினைப்புழி யுறுவலென் றுரையா
வள்ள னான்மறை யுபநிடத் திடைமறைந் தானால்

(இ-ள்) வள்ளல் = வள்ளற் றன்மையையுடைய மகேசுரமூர்த்தியானவர், வண்டுகள் அயின்று அறைதரும் = வண்டுகள் தேனுண் டிசைபாடும், தாமரை கண்ணன் = தாமரை மலராகிய கண்ணையுடைய விட்டுணுவினது, முள் அரை செழு தாமரை முகட்டில் = முள்ளரையையுடைய செழிய நாபிகமலத்தின்கண், வீற்று இருப்போய் = பெருமையோடுறையும் பிரமனே, எனை = என்னை, உள் உவந்து நினைப்புழி = (நீ) மனம் விரும்பித் தியானிக்குங் காலத்தில், உறுவல் என்று உரையா = வருவேன் என்று கூறி, மறை உபநிடத்து இடை மறைந்தான் = வேதோபநிடதங்களி னிடத்து அந்தர்த்தானமாயினர்.

இறைவனுக்கு வள்ளற் றன்மையாவது அடியார் வேண்டிய வேண்டியாங் களித்தல். கோழரை, பொகுட்டரை, பொரியரை, முள்ளரை யென்பவற்றுள், தாமரை முள் அரையின் பாற்றாகலின் "முள்ளரை" எனப்பட்டது. நான்கு வேதங்களுக்கும் ஆயிரத் தெட்டு உபநிடதங்களுள்ளன. அவற்றுள்ளே அதிசாரமாயும் அதிரகசியமாயு முள்ளன நூற்றெட்டேயாம். அவையாவன—ஐதரேயம், கௌஷீதகி, நாதவிந்து, ஆத்மப்பிரபோதம், நிருவாணம், திரிபுரை, பகவிருசசானே, முற்கலை, சௌபாக்கியம், அக்ஷமாலிகை என்னும் பத்தும் இருக்குவேத உபநிடதங்களாம். முத்திகம், சாட்டியாயனி, யாஞ்ஞவல்கியம், தாரசாரம், அத்தியாத்துமம், துரியாதீதம், பிட்சு, பைங்கலம், அத்துவயதாரகம், மண்டலம், திரிசிகி, நிராலம்பம், மந்திரிகை, சுபாலம், பரமகம்சம், அம்சம், சாபாலம், பிருகதாரணியம், ஈசாவாசியம், சரசுவதி, கலிசந்தரணம், வராகம், பிராணாக்கினிகோத்திரம், பஞ்சப்பிரமம், யோககுண்டலினி, உருத்திர விருதயம், கரம், அவதூதம், அட்சியம், ஏகாட்சரம், யோகசிகை, சாரீரகம், கந்தம், தக்ஷிணாமூர்த்தம், யோகதத்துவம், பிரமவித்தியை, தியானவிந்து, தேசோவிந்து, சுகரகசியம், சர்வசாரம்,

க்ஷுரிகை, காலாக்கினி ருத்திரம், அமிர்த நாதம், அமிர்த விந்து, நாராயணம், கர்ப்பம், சுவேதாச்சுவதரம், கைவல்லியம், தைத்திரீயம், கடவல்லி, பிரமம் எனனும் ஐம்பத் தொன்றும் யசுர் வேத உபநிடதங்களாம். சாபாலம், தரிசனம், உருத்திராக்க சாபாலம், கேனம், சாந்தோக்கியம், ஆருணி, மைத்திராயணி, சாவித்திரி, குண்டிகை, அவ்வியத்தம், சந்நியாசம், மைத்திரேயி, வச்சிர சூசிகம், யோகசூடாமணி, வாசுதேவம், மகத்து எனனும் பதினாறும் சாமவேத உபநிடதங்களாம். காருடம், தத்தாத்திரேயம், அயக்கிரீவம், கிருஷ்ணம், கோபாலதாபனம், பிரச்சினம், திரிபாத்விபூதி மகாநாராயணம், இராம ரகசியம், முண்டகம், மாண்டூக்கியம், அதர்வசிரசு, அதர்வசிகை, கணபதி, மகாவாக்கியம், பஸ்ம சாபாலம், பாவனை, தேவி, திரிபுராதாபினி, பரப்பிரமம், பாசுபதம், ஆத்மம், சூரியம், அன்னபூரணை, பிருகச்சாபாலம், நரசிம்ம தாபனி, நாரதபரிவிராசகம், சீதை, இராம தாபனி, சரபம், சாண்டில்லியம், பரமகம்ச பரிவிராசகம் எனனும் முப்பத்தொன்றும் அதர்வண வேத உபநிடதங்களாம். (உ௬)

திங்க ளினனமுத திறைபபமென கொன்றைத்தேன றுளிக்கும்
கங்கை யருந்சடை க கண்ணுறு நல கரத்ததலும் கடவுட்
பங்க யத்தவி சுறைதரும பணணவன மரீசி
யங்கி ராமுதல முனிவரை யளித்தன னென்றான.

(இ - ள்) திங்கள் இன் அமுது இறைப்ப=சந்திரன் இனிய அமுத கிரணங்களைப் பொழிய, மென் கொன்றைத் தேன் துளிக்கும்=மிருதுவாய கொன்றை மலர் மாலை யானது தேனைச் சிந்துகின்ற, சடை=சடை, கங்கை சடை கண் உறு நல கரத்ததலும்=கங்காநதியைத் தரித்த சடையையுடைய சிவபெருமான அருளால் தான புரிதலும், கடவுள் பங்கயம் தவிசு உறைதரும் பண்ணவன் = தெய்வீகத் தாமரை மலராசனத்தில் விருக்கும் பிரமன், மரீசி அங்கிரா முதல முனிவரை = மரீசி அங்கிரா முதலிய இருடிகளை, அளித்தனன் என்றான=சிருட்டித்தனனென்று (சூதமுனிவர்) கூறினார். (உ௭)

அட்டமூர்த்த வியலபுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - உ௭௩



# பதினோராவது
# தேவி திருவவதார அத்தியாயம்.

அஃதாவது பிறப்பிறப் பிலலாப் பெருமாட்டி தனக்கெனக் கன்மந் தானில் ளாக லிற் றவங் காரணமாகத் தக்கன றனக்கும மலையரையறகும் மகளாயத் தோன்றுமவதாரந் தனனை யறையும் பாகமாம். தேவி = விளையாட் டுடையவள் இனித் தேவன் எனபதன பெண்பாலாக கொண்டு பிரகாச முடையவள், மகிழச்சி யுடையவள் எனவு முரைப்ப. உயிர்கள் போல வினைவயத்தால யோனிவாய்ப்பட்டுப் பிறக்காது இச்சைவயத்தால் தோன்றி னிைருள் ஆகலின அவதாரம் எனவும், அதுவும் ஆன்மாக்கள் மேல் வைத்த காருணிய மேலீட்டாகலின் "திரு" என அடைமொழி புணர்த்தியுங் கூறப்பட்டது. திரு = உயர்வு முதலிய பலபொரு ளொருசொல. அவதாரம் = இறங்குதல், அயோனி சம்பந்தமாய் வெளிப்படுதல்.

### கலிவிருத்தம்.

போதுறை கடவுண்மீட் டுலகம் பூதத்தை
யோதுகென் றின்னரம் புளரும் யாழ்முனி
தீதறு மகபதி கேட்பத் தேம்படு
தாதவிழ் பசுந்துழாய் முகுந்தன் சாற்றுவான்.

(இ-ள்) போது உறை கடவுள் = தாமரை மலர் மேலிருக்கும் பிரமன், மீட்டு = பின்னரும், உலகம் பூதத்தை ஓதுக என்று = உலகத்தைச் சிருட்டித்த விதத்தினைச் சொல்லி யருள வேண்டுமென்று, இன் நரம்பு உளரும் யாழ் முனி = இனிய நரம்புகளில் வார்தல் முதலிய இசைக் கரணங்களைச் செய்யும் யாழினை யுடைய நாரத முனிவனும், தீது அறு மகபதி கேட்ப = குற்றமில்லாத யாக பதியாகிய இந்திரனும் (விரும்பிக்) கேட்க, தேம்படு தாது அவிழ் பசு துழாய் = தேனிறைந்த மகரந்தம் பரந்த பசிய துழாய் மாலையை யணிந்த, முகுந்தன் சாற்றுவான் = திருமால் கூறுவா ராயினார்.

இசைக் கரணங்களாவன — பாடுகின்ற வண்டுகள் போலக் கைவிரல்களால் நரம்புகளில் வார்தல் முதலிய தொழில்களைச் செய்தல். அக்கரணங்கள் வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டடை யென எட்டு வகைய. அவை "மணிக் காந்தண் மெல்விரல்கள் - பயிர்வண்டின் கிளைபோலப் - பன்னரம்பின் மிசைப் படர - வார்தல் வடித்த லுந்த லுறழ்தல் - சீருட னுருட்டல் தெருட்டல் அள்ளல் - ஏருடைப் பட்டடையென விசையோர் வகுத்த - எட்டு வகையி னிசைக்கரணத்து" எனச் **சிலப்பதிகாரத்திற்** கூறப்பட்டன. இவற்றுள் வார்தல் என்பது சுட்டு விரலாற் றொழில் செய்தல். வடித்தலாவது சுட்டு விரலும் பெருவிரலுங் கூட்டி நரம்புகளை யகமும் புறமு மாராய்தல். உந்தலாவது நரம்புகளைத் தெறித்து வலிவிற் பட்டதும், மெலிவிற் பட்டதும், நிரல் பட்டது மறிதல். உறழ்தலாவது ஒன்றிடை யிட்டும் இரண்டிடை யிட்டும் நரம்புகளைத் தெறித்தல். உருட்டலாவது இடக்கைச் சுட்டுவிர லுருட்டலும், வலக்கைச் சுட்டுவிர லுருட்டலும், சுட்டொடு பெருவிரற் கூட்டி யுருட்டலும், இரு பெருவிரலு மியைந்து டனுருட்டலு மாம் என்பர் **ஆசிரியர் அடியார்க்கு நல்லாரும்.** மற்றைய தெருட்டலாவது "தெருட்ட லென்பது செப்புங் காலை - யுருட்டி வருவ தொன்றே மற்ற - தொன்றன் பாட்டு மடையொன்ற நோக்கின் - வல்லோ ராய்ந்த நூலே யாயினும், வல்லோர் பயிற்றுங் கட்டுரை யாயினும் - பாட்டொழிந் துலகினி னொழிந்த செய்கையும் - வேட்டுக் கொண்டு விதியுற நாடி" என இசைத் தமிழ்ப் **பதினாறு படலத்துட் கரண வியலிற்** கூறப்பட்டதாம். (க)

அள்ளிலைக் கமலவீட் டுறையு மந்தணன்
றெள்ளிதி னமைப்பவை சிந்தை செய்கலான்
றுள்ளமா ழாந்துநெட் டுயிர்ப்பு வீங்கிமே
லெள்ளரு மருந்தவ மியற்று மெல்லையின்.

(இ-ள்) அள் இலை கமலம் வீடு உறையும் அந்தணன் = நெருங்கிய இலைகளையுடைய தாமரை மலராகிய வீட்டினக ணிருக்கும் பிரமன், தெள்ளிதின் அமைப்பவை = தெளிவோடு சிருட்டிக்க வேண்டியவைகளை, சிந்தை செய்கலாது = மனத்தி னினைக்காமல், உள்ளம் மாழாந்து = மனமயக்கமுற்று, நெட்டுயிர்ப்பு வீங்கி = பெருமூச்சு அதிகரித்து, மேல் = அதன்பின், எள் அரு அரு தவம் இயற்றும் எல்லையின் = இகழ்தலில்லாத அரிய தவத்தைச் செய்யுங் காலத்தில். இதுமுத லிருசெய்யுள் குளகம். (உ)

பாடரு மிடப்புறம் பணித்திட் டாயினி
நாடரும் வலப்புறந் தானு நல்கென
வேடவிழ் கூந்தலாய் நல்கி னேமென
வாடியிற் காட்டிய வையன் றோன்றினான்.

(இ-ள்) பாட அரு இடம் புறம் பணித்திட்டாய் = (ஐயனே) பாடுதற்கு அரிதாய இடப்பாகத்தைக் கொடுத்தனை, இனி = இனிமேல், நாட அரு வலம் புறமும் நல்கு என = தேடுதற் கரிதாய வலப்பாகத்தையும் ஈந்தருளக வென்று (உமையம்மையார்) கேட்க, ஏடு அவிழ் கூந்தலாய்=இதழ்களுள்ள புட்பங்களைப் பரந்த கூந்தலையுடைய பெண்ணே, நல்கினேம் என=அதனையுங் கொடுத்தேம் என்று, ஆடியின் காட்டிய ஐயன்=கண்ணாடியிற் காண்பித்த சிவபெருமான், தோன்றினான்=பிரசன்னமாயினார்.

ஓர் நாள் உமாதேவியார் எழுந்து, ஐயனே! இடப்பாகத்தைக் கொடுத்தருளினை, மற்றைய வலப் பாகத்தையுங் கொடுத்தருள வேண்டும் என்று பிரார்த்திக்க, அங்ஙன மளித்தே மென்று கண்ணாடியிற் காட்டிய சிவபெருமான் பிரமனுக்கு முன் றோன்றினர் என்பதாம். நல்கினேம் - தனித் தன்மைப்பன்மை வினைமுற்று. (௩)

பெண்ணொரு பங்கினி லமைத்துப் பேரெழி
லண்ணலாங் கெய்தலுங் கமலத் தந்தணன்
கண்ணொடு தொடுத்தென நோக்கிக் காதலிற்
புண்ணியச் சேவடி போற்றிக் கூறுவான்.

(இ-ள்) பேர் எழில் அண்ணல்=பேரழகினை யுடைய சிவபிரான், பெண் ஒரு பங்கினில் அமைத்து = உமாதேவியை யொரு பாகத்தில் வைத்து, ஆங்கு எய்தலும் = அவ்விடத்திற் றோன்றுதலும், கமலத்து அந்தணன்=தாமரை மலரின்மேலிருக்கும் பிரமன், கண் ஒடு தொடுத்து என நோக்கி = தன் விழிகளுடன் பொருந்தினாற் போலப் பார்த்து, காதலின்=அன்போடும், புண்ணியம் சே அடி போற்றி கூறுவான்=தருமமயமாகிய செவ்விய பாதங்களைத் துதித்துச் சொல்வான். (௪)

ஐயவிவ் வுலகினுக் காக்க மெய்துறத்
தையலோர் பங்கினிற் சார்ந்து நின்றனை
மையறு மிவ்வுரு வகுத்துப் பாலிரண்
டெய்தநீ செய்தியென் றினிதி னேத்தினான்.

(இ-ள்) ஐய=ஐயனே, இ உலகினுக்கு ஆக்கம் எய்துற=இவ்வுலகத்துள்ள உயிர்களுக் கெல்லாம் இன்ப முண்டாகும்படி, ஓர் பங்கினில்=ஒரு பக்கத்தில், தையல் சார்ந்து நின்றனை=(சத்தியாகிய)பெண் வடிவங் கொண்டு நின்றாய், மை அறும் இ உரு வகுத்து = குற்ற மற்ற இவ் வடிவத்தைப் பிரித்து, இரண்டு பால் எய்த = இரண்டு பகுதியாகப் பொருந்த, நீ செய்தி என்று=நீ யியற்றி யருள்வாய் என்று, இனிதின் ஏத்தினான் = மகிழ்வுடன் றுதித்தான்.

உலகு - உயிர்மேனின்றதலால் இடவாகுபெயர். ஆக்கம்=பெருவாழ்வு. தையல்= அழகு. அதனை யுடையாட்குப் பண்பாகு பெயர். தேவி யிமயஞ் சென்றிருந்த காலத்து ஒரு யிருங் காமமின்றி யுற்ற தென்னால பெருமான் "போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரித லோரார்" என்ற படி யுயிர்க்குப் போக மூட்டுதற்குப் பெண் ணொருபாகம் வைத்தா னென்பான் "ஆக்க மெய்துறத் தையலோர் பங்கினிற் சார்ந்து நின்றனை" என்றான். இத

னுண்மை "கண்ணுதல் யோகிருப்பக் காமனின் றிடவேட் கைக்கு-விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை யோரார் மாறு-னெண்ணிவேண மகனை யேவ வெரிவிழித் திமவான் பெற்ற-பெண்ணினைப் புணர்ந்து யிாகருப பேரின்ப மளிந்த தோரார்" என்னுஞ் சிவஞான சித்தியார்ச் செய்யுளா னுணரப்படும். (ரு)

பெண்ணொரு பங்கினைப் பிரிந்துப் பேரெழி
லொண்ணுதற் பேதைதன் னுருவ மாக்கிமே
லண்ணரும் வலப்புற மதனை நாடரு
மண்ணலா ணுருவமா யமைத்திட் டானரோ.

(இ-ள்) நாடு அரு அண்ணல் = (பிரம விட்டுணுக்களாலும்) தேடி யறியப்படாத சிவபெருமான், பெண் ஒரு பங்கினை பிரிந்து=பெண்ணாகிய ஒரு பாகத்தைப் பிரிவுசெய்து, பெரு எழில் ஒள் நுதல் பேதை தன் உருவம் ஆக்கி=பேரழகு வாய்ந்த ஒள்ளிய நெற்றியை யுடைய பெண் வடிவ மாக்கியும், மேல்=அதன் பின், அரு வலம் புறம் அதனை=சோ தறகரிய வலப் பாகத்தை, ஆண் உருவம் ஆய் அமைத்திட்டான் = ஆண் வடிவாகவுஞ் செய்தனர் அரோ-அசைநிலை பெண்=கட்புலனுயதோர் அமைதித்தன்மை, ஆண்=ஆளுந் தன்மை யென்பவற்றை யுணர்ந்தாது உயர்திணைப் பெண்பாலையும் ஆண்பாலையு முணர்த்தி நின்றன. (சு)

மதியுற வகுத்தவா ணுருவ மாணுறப்
பதிரொரு கூறறினிற பகுப்ப வாங்கவா
கதிர்மதி முடித்தகா பாலி யாதியாம
விதிமுறை யுருத்திர ராகி மேவினா.

(இ-ள்) மதி உற வகுத்த ஆண் உருவம்=அறிவு பொருந்துமாறு பிரிந்துச் செய்த ஆண் வடிவத்தை, மாண் உற = மாட்சிமை கொள்ள, பதினொரு கூறின் பகுப்ப = பதினொரு பங்காகப் பிரிக்க, அங்கவர்=அவர்கள், கதிர் மதி முடித்த காபாலி ஆதியாம=ஒளி கொள்ளுஞ் சந்திரனைத் தரித்த கபாலி முதலாக, விதி முறை உருத்திரர் ஆகி மேவினர்= விதிக்கப் பட்ட முறைப் படியே உருத்திரராய் இருந்தனர். (எ)

பெண்ணொரு பாதியாய்ப் பிரித்த கூறறினை
யெண்ணறுஞ் சத்தியா வியற்றி னனவாக
கணவழுக் குறுமெழிற கமலை யாதியா
மொள்ணுதன் மகளிரென றுரைக்க லாயினா.

(இ-ள்) ஒரு பாதி ஆய பிரித்த பெண் கூறறினை=ஒரு பாதியாக வகுத்த பெண் வடிவத்தை, என் அறு சத்தி ஆக இயற்றினன் = அளவில்லாத சத்திவடிவாகச் செய்தனர், அவர்=அச்சத்திகளே, கண் வழுக்கு உறும் எழில் கமலை ஆதி ஆய = கண்களுங் கூசுதலடைகின்ற காந்தியினையுடைய திருமகள் முதலாகிய, ஒள் நுதல் மகளிர் என்று உரைக்கல் ஆயினர் = ஒள்ளிய நெற்றியையுடைய பெண்கள் எனச் சொல்லப் படுவா ராயினர்.

கமலையாதியாராவார் மனோன்மணி, மகேசுவரி, உமாதேவி, இலக்குமி, சரசுவதி யென்னுஞ் சத்திகளாம். "எண்ணறுஞ் சத்திகள்" என்றதனால் உன்மனை, சமனை, வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை, அமிர்தை, அமிர்தாமிர்தை, இந்திகை, தீபிகை, உரோசிகை, மோசிகை, ஊர்த்துவகை, ஆரணி, சனனி, உரோதயித்திரி,

காளி, துர்க்கை, அம்பிகை, சர்வபூததமனி, பலப்பிரமதனி, பலவிகரணி, இரௌத்திரி, சேட்டை, வாமை முதலாயினோராம். (அ)

இன்னண மமைத்திடி னன்றி யாக்கையின்
மன்னுயி ராவையு மல்கி டாவெனாக்
கனனெடுஞ் சிலையிரு காலகு னித்திடு
முன்னவ னயனொடு மொழியு மேல்லையின்.

(இ-ள்) இன்னணம் அமைத்திடின் அன்றி = இவ்வாறு வகுத்தாலன்றி, மன் உயிர் யாவையும் = நிலைபெற்ற ஆன்மாக்கள் எல்லாம், யாக்கையில் மல்கிடா என = உடம்போடு கூடிப் பெருகி நிற்கா வென்று, கல நெடு சிலை இரு கால் குனித்திடும் = மேரு மலையாகிய நீண்ட வில்லின் இருநுனிகளையும் வளைத்த, முன்னவன் = முழு முதற் பொருளாகிய சிவபெருமான், அயன் ஒடு மொழியும் எல்லையின் = பிரமனோடு சொல்லாநின்ற சமையத்தில் இருகால் என்பதற்கு இருபாதங்களினாலும் எனவும் பொருளுரைப்ப (கூ)

மின்னுவீழ் வீழ்த்தெனக் கிடந்த மென்சடை
முன்னவன் பணிதலைக் கொண்டு முற்றிழை
தன்னொரு கூற்றினை வாங்கித் தாழ்சிறை
யன்னமூர் கடவுள்பா லடைந்த மேயினாள்.

(இ-ள்) முற்று இழை = முற்றிய அபரணங்களையுடைய தேவியானவள், மின்னு வீழ் வீழ்த்து என கிடந்த = மின்னல் விழுந்து விட்டாற்போல விளங்காநின்ற, மென் சடை முன்னவன் பணி தலை கொண்டு = மிருதுவாய சடையினையுடைய சிவபெருமானது ஆஞ்ஞையைச் சிரமேற்கொண்டு, தன் ஒரு கூற்றினை வாங்கி = தனது ஒரு பங்கை யெடுத்துக் கொண்டு, தாழ் சிறை அன்னம் ஊர் கடவுள் பால் = தாழ்கின்ற சிறகரையுடைய அன்னத்தை (வாகனமாகச்) செலுத்தும் பிரமதேவனிடத்து, அடைந்து மேயினாள் = சேர்வாளாயினாள் முற்றிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை (கo)

என்னுட னுலகெலா மீன்ற தாயிவண
மன்னிய தெவனென மலர்க டூய்த்தொழு
தன்னைநீ தக்கன்ற புதல்வி யாகெனச்
சொன்னவா றவன்மக ளாகித் தோன்றினாள்.

(இ-ள்) என் உடன் உலகு எலாம் ஈன்ற தாய் = என்னோடு உலகங்களைற்றையும் பெற்ற தாயாகிய தேவி, இவண் மன்னியது எவன் என = இவ்விடத்திற்கு வந்ததை யாது காரணமென்று ஆலோசித்து, மலர்கள் தூய் தொழுது = புட்பங்களைச் சொரிந்து வணங்கி, அன்னை நீ = தாயே நீ, தக்கன் தல புதல்வி ஆகு என = தக்கனுக்கு நல்ல புத்திரியாக வரக்கடவாயென்று வேண்ட, சொன்ன ஆறு = (பிரமன்) சொல்லிய படியே, அவன் மகள் ஆகி தோன்றினாள் = அத்தக்கனுக்குப் புத்திரியாக அவதரித்தாள்

பிரமனது புத்திரர்களுளொருவனாய தக்கன் றவஞ்செய்து, உமாதேவியைத் தனக்கு மகளாகும் வரத்தைச் சிவபெருமானிடத்தினின்றும் பெற்றனன் அதனால் உமையவள் காளிந்தி நதியில் வலம்புரி வடிவாகச் சென்றிருக்கத் தக்கன் மாசிமகத்திற் றீர்த்தமாடச் சென்று ஆடிவருங்கால், ஆங்குத் தாமரைப் புட்பமொன்றிற் சிவபெருமானது சலஞ்சல மென்பெயரிய சங்கிருப்பக்கண்டு அதனைக் கைகளால் எடுக்கும் பொழுது அது பெண்குழவி வடிவாதலும், தேவியென்று அறிந்து அளவிலா மகிழ்வுடன் கொண்டு

சென்று, வேதவல்லி யென்னும் தன்மனைவியிடங் கொடுத்து வளர்த்து வந்தான். தேவி தாக்ஷாயிணி என்னு நாமத்துடன் பருவமடைந்து முற்றி ஆறும் வருடமாகலும், பிரானை மணஞ்செய்யப் பெருந்தவங் கிடந்தனள் என்பது சரித்திரமாம். அன்னை என்பது "அன்னைச் சொல்லே யிபறகை யாகும்" என்ற தொல்காப்பிய விதிப்படி யியல்பு (கக)

தக்கனற் புதல்வியைக் கொன்றை தாழ்சடை
முக்கணற் களித்தனன் முரச மார்ப்பெழ
மிக்கதன் றந்தைதீ வினையி னன்னைபோய்ப்
புக்கனள் மேனைதன் புதல்வி யாகவே.

(இ-ள்) தக்கன்=தக்கனானவன், நல புதல்வியை = அழகினையுடைய புத்திரியை, முரசம் ஆர்ப்பு எழ = முரசவாத்தியத்தின் ஒலி மிக்கெழ, கொன்றை தாழ் சடை முக்கணற்கு அளித்தனன் = கொன்றைமாலை தாங்குஞ் சடையினையுடைய சிவபெருமானுக்கு (மனைவியாக)கொடுத்தான், அன்னை=தாயாகிய தாக்ஷாயிணி யென்பவள், தன் தந்தை= தனது பிதாவாகிய தக்கனின், மிக்க தீவினையின் போய=மிகுந்த பாதகச் செயல்களால் (பொருந்து தன்னுடலை நீக்கி) சென்று, மேனை தன் புதல்வி ஆக புக்கனள்=மேனையினது மகளாக அவதரித் திருந்தனள்

சிவபெருமான் ஓர் பிராமண வடிவங் கொண்டு தாக்ஷாயிணியை மணந்தனர் எனக் கொள்க. தக்கன் தீவினையாவது சிவபெருமானை யிகழ்ந்து அவர்க்கு அவிப்பாகங் கொடாது யாக முதலியன செய்ததாம். இந்த அதிடாகங்களை யறிந்த தேவியானவள் அவனுக்கு மகளாய இவ்வுடலத்தோடும் நாமத்தோடும் யான இருத்தல் அடாதென்று, அவ்வுடலை விடுத்து மலையரையனுக்கும் மனைவியாகிய மேனையென்பாளுக்கும் புத்திரியாகப் பிறந்தனள் என்பதாம். அது "கடலை முதலிய கடந்த கண்ணுதல் றற்பரனினையிகழ் தக்கன் றனனிடைப் - பற்பகல வளர்ந்தவன் பயந்த மாதெனச்-சொற்படு நாமமுஞ் சுமந்து ளேனியான் ஆங்கவோர் பெயரையு மவனகண் ணெபதியே - யோங்கினான் வளர்ந்தவிவ் வுடலந் தனனையுந்-தாங்கினன் மேலவை தரித்தற் கருசினே-னீங்குவ னவ்வகை பணித்திநீ யென்றுன " என்வரும் கந்தபுராணச் செய்யுளானு முணரப்படும். (கஉ)

தோலடி யெகினமீ திவர்ந்த தோன்றலுங்
காலுமிழ் கொடுஞ்சிறைக் கருடப் பாகனு
மாலமுண் டவனுமே யன்றி யார்கொலோ
பாலலோ சனிதிற னறியும் பண்பினார்.

(இ-ள்) பால லோசனி திறன்=நெற்றிக் கண்ணினையுடைய (அந்தத்) தேவியின் பெருமையை, தோல அடி எகினம் மீது=தோலபொருந்திய கால்களை யுடைய அன்னப் புள்ளின் மேல, இவர்ந்த தோன்றலும்=ஏறியிருக்கின்ற பிரமனும், கால உமிழ் கடு சிறை கருடன பாகனும்=காற்றினை வீசாநின்ற வேகமாகிய சிறகுகளையுடைய கருடவாகனனாகிய திருமாலும்,ஆலம உண்டவனுமே அன்றி=விடத்தை யுண்டருளிய உருத்திரக்கடவுளுமே, (அறிவது அல்லாமல) அறியும் பண்பினார் யார் = வேறு அறியுந் தன்மையர் யாவர் உளர் (இல்லை யென்றபடி ) ஏகாரம் - பிரிநிலை கொல ஓ - அசைகள். (கஙு)

தேவி திருவவதார அத்தியாய முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—உகஉ.



## பன்னிரண்டாவது

# திருக்கல்யாண அத்தியாயம்.

அஃதாவது தேவி மலையரையன் மகளாய்த் தோன்றித் தவஞ் செய்யாநிற்ப, சிவபெருமான் ஆங்குச் சென்று உலக முய்ய மணந்தருளிய வரலாற்றினைக் கூறும் பாகமாம்.

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

என்றலுமிவ் வுலகீன்ற டக்கன்மக ளாயுதித்த வியல்புஞ் செம்பொற்
குன்றரையன் மகளாகி மணந்ததுவும் விரித்தெமக்குக் கூறு கென்ன
மன்றல்கமழ் தருவினிழ லுறைவோனு மகதியாழ் முனியுங் கேட்பக்
கன்றுகுணி லாயவிளவின் கனியுதிர்த்த மாமாயன் கழறலுற்றான்.

(இ-ள்) என்றலும் = என்றிவ்வாறு (திருமால்) கூறுதலும், உலகு ஈன்றாள் = உலகங்களைப் பெற்ற உமாதேவியார், தக்கன் மகளாய் உதித்த இயல்பும் = தக்கனுக்குப் புத்திரியாக அவதரித்த வரலாற்றையும், செம்பொன் குன்று அரையன் மகள் ஆகி = செவ்விய அழகினை யுடைய இமய மலையரசன் புதல்வியாகி, மணந்ததுவும் = (சிவபெருமானைத்) திருமணஞ் செய்த வரலாற்றையும், எமக்கு விரித்து கூறுக என்ன = எங்கட்கு விரிவுபடுத்தி யுரைக்க வேண்டுமென்று, மன்றல் கமழ் தருவின் நிழல் உறைவோனும் = வாசனை கமழும் பஞ்ச தருக்களி னிழலில் வீற்றிருக்கின்ற இந்திரனும், மகதி யாழ் முனியும் கேட்ப = மகதி யென்னும் வீணையை யுடைய நாரதமுனியும் பிரார்த்திக்க, விளவின் கனி = விளாம்பழத்தை, கன்று குணில் ஆய உதிர்த்த = பசுவின் கன்றைக் குறுந்தடியாகக் கொண்டு விழுத்திய, மா மாயன் கழறல் உற்றான் = பெருமையைக் கொண்ட திருமால் கூறுவாராயினார்.

விளவின் கனியுதிர்த்த சரிதத்தை மேல்வருங் கண்ணனவதரித்த அத்தியாயத்திற் காண்க "கன்று குணிலாகக் கனியுதிர்த்த மாயவ — னின்றுநம் மானுள் வருமேலவன் வாயிற் - கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ" எனச் சிலப்பதிகாரத்துங் கூறுதல் காண்க. (க)

மேருவரை யுயர்குடுமி முகட்டிருந்து வேதமுனி விளம்ப லுற்ற
வோரவரிய பவக்கடலின் வீழுமுயிர் கரையேறுந் தெப்ப மோவில்
சீர்கெழுந்தற் பரம்புணருஞ் சிற்சத்தி யெவ்வுலகும் பொதிந்து நின்ற
பூரணநீ டுலகுயிர்ப்ப மலையரையன் மகளாகப் போந்த தன்றே.

(இ-ள்) மேரு வரை உயர் குடுமி முகடு இருந்து = மேருமலையின் உயர்வாய சிகரத்தின் மீது இருந்து, வேதம் முனி விளம்பல் உற்ற = வேதவியாத முனிவர் சொல்லிய உண்மைப் பொருள்களை, ஓர்வு அரிய பவம் கடலின் வீழும் உயிர் = அறிதற் கியலாத பிறவிச் சமுத்திரத்தில் விழுந்து வருந்தும் ஆன்மாக்களை, கரை ஏறும் தெப்பம் = முத்தி யென்னுங் கரைக்கண் சேர்க்கின்ற மரக்கலமும், ஓவு இல் சீர் கெழு தற்பரம் புணரும் சிற்சத்தி = நீங்குதலில்லாத சிறப்பினையுடைய தற்பரப் பொருளைக் கலந்திருக்குஞ் சிவசிற்சத்தியும், எ உலகும் பொதிந்து நின்ற பூரணம் = எவ்வுலகங்களையுந் தன்கண்ணடக்கி நிற்கும் பரிபூரணப் பொருளும் ஆகிய சத்தியானது, நீடு உலகு உயிர்ப்ப = பெரிய உலகங்களை யெல்லாம் பெற்றருளும்படி, மலை அரையன் மகள் ஆக போந்தது = இமயமலை யரசனுக்குப் புத்திரியாகத் தோன்றிற்று.

பொருவரிய சிவையாகி யநந்தையா யேகையாய்ப் புராணை யாகி
விரிகதிரு மொளியுமென மகேசனைவிட் டகலாத விமலை தோன்று
முருவுறுமிவ் வுலகனைத்தும் படைத்தளித்து மீட்டுமவை யொடுக்கி யீசன
திருமுன்விளை யாட்டயருங் காந்தமணி முனமிரும்பு திரியு மாபோல.

(இ-ள்) பொரு அரிய சிவை ஆகி = ஒப்பில்லாத சிவை யாகியும், அநந்தை ஆய் ஏகை ஆய = அநந்தையாகியும் ஏகை யாகியும், புராணை ஆகி = புராணை யாகியும், கதிரும் விரி ஒளியும் என = சூரியனையும் பரந்த கிரணத்தையும் போல, மகேசனை விட்டு அகலாத விமலை தோன்றும் = மகேசுரமூர்த்தியை விட்டு நீங்காத நிமலையாகிய சிவசத்தி இருப்பள், காந்தம மணி முனம இரும்பு திரியும் ஆறு போல = காந்தக்கல்லின் முன்னர் இரும்பு பின்றொடாதல்போல, உரு உறும் இ உலகு அனைத்தும் = தூலமாகிய இந்த உலகங்களெல்லாவற்றையும், படைத்து அளித்தும் = சிருட்டித்தும் காத்தும், மீட்டும அவை ஒடுக்கி = பின்னரும் அவற்றைத் தனவயினடக்கி, ஈசன திரு முன் விளையாட்டு அயரும் = மகேசுரமூர்த்தியின் திருச்சந்நிதானத்தில் விளையாட்டைச் செய்யாநிற்கும்

சிவன், அநந்தன், ஏகன், புராணன், விமலன் எனனும ஆண்பாற் பெயர்களுக்குப் பெண்பாற் பெயர் சிவை, அநந்தை, ஏகை, புராணை, விமலை யென்பனவாம் சிவை = மங்கலமுள்ளவள், சுகரூபமுடையவள் அநந்தை = முடிவில்லாதவள் ஏகை = ஒன்றாயுள்ளவள் புராணை = பழம்பொருளா யுள்ளவள் விமலை = மலமில்லாதவள் "எத்திறநின்றானீசன் அத்திற மவளு நிற்பள்" எனச் சிவஞானசித்தியாரிற் செப்பியபடி, இறைவனெவ்வாறு நிற்கின்றானோ அவ்வாறு அவளு நின்று விளையாடல் செய்வாள் என்றபடி கதிரொளி போலிருப்பார் என்றதனுண்மை "உருவருநா யிறுஞ்சுடரொளியும் போலவே-யிருவரும் வைகுவா ரென்பர் நற்சிலர் - தெரியினிவ் வகையினுஞ் சிவனுந் தேவியும் - பிரிவில ராகியே பிறங்கி வைகுவார்" என்று சைவபுராணஞ் சாற்றிற்று. (ஙு)

கருவிகா ரியமென்ப காலமொரு மூன்றனையுங் கடந்து நின்ற
வொருமுதல்வன் றனையணுகா வுலகமனைத் தினுக்குமுபா தான மாகி
மருவுபரா சத்திதன துருவாகி யொருநான்கு வடிவாஞ் சத்தி
தெரிவுறுபேர் சாந்திவித்தை நிவிர்த்திபிர திட்டையெனச் செப்பு வாரால.

(இ-ள்) கருவி காரியம் என்ப = காரணத்தாற் காரியமாகுமென்று (மேலோர்) கூறுவர் (ஆகலால்) காலம் ஒரு மூன்றனையும் கடந்து நின்ற = மூன்று காலங்களையுங் கடந்து விளங்காநின்ற, ஒரு முதல்வன் தனை அணுகா = ஒப்பற்ற பரம்பொருளைச் சேர்ந்து, உலகம் அனைத்தினுக்கும் உபாதானம் ஆகி = உலக மெல்லாவற்றிற்குங் காரணமாகி, மருவு பராசத்தி தனது உருவாகி = இருக்கின்ற பராசத்தியினது காரியமாகி, ஒரு நான்கு வடிவு சத்தி ஆம் = நான்கு வடிவாகிய சத்திகளுண்டாம், தெரிவு உறு பேர் = அறியப்படும் அவற்றின் பெயர்கள், சாந்தி வித்தை நிவிர்த்தி பிரதிட்டை என செப்புவார் = சாந்தி கலை வித்தியாகலை நிவிர்த்திகலை பிரதிட்டாகலை என்று சொல்வார்

பராசத்தியாகிய பிரகிருதி மாயைக்கு ஐவகைத் தோற்றமுண்டு அவை நிவிர்த்தி கலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியாதீதகலை என்பவாம் இவை சொல்லும் பொருளும் போல அபேதமாயும் பேதமாயும் நிற்கும் அவற்றுள் நிவிர்த்தியாவது தன்னிடத்திற் பொருந்தின ஆன்மாக்களுடைய சங்கற்பங்களை நிவிர்த்தி செய்வதாம் பிரதிட்டாகலை ஆன்மாக்களுக்கு முறைகூறுஞ் சங்கற்ப விருத்தி நிலைபெற்றுத் திடமாகப் பிரதிட்டித்து நிற்கும். வித்தியாகலை அங்ஙனம் திடப்பட்ட காலத்துச் சர்வார்த்த ஞானத்தைப் பிரகாசிப்பிப்பதாம். சாந்திகலை சர்வார்த்த ஞானத்தால் இராகத்துவேடம்

நிகழ்வொட்டாது இருந்துவிக்கும் விகற்பருநானற் சாந்தமாயிருக்கு நிலையாம் இவை தத்துவ புவனாதிகள் போலச் சுத்த ரூபமாயிருக்கும். ஆகலால் மாயை படங்குடிலாகும் போலச் சத்தார்த்த ரூபமுடைத்து "கருவி காரியம் என்ப" என்பதற்குக் காரணகாரியம் என்று சொல்லப் படுகின்ற பிரகிருதி மாயையினையும் பிரபஞ்சங்களையும் என்பொருளுரைத்தலுமாம். (௬)

இனையவொரு நாற்கலை புணர்தலாற் சதுர்வியூக ரென்று நாம
நினைவரிய மகேசுரற்கு நிகழ்த்துவரிக் கலைநான்கி னுருவ நான்காய்த்
துனைவினடைந் தருள்புரியுஞ் சோதியாம் பரன்பரையைத் தோய்ந்து நாளுந்
தனைநிகரி லானந்தந் தனின்மூழ்கு மென்மறைகள் சாற்று மன்றே.

(இ-ள்) இனைய ஒருநான்கு கலை புணர்தலால் = இத்தன்மையுடைய நான்கு கலைகளும் பொருந்தப் பெறுதலால், நினைவு அரிய மகேசுரற்கு = நினைத்தற்கும் அரிய மகேசுர மூர்த்திக்கு, சதுர் வியூகர் என்று நாமம் நிகழ்த்துவர் = (மேலோர்) சதுர் வியூகர் என்கின்ற திருநாமத்தைச் சொல்லித் துதிப்பார்கள், இ நான்கு கலையின் நான்கு உருவம் ஆய் = இந்த நான்கு கலைகளினும் நான்கு வடிவ முற்று, துனைவின் அடைந்து அருள் புரியும் சோதி ஆம் பரன் = விரைவாக வந்து கிருபை செய்கின்ற ஒளி வடிவுடைய சிவபெருமான், பரையை தோய்ந்து = பராசத்தியைச் சேர்ந்து, நாளும் தனை நிகர் இல் ஆனந்தம் தனின் மூழ்கும் என் = எந்நாளுந் தனக்கு ஒப்பில்லாத பேரானந்தத்திலே திளைத்திருப்பார் என்று, மறைகள் சாற்றும் = வேதங்கள் கூறாநிற்கும்.

அன்று-ஏ-அசைகள். சதுர்வியூகர்—சதுர் = நான்கு, வியூகர் = கூட்டத்தை யுடையவர் என்றவாறு. உருப்பு நான்கும் கலைநான்கி னுருவநான்காவது—சாந்திகலையில் அநந்தேசுரராகவும், வித்தியாகலையில் உருத்திரமூர்த்தி யாகவும், பிரதிட்டாகலையில் திருமாலாகவும், நிவிர்த்திகலையிற் பிரமனாகவும் நிற்றல் இது திராவிடமாபாடியத்திற் கண்டது.()

மற்றவட்கு விபூதிபுக லடிப்பாட்டின் றொடர்பாகு மகேசனோடும்
பற்றுறலா னீங்கிவளு மவன்போல வளவிறந்த பான்மை யாள்நீர்
முற்றுலகமுறுசெயலி னுருந்றியுமெம் மைங்கரனை முருகவேளைச்
சிற்றுதரந் தனிலீன்றும் கன்னிமைநீங் காதொளிருஞ் செல்வி யென்பார்.

(இ-ள்) இவள் கு விபூதி புகல் அடிப்பாட்டின் தொடர்பு ஆகும் = இப்பராசத்திக்கு ஐசுவரியங்கள் என்று கூறப்பட்ட வரன்முறையிற் சம்பந்தமுடைய, மகேசனோடும் பற்று உறலால் = மகேசுர மூர்த்தியுடனும் சம்பந்தத்துடைமையால், ஈங்கு இவளும் அவன் போல அளவு இறந்த பான்மையாள் = ஈண்டுக் கூறப்பட்ட இத்தேவியும் அம்மகேசுர மூர்த்தியைப் போல அளவைக் கடங்காத தன்மையை யுடையவள், நீர் முற்று உலகம் உறு செயலின் உருந்றியும் = நீரினையுடைய கடலாற் சூழப்பட்ட உலகங்களைத் தக்க தொழில்களாற் சிருட்டித்தும், எம் ஐங்கரனை முருகவேளை = எமது ஐந்து கரங்களையுடைய விநாயகக்கடவுளையுங் குமாரக்கடவுளையும், சிறு உதரம் தனில் ஈன்றும் = சிறிய வயிற்றினின்று பெற்றும், கன்னிமை நீங்காது ஒளிரும் செல்வி என்பார் = கன்னித் தன்மை யகலாது விளங்குஞ் செல்வமுடையாள் என்று கூறுவார்.

மற்று-அசைநிலை. நீர்-ஆகுபெயர். பராசத்தியானது சிவபெருமான் அதிக்கிராந்த வித்துக பரசிவமாய நின்றவிடத்து அதிக்கிராந்த வித்துக பராசத்தி யாகியும், அநதிக்கிராந்த வித்துக பரசிவமாய நின்றவிடத்து அநதிக்கிராந்த வித்துக பராசத்தியாகியும், சதா

சிவனுமப் போது மனோன்மணி யாகியும், மகேசுரனும்போது மகேசுவரி யாகியும் நிற்பா ளாகலின், "விழுதியுக லடிப பாட்டின ரொடுபாகு மகேச னோடும்—பற்றுதலால" என்று கூறப்பட்டது. அளவை யென்பது பிரமாணம். அஃது பிரத்தியக்கம், அநுமானம், ஆகமம், அநுபலப்தி (இன்மை), அருத்தாபத்தி, உவமை என அறுவகைப் படுமென்று பாட்டனும் வேதாந்தியும், அநுபலப்தி யென்னு மொன்றனைத் தள்ளி யைந்தென்று ஆருகதரும் பிரபாகரனும், அதனோடு அருத்தாபத்திப் பிரமாணத்தையும் நீக்கி நான்கென நையாயிகனும், அவ்விரண்டனோடு உவமையை யொழித்து மூன்றெனச் சாங்கியனும், அம்மூன்றனோடு ஆகமத்தை யகற்றி யிரண்டென்பப் பௌத்தனும் வைசேடிகனும், அந் நான்கனோடு அநுமானத்தையும் நீக்கி ஒன்றென உலோகாயதனுங் கூறுப வாயினும், முற் கூறிய மூன்றனுள்ளே யடங்குமென்பது சைவ சித்தாந்தம். அம்மூவளவும் மனத்தின் வாயிலானே ஐய விபரீத வுணர்வுகளின்றி நிருவிகற்ப வறிவுகொண் டுணரப்படலான் "அளவிறந்த பான்மையாள்" என்றதாம். கன்னிமை நீங்காதொளிரு முண்மையை முன் னுரைத்தாம் ஆண்டுக் கண்டுணர்க. (௬)

காலமுயர் மகேசனரி பிரமனுருத் திரனரனவெங் கனலி யென்ப
வாலமயின் றோனென்ன வருமறையின் பொருடெரிந்த வறிஞர் சொல்வார்
மாலுறுகா லஞ்செயலின் மனனுமுல கனைத்துமிக மதிக்குங் காலை
யேலுறு தொருசெயலு மொருமூன்று செயலுமஃ தியற்று மாதோ.

(இ-ள்) காலம் உயர் மகேசன் அரி பிரமன் = காலதத்துவம் உயர்வாய மகேசுரன் திருமால் பிரமன், உருத்திரன் அரன் வெய்ய கனலி என்ப = உருத்திரன் அரன் வெப்பமுடைய சூரியன் என்று கூறப்படுவன வெல்லாம், ஆலம் அயின்றோன் என்ன = கஞ்சை யுண்டருளிய சிவபெருமானே யென்று, அரு மறையின் பொருள் தெரிந்த அறிஞர் சொல்வார் = அரிய வேதங்களின் பொருளை யாராய்ந்தறிந்த அறிவுடையோர் கூறுவார், மால் உறு காலம் செயலின் உலகு அனைத்தும் மன்னும் = பெருமை பொருந்திய காலக் கடவுளின் றொழில் வேறுபாட்டினாலே உலகமெல்லாம் நிலைபெறும், (ஆயினும்) மிக மதிக்கும் காலை = நுட்பமாக ஆராயுங் காலத்து, ஒரு செயலும் ஏல உறாது = (பராசத்தி) இன்றி ஒருசெயலையு மியலாது, (ஆதலால்) அஃது ஒரு மூன்று செயலும் இயற்றும் = அப் பராசத்தியே (படைத்தல் முதலிய) முத்தொழில்களையுஞ் செய்யாநிற்கும்.

வேதத்துட் காரண வாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயணன், இரணிய கருப்பன், இந்திரன், அக்கினி, சூரியன் முதலியோரைக் குலாலனைப்போல அவாந்தரகாரண ராதலானேக்கி உலககாரணரெனக் கூறப்படினும், அவையெல்லாம் ஆகுபெயராற் சங்கார காரணனாகிய கடவுளை யுணர்த்தி நிற்றலான் "அரிபிரம னுருத்திரனவெங் கனலியென்ப- வாலமயின் றோனென்ன வருமறையின் பொருடெரிந்த வறிஞர் சொல்வார்" என்றதாம். பால் யௌவனாதி பருவங்களை விளைவித்து நிற்கையானும், பிறப்பிறப்புக்களை யுண்டாக் குதலானும், இருதுக்களினும் அவ்வப் பலங்களைத் தப்பாது விளைவிக்கையானுங் காலதத் துவம் முதலில் வைக்கப்பட்டது. இதனால் காலதத்துவமில்லை யென்னும் புத்தனும் உலோகாயதனும் நிராகரிக்கப் பட்டார்கள். அக் காலதத்துவமானது சிவசத்தியுடன் கூடி நின்று இறந்தகாலத் தெல்லையினையும், நிகழ்காலத்துப் பலத்தினையும், எதிர்காலத்துப் புதுமையினையும் பொருந்துவிக்கு மெனக் அதனை "நிகழ்காலங் கழிகால மென்றே- யோசைதர வருங்கால மெல்லைபலம் புதுமை யுறுவிக்கு மிறைசத்தி யுடனுய் நின்றே" எனச் சிவப்பிரகாசத்திற் செப்பியருளியதனானறிக. காலதத்துவருஞ் சத்தியோடு கூடா வழி முத்தொழிலு மில்லையென றுறுத்திக்கூறலால், அதனை நித்தியமென்ற நையாயிக னும் வைசேடிகனும், சடந்தானாகப் பிரவர்த்திக்க மாட்டாதாகலாற் காலேசுரவாதியும் நிராகரிக்கப்பட்டனர். மாது ஓ அசை நிலைகள். (௭)

காரியமா முலகினுக்குக் காரணமா மிறைவனது கலையா மாயை
தீரவருமம் மாயையினான் மாயாவி யாயுறையுந் திங்கள் சூடு
மாரியனெவ் வுலகினையு மயக்குறுத்து மாங்கவன்பா னீங்கா மாயை
யோரவரிய வெவ்வுலகுந் தானாகி யவைதாங்கி யொளிரு மன்றே.

(இ-ள்) காரியம் ஆம் உலகினுக்கு = காரியப் பொருளாகிய பிரபஞ்சத்திற்கு, இறைவன் அது கலை ஆம் மாயை காரணம் ஆம் = பரமேசுரனது கலைகளுள் ஒன்றாய மாயையே முதற்காரண மாகும், தீர்வு அரு அ மாயையினால் = நீங்குதற் கரிய அந்த மாயா சம்பந்தத்தினாலே, மாயாவி ஆய் உறையும் திங்கள் சூடும் ஆரியன் = மாயாவி யாகி யிரா நின்ற சந்திரனைத் தரித்த சிவபெருமான், எ உலகினையும் மயக்கு உறுத்தும் = எவ் வுலகங் களையும் மயக்கஞ் செய்கின்றனர், ஆங்கு அவன் பால் நீங்கா மாயை = அப்பெருமானை விட்டு நீங்காத மாயையானது, ஓர்வு அரிய எ உலகும் தான் ஆகி = அறிதற் கியலாத எவ்வித வுலகங் களுந் தன்மய மாக நின்று, அவை தாங்கி ஒளிரும் = அவற்றைச் சுமந்து விளங்காநிற்கும்

உலகம் கடம்போலக் குணவியங்களை யுடைத்தாகலாற் காரியமெனப் படும். எது காரியமோ அது காரணத்தை யுடைத்து அக் காரணம் முதற்காரணம், துணைக் காரணம், நிமித்த காரணம் என மூவகைத்தெனக் [illegible]ணம்டுக் கூறியது முதற்காரணமே யாம் அது பரம காரணம், உபாதான காரணம், சமவாயி காரண மெனவும் பெயர் பெறும் கலையாம் மாயை எனப் பொதுவாகக் கூறினும் சுத்தம், சுத்தாசுத்தம், அசுத்தம் எனப் பிரபஞ்சம் மூன்றிறப் படுதலால், முதற்காரணங்களும் தம்முள் வேறாகப் பெறும் அவையாவன — மலகன்மங்களோடு விரவாது முதற் காரணமாய் நிற்குஞ் சுத்த மாயையும், மலகன்மங்களோடு விரவி முதற்காரணமாய் நிற்கும் அசுத்த மாயையும், அவ் வசுத்தமாயையின் தூலபரிணாமமாய்த் தோன்றிய பிரகிருதிமாயையு மாம் அதனை “விந்துவின் மாயையாகி” என்ற **சிவஞான சித்தியார்த்** திருவிருத்தத்தானறிக சில சைவாசாரியர்கள் சுத்தமாயை யொன்றுமே நித்தியமாகிய முதற்காரண மெனவும், அசுத்த மாயை பிரகிருதி யென்பன அநித்தியமாகிய அவாந்தர காரண மெனவும், சிலர் சுத்தமாயை போல அசுத்தமாயையும் நித்திய மெனவும், பிரகிருதி அவாந்தரமெனவுங் கூறுபவென்று **இரத்தினத்திரயம்** இயம்புகின்றது கலை = அங்கிசம் மாயாவி = மாயை யில் வல்லவன் அது மேதாவி வாதாவி யென்றாற் போலக் கொள்க ஆரியன் = வழிபடத் தக்கவன். (அ)

சாற்றரிய ஞானசத்தி திகழ்கிரியா சத்தியிச்சா சத்தி யென்னத்
தோற்றுமொரு மூன்றாகித் தோற்றரிய சத்தியிலத் தொல்லோன சத்தி
வீற்றுவீற் றளப்பில பகுதியுறு மாங்கவற்றை விடாது நிற்கு
மாற்றரிய சத்திமான் களையவன்றன் மாயையினால் வகுத்தா னன்றே.

(இ-ள்) சாற்ற அரிய ஞானசத்தி என்ன = சொல்லுதற்கரிய ஞானசத்தி யென வும், திகழ் கிரியாசத்தி என்ன = பிரகாசிக்கின்ற கிரியாசத்தி யெனவும், இச்சா சத்தி என்ன தோற்றும் ஒரு மூன்று ஆகி தோற்று அரிய சத்தியில் = இச்சாசத்தி யெனவும் விளங்கிய மூவகைச் சத்திகளாகத் தோன்றுகின்ற அரிய சத்திகளுள், அ தொல்லோன் சத்தி = அந் தப் பழம்பொருளாகிய பரசிவத்தின் ஞானசத்தி யானது, வீறு வீறு அளப்பு இல பகுதி உறும் = வேறு வேறாகி யளவில்லாத பகுதிகளாய் நிற்கும், ஆங்கு அவற்றை விடாது நிற்கும் மாற்ற அரிய சத்திமான்களை = அப்பகுதிகளை விட்டு நீங்காது நிற்கின்ற ஒழித்தற்கரிய சத்தி மான்களை, அவன் தன் மாயையினால் வகுத்தான் = அந்த [illegible] [illegible] [illegible]யாசத்தியினா லுண்டாக்கினார்.

இச்சாசத்தியாவது முதல்வன் ஆன்மாக்களுக்கு மலபந்தத்தை நீக்கிச் சிவத்தை யளித்தற்கண் உளதாகிய கருணையாம். ஞானசத்தியாவது அதற்குச் செய்யவேண்டிய கிரியைகளை யறிந்தும் அறிவித்தும் நிற்றலாய ஞானமாம். கிரியாசத்தியாவது அருளின் வேறல்லாத தொழில்களால் தனுகரண புவன போகங்களை யுண்டாக்குவதாம். இம் மூன்று முடைமையாற் சிவன் முறையே இச்சிதா, ஞாதா, கர்த்தா எனப் பெயர் பெறு கிறபன். பராசத்தி யொன்றே யைந்தொழில் காரணமாகச் சிறப்பு வகையான வியாபரிக்குங்கால் ஒரு கூற்றினே திரோதான சத்தியென நின்று, ஞானேச்சாகிரியையென மூத்திற முறுதலான "தோற்றரிய சத்தியிலத் தொலலோன சத்தி" என்றதாம். இச்சாசத்தி யுங் கிரியாசத்தியும் ஞானசத்தியின் வியாபார விசேடங்களன்றி வேறன்மையான், "தொல லோன் சத்தி" என்பதற்கு ஞானசத்தி என்ப பொருளுரைத்தாம். அதனை "நீடுபரா சத்தி நிகழிச்சா ஞான நிறைகிரியை தரா" என்னுஞ் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தானும், "கிரியையறி விச்சை கிளந்தசத்தி யேதோ - பெரியபரா சத்தியென பேசாய்" என்னுந் துகளறுபோதத் தாக்கானு மறிக. தாம் பேதமுறாராமியும், காரிய பேதத்தாற் காரண மும் பேதிக்கும் என்னு முண்மை மொழியானே சிவசத்தியொன்றே அறிதல் இச்சித்தல் பண்ணுதல் என்னும் வியாபார பேதத்தால் மூன்றாகு மென்றும், அவாந்தர பேதத்தால் அநந்தமாகு மென்றும், கிரியாசத்தி ஞானத் தொழிலை மாத்திரத்தைப் பண்ணி ஞான சத்தி ரூபியா யிருந்தபோது சிவதத்துவம் இலயதத்துவம் சத்ததத்துவம் நிட்கள தத் துவம் என்றும், ஞானமுங் கிரியையு மொத்த கிரியைத் தொழிலை யியற்றிக் கிரியாசத்தி ரூபியா யிருக்கின் சதாசிவதத்துவம் போகதத்துவம் உதயுத்த தத்துவம் சகளநிட்கள தத் துவம் என்றும், கிரியை யேறி ஞானங் குறைந்த விச்சைத் தொழிலைச் செய்து இச்சா சத்தி ரூபியா யிருந்துழி ஈசுரதத்துவம் அதிகார தத்துவம் பிரவிர்த்தி தத்துவம் சகள தத்துவம் என்றும், அவ் விச்சைக்குத் தானே ஞானமேறிக் கிரியை குறைந்து இச்சா சத்தி ரூபியாயிருக்கின் வித்தியா தத்துவம் அலவீசுர தத்துவம் அதிகார தத்துவம் அலப்பிரவிர்த்தி தத்துவம் அலசகள தத்துவம் என்றும், இவையிற்றால் சிவன், இலயன், சத்தன், நிட்களன், சதாசிவன், போகன், உத்தியுத்தன், சகளநிட்களன், ஈசுரன், அதிகாரன், பிரவிர்த்தன், சகளன் எனச் சத்திமான்களும் அநேகர் ஆவர் என்றுங் கொள்க. அரசனது சத்தி யொன்றே மாறைப யுவராசன், அமைச்சன், சேனாபதி, சௌவாரிகன், அந்தரவஞ்சிகன், காராகாராதிக கிருத்தன், அர்த்த சஞ்சயகிருது, காரியநியோசகன், பிராட்விவாகன், சேனாநாயகன், நகராதிபதி, கம்பாநிகன், தாமாதிபதிபன், சப்பிபன், தண்டபாலன், துர்க்கபாலன் முதலிய அதிகாரிகளிடத்தும் சென்று நடத்தல் போலச் சிவசத்தி யொன்றே சத்திமான்களிடத்துச் சென்று நின்று கிருத்தியங்களை நடாத்து மென்க. இதனை "சத்திதானபலவோ" என்னுஞ் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத் தாற் றெளிக. சாற்ற மாற்ற என்பவற்றின் அகரங்கள் தொக்குநின்றன. (கூ)

ஆங்கவனைப் பிரியாத மாயையுமற் றவனைப்போல வநாதி யாகும்
ஈங்குறுமற் றதனுருவே யெவ்வுருவாஞ் சத்திகளுந் தேவ தேவா
வோங்கியபே ரொளியாகும் பரமசிவன் முனமெய்தி யொழியா மாயை
பாங்குறும்ம மாயைபுரு டனபகுதி யெனமூன்று பகுதி யாமால்.

(இ-ள்) ஆங்கவனை பிரியாத மாயையும் = அப் பரசிவனைவிட்டுப் பிரியாத மாயா சத்தியும், அவன் போல அநாதியாகும் = அம் மூர்த்தியைப்போல அநாதியே யாகும், எவ்வுருவாம் சத்திகளும் அதன் உருவே = பல்வகைப்பட்ட வடிவங்களாகிய சத்திகளும் அந்த மாயையின் வடிவேயாம், ஒழியா மாயை = (இத்தன்மை யுடைய) அழியாத மாயா சத்தியானது, தேவ தேவாய ஓங்கிய பெரு ஒளி ஆகும் பரமசிவன் முன் எய்தி = மகா தேவருக்கு உயர்ந்த பரஞ்சோதி யாகிய பரமசிவனது சந்நிதானத்தை யடைதலால்

பாங்கு உறு நல் மாயை என=தகுதி பொருந்திய சுத்தமாயை யென்றும், புருடன் என பகுதி என மூன்று பகுதி ஆய=புருடன் என்றும் பிரகிருதி யென்றும் மூன்று பிரிவினை யுடைத்தாகும்.

உருவே-ஏ, தேற்றப் பொருளில் வந்தது. தேவதே=தேவர்களுக்கு மேலான தேவன். மாயையை விசாரிக்குங்கால் நால்வகைப் பௌத்தருள் ஒருவனாகிய மாத்தியமிகன் சூனியம் எனவும், கணிகவாதிகள் அநித்தியமெனவும், உலோகாயதன் கண்கூடாயுள்ள பூதம் எனவும், நையாயிகன் உருவாகிய பரமாணுக்களெனவும், சாங்கியன் முக்குணங்களெனவும், பாற்கரியர் பிரமம் என்றும், சிவாத்துவிதர் சிவசத்தியே யதுவெனவும், மாயாவாதிகள் அநிர்வசனீயம் எனவும், பரிணாமவேதாந்தி சித்தாகிய பிரம உபாதானத்தினின்று தோன்றுஞ் சடசித்தெனவும், பாஞ்சராத்திரி நாராயணப் பிரகிருதியினின்றுந் தோன்றுஞ் சடசித்தெனவும், வேதாந்திகளுள் ஓராசாரியர் அசத்தெனவும் பலவாறு கூறுவர். இவ் வாசிரியன் "நித்தமா யருவா யேக நிலையதா யுலகத் திற்கோர் - வித்துமா யசித்தா யெங்கும் வியாபியாய் விமல னுக்கோர் - சத்தியாய்ப் புவன போகந் தனுகரணமுமா யாக்கம் வைத்திடா மலமாய் மாயை மயக்கமுஞ் செய்யு மன்றே" என்னுஞ் சைவசித்தாந்த சாத்திரப்படி சொரூபங் கூறுவான் வேண்டி "ஆங்கவனைப் பிரியாத மாயையுமற் றவன்போ லனாதி யாகும்" என்றும், தீயின் சத்தி யொன்றுதானே சுடுதல், அடுதல், விளக்குதல், உருக்குதல் முதலிய தொழில்வகையால் சுடுஞ்சத்தி, அடுஞ்சத்தி, விளக்குஞ்சத்தி உருக்குஞ் சத்தியெனப் பலவகைப் பட்டாற்போல மாயாசத்தியாகிய சிவசத்தி யொன்றே பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை யென்னு மைவகைச் சத்திகளாயும், மனோன்மணி முதலிய ஐவகைச் சத்திகளாகவும், ஆரணி சனனி உரோதயித்திரி யென்னு மூவகைச் சத்திகளாகவும், நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, அதீதை யென்னு மைவகைச் சத்திகளாகவும், வாமை, சேட்டை முதலிய நவவகைச் சத்திகளாகவும், பரவாகீசுவரி, அபரவாகீசுவரி, மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி என்னும் எழுவகைச் சத்திகளாகவும், அநந்தியாமிக மெனப்படும் உமாமைந்தன், சாமினை முதலியனவாகவும் பலவேறு வகைப் பட்டு நிற்கு மெனப்பான் "நீங்கரு மற்றைச் சுருவே யவ்வுருவாஞ் சத்திகளும்" என்று கூறினன். பரமசிவனது முன் என்றது அதிகார வாதிகள் கூறும் அபிமுகத்திறையன்றெனக் மாயாசத்தி அவ்வக் காரியங்களின் உன்முகமாதலாகிய சங்கற்பமே மாண்டுமன் எனப்படும். மா=உற்பத்தி, யா=இலயம், மாநியா நீதி மாயா என்வே, எங்கே தோன்றி எதிலே ஒடுங்குகிறதோ அது மாயையாம். இது திராவிடமாபாடியத்திற் கண்டது. ()

ஒன்றாகிப் பலவாகி விபுவாகிச் சிவையாகுஞ் சத்தி யொன்றே
துன்றியதுநீங்காத் துரியாதீ தப்பொருளாஞ் சிவமு மொன்றே
மன்றவுயர் சத்திகளுஞ் சத்திமான் களுமீசன் மருவு மாயை
யன்றறிந்த வாருசத்தி யனைத்துமுமை சத்திமா னெல்லா மீசன்.

(இ-ள்) ஒன்று ஆகி=ஏகமாகியும், பலஆகி=அநேகமாகியும், விபுஆகி=வியாபகமாகியும், சிவை ஆகும் சத்தி ஒன்றே=மங்கலமுடையவளாயும் நிற்கின்ற சிவசத்தி ஒன்றேயாம், அது துன்றி நீங்காத துரிய அதீதப் பொருள் ஆய=அச்சத்தியைத் தரித்துப் பிரியாது நிற்குந் துரியாதீதப் பொருளாகிய, சிவமும் ஒன்றே=சிவபரம்பொருளும் ஒன்றேயாம், மன்ற உயர் சத்திகளும்=மிகவுமுயர்ந்த சத்திகளும், சத்திமான்களும்=சத்திமான்களும், ஈசன் மருவும் மாயை அன்று அறிந்த ஆம்=சிவபெருமானுஞ் சிவசத்தியினாலும் அக்காலத்திற்றானே உண்டாக்கப் பட்டனவாகும், (ஆகலால்) சத்தி அனைத்தும் உமை=சத்திகளெல்லாம் உமாதேவியே யாகும், சத்திமான் எல்லாம் ஈசன்=சத்திமான்களெல்லாம் இறைவனே யாவர்.

தேவி சத்திகளும், இறைவன் சத்திமானுமாக நிற்பர் என்பதனை "விரிந்திடு மொளியை நீங்கியே மதியு ஞாயிறும் விளங்கிட மாட்டா - திருந்திய வொளியு மனனவை தமமை நீங்கியே சோர்ந்திடா ததுபோ லிருந்தநம் மிறையு மிறைவியு மொன்று யுறைகுவ ரிறைவியா லிறைவன் - பொருந்திடப் போக முத்திகள் குதவிப பொறபுறு சத்திமா னுவான் " என்ற வாயுசங்கிதைச் செய்யுளானறிக (கக)

நுகர்பவனெம் மிறையாகு நுகர்பொருணற் கலையந்தக் கலையே நாளு
மகிலபுவ னங்களையு மாக்கியளித் தழிக்கின்ற ததனான் முத்தி
புகநினைவோர் பகிரண்டப் பிறைவடந்தாழ்ந் தழகொழுகிச் சுணங்கு பூத்த
முகிழ்முலைச்செங் கனித்துவர்வாய் முற்றிழைசே வடிக்கமல முன்னு வாரால்.

(இ-ள்) நுகர்பவனெம் இறை ஆகும்=அநுபவிப்பவன் எமது சிவனே யாகும், நுகர் பொருள் நல கலை = அநுபவிக்கப்படுகின்ற பொருள்கள் நன்மையாகிய சத்தியே யாகும், அந்த கலையே=அந்தச் சத்தியே, நாளும்=எந்நாளும், அகிலம் புவனங்களையும் ஆக்கி அளித்து அழிக்கின்றது = எல்லா வுலகங்களையுஞ் சிருட்டித்துத் திதித்துச் சங்கரிக்கின்றது, அதனால்=அக்காரணத்தினால், முத்தி புக நினைவோர் = (சிவசாயுச்சிய) முத்தியை யடைய விரும்புவோர், பகிர் அண்டம் பிறைவடம் தாழ்ந்து = வெளியாகிய ஆகாயத்துப் பிறைச் சந்திரனைப்போல முத்துவடங் கிடந்து, அழகு ஒழுகி சுணங்கு பூத்த = அழகு பொங்கித் தவழ்ந்து தேமல் படரப் பெற்ற, முகிழ் முலை=அரும்பிய தனங்களையும், செம் துவர் கனி வாய்=சிவந்த பவளத்தையும் (கோவைப்) பழத்தையும் போன்ற வாயினையும், முற்று இழை=முற்றிய ஆபரணத்தையு முடைய தேவியினது, சே அடி கமலம் முன்னுவார்=செவ்விய பாதத்தாமரைகளைத் தியானித்து வழிபடுவார். (கஉ)

இத்தகைய மடமயிலை மலையரைய னிழைத்திடுநற் றவத்தாற் றூய
முத்தவடங் கிடந்திமைப்ப வழகுகுடி யிருந்தோங்கு முகிழ்மென் கொங்கை
மைத்தவழுங் கருங்கூந்தன் மேனையினிற் புதல்வியெனப் பெற்றுள்ள மகிழ்ச்சி யோடுஞ்
சித்தநனி செம்மாப்பக் காதலனை வணங்கியிவை செப்ப லுற்றாள்.

(இ-ள்) இ தகைய மடம் மயிலை=இந்தத் தகுதிகளையுடைய இளமயில் போன்ற சிவசத்தியை, மலை அரையன் இழைத்து இடும் நல தவத்தால்=இமய மலையரசன் செய்த நன்மையாகிய தவத்தினாலே, தூய முத்தம் வடம் கிடந்து இமைப்ப=குற்றமில்லாத முத்து மாலை தங்கிப் பிரகாசிக்க, அழகு குடி இருந்து ஓங்கும் = வனப்பு நீங்கா துறைப்பப்பெற் றுயர்ந்த, முகிழ் மென் கொங்கை=அரும்பு போன்ற தனங்களையும், மை தவழும் கருங்கூந்தல்=மேகம் படிந்தாற் போன்ற கரிய கூந்தலையுமுடைய,மேனை இனி துஉயிர்த்து=மேனை யென்பவள் (புத்திரியாகப்) பெற்று, உள்ளம் மகிழ்ச்சி ஓடும்=மனவுவகை யுடனே, சித்தம் நனி செம்மாப்ப=சிந்தையு மிகத் தருக்குற, காதலனை வணங்கி இவை செப்பல் உற்றாள்=(தன்) நாயகனாகிய மலையரசனைப் பணிந்து இவையிற்றைச் சொல்லுவா ளாயினாள்

மயில்-உவமவாகு பெயர். அரையன் போலி அழகு குடியிருத்தலாவது வீற்றுத் தெய்வங் குடிகொளப் பெறுதல் என்பர் நச்சினார்க்கினியரும். இவ் வாறுய தேவியைத் தன் நாயகனது பெருந்தவத்தாற் புத்திரியாகப் பெற்ற மேனை யென்பவள் அவனைப் பணிந்து கூறுவாள் என்பதாம். மைத்தவழும்-என்பது எதுகை நோக்கிய விரித்தல். பர்வதராசன் புத்திரி யானமையாற் பார்வதி எனத் திருநாம முற்றனள் (கங)

மழகதிரி ஞெளிர்மெய்யு மிருஞ்சிலைநாண் மதிக்குழவி வள்ளை வாட்டுங்
குழைபுனையுங் கமலநிகர் நான்முகமு முகக்கணனுங் குலவும் வேயி

னழகழிக்கு மெண்டோளு மவிர்மதிக்கீற றணிசடையுந் தாங்கி யிங்ங
னிழையுயிர்க்குங் கொடியென்ன வெய்துமகட் டனைநோக்கென றியம்பலோடும்.

(இ-ள்) மழ கதிரின் ஒளிர் மெய்யும் = இளஞ் சூரியனைப் போலப் பிரகாசிக்கின்ற திருமேனியையும், இரு சிலை = இரண்டு விற்களினாலும், நாள் குழவி மதி = எட்டா நாட் பிறையினாலும், வள்ளை வாட்டும் குழை = வள்ளைக் கொடியை வருத்துகின்ற குண்டலங்களினாலும், புனையும் கமலம் நிகர் வாள் முகமும் = அலங்கரிக்கப்பட்ட தாமரை மலரை யொத்த வதனத்தையும், முக்கண்ணும் = திரிநேத்திரங்களையும், குலவும் வேயின் அழகு அழிக்கும் எண் தோளும் = விளங்குகின்ற மூங்கிலின் வனப்பினையும் வென்ற எட்டுத் தோள்களையும், அவிர் கீற்று மதி அணி சடையும் = பிரகாசிக்கின்ற பிறைச்சந்திரனைத் தரித்த சடாமுடியையும், தாங்கி = சுமந்து, இங்ஙன் = இவ்விடத்து, இழை உயிர்க்கும் கொடி என்ன = ஆபரணங்களையுயீனுகின்ற வோர் பூங்கொடியைப் போல, எய்தும் மகள் தனை நோக்கு என்று இயம்பலோடும் = அவதாரஞ் செய்தருளிய புதல்வியைக் காண்பாயாக வென்று சொல்லுதலும்.

இது முதலிரண்டு செய்யுள் குளகம். கதிரின்-இன், உவம வுருபிடைச் சொல். இரு சிலைபுருவங்கள் எனவும், நாண் மதிக் குழவி நெற்றி யெனவும், வள்ளை வாட்டுங் குழை செவியெனவுங் கொள்க. ஙனம் என்னு மிடப்பொருணைத்து மிடைச்சொல் கடைக் குறைந்து நின்றது. இழை என்றதனை இறந்தது தழீய வெச்சவும்மைதொக்கது. (கசு)

மலையரையன் குழவிமதி யமுதுறைக்கு மணிமௌலி மகனை நோக்கி
யிலவிதழி னமிழ்தனைய மழலைமொழிப் பேதைநீ யாரை யென்னக்
குலவரையி னுயர்குடுமி குழையவரி யரவநாண் கொழுவி முன்னை
முலவுபுர மெரியூட்டு மொருமுதல்வன் பங்கிலினி துறைகு வேனால்.

(இ-ள்) மலை அரையன் = இமய மலையரசனானவன், குழவி மதி அமுது உறைக்கும் மணி மௌலி மகனை நோக்கி = பாலசந்திரன் அமுத கிரணத்தைச் சிந்துகின்ற அழகிய சடாமுடியையுடைய புதல்வியைப் பார்த்து இலவு இதழின் அமிழ்து அனைய மழலை மொழி = இலவ மலரையொத்த அதரத்தையும் இனிய அமிர்தத்தை நிகர்த்த குதலைச்சொற்களையு முடைய, பேதை நீ யார் என்ன = வாலைப்பருவமுள்ள நீ யாவள் என்று வினவ, (தேவி கூறுவாள்) உயர் குடுமி குலம் வரை குழைய = ஒழுங்காக உயர்ந்த சிகரங்களை யுடைய மேரு மலையானது (வில்லாக) வளையும்படி, வரி அரவம் நாண் கொழுவி = வரிபொருந்திய வாசுகியாகிய கயிற்றைப் பூட்டி, முன் = முற்காலத்தில், உலவு புரம் எரியூட்டும் = சஞ்சரித்த திரிபுரங்களையும் அக்கினிக்கு இரையாக்கிய, ஒரு முதல்வன் பங்கில் = ஒப்பற்ற இறைவனது இடப்பாகத்தில், இனிது உறைகுவேன் = சிறப்புடன் இருப்பவளாகும் ()

மட்பகைஞர் திகிரியென வருவினையின் வாய்ப்பட்டு மம்ம ரெய்திக்
கொட்புறுவெங் கொடும்பிறவி யொழிப்பதென தருளெனது கோலம் யாவுங்
கட்புலனிற் கண்டுவப்பப் பேரறிவு தந்தனனீ காணடி யென்னை
விட்புலம்போய் முடியுரிஞ்சக் கதிர்கோடி யெழுந்தெனவே றுருவங் கொண்டாள்.

(இ-ள்) மட்பகைஞர் திகிரி என = குயவரது தண்டச் சக்கரம்போல, இரு வினையின் வாய்ப்பட்டு மம்மர் எய்தி = நல்வினை தீவினை யென்னும் இருவகை வினையின் வாய்க்குள் அகப்பட்டு (மன) மயக்குற்று, கொட்பு உறுவோர் = சுழலுதலை யுடைய ஆன்மாக்களது, கொடு பிறவி ஒழிப்பது எனது அருள் = தீய பிறவித் துன்பத்தை நீக்குவது எனது அருட்டொழிற் குணமேயாம், எனது கோலம் யாவும் = எனது வடிவத்தின் பல்பு முழு

வதும், கண் புலனில் கண்டு உவப்ப பெரு அறிவு தந்தனை = கண்ணறிவாற் றரிசித்து மகிழுமாறு பேரறிவை யளித்தனை, நீ காண்டி என்ன = நீ தரிசிப்பாயாக என்று, முடி விண் புலம் போய் உரிஞ்ச = கிரீடமானது ஆகாய முகட்டினைக் கடந்து சென்று உரோஞ்ச, கோடி கதிர் எழுந்து என = கோடி சூரியர் உதயஞ்செய்தாற் போல, வேறு உருவம் கொண்டான் = வேறாயுள்ள பரமேசுர ரூபத்தைக் கொண்டனன்.

மடப்பகைஞர் = மனைநுக்குப் பகைவராயுள்ளார். கட்புலன் என்பது கண்ணாகிய புலன் எனக் கருமதாரயமாய அறிவின் மேனின்றது. விட்புலம் என்பதற்கு விண்ணாகிய இடம் எனக. வினைப்பாலகர் வஃறினைப்போல இருவினைகளுள் மிக்க இருவினையாகிய பிரமகொலை பரிமேதவேள்வி போல்வன தம்முள் ஒருங்கே பயன் றருவன வாகலானும், அவற்றுள் நல்வினையான் வரும் இன்பமும் தீவினையால் வருந் துன்பம்போல அழிதன் மாலைய வாயத் தத்துவ ஞானத்தைப் பயவாமை பற்றித் தீவினைபோல அது நீக்கப் படாது தடை செய்து நிற்றலுடைமையானும், விலங்குபோல நின்று மீட்டும் பிறவியிற் புகுத்தி விடலானும் "இருவினையின் வாய்ப்பட்டு மயமயக்கிக் கொட்புறுவோர்" எனக் கூறப்பட்டது. இதனுள் வேதத்துட் கூறிய வேள்வி முதலாய தருமங்கள் தத்துவ ஞானத்தைக் காட்டுமென்று கூறும் பட்டாசாரியன் மதம் நிராகரிக்கப் பட்டது. ( )

தண்டுழாய் முடியோனு நான்முகனு மிந்திரனுந் தாழ்ந்து போற்ற
வண்டகோ டிகளனைத்து மொருகாழ்முத் தெனமுலைமே லணிந்து வெய்ய
துண்டவாட் பிறையெயிறு விலங்கக் கதைநேமி சூலஞ் சங்கம்
கொண்டுநீண் டகைகயினிற் கொடுவரியி னுரியதண்மென் குறங்கிற் சேர்த்தி.

(இ-ள்) தண் துழாய் முடியோனும் = குளிர்ந்த துழாய் மாலையைத் தரித்த கிரீடத்தினை யுடைய திருமாலும், நான்முகனும் இந்திரனும் தாழ்ந்து போற்ற = பிரமனும் இந்திரனும் வணங்கித் துதிக்கவும், அண்டம் கோடிகள் அனைத்தும் = அண்டகோடிகளெல்லாவற்றையும், ஒரு முத்துக் காழ் என முலை மேல் அணிந்து = ஒரு முத்து வடம்போலத் தனங்களி லணிந்து, எயிறு வெய்ய வாள் பிறை துண்டம் என்ன இலங்க = பற்கள் விரும்பப் படுகின்ற ஒழுங்காகிய பிறைத் துண்டங்களைப் போல விளங்கவும், நீள் தடம் கையினில் = நீண்ட பெரிய திருக்கரங்களில், கதை நேமி சூலம் சங்கு கொண்டு = தண்டும் சக்கரமும் சூலமும் சங்கும் என்னும் ஆயுதங்களைத் தாங்கி, மென் குறங்கில் = மெல்லிய அரையினிடத்து, கொடுவரியின் உரி அதள் சேர்த்தி = புலியினின்றும் உரித்த தோலாடையை யுடுத்து.

இது முதன் மூன்று செய்யுள் குளகம். கோடிகள் என்னுஞ் சொல் பன்மைப் பொருளில் வந்தது அன்றி, கோடிகள் என்பதற்கு முடிவு (அந்தம்) எனப் பொருளுரைத்தலுமாம். அது "சதகோடி மந்திரம்" என்று தொல்லாசிரியர் உரைத்தமையானும், "பதினொருகோடி உருத்திரர்களையும், பன்னிரண்டு கோடி சூரியர்களையும், இரண்டு கோடி மருத்துவர்களையும், எட்டுக்கோடி வசுக்களையும்" என இலக்கண விளக்கத்தார் இயம்புதலானும் அமைவுடைத்து. சங்கம்—அம், சாரியை. (௧௦)

வெண்ணிலவு கதிர்கோடி யொளிர்வதென மணிமவுலி விளங்க வோங்கு
மண்ணனைமால் வரையரியிற் பெய்தநூ புரமடிமீ தரற்றி யார்ப்பக்
கணவழுக்கு சுடர்மாலை மெய்ம்முழுதுந் தவழ்ந்திகக் கனன்று வெய்தா
வொண்ணுதற்கட் டழலெறிப்ப வருங்கலன்யா வையுங்கதிர் களொளிப்ப நீட்ட.

(இ-ள்) வெண் நிலவு கோடி கதிர் ஒளிர்வது என = வெள்ளிய சந்திரிகையைக் காலுகின்ற கோடி சந்திரர்கள் (ஒருங்கு கூடிப்) பிரகாசித்தாற் போல, மணி மவுலி

விளங்க = முத்துக்களாலாய கிரீடம் விளங்கவும், ஒழுகும் அளைணல மால்வரை அரியினை பெய்த = உயர்ந்த சிறப்பாகிய பெரிய மலைகளைப் பருக்கைக் கற்களாகப் பெய்யப்பட்ட, நூபுரம் அடி மீது அரற்றி ஆரப்பு - சிலம்பு புகாட்பாங்களின்மேல் நின்று ஒலிக்க, கண் வழுக்கு சுடர் மாலை மெய் முழுதும் வழங்கல் = கண்கள் கூசுகின்ற ஒளியுடைய மணி மாலைகள் திருமேனி முழுதும் துலங்கியாவும், ஒள் நூறல் கலை = ஒளியுள்ள சிறிகண், மிக கன்னறு வெய்து அம் சூழல் எறிப்ப - மிகவும் வெண்மை யாக அக்கினியைக் கக்கவும், அருகலன் யாவையும் = பூரிய வாபரணங்களெல்லாம், கதிர்கள் ஒளிய சிட்ட = ஒளிய பொருள்கள் மறையும்படி (சுடரை) எறிக்கவும்.

சுடர் மாலை என்பதற்கு ஒளியின் றொடர்ச்சி என வுரைப்பாருமுண்டு. கதிர்கள் என்றதனால் சூரிய சந்திர நட்சத்திர முதலிய ஒளியபொருள்களெல்லாம் கொள்ளப்படும். ()

உலப்பரிய வுயிரெவைக்கு முள்ளாகிப் புறமாகி யுலகம் போர்த்து
நலப்பத்த சிறு முகக் கைந்தாமரைக் கண் செவிவா யெங்கு மாகிச்
சொலற்கரிய சிவக்கொழுந்தினைக் கூறு மொரு வல்லிபதந் தொழுது நெஞ்சம்
மலக்கமொடு மகிழ்வெய்த வாங்கவளா யிரம்பெயரு மறைந்து போற்றும்.

(இ-ள்) உலப்பு அரிய உயிர் எவைக்கும் உள் ஆகி = அழிவில்லாத ஆன்மாக்கள் எவைக்கும் உள்ளாகியும், புறம் ஆகி = புறமாகியும், உலகம் போர்த்து = உலகங்களைத் (தன்னிடத்தில்) பொதிந்து வைத்தும், நலம் தரு சிறு அடி முகக்கண் = நன்மையாகிய தருகிற சிறிய பாதங்களும் முகங்களும் கண்களும், நளினம் மலர் கை = தாமரை மலர்போன்ற கைகளும், செவி வாய் எங்கும் ஆகி = செவிகளும் வாயும் எவ்விடங்களுமாகக் கொண்டு, சொலற்கு அரிய சிவக்கொழுந்தினை கூறு ஆய ஒரு வல்லியை = சொல்லுதற்கரிய சிவ சோதிக் கொழுந்தினை ஒருபாகமாயுள்ள தேவியாரை, தொழுது = (மலையரசன்) வணங்கி, நெஞ்சம் அலக்கண் ஒடு மகிழ்வு எய்த = மனத்தில் துன்பமும் உவகையுந் தோன்றுகிறதாக, ஆங்கு அவள் ஆயிரம் பெயரும் அறைந்து போற்றும் = அவளது ஆயிரந் திருநாமங்களையுஞ் சொல்லித் துதிப்பானாயினன்.

ஆன்மாக்கள் பதியையும் பாசத்தையும் போல அநாதியாயுள்ளனவாகலின் "உலப்பரிய வுயிர்" என்றனன். தேவியின் பெருமை யறியாது நீ யாரை யென்கக் கேட்டேனே யென்றதனால் அலக்கணையும், இத்துணை மகிமையுள்ளாள் என் பெருந்தவத்தால் விளங்கு சிறுமியா யெய்தினளே யென்றதனால் மகிழ்வையும், மலையரையன் றன்மனத்துக் கொண்டான் என்க. போற்றும்-உயர்திணை யாண்பா லொருமைப் படர்க்கை யெதிர்கால வினைச் செய்யு மென்முற்று. சிறு அடி என்பன சீறடி என முடிந்தது. உள்ளாதலாவது, அகக்கருவித் தத்துவங்கள் முப்பத்தாறாய் நிற்றல். புறமாதலாவது புறக்கருவித் தத்துவங்கள் அறுபதாக நிற்றல். சொலற்கு என்பது சொலற்கு என நின்றது. (கக)

சிவையநந்தை பராசத்தி நிட்களை கேவலையாயா னிந்தை சாந்தை
கவுரிமகேசுரியமிர்தை யசலைசுமங்கலை நிர்த்தி காளி கங்கை
பவகரைமா தேவிமகா னந்தைநா தாக்கினியைபார் வதிமாமாயை
சுவதைமரணநீந்தை பிரதானை பிரகிருதி துருவை யேகை.

(இ-ள்) சிவை—ஏகை = சிவை, ஆநந்தை, பராசத்தி, நிட்களை, கேவலை, மாயாதீதை, சாந்தை, கௌரி, மகேசுவரி, அமிர்தை, அசலை, சுமங்கலை, நிர்த்தி, காளி, கங்கை, பவகரை, மாதேவி, மகாநந்தை, நாதாக்கினியை, பார்வதி, மகாமாயை, சுவதை, மரண நீந்தை, பிரதானை, பிரகிருதி, துருவை, ஏகை என்பவும்.

சிவை, கௌரி, ஞானதை, பஞ்ச வக்திரை முதலியன; ஏனைவற்றிற்கு முன்னுரை நோக்குக. பராசத்தி—மேலான சத்தி நிட்கலை=அருவ வடிவத்தையுடையவள் கேவலை = தனிமையுடையவள் மாயா தீதை=மாயைக்கு எட்டாதவள், மேற்பட்டவள் சாந்தை = சாந்தமுடையவள் மகேசுவரி=மகத்தாகிய ஐசுவரியமுடையவள் அமிர்தை = மரணத்தைத் தவிர்ப்பவள் அசலை= சலனமில்லாதவள். (சலனம் = அசைவு) சுமங்கலை = நல்ல மங்கலத்தை யுடையவள். நிவிர்த்தி = நிவிர்த்தி ஞானமாயிருப்பவள் காளி=கருநிறமுடையவள் கங்கை=பூமியிற் செல்பவள், கங்காதேவியாயிருப்பவள் பவக்கரை = பிறவிக்கடலுக்குக் கரையாயிருப்பவள். மகாமாயை என்பது மாமாயை எனத் திரிந்து நின்றது மாய அதீதை—மரண அதீதை என்பன, மாயாதீதை மரணாதீதை யென வடநூன் முடிபு அதீதம் = எட்டாதது சிவை முதலிய நாமங்களிலுள்ள ஐகாரங்கள் பெண்பாற் பெயர் விகுதிகளெனக் கொள்க (உ0)

சுத்தை வியா பினிசாவித்திரி சகலை சூக்குமைசுக் கிலைபு ராணை
நித்தை யருப பிரவேசி சுயம்பூதி மகாரூபை நிமலை சோதி
சித்தி சரு வாதாரை பிரகிருதி தருமவித்தை சென்மா தீதை
சத்தியமா லினிதேவி தாமசிமா தவிமேதை சுநீதி நீதி

(இ - ள்) சுத்தை-நீதி = சுத்தை, வியாபினி, சாவித்திரி, சகலை, சூக்குமை, சுக்கிலை, புராணை, நித்தை, அருபப்பிரவேசி, சுயம்பூதி, மகாரூபை, நிமலை, சோதி, சித்தி, சருவாதாரை, பிரகிருதி, தருமவித்தை, சென்மாதீதை, சத்தியை, மாலினி, தேவி, தாமசி, மாதவி, மேதை, சுநீதி, நீதி எனபவும (உக)

சுருதிசரு வாணிசரசு சுவதியுருத் திராணிமா னசிசு வாகை
மிருதியோ கினிசோபை சுந்தரியம் பிகைலோபை விசுவ ரூபை
வரதையதி சோபனைமா பலைசாந்தி விபாவனைவாக் கியைப வானி
பிரமவித்தை புருடமோ கினிநாத ரூபைதுரை பிராண வித்தை

(இ - ள்) சுருதி - பிராணவித்தை=சுருதி, சருவாணி, சரசுவதி, உருத்திராணி, மானசி, சுவாகை, மிருதி, யோகினி, சோபை, சுந்தரி, அம்பிகை, உலோபை, விசுவரூபை, வரதை, அதிசோபனை, மாபலை, சாந்தி, விபாவனை, வாக்கியை, பவானி, பிரமவித்தை, புருடமோகினி, நாதரூபை, துரை, பிராணவித்தை எனபவும

சுருதி=வேதங்களாயிருப்பவள் சருவாணி=எல்லாச் சொற்களுமா யிருப்பவள் சுவாகை=அட்டமூர்த்த சத்திகளு ளொன்றாயிருப்பவள் உருத்திராணி = உருத்திரனது சத்தி யோகினி=யோகத்தை யுடையவள் சுந்தரி = அழகுடையவள் அம்பிகை=தாய் உலோபை = பற்றுள்ளவள் விசுவரூபை = உலகத்தை வடிவாகக் கொண்டவள் விசுவம்=உலகம் வரதை—அருட் கொடையை யுடையவள் அதிசோபனை = மிக்க மங்கள குணத்தை யுடையவள் மாபலை=பேராற்ற லுடையவள், பேராற்றல் = அநந்தவீரியம் சாந்தி=சத்துவகுணமுடையவள் விபாவனை = பாவனை யில்லாதவள் வாக்கியை= மகா வாக்கியங்களின் பொருளாயிருப்பவள், அவை தத்துவமசி முதலியன பவானி= பவனுடைய மனைவி பிரமவித்தை=பிரமவித்தையை யுடையவள் புருடமோகினி=புருடத்துவத்தை மயக்குபவள் நாதரூபை=நாதவடிவுள்ளவள் துரை = உலகங்களைத் தரித்திருப்பவள் பிராண வித்தை=பிராணவறிவா யிருப்பவள், வித்தை=வித்தையுமாம் ()

பகவதிசம் பவைமகிட வாகனியச் சுதைபரம கலையநாதி
மகதிசத்த யோனிபிர தானபுரு டேசுவரிமா வித்தை சாந்தை

குகைசருவ சித்திகலை யவ்வியத்த லக்கணநிர்க் குணிபிராமி
சகமாதா விபாவரிசின் மயையநந்த விபவைசரா தீதை துர்க்கை.

(இ-ள்) பகவதி-துர்க்கை=பகவதி, சாம்பவை, மகிடவாகனி, அச்சுதை, பரமகலை, அநாதி, மகதி, சத்தயோனி, பிரதான புருடேசுவரி, மாவிருத்தை, காந்தை, குகை, சருவ சித்தி, கலை, அவ்வியத்த லக்கணை, நிர்க்குணி, பிராமி, சகமாதா, விபாவரி, சின்மயை, அநந்த விபவை, சராதீதை, துர்க்கை என்பவும்.

பகவதி=ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களை யுடையவள். சாம்பவை = சம்புவின் மனைவி, இது சாம்பவி யெனவும் வரும். மகிட வாகனி=எருமைக்கடா வாகனத்தை யுடையவள்; எருமைத் தலையையுடைய மகிடாசுரனைத் தலையின் மிதித்து நிற்றலின் இப்பெயர் பொருந்தியது. அச்சுதை = அழியாதவள். பரமகலை=மேலான கலையா யிருப்பவள். அநாதி = ஆதியில்லாதவள். மகதி = பெருமையா யிருப்பவள். சத்தயோனி=சத்தத்தை யிடமாக வுடையவள், சத்தயோனி சுத்தயோனி=சுத்தமாகிய இடமுடையவள். பிரதான புருடேசுவரி=பிரகிருதி யாவைக்கும் புருடதத்துவத்திற்குந் தலைமை யானவள். மாவிருத்தை=பெரிய சுத்தவித்தையா யிருப்பவள். காந்தை=நாயகி. குகை=அடியாருள்ளக் குகையிலிருப்பவள். சருவ சித்தி = எல்லாச் சித்திகளையுங் கொடுப்பவள். கலை = கலாரூபமா யிருப்பவள். அவ்வியத்த லக்கணை = சூக்குமலக்கண முடையவள். நிர்க்குணி = முக்குணங்களு மில்லாதவள். பிராமி = பிரமசத்தியா யிருப்பவள். சகமாதா=உலகங்களுக்குத் தாய். விபாவரி=இருளாயிருப்பவள். சின்மயை=ஞானமயமா யிருப்பவள். அநந்த விபவை = அளவிடப்படாத விபவத்தை யுடையவள். சராதீதை = சங்கம பொருளுக்கு மெட்டாதவள். துர்க்கை = துக்கத்தை யிடமாக வுடையவள், துக்கத்தினால் அறியப்படுபவள். (௫)

இவைமுதலா கியநாம மாயிரமு மெடுத்தோதி யிருகை கூப்பிப்
புவிபுனறீ வளிவிசும்பு வெங்கதிரோன் மதியெச்சம் புரிவோ னுருவச்
சிவனுருவி னீங்காத செல்விகம லடிக்கமலஞ் சிந்தை சேர்த்தித்
தவலருஞ்சீர் மலையரையன் மகிழ்பூப்ப வீங்கிதனைச் சாற்ற லுற்றான்.

(இ-ள்) தவலருஞ்சீர் மலையரையன்=கெடுதலில்லாத சிறப்பினை யுடைய இமய மலையரசன், இவை முதலாகிய ஆயிரம் நாமமும் எடுத்தோதி - இவை முதலாகச் சொல்லப்படுவனவாகிய சகத்திர திருநாம மந்திரங்களையும் எடுத்துச் சொல்லி, இருகை கூப்பி=இரண்டு கரங்களையுங் குவித்து, புவி புனல் தீ வளி விசும்பு = மண் நீர் நெருப்பு காற்று ஆகாயம், வெங்கதிரோன் மதி எச்சம் புரிவோன் உருவ=வெப்பமுடைய சூரியன் சந்திரன் வேள்விசெய்யும் ஆன்மா ஆகிய அட்டமூர்த்தங்களாயு முடைய, சிவன் உருவின் நீங்காத செல்வி = சிவபெருமானது திருவுருவினின்றும் வேறுபடாத பரமேசுவரியின், கமலம் மலர் அடி சிந்தை சேர்த்தி—தாமரை மலர்போன்ற திருப்பாதங்களை மனத்தில் வைத்துத் தியானித்து, மகிழ் பூப்ப = சந்தோடம் அதிகரிக்க, இங்கிதனைச் சாற்றல் உற்றான் — இதனைச் சொல்லலாயினன்.

நூலாசிரியன் சுருங்கச் சொல்லல் என்னும் அழகு பற்றி "இவை முதலாகிய நாம மாயிரமும்" எனக் கூறினேனும், "சூத்திரத் துட்பொரு ளன்றியு மியாப்புற - வின்றி யமையா தியைபவை யெல்லா - மொன்ற வுரைப்ப துரையெனப் படுமே" என தொல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியனார் கூறியருளியபடி, சொல்லி னெச்சமுஞ் சொல்லி யாங்குணர்த்த லென்னும் ... யால் ... [illegible]
... [illegible]

# தேவி சகத்திர திருநாமம்.

ஓம்
ஸ்ரீமாத்ரே நமஃ
ஸ்ரீ மஹா ராகஜ்ஞை நம
ஸ்ரீமத் ஸிம்ஹாஸனே ச்வரியை நம
சிதக்கினி குண்ட ஸம்பூதாயை நம
தேவகாரிய ஸமுத்ய தாயை நம
உத்யத் பானுஸஹஸ்திராபாயை நம
சதுர்பபாகு ஸமந்விதாயை நம
ராகஸ்வ ரூப பாசாட்டியாயை நம
குரோதா காராங்குசோஜ்வலாயை நம
மனோ ரூபேட்சு கோதண்டாயை நம
பஞ்ச தன்மாத்திர ஸாயகாயை நம
நிஜாருண பிரபா பூர மச்சப் பிரமாண்ட மண்டலாயை நம
சம்பகாசோக புன்னாக ஸௌகந்தி கலசத் கசாயை நம
குருவிந்த மணிசிரேணி கனத்கோடீர மண்டிதாயை நம
அஷ்டமி சந்திர விப்பிராஜ தளிகஸ்தல சோபிதாயை நம
முகசந்திர களங்காப மிருக நாபி விசேஷகாயை நம
வதனஸ் மரமாங்கல்ய க்ருஹதோரண சில்லிகாயை நம
வக்திர லக்ஷ்மி பரீவாஹ சலன் மீனாபலோசனாயை நம
நவசம்பக புஷ்பாப நாஸாதண்ட விராஜிதாயை நம
தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பாசுராயை நம
கதம்ப மஞ்சரி கிலப்த கர்ணபூர மனோகராயை நம
தாடங்க யுகளீபூத தபனோடுப மண்டலாயை நம
பத்மராக சிலாதர்ச பரிபாவிக போலபுவே நம
நவவித்ரும பிம்ப ஸ்ரீநியக்த தாரிரத சசதாயை நம
சுத்த வித்யாங்கு ராகாரத் விஜபங்க்தி த்வயோஜ்வலாயை நமஃ (௨௫)
கர்பூரவீடிகாமோதஸமகாக்ஷதிகந்தராயை நம
நிஜஸல்லாபமாதுர்ய விநிர்ப்பிதஸ்சிதகச்சபியை நம
மந்தஸ்மிதப்ரா பூரமஜ்ஜத்காமேசமானஸாயை நம
அநாகலித ஸாத்ருசியசுபக ஸ்ரீவிராஜிதாயை நம
காமேசபத்தமாங்கல்யசூத்ரசோபித கந்தராயை நம
ஓம
கனகாங்கத கேயூர கமனீய புஜான்விதாயை நமஃ
இரத்னக்கிரைவேய சிந்தாக லோலமுக்தா பலான்விதாயை நம
காமேசுரப்பிரேமரத்ந மணிப் பிரதிபணஸ்தன்யை நம
நாப்யாலவாலரோமாளிலதா பல குஜத்வயாயை நம
இலக்ஷியா ரோமலதா தாரதா ஸமுன்னேய மத்யமாயை நம
ஸ்தனபாரதலன்மத்ய பட்டபந்தவளித்ரயை நம
அருணாருண கௌசும்ப வஸ்த்ர பாஸ்வத் கடீதட்யை நம
ரத்ந கிங்கிணிகா ரம்ய ரசனா தாம பூஷிதாயை நம
காமேசஜ்ஞாதஸௌபாக்ய மார்தவோருத்வயான்விதாயை நம
மாணிக்க மகுடாகார ஜானுத்வய விராஜிதாயை நம
இந்த்ரகோபபரிக்ஷிப்தஸ்மர தூணாபஜங்கிகாயை நம
கூடகுல்பாயை நம
கூர்மப்ருஷ்டஜயிஷ்ணு பிரபதான்விதாயை நம
நகதீதிதிஸஞ்சன்ன நமஜ்ஜன தமோ குணாயை நம
பதத்வயப்ரபா ஜாலபராக்ருத ஸரோருகாயை நம
சிஞ்ஜானமணிமஞ்ஜீரமண்டித ஸ்ரீபதாம்புஜாயை நம
மராளீமந்தகமனாயை நம
மஹாலாவண்யசேவதயே நம
ஸர்வாருணாயை நம
அநவத்யாங்கை நமஃ (௫0)

ஸர்வாபரணபூஷிதாயை நம
சிவகாமேசுராங்கஸ்தாயை நம
சிவாயை நம
ஸ்வாதீனவல்லபாயை நம
சுமேருசிருங்கமத்யஸ்தாயை நம
ஸ்ரீமந்நகரநாயிகாயை நம
சிந்தாமணிக்ருஹாந்தஸ்தாயை நம
பஞ்சப்பிரம்ஹாஸனஸ்திதாயை நம
மஹாபத்மாடவீஸம்ஸ்தாயை நம
கதம்பவனவாஸினியை நம
சுதாசாகரமத்யஸ்தாயை நம
காமாக்ஷியை நம
காமதாயினியை நம

ஓம்
விக்ன நாசின்யை நமஃ
தேஜோவத்யை நம
த்ரிநயனாயை நம
லோலாக்ஷி காமரூபிண்யை நம
மாலின்யை நம
ஹம்ஸின்யை நம
மாத்ரே நம
மலயாசலவாஸின்யை நம
ஸுமுக்யை நம
நளின்யை நம
ஸுப்ருவே நம
சோபனாயை நம
ஸுரநாயிகாயை நம
காளகண்டியை நம
காந்திமத்யை நம
க்ஷோபிண்யை நம
ஸூக்ஷ்ம ரூபிண்யை நம
வஜ்ரேச்வர்யை நம
வாமதேவ்யை நம
வயோவஸ்தா விவர்ஜிதாயை நம
ஸித்தேச்வர்யை நம
ஸித்தவித்யாயை நம
ஸித்தமாத்ரே நம
யசஸ்வின்யை நம
விசுத்த சக்ரநிலயாயை நமஃ (௪௭௫)
ஆரக்த வர்ணாயை நம
த்ரிலோசனாயை நம
கட்வாங்காதி ப்ரஹரணாயை நம
வதனைக ஸமன்விதாயை நம
பாயஸான்ன ப்ரியாயை நம
த்வக்ஸ்தாயை நம
பசுலோக பயங்கர்யை நம
அம்ருதாதி மஹாசக்தி ஸம்வ்ருதாயை நம
டாகினீச்வர்யை நம
அநாஹதாப்ஜ நிலயாயை நம
ச்யாமாபாயை நம
வதனத்வயாயை நம
தம்ஷ்ட்ரோஜ்வலாயை நம
அக்ஷமாலாதி தராயை நம
ருதிர ஸம்ஸ்திதாயை நம
காளராத்ர்யாதி சக்த்யௌக வ்ருதாயை நம
ஸ்நிக்தௌதன ப்ரியாயை நம
மஹாவீரேந்த்ர வரதாயை நம
ராகிண்யம்பா ஸ்வரூபிண்யை நம
மணிபூராப்ஜ நிலயாயை நம
வதனத்ரய ஸம்யுதாயை நம
வஜ்ராதி காயுதோபேதாயை நம
டாமர்யாதி பரீவ்ருதாயை நம
ரக்தவர்ணாயை நம
மாம்ஸநிஷ்டாயை நமஃ (௫00)
குடான்ன ப்ரீத மானஸாயை நம
ஸமஸ்த பக்த ஸுகதாயை நம

ஓம்
லாகின்யம்பா ஸ்வரூபிண்யை நமஃ
ஸ்வாதிஷ்டானாம்புஜ கதாயை நம
சதுர்வக்த்ர மனோஹராயை நம
சூலாத்யாயுத ஸம்பன்னாயை நம
பீதவர்ணாயை நம
அதிகர்விதாயை நம
மேதோநிஷ்டாயை நம
மதுப்ரீதாயை நம
பந்தின்யாதி ஸமன்விதாயை நம
தத்யன்னாஸக்த ஹ்ருதயாயை நம
காகினீ ரூபதாரிண்யை நம
மூலாதாராம்புஜாரூடாயை நம
பஞ்சவக்த்ராயை நம
அஸ்தி ஸம்ஸ்திதாயை நம
அங்குசாதி ப்ரஹரணாயை நம
வரதாதி நிஷேவிதாயை நம
முத்கௌதனாஸக்த சித்தாயை நம
ஸாகினீ ரூபதாரிண்யை நம
ஆஜ்ஞாசக்ராப்ஜ நிலயாயை நம
சுக்லவர்ணாயை நம
ஷடானனாயை நம
மஜ்ஜாஸம்ஸ்தாயை நம
ஹம்ஸவதீ முக்யசக்தி ஸமன்விதாயை நமஃ (௫௨௫)
ஹரித்ரான்னைக ரஸிகாயை நம
ஹாகினீ ரூபதாரிண்யை நம
ஸஹஸ்ரதள பத்மஸ்தாயை நம
ஸர்வவர்ணோப சோபிதாயை நம
ஸர்வாயுத தராயை நம
சுக்ல ஸம்ஸ்திதாயை நம
ஸர்வதோமுக்யை நம
ஸர்வௌதன ப்ரீதசித்தாயை நம
யாகினீரூப தாரிண்யை நம
ஸ்வாஹாயை நம
ஸ்வதாயை நம
அமத்யை நம
மேதாயை நம
ச்ருத்யை நம
அனுத்தமாயை நம
புண்யகீர்த்யை நம
புண்யலப்யாயை நம
புண்ய ச்ரவண கீர்த்தனாயை நம
புலோமஜார்ச்சிதாயை நம
பந்தமோசன்யை நம
பந்துராலகாயை நம
விமர்சரூபிண்யை நம
வித்யாயை நம
வியதாதி ஜகத்ப்ரஸவே நம
ஸர்வவ்யாதி ப்ரசமன்யை நமஃ (௫௫0)
ஸர்வம்ருத்யு நிவாரிண்யை நம
அக்ரகண்யாயை நம
அசிந்த்ய ரூபாயை நம
கலிகல்மஷ நாசின்யை நம

ஓம்
காத்யாயன்னியை நமஃ
காலகந்தரையை நம
கமலாக்ஷ நிஷேவிதாயை நம
தாம்பூலம் பூரிதமுகயை நம
தாடிமீகுஸுமப்ரியாயை நம
மிருகாக்ஷியை நம
மோஹின்னியை நம
முக்யாயை நம
மிருடாநிதியை நம
மித்ரரூபிண்ணியை நம
நித்ய திருப்தாயை நம
பக்த நிதயே நம
பயந்திரை நம
நிகிலேசுவரியை நம
மைத்திரியாதி வாஸனாலப்யாயை நம
மகாப்பிரளய ஸாக்ஷிண்ணியை நம
பராயை நம
பராசக்தியை நம
பராநிஷ்டாயை நம
பிரக்ஞான கனரூபிண்ணியை நம
மாத்வீபானலஸாயை நமஃ (௫௭௫)
மத்தாயை நம
மாத்ருகாவர்ண ரூபிண்ணியை நம
மகாகைலாச நிலயாயை நம
மிருணாலம்ருது தோர்லதாயை நம
மகனீயாயை நம
தயாமூர்த்தியை நம
மகாசாம்ராஜ்ய சாலின்னியை நம
ஆத்மவித்யாயை நம
மகாவித்யாயை நம
ஸ்ரீவித்யாயை நம
காமஸேவிதாயை நம
ஸ்ரீஷோடசாக்ஷரி வித்யாயை நம
திரிகூடாயை நம
காமகோடிகாயை நம
கடாக்ஷகிங்கரீ பூதகமலாகோடிஸேவிதாயை நம
சிரஸ்திதாயை நம
சந்திரநிபாயை நம
பாலஸ்தாயை நம
இந்திர தனுப்பிரபாயை நம
ஹிருதயஸ்தாயை நம
ரவிப்பிரக்யாயை நம
திரிகோணாந்தர தீபிகாயை நம
தாக்ஷாயண்ணியை நம
தைத்திய ஹந்த்ரையை நம
தக்ஷயக்ஞ விநாசின்னியை நமஃ (௬௦௦)
தராந்தோளித தீர்க்காக்ஷியை நம
தரகாஸோஜ்வலன்முகயை நம
குருமூர்த்தியை நம
குணநிதியை நம
கோமாத்ரே நம

ஓம்
குஹஜன்மபுவே நமஃ
தேவேசியை நம
தண்டநீதிஸ்தாயை நம
தகராகாச ரூபிண்ணியை நம
பிரதிபன்முக்ய ராகாந்த திதிமண்டல பூஜிதாயை நம
களாத்மிகாயை நம
களாநாதாயை நம
காவ்யாலாப விநோதின்னியை நம
ஸசாமர ரமாவாணி ஸவ்யதக்ஷிண ஸேவிதாயை நம
ஆதிசக்தியை நம
அமேயாயை நம
ஆத்மனே நம
பரமாயை நம
பாவநாகிருதயே நம
அநேககோடி பிரம்மாண்ட ஜநன்னியை நம
திவ்யவிக்ரகாயை நம
க்லீங்காரியை நம
கேவலாயை நம
குஹ்யாயை நம
கைவல்யபததாயின்னியை நமஃ (௬௨௫)
திரிபுராயை நம
திரிஜகத்வந்த்யாயை நம
திரிமூர்த்தியை நம
திரிதசேசுவரியை நம
திரியக்ஷரியை நம
திவ்யகந்தாட்யாயை நம
ஸிந்தூர திலகாஞ்சிதாயை நம
உமாயை நம
சைலேந்திர தனயாயை நம
கௌரியை நம
கந்தர்வ ஸேவிதாயை நம
விசுவகர்ப்பாயை நம
ஸ்வர்ண கர்ப்பாயை நம
வரதாயை நம
வாகதீசுவரியை நம
தியானகம்யாயை நம
அபரிச்சேத்யாயை நம
ஞானதாயை நம
ஞானவிக்ரகாயை நம
ஸர்வவேதாந்த ஸம்வேத்யாயை நம
ஸத்யானந்த ஸ்வரூபிண்ணியை நம
லோபாமுத்ரார்ச்சிதாயை நம
லீலாக்லிப்த பிரம்மாண்ட மண்டலாயை நம
அதிருச்யாயை நம
திருச்யரஹிதாயை நமஃ (௬௫௦)
விக்ஞாத்ரியை நம
வேத்ய வர்ஜிதாயை நம
யோகின்னியை நம
யோகதாயை நமஃ

ஓம்
யோகியாயை நமஃ
யோகானந்தாயை நம
யுகந்தராயை நம
இச்சாசக்திஞான சக்திக்ரியாசக்திஸ்வரூபி
ணியை நம
ஸர்வாதாராயை நம
சுப்ரதிஷ்டாயை நம
ஸதஸத்ரூப தாரிணியை நம
அஷ்டமூர்த்தியை நம
அஜாஜைத்திரியை நம
லோகயாத்ரா விதாயினியை நம
ஏகாகினியை நம
பூமரூபாயை நம
நிர்த்வைதாயை நம
த்வைதவர்ஜிதாயை நம
அன்னதாயை நம
வசுதாயை நம
விருத்தாயை நம
பிரமமாத்மைக்ய ஸ்வரூபிணியை நம
பிருகத்யை நம
பிராமணியை நம
பிராமஹியை நமஃ (௬௭௫)
பிருமாநந்தாயை நம
பலிப்பிரியாயை நம
பாஷாரூபாயை நம
பிருகத்ஸேனாயை நம
பாவாபாவ விவர்ஜிதாயை நம
சுகாராத்தியாயை நம
சுபகரியை நம
சோபனா சுலபாகதியை நம
ராஜராஜேசுவரியை நம
ராஜ்யதாயினியை நம
ராஜ்யவல்லபாயை நம
ராஜத்க்ருபாயை நம
ராஜபீட நிவேசித நிஜாச்ரிதாயை நம
ராஜ்யலக்ஷ்மியை நம
கோசநாதாயை நம
சதுரங்க பலேசுவரியை நம
ஸாம்ராஜ்ய தாயினியை நம
சத்திய சந்தாயை நம
ஸாகர மேகலாயை நம
தீக்ஷிதாயை நம
தைத்திய சமனியை நம
ஸர்வலோக சங்கரியை நம
ஸர்வார்த்த தாத்திரியை நம
சாவித்திரியை நம
சச்சிதானந்த ரூபிண்ணியை நமஃ (௭௦௦)
தேசகாலா பரிச்சின்னாயை நம
ஸர்வகாயை நம
சர்வமோகினியை நம
சரஸ்வதியை நம
சாஸ்திரமயை நம

ஓம்
குஹாம்பாயை நமஃ
குஹிய ரூபிணியை நம
ஸர்வோபாதி விநிர்முக்தாயை நமஃ
சதாசிவ பதிவிரதாயை நம
ஸம்பிரதாயேசுவரியை நம
ஸாதுநே நம
ஈயை நம
குருமண்டல ரூபிணியை நம
குலோத்தீர்ணாயை நம
பகாராத்தியாயை நம
மாயாயை நம
மதுமதியை நம
மகியை நம
கணாம்பாயை நம
குஹிய காராத்தியாயை நம
கோமலாங்கியை நம
குருப்பிரியாயை நம
ஸ்வதந்த்ராயை நம
ஸர்வதந்திரேசியை நம
தக்ஷிணாமூர்த்தி ரூபிணியை நமஃ (௭௨௫)
ஸனகாதி ஸமாராத்தியாயை நம
சிவஞானப்ரதாயினியை நம
சித்கலாயை நம
ஆனந்த கலிகாயை நம
பிரேம ரூபாயை நம
பிரியங்கரியை நம
நாமபாராயண ப்ரீதாயை நம
நந்திவித்தியாயை நம
நடேசுவரியை நம
மித்தியா ஜகததிஷ்டானாயை நம
முக்திதாயை நம
முக்திரூபிணியை நம
லாஸ்யப்பிரியாயை நம
லயகரியை நம
லஜ்ஜாயை நம
ரம்பாதி வந்திதாயை நம
பவதாவ ஸுதா விருஷ்டியை நம
பாபாரணிய தவானலாயை நம
தௌர்பாக்ய தூலவாதூலாயை நம
ஜராத்வாந்த ரவிப்ரபாயை நம
பாக்யாப்தி சந்திரிகாயை நம
பக்தசித்த கேகி கனாகனாயை நம
ரோகபர்வத தம்போளயே நம
மிருத்தியுதாரு குடாரிகாயை நம
மகேசுவரியை நமஃ (௭௫௦)
மகாகாளியை நம
மகாக்ராஸாயை நம
மகாசனாயை நம
அபர்ணாயை நம
சண்டிகாயை நம
சண்டமுண்டாசுர நிஷூதின்னியை நம
க்ஷராக்ஷராத்மிகாயை நம

ஓம்
சுாவலோகேசியை நமஃ
விஸ்வதாரிணணியை நம
த்ரிவர்க்க தாத்ரியை நம
சுபகாயை நம
திரியாமபிகாயை நம
திரிகுணாத்மிகாயை நம
ஸ்வாககாப வர்ககதாயை நம
சுத்தாயை நம
ஜெபாபுஷ்ப நிபாகிரதையை நம
ஓசோவதியை நம
தியுதிதாரயை நம
யக்ஞரூபாயை நம
பிரியவிரதாயை நம
துராராத்தியாயை நம
துராதர்ஷாயை நம
பாடவிகுசும பிரியாயை நம
மகதியை நம
மேருநிலயாயை நமஃ (எஎ௫)
மந்தாரகுசும பிரியாயை நம
வீராராதியாயை நம
விராட்ரூபாயை நம
விரஜஸே நம
விசுவதோமுகியை நம
பிரத்தியக் ரூபாயை நம
பராகாசாயை நம
பிராணரூபிணணியை நம
மார்த்தாண்ட பைரவாராத்தியாயை நம
மந்திரணீன்யஸ்தராஜ்ய துரே நம
திரிபுரேசியை நம
ஜயத்ஸேநாயை நம
நிஸ்திர குணயாயை நம
பராபரையை நம
ஸத்யஞானாநந்த ரூபாயை நம
ஸாமரஸ்ய பராயணாயை நம
கபர்தினியை நம
களாமாலாயை நம
காமதுகே நம
காமரூபிணணியை நம
களாநிதயே நம
காவ்யகளாயை நம
ரஸக்ஞாயை நம
ரஸசேவதாயை நமஃ (அ00)
புஷ்டாயை நம
புராதனாயை நம
பூஜ்யாயை நம
புஷ்கராயை நம
புஷ்கரேக்ஷணாயை நம
பரஸ்மை ஜோதிஷே நம
பரஸ்மைதாமே நம
பரமாணவே நம
பராத்பராயை நம
பாசஹஸ்தாயை நம

ஓம்
பாசஹந்த்ரியை நமஃ
பரமந்திர விபேதினியை நம
மூர்த்தாயை நம
அமூர்த்தாயை நம
அநித்ய திருப்தாயை நம
முனிமானஸ ஹம்ஸிகாயை நம
சத்ய விரதாயை நம
சத்ய ரூபாயை நம
சர்வாந்தர்யாமிணியை நம
சதியை நம
ப்ரஹ்மாணியை நம
ப்ரஹ்மணே நம
ஜநந்யை நம
பஹுரூபாயை நம
புதார்ச்சிதாயை நமஃ (அ௨௫)
பிரஸவித்ரியை நம
பிரசண்டாயை நம
ஆக்ஞாயை நம
பிரதிஷ்டாயை நம
பிரகடாக்ருதியை நம
பிராணேசுவரியை நம
பிராணதாத்ரியை நம
பஞ்சாசத் பீட ரூபிண்ணியை நம
விசிருங்கலாயை நம
விவிக்தஸ்தாயை நம
வீரமாதரே நம
வியத்பிரஸவே நம
முகுந்தாயை நம
முக்திநிலயாயை நம
மூலவிக்ரக ரூபிணணியை நம
பாவக்ஞாயை நம
பவரோககக்னியை நம
பவசக்ர பிரவர்த்தினியை நம
சந்தஸ்ஸாராயை நம
சாஸ்திரசாராயை நம
மந்திரசாராயை நம
தலோதர்யை நம
உதாரகீர்த்தியை நம
உத்தாம வைபவாயை நம
வர்ணரூபிண்ணியை நமஃ (அ௫௦)
ஜென்மம்ருத்யு ஜராதப்த ஜனவிச்ராந்தி
தாயிணியை நம
சர்வோபநிஷதுத்குஷ்டாயை நம
சாந்தியதீத களாத்மிகாயை நம
கம்பீராயை நம
ககநாந்தஸ்தாயை நம
கர்விதாயை நம
கானலோலுபாயை நம
கல்பனாரஹிதாயை நம
காஷ்டாயை நம
அகாந்தாயை நம
காந்தார்த்த விக்ரகாயை நம

ஓம்
லீலாவிநோதின்யை நமஃ
சுமங்கல்யை நம
சுககர்யை நம
சுவேஷாட்டியாயை நம
சுவாஸின்யை நம
சுவாஸின்யர்ச்சனப்ரீதாயை நம
சோபனாயை நம
சுத்தமானஸாயை நம
பிந்துதர்ப்பணஸந்துஷ்டாயை நம
பூர்வஜாயை நம
திரிபுராம்பிகாயை நமஃ (கூஎரு)
தசமுத்ராஸமாராத்யாயை நம
திரிபுரா ஸ்ரீவசங்கர்யை நம
ஞானமுத்ராயை நம
ஞானகம்யாயை நம
ஞானஜ்ஞேயஸ்வரூபிண்யை நம
யோனிமுத்ராயை நம
திரிகண்டேஸ்யை நம

ஓம்
திரிகுணாயை நமஃ
அம்பாயை நம
திரிகோணகாயை நம
அநகாயை நம
அற்புதசாரித்ராயை நம
வாஞ்சிதார்த்தப்ரதாயின்யை நம
அப்யாஸாதிசயஜ்ஞாதாயை நம
ஷடத்வாதீதரூபிண்யை நம
அவ்யாஜகருணாமூர்த்தியை நம
அஜ்ஞானத்வாந்ததீபிகாயை நம
ஆபாலகோபவிதிதாயை நம
ஸர்வானுல்லங்க்யசாஸனாயை நம
ஸ்ரீசக்ரராஜநிலயாயை நம
ஸ்ரீமத்திரிபுரசுந்தர்யை நம
ஸ்ரீசிவாயை நம
சிவசக்த்யைக்யரூபிண்யை நம
பரிபூரணியை நம
ஸ்ரீலலிதாம்பிகாயை நமஃ (க000)

செய்யுளிற் கண்ட திருநாமங்களையும் அநுவாதமுகத்தானே தழீச் சேர்த்துக் காட்டினோம். இத் திருநாமாவலியானது வடமொழிக்கணுள்ள ஸ்ரீபிரமாண்ட புராணத்திலே உத்தர காண்டத்திலே, அயக்கிரீவ அகத்திய சம்வாதத்திலே, ஸ்ரீலலிதா ரகசிய சகஸ்திர தோத்திர நாம முறைத்த அத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இத் திருநாம மந்திரங்களை நாடோறும் மெய்யன்புடன் பாராயணஞ் செய்வோரும், கேட்போரும், எழுதுவோரும், செபித்து மலர்கொண்டு அருச்சிப்போரும், கிரகங்கள், யமன், பேய், பூதம், திருடர், அரசர், விலங்கு, விஷசெந்துக்கள் முதலியவற்றான் வரும் துன்பங்களை யணுகப் பெறார்; தீராநோயும் நீங்கப் பெறுவர்; சத்துரு செயம் முதலிய மற்றைய பேறுகளையும் பெற்றுச் சிவசந்நிதி பாதமெய்தப் பெற்று, அருண்முத்தி யடைவர் என உண்மை நூல்கள் அறைகின்றன. (உச)

கலிவிருத்தம்.

குங்கும மெழுகிய கொம்மை வெம்முலை
மங்கையிப் பேருரு வொழித்து மாணுற
விங்குநின் னலனுரு வெடுத்தி யென்னலு
மங்கலுழ் மேனிதன் னுருவ மாயினாள்.

(இ-ள்) குங்குமம் மெழுகிய கொம்மை வெம் முலை மங்கை=செஞ்சாந்து பூசப்பெற்ற திரண்ட விரும்பப் படுகின்ற தனங்களையுடைய பரமேசுவரியே, இ பெரு உரு ஒழித்து=இந்த விசுவ ரூபத்தை விடுத்து, இங்கு மாண் உற நின் நல உரு எடுத்தி என்னலும்=இப்பொழுதே மாட்சிமை பொருந்தும் நினது அழகிய திருவடிவைக் கொண்டருளக் கடவாய் என்று பிரார்த்தித்தலும், தன்=(உரையசை) தனது, அம் கலுழ் மேனி உருவம் ஆயினள்=அழகு பொழியும் வடிவத்தைக் கொண்டனள். (உரு)

மைம்மெழுக் கெறிந்தென வளர்ந்த கூந்தலுங்
கொம்மைவெங் கதிர்முலைக் கோடு தாங்கலா
நம்மென லலமரு மிடையு மாந்தளிர்ச்
செம்மையி னங்கவாந் தொளிருஞ் செங்கையும்.

(இ-ள்) மை மெழுகுறு எழிற்று என = மையைக் கொண்டு மெழுகி விட்டாற் போல, வளர்ந்த கூந்தலும் = வளர்ந்து நீண்ட கூந்தலாகிய (மேகங்களையும்) கொட்டை வெம்முலை கோடு தாங்கலால் = இளமையாகிய விருப்பமுடைய குன்றுகளாகிய சிகரங்களையுஞ் சுமக்க வியலாமல், அம்ம என்று அலமரும் இடையும் = அம்மாவென்று சுழன்று வருந்தும் நுசுப்பினையும், மா தளிர் = மாந்தளிரினது, செம்மையின் அம் கவர்ந்து ஒளிரும் = செந்நிறத்தின் அழகினையுங் கொள்ளை கொண்டு விளங்காநின்ற, செய் கையும் = சிவந்த திருக்கரங்களையும்.

இது முதல் நான்கு செய்யுள் குளகம். கோடு என்பதனைக் கண் எண்ணும்மை தொக்கது. கூந்தலையும், தனங்களாகிய கொம்புகளைத் தரிக்க வியலாது வருந்தும் இடையினையும் எனக் கொள்ளலுமாம். அம்ம என்னும் இடைச்சொல் யாவர் கூறுகின்றதனைக் கேள் என்னும் பொருட்டில் வந்தது. அதனை "அம்ம கேட்பிக்கும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. எதிர்முகமாக்குஞ் சொல்லாயுங் கூறுப. (௨௬)

குழைமறிந் தருள்பொழி குவளை யொண்கணுங்
கழையுற ழிருந்தடந் தோளுங் கண்கவ
ரெழில்கனிந் தொழுகிய முகமு மீர்ங்கதிர்
பொழிதரு நித்திலம் பொருவு மூரலும்

(இ-ள்) குழை மறிந்து = காதளவு மோடிச் சென்று திரும்பி, அருள் பொழி குவளை ஒண் கணும் = கிருபையைப் பொழிகின்ற நீலோற்பல மலரை யொத்த திருவிழிகளையும், கழை உறழ் தடம் இரு தோளும் = மூங்கிலை நிகர்த்த பெருமையாகிய இரு புயங்களையும், கண் கவர் எழில் கனிந்து ஒழுகிய = (கண்டவரது) கண்களைக் கொள்ளை கொள்ளும் அழகு முதிர்ந்து பொங்குகின்ற, முகமும் = வதனத்தையும், ஈர் கதிர் பொழி தரு = குளிர்மையாகிய கிரணத்தைப் பொழிகின்ற, நித்திலம் பொருவும் மூரலும் = முத்துக்களைப் போலும் பற்களையும் (௨௭)

தவளையங் கிண்கிணித் தாளு மெல்லிதழ்க்
குவளையின் மணங்கமழ் கோல மேனியும்
பவளவார் கடிகைமெல் லிதழும் பன்மணி
திவள்கதிர் மேகலை திளைக்கு மல்குலும்.

(இ-ள்) தவளை அம் கிண்கிணி தாளும் = தவளைபோல (ஒலிக்கின்ற) அழகிய கிண்கிணியைத் தரித்த பாதங்களையும், மெல் இதழ் குவளையின் மணம் கமழ் = மெல்லிய ஏடுகளையுடைய நீலோற்பல மலரினது வாசனையை வீசுகின்ற, கோலம் மேனியும் = திருமேனியையும், வார் பவளம் கடிகை மெல் இதழும் = ஒழுங்காகிய பவளத் துண்டங்களை நிகர்த்த மென்மையாகிய அதரங்களையும், பல் மணி திவள் மணி மேகலை = பல இரத்தினங்கள் சேர்ந்த மேகலாபரணத்தை, திளைக்கும் அல்குலும் = அணிந்த நிதம்பத்தையும்.

தவளைபோன் றொலித்தலின் "தவளையங் கிண்கிணி" என்றான். கிண்கிணி = கிணகிண என்று ஒலிப்பது. மேகலை - எண்கோவை மணி, மேகலா என்னும் வடமொழித் திரிபு. திவள்கதிர் என்பதற்கு விட்டுவிட்டொளிரும் கிரணமெனலுமாம். (௨௮)

ஆயநல் லுருவினை யன்பி னோக்குறு
மீயுயர் பனிவரை வேந்தன் காதலி
னேயவ ளொடுமுழு துலகு மீன்றரு
டாயிரு சேவடி தாழ்ந்து கூறுவான்.

(இ-ள்) நீடு உயர் பனிவரை வேந்தன் = ஆகாயத்தை (அளாவி) உயர்ந்த இமய மலை யரசனுடைய, ஆய நல உருவினை அன்பின் நோக்கு உறு = (இவ்வாறு) உடையவளாய தேவியின் அழகிய வடிவத்தைப் பத்தியுடனே தரிசித்து, காதலின் ஏய அன்பு ஓடு = விருப்பத்தாலாகிய அன்புடனே, உலகு முழுதும் ஈன்று அருள் தாய் = உலக மெல்லாவற்றையும் பெற்றருளிய மாதா வாகிய, சே இரு அடி தாழ்ந்து கூறுவான் = செவ்விய இருபாதங்களையும் வணங்கிச் சொல்வான. (உகூ)

வருபிர தானநற் புருடன் மானுறத்
தெரிதருங் கானமலர்க் கடவுள் செய்யகண்மால்
பொருவருங் காலநல் லுயிர்கள் புங்கவ
ரரிவைநீ யளித்தன வாகு மென்பரால்

(இ-ள்) அரிவை = தேவியே, வரு பிரதானம் = (பிரபஞ்சங்களைத்) தோற்றுவிக்கும் பிரகிருதி மாயையும், நல புருடன் = நன்மையாகிய புருடதத்துவமும், மான் உற தெரி தரும் கான மலர் கடவுள் = அழகுண்டாகும்படி ஆராயப்படுகின்ற வாசனை பொருந்திய தாமரைப் புட்பத்தினை கண் வீற்றிருக்கின்ற பிரமனும், செய்ய கண் மால் = சிவந்த கண்களை யுடைய திருமாலும், பொரு அரு காலம் = ஒப்பில்லாத காலப் பகுதிகளும், நல உயிர்கள் = சிறந்த ஆன்மாக்களும், புங்கவர் = தேவர்களும் (ஆகிய இவைகள் எல்லாம்) நீ அளித்தன ஆகும் என்பர் = நீ சிருட்டித்தவைகளாகுமென்று (மேலோர்) கூறுவார். (௩0)

பேதமா யபேதமாய்ப் பேதம் யாவையுந்
தீதறப் பரித்திடுஞ் செல்வி நீயுனைக்
காதலின் மகேசுரன் கலந்தி டானெனி
லோதுமிவ் வுலகெலாம் படைக்க வொண்ணுமே

(இ-ள்) பேதம் ஆய் = வேறுமாயும், அபேதம் ஆய் = அபின்னமாயும், பேதம் யாவையும் = பேதப்பட்ட சராசரங்களை யெல்லாம், தீது அற பரித்திடும் செல்வி நீ = கேடு நீங்கத் தாங்குகின்ற ஈசுவரி நீயே யாகும், மகேசுரன் = மகேசுரமூர்த்தியானவர், காதலின் உனை கலந்திடான் எனில் = விருப்புடனே நின்னைச் சேராது விடுவாராயின், ஓதும் இ உலகு எலாம் = சொல்லப்படுகின்ற இவ்வுலகங்களை யெல்லாம், படைக்க ஒண்ணுமே = (அவரால்) சிருட்டித்தல் கூடுமோ? (கூடாதென்றபடி)

ஏகாரம் வினாப்பொருளில் வந்தது. மகேசுரன் கலந்தலாவது அவ்வியத்த சத்தியைப் பொருந்தி நிற்றல். சத்தி கூடாக்கால் சிருட்டி முதலிய கிருத்தியங்க ளில்லையென்றபடி. அதனை "சிவமெனும் பொருளு மாதி சத்தியொடு சேரி னெத்தொழிலும் வல்லதா-மிவள்பிரிந்திடி னியங்குதற்கு மரிதரிதெனுமறை யிரைக்குமா-லவமெ ருப்புவன மெவ்வகைத்தொழி னடத்தி யாவரும் வழுத்துதா-ளவனி யின்கணொரு தவமி லாதவர் பணிய லாவதோ பரவ லாவதோ" என சௌந்தரியலகரிச் செய்யுளானு மறிக. (௩க)

## அறுசீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

உயர்வா னவரி லிந்திரனீ யோதும் பிரம வாதிகளிற்
செயிர்தீர் கமலப் புத்தேணீ மொய்ம்பு ளவற்றிற் றிகழ்வளிநீ
பயிலும் யோகப் பணியினிற் சனற்கு மார னீபரத்தின்
முயலு மறைதோர் முனிவரரி லருள்கூர் வசிட்ட முனிவரனீ.

(இ-ள்) உயர் வானவரில் இந்திரன் நீ = (அம்பிகாய) மேலாய தேவர்களுக்குள் இந்திரன் நீயே, ஓதும் பிரம ஆதிகளில் = (வேதத்தை) அத்தியயனஞ் செய்யும் பிரமா முதலாயினோரில், செயிர் தீர் கமலம் புத்தேள் நீ = குற்றமற்ற தாமரை மலராசன ஞகிய பிரமனீயே யாகும், மொய்ம்பு உள்ளவற்றில் திகழ் வளி நீ = வலிமையுள்ள பொருள்க ளுள் (எங்கும்) விளங்கும் வாயு நீயே யாகும், பயிலும் யோகம் பண்ணினரில் = பழக்கஞ் செய்யும் யோகமாட்சியார்களுக்குள், சனற்குமாரன் நீ=சனற்குமார முனிவர் நீயேயாகும், பரத்தின் முயலும் மறை தேர் முனிவரில் = மறுமைப் பயனை அடைவதிற் பிரயத்தனப் படும் வேத வாராய்ச்சி யுள்ள இருடியர்களுக்குள், வசிட்ட முனிவரன் நீ = வசிட்டன் என்னு நாமமுடைய இருடி சிரேட்டன் நீயேயாகும்

வானவர் = ஆகாய வாசிகள் இந்திரன் = மேலாய செல்வ முடையவன். புத்தேள்=விசேட புத்தியை யுடையவன் வளி = வலிமையை யுடையது. பிரம ஆதிகளில் என்றது அவன் புத்திரர்களாகிய பிரமாக்களை யன்றி, ஒவ்வோர் அண்டங்கடோறும் ஒவ்வோர் பிரமரிருத்தலானும், அவர்களுள் திருமாலி னுந்திக் கமலத்திருக்கும் பிரமனே விசேட முடையான் என்பதை விளக்கியதெனக் கொள்க. அனந்தம் பிரமா இருப்பதனை "தொழுவார்க ளினைய மாற்றஞ் சொற்றலுஞ் சூரன் கேளா - விழுமிது விழுமி தென்னு வெய்துயிர்ப் பெய்திச் சீறி-யழலெழ நகைத்து மற்றை யண்டத்தி னிருந்து நல்குஞ் - செழுமலரயனைப் பற்றிச் செல்லுமின் வல்லை யென்றான். என்பவருங் கந்தபுராணச் செய்யுள்களானுணர்க (௯௨)

சாற்று மறைதேர் முனிவரரில் வியாதனீநற் சாங்கியரிற்
போற்றுங் கபில முனிவரனீ புலவுக் கணிச்சி யுருத்திரரி
லாற்றல் சான்ற சங்கரனீ யாதித் தியரி லுபேந்திரனீ
மாற்றற் கரிதா முயர்சீர்த்தி வசுக்க டமமிற் பாவகனீ.

(இ-ள்) சாற்றும் மறை தேர் முனிவரரில்=சொல்லப்பட்ட வேதங்களை யறிந்தமுனி சிரேட்டர்களுள், வியாதன் நீ=வியாத முனிவன் நீயே யாகும், நல் சாங்கியரில்=நல்ல சாங்கியர்களுக்குள், போற்றும் கபில முனிவரன் நீ=உலகரால் புகழப் படுகின்ற கபிலன் என்னும் இருடி சிரேட்டன் நீயேயாகும், புலவு கணிச்சி உருத்திரரில்=புலால் மணங்கமழும் மழுப்படை தரித்த உருத்திரர்களுக்குள், ஆற்றல் சான்ற சங்கரன் நீ=வலிமை மிக்க சங்கரன் நீயே யாகும், ஆதித்தியரில் உபேந்திரன் நீ=அதிதிபுத்திரர்களுள் வாமனன் நீயே யாகும், மாற்றற்கு அரிது ஆம் உயர் சீர்த்தி வசுக்கள் தமமில் = நீக்குதற்கரிதாய பெருமையை யுடைய வசுக்களுக்குள், பாவகன் நீ=பாவகன் நீயே யாகும்

சாங்கியம், நிரீச்சுர சாங்கியம் ஈச்சுர சாங்கியம் என இருவகைத்து எண்டுக் கூறப்பட்டது கபில முனிவனாற் சொல்லப்பட்ட நிரீச்சுர சாங்கியமாம். இது கபில மதம் எனவும் படும். அதன் சங்கற்பமாவது, பிரகிருதி மாயையானது மூலம், புரியட்டகம், விகிருதி யென மூவகைத்தாகி, தூலமாகியுஞ் சூக்குமமாகியும் பரமாகியும் நிற்கும் புமானாகிய சுத்த புருடன் பாலன் போல அறியாமையைப் பொருந்திப் பிரபஞ்சமும் யோனி பேதங்களும் நானென விரிந்து நின்றவிடத்துத் தனக்கு விவேக ஞானந்தோன்றி அவையெல்லாம் பிரகிருதி மாயைக்குள்ளதன்றித் தனக்குள்ள தன்றென்று அறிவானாயின் பிரபஞ்ச வியாபாரம் நீங்கு மென்றும், அப்போது புருடன் வேறற்று நிற்பதுவே முத்தியென்றுங் கொள்ளுவதாம். திதியின் புத்திரர் தைத்தியர் என்றாற்போல, அதிதியின் புத்திரர் ஆத்தியர் எனத் தத்திதாந்த பதம் உபேந்திரன்=இரண்டாம் இந்திரன், அவன் திருமாலி னவதாரத்து ளொன்றாய வாமனன் என்க விஷ்ணு என்னுஞ் சூரியனைக் கொள்வாரு முளர் (௯௩)

தவலின் மறையிற் சாமநீ சந்தச் சினிற்சா வித்திரிநீ
நவிலும் விச்சை தனிற்பிரம விச்சை நீநற் சத்திகளி
னுவலற் கரிய மாயைநீ வருணத் தனினூன் மறையோனீ
யெவரும் விரும்பு மாச்சிரம நான்கி னில்வாழ் வுடையோனீ.

(இ-ள்.) தவல் இல் மறையில் = தவறுதலில்லாத வேதங்களுள், சாமம் நீ = சாமவேதம் நீயே யாகும், சந்தசினில் சாவித்திரி நீ = சந்தசுகளுட் சாவித்திரி நீயே யாகும், நவிலும் விச்சை தனில் = சொல்லப்படாநின்ற வித்தைகளுள், பிரமவிச்சை நீ = பிரமவித்தை நீயேயாகும், நல் சத்திகளில் = நல்ல சத்திகளுக்குள், நுவலற்கு அரிய மாயை நீ = சொல்லற்கரிய மாயா சத்தி நீயே யாகும், வருணத்தில் = வருணங்களுள், நூல் மறையோன் நீ = பூணூல் தரித்த பிராமணனீயே யாகும், எவரும் விரும்பும் ஆச்சிரமம் நான்கின் = யாவராலும் இச்சிக்கப்படுகின்ற ஆச்சிரம நான்கனுள், இல் வாழ்வு உடையோன் நீ = கிருகஸ்தாச்சிரமி நீயே யாகும். (௫௪)

ஈசர் தம்மின் மகேசுரனீ புருடர் தம்மி லீர்ந் துளவோனீ
யாசின் றுயர்ந்த கற்பத்தி லருளீ சான கற்பநீ
பேசு முகத்தி லாதியுக நீபே ரொளியிற் கதிரோனீ
மாசில் கவியிற் பாரதிநீ மாயா விகளின் மாதவனீ.

(இ-ள்) ஈசர் தம்மில் மகேசுரன் நீ = தேவர்களுள்ளே மகேசுரமூர்த்தி நீயே யாகும், புருடர் தம்மில் = புருடர்களுள், ஈர் துளவோன் நீ = குளிர்மையாகிய துழாய் மாலையை யணிந்த திருமால் நீயே, ஆசு இன்று உயர்ந்த கற்பத்தில் = குற்றமில்லாமல் மேலாயிருக்கின்ற கற்பகாலங்களுள், அருள் ஈசான கற்பம் நீ = கிருபை பொருந்திய ஈசான கற்பம் நீயே, பேசும் உகத்தில் ஆதி யுகம் நீ = (நான்காகச்) சொல்லப்படும் யுகங்களுள் கிருதயுகம் நீயே, பெரு ஒளியில் கதிரோன் நீ = பெரிய (ஆகாய) சோதிகளுட் சூரியன் நீயே, மாசு இல் கவியில் பாரதி நீ = குற்றமற்ற பாவலருட் சரசுவதி நீயே, மாயாவிகளின் மாதவன் நீ = மாயையில் வல்லாருள் திருமால் நீயே யாகும்.

புருடர்களுட் சிறந்தவன் திருமால் என்றது சிவபெருமானுக்கு ஆண் சத்தியா யிருத்த னோக்கியாம். கதிரோன் = கிரணங்களை யுடையவன். பாரதி = பாவிற் பிரியமுடையவள், பரத முனிவரால் கொண்டு வரப்பட்டவள். கவி ஆகுபெயர். (௫௫)

கற்பு ளாரி லருந்ததிநீ பறவை களில்வெங் கலுழனீ
வெற்பி லுயர்ந்த பொலங்கிரிநீ வெவ்வா யரவி லனந்தனீ
யற்பி னிற்ப நடப்பவைக ளனைத்து நீமற் றாதலினாற்
சிற்ப மாகிப் பெரிதாகிச் செறிந்த பிரம நீயாமால்.

(இ-ள்) கற்பு உளாரில் அருந்ததி நீ = கற்புடைய மாதர்களுள் அருந்ததி தேவி நீயே, பறவைகளில் வெம் கலுழன் நீ = புட்குலங்களுள் வெவ்விய கருடனீயே, வெற்பில் உயர்ந்த பொலம் கிரி நீ = மலைகளுள் உயர்ந்த மகாமேருமலை நீயே, வெம் வாய அரவில் அனந்தன் நீ = கொடிய வாயினையுடைய சர்ப்பங்களுள் ஆதிசேடனீயே, அற்பின் நிற்ப நடப்பவைகள் அனைத்தும் நீ = அன்புடன் நிற்பனவும் நடப்பனவுமாகிய சராசரப் பொருள்களெல்லாம் நீயே, ஆதலினால் = ஆகிய காரணத்தால், சிற்பம் ஆகி = சொற்பம் (சிறிது) ஆகியும், பெரிது ஆகி = பெரிய பொருளாகியும், செறிந்த = சிறிதும் பெரிது மாகியும் வியாபித்த, பிரமம் நீ ஆம் = பிரமப் பொருளும் நீயே யாகும். ஆல்-அசை. (௫௬)

என்று மிருகைம் மலர்கூப்பி யிதய நெகிழக் கணபனிபபத்
தன்னுத் தழும்ப நின்றேத்திப புவன மனைத்துந் தனியீன்ற
வின்னைப் பயந்த மேனைக்கு மெனக்கு நிகரா ரெனவியந்து
பொன்னார் கமலச் சேவடிகள் போற்றுந் நந்தைக் கிவைபுகல்வாள்.

(இ-ள்) என்று=என்றிவ்வாறுகூறி, இரு கை மலர் கூப்பி=இரண்டு கைகளாகிய புட்பங்களை முகிழ்த்து, இதயம் நெகிழ=மனமிளகி யுருக, கண பனிப்ப=கண்கள் ஆனந்த பாஷ்பஞ் சிந்த, தன் நா தழும்ப=தனது நாத்தழும்பப்பட, நின்று ஏத்தி=நின்று துதித்து, புவனம் அனைத்தும் தனி ஈன்ற = உலகங்களெல்லாவற்றையும் பொதுவின்றிப் பெற்ற, நின்னை பயந்த மேனைக்கும் எனக்கும் = உன்னைப் (புத்திரியாகப்) பெற்ற மேனையாகிய, என்மனைவிக்கும் எனக்கும், நிகர் ஆர் என வியந்து=ஒப்பானவர் யாவர் என்று புகழ்ந்து, பொன் ஆர் கமலம் சே அடிகள்=பொன் போன்ற அரிய சிவந்த திருவடிகளை, போற்றும் நந்தைக்கு=துதித்த பிதாவாகிய மலையரசனுக்கு, இவை புகல்வாள் = இவற்றைச் சொல்லுவாளாயினள் (கஎ)

புரியுங் கருமப் பலனவிழையா துள்ளம் புனித மாய்நாளு
மரிய மகங்க ணனிதாற்றி யென்னை யினிதி னடிபோற்றிக்
கருதற் கரிதா முத்திநினக் களிப்ப லெனக் கருணையொடும்
வரமாணடளித்து மீண்டுளம் மகிழ்ச்சி கூர்ந்திவ் விவைபுகல்வாள்.

(இ-ள்) உள்ளம் புனிதம் ஆய்= (நீ) மனஞ் சுத்த முற்று, புரியும் கருமம் பலன விழையாது = செய்கின்ற கிரியைகளுக்கு வரும் பிரயோசனத்தை விரும்பாமல், நாளும் அரிய மகங்கள் நனி ஆற்றி = நாடோறுஞ் சிறந்த அக்கினி காரியங்களை மிகவுஞ் செய்து, என்னை இனிதின் அடி போற்றின்= என்னை, இயானித்து அன்புடன் பாதங்களையும் துதித் தால், கருதற்கு அரிது ஆம் முத்தி=சிந்தையால் நினைத்தற்கு மரியதாய வீட்டின்பத்தை, நினக்கு அளிப்பல் என்ன—உனக்குக் கொடுப்பேன் என்று, நண்டு கருணை ஒடு வரமும் அளித்து = அப்பொழுதே கிருபையுடன் வரத்தையுங் கொடுத்து, மீண்டும் = பின்னரும், உளம் மகிழ்ச்சி கூர்ந்து=மனத்தில் உவகை சிறந்து,இவை புகல்வாள்=இவற்றைச் சொல் லுவாள் (கஅ)

அருமா மறைகண் முழுவதுமென் சத்தி யாகு மாங்கவைக
டிருமா லுந்தித் தடம்பூத்த செல்வன் முன்னைப் படைப்பதனி
லொருநான் மறையாம் பெயரோடு நடக்கு மந்நூல் வழியொழுகார்
மருவார் முத்தி வீடதனின் மம்ம ருறுநூல் வலைப்பட்டே.

(இ-ள்) அரு மா மறைகள் முழுவதும்=அரிய சிறந்த வேதங்க ளெல்லாம், என் சத்தி ஆகும் = எனது சக்திகளேயாகும், அவைகள் = அவ் வேதங்கள், திருமால் உந்தி தடம் பூத்த செல்வன்=விட்டுணு மூர்த்தியின் திருவுந்தித் தடாகத்தினின்றுந் தோன்றிய கமலாசனனது, முன்னை படைப்பு அதனில்=பிரமசிருட்டி காலத்திலே, ஒரு நால் மறை ஆம் பெயர் ஓடு நடக்கும் = ஒப்பற்ற நான்கு வேதமாகிய தொகையும் பெயருமாகப் பொருந்தி யோதப்படும், அ நூல் வழி ஒழுகார்=அந்த வேத நூல்களில் (விதிக்கப்பட்ட) ஒழுக்க நெறியினின்று ஒழுகாதவர்,மம்மர் உறு நூல் வலை பட்டு=மயக்கமுள்ள மற்றைய நூல்களாகிய வலையில் அகப்பட்டு, முத்தி வீடு அதனின் மருவார் = முத்தி யாகிய பேரின் பத்தை யடையமாட்டார் ஆங்கு - உரையசை யிடைச்சொல் (ககூ)

வேத வொழுக்க மிகழ்ந்துபுலரா விரகி னறம்போற் றனிபுனையுங்
கீது நூலின் வழிசென்றோர் செல்வர் நரகாங் கதிதிகளா

யாதனைனுஞ் புன்சமயங் கற்றோர் முகத்தினை யருமறைக
ளோதி யுணர்ந்த முதுக்குறைவி னுரவோர் சிறிது நோக்காரால்.

(இ-ள்) புல்லர் = அறிவீனர்கள், வேதம் ஒழுக்கம் மிக இகழ்ந்து = வேதங்களையும் (அவற்றிற்) கூறப்பட்ட நல்லொழுக்கங்களையும் நிந்தித்து, விரகினை = (தத்தம் மனக்) கருத்தின்படி, அறம் போல தனி புனையும் = தருமமார்க்கம்போலப் பொதுவின்றிச் செய்த, தீநூலின் வழி சென்றோர் = தீமையைத் தரும் பொய்ந்நூலினது நெறியினின்று ஒழுகினோர், நரகர்க்கு அதிதிகள் ஆய செல்வர் = நரகமாக்கட்கு விருந்தினராகிப் போய (வேதனையை) புசிப்பார்கள், ஆதல் தனால் = ஆதலினால், புன்சமயம் கற்றோர் முகத்தினை = இழிந்த சமயங்களிற் பயின்று நிற்பவரது முகத்தை யாயினும், அருமறைகள் ஓதி உணர்ந்த முதுக்குறைவின் உரவோர் = அரிய வேதங்களை (ஆசிரியனிடம்) கற்றறிந்த பேரறிவினை யுடைய பெரியோர், சிறிதும் நோக்கார் = சிறிதேனும் பார்க்கவும் மாட்டார்.

சமயங்கள் புறப்புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம் என நான்கு வகைப்படும். புறப்புறச்சமயம் உலோகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமிகம், வைபாடிகம், ஆருகதம் என அறுவகைப்படும். இவற்றுள் ஆருகதர் நிகண்டவாதி, ஆசீவகர் என இருவகைப்படுவர். புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என அறுவகைப்படும். அகப்புறச் சமயங்கள் சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம் என அறுவகைப்படும். அகச்சமயம் பாடாணவாத சைவம், சங்கிராந்தவாத சைவம், அவிகாரவாத சைவம், பரிணாமவாத சைவம், சுத்தசைவம், பேதசைவம் என அறுவகைப்படும். இவற்றுள் புறப்புறம் புறம் என்னுஞ் சமயங்களும் நூல்களுமே யீண்டு தீநூல் எனவும், புன் சமயம் எனவும் புகலப்பட்டன. "தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற - தீயார்சொற் கேட்பதுவுந் தீதே" என வரூஉந் தெய்வப் புலமை ஒளவையார் திருவாக்கானே, தீயாரைச் சேர்தல் முதலியன வன்றி யவரைக் காண்டலுந் தீமை பயப்பதாதலின், "புன்சமயங் கற்றோர் முகத்தினை—உரவோர் சிறிது நோக்காரால்" என்று கூறப்பட்டது. (௬௦)

சாறுவாகம் பாகரமுஞ் சாற்றும் பாஞ்சராத்திரநூன்
மாறு செய்யும் பாட்டமுள மயக்கச் செய்த நூலாருந்
தேறி யிந்நூற் படிநின்றோ ரிவற்றை யுலகிற் செப்புவோர்
பாறு தொடரு நரகவற்றி னளப்பில் காலம் படிந்திடுவார்.

(இ-ள்) சாறுவாகம் பாகரமும் = உலோகாயதமும் பிரபாகரமும், சாற்றும் பாஞ்சராத்திரம் = சொல்லப்பட்ட பாஞ்சராத்திரமும், நூல் மாறு செய்யும் பாட்டம் உள = நூலை மாறாகக்கொண்டு செய்த பாட்டமும் முதலாக வுள்ளனவாய சமய நூல்கள், மயக்க செய்த நூலாரும் = உலகங்களை மயக்குமாறு செய்யப்பட்ட நூல்களாரும், இந்நூல் தேறி படி நின்றோர் = இந்நூல்களிற் பயின்று தெளிவடைந்து (உண்மையெனக் கொண்டு) அவற்றின்படி நின்றவரும், இவற்றை உலகில் செப்புவோர் = இவைகளை உலகர்க்கு எடுத்துப் போதிப்பவரும், பாறு தொடரும் நரகு அவற்றின் = பருந்துகள் மொய்க்கின்ற நரகங்களிலே, அளப்பு இல் காலம் படிந்திடுவார் = எண்ணில்லாத காலங் கிடந்து வருந்துவர்.

சாறுவாகம் எனினும், சார்வாகம் எனினும், உலோகாயதம் எனினும் ஒக்கும். அஃது இந்திரனானவன் காலந்தோறும் அசுரரால் படுந்துன்பங்களை நினைந்து, அழிதன் பாலவாய சுவர்க்க போகங்களை விரும்பாது சிந்தையு நிலையுஞ் செல்லா நிலைமைத்தாய அநுத்தமின்பத் தழிவில் வீட்டை யடைவான் வேண்டித் துறவுறுங்காலை, இந்திர புரோ

கிதனீதறிந்து, தனஞ்சயன் றவம்புரிய வாசுதேவனை வையக்கணிருந்து கீதை யொன்றனை யோதி மயக்கிக் கொலலுவித்ததற் கொப்பப் போகமே முத்தியென்ப புரிவித்து மயக்கில் வீழ்த்தச் செய்த மதமாம் அதனை "மறுத்தனன் சசியுடன் வைகும் வாழ்க்கையை-வெறுத்தனன் வெறுக்கையை வேந்தி யற்கையுஞ்-செறுத்தனன் றவத்திருஞ் சோவன் வீடெனுந்-துறத்தலை யுன்னினன் றறக்க வேயினுன் இந்திர னிபற்கைப யெண்ணி வானவா-மந்திரி யாகியு மன்ன னாகியு - மந்தண னாகியு மமரும் பொன்னவன் - புந்தியி லீதொரு புணர்ப்பை யுன்னினன் புன்மொழி லாகிய பொய்யும் வாய்மையா - மொன்மொரு பெரும்பய னுதவு மாயிடை-யென்றனா சுரகுரு விந்தி ரன்பத - நின்றிட வீதொரு நிகழ்ச்சி கூறுவான" எனவரும் **கந்தபுராணச்** செய்யுளா னறிக இதற்கு நால் மதனுகம் மாம்

ஆகவே, சார்வாக மதமாவது மனக்காட்சி, ஐயக்காட்சி, வாயிற்காட்சி, விகற்பக் காட்சி, அனவயக்காட்சி, திரிவுகாட்சி, வெதிரேகக் காட்சி என அளவை அறுவகைத்தாக கோடல் வேண்டும் எனவும், இவ் வறுவகை யானும் இவற்றின் விகற்பத்தானும் கண்டு கைக்கொண்ட பொருள் பூதங்கள் நான்கே எனவும், தெய்வமாகத்தொழும் இவை நான்கும் அழியா வியல்பினை யுடையன வெனவும், இவற்றின் சொரூபங்களுங் குணங்களுந் தம்மி லொத்துக் கூடுகிற கூட்டத்தானே பலவுருக்கள் தோன்றும் எனவும், புத்தி குணம் இந்திரியம் விடயம் என்பன நீரிலெழுங் குமிழிபோல உருக்களி னின்றுந் தோன்றுமெனவும், பூதமே தெய்வம், அப் பூதக் கூட்டத்தின் மிகுதி குறைவே காமம், அவற்று ளிகழ்முணர்வே ஆன்மா, இவையன்றித் தெய்வமுங் கன்மமும் ஆன்மாவும் வேறில்லையெனவும், பூமியிலே மெய்யாகப் பெண்கள் போகத்தைக் கண்டும் அதனை யநுபவிக்காது சுவர்க்க முத்தி யொன்றுண்டென்று தவங்கிடந்து நடுமாறுவா ரியாரும், தாகித்த விடத்திற்றனே நீரிருக்கவும் அதனை யுண்ணாது, தூரத்தில் ஒருவன் உண்டெனக் கூறிய நீரை யருந்த விரும்பிச் சென்று, வழியிற் றடுமாறித் துன்புறுவாரை யொப்பார் எனவும், கொலை களவாதி கொள்ளத் தக்கன வென்றும், மாதரோடிறங்காது கூடி வாழ்தலே பேரின்ப மெனவும், தையலார் பாதத்தைத் தலையிற் சூட்டலே தவம் எனவும், அலகுற நடந்தின முழ்கிச் செவ்வா யமுதுண்டு அவர் நோன்மீ தணைதலே முத்திச் செல்வம் எனவும், அதனை விடுத்து மறுமை யென்று கூறல் மயக்கு எனவுங் கொள்ளுவ தென்க

பிரபாகர மென்பது பாகரமென நின்றது பிரபாகரன் என்பவனாற் சொல்லப் பட்டமையின் பிரபாகரம் எனும் பெயர்த்து அஃதாவது அரிதாகச் செய்யுஞ் சோதிட்டோமமுதலிய கன்மத்தை யொழிந்த விடத்திலே அபூர்வமென்பது தோன்றி, அறிவு கூடி நின்று தொழிற்பட்டுக் கன்ம முடிந்த போது தொழிலொன்று மின்றி, மண்போலவுங் கல்லும் போலவு மிருப்பதே முத்தி யெனக் கொள்வதாம்.

சோமுகாசுரன் என்பவன் பிரமனது கரங்களிலிருந்த வேதங்களை யெல்லாங் கவர்ந்து சென்று கடலி லொளிப்ப, அவ்வமர தேவர் முனிவரும் இரங்கி வேண்டத் திருமால் மச்சவடிவு கொண்டு அவனைக் கொன்று கொண்டு வருதற்கு முன்னரே காமசிமித்தும் அவ்வேதங்களின் கருத்தை யெல்லாம் நமக்குச்சொல்லினரே னென்று ஐந்திரவினைக் கணவனாற் கூறப்பட்டமையின் பாஞ்சராத்திரம் எனும் பெயர்த்து அஃதாவது இருபத்தைந்தாந் தத்துவமாக நிற்பவன் வாசுதேவன் எனவும், அவனே கடவுள் எனவும், அவன் றன் னிச்சைப் படியே உருவு கொண்டும், யோகநித்திரை செய்தும், இரட்சிப்பானெனவும், அநாதியாகிய வேதமு மவனா லருளப்பட்ட தெனவும், சிருட்டி காரணமாகத் தனது திருவுந்தியி னின்று பிரமனையும், அவன் முகத்திலிருந்து உருத்திரனையுந் தோற்றுவிப்பன் எனவும், தசாவதாரங்களை யெடுத்து உயிர்களைக் காப்பவனும், ஆதிமூலமே என்ற யானையை யிரட்சித்தவனும், முதலைக்கும் வைகுண்டபத மருளினவனும், கடல் கடைந்து அமுதளித்தவனும் அப்பரமபுருடனே யெனவும், பதிவிரதையைப் போல மற்றொரு தெய

வத்தை நீங்கியாமல் அவனை யன்புடன் வழிபடின் மாயையகலு மெனவும், அஃதகன்றால் அவனை விரசை யாற்றினிடத்ததாகிய நன்னீராலே ஆன்மாவைச் சுத்த மாக்கி வைகுண்டத்திலே சாரூபியமாக வைப்பனெனவுங் கூறுமாக்கமாம்

பாட்டம் = பட்டாசாரியனாற் பாட்டமாகச் சொல்லப்பட்ட தாகலின் இப் பெயர்த்து அஃதாவது ஆன்மாக்களுக்கு அநாதியே காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் இடும்பை யென்னுங் குணங்கள் கூடியிருக்கு மெனவும், இக்குணங்கள் ஆன்மாவுக்கு அறிவைத் தருமாயின் வேதவசனத்தாற் பிரயோசன மில்லை யெனவும், கற்ற நூல் எவ்வளவோ அவ்வளவே யறிவு முண்டாம் எனவும், ஆதலாற் கல்வியில்லார் பாலரென்றும் ஊமையர் என்றுங் கூறப்படுவார் எனவும், வேதஞ் சொற்ற கர்த்தா ஆன்மத் தன்மையன் எனவும், வேதம் சுயம்பு வெனவும், அது சொன்னபடி கன்மத்தைச் செய்யின் பாச நீங்கி முத்திகிடைக்கும் எனவும், பிரபஞ்சம் என்று முள்ள தெனவும், ஆன்மா அழிவில்லாததாய், நிறை வுடைத்தாய், அருவமாய், கன்மத்துக் கேற்கச் சரீரம் பெற்று அநுபவிக்குமெனவும், சந்தியா வந்தனம், காயத்திரி செப முதலியனவற்றைத் தக்கபடி செய்தார் நன்மையினையும், இச்சா கன்மமாகிய வைசுவதேவபலி கரணாதிகளைச் செய்தார் இட்ட சித்தி யினையும், சோமயாக முதலியவற்றைச் செய்தார் வீட்டின்பத்தை யும் அடைவர் எனவுங் கூறு மாக்கமாம். இவை **பரபக்கத்திற்** கண்டது. (சுக)

வேத நூல்க ளவற்றின்வழி விராட்டாஞ் சுவாயம் புமநுமுன
னோது நூல்கள் வியாதமுனி யுரைத்த நூல்க ளவற்றின்வழி
தீதி லருமா மறைக்கிழவர் செப்பு நூல்க ளனைத்துமே
நீதி நூல்க ளவற்றின்வழி நின்றோர் நெறியி னின்றோரே.

(இ-ள்) நீதி நூல்கள் = நியாயமான நூல்கள் (எவை யெனில்) வேதம் நூல்கள் = வேத சிவாகமங்களாகிய முதனூல்களும், அவற்றின் வழி = அவைகளின் வழிநூலாக, விராட்டு ஆம் சுவாயம்பு மநு = விராட்டு ஆகிய சுவாயம்பு மநுவேந்தன், ஓதும் முன் நூல்கள் = சொல்லிய மநுமிருதியை முதலாக வுடைய தரும சாத்திரங்களும், வியாதமுனி உரைத்த நூல்கள் = வியாசமுனிவர் சொல்லிய (பதினெண்) புராண நூல்களும், அவற்றின் வழி = அவைகளின் வழியாக, தீது இல அருமா மறை கிழவர் = தீவினையில்லாத அரிய பெரிய வேதங்களையறிந்த மறைமுனிவர்கள், செப்பு நூல்கள் அனைத்துமே = சொல்லிய (உபாகம உபபுராண முதலிய) நூல்கள் யாவுமேயாம், அவற்றின் வழி நின்றோர் = அந் நூல்களிற் (கூறப்பட்ட) ஒழுக்க வழியி னின்றவரே, நெறியில் நின்றோர் = நன்னெறியில் நின்றவர் எனப்படுவர்

வேத நூல்கள் எனப் பன்மை கொடுத்தோதினமையிற் சிவாகமங்களையுஞ் சேர்த் துரைத்தாம் என்னை? அவையிரண்டும் பொது சிறப்பெனப்பட்டு இறைவனருளப்பட்டு முதனூல்களாய சிறப்பின் என்க. இதனை "வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க - ளாதிநூ லநாதி யமலன்றருநூ லிரண்டு மாரணநூல் பொதுசைவ மருஞ்சிறப்பு நூலாம்" எனவருஞ் **சிவஞான சித்தியார்த்** திருச்செய்யுளானு முணர்க. சிவாகமவழி உபாகமங்களும், புராணவழி உப புராணங் களுஞ் செப்பப்பட்டன வென்க. (சஉ)

அங்க மாறு மறைநான்கு மீமாஞ் சையமொன் றருள்கொழித்துத்
தங்கு நீதி நூலொன்று புராண மொன்று தவநெறிக்குப்
பொங்கு தரும நூலொன்று புகன்ற வீரேழ் விஞ்சையினை
யங்க ணுலகின் றவனளித்தா னவற்றை யுணர்ந்தோ ரறிவுடையோர்.

(இ-ள்) அங்கம் ஆறும்=வேத அங்கம் ஆறும், மறை நான்கும்=வேதங்கள் நான்கும், மீமாங்கிசம் ஒன்று = மீமாஞ்சை ஒன்றும், அருள் கொழித்து அங்கும் நீதி நூல் ஒன்று = காருண்ய நெறிகளை வடித்து அமைந்த நியாய சாத்திரம் ஒன்றும், புராணம் ஒன்று=புராண மொன்றும், தவறு எறிந்து போகத் தரு நூல் ஒன்று = குற்றங்களை நீக்கி மேலாய விளக்கும் தருமசாத்திரம் ஒன்றும், (ஆக) புகலுற நாலேழ் விஞ்சையிலே= சொல்லப்பட்ட பதினான்கு வித்தைகளையும், ஆய கலை உலகு ஈன்றவன் அளித்தான்= அழகிய இடத்தினையுடைய உலகங்களெல்லாவற்றையும் சிருட்டித்தருளிய பிரமதேவன் மொழிந்தனன், அவற்றை உணர்ந்தோர் அறிவுடையோர்=அவைகளின் உண்மைப்பொருளை யறிந்தவர்களே யறிவுடையவராவர்.

வேதபுருடனுக்கு அங்கமாறனுள் சந்தோவிசிதி பாதங்களும், கற்பம் கைகளும், சோதிடம் கண்களும், நிருத்தம் காதுகளும், சிட்சை நாசியும், வியாகரணம் முகமுமாம். மீமாங்கிசமாவது உபநிடதப் பொருளை யிலகுவி னறியும் சிமித்தம் வியாசமுனிவ ரியற்றிய சூத்திர நூலாம் இது உத்தர மீமாஞ்சை, பிரம மீமாஞ்சை, சாரீரக சூத்திரம், வேதாந்த சூத்திரம் எனவும் பெயர் பெறும் நான்கு அத்தியாயங்களையும், பதினாறு பாதங்களையும், நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும், ஐந்நூற்றைம்பத்தைந்து சூத்திரங்களையும் உடையது முதலாம் அத்தியாயத்திலே பிரமமாகிய சிவத்தின் இயல்பும், இரண்டாம் அத்தியாயத்திலே சாங்கிய முதலிய புறச்சமய விரோத நிகாரமும், மூன்றும் அத்தியாயத்திலே வித்தியா சாதன நிர்ணயமும், நான்காம் அத்தியாயத்திலே ஞானசாதன பலமாகிய வீடுபேறுங் கூறப்படும் வித்தைகள் பதினெட்டு என வாயு சங்கிதையிற் பகரப்பட்டது மற்ற பிரமன் அளித்தமையாவது சிவபெருமானிடங் கேட்டு மொழிந்ததுவாம் ()

இன்ன விஞ்சைத் துறைபோய வியாதன முதலா மிருந்தவத்தோ
ரன்ன மிவரு நான்முகனோ டழியா முத்தி யடைவரவா
பன்னு மறையின் பொருடெளிந்தோர் பாழ்கள் ளொருமூன் றினையிகந்து
துன்ன வரிதாய்ச் சுடர்கொழுந்தாந் துரியா தீதந் தனிலடைவார்.

(இ-ள்) இன்ன விஞ்சை துறை போய=இவ்வாறாய சுத்த வித்தைகளின் பகுதிகளிற் றோய்ந்து நின்ற, வியாதன் முதல் ஆம் இரு தவத்தோர் = வியாதமுனி முதலிய பெரிய தவத்தையுடையார் யாரும், அன்னம் இவரும் நான்முகனோடு—அன்ன வாகனத்திலேறும் பிரமனோடு, அழியா முத்தி அடைவர்=அழிவில்லாத சிவசாயுச்சிய முத்தியைச் சேர்வார்கள், அவர் பன்னும் மறையின் பொருள் தெளிந்தோர் — அவர்களாற் சொல்லப்பட்ட வேதப் பொருளமைந்த நூலினை நன்குணர்ந்தோர், ஒரு மூன்று பாழ்களை இகந்து=ஒப்பற்ற முப்பாழ்களையுங் கடந்து, துன்ன அரிது ஆய=(யாவராலும்) சேர்வதற் கரிதாகியும், சுடர் கொழுந்து ஆம் துரியாதீதம் தனில் அடைவார் = சோதிப்பிழம்பாயு மிருக்கின்ற துரியவவத்தைக்கு மேலாயுள்ள நிலையை யடைவார்கள்.

நான்முகனோடு முத்தியடைதல் பிரளயகாலத்து முப்பாழாவன —அசுத்தமாயைப் பாழ், சுத்தமாயைப்பாழ், மகாமாயைப்பாழ் எனபனவாம் இவையன்றி சகப்பாழ், சீவப் பாழ், பரப்பாழ் எனவும், சீவப்பாழ், சிவப்பாழ், பரப்பாழ் எனவுங் கொள்வாருமுளர்.()

அருவாய்ச் சித்தா மெனனிலைமை யுளத்தி லிருந்த வரிதென்னி
னுருவா நினைதி யெனனுருவ முணாதற் கரிதே லுனனுளத்தின்
மருவா நின்ற வெத்தேவி னுருவா வேனு மனத்திருத்திற்
றருவன் முத்தி யத்தேவி னுருவாய் விபுவாந் தன்மையால்.

(இ-ள்) என நிலைமை=எனது சொரூப நிலைமையானது, அரு ஆய் சித்து ஆம்= அவ்வியத்த மாகியுஞ் சித்துருபமாகியும் இருக்கும், உளத்தில் இருத்த அரிது என்னின்=

அதனை நீ மனத்திற் றியானிக்க வியலாதென்று சொல்லில், உரு ஆ நினதி = உருவமாக வேணுந் தியானிக்கக் கடவாய், என் உருவம் உணர்தற்கு அரிதேல்=என் வடிவத்தையும் அறிதற்குக் கூடாதாயின், உன் உளத்தின் மருவாநின்ற எ தேவின் உருவாவேனும்=நின் மனத்துத் தோன்றிய எந்தக்கடவுளின் வடிவமாகவேனும், மனத்து இருத்தில=நீ மனத்திற் றியானிப்பாயானால், விபு ஆம் தன்மையால = நான் வியாபகமாயிருக்குந் தன்மையினால், அ தேவின் உருவாய் = அந்தக் கடவுளின் வடிவமாகி (வந்து) முத்தி தருவேன= கைவல்லியத்தை யளிப்பேன்

முதல்வனது பரத்துவ நிலைமைக்கேற்ப முதல்வியும் அவனதபின்ன சத்தியாகலின் விபுவாய் நின்று, அந்தேவாய் வந்து முத்திகொடுப்பள் எனபது விளக்கப்பட்டது. அதனை "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே-மாதொரு பாகனார்தாம் வருவர்மற் றத்தெய்வங்கள் - வேதனைப் படுமி றக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு-மாதலா லிவையி லாதா னறிந்தருள் செய்வ னன்றே" என்னுஞ் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்தா னறிக. (௪௫)

என்று தனது நிலையனைத்து மியம்பித் தக்கன் புனிற்றிளமான்
கன்று தனதோர் கரத்தேந்துங் கருணைக் கடலை யிகழ்ந்தனனால்
மன்ற மற்றுன் மகளாக வந்தே னென்னை மதிக்கண்ணிக்
குன்ற வில்லிக் களித்தியென வுலகம் பூத்த கொடியுரைத்தாள்.

(இ-ள்) உலகம் பூத்த கொடி = உலகங்களைப் புட்பித்த கொடிபோன்ற தேவியானவள், என்று=என்றிவ்வாறு, தனது நிலை அனைத்தும் இயம்பி=தனது இயல்பு முழுவதையுஞ் சொல்லி, தக்கன்=தக்கனென்பான், புனிறு இள மான் கன்று=மிக்க இளமையாகிய மான் கன்றை, தனது ஓர் கரத்து ஏந்தும் = தம்முடைய ஒரு திருக்கையிற் றாங்கும், கருணை கடலை இகழ்ந்தனன்=கிருபைச் சமுத்திரமாகிய பரசிவப் பொருளை நிந்தித்தனன், ஆல = அதனால், உன் மகள் ஆக மன்ற வந்தேன் = (அவன் மகள் உரு என்பன கழித்து) உன்னுடைய புத்திரியாக (உலகங்கள்) தெளியும்படி யிவ்விடந் தோன்றினேன், என்னை = என்னை, மதி கண்ணி குன்றவில்லிக்கு அளித்தி என = பிறைக்கொழுந்தைத் தரித்த மலைவில்லியாகிய சிவபெருமானுக்கு மனைவியாகக் கொடுப்பாயாக என்று, உரைத்தாள்=சொல்லினள். மற்று-அசைநிலை. (௪௬)

களிக்குங் கயல்போற் குழைதடவுங் கண்ணி பவளக் கனிமலர்ந்து
தெளிக்கும் பழைய மறைமழலைச் சிலவென் கிளவி கேட்டுவகை
தளிர்க்கும் பசும்பொற் குடுமிவரைத் தலைவ புனிற்று மதியமிர்தந்
துளிக்குங் கடுக்கை வேணியனைத் தொழுது தவமாற் றிடுமெல்லை.

(இ-ள்) களிக்கும் கயல் போல=தருக்குங் கயன்மீனைப் போல, குழை தடவும் கண்ணி=குண்டலத்தை யளாவப் பிறழுகின்ற கண்களை யுடைய தேவியானவள், பவளம் கனி மலர்ந்து தெளிக்கும் = பவளமும் கோவைப் பழமும் போன்ற திருவாய் மலர்ந்து அறித்த, பழைய மறை மழலை சில என கிளவி கேட்டு = தொன்மையாகிய வேதாந்தங்கள் செறிந்த குளிர்மையாகிய மழலை மொழியைக் கேட்டு, உவகை தளிர்க்கும்=மகிழ்ச்சியதிகரித்த, பசு பொன் குடுமி வரை தலைவ=பசிய பொன்மயமான சிகரங்களை யுடைய இமயமலையரசனே, புனிறு மதி அமிர்தம் துளிக்கும்=இளஞ்சந்திரன் அமிர்த கிரணத்தை (தேனுகச) சிந்துகின்ற, கடுக்கை வேணியனை தொழுது = கொன்றை மாலை பொருந்திய சடாமுடியைக் கொண்ட சிவபெருமானை வழிபட்டு, தவம் ஆற்றிடும் எல்லை=தவத்தைச் செய்யுங் காலத்தில்.

வரையை யடலைக் களிறென உருவகித்தான். சில்லெனலும் குறிப்பிடைச் சொல் பண்புப் பொருட்டில் வந்தது. இது முதற் பதின்மூன்று செய்யுட்கள் குளகமாம். (சஎ)

இமையாச் செங்க ணேற்றெகினப் பாகன் கவரி புடையிரட்ட
வமுதூற் றிருப்பக் கடல்கடைந்தோ னண்ணலேற்றுக் கொடியெடுப்பத்
திமிரம் பருகி வெயிலுமிழுஞ் செங்கேழ்ப் பரிதி விளக்கெடுப்பக்
குமுத மலர்த்துங் குளிர்கதிரோன் கொற்றக் கவிகை மிசைநிழற்ற.

(இ-ள்) இமையா செம் கண் ஏறு எகினம் பாகன் = இமைத்தல் செய்யாத சிவந்த கண்களை யுடைய சேவலாகிய அன்னத்தை வாகனமாக நடாத்தும் பிரமன், புடை கவரி இரட்ட = பக்கத்திற் சாமரை யசைக்கவும், அமுது ஊற்று இருப்ப கடல் கடைந்தோன் = அமுதஞ் சுரந்து தோன்றுமாறு பாற்சமுத்திரத்தை மதித்த திருமால், அண்ணல் ஏறு கொடி எடுப்ப = பெருமையாகிய இடபக் கொடியை யுயர்த்திப் பிடிக்கவும், திமிரம் பருகி வெயில் உமிழும் செம் கேழ் பரிதி = இருளைக் குடித்து ஒளியைக் கக்குகின்ற செந்நிற முடைய சூரியன், விளக்கு எடுப்ப = தீபம் ஏந்தவும், குமுதம் அலர்த்தும் குளிர் கதிரோன் = ஆம்பல் மலரை மலர்த்துகின்ற குளிர்மையாகிய கிரணங்களை யுடைய சந்திரன், மிசை கொற்றம் கவிகை நிழற்ற = மேலே வெற்றிக் குடையால் நிழலைச் செய்யவும்.

ஏறு என்பது "ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா—மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப" என்னுந் தொல்காப்பிய விதியானே ஆண் அன்னத்தை யுணர்த்தி நின்றது. எகினம் — அம், சாரியை. இமையாச் செங்கண், என்றதனால், அன்னத்தின் தேவத்தன்மை கூறப்பட்டது. (சஅ)

அண்ண லயிரா வதப்பாக னடைப்பை தாங்க வெய்தினுயி
ருண்ணுங் கூற்றங் குற்றுடைவா ளேந்த வீர்ந்தண் டுளியுறைப்பத்
தண்ணென் சிவிறி யிரங்குகடற் றலைவன் றாங்கச் சாந்தாற்றி
வண்ணப் புரிகோட் டேற்றிரலைப் பாகன் போந்து மருங்கசைப்ப.

(இ-ள்) அண்ணல் அயிராவதம் பாகன் அடைப்பை தாங்க = பெருமையிற் சிறந்த ஐராவத யானைவாகனனாகிய இந்திரன் வெற்றிலைப்பையை யேந்தி வரவும், வெய்தின் உயிர் உண்ணும் கூற்றம் = கொடுந்தொழிலாக வுயிரை வாங்கும் யமனானவன், குறு உடைவாள் ஏந்த = குறிய உடைவாளைத் தாங்கவும், இரங்கு கடல் தலைவன் = ஒலிக்கின்ற சமுத்திரராசனாகிய வருணன், தண் என் சிவிறி தாங்க = தண்ணென்றிருக்கும் நீர்த்துருத்தியைத் தாங்கி, ஈர் தண் துளி உறைப்ப = மிக்க குளிர்மையாகிய நீர்த்துளிகளைச் சிந்தவும், வண்ணம் புரி கோடு ஏறு இரலை பாகன் = அழகாகிய முறுகிய கொம்புகளையுடைய கலைமானையூர்தியாகச் செலுத்தும் வாயுதேவன், போந்து = சென்று, சாந்தாற்றி மருங்கு அசைப்ப = ஆலவட்டத்தைப் பக்கத்தினின்று இரட்டவும். கூற்றம் = கூறுபடுத்தல், அது ஆகுபெயராய் யமனை யுணர்த்திற்று. தாங்க எச்சத்திரிபு. சிவிறி - எழுத்து நிலைமாறல். (சகூ)

நிலவுக் கதிர்கான் முத்தவடங் கிடக்குந் தடந்தோ ணிதிக்கிழவன்
மலர்வாய்த் தம்ப லுமிழ்பொன்னம் வட்டி றாங்கிச் செம்மாப்ப
விலகு கதிர்வாள் பிறையெயிற்று நிருதி வேந்த னெரிகான்று
புலவு கமழு முத்தலைவேன் முடிமேற் றாங்கி முன்போத.

(இ-ள்.) நிலவு கதிர் கால் முத்தவடம் கிடக்கும் = சந்திரிகையின் ஒளிபோல (ஒளியை) காலுகின்ற முத்துமாலை யானது தங்கியிருக்கப் பெற்ற, தடம் தோள் நிதி கிழ

கணங்கள் எல்லாம், இரு பால் தொடர்ந்து முன் செல்ல = இருபக்கமும் வரிசையாக நின்று முறபோகவும், (ருச)

அண்ட முகடு மோழைபடப் பானு கம்ப னதிர்குரல்வான்
கொண்ட லுருமி னுயிரம்வெண குடவாய்ச் சங்க மெடுத்தூத
மண்டு திறலகூர வெஞ்சினத்த வாண ஞோரா யிரங்கரத்தால
விண்ட துலக மெனசசதியின மயிாக்கண முழவ மிகமுழக்க.

(இ-ள்) பானுகம்பன் = பானுகம்பனென்பவன், அண்டம் முகடு மோழை பட= அண்டத்தி னுச்சியும வெடிபடுமாறு, அதிர் குரல் வான கொண்டல உருமின்=பேரொலி யுடைய பெரிய மேகவிடி முழககத்தைப போல, வெண குடம் அம் ஆயிரம சங்கு வாய் எடுத்து ஊத=வெண்மையாகிய குடமபோன்ற அழகிய ஆயிரஞ் சஙகுகளை (ஆயிரம்)வாயி லும்வைத்து ஊதவும, மண்டு திறல கூர் வெம சினத்த வாணன = மிகக பராககிரம மதி கரித்த கொடுங்கோப முடைய வாணுசுரன எனபான, உலகம விண்டது என=உலகஙகள் வெடிபட்டதோ வெனறு சொலலுமபடி, ஓர ஆயிரம கரத்தால = (தனது) ஆயிரஙகை களினலும், சதியின=தாள வொத்துடன, மயிா ககண் முழவம மிக முழகக=மயிாககணை களை யுடைய முழவினை மிகவும் ஒலிததல செயயவும.

பானுகம்ப னென்பான் ஆயிரமுகமும் ஈராயிரங் கைகளு முடையனும் மேருமலை போன்ற பொனனிற முடையனுய,நூறறைமபது கோடி கணவீரரக கடிபபனுபச் சிவ சந நிதியிற சஙகவாத்திய முழககுஞ் செலவததைப பெறறவனும அதனை "ஆன னஙகளோ ராயிர மிராயிர மஙகை-மேனி வநதபொன மாலவரை புரைநிற மேவித் - தானை வீரா நூற றைம்பது கோடியோர சாரப-பானு கமபனுந் தலைவனென் கயிலையிற படாநதான "என னுங் கந்தபுராணத் திருவிருத்ததது னறிக வாணன சரிதையைப பின்னாக காண்க மயிர்ககண முரசமாவது புலியோடு பொருது அதனைககொனறு நினறு சிலைத்துக கொம பின் மண கொண்ட ஏறு இறநதுழி யதனறோலை மயிா சீவாமற போாதத முரசு ஆது "புனைமருப பழுநதக குததிப புலியொடு பொருது வெனற - கனைகுர லுருமுச சிறறக கதழ்விடை யுரிவை போாதத-துனைகுரன முரசத் தானைந தோனறலைந் தமபி னெனறு- னனைமல ரலஙகற கணணி நநதனுந தொழுது சோந்தான " எனச சிந்தாமணியிற் கூறபபட்டது "கொலலேறறுப பசுநதோல சிவாது போாதத-மயிாககண் முரச மோவல விரஙக" எனறு ஆசிரியர் அடியார்க்கு நல்லாரும் ஆண்டமை யறிக இம்முழவு அக முழவு, அகப்புற முழவு, புறமுழவு, பண்ணமை முழவு, நாளமுழவு, காலை முழவென்று மெழுவகையவுள, அகமுழவு ஜொனறுப குடமுழா வென்னு முதற கருவியாய அஃது, "தரிதத மதஙக மத்தளஞ் சலலி-பெருந கரடிகையே பேரியுரந்த, படகங் குடமுழவை பாஙகாயவேழு - மடைவே முதற்கருவி யாம் " எனச் சுந்தாநந்தப் பிரகாச பாத நூலார் கூறியதனுற பெறபபடும முழவம-அம், சாரியை (ருரு)

ஆள்வழக கொழிய நீணட வரிமதர் மழைக்கட் செவ்வாய
நாளிள மதியை நகக நறுநுத னகைவெண முத்த
நீளவடஞ் சுமந்த கொஙகை யுருபபசி முதலோர நோபோயத்,
தாளிணை பெயாத்து முன்னஞ் சதிமுறை பிறழா தாட.

(இ-ள்) ஆள் வழக்கு ஒழிய = ஆளும வழக்கமானது நீங்குமாறு, நீணட அரி மதர் மழை கண = நீடசியை யுறற செவவரியும களிபபுங் குளிர்ச்சியு முடைய கண்களை யும, செம வாய=சிவந்த வாயகளையும், நாள இள மதியை நகக நறு நுதல=புதிய விளஞ் சந்திரனையு மிசழநத நலல நெறறியையும், வெண நகை= வெள்ளிய நகைகளையும, நீள் முதது

அழகைச் செய்யும், அவிர் மணி மவுலி தோறும=பிரகாசிக்கின்ற இரத்தினங்க ளிழைத்த கிரீடங்க டோறும், நெருக்கனமின=நெருக்கா நிர்கள, போமின=நடவுங்கள், காண்மின=தரிசியுங்கள், நீங்குமின=அகலப் போமின, நிலமின = நில்லுங்கள, என்று = என்றிங்ஙனங் கூறி, தாக்குப பிறப்பு ஒலி=அடிக்கின்ற வேத்திரத்தா லுண்டாகுஞ் சத்தமானது, தரணி போயப=உலகமனைத்தையும் தனவயப்படுத்தவும.                                          (ருஎ)

> வெள்ளிவே தண்டத் துசசி யரசுவீற் றிருக்கும் தூய
> பிள்ளைவெண் டிங்கட் கண்ணி வார்சடை முடித்த பெம்மா
> னொள்ளழற் செங்கட் பேழ்வாய நரைவிடை துனையி னூர்ந்து
> தள்ளருந் தவத்தோர் வைகு மிமயமால் வரையிற் சார்ந்தான.

(இ-ள) வெள்ளி வேதண்டத்து உச்சி=கயிலை மலையின் றலை நகரில், அரசு வீற்றிருக்கும் = (எம்மை மெல்லாம்) ஆண்டருள வீற்றிருக்கின்ற, தூய பிள்ளை வெண் திங்கள் கண்ணி=சுத்தமாகிய இளமை வாய்ந்த வெள்ளிய பிறைச்சந்திரனை, வார் சடை முடித்த பெம்மான=நீண்ட திருச்சடாமுடியிற் றரித்த சிவபெருமான, ஒள அழல செம் கண் = ஒளி பொருந்திய அக்கினி போன்ற சிவந்த கண்களையும, பேழ வாய் = பெருத்த வாயினையு முடைய, நரை விடை துனையின் ஊர்ந்து=நரைத்த இடப வாகனத்தின் மீது விரைவாகச் சென்று, தள் அரு தவத்தோர் வைகும = நீக்குதற்கரிய தவத்தினை யுடைய முனிவர்க ளிருக்கின்ற, மால இமயம வரையில சார்ந்தான = பெரிய இமய மலைக்கட் சேர்ந்தனர்.

சிவபெருமான் இமய வெற்பரசன் தவஞ்செய்தலறிந்து, கவரியிரட்ட, கொடியெடுப்ப, விளக்கெடுப்ப, கவிகை நிழற்ற, அடைப்பை தாங்க, உடைவாளேந்த, சிவிறி தாங்க, சாந்தாற்றியசைப்ப, வட்டிருங்கிச் செம்மாப்ப, முன்போத, கைக்கொள்வேட்க, ஏந்திச் செல்வயர், புகழ்ந்தேத்த, பின்போத, துறைத்தேக, முன்செல்ல, சங்கமுழக்க, முழவ முழக்க, பிறழாதாட, பாடல்பாட, ஒலிபோப்ப, விடையூர்ந்து வரைச் சார்ந்தார் என முடிக்க. வெள்ளி=வெண்மையை யுடையது. ள-முதலிலேத் தொழிற் பெயர். (ருகூ)

> மழவிடை யிழிந்து முக்கட் பண்ணவன மலரி னோனும
> பொழிகதிர் நேமி யோனும பொருப்புறழ தடக்கை தாங்க
> விழைவுடன் போந்து மாமன வியப்பொடுந் தொழுது நல்கு
> மழலுமிழ் தறுகட் பேழ்வா யரியணை யினிதி வர்ந்தான.

(இ-ள) முக்கண் பண்ணவன் = திரிநேத்திர தேவராகிய சிவபெருமான், மழ விடை இழிந்து=இளமையாகிய விடபத்தினின்று மிறங்கி, மலரினோனும = பிரமனும், கதிர் பொழி நேமியோனும = ஒளியைக் காலுஞ் சக்கரத் தெய்வமாகிய விஷ்ணுவும, பொருப்பு உறழ தடம கை தாங்க=மலையை நிகர்த்த பெரிய திருக்கரங்களைத் தாங்காநிற்ப, விழைவு உடன போந்து=விருப்பொடுஞ் சென்று, மாமன வியப்பு ஒடும தொழுது நல்கும்=அதிசயத்தோடும வணங்கி யிட்ட, அழல் உமிழ் தறு கண பேழ வாய = அக்கினிப் பொறிகளைச் சிந்துங் குரூரமாகிய விழிகளையும பெருத்த வாயினையு முடைய, அரி அணை இனிது இவர்ந்தான = சிங்கத்தினாற் சுமக்கப்பட்ட ஆசனத்தினைக் கனமையுடனேறி வீற்றிருந் தருளினார்.

இடபத்தினின்று மிறங்கி, நந்திகொடுத்த பாதுகைகளைப் பதமலர் சேர்த்தி, போத னும பதுமநாபனும் கரங்கொடுக்கப் பொலிவு நோக்கிக் கோயிற் போந்தான் என்று கந்த புராணத்திற் றிருக்கல்யாணப் படலத்துக் கூறப்பட்டது.                                          (சு0)

பொன் பூண் பெய்து = பிரகாசிக்கின்ற பசிய பொன்னாலாய ஆபரணங்களை யணிந்து, பெரு எழில் மறைத்திட்டார் = இயற்கை யழகை மறைத்தனர்.

ஐது எழில் என்பன ஒருபொருள் குறித்த விருசொல்லாகலின், மிக்க அழகென்றும் தற்சேர்ந்து முழுகினாரது குற்றங்களை யெல்லாந் துடைக்குங் கங்கை நீரெனப்படுந் தோன்ற "திருநீர்" என்றனர் கொய் என்பது முதனிலைத் தொழிலாகு பெயராய்ப் புட்பங்களை யுணர்த்திற்று கோட்டுதல் = வளம்பெற எழுதுதல் "ஒருமொழி யொழி தன்னினங் கொளற் குரித்தே" என்ற விதிப்படி, "ஒருங்கும் முலையிற் கோட்டி" என்றதனால் கரும்பையும் வல்லியையுந் தோளி லெழுதிய தூஉம் பெறும் என்னை "சுரும்புணக் கிடந்த நறும்பஞ் சேக்கைக் - கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி" என்றாராக லின். இயற்கை யழகைச் செயற்கை யழகான் மறைத்தார் என்பார் "பேரெழில் மறைத் திட்டார்" என்றனர் அல்-அசை (௯௩)

எரிமணி முகடு வேய்ந்திட் டிளங்கதிர் கற்றை காலுங்
குருமணி யடைப்பை தாங்கிக் கூற்றொளி யிட்டு வைகும்
அரிமதர் நெடுங்கட் செவ்வாய்ப் புலோமசை யலங்கு காந்தண்
மருமலர் கரத்தாற் றூய வெள்ளடை மடித்து நல்க

(இ-ள்) கூற்று ஒளி இட்டு வைகும் = இயமன் ஒளித்திருந்தாற் போன்ற, அரி மதர் நெடு கண் = செவ்வரியும் மதர்ப்பும் வாய்ந்த நீண்ட விழிகளையும், செய் வாய் = சிவந்த வாயினையு முடைய, புலோமசை = இந்திராணி யானவள், எரி மணி முகடு வேய்ந்திட்டு = ஒளி விடுகின்ற இரத்தினங்களால் உச்சி வேயப்பட்டு, இளம் கதிர் கற்றை காலும் குரு மணி அடைப்பை தாங்கி = இளமையாகிய கிரணத் தொகுதியைப் பொழிகின்ற நிறமுள்ள முத்துக்களாலாய வெற்றிலைப் பையை யேந்திச் (சென்று) அலங்கு மரு காந்தள் மலர் கரத்தால் = பரந்த வாசனையுடைய செங்காந்தட் பூவொத்த கைகளினால், தூய வெள் அடை மடித்து நல்க = சுத்தமாகிய வெற்றிலையை மடித்துக் கொடுக்கவும் (௯௪)

அழகுபூத் தொசிந்த கொம்பி னம்பகட் டல்குற் செவ்வாய்க்
குழைபுறங் கண்ட வேற்கட் டிருவுநெய்த் திருண்ட கூந்த
னுழைநுசுப் பலங்கு வேய்த்தோள் வாணியு நொய்தி னெய்திப்
பொழிகதிர் நிலவு காலுஞ் சாமரை புடையின் வீச.

(இ-ள்) அழகு பூத்து ஒசிந்த கொம்பின் = வடிவு என்னும் (பூக்களை) மலர்ந்து வளைந்த பூங்கொம்பினைப் போல, அம் பகடு அல்குல் செய் வாய் = சிறந்த பெருமையாகிய நிதம்பத்தையுஞ் சிவந்த வாயினையும், குழை புறம் கண்ட வேல் கண் திருவும் = குண்டலங்களின் பின்புறத்தையும் பார்த்த வேலாயுதத்தை நிகர்த்த கண்களையு முடைய இலக்குமி தேவியும், நெய்த்து இருண்ட கூந்தல் = பசுமையுற்றுக் கறுத்த குழலையும், நுழை நுசுப்பு = நுட்பமாகிய இடையினையும், அலங்கு வேய் தோள் வாணியும் = அசைகின்ற மூங்கிலை நிகர்த்த புயங்களையு முடைய சரசுவதி தேவியும், நொய்தின் எய்தி = மெல்ல நடந்து, பொழி நிலவு கதிர் காலும் சாமரை புடையின் வீச = பொழிகின்ற சந்திரிகைபோல ஒளியைக் கக்குஞ் சாமரைகளைப் பக்கங்களில் நின்றிரட்டவும்

அம் பகட்டல்குல் என்றார், மகளிர்க்கு நுதலுங் காலும் இடையுஞ் சிறுகி, அல்குலுந் தோளுங் கண்ணும் பெருத்தன மரபாதலின் என்னை? "இகல் வேந்தன் சேனை யிறுத்த வாய்போல - வகலல்கு றோள்கண் ணெனமூ வழிப்பெருகி-நுதலடி நுசுப்பென மூவழிச்சிறுகி,, என எட்டுத் தொகையு ளொன்றாய கலித்தொகையில், முல்லைக்கலி யின் மொழிந்தா ராகலின். கொம்பின்-இன், உவம வுருபிடைச்சொல். (௯௫)

கன்னியங் கற்பு வாய்ந்த வருந்ததி வாழ்த்தக் கங்கை
பன்னரு மறைகள் பாடி யினியபல் லாண்டு கூறப்
பொன்னகர்க் கிறைவற் றந்த வதிதிபூம் பொரிகள் சிந்த
முன்னருந் தவத்து லோபா முத்திரை யாசி கூற.

(இ-ள்) கன்னி அம் கற்பு வாய்ந்த அருந்ததி வாழ்த்த = அழியாத சிறந்த கற்பினைக் கொண்ட அருந்ததிதேவி துதிகளைச் சொல்லவும், கங்கை=கங்கையானவள், பன்ன அரு மறைகள் பாடி = சொல்லுதற்கு அரிய வேதங்களைச் சொல்லி, இனிய பல்லாண்டு கூற=நன்மை யாகிய திருப்பல்லாண்டுகளைச் சொல்லவும், பொன் நகர்க்கு இறைவன் தந்த அதிதி = சுவர்க்காதிபனுகிய இந்திரனைப் பெற்ற அதிதி யென்பாள், பூ பொரிகள் சிந்த=பொலிவாகிய பொரிகளைத் தூவவும், முன் அரு தவத்து உலோபாமுத்திரை=இளைத் தற்கரிய தவத்தினை யுடைய உலோபா முத்திரை யென்பாள், ஆசி கூற=வாழ்த்துக்களைச் சொல்லவும்.

அருந்ததி வசிட்ட முனிவர் மனைவி. அதிதி-காசிபமுனிவர் மனைவிகளுள் ஒருத்தியாய், இந்திர உபேந்திராதி தேவர்களை யீன்றவள். உலோபா முத்திரை யாவாள்-அகத்திய முனிவர் மனைவி. விதர்ப்பராசன் மகளாய இவளை முனிவர் பெருமான் மகப்பேறு வேண்டி வேட்டுச் சிறந்த முனிமையைப் பெற்றுனென்க. அது "அந்தணர் கொருவ னன்று னருளடைந் நயக்க ணீங்கி - மெய்ந்தரு மகனே வேண்டி விதர்ப்பர்கோன் பயந்த லோபா - முத்திரை தனைமுன் வேட்டு முதுக்குறைத் திண்மை சான்ற - சித்தனை யளிக்க வுள்ளத் தென்றிசை நோக்கிச் சென்றான்" என்னுங் கந்தபுராணத் திருவிருத்தத்தாற் கண்டது.

தாழ்தடக் கையின யார்க்குந் தழுமுற்று வாரா தோங்கும
வீழ்முலை யரம்பை செம்பொற் சிவிறிநீர் விறைவிற் றூற்றக்
கேழ்கிளர் மயிலஞ் சாயற் றிலோத்தமை கிளக்குஞ் செய்ய
சூழ்சுடர்ப் பரிதி மானுஞ் சுடர்மணி விசிறி யேந்த.

(இ-ள்) தாழ் தடம் கையின் யார்க்கும் தழுமுற்று=(பாதமளவும்) நீண்ட கைப் பரிசத்தில் யாவர்களுக்கும் அமைவுற்றும், வாராது ஓங்கும் வீழ் முலை அரம்பை=சரியாதுயர்ந் திருக்கின்ற விரும்பத்தக்க தனங்களை யுடைய அரம்பை யென்பாள், விறைவின் செம்பொன் சிவிறி நீர் தூற்ற=விருப்புடன் சிவந்த பொன்னுற் செய்யப்பட்ட நீர்த்துருத்தியா னீரை யிறைக்கவும், கேழ் கிளர் மயில் அம் சாயல் திலோத்தமை=நிறந்தான் மிகக மயில்போலும் அழகிய சாயலினை யுடைய திலோத்தமை யென்பாள், கிளக்கும் சூழ் செய்ய சுடர் பரிதி மானும்=கப்புவிட டெழுந்து சுற்றுஞ் செவ்வொளி யுடைய சூரியனை நிகர்த்த, சுடர்மணி விசிறி ஏந்த=ஒளியுடைய விரத்தினங்கள் பதித்த விசிறியைத் தாங்கி வரவும்.

அரச யோக முடையார்க்குக் கைகள் பாதமளவும் நீண்டிருக்குமென்று சாமுத்திரிகா லக்கண நூலார் சாற்றலால் "தாழ் தடக்கையின" என்றும், அவர்கள் இராசசூயம் பரிமேத முதலிய வேள்விப் பயனுனே சுவர்க்கம் புக்கு ஆண்டுள்ள போக்கியத்துளொன்றாய அரம்பை முலைப் போகமும் துய்த்த லொருதலையாகலின் "யார்க்குந் தழுமுற்று" என்றும், அங்ஙனம் பலர் வேண்டிப் புல்லியக்காலும் முதிரா தோங்கிய பின்னருங் கண்டார் புதுமையா விரும்புந் தனத்தா ளென்பான் "வாரா தோங்கும் வீழ் முலை யரம்பை" என்றுங் கூறினுன். வீழ்தல் விரும்புதற் பொருள் படுதலை "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்" என றருளியதற்குப் பரிமேலழகர் உரைத்ததனு லுணர்க. சாயல் என்னும் உரிச்சொல் மெய் வாய் கண் மூக்குச் செவியெனனு மைம்

பொறியா னுகரு மென்மையை யுணர்த்துத னுதலும அது "சாயன் மென்மை"என்னுந் தொல் காப்பிய விதியாற பெறபபடும. (௯௭)

புல்லிதழ்க குவளை யுணகட் காளிபொற் பிரமபு தாங்கி
மெல்லென நடததி யெனறு வியநதடி யீடு போறற
மலலலம் புவனம யாவு மீனறசிற் றுதர வலலி
பலலியங் கறங்க மனறல பயிலுமண டபத்துட் புக்காள.

(இ - ள்) புல் இதழ் குவளை உண் கண் காளி = சிறிய வேடுகளை யுடைத்தாய நீலோறபல மலரையும வென்ற விழிகளை யுடைய காளிதேவி, பொன பிரமபு தாஙகி = பொன்னாற செயயப்பட்ட வேத்திரததைத் தரிந்து, மெல என நடததி எனறு = (அனை, ஐயே!) மெதுவாக அடி பெயாததரு ளென்று, வியநது அடி ஈடு போறற=எச்சரிக்கை செய்து திருவடியிணைகளைத் துதித்துச செலலவும்,பல இயம கறஙக=பல வாததியஙகள் முழஙகவும், மலலல அம் புவனம யாவும் ஈனற= வளபப மிகக வழகிய அணட புவனங களை யெல்லாம பெற்ற, சிறு உதரம் வலலி = சிறிய வயிற்றினை யுடைய உமா பிராட்டியார், மனறல் பயிலும மண்டபததுள் புககாள்=திருமண மணடபத்துட் சென்றனா

மெல்லென நடத்தி யெனறது, பதமலா நொநது இடுகிடையு மொசியு மென்னு மெண்ணத் தானும பலலியஙகளாவன —"பேரிகை படக மிடககை யுடுக்கை-சீரிகு மத்தளஞ் சல்லிகை கரடிகை - திமிலை குடமுழாத் தககை கணப்பறை-தமருகந் நணனுமை தாவி றடாரி-யந்தரி முழவொடு சநதிர வளயம்-மொநதை முரசே கனைகுடு ஆ பது-நிசாளந் துடுமை சிறுபறை யடக்க - மாசி றருணிசசம் விரலேறு பாகம் - தொககவு பாஙகம் துடி பெருய பறையென-மிக்க நாலோா விரிததுரைததன" ஆகும காழும தருவு மேயபபத் தாழுஞ் சடையோ னுடன் அபினனமா வாழுநதேவி யுலகா போலத் தமமின புள்ளி மணஙகோடாது மனபதை யுயயு மாறே யிவவிழை வினைநதா ளெனபது போதர "மல லலம் புவனம யாவு மீனறசிற றுதரவலலி-மணடபததுடபுககாள" எனறுன (௯அ)

வேய்நெடுந் தோளி யெய்த விண்டுவை முதல தேவா
தூயினா மலாகள் கணணீா துளிததன ருவகை பொஙக
வாயிர நாமம பாடி யாடின ரடியின வீழ்ந்தா
தாயினைக காணின மைந்தா மகிழ்வது தக்க தன்றே.

(இ-ள்) வேய் நெடு தோளி எயத=மூஙகில போலும நீண்ட தோளகளை யுடைய வுமாதேவி யெழுநதருள, விணடுவை முதல தேவா=விட்டுணுவை முதலாக நின்ற தேவர் கள், மலாகள் தூயினா=புட்பஙகளைச் சொரிநதாாகள, கண நீா துளிததனா = கணகளி னினறும (ஆனநத) அருவி நீரைச சிந்தினா, ஆயிரம நாமம உவகை பொஙக பாடி ஆடி னா் = (தேவியின) சகததிர திருநாமஙகளையும மகிழசசி மிககூரப பாடிக கூததாடினா கள், அடியின வீழ்ந்தா=திருவடிகளில விழுநது வணஙகினாாகள், மைந்தா=புததிராகள், தாயினை காணின மகிழ்வது தககதே = (தம) அனனையைக கண்டககால் உவகை கொள் வது தகுதியே யாம.

அன்று-அசைநிலை. தூயினா முதலிய வினைமுற்றுக்களை யெச்சப் படுத்தி யுரைத் தலுமாம். ஆயிரநாம முனனுரைததாம் தோளி, இ-எனனும பெண்பால விகுதி பெறறு நினற பெயர் என்பது "செய்யுண் மருஙகினும் வழககியன் மருங்கினு-மெய்பெறக் கிளநத கிளவி யெலலாம-பலவேறு செயதியி னானெறி பிழையாது - சொல்வரைந தறியப் பிரித் தனர் காட்டல் " என்னும் தொல்காப்பிய விதியாற காணக (௯௯)

கடிமணக் கருமம யாவு நானமுகக் கடவுள் காட்ட
விடிமுர சிரங்கி யாாபப வினவளை யலறி யோங்க
வொடிவிலசீ ரிமய வேநதன வாக்கிய வுதகத் தோடும
வடிமலாக கணணி ஞளை மகேசனுக குதவி ஞனே.

(இ-ள்) ஒடிவு இல சீா இமயவேநதன=குறைத லிலலாத சிறபபினை யுடைய இமயமலையரசன், கடி மணம கருமம யாவும=புதிய திருமணச சடஙகுக ளெலலாவற றையும், நான்முகக கடவுள் காட்ட = பிரமதேவன றெரிவித்துச செயய, இடி முரசு இரஙகி ஆாபப=இடியைப போல முரசவாத்தியம ஒலித்து முழங்கவும், இனம் வளை அலறி ஓங்க = கூட்டமாகிய சங்குகள் வாயவிட்டு மிககொலிககவும், வாககிய உதகத் தோடும் = (தனறேவி) வார்த்த அருக்கிய தீர்த்தத்துடன், வடி மலா கணணிஞளை= கூரிய மலாபோலும விழிகளை யுடைய மகேசுவரியை, மகேசனுககு உதவிஞன = மகே சுர மூர்த்திககுத் தத்தஞ் செயது கொடுத்தான

மலையரையன உதக முயதததமையை "பூசனை புரிநத பின்னா்ப புவனமீன் ருடன் கையைப்-பாசம தகன்ற தொலசீாப பரஞ்சுடா கரததுள வைதது - நேசமோ டளித்தே னெனறு நெடுமறை மனுககள கூறி - வாசநல லுநக முயததான மருகனென் றவனை யுன்னி" எனபதனுலுமறிக இத் திருமணநிகழ்நதது பஙகுனிமதியில உததரநாளி னெனக.

எஙகணும் பொருளுங கோளு மீதலுந் தானே யாகுங்
கஙகையா னகில மெலலா மளித்தருள கனனி தனனைச
செஙகையிற பறறித் தீயை வலமபுரீஇச செய்தா னெலலா
மெஙகடம பொருட்டே யெனப விதுவனறே வதறகுச சானறு.

(இ-ள்) எங்கணும பொருளும=எவ்விடத்து முளள பொருள்களும், கோளும்= (அவற்றை யுடைமையாகக) கொளளுதலும, ஈதலும தானே ஆகும் கஙகையான= கொடுத்தலுந் தாமாகவே யிருககுங் கஙகாநாக கடவுளாகிய சிவபெருமான, அகிலம எல லாம அளிதது அருள கனனி தனனை = உலக மெலலாவறறையும பெறறருளுங் கனனி யாகிய உமாபிராட்டியாரை, செம கையின பறறி=செவ்விய கைவிரலிற பிடிதது, தீயை வலம்புரீஇ=அககினியை வலம வந்து, எலலாம செயதான = (மணவினைக் குரிய கிரியை கள்) எலலாவறறையுஞ் செய்தேறறனா, எலலாம எஙகள் தம பொருட்டே எனப=(அக் கடவுள் செய்யுஞ் செயலகள்) யாவும (ஆனமாக்களாகிய) நமபொருட்டே யெனறு(மெய் யுணர்ந்தாா கூறுவா) அதறகு சானறு இது அனறே=அதறகுச் சாட்சி யிதுவலலவோ.

கொள் எனனும் முதனிலைத் தொழிறபெயா "அநநாற சொல்லுந் தொடுக்குங் காலை-வலிக்கும்வழி வலிததலு மெலிககுமவழி மெலித்தலும் விரிககுமவழி விரித்தலுந் தொகுககுமவழித தொகுத்தலும் - நீட்டுமவழி நீட்டலும" எனவருந் தொல்காப்பிய விதியாற் கோள எனநீண்டது விவாகஞ் செயயுங் காலத்திற பிராமணர் கையைப பிடித் தலும், அரசா கணை - வாள் பறறுதலும, வைசியா தாழி - தாறறுககோல பிடித்தலும், சூத்திரர் பெண்ணின முன்றானை பிடித்தலும முறையாகலின, ஈணடுத் தேவருட் பிரா மணன் சிவனே யாகலின், அவனும் அவ்வொழுக் கறிககச் செஙகையிற பறறிஞன என் பான் "கனனி தனனைச் செங்கையிற பறறி" எனறான் எலலாம் எனபது தீவகம. சிவன் செய்யுந் தொழிலக ளெல்லாந திருவருட் செய்கை யென்பது "அழிபபினைப் பாறற லாக்க லவ்வவா கன்ம மெலலாங்-கழித்திட னுகரச செய்தல காபபது கன்ம வொப்பிற்-றெழித் திடன் மலங்க ளெலலா மறைபபருள் செய்தி தானும - பழிபபொழி பந்தம வீடு பார்த் திடி னருளே யெனறும்" என்னுஞ் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்தாற றெளிக. எனப வென்பது, பகரவீறறுப பலரறிசொல. இதனியலைச சூத்திரவிருத்தியிற் காண்க.()

அன்பினர்க் கெளிவந் துள்ள வாதியம் பரமன் மாது
தன்புடை வைத்து வெள்ளிச சயிலத்திற் பொனமன் றுற்றே
யின்பிய றெரிப்பான் கூடி யிருந்தன னுயிரி யாவு
மனபொடு போகங் கூடி யழுந்தின வினபத் தனறே.

(இ-ள்) அன்பினர்க்கு எளி வந்து உள்ள = அன்பினை யுடையார்க்கு எளிதாக வந்தருட் செய்யும், ஆதி அம் பரமன்=முதல்வராகிய அழகினை யுடைய சிவபெருமான், மாது தன் புடை வைத்து=உமையம்மையாரைத் தமது வாமபாகததில வைத்து,வெள்ளி சயிலத்து இல பொன மனறு உற்று = கயிலை மலைக்கணுள்ள கோயிலின பொற்சபைக் கெழுந்தருளி, இன்பு இயல தெரிபபான் = இனபப பகுதியை யறிவிக்கும்படி, கூடி இருந்தனன = (தேவியுடன) சோநதிருந்தனா, உயிர யாவும = (அதனால) ஆன்மாக்க ளெல்லாம், அன்பு ஒடு போகம் கூடி=அன்போடு இணைவிழைச்சுறறு, இனபததது அழுந் தின=இன்பத்தில மூழ்கி யிருந்தன

அன்பாவது சிவன் முத்தி நிலையிற செய்யப் படுவ தொருசாதனம் போலு மென மயங்கித் தத்தமக்கு வேணடியவாறே பொருளுரைப்பா இச்சை நிகழாவழிச் சிவபோகம அநுபவ மாதல செலலாமையான அதனை மறுதது, அத்துவித நிலையை மறவாது கடைப பிடித்துச் செயயும அனபினை யுடையார்க்கு இறைவனறன திருவடியாகிய சிவானந்தாநு பூதியைத் தலைப்படுத்து மாகலின "அனபினாக் கெளிவந் துள்ள வாதியம பரமன" என றுன இனபமாவது பிறப்பு முதலிய பந்தங் தமமுளொந்து ஒருவனும ஒருத்தியுங் கூடு கினற காலத்து இவவாறிருந்ததெனக் கூறப்படாததாய் நிகழுமஅகம எனபா நச்சினார்க் கினியர். (எஉ)

தூயவிக் காதை கற்றோா வீட்டின்பந் துய்ப்ப ரினனு
ளாயிர நாம மோதி யாரழற கருமஞ் செயவோா
மாயிரு ஞாலங் காததுப பின்னாவான றருவி னீழற்
மீயுயா பசும்பொன னாட்டு மேவிவீற றிருபப ரெனறான்.

(இ-ள்) தூய இ காதை கற்றோா = பரிசுத்தமாகிய இச்சரிததைக் கற்றறிந் தோர், வீடு இனபம துயபபா=முத்தி யின்பததை யநுபவிப்பா, இனனுள ஆயிரம நாமம ஓதி=இததேவியின சகஸ்ர திருநாமங்களைச் சொலலி, ஆா அழல கருமம செயவோா= ஆரிய வக்கினிகாரிய மியறறுபவா, மா இரு ஞாலம காதது = அழகிய பெரிய பூமியை யரசுகொணடு, பினனா=மறுமையில், மீ உயா பசு பொன நாடு மேவி=மேலே யுயாந திருக்கும் பசிய பொன்மயமாகிய சுவாககலோகததை யடைநது, வான தருவின நீழல வீற்றிருபபா எனறான=சிறநத பஞ்ச தருக்களி னிழலில (இநதிரனாக) அரசிருபபா எனறு (திருமால) கூறினா எனக

மாயிரு - மீயுயர் எனபன கோயில போல நினறன அவற்றை "இளந்த வல்ல" என்னும எழுத்ததிகாரப் புறனடை விதியா னியைகக யா - கருமை யெனனுமுபாம இச்சரிதங் கறறோா, சுவாககவினபததை யநுபவித்தபினனா தவஞ்செயசாதியிற பிறநது ததுவஞான முதிா்ந்து சாயுச்சியமடைவாரெனறு உயததுணாக. (எங)

திருக்கலயாண அததியாயம முறறிறறு.

ஆகத் திருவிருத்தம்—௲௩௫



## பதின்மூன்றாவது

# முனிவர்வமிச முரைத்த அத்தியாயம்.

அஃதாவது பிருகுமுதலாகிய முனிசிரேட்டர்களது பிறப்பு வரலாற்றைத் தேவர் முனிவர் கேட்பத் திருமால் செப்பியவற்றைக் கூறும் பாகமாம்.

**அறுசீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.**

அன்னணங் காதை யாவு முரைத்தனை யைய வென்றுப்
பொன்னகர்க் கிறையு நல்யாழ் முனிவனும் புகழ்ந்து வேதம்
பன்னிய பிருகு வாதி முனிவரர் படைப்பு முற்று
நன்னயந் தியம்பு கென்ன நாரணன் னவிற லுற்றான்

(இ-ள்) பொன் நகர்க்கு இறையும் = சுவர்க்க வுலகிற் கதிபனாகிய இந்திரனும், நல் யாழ் முனிவனும் = நல்ல வீணையை யுடைய நாரத முனிவரும், (திருமாலை நோக்கி) ஐய = ஐயனே, அன்னணம் காதை யாவும் = தேவியினது சிறந்த சரித்திரங்களை யாவற்றையும், உரைத்தனை என்று புகழ்ந்து — (தெளிவுற) சொற்றனை யென்று வியந்து, வேதம் பன்னிய பிருகு ஆதி முனிவரர் படைப்பு முற்றும் — வேதப் பொருளை யுபதேசித்த பிருகு முதலிய முனி சிரேட்டர்களுடைய சிருட்டி முழுவதும், நன் நயந்து இயம்புக என்ன — குண முதலிய நன்மைகளைப் பொருந்தச் சொல்லியருளுக வென்று கேட்ப, நாரணன் நவிறல் உற்றான் — திருமால் கூறுவாராயினார். (க)

பிருகுமுனிக் கணிவளைத்தோட் குழையலைக்கும் பிணைநெடுங்கட் கியாதியென்பா
டிருவயிற்றி னருக்கணங்கார்ந் தழகுகுடி யிருந்துகனி செம்மாந் தோங்கும்
வருமுலைச்செந் துவர்க்கனிவாய் வாரொலிமென் கருங்கூந்தன் மயிலஞ்சாயன்
முருகுயிர்க்குஞ் செழுங்கமலப் பொகுட்டுறையு முதல்வியினி துதித்தாளன்றே.

(இ-ள்) பிருகு முனிக்கு = பிருகு என்னு முனிவருக்கு, வளை அணி தோள் = தொடியினைத் தரித்த கைகளையும், குழை அலைக்கும் பிணை நெடு கண் கியாதி என்பாள் = குண்டலங்களை (அளாவி) வருத்தும் மான்போன்ற நீண்ட விழிகளையு முடைய கியாதி யென்பவளது, திரு வயிற்றின் — அழகிய வயிற்றினிடத்தே, அருக்கணங்கு ஆர்ந்து = செவ்விய தேமல் படர்ந்து, அழகு குடி இருந்து = வனப்பு நீங்காதுறையப் பெற்று, கனி செம்மாந்து ஓங்கும் வரும் முலை = மிகவுந் தருக்குற்றுயர்ந்த பருத்த தனங்களையும், செம் துவர் கனி வாய் = சிவந்த பவளம்போலுங் கனிந்த வாயினையும், வார் ஒலி மெல் கரு கூந்தல் = நீட்சியுஞ் செறிவு முடைய மெல்லிய கருமையாகிய கூந்தலையும், மயில் அம் சாயல் = மயில்போலும் அழகிய சாயலையு முடைய, முருகு உயிர்க்கும் செழு கமலம் பொகுட்டு உறையும் முதல்வி = வாசனை வீசுகின்ற செழிய தாமரைப் பொகுட்டினகணிருக்குந் தலைவியாகிய இலக்குமிதேவி, இனிது உதித்தாள் = நன்மையுடன் றோன்றினள்.

பிருகு முனிவர் மனைவியாகிய கியாதியென்பவள் வயிற்றிலே இலக்குமிதேவி யுதித்தனள் "அருக்கணங்கார்ந் தழகுகுடியிருந்து" என்றதுபோல "ஆமணங்கு குடியிருந் தருக்கணங்கு பரந்தனவே" என்று நாமகளிலம்பகத்து நவிலப்படுதலு மறிக. (உ)

பின்னரும்மம் முனியளித்த தாதாவும் விதாதாவும் பிறங்கு கோட்டுப்
பொன்னெடுமால் வரையுயிர்த்த வாயதியை நியதியைவெம் பொறிகள் சிந்து

மணியசெந் தழலசான்றாய் மணம்புரிந்து பிராணன்மிரு கண்டு வென்னும்
பன்னருஞ்சீர்ப் புதல்வர்தமை மகிழ்வினொடு முலகேத்தப் பயந்தா ரன்றே

(இ-ள்) பின்னரும் அ முனி அளித்த தாதாவும் விதாதாவும் = பின்பும் அந்தப் பிருகு முனிவர் பெற்ற தாதா வென்பவனும் விதாதா வென்பவனும், கோடு பிறங்கு பொன் நெடு மால் வரை உயிர்த்த = சிகரங்கள் விளங்கும் பொன்மயமாகிய நீண்ட பெரிய மேருமலைபெற்ற, ஆயதியை நியதியை = ஆயதி யென்பவளையும் நியதி யென்பவளையும், வெம் பொறிகள் சிந்தும் மணிய செம் தழல சான்றாய் மணம் புரிந்து = வெப்பமாகிய பொறிகளைச் சிதறுகின்ற நிலைபெற்ற செந்நிறமுடைய அக்கினி சாட்சியாக விவாகஞ் செய்து, உலகு மகிழ்வின் ஒடு ஏத்த = உலகத்தார் உவகையோடு புகழும்படி, பிராணன் மிருகண்டு என்னும் = பிராணன் மிருகண்டு என்னும் பெயருடைய, பன் அரு சீர் புதல்வரை பயந்தார் = சொல்லற்கரிய சிறப்பினை யுடைய புத்திரர்களைப் பெற்றனர்.

பிருகுமுனிவர் கியாதி யென்பாளை மணந்து இலக்குமி தேவியைப் பெற்றதன்றி, தாதா விதாதா வென்னும் இரு குமாரரையும் பெற்றனர். அது "பிருகு வென்பான் மனைவியாங் கியாதி யெனச்சொல் பெண்ணணங்கு - கரிய கூந்த லிலக்குமியாங் கன்னற் குதலைக் கன்னியையு-முரைசெய் தாதா விதாதாவென் றுரையும் புதல்வ ரிருவரையு-மரிய தவங்கண் மிகவாற்றி யன்பால் வயிறு வாய்ந்தனளால்" எனனும் வாயு சங்கிதைச் செய்யுளானும் பெறப்படும். இலக்குமிதேவி விட்டுணு மூர்த்தியை விவாகஞ் செய்து கொண்டனள். அதனை "சீதள வனசங் கொண்ட செந்திரு வையுமுன் றந்து - மாதவன் றனக்கு நல்கி மாதவத் திருந்தான் மன்னோ" எனக் கந்த புராணத்தில் அருளிச் செய்யப்பட்டதனானறிக. தாதா வென்பவரும் விதாதா வென்பவரும், தரணி யென்னும் பென்னுக்கும் மேருமலையரசனுக்கும் பிறந்த ஆயதி நியதி யென்பவரை முறையே மணந்தனர் எனவும், தாதாவுக்குப் பிராணன் என்பவரும், விதாதாவுக்கு மிருகண்டு என்பவரும் பிறந்தனர் எனவுங் கொள்க. (௯)

போற்றரிய மிருகண்டு புரமூன்று மொருங்கெரித்த புனிதற் போற்றி
யெற்றெருமைக் கடும்பாகன் றனியாணை யரனடியார்க் கெய்தா வண்ண
மாற்றியிடு மார்க்கண்ட முனிவரனை மகிழ்ந்தளித்தான் பிராண னென்போ
னாற்றலரு மறைதேரும் வேதசிர செனுமுனியை யளித்தா னன்றே.

(இ-ள்) போற்று அரிய மிருகண்டு = (யாவராலும்) வணங்கப்படுகின்ற பெருமையிற் சிறந்த மிருகண்டு முனிவன், மூன்று புரமும் ஒருங்கு எரித்த புனிதன் போற்றி = திரிபுரங்களையும் ஒருசேர வெரித்த பரிசுத்தராகிய சிவபெருமானைத் துதித்து, அரன் அடியார்க்கு = (தனக்கன்றி மற்றையச்) சிவனடியார்க்கும், எருமை ஏறு பாகன் தனி ஆணை எய்தா வண்ணம் = எருமைக்கடா வாகனத்தை நடாத்தும் யமனது ஒப்பற்ற கோலுரிமை பொருந்தாதபடி, ஆற்றி இடும் மார்க்கண்ட முனிவரனை மகிழ்ந்து அளித்தான் = (தவத்தைச்) செய்த மார்க்கண்டேயன் என்னும் பெயருள்ள விருத்த சிரேட்டனை யுவகையோடும் பெற்றனன், பிராணன் என்போன் = பிராண னென்று சொல்லப்படு முனிவன், அருமறை தேரும் ஆற்றல வேதசிரசு எனும் முனியை அளித்தான் = அரிய வேதப்பொருளை யாராய்தலில் வல்ல வேதசிரசு என்னும் முனிவனைப் பெற்றான்.

மிருகண்டு முனிவர், தமக்கும் அரனடியார்க்கும் அந்தகனாணை யடையா வண்ணந் தவமாற்றிய மார்க்கண்டேய முனிவரையும், பிராண முனிவர் வேதசிரசு என்னு முனிவரையும் பெற்றனர் என்பதாம். கந்த புராணத்திலே, குச்சக முனிவர்க்குக் கவுச்சிகர் என்னும் மிருக கண்டூய முனிவரும், அவர்க்கு விருத்தை யென்பாள் வயிற்றில் மிருகண்டு

முனிவரும், அவர்க்கு முற்கல முனிவர் புதல வியாகிப மருத்துவதி வயிற்றில் மார்ககண் டேயமுனிவரும உதித்தனா எனக கூறபபட டிருககினறது காசியம்பதியிற் றிருமணி கனறிகைச செமபொ ஞலயத தெனபா லடைநது சிவபூசை யுருறறி யிருநத மார்ககண் டேயர்ககாகக காலனே யுதைத்தது அங்ஙனுகவும், கடவூரெனக காட்டும் பேதம்போல, இஃதுங் கறப பேத மெனப வேதசிரசைத துதிமான எனவும், அவாககு அசாவான் என்னும குமாரன பிறந்தான எனவும் விண்டு புராணத்திலே விளமபபபட்டது (ச)

தழல்வேளவி யினிதாறறு மரீசிமுனி சம்பூதி யிடததிற றாய
நிழனமேவு பௌரணபபோ மைந்தனேயுந திருட்டிமுத னிகழத்து நானகு
குழைமேவு மதாநெடுங்கண மகளிரையு மினிதளிந்தான கோதில சீரததிப
பழமறைதோ பவுரணனும விரசனொடு பாவதனேப் பயந்தா னனறே.

(இ-ள்) தழல் வேள்வி இனிது ஆற்றும் மரீசி முனி=அக்கினி கொண்டு செய்யப் படுமயாகங்களைச செபபமாகச் செயது முடிககும மரீசி முனிவன(தான மணநத) சம்பூதி இடத்தில=சம்பூதியெனபவ ளிடததி னினறும,தூய நிழல மேவு பௌரணன பேர் மைந் தனேயும = சுததமாகிய சாயையினைக கொணட பௌரணன எனனும் பெயரை யுடைய புத்திரனேயும, திருட்டி முதல நிகழ்த்து=திருட்டி முதலாகச் சொலலப்படுகினற, குழை மேவு மதா நெடு கண நானகு மகளிரையும = குணடலஙகளை யளாவும மதாத்து நீணட கண்களையுடைய நானகு புத்திரிகளையும, இனிது அளிந்தான=நன்மையுடன பெறறனன, கோது இல சீர்நதி பழ மறை தோ பவுரணனும = குறற மறற புகழினையும பழமை யாகிய வேதஙகளை யாராயதலையு முடைய பௌரண முனிவன, விரசன ஒடு பாவதனே பயந்தான=விரசனேயும பருவதனேயும பெறறனன

மரீசி முனிவா சம்பூதியைக கூடிப் பௌரணன என்னும புத்திரனேயும், திருட்டி முதலிய நானகு மகளிரையும பெறறனா பௌரணா விரசனேயும பருவதனேயும பெற றனர் எனபதாம. பௌரணரைப பௌர்ண மாசன எனவுங் கூறுப. திருட்டி முதலிய புத்திரிக ளாவார்—திருட்டி, சிரேட்டை, பூரணை, கிரிசி எனனு மிவர்களாம. அதனே "அரி தவழ் நெடுங்க ணணஙகு சமபூதி யருநதவ மரீசியை மருவி-புரைபெறு சிரேட்டை பூரணை திருட்டி கிரிசியா மிவாகளை யுயிாததாள" என இலிங்க புராணங் கூறி யதனு னறிக. துட்டி, திருட்டி, கிருட்டி, அபசிதி யெனவும பெயா கூறுவாருமுளர். (ரு)

புலத்தியற்குக் கமைவயிற்றிற கருததமனுரு சயிட்டினுவும பொருவி லாத
வுலப்பறுசீா மிகவோஙகு மருவரீ வானுமுவந துதித்தா நாளு
மலக்கணறு மத்திரிநல லனசூயை யவவயிற்றி னலங்கு சோமன
கலககமிறத் தாததிரயன றுருவாச னெனுமிவரை களிபபிற றந்தான்.

(இ-ள்)புலத்தியன் கு கமை வயிற்றின=புலத்தியமுனிவர்க்குக் கமையென்பவள் வயிறறினினறும், கருத்தமனும் சயிட்டினுவும் = கருத்தமமுனிவனுரு சயிட்டினு முனிவ னும், பொருவு இலாத உலப்பு அறு சீா மிக ஓங்கும்=சமான மில்லாத அழிவறற புகழை மிகச் செய்யும், அருவரீவானும் உவந்து உதிததாா=அருவரீவான என்பவனும் மகிழ்வோ டுந் தோன்றினர், நாளும அலககண அறும் அத்திரி=எந்நாளும் (பிறவித)துனப மிலலாத அத்திரி முனிவன, நல அனசூயை அ வயிறறின=நனமை தரும அனசூயை யென்பவளது உதாத்தி னின்றும, அலங்கு சோமன=விளககமுடைய சநதிரனும்,கலககம் இல் தத்தாத் திரயன் துருவாசன எனும் இவரை களிபபின தந்தான் = மனககலக்க மில்லாத தத்தாத் திரயனுந் துருவாசனு மாகிய இம்மூவரையு முவகையோடும் பெற்றனன.

புலத்தியர்க்குக் கருத்தமனும், சயிட்டுணுவும், அருவரியானும் பிறந்தனர் அத்திரிக்குச் சந்திரனும், தத்தாத்திரயனும், துருவாசனும் உதித்தனர் என்பதாம் காத்தமன், சகிஷ்ணு, அருவரியான் எனவும் பெயர். அனசூயை யென்பாள் சத்திநேத்திரன், பவவியன், ஆபோமூர்த்தி, சனீசன், சோமன் என்னும் ஐந்து புதல்வர்களையும், தத்தரி சுருதி யென்னும் இரு புதல்வியரையு முயிர்த்தனள் என்றுங் கூறுவர். அதனை "அத்திரி மனைவியாமன சூயை யறைந்திடு சத்திநேத் திரன்சொன - மெய்த்தவம் புரியும் பவ்விய னாபோமூர்த்தியெய் தெரிந்திடு சனீச-னெத்திசை யேனும் விளக்கிடு சோம னெனுமிவ ரைவரோடெழில் சோ-தத்தரி நெடுங்கட் சுருதி யென் றுரைக்கும் தாழ்குழ லணங்கையு முயிர்த்தாள்" என்வருஞ் **சைவபுராணச்** செய்யுளாற் றெரிக. சிலவிடத்தில் சத்தி நேத்திரன், சோமன், சனி, சங்கதானன் என நால்வர் என்று கூறப்பட்டுள்ளது. (௬)

அங்கிரா வெனுமுனிவற் கமிழ்துயிர்த்து விடமுமிழு மலங்கு வேற்கண்
மங்கையா மிருதிகுகு சினீவாலி யிராகையநு மதியென் றோதுங்
கொங்குசோ நறுங்கூந்தற் குழைதடவுந் துயிர்பருகுங் கொடிய வேற்கட்
டிங்களா மெனவரவம் பைந்தெழுவாண் முகத்தசிறு மியரை யீன்றாள்.

(இ-ள்.) அங்கிரா எனும் முனிவன்கு = அங்கிரா வென்னும் பெயரையுடைய இருடிக்கு, அமிழ்து உயிர்த்து விடம் உமிழும் அலங்கு வேல் கண் = அமிர்தத்தைக் கொடுத்துப் பின்னர் நஞ்சைக் கக்காநிற்கும் பிரகாசமுடைய வேலாயுதத்தை நிகர்த்த விழிகளையுடைய, மங்கை ஆம் மிருதி = மங்கைப் பருவத்த ளாகிய மிருதி யென்பவள், குகு சினீவாலி இராகை அநுமதி என்று ஓதும் = குகு சினீவாலி இராகை அநுமதி யென்று சொல்லப் படுகின்ற, கொங்கு சோர் நறு கூந்தல் = வாசனை யமைந்த நறிய குழலையும், குழை தடவந்து உயிர் பருகும் கொடிய வேல் கண் = குண்டலத்தை யளாவி யாவியைக் குடிக்குங் கொடிய வேலாயுதத்தைப்போன்ற கண்களையும், அரவம் = இராகு வென்னும் பாம்பானது, திங்கள் ஆம் என பைந்து எழும் = சந்திர னென்று நினைத்துப் படம் விரித்து எழும்புகின்ற, வாள் முகத்த சிறுமியரை ஈன்றாள் = (அத்துணை) ஒளி கொண்ட முகத்தினராகிய பெண்களையும் பெற்றாள்.

அங்கிரா முனிவர்க்கு குகு, சினீவாலி, இராகை, அநுமதி யென்னும் நான்கு புத்திரிகள் பிறந்தனர் என்க. இவர்களோடு அங்கிரீசன், பரதனென்னும் இரு புத்திரர்களையும் பெற்றனர் என வுய்த்துணர்க. அது "அங்கிரா மிருதி யென்னு மாயிழை தனைமணந்து - பங்கமி லங்கி ரீசன் பரதனு மகாரைப் பெற்று - மங்கையர் நால்வர் தம்மை மகிழ்ந்துட னளித்தா னன்னோர் - தங்குடிப் பிறந்த மேலைத் தவத்தரு மளப்பி லோரால" என்னும் **கந்தபுராணத்** திரு விருத்தத்தா னுணரப்படும். (எ)

மறைபயிலும் புலத்தியன்ற பிரீதிநல மகிழ்வெய்தி வேத வாகு
திறல்கெழுசீர்க் குமபோனி யெனுமைந்த ரிருவரையுஞ் சிறப்பி னல்கி
நறைகமழுங் கருங்கூந்தற் சந்நதியை யுயிர்த்தனளச் சந்நதியென் பாளு
மறுபதினா யிரமவால கில்லியரைக் கிரதுவினை யணைந்து பெற்றாள்.

(இ-ள்.) மறை பயிலும் புலத்தியன் = வேதாத்தியயனஞ் செய்யும் புலத்திய விருடி, நல் பிரீதி நலம் மகிழ்வு எய்தி = அழகிய பிரீதி யென்பாளின் போகவின்பத்தைக் களிப்புடன் அடைந்து, வேத வாகு = வேதவாகு முனியும், திறல் கெழு சீர் குமபோனி எனும் மைந்தர் இருவரையும் = வலிமையைக் கொண்ட கும்பயோனி யென்னும் அகத்திய விருடியும் ஆகிய இரு புத்திரர்களையும், சிறப்பின் நல்கி = மேன்மையுறப் பெற்று, நறை கமழும் கரு கூந்தல் சந்நதியை உயிர்த்தனள் = வாசனை வீசுங் கரிய குழலினை யுடைய சந்

நதி என்னும் புதல்வியையும் பெற்றனள், சந்நதி என்பாளும் கிரதுவினை அணைந்து = சந்நதி யென்னும் புத்திரியும் கிரது வென்னும் முனிவனைச் சேர்ந்து, அறுபதினா யிரம் வாலகில்லியரை பெற்றாள் = அறுபதினாயிரம் வாலகில்லியரை யீன்றாள்.

புலத்திய முனிவர் பிரீதி யென்பாளைச் சேர்ந்து வேதவாகு கும்பயோனி யென்னு மிரு புத்திரரையும், சந்நதி யென்னு மொரு புதல்வியையும் பெற்றனர் அவருட் சந்நதி கிரது முனியைச் சேர்ந்து அறுபதினாயிரம் வாலகில்லியரைப் பெற்றனள் என்பதாம்.

கும்பயோனி கும்போனி யென மருவியிறுதி ஓர் யாக குண்டத்திற் றோன்றினு ராகலின் முனிவராகக் கொள்ளப் பெயர் மொழியப்படும் கும்போனி என்பதை "தெய்யோனி, தேம்போனி" எனப் பாடங்கொள்வாரு முளர் அது முரணென விடுக்க வென்னை? "புலத்தியன் மனையாள் பிரீதியென் றுரைக்கும் பொற்கொடி பொருவறு சிறப்பா நலத்தகு தவத்தி னகத்தியன் றன்னை நவையற வளித்தனள்" என வாயு சங்கிதை கூறுவதனானும், "தத்தோத்திரி யென்னு மகத்தியனைப் பிரீதி பெற்றனள்" என விஷ்ணு புராணம் விளம்பலானு மென்க அற்றேல், "அகத்தியனாரும் தென்றிசைக்குப் போதுகின்றவர் கங்கையா ருழைச் சென்று காவிரியாரையும், யமதக்கினியாருழைச் சென்று அவர் மகனார் திரணதூமாக்கினியாரையும் வாங்கிக் கொண்டு, புலத்தியனா ருழைச் சென்று அவருடன் பிறந்த குமரியார் உலோபா முத்திரையை யவர் கொடுப்ப நீரேற்று இரீஇப் பெயர்ந்து" என உச்சிமேற் புலவர் கொள் மொல்காப்பியத்திற்கு நச்சினார்க்கினியர் வேதமதுரை நச்சினார்க்கினியருரைத்தன மாறுமோ வெனின், பிரீதி வயின் தத்தோத்திரி யெனப் பிறந்த விவரே சுவாயம்பு மனுவந்தரத்தில் அகத்தியரா வவதரித்தனர் என வடமொழிப் புராணத்திடமிருத்தலா லென்றெனக வாலகில்லிய ராவார் ஊர்த்துவ ரேதசராய், அங்குட்ட விரலிறைப் பிரமாண வடிவினராய், சூரியனைப்போன்ற பிரகாச முடையரா யிருக்கு மொருவகை யிருடி கூட்டத்தவர். (அ)

கற்புருவு கொண்டனைய வருந்ததிநல் வசிட்டனருள் கலந்து மேவிச்
சொற்றசவ னனாசனூர்த்த வாகுகாந் திரன்புகலுஞ் சுநபா வோடு
மற்புடைய சுக்கிரன்பின் னங்கனென்று மெழுமகவை யயில்வே லொண்கட்
பொற்புவழிந் தொழுகுமுகப் பூவையையிவ் வுலகுய்யப் பொலிவி னீன்றாள்.

(இ ள்) கற்பு உருவு கொண்டு அனைய அருந்ததி = கற்பே யொரு வடிவு கொண் டுற்றாற் போன்ற அருந்ததி யானவள், நல் வசிட்டன் அருள் கலந்து மேவி = நன்மை பொருந்திய வசிட்ட முனிவரை யன்புடனே தழுவிச் சேர்ந்து, சொல் சவனன் ரசன ஊர்த்தவாகு காந்திரன் = புகழப்படுகின்ற சவனன் இரசன னூர்த்தவாகு காந்திரன், புகலும் சுநபா ஓடு = சொல்லப்பட்ட சுநபா வென்பவனோடு, மற்பு உடைய சுக்கிரன் = (யாவரிடத்தும்) அன்பினை யுடைய சுக்கிரன், பின் அங்கன் என்னும் = கனிட்டனாகிய அங்கன் என்று சொல்லப்படுகின்ற, எழு மகவை = ஏழு புத்திரர்களையும், அயில் வேல் ஒண் கண் = கூர்மையாகிய வேலாயுதம் போலும் ஒள்ளிய விழிகளையும், பொற்பு வழிந்து ஒழுகும் முகம் பூவையை = அழகு நிறைந்து தேங்கும் முகத்தினையு முடைய பூவை யென்னும் பெயருள்ள புதல்வியையும், இ உலகு உய்ய பொலிவின் ஈன்றாள் = இந்த நிலவுலகம் உய்யுமபடி சிறப்போடு பெற்றனள்.

"சொற்றரசன னிரனூர்த்த வாகுசவ னன்புகலுஞ் சுநபா வோடு" என்வும் பாடம் பூவை யென்பாளுக்குப் புண்டரீகை யெனவும் பெயர் அதனை "பழுதறு தவத்தான் மிக்குயர்ந் துறையும் வசிட்டமா முனிவரன் றனைத் தொழுதகு கற்பி னூர்ச்சசை யென்ற றுவைக் குரு துணையலாகக் கொம்பரன் னவட்டான் - மழைமதர் நெடுங்கட் புண்டரீகை யென்னுட வாணுத

தன் மடந்தைதன்னையுமால் - விழைவுற வமரும் புதல்வரோ ரெழுவர் தம்மையு மேதக வளித்தாள்" என்னும் **வாயுசங்கிதைச்** செய்யுளா னறிக. (௯)

வன்னியெனு மழற்கடவுள் சுவாகையெனு மனைவியிடத் தன்பு கூர்ந்து
பன்னுதிறற் பாவகனைப் பவமானன் றனைச்சுசியைப் பரிவி னீன்றா
னன்னவரி லரணிதனிற் பிறந்தவழல் பவமான னழன்று வீசு
மின்னிடத்திற் பிறந்தவழல் பாவகனாமென் சுசியெனுந்தீ வடவைத் தீயே.

(இ-ள்.) வன்னி எனும் அழல் கடவுள்=வன்னி யென்னும் பெயரை யுடைய அக்கினி தேவன், சுவாகை எனும் மனைவி இடத்து அன்பு கூர்ந்து = சுவாகை யென்கின்ற தனது தேவியினிடத்து விருப்பு வைத்துப் புணர்ந்து, பன்னு திறல் பாவகனை = புகழ்ந்தக்க வெற்றியை யுடைய பாவகனையும், பவமானன் சுசியை பரிவின் ஈன்றான் = பவமானனையும் சுசியென்பவனையும் பெற்றனன், அன்னவரில் = அம்மூவர்களுள், பவமானன் = பவமானன் (யாரெனில்) அரணி இல் பிறந்த அழல் = தீக்கடைகோலி னின்றுந் தோன்றும் அக்கினியாம், பாவகன்=பாவகனுவான், அழன்று வீசும் மின் இடத்தில் பிறந்த அழல்= வெடிபடுசெய்து ஒளியைக் காலுகின்ற மின்னலி னின்றுந் தோன்று மக்கினியாம், மென் சுசி எனும் தீ=மிருதுவாய சுசி யென்னு மக்கினி, வடவை தீயே = வடவையி னின்றுந் தோன்றும் நெருப்பேயாம்.

வன்னி = ஓமிக்கப்பட்டவைகளைத் தேவர்களை யடையச் செய்பவன். இவனைப் பிரம தேவனின் பிரதம புத்திரன் என்பர். "காருமிழ் மின்னி னனலிபா வகனு மரணியிற் கனல் பவமானன் சூரிய னிடத்தி னழலினைச் சுசியென் றுரைப்பரா றுகளற வுணர்ந்தோர்" என்ற **சைவபுராணக்** கூற்றினால், சுசி யென்னு மக்கினியைச் சூரியனிடத்தினின்றுந் தோன்று மக்கினியாகவுங் கொள்ப. பாவகன்=சுத்தமாக்குகிறவன். சுசி = சுத்தமுடையவன், சுத்திகரிக்கச் செய்கின்றவன். தன் இரண்டுஞ் சாரியை. ஏ-தேற்றம். (௰)

அன்னவழற் கடவுளர்கள் மூவர்களு மொவ்வொருவ ரைம்மூன் றாக
மன்னியநாற் பானைந்து மகவீன்றா ரவர்மூ தாதை யோடுந்
துன்னுமழற் கடவுளர்தந் தொகையோதி னொன்றொழித்த வைம்பா னாகப்
பன்னிடுவ ரீங்கிவர்கள் சிவநெறியி னினிதொழுகும் பண்பி னோரே.

(இ-ள்.) அன்ன அழல் கடவுளர் மூவர்களும்=அந்த அக்கினிதேவர் மூவரும், ஒவ்வொருவர் ஐம்மூன்று ஆக=ஒவ்வொருவர் பதினைந்தாக, மன்னிய நாற்பான் ஐந்து மகவு ஈன்றார்=நிலைபெற்ற நாற்பத்தைந்து புத்திரர்களைப் பெற்றனர், அவர் = அம்மூவருடன், மூதாதை ஒடும் துன்னும் அழல் கடவுளர் தம் தொகை ஓதின் = பிதா மகனாகிய அக்கினியையுங் கூட்டி வந்த அக்கினி தேவர்களின் தொகையைச் சொல்லுமிடத்து, ஒன்று ஒழித்த ஐம்பான் ஆக பன்னிடுவர்=நாற்பத்தொன்பதின்மராகச் சொல்வார்கள், ஈங்கிவர்கள் சிவ நெறியில் இனிது ஒழுகும் பண்பினோரே=இவர்கள் யாவருஞ் சைவ நன்னெறியிற் சிறந்து நடக்குந் தன்மையை யுடையவரேயாவர். மற்று அசை.

பாவகன், பவமானன், சுசியென்னும் அக்கினிதேவர் மூவரும் ஒவ்வொருவர் பதினைந்து புத்திரர்களாக நாற்பத்தைந்து குமாரரைப் பெற்றனர். ஆக அக்கினி தேவர்களது தொகை நாற்பத்தொன்பதாம்.

பாவகனுக்கு ஆவியவாகனும், பவமானனுக்குக் கவ்வியவாகன் என்பவனும், சுசிக்கு சகரக்ஷகன் என்பவனும் பிறந்தனர் என்றும், இவர்களுள் ஆவியவாகன் தேவர்க

கும், கவ்வியவாகளை தென்புலத்தார்க்கும், சுகாக்களை அசுரர்க்கும் அக்கினியாக விருப்பர் என்றும், அவர் வழித்தாக மற்றைய அக்கினிதேவர் தோன்றினர் என்றுங் கூறுப. சிவ நெறியி லினி தொழுகும் பண்பாவது—பாவராயினும் வேள்வி கொண்டு அவிசொரியின், அதனை முழு முதற்கடவுளாய சிவபெருமானுக்கு ஆக்கிப் பயன்படச்செய்து, சொரிந்தவரின் பழவினைகளைப் போக்கி முத்திகூட்டச் செய்தலாம். அதனை "இயம்பி யிவர்தம் மரபுதித் திரண்டோ டிருபத்திற் திரட்டி செந்தழல்கள் - வயங்கியே யுறையு மவற்றினின் முறையே மாசற வவியினைச் சொரியிற்-பயங்கமென்ன டோரும் புனைந்துறை கின்ற புரிசடை யண்ணலுக் காக்கிப்-பயன்படு மதனாற் பழவினை முழுதும் பற்றுவிட் டகன்றிடு மன்றே" என்றும் வாயு சங்கிதைச் செய்யுளா னறிக (கக)

மறைகிடந்து விளையாடுஞ் செந்நாவே தியனிடத்தின் மகிழ்வினோடு
முறையின்மகம் புரிந்தாரும் புரியாரு மாயபிதிர்க்கண மொய்ம்பினோடு
மறைதருமக் கினிசுவத்தர் வருகிடத்த ரெனும்பெயரோ டமைந்தார் தேவர்
செறிதருமா னுடரிவர்தம் பிதிர்க்களென மற்றிவரைச் செப்பு வாரால்

(இ-ள்) மறை கிடந்து விளையாடும் செந்நா வேதியன் இடத்தில் = வேதங்கள் குடிகொண்டுலாவுஞ் செவ்விய நாவினை யுடைய பிரமனிடத்தினின்றும், மகிழ்வினோடு முறையின் மகம்புரிந்தாரும் புரியாரும் ஆய=உவகையுடன் விதிப்படி யாகத்தைச் செய்தவருஞ் செய்யாதவருமாகி, மொய்ம்பினோடு அறைதரும் அக்கினிசுவத்தர் வருகிடத்தர் எனும் பெயரோடு பிதிர்க்கள் அமைந்தார் = உறுதியுடன் மொழிகின்ற அக்கினிசுவத்தர் வருகிடத்தர் என்னு நாமத்துடன் பிதிரர்கள் தோன்றினர், இவரை=இவ் விருவகைப் பிதிரர்களையும், செறி தரு தேவர் மானுடர் இவர் தம் பிதிர்க்கள் என செப்புவார் = நெருங்கியுள்ள தேவர் மனிதர் என்னு மிவர்களது பிதிர்க்களென்று (மேலோர்) கூறுவர். மற்று ஆல அசைகள்

அக்கினிசுவத்தர் யாகஞ் செய்தவராய தேவபிதிர்க்கள் எனவும், வருகிடத்தர் யாகஞ் செய்யாதவராய மானுடபிதிர்க்களெனவுங் கூறப்படுவர். இவ் விருவகையருடன் சவுமியர் என்றும் ஒருவகைப் பிதிரரையுங் கூட்டிப் பிதிரர்கள் மூவகையராக விஷ்ணு புராணத்தில் விளம்பப்பட்டது. அக்கினிஷ்வாத்தா, பர்ஹிஷத்தா என்னும் வடமொழிகள் அக்கினிசுவத்தர் வருகிடத்தர் எனத் தற்பவமாயின (கஉ)

உரைத்திடுமக் கினிசுவத்த ரெனுந்தேவர் பிதிர்க்களுநீ ளுலப்பில் சீர்த்தி
நிரைத்தவரு கிடத்தரெனு மானுடர்தம் பிதிர்க்களுநன் னெறிவழாது
முருக்கிதழ்மென் சுவைத்துணை முலைமுகட்டுப் புயந்திளைப்ப முயங்கிச் செய்ய
திருக்கிளர்மே னியைத்தூய வைதரணி தனையிதயஞ் சிறப்ப வீன்றார்.

(இ-ள்) உரைத்திடும் அக்கினிசுவத்தர் எனும் தேவர் பிதிர்க்களும்=சொல்லப்பட்ட அக்கினிசுவத்தர் என்கிற தெய்வப் பிதிரரும், நீள் உலப்பு இல் சீர்த்தி நிரைத்த=மேம்பட்ட அழிவில்லாத புகழினை வரிசையாகக் கொண்ட, வருகிடத்தர் எனும் மானுடர் தம் பிதிர்க்களும் = வருகிடத்தர் என்னும் மானுடப் பிதிரர்களும், நல் நெறி வழாது=நல்லொழுக்கத்தினின்றுந் தவறாமல், முருக்கு இதழ் மென் சுவை=முருக்க மலர்போன்ற அதரங்களையுடைய மிருதுவாய சுவை யென்றவளது, துணை முலை முகட்டு புயம் திளைப்ப முயங்கி=இரு தனங்களினுச்சியுந் (தமது) தோள்களிற் றோயும்படி சேர்ந்து, செய்ய திரு கிளர் மேனியை = செவ்விய அழகு விளங்கும் மேனியென்பவளையும், தூய வைதரணி தனை= சுத்த முடைய வைதரணி யென்பாளையும், இதயம் சிறப்ப ஈன்றார்=மனங் களிக்கப் பெற்றனர். (கங)

மேனையெனு மணங்கரசி மலையரையன் புயந்தழுவி வியப்பினோடு
மூனமறு மைந்நாகம் பறவைப்பேர் வரைகங்கை யொளிகுலாய
பானிலவுக் கதிர்பரப்பி நள்ளிருண்மேயந் தழுகொழுகும் பனிமென்கோட்டுக்
கூனன்மதி வடந்தாழ்ந்த கொம்மைமுலை யுமையிவரைக் குறிப்பினீன்றாள்

(இ - ள்) மேனை எனும் அணங்கு அரசி = மேனை யென்னும் பெயரை யுடைய பெண்ணரசியானவள், மலை அரையன் புயம் தழுவி = இமய மலையரசனது தோளைச் சேர்ந்து, ஊனம் அறு மைந்நாகம் பறவை பேர் வரை = குற்ற மற்ற மைநாகமுங் கிரவுஞ்சமலையும், கங்கை = கங்கையும், ஒளி குலாய பால் நிலவு கதிர் பரப்பி = ஒளி விளங்கும் வெள்ளிய சந்திரிகையை விரித்து, நள் இருள் மேய்ந்து அழகு ஒழுகும் = நடு நிசியையும் விழுங்கி அழகு ஒழுகுகின்ற, பனி மென் கோடு கூனல் மதி வடம் தாழ்ந்த = குளிர்ந்த மிருதுவாய சிகரத்திற் பொருந்திய வளைந்த பிறைச் சந்திரனைப்போல முத்து மாலை தங்கப் பெற்ற, கொம்மை முலை உமை இவரை குறிப்பின் ஈன்றாள் = இளங் கொங்கைகளை யுடைய உமாதேவியாரும் ஆகிய இவர்களைப் பயனடையுமாறு மகிழ்வுடன் பெற்றாள்

மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின் மொழியா ததனையு முட்டின்றி முடித்தலால், வைதரணி யென்பவள் மேரு மலையைச் சேர்ந்து நியதி, ஆயதி, வேலை யென்னும் புதல்வியரையும், மந்தர மலையென்னும் புத்திரனையும் பெற்றனள் எனக் கொள்க. நீருக்கும் நெருப்புக்கும் இறையாயுள்ள தெய்வங்களை யப்பெயராற் கூறல் போல, மலையை யிடமாக வுடைய தெய்வத்தை மலை யெனக் கூறலும் வழக்கு (௧௪)

கொம்மைமுலை வேய்நெடுந்தோட் குழையலைக்கு மதர்நெடுங்கட் கொவ்
வைச்செவ்வா யெம்மையா ளுடையவள் கதைமுன்ன ரிசைத்தனம்பின் னி
யம்பு தக்கன், செம்மைசேர் புதல்வியர்தம் மக்கள்வருந் தோற்றமனந் தெளி
யச் சொற்றேம், மம்மர்நீர் கேட்பனகள் யாவையுநன் கியம்புவமென் றறைந்த
லோடும்

(இ-ள்) கொம்மை முலை = இளந் தனங்களையும், வேய் நெடு தோள் = மூங்கில் போன்ற நீண்ட தோள்களையும், குழை அலைக்கும் மதர் நெடு கண் = குண்டலங்களைத் தாக்கும் மதர்ப்புள்ள நீண்ட விழிகளையும், கொவ்வை செம் வாய் = கோவைப் பழம்போன்ற சிவந்த வாயினையு முடைய, எம்மை ஆள் உடையவள் தன் கதை = எம்மை யடிமையாக வுடைய பார்வதி தேவியின் சரித்திரத்தை, முன்னர் இசைத்தனம் = முன்னாகக் கூறினேம், பின் = பின்னர், இயம்பு தக்கன் செம்மை சேர் புதல்வியர் தம் மக்கள் வரும் தோற்றம் = சொல்லப்பட்ட தக்கனது அழகு பொருந்திய புதல்வியரின் சந்ததிகள் தோன்றிய வரலாற்றையும், மனம் தெளிய சொற்றேம் = மனந் தெளிவடையுமாறு கூறினேம், நீர் கேட்பனகள் யாவையும் = (இன்னும்) நீவிர் கேட்கின்ற வைகளெல்லாவற்றையும், நன்கு இயம்புவம் என்று அறைதலும் = தெளிவாகச் சொல்லுவேமென்று (திருமால்) கூறுதலும்

இதுமுதல் இருசெய்யுள் குளகம். அம்ம ஓடு - அசைநிலைகள் (௧௫)

வாளமரி னறம்புரியு மன்னவர்தந் தோற்றநனி வழங்கு கென்னப்
பாளைகமழ் நறுங்கூந்தற் புலோமசைவெம் முலையானைப் பாகனாய
கோளரியி னற்றுறைபோய மகதியாழ் முனிவணங்கிக் கேட்ட லோடு
மாளரியா யிரணியன்ற னுரம்பிளந்த நெடுமாய னறைதலுற்றான்.

(இ-ள்) பாளை கமழ் நறு கூந்தல் புலோமசை = (கமுகம்) பாளைபோல வாசனை மணக்கின்ற நல்ல அளகத்தினை யுடைய இந்திராணியினது, வெம் முலை யானை பாகன் =

விருப்பமிக் கனமாகிய யானையைக் கைபற்றும் மித்திரனும், தாபசேனாவியின் நல் துறை போய—பரிசுத்தமுடைய கேள்வியறிவாகிய நல்ல பகுதியில் நேறுதலடைந்த, மகதி யாழ் முனி=மகதியென்னும் யாழினையுடைய நாரதமுனிவரும், வணங்கி=பணிந்து, வாள் அமரின் அறம் புரியும் மன்னவர் தம் தோற்றம்=வாட்போரிற்றமது (தமது) தருமத்தை நடாத்தும் அரசர்களது பிறப்பு வரலாற்றை, நவில் வழங்குக என்ன கேட்டலும்=விரிவாகச் சொல்லியருளுக வென்று கேட்டலும், வாள் எரி அய—வலிய நரசிங்க வடிவாகி, இரணியன் தன் உரம் பிளந்த=இரணியனது மார்பினைக் கிழித்துக் கொன்ற, நெடு மாயன் அறைதல் உற்றான்=நீண்ட வடிவினையுடைய திருமால் கூறுவாராயினர் என்க

மகதி என்றது பெரியாழ் எனக் கொள்க. அருங்கலம், பெருங்கலமெனபவு மது. அஃதாவது கோட்டினளவு பன்னிரு சாணும், வணரளவு சாணும், பத்தரளவு பன்னிரு சாணும், இப்பெற்றிக் கேற்ற ஆணிகளும், திவவும், உந்தியும் பெற்று, ஆயிர நரம்பு தொடுத்து நடப்பது. அது "ஆயிர நரம்பிற் றியாழாகு - மேனை யுறுப்பு மொப்பன கொளலே பத்தரளவுங் கோட்டினளவு-மொத்த வென்ப விருமுன் றிரட்டி-வணர்சாணொழித்தென வைத்தனர் புலவர்" என்ற **நாடகத்தமிழ்நாற்** சூத்திரத்தாற் கண்டது. இசையிற் பெரியோன் நாரதமுனி யாகலானும், "நல்முறத் யாழியிற் றானவர் தருக்கற்ப - டுலமக ளாளர் புரிநரம் பாயிரம் - வலிபெறத் தொடுத்த வாக்கமை பேரியாழ் - செலவு முறை யெல்லாஞ் செலகையிற் றெரிந்து-நாரத கீதக் கேள்வி நவிற்று" என்பது பெருங் கதை யென்னும் **உதயணகாவியந்** துரைத்தனராகலானும், பேரியாழ் முனிவருக்கே பொருந்தியதா மெனக. (க௯)

முனிவர் வம்சமுரைத்த அத்தியாய முற்றிற்று

ஆகத் திருவிருத்தம்—௩ ௧௧



பதினொன்காவது

# தக்கனைச் சபித்த அத்தியாயம்.

அஃதாவது தக்கனது சந்ததிகளின் வரலாற்றைக் கூறி, மனுவரச மரபு சொல்லைந்தார் தக்கன் சிவபெருமானாற் சபிக்கப்பட்டு மாசிலந்து மாறுட வேந்தராய் பிறந்த சரித்திரத்தைக் கூறிய பாகம்.

**அறுசீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.**

அலங்கிலைவேற் சுவாயம்பு மநுவெனபோன் சதரூபை யாக மேவி
யிலங்குபுகழ்ப் பிரியவிர தனைப்புகழுத் தானபா தனையாவ கின்றான்
வலங்கெழுதோ ளுத்தான பாதனியற் றருவனையுண் மகிழ வின்றான்
றுலங்கியசம புவைமணந்து தானியனைச் சிட்டனையுந் துருவ னீன்றான்

(இ-ள்) அலங்கு இலை வேல் சுவாயம்பு மநு என்போன் = அசைகின்ற இலை போன்ற வேலாயுதத்தை யுடைய சுவாயம்பு மநு வென்பவன், சதரூபை ஆகம் மேவி= சதரூபை யென்பவளின் மார்பினைப் புல்லி, புகழ் இலங்கு பிரிய விரதனை=கீர்த்தி விளங் கும் பிரியவிரதனையும், புகழ் உத்தான பாதனை ஈன்றான்=கீர்த்தியை யுடைய உத்தான பாதனென்பவனையும் பெற்றனன், (அவருள்) வலம் கெழு தோள் உத்தானபாதன்= வெற்றி பொருந்திய புயங்களை யுடைய உத்தானபாத னென்பவன், இயல் துருவனை உள மகிழ ஈன்றான்=அழகின் மிக்க துருவன் என்னும் புத்திரனை மனங்களிப்புறப் பெற்றான்,

ஆ துருவன் = அந்த துருவனென்பவன், துலங்கிய சம்பூவை மணந்து = பிரகாசிக்குஞ் சம்பூ வென்பவளை விவாகஞ் செய்து, தானியனை சிட்டனை ஈன்றான் = தானியனையுஞ் சிட்டனென்பவனையும் பெற்றனன் என்க.

உத்தானபாதனுக்குச் சுருசி, சுநீதி யென்று இருமனைவிய ரிருந்தனர். அவருள் சுருசியிடத்திற் றான் உத்தானபாதன் அதிக பற்றுடையவன். சுருசிக்கு உத்தமனென்பவனும், சுநீதிக்குத் துருவனென்பவனும் பிறந்திருந்தனர். ஒருநாள் உத்தமன் றன் றந்தை தொடையிலிருக்கத் துருவனு மவனொருடையிலேறி யிருந்தனன். அது கண்ட சுருசி யென்பவள் பல்லைக் கொறித்துத் துருவனே! அவர் தொடையில் என் புத்திரனுடன் ஒப்பாக விருத்தற்கு நீ தகுந்தவனல்லை ஆதலின் இறங்கக்கடவை யென்று மொழிந்தது கேட்ட துருவன் தந்தையின் முகத்தைக் கண்ணீர் சொரிந்து பார்த்தான். தந்தை சுருசி மீது கொண்ட மோகத்தினாலே சிறிது மிரக்கமின்றி வாளா விருந்தனனாக அழுதழுது தாய்பாற் சார்ந்தான். அவட்கு நிகழ்ந்த வெல்லாங் கூறித் துக்கமும் நாணமும் மானமும் ஒருங்கு பிடித்து மனத்தை யலைப்பத் தனனுள்ளக் கருத்தை யன்னைக்குத் தெரிவித்து, கௌசிக முனிவர்பாற் சென்று உபதேசம் பெற்றுத் தவஞ்செய்தான். தவநிலையில் வியாபக பரம்பொருள் அவனுளத்திற் குடிகொண்டிருந்த விசேடத்தால் இடக்காலைத் தூக்கி நின்ற போது பூமியின் வலப்பாகமும், வலக்காலைத் தூக்கி நின்றபோது பூமியினிடப்பாகமுந் தாழ்ந்தது. பாதத்தின் அங்குட்ட விரலை யூன்றும் போது தன்னிடத்துள்ள பொருள்களோடு பூமண்டல மெங்கும் நடுங்கிற்று. அதனை யறிந்த யாமதேவர்கள் இந்திரனுடன் சொல்ல அவன் தவத்திற் கிடையூறாக அநேக விக்கினங்களைச் செய்வித்தனன். அவைகளுக் கெல்லாங் கலங்காத மனத்தை யுடையவனாய்த் தவஞ்செய்தலைக் கண்ட இந்திராதி தேவர்கள் திருமாலிடம் முறையிட அவர் நோன்றி, மைந்த! நினக்கு வேண்டிய தென்னென்ன வினவ, அவன் உன்னதபதவி வேண்டுமென்றனன். திருமால் குமார! மூவுலகங்களுக்கும் மேற்பட்டதாய நட்சத்திர கிரகங்களெவற்றுக்கும் ஆதாரமாய, சூரிய சந்திராங்காரக புதகுரு சுக்கிர மந்த மண்டலங்களுக்கும் மேலதாய விளங்கும் துருவபதத்தை யுனக் களித்தேம். நீடித்த ஆயுள் முதலிய பேறுகளைப் பெற்று நின் றாயுடனிருக்க வரந்தந்தேம் என்று மறைந்தனர். அவன் துருவ பதத்தைப் பெற்றமையால் துருவன் எனச் சிறப்புப் பெயர்கொண்டான். அவன் புத்திரர்களைச் சிஷ்டி, பவ்யன் எனவுங் கூறுப.(க)

எட்டானைத் தம்பத்தோ டிகல்புரிதன் சயத்தம்ப மினிதி னாட்டுஞ்
சிட்டனில்வி தழ்ச்சுமதி முலைதோய்ந்து ரிபுவிருக தேசன் விப்ரன்
மட்டவிழ்தா ரிபுஞ்சயன்சொல் விருகலனென் பவர்ப்பயந்தா னிரிபுவும்வாய்ந்த
பெட்பினொடும் பிருகதிதன் முலைதோய்ந்து சக்குசனைப் பெற்றானன்றே.

(இ-ள்) எட்டு ஆனை தம்பத்தோடு = அட்டதிக்கு யானைகளை(க்கட்டப்பட்ட)த் தூண்களோடு, இகல்புரி தன சயத்தம்பம் இனிதின் நாட்டும் = பகை கொள்கின்ற தனது வெற்றித்தம்பத்தை நிலைபெற நிறுத்திய, சிட்டன் = சிட்ட னென்பவன், இலவு இதழ் சுமதி முலை தோய்ந்து = இலவ மலர்போன்ற அதரங்களை யுடைய சுமதியின் றனங்களைப் புல்லி, ரிபு விருகதேசன் விப்ரன் = இரிபு விருகதேசன் விப்பிரன், மட்டு அவிழ் தார் ரிபுஞ்சயன் = தேன் சிந்துகின்ற மாலையை யணிந்த இரிபுஞ்சயன், சொல் விருகலன் என்பவர் பயந்தான் = சொல்லப்பட்ட விருகலன் என்று மைந்து குமாரரைப் பெற்றான், ரிபுவும் = (அவருள்) இரிபு வென்பவன், வாய்ந்த பெட்பினொடும் பிருகதி தன் முலை தோய்ந்து = பொருந்திய ஆசையோடும் பிருகதி யென்பவளது தனங்களைப் புல்லி, நன்று சக்குசனைப் பெற்றான் = நன்மையாகச் சக்குசன் என்பவனைப் பெற்றனன்.

சிட்டனென்பவன் சுமதியுடன்கூடி இரிபு, விருகதேசன், விப்பிரன், இரிபுஞ்சயன், விருகலன் என்னும் ஐவரைப் பெற்றான். அவருள் இரிபு வென்பவன் பிருகதி

யைச் சேர்ந்து சக்குசனைப் பெற்றான் சக்குசனோடு சாவதேசனை யென்பவனையும் பெற்றா னென்று சிலவிடத்துக் கூறப்பட்டிருக்கின்றது (௨)

தீய்த்துமிழும் வெள்வேற்கைச் சக்குசனு மனமருட்டுஞ் சிறப்பு வாய்ந்த
வேய்த்தடந்தோட் புட்கரணி முலைதோய்ந்து சாக்குடனை விருப்பி னீன்று
ளேத்துபுகழ்ச் சாக்குடனு மறைக்கிடந்து கதிரெறிக்கு மைந்நூ லல்குல்
வாய்ந்தபொலங் கொடியனைய நாடுவலை தனையினிதின் வதுவை செய்தான்.

(இ-ள்) தீய்த்து உமிழும் வெள் வேல் கை சக்குசனும்=தீயச்செய்து பொறிக்கும் வெள்ளிய வேலாயுதத்தைத் தாங்கிய கையினையுடைய சக்குசனென்பவனும், மனம் மருட்டும் சிறப்பு வாய்ந்த=மனத்தை மயக்கும் அழகினைக் கொண்ட, வேய் தடம் தோள் புட்கரணி முலை தோய்ந்து=மூங்கில் போன்ற பெருமை யமைந்த தோளை யுடைய புட்கரணி யென்பவளின் தனங்களைத் தழுவி, சாக்குடனை விருப்பின் ஈன்றான் = சாக்குடனென்பவனை யுவகையோடு பெற்றனன், ஏத்து புகழ் சாக்குடனும்=துதிக்கப்படுகின்ற கீர்த்தியினை யுடைய சாக்குடனென்பவனும், மறை கிடந்து கதிர் எறிக்கும் ஐது ஏந்து அல்குல் வாய்ந்த—அரைப்பட்டிகை கிடந்து ஒளியை வீசுகின்ற அழகை வைத்திருக்கும் நிதம்பத்தைக் கொண்ட, பொலம் கொடி அனைய நாடுவலை தனை=பொற்கொடிபோன்ற நாடுவலையென்பவளை, இனிதின் வதுவை செய்தான்=சிறப்புடன் மணஞ் செய்தனன்.

புட்கரணி யாவாள் வருண சந்ததியிற் பிறந்த வீரணப் பிரசாபதியின் புதல்வி. சாக்குடன்-ஆறுவது மனுவந்தரத்திற் கதிபதி நாடுவலையாவாள் வைராசன் என்னும் பிரசாபதியின் புத்திரி பொன் என்னுஞ் சொல் பொலம் என்றாய், வருமொழிக் கேற்பத் திரிந்ததனை "பொன்னென் கிளவி யீறுகெட முறையின் - முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ் - செய்யுள் மருங்கிற் றொடரிய லான" என்னுந் தொல்காப்பிய விதியா னமைக்க (௩)

ஐதெழிலார் நாடுவலை யன்பினொடு மலங்கலந்தா ரூரு வெய்ய
நெய்திகழ்வேற் சுசிபூரு வக்கினிசத் தியவான்சூழ் நிலனேழ் போற்றச்
செய்தவங்கூர் சுத்துய்மமன் சத்துய்மம னுடனதிராத் திரனே யோங்கு
மெய்தருஞ்சீ ரபிமன்யு தபசுவியிப் பதின்மரையு மினிதி னீன்றாள்

(இ-ள்) ஐது எழில் ஆர் நாடுவலை = மிக்க அழகினை யுடைய நாடுவலை யென்பாள், அன்பின் ஒடு=அன்புடனே, அலங்கல் அம் தார் ஊரு=விளங்குதல் கொண்ட அழகிய மாலையை யணிந்த ஊருவும், வெய்து ஆய நெய் திகழ் வேல் சுசி பூரு அக்கினி சத்தியவான்=கொடிய நிணம் விளங்கும் வேலேந்திய சுசியும் பூருவும் அக்கினியுஞ் சத்தியவானும், சூழ் ஏழ் நிலன் போற்ற செய் தவம் கூர் சுத்துய்மமன் = (கடலாற்) சூழப்பட்ட ஏழுதீவிலுள்ளாரும் புகழும்படி செய்யப்படுகின்ற தவத்திற் சிறந்த சுத்துய்மனும், சத்துய்மமன் உடன் அதிராத்திரன்=சத்துய்மனும் அதிராத்திரனும், ஓங்கும் மெய்த அரு சீர் அபிமன்யு=உயர்ந்த அடைதற்கரிய சிறப்பினை யுடைய அபிமன்யுவும், தபசுவி இ பதின்மரையும்=தபசுவியும் ஆகிய இந்தப் பத்துச் சந்ததிகளையும், இனிதின் ஈன்றாள்=நன்மையுடன் பெற்றாள்

உம்-ஏ-அசைநிலைகள் அக்கினியை அக்கினிட்டோமன் எனவும் வழங்குவர் நாடுவலை யென்பாள் ஊரு, பூரு, அக்கினி, சத்தியவான், சுசி, சுத்துய்மன், சத்துய்மன், அதிராத்திரன், அபிமன்யு தபசுவி யென்னும் பத்து மைந்தரைப் பெற்றாள் என்பதாம்.()

ஆங்கவரி லூருவென்போ னமப்பலைக்குக் கருந்தடங்க ணாக்கி னேயி
வீங்குதட முலைபுணர்ந்திட் டங்கனந்ற் சுமனசனை விளங்கு வேற்கை

யோங்குதிற லுக்கிரனைக் கிரீசனைச்சா ரனைக்கயனை யுவப்பினின்ற
னீயிவரி லங்கனெனப்போன் வேனனெனும் புகழ்வேந்தையினிதினீன்றான்.

(இ-ள்) ஆங்கவரில் = அவர்களுள், ஊரு எனப்போன் = ஊருவென்பவன், அர்ப்பு அலைக்கும் கரு தடம் கண் ஆக்கினேயி = அம்பினையும் வென்ற கருமையுற்ற நகன்ற விழிகளை யுடைய ஆக்கினேயி யென்பவளது, வீங்கு தட முலை புணர்ந்திட்டு = பூரித்துப் பெருத்த தனங்களைத் தழுவி, அங்கனை நல சுமனசனை = அங்கனையும் நல்ல சுமனசனையும், விளங்கு வேல் கை ஓங்கு திறல் உக்கிரனை = பிரகாசிக்கின்ற வேலாயுதத்தை யேந்திய கைகளை யுடைய மிக்க வலிமையமைந்த உக்கிரனையும், கிரீசனை சாரனை கயனை உவப்பின் ஈன்றான் = கிரீசனையுஞ் சாரனையுங் கயனையும் மகிழ்வுடன் பெற்றான், ஈங்கு இவரில் = இவ்விடத்திற் கூறப்பட்ட இவர்களுள், அங்கன் எனப்போன் = அங்கன் என்பவன், வேனன் எனும் புகழ் வேந்தை இனிதின் ஈன்றான் = வேனனென்னும் கீர்த்தியுள்ள வரசனைப் பயனுண்டாகப் பெற்றான்.

ஆக்கினேயி = அக்கினியின் மகள். அங்கன் மிருத்துவின் புத்திரியான சுநீதையைக் கூடி வேனனைப் பெற்றனன் என்பதாம். (௫)

அரசு விழுங்கி வாய்காய்ந்த வயிலவே லுழவன் வேனெனப்போன்
கரைகொன் றிரங்கு கடல்வலய முழுது மகவான் கன்றாக
வுரிய பொருள்க ளனைத்தினையும் பாலாய்க் கறந்தின் னுயிர்புரந்த
பிருது வெனனு மணிமவுலிப் பெரியோன் றனைப்பெற் றனனால்.

(இ-ள்) அரசு விழுங்கி வாய் காய்ந்த அயில் வேல் உழவன் = (பகை) அரசர்களை விழுங்கி (பின்னரும் அவர் கிடையாமையால்) வாய் வற்றிய கூரிய வேலாயுதத்தைத் தாங்கும் போருழவனாகிய, வேன் எனப்போன் = வேனன் என்னும் அரசனானவன், கரை கொன்று இரங்கு கடல் வலயம் முழுதும் = கரையை யழித்து இரங்குகின்ற சமுத்திர வட்டமாகிய பூமிதேவியைப் (பசுவாகவும்), மகவான் கன்று ஆக = இந்திரனைக் கன்றாக வுங்கொண்டு, உரிய பொருள்கள் அனைத்தையும் பால் ஆக் கறந்து = அநுபவித்தற் குரிய பொருள்களெல்லாவற்றையும் பாலாகக் கறந்து, இன் உயிர் புரந்த = இனிய வுயிர்களைப் பாதுகாத்த, பிருது எனனும் மணி மவுலி பெரியோனை = பிருது என்னும் பெயரை யுடைய இரத்தின கிரீட மணிந்த பெருமையிற் சிறந்த நரேந்திரனை, பெற்றனன் = பெற்றனன்.

வேனனின் வலக்கையைக் கடைந்து பிருதுவை யுண்டாக்கிய சரிதமாவது—வேனனென்பவன் மாதாமகனான மிருத்துவின் ஜேஷ்டத்தால் தானம் தவம் யாகமுதலிய புண்ணியச் செய்கைகளை யொருவருஞ் செய்யக் கூடாதென்று ஆஞ்ஞாபித்தனன். அதனைய றிந்த இருடிகள் பற்பல புத்திகளைச் சொல்லியுங் கேளாமையால் அவர்க்குக் கோபமுண்டு தருப்பையினா லடித்தனர். அதனால் அரச னுயிர்துறக்கச் சனங்க ளொருவரை யொருவர் வருத்திப் பொருளை யபகரிக்கத் தொடங்கினர். அதுகண்ட விருடிகள் அரசனில்லாமையா லன்றோ இத்தீங்குகள் நேர்ந்தன வென்று வருந்தமுற்று அரசு செய்ய ஓர் புத்திரனிமித்தம் வேனனின் றொடையைக் கடைந்தனர். அதிலிருந்து கருநிறமும், விகாரமுகமும், குறுத்த சரீரமுங் கொண்டு ஒருமனுடன் றோன்றி, நான் என்னசெய்ய வேண்டுமென்று முனிவரை வினவ, அவர்கள் (நிஷீத) உட்காரு என்றனர். அதனால் அவன் நிஷாதன் எனனும் பெயர் பெற்றனன். அன்றுமுதல் நிடாதர் என்னு மொருவகைச் சாதி யுலகத்தி லுண்டாயிற்று. பின்னர் வேனனுடைய வலக்கையைக் கடைந்து அக்கினியை யுண்டாக்கிப் பிரமனைக் குறித்து யாகஞ் செய்ய வக்கினியினின்றும் பிருது தோன்றினன். அந்த யாகயாக

தின சுத்திய காலத்திலே சூதனும் மாகதனும் பிறந்தனர். இங்ஙனமாகப் பிருதுமன்னன் அரசாட்சியைக் கைக்கொண்ட போது பிரசைகளெல்லாரும் வந்து, அரசனே! பூமிதேவி நுந்தந்தை யிறந்தமையால் ஔஷதிகளைத் தனக்குள்ளே யிழுத்துக் கொண்டனள். அதனால் ஆகாரமின்றி வருந்துகின்றோம் என்று முறையிட்டனர். அதனைக் கேட்ட பிருதுராசன் கோபங்கொண்டு அசகவ மென்னும் வில்லையுந் தேவ பாணங்களையுங் கையி லெடுத்துப் பூமியின்மே லெதிர்த்தான். பூமிதேவியானவள் பயந்து பசுருபத்தைத் தரித்தோடினள். இவனும் பின்றொடர்ந்து வருவதை யறிந்த பூமிதேவி என் பிராணனைக் கொல்லாமல் விடவேண்டு மென்று அபயமிட்டு, அரசனே! ஒரு கன்றை யுண்டாக்கிக் கொடுப்பையேல் ஔஷதிகளை யெல்லாம் பாலாகக் கொடுப்பே னென்றனள், அரச னதற்கிசைந்து இந்திரன் சந்திரன் முதலாயினோரைக் கன்றுகளாக்கி, ஔஷதிகளை யெல்லாம் பாலாகக் கறந்து வேண்டிய வளங்களையு முண்டாக்கிப் பூமிதேவியையுங் கொல்லாமல் முன்போல வைத்துக் காத்தான். அதனாற் பூமிக்குப் பிருதிவி யென்ற நாம முண்டாயிற்று என்பதாம். பிருதுராசனுக்கு வைணியன் எனவும் பெயர், வேனனுடைய மகனாதலின். (௬)

அன்னோன் வேள்விச் சாலைதனிற் காதை நவில்வா னழனேமி
முன்னோன் சூத முனியாகப் போந்தா னென்பர் முதுக்குறைந்தோர்
பைந்நாகத்தின் கதிர்பொழியு நெற்றிக் கிடந்த பாரேழுந்
தன்னோ ராணை தனிசெலுத்தும் பிருது மாழ்கி யிவைசாற்றும்.

(இ-ள்) அன்னோன் வேள்வி சாலை தனில்=அந்தப் பிருதுமன்னனது யாகசாலையினிடத்து, காதை நவில்வான் = புராண சரித்திரங்களைச் சொல்லும்படி, அழல் நேமி முன்னோன்=வெப்பஞ் செய்யுஞ் சக்கராயுதத்தை யுடைய திருமால், சூத முனி ஆக போந்தான் = சூதமுனி வடிவு கொண்டு தோன்றினர் என்று, முதுக்குறைந்தோர் என்பர் = அறிவுடையோர் கூறுகிறார், பை நாகத்தின் கதிர் பொழியும் நெற்றி கிடந்த ஏழு பாரும்=படங்களை யுடைய ஆதிசேடனது ஒளியைக் கானுகின்ற தலையிற் றங்கிய ஏழுலகங்களினிடத்தும், தன் ஓர் ஆணை தனி செலுத்தும்=தனது ஒப்பற்ற செங்கோலைப் பொதுவின்றி நடாத்தும், பிருது மாழ்கி இவை சாற்றும் = பிருதுராசன் வருத்த முற்று இவற்றைச் சொல்வான் (௭)

மழலைத் தீஞ்சொற் கிண்கிணிக்கான் மைந்த ரில்லா வரசாட்சி
விழையே னென்ன வலங்குளைய சிங்கா தனம்விட் டிழிந்தேகி
மழைவீழ்ந் துறங்கு நெடுங்குடுமிக் கோவர்த் தனமால் வரையெய்திக்
கழையா லானின் கணங்குவித்த கண்ணற் பழிச்சித் தவம்புரிந்தான்.

(இ-ள்) தீம் மழலை சொல் கிண்கிணி கால்=இனிமை யாகிய குதலைச் சொற்களையுஞ் சதங்கை புனைந்த கால்களையு முடைய, மைந்தர் இல்லா அரசு ஆட்சி=புத்திரரில்லாத அரசுரிமையை, விழையேன் என்னா = விரும்ப மாட்டே னென்று, அலங்கு உளைய சிங்காதனம் விட்டு இழிந்து = விளங்குகின்ற பிடர் மயிரினை யுடைய சிங்கத்தாற் றாங்கப்பட்டுள்ள ஆசனத்தி னின்று மிறங்கி, ஏகி= (நகரத்தை விட்டு) சென்று, மழை வீழ்ந்து உறங்கும் நெடு குடுமி = மேகம் படிந்து துஞ்சுகின்ற நீண்ட சிகரங்களைக் கொண்ட, மால் கோவர்த்தனம் வரை எய்தி=பெரிய கோவர்த்தன மென்னு மலையை யடைந்து, கழையால் ஆனின் கணம் குவித்த=வேய்ங்குழலாற் பசுக் கூட்டங்களைத் தொகுதி செய்த, கண்ணனை பழிச்சி தவம் புரிந்தான்=கண்ண மூர்த்தியை (நினைத்துத்) துதிசெய்து தவத்தைச் செய்தனன்.

